# முற்காலச் சோழர் கலையும் சிற்பமும்

ஆசிரியர்:

எஸ். ஆர். பாலசுப்பிரமணியம், M.A., L.T.





தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு—அரசாங்கம்

6-5

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—101

# முற்காலச் சோழர் கலையும் சிற்பமும்

ஆசிரியர் :
S. R. பாலசுப்பிரமணியம், M.A., L.T.,




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு—அரசாங்கம்

6-5

## அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழ்நாடு அரசாங்கம், சில ஆண்டுகளுக்கு முன்னர்க் கல்லூரித் தமிழ்க் குழுவொன்றை நிறுவி அதன்மூலம் கல்லூரி மாணவர்கட்குத் தேவையான பல தமிழ் நூல்களை வெளியிட்டு வந்தது. தமிழை ஆட்சி மொழியாக அரசாங்கம் ஏற்றுக்கொண்ட பிறகு, தமிழ் மொழிக்கு ஆக்கம் தேடுகின்ற முறையில், இன்னும் மகத்தான அளவில் தமிழில் நூல்கள் வெளிவர வேண்டும் என்ற கருத்தில் தமிழ் வெளியீட்டுக் கழகம் 1962-ல் நிறுவப்பெற்றது.

உலகின் பிற பகுதிகளிலுள்ள மக்களின் அறிவு வளர்ச்சிக்குக் குறையாமல் தமிழ் மக்களும் அறிவு வளர்ச்சி பெறவேண்டுமானால், பிற மொழியிலுள்ள நூல்களைப் படிக்க முடியாதவர்கள் தமிழின்மூலமே எல்லாவற்றையும் கற்கக்கூடிய சூழ்நிலை ஏற்பட வேண்டும். இந்த எண்ணத்தின் அடிப்படையிலேயே தமிழ் வெளியீட்டுக் கழகம் கல்லூரி மாணவர்களுக்குரிய நூல்களை வெளியிடுவதுடன், பொதுமக்களுக்கும் பயன்படுகின்ற முறையில் வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், விஞ்ஞானக் கலைகள் ஆகிய பல துறைகளிலும் பல்வேறு நூல்களை வெளியிட முனைந்துள்ளது.

அத்தகைய முயற்சிகளுள் ஒன்றாக 'முற்காலச் சோழர் கலையும் சிற்பமும்' என்ற இந்நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 101 ஆவது வெளியீடாக வருகிறது.

கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து, இதுவரை 136 நூல்கள் தமிழ் வெளியீட்டுக் கழகத்தால் வெளியிடப் பெற்றுள்ளன. இந் நூல்களை வாங்கிப் படிப்பதன்மூலம் தமிழ் மக்கள் மேலும் வளர்ச்சி பெறுவார்கள் என்று நம்புகிறேன்.

எம். பக்தவத்ஸலம்

# உள்ளுறை

பக்கம்

# 1. தமிழகத்தின் பண்டைக்காலச் சிற்றூர்க் கடவுளரும் (கிராம தேவதைகளும்) அவர்தம் கோயில்களும்

இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்திய பழந் தமிழ் மக்கள் தம் செயல்களுக்கெல்லாம் காரணமாக இருக்கும் மேம்பட்ட கடவுளின் தெய்வத்தன்மையைப் பற்பல இடங்களில் பற்பல வடிவங்களில் கற்பனை செய்து, அத் தெய்விக வடிவங்களுக்குத் தம் நன்றியறிதலைப் பற்பல வழிகளில் தெரிவித்தனர்.

தொடக்கத்தில் கல்லும், மலையும், மரமும், காடும், பாம்பும் தெய்வங்களாகக் கொண்டாடப்பட்டன. பூதம், பிசாசம், சூரரமகளிர், இயற்கையல்லாத முறைகளில் உயிர்நீத்தோரின் ஆன்மாக்கள் முதலியன கடவுள் தன்மை உடையனவாக நம் முன்னவர் கருதியதோடு, அவற்றிற்குத் திருப்தி ஏற்படுவதற்காக எருமை, ஆடு, கோழி முதலிய உயிர்ப் பொருள்களை பலியிட்டனர். இத் தெய்வங்கள் கோபங் கொள்வதனுலேயே நாட்டில் தொத்து நோய்கள் ஏற்படுகின்றன என நம் முன்னோர் நம்பினர்.

சாதவாகனன் என்றும், சாத்தன் என்றும் வழங்கப்பட்ட ஐயனர் ஊருக்கு வெளியே கோயில் கொண்டு ஊரில் வாழும் மக்களையும் மாக்களையும் காத்துவந்தார். ஐயனரின் கோயிலுக்கு முன்னால் சுடுமண்ணால் ஆக்கப்பட்ட யானை குதிரைகள் நிறுத்தப்பட்டன.

பிடாரி, காளி, அங்காளம்மன், திரௌபதி, செல்லியம்மன், மாரியம்மன் முதலிய பெண் தெய்வங்களுக்கும் சிற்றூர்களில் உரிய இடங்களில் கோயில்கள் அமைக்கப்பட்டுத் திருவிழாக்கள் முறையாகக் கொண்டாடப்பட்டன. வெற்றித் தெய்வமாகிய கொற்றவைக்குத்

தலைப்பலி இடும் பழக்கம் தென்னகத்தில் நிலவிய செய்தியைப் பல்லவர்காலச் சிற்பங்கள் வலியுறுத்துகின்றன.

ஆலம்பாக்கத்திலுள்ள செல்லியம்மன் கோயிலும், திருவக்கரையிலுள்ள வக்கிரகாளி கோயிலும், வேளச்சேரியிலுள்ள செல்லியம்மன் கோயிலும் பண்டைய சப்த மாதர் கோயில்களுக்கு எடுத்துக்காட்டுகளாம். முன்னடியான், மதுரைவீரன் என்ற ஊர்க்காவல் தெய்வங்கள் பிற்காலத்துக் கோயில்களில் காணப்படும் துவாரபாலகர்களுக்கு நிகரானவை. அழகர் கோயில், சபரிமலை ஐயப்பன் கோயில் முதலிய இடங்களில் கறுப்பன் என்ற தெய்வம் கருவூலக்காப்பாளராக விளங்குவதைக் காணலாம்.

இச் சிற்றூர்க் கடவுளரின் (கிராம தேவதைகளின்) உருவங்களில் நுணுக்கமான சிற்ப வேலைத் திறனைக் காண முடியாது. மிக அருகிக் கிடைத்துள்ள இவற்றின் செப்புத் திருமேனிகளும் மேதக்க வனப்புடையனவல்ல. இவற்றின் கோயில்களும் கூரை வேயப்பட்ட சுடுமண் கோயில்களே (மண் தளிகளே). இவற்றில் எந்தவிதமான சிற்ப ஓவிய நலன்களையும் எதிர்பார்க்க முடியாது.

# 2. சங்ககாலக் கோயில்கள்

தொல்காப்பியர் காலத்தில், அஃதாவது சுமார் 2500 ஆண்டு களுக்கு முற்பட்ட நிலையில், இயற்கை வாழ்வில் திளைத்த பழந் தமிழர் கள், இயற்கைச் சூழலில் காட்சி வழங்கிய இறைவனுக்கு நிலங்கள் தோறும் வெவ்வேறு பெயரிட்டழைத்துக் கோயில்கள் நிறுவித் திரு விழாக்கள் நிகழ்த்தி மகிழ்ந்தனர். முருகன் மலைநாட்டுக் கடவுளாக வும், திருமால் காட்டுப் பகுதியின் கடவுளாகவும், இந்திரன் மருத நில மாகிய வயற்பகுதியின் கடவுளாகவும், வருணன் நீர்ப் பகுதியாகிய கடற்கரைப் பகுதிக் கடவுளாகவும் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. இத் தெய்வங்களையன்றிக் கொற்றவை, சூரியன், சந்திரன், நெருப்பு என்ற தெய்வங்களின் வழிபாடும், இறந்த வீரருக்கு அறிகுறியாகக் கல் நட்டு நிகழ்த்தும் வழிபாடும் தொல்காப்பியத்தில் இடம் பெற் றுள்ளன.

தொல்காப்பியத்திற்குச் சற்றுப் பிற்பட்ட கடைச்சங்க காலத் தில் (1800 ஆண்டுகளுக்கு முன்) சிவபெருமான், முருகன், திருமால், பலதேவன் என்ற நால்வரும் பெருங்கடவுளர்களாகக் கொண்டு வணங்கப்பட்டனர். இவர்களையன்றி உமையவள், விறல்கெழு சூலி யாகிய காளி, பிரமன் முதலிய தெய்வங்களின் பெயர்களும் குறிப் பிடப்படுகின்றன.

இத் தெய்வங்களின் கோயில்கள் 'சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டங்களாக' எடுப்பிக்கப்பட்டன.

சங்க நூல்களாகிய பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்பவற் றில் இத் தெய்வங்களின் உருவத் திருமேனி வருணனையையும் இவற் றின் அருஞ்செயல்கள்பற்றிய குறிப்புகளையும் காணலாம்.

திருமால் ''இவ்வுலகம் முழுவதையும் ஒரே காலத்தில் தன் வயிற் றில் அடக்கியிருக்கும் பெருவடிவையும், ஒவ்வோர் உயிருள்ளும் தான்

மறைமுகமாய்க் கலந்து நிற்கும் நுண் வடிவையும் உடையவர்; அவர் திருவாழ்மார்பர், கௌத்துவமணியையும் திருத்துழாய் மாலையையும் அணிபவர், தம் கொப்பூழில் தோன்றிய தாமரைப் பூவில் பிரமனைத் தோற்றுவித்தவர், அடியார்களுடைய பகைவரை அழித்த புகழுடையவர்; அவர் 'முதல்முறை, இடைமுறை, கடைமுறை நிலையில் பிறவாப் பிறப்பில்லை—பிறப்பித்தோர் இல்லை' என்ற தனித் தகுதி உடையவர்; அவர் புகழ் அளப்பரியது'' என்று குறிப்பிடப்படுகிறார்.

சிவபெருமான் 'கொன்றையைச் சூடிப் பிறையை அணிந்து, விடக் கறையால் கண்டம் பொலிவு பெற்று, இடபக்கொடி உயர்த்தி, உமையாளுக்குத் தன் உடலின் இடப்பாலைக் கொடுத்து, வேதம் ஓதி, இடபம் ஊர்ந்து, திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளாய், கொடுகொட்டி ஆடிய கூத்தராய், பாண்டரங்கம் ஆடிய பரமராய், பிறவா யாக்கைப் பெரியோராய் வணங்கும் அடியவர் இடர் தீர்ப்பவராய், தம் தாள் நிழலின் கீழே உலகம் தோன்றி வாழுமாறு உள்ளவர்' என்று குறிப்பிடப்படுகிறார்.

முருகப்பெருமான் 'செம்மேனியில் செவ்வாடை உடுத்துக் கோழிக் கொடி உயர்த்தி, மயில்மீது ஏறி, குன்றத்தை வேலால் பிளந்து, சூரபன்மனை மாமரத்தைத் தடிந்து, வள்ளியம்மை தேவயானையாரை மணந்து, ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் கொண்டு அடியவரைக் காப்பவனாய்ப் பரங்குன்று, திருச்சீர் அலைவாய், ஆவினன்குடி, ஏரகம், பழமுதிர் சோலை, உலகிலுள்ள குன்றுகள், காடுகள், ஆற்றிடைக் குறைகள் முதலிய பல இடங்களில் எழுந்தருளியுள்ளான்' என்று அறிகிறோம்.

அரசர்களைத் தெய்வங்களோடும் தெய்வக் கூறுகளோடும் ஒப்பிடும் வழக்கம் சங்க காலத்தில் இருந்தது. இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் கோபத்தால் சிவபெருமானையும், வலிமையால் பலதேவனையும், புகழால் திருமாலையும், நினைத்ததை முடிக்கும் ஆற்றலால் முருகனையும் ஒப்பவனாக நக்கீரர் குறிப்பிடுகிறார். சிவபெருமானுடைய மூன்று கண்களிலும் அவருடைய நெற்றிக்கண் சிறந்து விளங்குவதுபோலப் பாண்டியன் நன்மாறன் மூவேந்தர்களுக்குள் சிறந்து விளங்கினானாக மருதன் இளநாகனார் குறிப்பிடுகிறார். பகைவரை வென்று யானைமேல் பவனி வரும் உதியஞ் சேரலாதனுக்குச் சூரபன்மாவை வென்று யானைமீது வெற்றி வீரனாகக் காட்சியளித்த முருகப் பெருமானைக் குமட்டூர்க் கண்ணனார் ஒப்பிடுகிறார்.

கடைச்சங்க நூல்களில் ஒன்றாகிய பரிபாடலில் சிவபெருமானுடைய திரிபுர தகனச் செய்தி, திருமாலுடைய அவதாரச்

செய்திகள், முருகப் பெருமானுடைய திருவிளையாடல்கள் என்பன விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

சங்க காலத்தை ஒட்டி எழுந்த சிலப்பதிகாரம் என்ற பெருங் காப்பியத்தில், இந்திரவிழவூர் எடுத்த காதையில் இந்திரன் முதலிய தெய்வங்களின் சிறப்பும், கானல்வரியில் வருணனுடைய பெயரும், வேட்டுவவரியில் காளிதேவியின், பலதிறப் பெருமைகளும், ஆய்ச்சியர் குரவையில் திருமாலின் பல அவதாரச் செயல்களும், குன்றக் குரவை யில் முருகப்பெருமான்பற்றிய பல விரிவான செய்திகளும் குறிப் பிடப்பட்டுள்ளன. பத்தினிகளுக்குக் கோயில் எடுப்பித்து அவர்களை வணங்கும் பழக்கமும் சிலப்பதிகாரத்தில் இடம் பெற்றுள்ளது. புகார் நகரில் கற்பக மரம், ஐராவதம், பலதேவர், சூரியன், சிவபெருமான், முருகன், இந்திரன், சாத்தன், நிக்கந்தன், சந்திரன், பாசண்டச் சாத் தன், மன்மதன் முதலிய தெய்வங்களுக்குக் கோயில்கள் இருந்தன வாகச் சிலப்பதிகாரம் சுட்டுகிறது.

# 3. பல்லவர் காலம்

சங்க காலத்துக் கோயில்கள் யாவும் சுடுமண் கோயில்களே (மண் தளிகளே) யாதலின் அவை காலப்போக்கில் சுவடற்றுப் போயின. சங்க காலத்தை ஒட்டிய கோச்செங்கணான் என்ற சோழ மன்னன் 'எண்டோள் ஈசற்கு எழில் மாடம் எழுபது செய்து உலகம் ஆண்டான்' என்று புகழப்படுகிறான். இம் மாடக்கோயில்களும் செங்கற் கோயில்களே.

சிம்மவிஷ்ணு வம்சத்தைச் சேர்ந்த பல்லவர்களின் ஆட்சிக்காலம் முதல் தமிழகத்தில் சமயம், கலை, இலக்கியம் முதலிய பல துறைகளிலும் மறுமலர்ச்சி காணப்பட்டது. இக் காலத்திலும், இதனை ஒட்டிய பிற்காலச் சோழர்கள் காலத்திலும், ஆழ்வார்களும் நாயன்மார்களும் தோன்றி வைணவ மதத்தையும் சைவ மதத்தையும் நாட்டில் தழைத்தோங்கச் செய்தனர். நாயன்மார்கள் காலத்தில் 274 கோயில்கள் பாடல் பெற்ற தலங்களாகத் திகழ்ந்தன. ஆழ்வார்கள் காலத்தில் 108 திருப்பதிகள் பாடப்பட்டன. இவைகள் பெரும்பான்மையும் பாடப்பட்ட காலத்தில் செங்கற்கோயில்களாகவே இருந்திருக்கக்கூடும். மகேந்திரவர்மன் காலம் முதலே தமிழ்நாட்டில் குடைகோயில்கள் (குடபோகக் கோயில்கள்) தோன்றின. மாமண்டூர், மகேந்திரவாடி, சிங்கவரம், நாமக்கல் என்ற ஊர்களிலுள்ள திருமால் கோயில்களும், வல்லம், தளவானூர், திருச்சிமலைச் சிவன் கோயில்களும், மண்டகப்பட்டிலுள்ள திருமூர்த்தி கோயிலும், சித்தன்னவாசலிலுள்ள சமணக் கோயிலும் மகேந்திரன் காலத்துக் குடை (குடபோகக்) கோயில்களாக அறிகிறோம்.

மலைத்தளிகள் (மலைத்தளி) என்று குறிப்பிடப்படும் கற்கோயில்கள் ஐந்து மகாபலிபுரத்தில் நரசிம்மவர்மன் காலத்தில், அமைக்கப்பட்டுத் தற்போது பஞ்சபாண்டவர் இரதங்கள் என்ற பெயரால் வழங்கப்படுகின்றன.

மகேந்திரன், நரசிம்மன் முதல் பரமேசுவரன் என்பவர் காலத்திற்குப் பிறகும் குடை (குடபோகக்) கோயில்கள் சில அமைக்கப்பட்டன. திருவெள்ளறைக் கோயில் இரண்டாம் நந்திவர்மன் காலத்திலும், குன்றுண்டார் கோயிலும், மலையடிப்பட்டியும் தந்திவர்மன் காலத்திலும், நார்த்தாமலை பழியிலியீசுவரம் நிருபதுங்கன் காலத்திலும் தோன்றியவையாகும். மலைத்தளிகள், குடை (குடபோகக்) கோயில்கள் இவை தோன்றிய பின், செங்கல்லும் கருங்கல்லும் இணைத்துக் கட்டப்படும் கலப்புக் கோயில்கள் தோன்றின. மகேந்திரன் காலத்திலேயே கலப்புக் கோயில்கள் தோன்றியிருக்கக்கூடும் என்று முடிவு செய்வதற்குரிய சான்றுகள் கிடைத்துள்ளன.

முதலாம் பரமேசுவரவர்மன் காலத்தில் தென்கரணி என்ற சிற்றம்பாக்கத்தில் செல்லி பம்மன் கோயிலொன்றும் சிவன் கோயிலொன்றும் கருங்கல்லடுக்கிக் கட்டப்படும் கற்றளிகளாக நிறுவப்பட்டன; மேலும், கூரம் என்ற ஊரில் இம் மன்னனால் சிவன் கோயிலொன்று கலப்புக் கோயிலாகக் கட்டப்பட்டதெனவும் அறியப்படுகிறது.

இரண்டாம் நரசிம்மன் என்ற இராசசிம்மன் காலத்தில் காஞ்சியிலுள்ள கைலாசநாதர் கோயில், பிறவாதான் ஈசுவரம், இறவாதான் ஈசுவரம், மாமல்லபுரத்திலுள்ள கடற்கரைக் கோயில், பனைமலையிலுள்ள தாளபுரீசுவரர் கோயில், திருக்கழுக்குன்றத்தின் உச்சியிலுள்ள வேதபுரீசுவரர் கோயில் என்பன எடுப்பிக்கப்பட்டன.

இரண்டாம் நரசிம்மவர்மன் காலத்தில் காஞ்சியிலுள்ள வைகுந்தப் பெருமாள் கோயில், முத்தேசுவரம், மதங்கேசுவரம், திரிபுராந்தகேசுவரம் என்ற கோயில்கள் தோன்றின.

உத்தரமேரூரில் உள்ள சுந்தரவரதப் பெருமாள் கோயில் என்னும் துலாபாரக் கோயில் தந்திவர்மன் காலத்துக் கற்றளியாகும்.

அபராசித பல்லவன் காலத்தில் திருத்தணியில் வீரட்டானேசுவரர் கோயில் எடுப்பிக்கப்பட்டது. பிற்பட்ட பல்லவர் காலக் கோயில்களில் இது மேம்பட்டு விளங்குகிறது.

பல்லவர்களால் வளர்க்கப்பட்ட கற்றளி எடுக்கும் கலை விசயாலயன் வம்சத்துச் சோழ மன்னர்கள் காலத்தில் ஏற்பட்ட பேராதரவால் மிக்க உயர்நிலையை அடைந்துவிட்டது என்பது வெளிப்படை. இனிக் கோயில்களின் தோற்றமும் வகைகளும்பற்றி நோக்குவோம்.

# 4. கோயில்களின் தோற்றமும் வகைகளும்

கோயில்களின் தோற்றம் பலவகைப்பட்டது. பண்டைக் கோயில்களில் சில கடற்கரையை ஒட்டியும், சில குன்றுகளின் உச்சி யிலும், சில புனிதமான ஏரிகளின் கரைகளிலும், சில புனித ஆறுகளின் இருமருங்கிலும், சில பேராறுகளுடன் சிற்ருறுகள் கூடும் கூடலிலும் அமைக்கப்பட்டன. இயற்கை எழில் மிக்க இடங்கள் யாவற்றிலும் பண்டைத் தமிழ் மக்கள் கடவுள் தன்மையைக் கண்டனர். பண்டு கோயில்கள் சிறந்த மரங்களடர்ந்த சோலைகளிலும் அமைக்கப்பட்டன. கண்ணுக்கினிய பசுமையும், காதிற்கினிய பறவை ஒலியும், மூக்கிற் கினிய நறுமணமும், நாவிற்கினிய நற்கனிகளும், உடலுக்கினிய இளங் காற்றும் ஆக, ஐம்பொறி இன்பமும் ஒருங்கே தரும் சோலைகளில் ஆன் மிக இன்பமும் அருளவல்ல இறைவன் திருக்கோயிலை எடுப்பித்தனர். பண்டு கோயில்கள் சோலைகளில் அமைக்கப்பட்டன என்பதன் அறி குறியாக இன்றும் பெரும்பான்மையான கோயில்களில் தலவிருட்சம் என்ற சிறப்பான மரத்தைக் காண்கிருேம். சிதம்பரப் பெருங் கோயிலில் தில்லையும், காஞ்சி ஏகாம்பரநாதர் கோயிலில் மாமரமும், கிழைப்பழுவூர், புள்ளமங்கை முதலிய இடங்களில் ஆலமரமும், திரு விடைமருதூரில் மருத மரமும், ஸ்ரீரங்கத்துக்கு அருகிலுள்ள திரு வானைக்காவில் நாவல் மரமும், பண்டு கோயில்கள் மர நிழலில் அமைக் கப்பட்டமைக்குச் சான்றுகளாக இன்றும் உள்ளன. திருக்கடல்மல்லை என்ற மகாபலிபுரமும் (மாமல்லபுரம்) திருமறைக்காடு என்ற வேதா ரண்யமும், கடற்கரையில் புனிதமான நீராடும் இடங்களைக் கொண்ட திருப்பதிகளாம். திருவெறும்பூர்(திருவெறும்பியூர்), திருக்கழுக்குன்றம் என்னும் புனிதமான குன்றுகளின் உச்சியில் திருக்கோயில்கள் அமைக் கப்பட்டுள்ளன. திருப்பராய்த்துறைக் கோயில் அகண்ட காவிரியின் புனிதமான நீராடுமிடத்தை யடுத்து அமைந்துள்ளது. ஸ்ரீரங்கமும், திருவானைக்காவும், கொள்ளிடம் என்ற கிளையாறு காவிரியிலிருந்து பிரியும் தலைப்பில் அமைந்துள்ளன.

கோயில்களில் சில மன்னர்களாலும், சில பிரபுக்களாலும், சில கடவுள் பற்று மிக்க ஒப்புரவாளர்களாலும் எடுப்பிக்கப்பட்டன. கோயில்கள் சில எவ்வரசர்களின் காலத்தில் கட்டப்பட்டனவோ, அல்லது எவ்வரசர்களின் ஆதரவால் அமைக்கப்பட்டனவோ, அவர்கள் பெயரால் விளங்குகின்றன. அவற்றிற்கு உதாரணமாகத் தஞ்சையில் விசயாலயனால் அமைக்கப்பட்ட நிசும்பசூதனின் கோயிலையும், நார்த்தாமலையில் அம் மன்னன் ஆட்சியில் எடுப்பிக்கப்பட்ட விசயாலய சோளீசுவரத்தையும், முதல் ஆதித்தன் காலத்தில் திருவெறும்பூரில் (திருவெறும்பியூரில்) தோற்றுவித்த ஆதித்திய பட்டாரகர் கோயிலையும், இராசாதித்தன் பெயரால் கிராமம் என்ற ஊரிலும், திருநாமநல்லூரிலும் எடுப்பிக்கப்பட்ட கோயில்களையும், முதல் பராந்தகன் தான் நிருமாணித்த வீரநாராயண சதுர்வேதி மங்கலத்தில் அமைத்த சிவன், விஷ்ணு கோயில்களையும், கொடும்பாளூரில் பூதி விக்கிரமகேசரி நிறுவிய மூவர் கோயில்களையும், திருநல்லம் என்ற கோனேரி ராசபுரத்தில் அமைக்கப்பட்ட உமாமகேசுவரர் கோயிலையும், கண்டராதித்த சோழரின் மாதேவியாரான செம்பியன் மாதேவியார் செம்பியன் மகாதேவி (நாகைக்கு அருகே உள்ளது) என்ற ஊரில் எடுப்பித்த கைலாசநாதசுவாமி கோயிலையும் குறிப்பிடலாம்.

தென்னகத்தில் அமைந்த பெருங்கோயில்களில் ஐந்து, நிலம், நீர், தீ, காற்று, விசும்பு என்ற ஐம்பெரும் பூதங்களால் வழிபடப்பட்ட பிருதிவிலிங்கம், அப்புலிங்கம், தேயுலிங்கம் வாயுலிங்கம், ஆகாசலிங்கம் என்பவற்றை உடையனவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

மனிதரால் செய்யப்படாத சுவயம்புலிங்கங்களை உடையனவாகத் திருவாரூர், தென்னாகை, திருநள்ளாறு, திருமறைக்காடு, திருக்காறாயில், (திருக்காறைவாசல்) திருவாமூர், திருக்கோளிலி என்ற ஏழு ஊர்களும் சப்தவிடங்க ஸ்தலங்களாகக் குறிப்பிடப்படுகின்றன.

கோயில்களில் சில, புராணங்களில் காணப்படும் பெருவீரர்களின் வீர நிகழ்ச்சிகளோடு தொடர்புகொண்டனவாகச் சுட்டப்பட்டுள்ளன. வேறு சில, சிவபெருமான், திருமால் ஆகிய பெருந் தெய்வங்களின் வீரச் செயல்கள் நிகழ்ந்த இடங்களாகப் புராணங்களிலும் சான்றோர் செய்யுட்களிலும் புகழப்படுகின்றன. சிவபெருமானுடைய வீரச் செயல்கள் நிகழ்ந்தனவாகக் குறிப்பிடப்பட்டுள்ள எட்டுக் கோயில்கள் அட்ட வீரட்டங்கள் என வழங்கப்படுகின்றன. அட்ட வீரட்டத் தலங்கள் கண்டியூர், கடவூர், பழுவூர், அதிகை, கோவலூர், பறியலூர், விற்குடி, குறுக்கை என்பன. கண்டியூரில் சிவபெருமான் பிரமனுடைய ஐந்தாம் தலையைக் கிள்ளி அவன் செருக்கை அடக்கினார் எனவும், திருக்கடவூரில் மார்க்கண்டேயனுக்காக எமனது

ஆற்றலைத் தொலைத்தார் எனவும், கோவலூரில் அந்தகாசுரனை அழித்தார் எனவும், பழுவூரில் யானைத் தோலை உரித்தார் எனவும், அதிகையில் திரிபுரதகனம் செய்தார் எனவும், பறியலூரில் தக்கன் தலையை அறுத்தார் எனவும், விற்குடியில் சலந்தரனைத் தொலைத்தார் எனவும், குறுக்கையில் காமதகனம் நிகழ்த்தினுர் எனவும் அறிகிறோம்.

கொள்ளிடக் கரையிலுள்ள கோவிந்தப்புத்தூரில் காணப்படும் விசயமங்கை என்ற கோயில் மகாபாரத வீரனுன அருச்சுனனுல் வழி படப்பட்டது எனவும், தஞ்சை மாவட்டத்துத் திருத்துறைப்பூண்டிப் பகுதியில் உள்ள இடும்பாவனக் கோயில் வீமனின் மைத்துனனுன இடும்பனுல் வழிபடப்பட்டது எனவும் பண்டைய நூல்கள் பகரு கின்றன.

இறந்த சான்றோர்களின் நினைவுக் குறியாகச் சமாதிக் கோயில்கள் என்ற பள்ளிபடைக் கோயில்களும் எடுப்பிக்கப்பட்டன. பல்லவ குல விசயகம்பவர்மனுடைய ஆறும் ஆண்டைச் சேர்ந்த (கி.பி. 886) சோழபுரக் கல்வெட்டு ஒன்று, காங்கேய (கங்கர்) வமிசத்தினனும் பல்லவ மன்னனின் சிற்றரசனுமான இராசாதித்யன் என்பான், இறந்துபட்ட தன் தந்தையாரான பிருதிவிகங்கரையர் நினைவுக் குறி யாக, ஒரு கல்லறை மண்டபத்தையும் சிவன் கோயில் ஒன்றையும் எடுப்பித்த செய்தியைக் குறிப்பிடுகிறது. வடமொழியில் முன் பகுதி யும் தமிழில் பின் பகுதியுமாக இக் கல்வெட்டு அமைந்துள்ளது. இதன் வடமொழிப் பகுதியுள் கொங்குனிவர்மனின் பரம்பரையினரான கங்கர்களின் தலைமுறை குறிப்பிடப்பட்டுள்ளது. தமிழ்ப் பகுதி 'கோவிஜய கம்பற்கு யாண்டு எட்டாவது பிருதிவீ கங்கரையர் அதீதர் ஆயின பிற்பாடு தத் புத்ர ராஜாதித்யன் மகாதேவன் தம் அப்பனு ரைப் பள்ளிபடுத்த இடத்து ஈசுவர ஆலயமும் அதீதகிருகமும் எடுப் பித்துக் கண்டு சேவித்தான்' என்று குறிப்பிடுவதால், தன் தந்தை யின் எலும்புகளைப் புதைத்தவிடத்துக் கல்லறை மண்டபம் கட்டு வித்து அதனை அடுத்துத் தந்தையின் நினைவுக் குறியாகச் சிவன் கோயில் ஒன்றை எடுப்பித்தான் என்பது போதருகிறது.

இதிலிருந்து பண்டு இறந்துபட்ட சான்றோர்களின் எலும்புகளைப் புதைத்தவிடத்துக் கல்லறை மண்டபம் கட்டி வைத்துப் பக்கத்தில் இறந்தவரின் நினைவுக் குறியாகக் கோயிலொன்று அமைக்கும் வழக் கம் இருந்தமை போதருகிறது. வால்மீகி இராமாயணத்தில் 'ஸ்ம சான சைத்தியம்' என்று பள்ளிபடைக் கோயில் வழங்கப்படுகிறது.

கோதண்டராமன் என்றும், ஆற்றூர்த் துஞ்சின உடையார் என்றும், குறிப்பிடப்படும் தன் தந்தையாரான முதல் ஆதித்தரின்

நினைவாகத் தொண்டைமானூற்றூரில் முதற் பராந்தகன் பள்ளி படைக் கோயிலொன்று நிறுவினன். பிறகு, முதல் இராசராசன் தன் 29ஆம் ஆண்டில் (கி.பி. 1014) நீவா அல்லது பொன்னியாற்றங் கரையிலமைந்த மேல்பாடி (மேற்பாடி) என்ற ஆற்றூரில் இறந்த தன் பாட்டனூர் அரிஞ்சயனுடைய நினைவுக்குறியாகப் பள்ளிபடைக் கோயில் எடுப்பித்துள்ளான். அக் கோயில் 'ஆற்றூர்த் துஞ்சின தேவருக்குப் பள்ளிபடையாக ஸ்ரீ ராஜராஜதேவர் எடுப்பித்தருளின திரு அரிஞ்சிகை ஈசுவரம்' என்று கல்வெட்டுகளில் குறிப்பிடப் பட்டுள்ளது.

இப் பள்ளிபடைக் கோயில் இந்து-சீனவிலும், இந்து-ஆசியாவி லும் தேவராஜர் கோயில் என்று வழங்கப்பட்டது.

ஆங்கர் (Angkor) என்ற ஊரைப்பற்றி ஜார்ஜ் ஸெடே (George Coedes) என்பார் வரைந்த வழிகாட்டி நூல் ஒன்றில் தென்னகத்தில் வழங்கும் பள்ளிபடையை ஒத்து அப் பகுதியில் அமைந்த கோயில்கள் பற்றி இரண்டு அத்தியாயங்கள் வரைந்துள்ளார். அந் நாட்டில் இறந்துபோன அரசர்களும், சிற்றரசர்களும், சான்றோர்களும் தெய் வங்களோடு இரண்டறக் கலந்துவிட்டனர் என்று கருதிய மக்கள் அவ்வரசர் முதலியவர்களின் சின்னங்களாகவே அங்குள்ள கோயில் களில் சிவன், விஷ்ணு, புத்தர் முதலிய சிலைகளை அமைத்தனர் என் றும், இறந்த சான்றோர்களின் தெய்விக ஆற்றல் அந்தச் சிலைகளில் உறைந்து மக்களுக்கு உதவியதாக நம்பினர் என்றும் குறித்துள்ளார். 'இவ்வுலகில் உயிர் வாழ்ந்த காலத்தில் உடலை இருப்பிடமாகக் கொண்ட அரச உயிர், உடலை நீத்த பின்னர்த் தன் தெய்விக இருப்பிட மாகச் சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த கோயிலை ஏற்றுக்கொண்ட தாகக் கருதினர். தலைநகரத்தின் நடுவில் அமைந்த புனிதமான மலை யில் அமர்ந்து பூசாரி ஒருவர், தம் தியானத்தின்மூலம் இறந்த அரசருக் கும் கடவுளுக்கும் இணைப்பை உண்டாக்கும் வழக்கம் இருந்தது. இத் தேவராசர் கோயில் நாட்டின் சிறந்த செல்வங்களில் ஒன்றாயிற்று. இப் பழக்கம் கம்போடியா (காம்போஜம்) நாட்டில் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதிவரை நன்கு பரவியிருந்தது. இக் கோயிற் சிலைகள் முதலியன கொள்ளைக்காரர் களால் கவரப்பட்டுவிட்ட காரணத்தால், கோயில்களில் இருந்த சிலைகளின் கீழ்ச் சவங்களே புதைக்கப்பட்டனவா அல்லது எரிக்கப் பட்ட சவத்தின் எலும்புகள் அடங்கிய குடங்கள் புதைக்கப்பட்டனவா என்பதை உறுதியாக அறிந்து கூற இயலவில்லை. ஆனால், ஏழாம் ஜய வர்மன் காலம் முதலே கோயில்களும் கல்லறைக் கட்டடங்களும் எழுப்பப்பட்டன என்று தெளிவாகக் கூறலாம். ஆங்கர் வாட் (Angkor Wat) தெய்விக ஆற்றல் சான்ற மனிதர்களின் கடைசி உறைவிட,

மாகும். அங்கு வாழ்ந்து இறந்த சான்ேறார்கள் தெய்வங்களாயினர். அவர்களுடைய கல்லறை கோயிலாற்று'என்று ஜார்ஜ் ஸெடே (George Coedes) கூறி முடிக்கிறார்.

தென்னகத்திலுள்ள கல்வெட்டுகளும் இதே கருத்தை வலியுறுத்துகின்றன. ஒன்பதாம் நூற்றாண்டினதாகிய சோழபுரக் கல்வெட்டு, தனியே கோயில் எழுப்பப்பட்ட செய்தியையும், அருகில் அநித கிருகம் ஆகிய கல்லறை எழுப்பப்பட்ட செய்தியையும் குறிப்பிடுகிறது என்பதை முன்னரே குறிப்பிட்டுள்ளோம். இப் பழக்கம் கம்போடியா நாட்டுப் பழக்கத்தை ஒத்ததாகக் காணப்படுகிறது.

பொதுவாக உயிர்நீத்த துறவிகள், ஞானிகள் இவர்களுடைய சடலங்களைப் புதைத்து அடக்கம் செய்த இடங்களில் சமாதிக் கோயில்கள் கட்டுவது வழக்கமாகும். அத்தகைய சமாதிக் கோயில்களில் தஞ்சை மாவட்டத்துத் திருவையாற்றில் காவிரிக் கரையில் இசைவல்லுநராகிய தியாகராச சுவாமிகளுக்குக் கட்டப்பட்ட சமாதிக் கோயில் தற்காலத்தில் மிகவும் புகழ் பெற்றதாக இலங்குகிறது.

கலாசாரம் பொதுவாக இந்தியாவிலிருந்து தென்கிழக்கு ஆசியப் பகுதிகளுக்குப் பரவியதாகக் கூறப்படுகிறது. ஆனால், இத் தேவராசக் கோயில் அமைப்பு இரு நாடுகளுக்கும் பொதுவான அடிப்படை ஆதாரத்தைக்கொண்ட ஒன்று என்றோ, தென்னகத்திலிருந்து அங்குப் பரவியது என்றோ, இதற்கு இணையாக அங்குத் தோன்றி வளர்ந்த அமைப்பு என்றோ, உறுதியாக அறுதியிட்டுக் கூறுவதற்கு இன்னும் போதிய சான்றுகள் கிடைக்கவில்லை. பொதுவாகக் கீழைக் கடலின் (வங்காள விரிகுடாவின்) இரு மருங்கிலும் ஒரே காலத்தில் பள்ளிபடைக் கோயில்கள் அமைக்கும் பழக்கம் இருந்த செய்தி குறித்துணரத்தக்கது.

பஞ்சாயதனக் கோயில்கள் என்பன ஆலயங்களின் மற்றொரு வகையினவாகும். இக் கோயில்களில் விநாயகர், பார்வதி, சூரியன், விஷ்ணு,சிவன் என்ற ஐந்து தெய்வங்களின் சிலைகளும் அமைக்கப்பட்டு வழிபாடு செய்யப்பட்டன. வைதிக அந்தணர் இல்லங்களில் பஞ்சாயதன பூசை இன்றும் நடைபெற்று வருவதைக் காணலாம். பொதுவாக, பஞ்சாயதனக் கோயில்களின் மூலத்தானத்தில் சிவலிங்கமும் பிராகாரத்தின் நான்கு மூலைகளிலும் தனித்தனி மேடைகளில் ஏனைய நான்கு தேவதைகளும் காணப்படும். ஆனால், மேற்கூறிய ஐந்து தெய்வங்களில் எத் தெய்வமும் மூலத்தானத் தெய்வமாக அமையலாம். தேவகரிலுள்ள (Deogarh) தசாவதாரக் கோயிலே பஞ்சாயதனக் கோயில்களில் மிகப் பழைமையானதாகும். இது பிந்திய குப்தர் காலத்

தைச் சேர்ந்தது. தற்போது மூலத்தானத்தைத் தவிர ஏனைய சுற்றுக் கோயில்களின் அடித்தளங்களே அங்குக் காணப்படுகின்றன. விஷ்ணுவை மூலத்தானத் தெய்வமாகக் கொண்ட கோயிலான அத் தசாவதாரக் கோயிலின் சுற்றுக் கோயில்களில் எவ்வெச் சிலைகள் நிறுவப்பட்டன என்று தற்போது அறியக்கூடவில்லை.

காஜுராகோ (Khajuraho) என்ற ஊரிலுள்ள லட்சமணர் கோயிலும், தேவி ஜகதாம்பிகா கோயிலும், விசுவநாதர் கோயிலும், கலிங்க நாட்டுப் புவனேசுவரத்திலுள்ள பிரமேசுவரர் கோயிலும், பஞ்சாயதனக் கோயில்களே. நாசிக்கிலிருந்து 18 கல் தொலைவில் உள்ள சின்னூர் (Sinnar) என்ற ஊரில் 12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பஞ்சாயதனக் கோயிலொன்று ஓரளவு நன்முறையில் காணப்படுகிறது. மூலத்தானத்தில் சிவலிங்கமும் ஏனைய நாற்புறச் சுற்றுக் கோயில்களில் முறையே விநாயகர், பார்வதி, சூரியன், விஷ்ணு விக்கிரகங்களும் பழைமை வனப்புக் குன்றாமல் காணப்படுகின்றன. பஞ்சாயதனக் கோயில்கள் உள்ள நான்கு சுற்றுக் கோயில்கள் பல்லவர், சோழர் காலங்களைச் சேர்ந்த அஷ்ட பரிவார தேவதைகளின் சுற்றுக் கோயில்களின் வேறானவை என்பது உளங்கொளத் தக்கது.

கொடும்பாளூர் மூவர் கோயிலுக்குத் தென்கிழக்கே ஒரு பழைய கோயிலின் பாழடைந்த சின்னங்கள் காணப்படுகின்றன. கூர்ந்து நோக்கின் மூலத்தானம், நான்கு சுற்றுக் கோயில்கள் ஆகியவற்றின் அடிப்படைகள் ஒரே மேடையில் அமைக்கப்பட்டமைக்கு உரிய சுவடுகள் தென்படுகின்றன. நாம் அறிந்த வரையில் தமிழ் நாட்டில் பண்டு அமைந்திருந்ததாகக் கருதக்கூடிய பஞ்சாயதனக் கோயில் இஃதொன்றே. இக் கோயில் இந்நிலையில் மாய்ந்துபோயினமை வருந்தத்தக்கது.

முத்தரையர்களின் பழைய தலைநகரான நியமம் (நேமம்) என்ற ஊரின் ஐராவதேசுவரர் கோயிலின் தென்மேற்கே பழங் கோயில்களின் சின்னங்கள் காணப்படுகின்றன. இப் பகுதியின் நடுவில் பெரிய இலிங்கமும், சுற்றி ஆயிரம் இலிங்கங்களும் பதிக்கப்பட்ட இடம் ஒன்று உள்ளது. நியமம் என்ற ஊர் கல்வெட்டுகளில் ஆயிரத்தளி என்றும் வழங்கப்படுகிறது. (ஆயிரத்தளி என்பது ஆயிரங் கோயில்கள் என்று பொருள்படும்.) இவ் விலிங்கக் கூட்டங்களுக்குச் சற்றுத் தொலைவில் மற்றொரு பெரிய இலிங்கம் காணப்படுகிறது. இதனைச் சுற்றியும் முற்காலத்தில் ஆயிரம் சிறிய இலிங்கங்கள் நாட்டப்பட்டிருந்தனபோலும். ஆயிரக்கணக்கான இலிங்கங்களுக்கு அமைக்கப்பட்ட கோயில் ஆயிரத்தளி என்று வழங்கப்பட்டதோ என்று கருதுகிறோம்.

மாடக் கோயில் என்பது மற்றொரு வகைக் கோயிலாகும். இம் மாடக்கோயில் சங்க காலத்தை ஒட்டி அரசாண்ட கோச்செங்கட் சோழன் வரலாற்றோடு இணைத்துக் கூறப்படுகிறது. கோச்செங்க ணான் சென்ற பிறப்பில் திருவானைக்காவில் சிலந்தியாகப் பிறந்து, சிவனடி மறவாது, திருவானைக்காவுடைய நாயனார்மீது நாவல் மரத்து இலைகள் விழாதவாறு அவர் தலைக்குமேல் தன் வாய் நூலால் விதானம் அமைத்து வழிபட்டு வந்தான் எனவும், அதே பெருமானிடம் தள ராத பக்தி கொண்ட யானையொன்று, நாடோறும் காவிரி நீரைத் தன் துதிக்கையில் கொணர்ந்து, பெருமானை நீராட்டிப் பூவிட்டு வழி பட்டு வந்தது எனவும், யானை நீராட்டு முன் சிலந்தி பின்னிய விதானத்தைச் சிதைத்து வந்த காரணத்தால், சிலந்தி வருந்தி, ஒரு நாள் யானையின் துதிக்கைக்குள் நுழைந்து துன்புறுத்த, யானை துதிக் கையைப் பாறையில் மோதவே, யானையும் சிலந்தியும் ஒருசேர இறந் தன எனவும், சிவத் தியானத்தோடு இறந்த சிலந்தி மறு பிறப்பில் கோச்செங்கட் சோழனாகத் தோன்றியது எனவும், அவன் சிவபெருமா னுக்கு, யானை ஏறி உள்ளே நுழைய முடியாதபடி செங்குத்தான படிக் கட்டுகள் கொண்ட மேடைமீது அமைக்கப்படும் மாடக்கோயில்கள் எழுபது அமைத்து ஆண்டான் எனவும், கோச்செங்கட் சோழன் நல்ல நேரம் வரும் வரையில் தன் தாய் வயிற்றில் இருக்குமாறு செயற்கை முறையால் செய்யப்பட்டதால் சிவந்த கண்களை உடையவன் ஆயி னான் எனவும் இலக்கியம் குறிப்பிடுகிறது.

இவ்வரசனுடைய திருப்பணியைத் திருமங்கை மன்னன் 'எண் தோள் ஈசற்கு எழில் மாடம் எழுபது செய்து உலகம் ஆண்ட திருக் குலத்து வளச்சோழன்' என்ற அடிகளில் குறிப்பிடுகிறார். இம் மாடக் கோயில்களில் மூலத்தானம் செங்குத்தான படிக்கட்டுகள் கொண்ட மாடியில் அமைக்கப்பட்டிருந்தது. அத்தகைய கோயில்களை, பாப நாசத்தை யடுத்த நல்லூர், நாகப்பட்டினத்தையடுத்த கீவளூர், திருக் காட்டுப்பள்ளியை அடுத்த அரங்கநாதபுரம் முதலிய இடங்களில் காணலாம். நீலகண்ட சாத்திரியார் தஞ்சை இராசராசேசுவரத்தை மாடக்கோயில் என்று குறிப்பிடுவது ஆராய்ச்சிக்குரிய செய்தியாகும்.

# 5. கோயிலின் பணி

கோயில் என்பது இறைவன் வீற்றிருக்கும் இடமாகும். அஃது எல்லோருடைய வணக்கத்துக்கும் உரியது. கோயில் இடைக்கால இந்தியாவில் மக்கள் நலத்திற்குப் பெரிதும் பயன்பட்ட நிலையமாக விளங்கியது. கோயில்கள் மக்களுடைய வாழ்க்கையோடு பலவிதங்களி லும் ஒன்றி, அதனைப் பலவகைகளிலும் வளம்படுத்தியது. இம்மையில் நல்வாழ்வையும், மறுமையில் வீடுபேற்றையும் கருதிய சான்றோர்கள் ஆலய வழிபாட்டில் மன அமைதியைக் கண்டனர்.

கோயில் கல்வியின் நிலைக்களமாக இருந்தது. கோயில்களுக்குள் பள்ளிகளும் கல்லூரிகளும் நிறுவப்பட்டன. கோயில்களுக்குள் நிறுவப் பட்ட பள்ளிகளை நடத்தும் ஆசிரியர்களுக்கும் அங்குப் பயிலும் மாணாக்கர்களுக்கும் தேவைப்பட்ட வசதிகளைச் செய்து கொடுப்ப தற்குப் பலராலும் அறக்கட்டளைகள் நிறுவப்பட்டன. இவர்களுக் காகக் கோயில்களில் சிற்சில இடங்களில் உணவு விடுதிகளும் அமைக் கப்பட்டிருந்தன. சிறந்த நூல்கள் பனையோலைகளில் எழுதப்பட்டன; அச் சுவடிகள் பல கோயில் நூல்நிலையங்களில் தொகுத்து வைக்கப் பட்டன. கோயில்களில் அமைந்த பள்ளிகளில் வேதங்கள், வேதாந் தங்கள், திருப்பதிகங்களான தேவாரம் முதலியவை, திருவாய் மொழியை உள்ளிட்ட நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் முதலிய மத நூல்களை முறையே கற்பதற்கு வாய்ப்பு அமைக்கப்பட்டிருந்தது. வேதங்களையும் வேதாங்கங்களையும் கற்பிப்பதற்குப் பல நன் கொடைகள் வழங்கப்பட்டன. பரகேசரிவர்மனான முதல் பராந்தக னுடைய 13ஆம் ஆண்டில் காப்பலூரில் சாந்தோக்கிய கிடைப்புற மாக ஒரு நிலம் நன்கொடை வழங்கப்பட்டது. இராசகேசரிவர்மனான சுந்தர சோழன் ஆட்சியில் திருவாதிரைத் திருநாளன்று இரவு சாம வேதத்தை ஓதுகின்றவர்களுள் மிகச் சிறந்தவர்க்குப் பொற்பரிசு வழங்குவதற்காக ஓர் அறக்கட்டளை நிறுவப்பட்டது. இந் நிகழ்ச்சி ஆண்டுதோறும் மார்கழித் திங்கள் திருவாதிரைத் திருவிழாவன்று

கோயில் தேவராயன்பேட்டை என்ற கோயிலில் கொண்டாடப்பட்டது. குடந்தை நாகேசுவரர் கோயிலில் பிரபாகரருடைய மீமாம்சையைக் கற்பிப்பதற்கு வாய்ப்பு வழங்கப்பட்டது. முதற் பராந்தகனுடைய 37ஆம் ஆண்டில் திருச்சி மாவட்டத்து லால்குடிக் கோயிலில் நாள்தோறும் காலை, நண்பகல், மாலை என்ற மூன்று வேளைகளிலும் திருப்பதியம் விண்ணப்பம் செய்ய அந்தணர் இருவருக்கு வாய்ப்பு வழங்கப்பட்டது. சுந்தர சோழன் காலத்தை ஒட்டித் திருவெறும்பூர் ஆதித்தேசுவரர் கோயிலில் திருப்பதிகம் விண்ணப்பம் செய்ய நியமிக்கப்பட்ட நால்வருக்கும் ஊதியம் அளிக்க நன்கொடை வழங்கப்பட்டது. இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் திருவாமாத்தூரில் தேவாரம் விண்ணப்பம் செய்யக் குருடர் பதின்மர் நியமிக்கப்பட்டனர். அவர்களுக்கு வழிகாட்டிகளாக இருவர் அமைக்கப்பட்டனர். அம் மன்னன் இத்தகைய குருடர் குழாத்தின் எண்ணிக்கையை மிகுதிப்படுத்தி அவர்களுக்கு ஊதியம் வழங்கப் பழைய நன்கொடையோடு மீண்டும் 12 வேலி நிலத்தை நன்கொடையாக வழங்கிய செய்தி உணரப்படுகிறது. திருமால்புரக் (திருமாற்பேறு) கோயிலில் நம்மாழ்வாருடைய பதிகங்கள் உள்ளிட்ட நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை ஓதுவார்க்கு ஊதியம் வழங்கத் திருமால்புரத்தின் பக்கத்துச் சிற்றூராகிய கோவிந்தபாடியில் ஒரு நிலம் நன்கொடையாக வழங்கப்பட்டது. இவற்றால் கோயில்களில் சமய சம்பந்தமான கல்வி கற்பதற்கும் நூல்கள் ஓதுவதற்கும் தாராளமான நன்கொடைகள் வழங்கப்பட்ட செய்தியை உணரலாம்.

கோயில், இசைக்கும் ஏனைய நுண்கலைகளுக்கும் இடமாகத் திகழ்ந்தது. இசையும் கூத்தும் தெய்வத்தின் பேராற்றலை விளக்கி மனிதனுடைய பக்தியை வளர்க்கும்வகையில் விளங்கி வந்தன.

திருவிடைமருதூரில் பாண்டியன் முடித்தலைகொண்ட கோப்பரகேசரிவர்மனான இரண்டாம் ஆதித்தனுடைய ஆட்சியில் ஆண்டுதோறும் ஏழு நாட்கள் ஆரியக்கூத்து நிகழ்த்த ஏற்பாடு செய்யப்பட்டது. அரசனுடைய திருமுகத்தைப் பெற்றவுடன் கோயில் ஸ்ரீகாரியம் பார்க்கும் அதிகாரியும், திரைமூர் ஊர்ச் சபையினரும், வணிகர் குழாமான நகரத்தாரும் தேவகன்மிகளும் கோயில் நாட்டிய அரங்கத்தில் கூடி ஆண்டுதோறும் ஏழு நாட்டியங்களை நிகழ்த்தவேண்டும் எனவும், கூத்தன் ஒவ்வொருவனுக்கும் 14 கலம் நெல் வழங்கவேண்டும் எனவும் முடிவு செய்தாராக அறிகிறோம்.

சிறந்த கட்டட வேலைகளும், சிற்பங்களும், ஓவியங்களும் மக்களிடை சமய உணர்ச்சியைப் பெருக்குவதற்காகவே அமைக்கப்பட்டன. கோயில்களே இந்த நாட்டுக் கட்டடங்களில் மிகச் சிறப்பும்

உறுதியும் வாய்ந்தவை. நாட்டில் விளங்கிய சிறந்த சிற்பிகளும் ஓவியர்களும் அடியார்களின் உள்ளங்களுக்கு உவகை தரும் வகையில் சிற்பங்களையும் ஓவியங்களையும் வரையுமாறு அமர்த்தப்பட்டனர். கோயில்களில் நிகழ்ந்த திருவிழாக்கள் ஆயிரக்கணக்கான மக்களின் உள்ளங்களைக் கவர்ந்தன. இத் திருவிழாக்களில் நாடகங்கள் நடிக்கப் பட்டன. சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பட்டன. சந்தைகள் கூட்டப்பட்டன. கேளிக்கைகள் பலவும் நிகழ்த்தப்பட்டன. எனவே, திருவிழாக் காலங்களில் மக்கள் ஆயிரக்கணக்கில் கூடினர்.

இறை வழிபாட்டுக்கு அவ்வப்போது அரசர்கள் வருவதும் உண்டு. ஒவ்வோரரசனுக்கும் குலநாயகம் என்று போற்றப்படும் விருப்பிற் குகந்த தெய்வம் உண்டு, அத்தகைய தெய்வங்களின் கோயில் களுக்கு நன்கொடைகள் பேரளவில் வழங்கப்பெறும். முதற் பராந்த கன் ஹேமகர்ப்பம், துலாபாரம் முதலிய நற்செயல்கள் செய்தான். அங்ஙனம் ஹேமகர்ப்பத்தாலும் துலாபாரத்தாலும் கொள்ளப்பட்ட பொன்னும் மணிகளும் தெய்வங்களின் அணிகலன்களுக்கும், கோயில் கட்டடங்களை விரிவாக்குவதற்கும், கோயில்களின் முன்னேற்றத்துக் கும் பயன்படுத்தப்பட்டன. உத்தரமேரூர் சுந்தர வரதப்பெருமாள் கோயில் துலாபாரதானத்தால் பெரும்பயன் பெற்றது; ஆதலின் அது 'துலாபாரக் கோயில்' என்றும் வழங்கப்படுகிறது. ஒரு கோயிலில் துலாபார தானம் நிகழ்ந்தது என்றால், அந்நாள் அக் கோயில் வரலாற் றிலும் சரி, அக் கோயிலைச் சுற்றி அமைந்துள்ள மக்கள் வாழ்க்கை யிலும் சரி, ஒரு பொன்னாளாகக் கருதப்பட்டது.

அரசர்கள் கோயில்களில் அமைந்த இராச சபை என்ற திருவோ லக்க மண்டபங்களில் முடிசூட்டு விழாக்களை நிகழ்த்தினர். தில்லையி லுள்ள நூற்றுக்கால் மண்டபமும் ஆயிரக்கால் மண்டபமும் பிற் காலச் சோழர்களுக்கும் பாண்டியர்களுக்கும் முடிசூட்டு விழா மண்ட பங்களாக அமைந்தன. முதல் இராசராசனுடைய 29ஆம் ஆண்டில் அவன் திருவிசலூர்க் கோயிலில் துலாபார தானமும் அவனுடைய தேவி இரணிய கர்ப்பதானமும் செய்தாராக அறிகிறோம். அரசர்கள் தாம் எய்திய வெற்றிகளைக் கொண்டாட 'விஜயாபிஷேகமும்' தம்மு டைய பெரிய வீரச்செயல்களைக் கொண்டாட 'வீராபிஷேகமும்' செய்துகொள்வதுண்டு. அவை பெரும்பான்மையும் கோயில்களி லேயே நிகழும்.

சிறந்த புலவர்கள் தாம் இயற்றிய நூல்களைக் கோயில் மண்டபங் களிலேயே அரங்கேற்றினர். பெரும்புலவர்கள் அரங்கேற்று மண்ட பத்தில் கூடி நூல்கள் இயற்றிய புலவர்களைச் சிறப்பித்தனர். இரண் டாம் குலோத்துங்கனுடைய ஆட்சியில் சேக்கிழார் பெருமான் இயற்

றிய திருத்தொண்டர் புராணம் தில்லை ஆயிரக்கால் மண்டபத்தில், கற்று வல்ல சான்றோர் முன்னிலையில் அரங்கேற்றப்பட்டது என்பதும், அந் நூல் பாடிய சேக்கிழாருக்குத் 'தொண்டர் சீர் பரவுவார்' என்ற சிறப்புப்பெயர் வழங்கப்பட்டது என்பதும் வெளிப்படை.

கோயில் ஸ்ரீகாரியம் பார்ப்பவர்கள் நன்கொடைகளையும் அறக் கட்டளைகளையும் ஏற்று, அவற்றை வழங்கியவர்களின் விருப்பப்படி அறங்களை நன்முறையில் நிகழ்த்திவந்த செய்தி பல கல்வெட்டுகளா லும் உணர்த்தப்படுகிறது. இந் நன்கொடைகள் கோயிலில் நாடோ றும் நிகழ்த்தப்படும் செலவினங்களுக்குப் பயன்படுவதோடுமட்டும் அல்லாமல் திருவிழாக்கள் நிகழ்த்துதல், கோயில்களைப் பழுதுபார்த் தல், கோயில் கொத்தர்கள், தச்சர்கள், கொல்லர்கள், ஏனைய தொழி லாளர்கள் முதலியவர்களுக்கு ஊதியம் வழங்கவும் பயன்பட்டன.

H. கேட்ஸ் (H. Goetz) என்பார் தாம் இயற்றிய 'உலகக் கலைத் தொடர்களில்—இந்தியா' என்ற நூலில் இடைக்கால இந்தியக் கோயில்கள் பூசாரிகள் வகுப்பினருக்கே நலன் பயப்பனவாக இருந் தன என்று குறிப்பிட்டுள்ளார். உண்மையை நோக்கின், ஒவ்வொரு கோயிலும் தான் அமைந்த இடத்தைச் சுற்றி வாழ்ந்த எல்லா இன மக்களுக்கும் உலகியல் இன்பமும், ஆன்ம இலாபமும் அளிக்கும் நலன் பயக்கும் நிலையங்களாகவே விளங்கின என்பது போதரும். கோயில்கள் மக்களுடைய வாழ்க்கையைப் பலமுறைகளிலும் சீர்திருத்தி அவர்க ளுடைய வளமான நல்வாழ்விற்குப் பெரிதும் துணைபுரிந்துள்ளன. அக் காலத்தில் மக்கள் உண்மையான தெய்வ நம்பிக்கையோடு கோயில் காரியங்களை நிர்வகித்து வந்ததனால், அந் நிகழ்ச்சிகளில் மட்டமான மனப்பான்மையும் தன்னலப் பேராசையும் சிறிதும் இடம் பெற வில்லை. கோயில் பூசாரிகள் கோயில் செல்வத்தால் பயன்பெற்ற பல தொகுப்பினருள் ஒருவரே. உண்மையில் பூசாரிகளைவிட மிக்க நலன் பெற்ற தொழிலாளிகளும் கோயில்களில் பணிபுரிந்தனர் என்பதற்குச் சான்றுகள் பல உள.

பத்தாம் நூற்றாண்டினனான உத்தம சோழனின் தாயாரான செம்பியன் மகாதேவியார் கோனேரிராசபுரக் கோயிலுக்குப் பெரும் பரப்புடைய நிலத்தை அறக்கட்டளையாக வழங்கியுள்ளார். அவ்வறக் கட்டளையின் வருமானத்திலிருந்து கோயிலிலுள்ள தெய்வங்களின் நிவேதனம், சந்தனக்காப்பு, சீதாரி (புகைக்குப் பயன்படும் சந்தனத் தூள்), விளக்குகளுக்கு எண்ணெய், செம்பியன் மாதேவியாரின் பிறந்த நாள் (ஜன்ம நட்சத்திரம்) அன்று நிகழ்த்தப்படும் சிறப்பான நிவேத னம் (ஸ்ரீபலி), கற்றுவல்ல அந்தணர்களுக்கும், அடியார்களுக்கும், யாத்திரிகர்களுக்கும் உணவிடுதல், சந்தனம் அரைப்பார், இறைவ

னுடைய திருச்சுற்றுலாவின்போது குடை பிடிப்பார், திருநந்தன வனம் அமைப்பார், பூப்பறித்து வருவார், மாலைகள் தொடுப்பார், கோயிலைப் பெருக்கி மெழுகிச் சுத்தம் செய்வார், கோயில் பாடகர்கள், முரசறைவார், கொம்பு (சங்கு) ஊதுவார், கோயில் மெய்க்காவற்காரர்கள், திருப்பதியம் ஓதுவார், கோயிற் கணக்கர், கோயிற் கணக்கைச் சரிபார்க்கும் அரசாங்கத் தணிக்கையாளர், கோயிலுக்குக் குசக்கலம் (மண்பாண்டம்) இடுவார், தெய்வங்களுக்கு உரிய ஆடை நெய்து அமைப்பார், ஆடைகளுக்குச் சாயமிடுவார், திருமஞ்சனத்துக்கு நீர் கொணர்வார், நாள்தோறும் பஞ்சாங்கம் படிக்கும் சோதிடர், கோயில் கொத்தர், தச்சர், கொல்லர் ஆகியவர்களின் வருமானம், கோயில் பணியாளர்களான பூசாரிகள், சமையற்காரர்கள், திருப்பதியம் ஓதுவார், இசை பாடுவார் முதலிய எல்லோருக்கும் வீட்டு வசதி செய்து கொடுத்தல், கோயில் கட்டடத்தைப் பழுது பார்த்தல் முதலியவற்றுல் நேரும் செலவினங்கள் பலவற்றிற்கும் நிதி வழங்கப்பட்டதாக அறிகிறோம். இச் செய்தி ஒன்றே கோயில் 'ஓரினத்தாரைமட்டும் ஆதரித்தது என்று கூறும் கூற்று' ஆதாரமற்ற கருத்து என்பதற்குச் சான்று பகரும். ஆற்றலும் தொண்டு மனப்பான்மையும் கொண்ட பலவகைத் தொழிலாளிகளுக்கும் கோயில்களில் பணிபுரியும் வாய்ப்புக் கிடைத்துவந்தது. அக்காலச் செல்வர்கள் ஏழைகளுக்கும் தக்கவர்களுக்கும் உதவுவதன்மூலம் இம்மையில் புகழும் மறுமையில் வீடும் கிட்டும் என்ற எண்ணத்திலேயே செயற்பட்டனர். பொதுவாகக் கோயில்கள் யாவும் நன்கு நிர்வகிக்கப்பட்டன. ஆனல், முக்குண வயத்தான் முறை பிறழும் மனிதர்களால் நிர்வகிக்கப்படும் ஏனைய நிலையங்களில் நிகழ்வதைப்போலவே கோயில்களிலும் நிர்வாக ஊழல்கள் ஒரோவழி நிகழ்ந்தன.

கோயில் நிர்வாகத்தில் ஊழல் ஏற்பட்டபோதும் கோயில் சொத்துகள் வேற்றுச் செய்திகளில் பயன்படுத்தப்பட்டபோதும் நன்மக்கள் அரசனிடம் முறையிட்டு, அரசனுடைய விசாரணையின்மூலம் கோயில் நிர்வாகத்தைச் சீர்திருத்தியும், கோவில் சொத்துகளைக் காத்தும் வந்த செய்திகள் சில கல்வெட்டுகள் வாயிலாக அறியப்படுகின்றன.

இராசகேசரிவர்மனை ஆதித்தனுடைய ஆட்சியில் தில்லைஸ்தானம் (திருநெய்த்தானம்) கோயில் வருமானம் வேற்றுச் செய்திகளில் பயன்படுத்தப்படவே, அரசியலார் விசாரணை நடத்திக் கோயில் கரணத்தான், நகரக் கரணத்தான், கணக்கு எழுதுவான் முதலிய நால்வருக்கு ஏறக்குறைய மூன்று கழஞ்சுப் பொன் தண்டம் விதித்து அப் பொன்னைக் கொண்டு திரு நெய்த்தானப் பெருமானுருக்கு இரண்டு நெற்றிப் பட்டங்கள் அமைத்துக்கொடுத்த செய்தி அறியப்படுகிறது.

முதற் பராந்தகனுடைய 25ஆம் ஆண்டில் அரசனுடைய ஆணையால், அரசனுடைய உடன் கூட்டத்து அதிகாரி ஒருவர் நகரவாரியத்தாருடன் சேர்ந்து, கோயிற் செய்திகள்பற்றி விசாரணை நிகழ்த்தித் தவறு செய்தவர்களுக்குத் தண்டம் விதித்து, அப் பொன்னைக் கொண்டு இறைவனுக்கு நெற்றிப்பட்டம் ஒன்று அமைத்தனர் என அறிகிறோம்.

சுந்தர சோழனுடைய ஆட்சியில் நகரத்தார் (வணிகர்) மூவர் அரசனுடைய துப்பறியும் அதிகாரியால் குற்றம் சாட்டப்பட்டு 14 கழஞ்சு தண்டம் விதிக்கப்பட்டனர் எனவும், அப் பொன் இறைவனுக்கு இரண்டு நெற்றிப்பட்டங்கள் அமைக்கப் பயன்படுத்தப்பட்டது எனவும் அறிகிறோம்.

பரகேசரிவர்மன் உத்தம சோழன் காலத்திலும் கோயில் நிர்வாகம்பற்றி விசாரணை ஒன்று நிகழ்த்தினான் என்று அறிகிறோம். இம் மன்னனின் 4ஆம் ஆண்டு 325ஆம் நாள் திருவிடைமருதூர்க் கோயிலிலுள்ள நடனசாலையில் திரைமூர் சபையினரும், திருவிடைமருதூர் நகரத்தாரும், திருக்கோயிலுடையாரான அறங்காவலரும், கோயில் காரியங்களை மேற்பார்வை செய்து சீர்திருத்தும் அரசியல் அதிகாரியும் கூடி விளக்கு எரிப்பதற்காக வைக்கப்பட்ட அறக்கட்டளை ஒன்றுபற்றி விசாரணை நிகழ்த்தினர். அக் கோயில் புதுப்பிக்கப்படுவதன்முன் அறக் கட்டளைகள் பற்றிய கல்வெட்டுகளை உடைய கற்கள் பூமிக்கு அடியில் இருந்த அறைகளில் சேர்த்துவைக்கப்பட்டிருந்தன. கோயில் புதுப்பிக்கப்பட்ட பிறகு அக் கல்வெட்டுகளைப் புதுச் சுவர்களில் பொறிக்குமாறு ஆணையிடப்பட்டிருந்தது. ஆனால், காடுவெட்டிகள் நந்திப்போத்தரையர் திருவிளக்கு எரிப்பதற்காக நன்கொடை வழங்கிய 60 கழஞ்சுப் பொன்பற்றிய கல்வெட்டு புதுச் சுவர்களில் பொறிக்கப்படவில்லை என்பதை விசாரணை மூலம் அறிந்த அவர்கள் அக் கொடைபற்றிய கல்வெட்டைச் சுவரில் பொறிக்குமாறு ஆணையிட்ட செய்தி திருவிடைமருதூர்க் கோயில் கல்வெட்டொன்றால் அறியப்படுகிறது.

முதற் பராந்தகனுடைய ஆட்சிக் காலத்தில் திருவாமாத்தூர்க் கோயிலில் அக் கோயில் பெருமானடிகளுக்கு ஸ்ரீபலி சுமந்து சென்ற கோயில் யானையின் மாவுத்தனுக்குரிய மானியத்தை நிறுத்திவிடவே மாவுத்தன் தன் பணியை நிறுத்திவிட்டான். இச் செயல் அடியார்களால் அரசவிடம் விண்ணப்பிக்கப்படவே, அரசன் அக் கோயில் உள்ள மாவட்டத்து அரசியல் அதிகாரிக்குத் திருமுகம் அனுப்பி விசாரணை நிகழ்த்தி மீண்டும் மாவுத்தனுக்கு மானியம் வழங்க ஏற்பாடு செய்தான்.

கோநேரின்மைகொண்டான் (உத்தம சோழனாக இருக்க வேண்டும்) என்ற மன்னனுடைய 14ஆம் ஆண்டில் திருமால்புரக் (திருமாற்பேறு) கோயில் கல்வெட்டில் சுவையான நிகழ்ச்சியொன்று கூறப்பட்டுள்ளது. தொண்டைமான் ஆற்றூர்த் துஞ்சிய தேவரின் (முதல் ஆதித்தன்) 21ஆம் ஆண்டில் சிற்றியாற்றூர் என்ற சிற்றூர் தேவதான இறையிலியாகப் பக்கத்து ஊராரான புதுப்பாக்கம் சபையாரிடம் ஒப்படைக்கப்பட்டது. முதல் ஆதித்தனின் 22ஆம் ஆண்டில் அவ்வூர் யானையால் சுற்றி வரப்பட்டுத் (பிடி சூழ்ந்து) தேவதான இறையிலியாக ஊரறிய ஊர்ஜிதம் செய்யப்பட்டது. அந்த அறக்கட்டளையில் கூறியவாறு அறங்களை நிகழ்த்துவதற்குப் புதுப்பாக்கம் சபையினர் உடன்பட்டனர். ஆனால், முதற் பராந்தகனின் 4ஆம் ஆண்டு வரை இந்த அறக்கட்டளை கணக்குப் பேரேட்டில் வரையப்படவில்லை. அன்றுவரை அப் பேரறங்களும் நிகழ்த்தப்படவில்லை. முதற் பராந்தகனுடைய 36ஆம் ஆண்டில் அதே கோயிலுக்கு வேறு சில நிலங்களும் அறக்கட்டளைகளாக வழங்கப்பட்டு, அதே புதுப்பாக்கச் சபையாரிடம் நிர்வாகத்திற்காக விடப்பட்டன. கோயில் பூசாரிகளும், திருவுண்ணாழிகை உடையாரும் (பொருள் காப்பாளர்), மாகேசுவரர்களும் (அறங்காவலர்) உத்தம சோழனுடைய அமைச்சனான சோழ மூவேந்த வேளானிடம் திருமால்புரக் கோயில் அறக்கட்டளைகளின் வருமானத்தைக்கொண்டு புதுப்பாக்கச் சபையார் உரிய அறச் செயல்களை நிகழ்த்தாமல் வேற்றுச் செய்திகளில் செலவிடுகின்றனர் என்ற குற்றச்சாட்டைத் தெரிவித்தனர். அச் செய்தி அரசனிடம் விண்ணப்பிக்கப்படவே, அரசன் திருமால்புரக் கோயிலின் (பழம் பெயர் திருமாற்பேறு) தேவகன்மிகளான பூசாரிகளையும் திருவுண்ணாழிகை உடையாரையும் மாகேசுவரர்களையும், புதுப்பாக்கச் சபை உறுப்பினரையும் வரவழைத்து நீண்டதொரு விசாரணை நிகழ்த்தவே, சபையினர் குற்றவாளிகள் என்பது முடிவாயிற்று. சபையினருக்குத் தண்டம் விதித்து, அறக்கட்டளைகளை ஒழுங்காக நிர்வகிக்குமாறு ஆணையிட்டான். இச் செயலால், கோயில் வருமானம் மிகுதிப்படவே, செலவுகளையும் சற்று விரிவாகச் செய்யுமாறு ஆணை பிறப்பித்தான்.

இவற்றால் கோயில் முதலிய பொதுச் சொத்துக்கள் அரசனாலும் உடன் கூட்டத்ததிகாரிகளாலும் அரசியல் அதிகாரிகளாலும் வெகு விழிப்புடன் பாதுகாக்கப்பட்டுவந்த செய்தி புலனாகிறதன்றோ!

பொதுவாக நிகழ்வனவற்றைப்பற்றிக் கல்வெட்டுகளில் பொறிக்கப்படும் வழக்கம் இல்லை. சாதாரண நிகழ்ச்சிகள் கல்வெட்டில் பொறிக்கப்படும் அளவிற்குச் சிறப்புடையன அல்ல. எங்கோ ஒரோ வழி நிகழும் குற்றங்கள் பற்றியும் அவற்றை விசாரித்து வழங்கிய தண்டங்கள் பற்றியும் மீண்டும் இத்தகைய நிகழ்ச்சிகளுக்கு இடம்

தாராது மக்கள் வாழவேண்டும் என்ற நன்னோக்கத்தோடு பொறிக்கப் பட்டுள்ள கல்வெட்டுகளைக் கொண்டு அக் காலக் கோயில் நிர்வாகம் ஊழல் மலிந்திருந்தது என்று கருதுவது வரலாற்றறிவுக்குப் புறம்பான தாகும்.

கோயில்கள் மக்களின் பொதுச் சேமிப்பு நிதியாகப் பயன்பட்டு அல்லலும் பஞ்சமும் நிகழ்ந்த காலங்களில் தனிப்பட்ட நபருக்கோ சபையாருக்கோ கடன் கொடுத்து உதவிய செய்தியும் கல்வெட்டு களால் அறியப்படுகிறது. புன்செய் நல்துணை ஈசுவரத்துக் கோயில் தலைச் செங்காட்டு எல்லைக்குள் உள்ளது. தலைச் செங்காட்டுச் சபை யார் நல்துணை ஈசுவரத்துச் சபையாரிடம் கையெழுத்து ஓலையால் (Promissory Note) 500 கழஞ்சுப் பொன் கடன் கொண்டு அதன் வட்டிக்காகக் கோயிலுக்குச் சொந்தமான இரண்டு வேலி நிலத்துக்கு இறை இறுக்க ஒத்துக்கொண்ட செய்தி உணரப்படுகிறது.

கோயில்கள் உறுப்புக் குறைந்தவர்களுக்கும் நாடோடிகளுக்கும் நாள்தோறும் உணவிடுவதற்காகச் சான்றோர் பலரும் நிவந்தங்கள் வழங்கி உள்ளனர்.

கோயில்களுக்குள் கிராம சபைகள் கூடின. கிராம உறுப்பினர் களின் தேர்தல்கள் கோயில்களிலேயே நிகழ்ந்தன. கிராம சபைகள் கோயில்களில் கூட்டப்பட்டமையால் தெய்வ சந்நிதானம் என்ற எண்ணத்தில் அவர்களின் ஒவ்வொரு செயலும் தனிச் சிறப்பான ஒழுங்குடன் நடைபெற்று வந்தது. அத்தகைய புனிதமான சூழ்நிலை யில் பொய் கூறவோ தவறான செயல் செய்யவோ மக்கள் அஞ்சினர்.

செந்தலை, உத்தரமேரூர், காவேரிப்பாக்கம், திருப்பாற்கடல் முதலிய ஊர்களின் கல்வெட்டுகளிலிருந்து முற்காலச் சோழர் ஆட்சியில் ஊராட்சி மக்களால் மிகச் சிறப்பாக நடத்தப்பட்டுவந்த செய்தி அறியப்படுகிறது. உத்தரமேரூர் வைகுந்தப் பெருமாள் கோயில் சுவர்களில் காணப்படும் இரண்டு கல்வெட்டுகளிலிருந்து பற்பல வாரியங்களிலுள்ள உறுப்பினர்களைக் குடவோலை முறைப்படி தேர்ந்தெடுத்த விதமும், பல வாரியத்தார்களும் பணி செய்த வகையும் விரிவாக அறியப்படுகின்றது.

காட்டுமன்னார் கோயில் என்ற மன்னார்குடிக் கல்வெட்டொன்று ஊராட்சி மன்றத்தின் உறுப்பினர்களின் எண்ணிக்கையைக் குறிப் பிடுகிறது. அவ்வூர் மன்றத்தில் 120 உறுப்பினர்கள் பணியாற்றினர் என் அறிகிறோம்.

பொதுமக்களின் அறக்கட்டளைகளை நிர்வகிக்கும் பொறுப்பு கற்றுவல்ல சான்றோரிடம் ஒப்படைக்கப்பட்டது. சீநிவாசநல்லூரில்

'சதுர்வேதிபட்டாரப் பெருமக்கள்' அறக்கட்டளைகளை நிர்வகித்த செய்தி போதருகிறது. முதற் பராந்தகனுடைய 37ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று அள்ளூர் என்ற ஊர்ப் பெருமக்களான 'அள்ளூர் தலைமை சான்றார்' காவிரிப் பேராற்றின் வெள்ளத்தால் மணலடிக்கப் பட்டு ஆறு அல்லது ஏழு ஆண்டுகளாகப் பாழாகக் கிடந்த நிலத்தை ஒப்புரவாளர் ஒருவருக்கு இறையிலி நிலமாக விற்றுக் கொடுக்கவே, அவர் அந் நிலத்தைச் சீர்திருத்தி விளைச்சல் நிலமாக்கி அதன் விளை வின் ஒரு பகுதியை அள்ளூரில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள அள்ளூர் நக்கன் பரமேசுவரரின் நிவேதனத்திற்காக வழங்கினார் என அறிகிறோம். இஃது அக் காலக் கோயில் நிர்வாகத்தில் குறிப்பிடத் தக்கதொரு செயலாகும். வேதாரண்யத்தில் 'தேவரிடைச் சான் றார்' என்ற நிர்வாகக் குழுவினர் சில ஆடுகளை நன்கொடையாகப் பெற்று அவற்றின் நெய்யினால் கோயிலில் விளக்குகள் எரிப்பதற்கு ஒத்துக்கொண்ட செய்தி அறியப்படுகிறது.

முதற் பராந்தகன் வீரநாராயண சதுர்வேதிமங்கலம் என்ற ஊரைப் புதிதாக நிர்மாணித்து, அதைக் கற்றுவல்ல சான்றோர்களுக் குத் தானமாக வழங்கினான். அவ்வூர் தற்போது காட்டுமன்னார் கோயில் (குடி) என வழங்கப்படுகிறது. சுந்தர சோழன் காலத்தில் அவ்வூர் அறக்கட்டளைகளின் நிர்வாகம் 'சாசனபட்ட சதுர்வேதி பட்டப் பெரும்பாடி சகஸ்ரதானப் பெருமக்கள்' என்ற கற்றுவல்ல சான்றோர்களின் வசம் ஒப்படைக்கப்பட்டதாக அறியப்படுகிறது.

கண்டராதித்த தேவரின் தேவியாரும் உத்தம சோழனின் தாயாருமான செம்பியன் மாதேவியார் தம் பெயரால் செம்பியன் மாதேவி என்ற சிற்றூரை நிர்மாணித்தார் (இவ்வூர் நாகபட்டினத் திற்கருகேயுள்ளது). அவ்வூரின் அறக்கட்டளைகளின் நிர்வாகம் 'சாசன பட்ட சதுர்வேதிபட்டதானப் பெருமக்கள்' என்ற கற்றுவல்ல சான் றோர்களின் குழுவிடம் ஒப்படைக்கப்பட்டது.

சோழர்கள் காலத்தில் அறக்கட்டளைகளின் நிர்வாகம் ஆழ்ந்த கல்வியும் சீரிய ஒழுக்கமும் சான்ற பெருமக்களிடமே ஒப்படைக்கப் கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

திருமழபாடிக் கோயிலில் பழங் கோயில்களைப் புதுப்பிக்கும் முறைபற்றிய செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன. முதல் இராச ராசனுடைய 28ஆம் ஆண்டு 39ஆம் நாள் அம் மன்னன் கோயிலில் பழைய விமானத்தை இடித்துப் புது விமானம் எடுப்பிக்குமாறு ஆணை யிட்டான். அதனை ஒட்டி அரசியல் அதிகாரி பழைய விமானத்தின் நாற்புறச் சுவர்களிலும் உள்ள கல்வெட்டுகளை ஒரு புத்தகத்தில்

படி யெடுத்துக்கொள்ளுமாறு ஆணையிட்டான். கோயில் கண்டரா தித்த சதுர்வேதி மங்கலத்தின் எல்லைக்குள் எடுப்பிக்கப்பட்டிருந்த தால், அவ்வூர்ச் சபையாருக்கும், கோயில் திருப்பணிக் குழுவினருக் கும், கோயில் ஸ்ரீகாரியம் பார்ப்பவர்க்கும், கோயில் அறங்காவலருக் கும் அவ்வாணை அனுப்பப்பட்டதாக அறிகிறோம்.

பிறகு முதல் இராசராசன் மகன் முதல் இராசேந்திரனுடைய 14ஆம் ஆண்டு 70ஆம் நாள் படியெடுக்கப்பட்ட பழைய கல்வெட்டு களைப் புதுப்பிக்கப்பட்ட கோயிற் சுவர்களில் வெட்டுமாறு அரசன் ஆணையிடவே, அவ்வாணை உத்தம சோழ பிரம்மாதிராயர் என்ற அமைச்சனால் கோயில் ஸ்ரீகாரியம் பார்க்கும் அதிகாரிக்கும், தேவ கன்மிகளுக்கும், கண்டராதித்த சதுர்வேதி மங்கலச் சபையினருக்கும், பக்கத்திலுள்ள புலியூர்ச் சபையினருக்கும் தெரிவிக்கப்பட்டது. உடனே அரசியல் அதிகாரிகளாலும், ஊராட்சிக் குழுவினராலும், கோயில் நிர்வாகக் குழுவினராலும் நியமிக்கப்பட்ட நன்மக்களின் மேற்பார்வையில் கல்வெட்டுகள் முறையே வெட்டப்பட்டன என்று அறிகிறோம்.

உடன்கட்டையேறுதல் என்பது முற்பட்ட சோழர்கள் காலத்தி லும் வழக்கத்தில் இருந்தது. கண்டராதித்தன், அரிஞ்சயன் என்ற மன்னர்கள் காலத்தில் அள்ளூரில் பராந்தக குஞ்சர மல்லன் என்ற சிறப்புப் பெயர் பெற்ற வீர சோழ இளங்கோவடிகள் என்ற தலைவன் வாழ்ந்துவந்தான். அத் தலைவன் இறந்ததும் அவனுடைய மனைவி கங்கமாதேவி தீப் பாய்ந்தாள். தீப் பாயுமுன், சில தரிசு நிலங்களைச் சீர்திருத்திக் கோயிலில் விளக்கு எரிப்பதற்கு ஓர் அறக்கட்டளையாக வைப்பதற்காக 20 கழஞ்சு பொன் கொடுத்த செய்தி அரிஞ்சய னுடைய 3ஆம் ஆண்டுக் கல்வெட்டால் அறியப்படுகிறது.

முதற் பராந்தகன் ஆட்சியில் திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த குமாரவயலூரில் சுவையானதொரு விசித்திரமான செய்தி பொறிக்கப் பட்டுள்ளது. அக் கல்வெட்டு—வேட்டன் சேந்தன் மகளான சேந்தன் காரி என்பாள் தனக்குப் பிள்ளைப்பேறு இல்லாத காரணத்தால் அக் கோயில் அம்பிகையையே தனக்குப் புதல்வியாக ஏற்றுக்கொள்வதாக முடிவு செய்து, இறைவியின் திருக்கல்யாணத்தை இறைவனோடு நிகழ்த்தி வைத்துத் தனக்கு ஸ்திரீதனமாகக் கிடைத்த நிலத்தை நாள் தோறும் நிகழ்த்தும் அவிசுபலி அர்ச்சனா போகத்திற்காக நன்கொடை வழங்கினாள் என்று கூறுகிறது. தற்போது அக்னீசுவரர் கோயில் என்று வழங்கி வரும் திருக்கற்றளிப் பெருமாள் கோயிலில் உமாபட்டாரிகா என்ற அம்பிகையின் திருவுருவத்தைப் புனிதமான முறையில் நிறுவி னாள் என்பதும் அறியப்படுகிறது. இந் நிகழ்ச்சி பராந்தகனுடைய 15ஆம் ஆண்டில் நிகழ்ந்திருக்கலாம்.

## பொதுச் செய்திகளின் பதிவகம்

அக்காலத்தில் கோயில்கள் முக்கியமான பொதுச் செய்திகளின் பதிவு இடங்களாகவும் (Registration Office) விளங்கின. அரசர்களா லும், பொது நிலையங்களாலும், தனிப்பட்ட மனிதர்களாலும் வழங் கப்பட்ட அறக்கட்டளைகளெல்லாம் உள்ளூர்ச் சபையாரின் அனுமதி பெற்றுத் தனித்தனி கற்பலகைகளில் வெட்டி வைக்கப்பட்டன. கற்றளிகள் எடுப்பிக்கப்பட்டபின் அவற்றின் விமானம், மண்டபம், பிராகாரம் இவற்றின் வெளிச்சுவர்களில் வெட்டப்பட்டன. அறக் கட்டளைகளின் மூல சாசனங்கள் யாவும் பனையோலைகளிலோ செப் புத் தகடுகளிலோ பொறிக்கப்பட்டன. அவற்றின் படியே (Copy) கோயிற் சுவர்களில் வெட்டுவிக்கப்பட்டன. முற்பட்ட சோழர் களின் கல்வெட்டுகளில் அரசர் பெயர், அவர் செய்த சிறந்த வீரச் செயல்களைச் சுட்டும் விருதுகள், அரசருடைய ஆட்சியாண்டு என் பனவே காணப்பட்டன முதற் பராந்தகன் 'மதுரை கொண்ட பரகேசரி' எனவே வழங்கப்படுகிறான். முதல் இராசராசன் காலத்தி லிருந்தே சரித்திரத்திற்குப் பெரும்பயன் தரும் மெய்க்கீர்த்தி ஒவ் வொரு தானத்தின் முன்னும் அல்லது கல்வெட்டில் பொறிக்கப்பட்ட இன்றியமையாத செய்தியின் முன்னும் இடம்பெறத் தொடங்கியது. இராசராசனுடைய மெய்க்கீர்த்தி 'திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்' என்று தொடங்கும் பாடலாகும். மெய்க்கீர்த்தி அரச னுடைய ஆட்சியைப்பற்றிச் சுருக்கமாகத் தெரிவிப்பதாகும். அரச னுடைய ஆட்சியும் வீரச்செயல்களும் வளர வளர மெய்க்கீர்த்தியும் வளர்ந்துகொண்டே போகும். 'திருமன்னிவளர' என்று தொடங்கும் முதலாம் இராசேந்திரனுடைய மெய்க்கீர்த்தி மிக அருமையான செய் யுள் நடையில் அமைந்து வரலாற்றுக்குப் பெரிதும் உதவுகிறது. அரசர் கள் காலத்துக் கோயிற் கல்வெட்டுகள் இந் நாட்டு வரலாற்றை நாம் உணரப் பெரிதும் உதவுவனவாகும்.

செம்பியன் மகாதேவி அமைத்த கோயில்களும் அவள் வழங்கிய நன்கொடைகளும் ஒப்புயர்வற்று விளங்குகின்றன. கோனேரி இராச புரத்தில் தன் கணவன் நினைவுக்குறியாக அவள் அமைத்த திருநல்லம் என்ற கோயிலுக்கு அவள் வழங்கிய நன்கொடை ஒன்றே சமுதாயத் தின் பல்வேறு குலத்தைச் சார்ந்து பல்வேறு தொழில்கள் புரியும் மக்கள் பலருக்கும் கோயில் நிவந்தங்கள் பயன்பட்டன என்பதைக் குறிப்பிடப் போதிய சான்றாகும்.

பாலாறு, வேகவதி, செய்யாறு என்ற மூன்று ஆறுகளின் கூடலை ஒட்டி மிக இனிய இயற்கைச் சூழ்நிலையில், வாலாஜாபாத் புகை வண்டி நிலையத்தை அடுத்த 'பழைய சிவரம்' என்ற ஊருக்கு இரு கல்

தொலைவில் அமைந்த திருமுக்கூடலில் உள்ள வேங்கடேசப்பெருமாள் கோயிலில் அமைந்த வீரராசேந்திரன் காலத்துக் கல்வெட்டொன் றின் சிறப்பினைக் குறிப்பிடுவதோடு இந்த அத்தியாயத்தை முடிக் கிறேன்.

அவ் வறக் கட்டளை மூன்று நன்கொடைகள் சேர்ந்து அமைந்த தாகும். அவ் வறக்கட்டளையின் ஆண்டு வருமானமாக 3243 கல நெல் லும் 216½ காசுப் பொன்னும் கிடைத்துவந்தன. அவை கோயிலுக்கு அமைந்த பல்வேறு வகைப்பட்ட நித்திய நைமித்திகச் செலவுகள், ஒரு வேதம் பயிற்றும் கல்லூரியை நடத்தி, அதனை ஒட்டி ஒரு மாணவர் விடுதியை அமைத்து நிகழ்த்துவதற்குரிய செலவினங்கள், ஓர் ஆதுலர்சாலையை (ஆயுர்வேத மருத்துவ இல்லம்) நிகழ்த்துவதற் குரிய பல்வேறு செலவினங்கள் முதலியவற்றிற்குப் பயன்பட்டன.

நித்திய அவிசுபலி, சந்தனக்காப்பு, விளக்கிற்கு எண்ணெய், திரு விழாக்கள் கொண்டாடும் செலவுகள், கோயில் தெய்வங்களுக்குரிய திருப்பரிவட்டங்கள், திருப்பதிக்குச் செல்லும் யாத்திரிகர்களுக்கு உணவிடுதல், திருவிழாக் காலங்களில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு உண விடுதல், கோயில் சோதிடர், திருவாய்மொழி ஓதுவார், 'வீர சோழன்' என்னும் பெயருடைய பூந்தோட்டம் அமைத்துப் பராமரிப்பார், பட்டர்கள், கோயிற் கணக்கு எழுதுபவர், நீர் கொணர்பவர், குசக் கலம் இடுபவர் முதலியோருக்கு நேரும் செலவினங்களோடு கோயி லைப் பழுது பார்ப்பதற்குரிய செலவும் இந்த வரும்படியில் இருந்து கோயிலுக்காகச் செலவிடுவதற்கு வாய்ப்பு அளிக்கப்பட்டது.

கோயிலை ஒட்டி அமைந்த வேதக் கல்லூரியில் இருக்குவேதம், யசுர் வேதம், ரூபாவதாரம், சில ஆகமங்கள், •தந்திரங்கள் முதலியன வற்றைக் கற்பித்து வந்தனர். உணவு விடுதியில் நாள்தோறும் 60 பேர் களுக்கு உணவு இடப்பட்டது. அங்குப் பயில்வோருக்குப் படுக்கப் பாய்கள், விளக்கிற்கு எண்ணெய், ஓராண்டில் 51 சனிக்கிழமைகளில் தேய்த்துக் கொள்வதற்குரிய எண்ணெய் முதலியனவும் வழங்கப்பட் டன. ஆசிரியர்கள், சமையற்காரர், வேலையாட்கள் முதலியவர்க்குத் தக்க ஊதியம் வழங்கப்பட்டது.

ஆதுலர்சாலையில், நோயைக் கண்டுபிடித்து, அதனைப் போக்கு வதற்குரிய மருந்து கொடுக்கும் வைத்தியன், சல்லியக் கிரியை செய்யும் அறுவை வைத்தியன், மூலிகைகள் பறித்து வரும் இருவர், விறகுகள் கொண்டுவரும் மூவர், நோயாளிகளைக் கவனிக்கும் தாதிகள் இருவர், நாவிதன் ஒருவன், காவற்காரன் ஒருவன் ஆகியவருக்கு ஊதியம் வழங்கப்பட்டது. அந்த மருத்துவ மனையில் நோயாளிகள்

படுத்துக் கிடக்க 15 படுக்கைகள் இருந்தன. சரக சம்ஹிதை, சுஸ்ருத சம்ஹிதை, அஷ்டாங்க ஹிருதயம் என்ற ஆயுர்வேத நூல்களில் குறிப்பிட்டபடி மருந்துகள் சேமித்து வைக்கப்பட்டிருந்தன. 40 காசுகள் பெறுமானமுள்ள மருந்துகள் சேமித்து வைக்கப்பட்டிருந்தன.

முதல் இராசேந்திரன் ஆட்சியின் தொடக்க காலக் கல்வெட்டொன்று அம் மன்னனின் அத்தையான குந்தவை ஆழ்வார் தன் தந்தையின் பெயரால் தஞ்சையில் நிறுவப்பட்ட சுந்தர சோழ விண்ணகர் ஆதுலர் சாலைக்கு வைத்திய போகமாக அறக்கட்டளையொன்று வழங்கிய செய்தியை அறிவிக்கிறது.

சுருங்கக்கூறின், கோயில்களின் நடவடிக்கைகள் யாவும் மக்கள் சமூகத்தின் மகிழ்ச்சியையும் நன்மையையும் வளர்ப்பதற்கே பயன்பட்டன என்பது இந்த அத்தியாயத்தின் சாரமாகும்.

நில உடைமைக்காரர், வேலையாட்களை நியமித்து வேலை தருபவர், சமுதாய நலத்துக்குப் பாடுபடும் ஒப்புரவாளர் ஆகியவருடைய செயல்களையும், கடன் கொடுத்துதவும் நிதி, பள்ளிக்கூடம் பொருட்காட்சிசாலை, மருத்துவமனை ஆகியவற்றின் பணிகளையும் தன்னைச் சுற்றி வாழும் மக்கள் சமுதாயத்திற்கு உதவி, அவர்கள் அற உணர்வோடு நல்வாழ்வு வாழ்வதற்குரிய வகைகள் பலவற்றையும் கருணையோடு புரிந்துவந்த, தென்னாட்டின் இடைக்காலத்திலமைந்த கோயில்கள் மனித இனத்தின் வரலாற்றில் ஒப்புயர்வற்று விளங்குகின்றன— என்று நீலகண்ட சாஸ்திரியார் தாம் வரைந்த 'சோழர்' என்ற நூலில் (இரண்டாம் பதிப்பு—பக்கம் 654) குறிப்பிடும் செய்தியோடு இந்த அத்தியாயத்தை முடிக்கிறேன்.

# 6. அரசியல் நிலை

ஆங்கிலேயர் ஆளுகைக்கு முற்பட்ட தென்னகத்து வரலாறு பெரும்பாலும் காஞ்சிப் பல்லவர்கள், தஞ்சைச் சோழர்கள், மதுரைப் பாண்டியர்கள், விசயநகர மன்னர்கள் என்ற நான்கு திறம் வாய்ந்த அரச பரம்பரையினரின் ஆளுமைக்குள் அடங்கிவிட்டது.

சரித்திர காலத்துக்குச் சில நூற்றுண்டுகளுக்கு முன்னரே தமிழகம் சேர சோழ பாண்டியர் என்ற மூவேந்தரின் ஆளுகையின்கிழ் மிகச் சிறப்பாக இருந்த செய்தி இலக்கியங்களின் மூலம் அறியப்படு கிறது. அக் காலம் சங்ககாலம் என்று கூறப்படுகிறது. சங்ககால மன்னர் இலக்கியத்தையும் கலைகளையும் மிகவும் ஆதரித்தனர். அம் மன்னர்களின் பரம்பரைபற்றி முறையாக அறிவதற்குச் சரித்திரச் சான்றுகள் மிகுதியாகக் கிடைக்கவில்லை. சோழ மன்னருள் கரிகால னும், சேர மன்னருள் செங்குட்டுவனும், பாண்டிய மன்னருள் நெடுஞ் செழியனும் சங்ககால மன்னருள் மிக மேம்பட்டவராக அறியப்படு கின்றனர்.

சங்க காலத்தை ஒட்டித் தமிழகம் களப்பிரர் என்ற (சமண அல்லது) பௌத்த மதத்தைச் சார்ந்த வேற்றவர் ஆட்சியில் அகப் பட்டுச் சில காலம் தொல்லையுற்றது. ஆறும் நூற்றுண்டின் இடைப் பகுதியில் பல்லவர் வடபுறத்தும் பாண்டியர் தென்புறத்தும் களப் பிரரை ஒழித்துத் தம் ஆட்சியை நிறுவினர். சிம்ம விஷ்ணு பரம்பரை யினரான பல்லவர் ஆட்சிக் காலத்திலேயே (கி.பி. 550–850) தென் பகுதியில் மதுரையில் கடுங்கோன் மரபினரான பாண்டியர்கள் மூன்று நூற்றுண்டு திறம்பட ஆட்சி செய்தனர். எட்டாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் பாண்டியர், பல்லவர் இவரிடையே ஏற்பட்ட ஏகாதிபத்தியம்பற்றிய பூசலில் உள்நாட்டுச் சிற்றரசர் பலரும் கலந்து கொண்டனர். ஒன்பதாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் இவ்விரண்டு பேரரசர்களின் ஆற்றலும் குறையத் தொடங்கவே, மங்கிக் கிடந்த

சோழர்கள் மீண்டும் விசயாலயன் தலைமையில் பொங்கி எழுந்து புதிய சோழப் பேரரசை நிறுவினர். அப் பேரரசு கி.பி. 850 முதல் 1270 வரை ஏறத்தாழ நான்கு நூற்றுண்டுகள் வரலாற்று நிகழ்ச்சிகள் பல வற்றைக் கொண்டு சிறப்புற்று இலங்கியது. கி.பி. 1200-ல் புத்துயிர் பெற்றெழுந்த பாண்டியப் பேரரசு ஒரு நூற்றுண்டு காலம் மிகச் சீரிய நிலையில் இருந்தது. தமிழ்ப் பேரரசுகள் மங்கத் தொடங்கிய காலத்தில், தோன்றிய முகம்மதியர் ஆக்கிரமிப்பை அடக்கித் தென்னகத்தின் அரசியல், மத சுதந்திரங்களைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் சங்கம சகோதரர்களால் விசயநகரப் பேரரசு தொடங்கப்பட்டது.

தென்னகப் பேரரசுகளில் இடைக்காலச் சோழப் பேரரசே மிக மேம்பட்டது. பண்டைக் காலத்துச் சோழப் பேரரசர் பலர் வாழ்ந்த போதும் சங்க காலத்துக்குப் பின் அப் பேரரசு மங்கிவிட்டதால் விசயாலயனுல் நிறுவப்பட்ட இடைக்காலச் சோழப் பேரரசே வர லாற்று வல்லுநரால் மிகவும் போற்றப்படுகிறது.

ஐரோப்பாவில் இடைக்காலத்தில் உம்பள முறை (Feudalism) நடைமுறையில் இருந்த காலத்தில் அதிக ஆதிக்கம் பெற்று விளங்கிய பிரபுக்களைப் போலவே, சோழர் ஆட்சியிலும் குறுநில மன்னர் பெரு நலம் பெற்றுத் திகழ்ந்தனர். அவருள் முத்தரையர் என்பார் தஞ்சை, வல்லம் என்ற பகுதிகளை நேமத்தைத் (நியமம்) தலைநகராகக்கொண்டு ஆண்டு வந்தவர் ஆவர். அவருக்கு வடக்கே பல்லவனும் தெற்கே பாண்டியனும் பெருமன்னராக விளங்கினர். இவ்விரு பெருமன்னர் இடையே போர் நடப்பதாயிருந்தால், முத்தரையர் சந்தர்ப்பம் நோக்கித் தக்கவர் ஒருவர் பக்கம் சேர்ந்து வாகை சூடி நலம் பெற்றனர்.

ஒன்பதாம் நூற்றுண்டில் தலைமை நிலைக்காகப் பல்லவருக்கும் பாண்டியருக்கும் இடையே கடும் போர்கள் இடைவிடாமல் நிகழ்ந் தன. மூன்றும் நந்திவர்ம பல்லவன் (கி.பி. 835—860) ஸ்ரீமாறவல்லப பாண்டியனைத் (கி.பி. 815—862) தெள்ளாற்றங்கரையில் தோற்கடித் துத் ‘தெள்ளாறெறிந்த நந்திவர்மன்’ என்று புகழப்படுகிறுன். பின் நந்திவர்மன் பாண்டியர்களால் கும்பகோணத்தில் தோற்கடிக்கப் பட்டான். இதனை மனங்கொண்டு மூன்றும் நந்திவர்மன் மகன் அபராசிதன் ஸ்ரீமாற ஸ்ரீவல்லபனைக் கும்பகோணத்திற்குத் தெற்கில் ஓடும் அரிசிலாற்றங் கரையில் அடியோடு தோற்கடித்தான். தமக்கு ஏற்பட்ட இப் பழியைத் தொலைக்க ஸ்ரீமாறன் மகனுன இரண்டாம் வரகுணன் பெரிதும் முயன்றும் பயன் ஏற்படவில்லை. இரண்டாம் வரகுணன் (கி.பி. 862-880) கும்பகோணத்துக்கு வடகிழக்கிலுள்ள

திருப்புறம்பியம் (திருப்புறம்பயம்) என்ற இடத்தில் நிருபதுங்கவர்மன் மகன் அபராசித பல்லவனை எதிர்த்தான். இப் போரில் அபராசித பல்லவனுக்கு அவன் சிற்றரசனான முதல் - பிருதிவீபதியும், விசயாலயச் சோழன் மகன் முதல்-ஆதித்தனும் உதவினர். பாண்டியர் இப்போரில் அடைந்த படுதோல்விக்குப் பின் சில நூற்றாண்டுகள் தலை நிமிரவில்லை. அடிக்கடி பல போர்களில் ஈடுபட்டதால் அபராசித பல்லவனும் வலியற்று மங்கிவிட்டான் பல்லவனுக்குப் பக்க பலமாக இருந்த பிருதிவீபதி இறந்த பின் பல்லவர் வலி அடியோடு குறையவே, விசயாலயன் தலைமையில் எழுந்த சோழப் பேரரசு தலை தூக்கியது. விசயாலயன் முதன் முதலாக நியமத்து முத்தரையர்களின் ஆற்றலைச் சிதைத்துத் தஞ்சையைக் கைப்பற்றிக்கொண்டான். பின் வல்லமும் அவன் வசப்பட்டது. இவ்வடிப்படையில் தொடங்கிய சோழப் பேரரசே பின் வடதிசை கங்கையும் தென்திசை இலங்கையும் குட திசை மகோதையும் குணதிசை கடாரமும் தன் எல்லைகளாகக் கூறத் தக்க அளவு வளம்பெற வளர்ந்ததாகும்.

## பாண்டிய, சோழ, பல்லவ கிளை வழிகள்



# 7. பரகேசரி விசயாலயன்

## முகவுரை

ஒன்பதாம் நூற்றூண்டில் சோழ ஏகாதிபத்தியம் பரகேசரிவர்மன் விசயாலயனுடைய தலைமையில் தோன்றி வளர்ச்சியுற்றது. தொடக்கத்தில் உறையூரோ கும்பகோணத்தை அடுத்த பழையாறையோ விசயாலயனுடைய தொடக்கத் தலைநகராக இருந்திருக்கக்கூடும். விசயாலயன் முதன் முதல் தஞ்சையையும் வல்லத்தையும் கைப்பற்றினான். விசயாலயன் காலத்தில், முத்தரைய மன்னர்களுள் இளங்கோ முத்தரையன் என்பவனே தனி ஆட்சி செய்தானென அறிகிறோம். இம் மன்னனுடைய 13ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் கோயிலடியிலும் 13, 17ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் திருக்கோடிக்காவிலும் 18ஆம் ஆண்டுக் கல்வெட்டு நியமத்திலும் காணப்படுகின்றன. முத்தரையர் வம்சத்துக் கடைசி மன்னனான இவ் விளங்கோ முத்தரையனை வென்று விசயாலயன் சோழ வம்சத்து ஆட்சியை நிறுவினான் என்று கருதுகிறோம்.

திருச்சி மாவட்டத்துத் திருநெடுங்களத்திலுள்ள திரிபுவன சக்கரவர்த்தி கோநேரின்மை கொண்டானுடைய கல்வெட்டொன்று முன்னுள் பரகேசரி விசயாலயன் நன்கொடையாக வழங்கிய நில தானத்தை ஊர்ச்சிதம் செய்ததைக் குறிப்பிடுகிறது. திருச்சி மாவட்டத்துத் திருவெள்ளறை திருமாணிக்கப் பெருமானடிகளுக்கு விசயாலயனுடைய மூன்றும் ஆண்டில் ஒரு நிவந்தம் விடப்பட்டதாகக் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. தென் ஆர்க்காட்டு மாவட்டத்தில் வீர சோழபுரம் என்ற ஊரில் நிரை மீட்சியில் பொருதுபட்ட வீரனின் நினைவுக் குறியாக நடப்பட்ட வீரக்கல் ஒன்று தஞ்சை கொண்ட கோபரகேசரியான விசயாலயனுடைய மூன்றும் ஆண்டில் நாட்டப்பட்டதாக அறிகிறோம். வட ஆர்க்காட்டு மாவட்டத்துக் கீழ்ப் புத்தூரில் காணப்படும் விக்கிரம சோழனின் ஐந்தாம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் விசயாலயனுடைய 4ஆம் ஆண்டில் வழங்கப்பட்ட



1. நிசும்பசூதனி, தஞ்சாவூர்



2. சாமுண்டா, நார்த்தாமலை
(தற்போது புதுக்கோட்டை
மியூஸியத்தில் இருக்கின்றது)



3. வைஷ்ணவி, நார்த்தாமலை
(தற்போது
புதுக்கோட்டை மியூஸியத்தில்
இருக்கின்றது)



4. விசயாலய
சோழீசுவரம்,
நார்த்தாமலை

கொடை குறிப்பிடப்பட்டுள்ளது. திருக்கோவலூருக்கு அருகில் உள்ள கீழூரில் விசயாலயனுடைய ஐந்தாம் ஆண்டில் வாணகோவரையர் தேவியார் நங்கை குல மாணிக்கத்தார் 15 கழஞ்சு பொன் ஒரு விளக்கு எரிப்பதற்காகத் தானம் செய்த நன்கொடை குறிப்பிடப் பட்டுள்ளது. உத்தரமேரூரிலுள்ள வைகுந்தப் பெருமாள் கோயிலில் விசயாலயனுடைய 14, 15, 16ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் உள் ளன. காஞ்சியிலுள்ள கைலாசநாதர் கோயிலில் விசயாலயனுடைய நான்காம் ஆண்டுக் கல்வெட்டு காணப்படுகிறது. மேலும் உத்தம சோழன் காலத்திய சென்னைக் கண்காட்சிச்சாலைச் செப்பேடுகள் குறிப்பிடும் மூன்று கொடைகளில் முதல் கொடை விசயாலய னுடைய 22ஆம் ஆண்டைச் சேர்ந்தது.

எனவே, வடக்கே காஞ்சிபுரம் முதல் தெற்கே விசயாலய சோளீசுவரம் எடுப்பிக்கப்பட்ட நார்த்தாமலை வரையில் சோழப் பேரரசு விரிவடைந்திருக்கவேண்டும் என்பது சான்றுகளால் அறியப்பட்ட செய்தியாகும்.

நீலகண்ட சாஸ்திரியார் விசயாலயன் காலத்துச் சோழப் பேரரசின் வடவெல்லை வெள்ளாறு என்று குறிப்பிடுகிறார். ஆயினும், காஞ்சியையே வட வெல்லையாகக் கொள்வது பொருத்தமாகும்.

விசயாலயன் கி.பி. 850-ல் அரியணையேறினன் என்று குறிப்பிடுவதும் ஏறத்தாழக் கொள்ளப்பட்டதேயாம். அஃது அறுதியிட்டு உறுதியாக வரையறுக்கப்படவில்லை. பிற்பட்ட பல்லவர்களுக்கும் முற்காலச் சோழர்களுக்கும் இடையே நிகழ்ந்த போர்கள் பெரும் பான்மையும் தொண்டை மண்டலத்திலேயே நிகழ்ந்தனவாக அறிகிறோம்.

# 8. விசயாலயன் காலத்துக் கோயில்கள்

முத்தரையர்களை வென்ற பிறகு விசயாலயன் தஞ்சையில் தன் குல தெய்வமான நிசும்பசூதனிக்காகக் கோயில் ஒன்றை எடுப்பித்தான். அவன் கட்டிய கோயில் அது ஒன்றேயாகும். ஏனைய கோயில்கள் கல்வெட்டுச் சான்றுகளாலும் கலைப் பணியாலும் விசயாலயன் காலத்தனவாக உணரப்பட்டுள்ளன.

**1. தஞ்சாவூர் - உக்கிர மாகாளிக் கோயில் :**

இதுவே விசயாலயனால் கட்டப்பட்ட ஒரே கோயிலாகும். இராசேந்திர சோழனுடைய திருவாலங்காட்டுச் செப்பேடுகள்— 'தேவர்களும் பேய்க்கணங்களும் வணங்கும் திருவடிகளை உடைய நிசும்பசூதனியின் திருவருளால் நான்கு கடல்களாலும் சூழப்பட்ட இந்த நில உலக ஆட்சியாகிய பாரத்தை ஒரு பூமாலையைப்போலத் தரித்த விசயாலயன் அத் தெய்வத்தின் படிமத்தைப் பிரதிட்டை செய்தான்' என்று குறிப்பிடுகிறது. இச் செய்தியை வீரராசேந்திரனுடைய கன்னியாகுமரிக் கல்வெட்டு வலியுறுத்துகிறது.

இக் கோயில் தஞ்சையின் பழைய சோழர் காலத்துக் கோட்டையின் கிழை வாசலில் நிறுவப்பட்டிருக்கவேண்டும். தற்போது தஞ்சாவூர் குயத் தெருவில் உக்கிர மாகாளி என்ற பெயருடன் இரு துண்டாக உடைந்துள்ள சிலையொன்று காணப்படுகிறது. ஒன்பதாம் நூற்றாண்டின் கலைப் பாணியில் அமைந்த இச் சிலை ஒரு பீடத்தில் அமர்ந்துள்ளது. வலக் காலை மடக்கி ஆசனத்தின்மீது அமர்ந்து இடக் காலைத் தொங்கவிட்டுக் கொண்ட நிலையிலுள்ள இச்சிலை சடாபாரம், பாம்பினாலாகிய குசபந்தம் இவற்றுடன் மேல் பாகத்து வலக்கையில் சூலம் ஏந்தி அரக்கனைக் குத்தித்தள்ளும் நிலையில் அமைந்துள்ளது. இரண்டு கைகளில் கத்தியும் கேடயமும் அமைந்துள்ளன. அரக்கனுடைய சிலை கீழே அமைந்துள்ளது. ஆசனத்தோடு சிலையின் உயரம் 5 அடி 8 அங்குலம் உள்ளது.

சுருங்கக்கூறின் இது விசயாலயன் காலத்துச் சிறந்த சிற்பங்களுள் ஒன்று என்று கூறலாம்.

2. திருவீழிமிழலை தான்தோன்றி மகாதேவர் கோயில் :

தஞ்சை மாவட்டத்துத் திருவீழிமிழலை வீழிநாத சுவாமி கோயில் அக் காலத்தில் தான்தோன்றி மகாதேவர் கோயில் என்று வழங்கப்பட்டது. இவ் வூர் மூவர் தேவாரம் பெற்றது. ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் இவ் வூரில் இறைவன் அருளால் நாள்தோறும் படிக்காசு பெற்று, பஞ்சம் ஏற்பட்ட காலத்தில் அடியார்களை உண்பித்த செய்தி பெரிய புராணத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

இக் கோயிலின் பழைய கல்வெட்டுகள் கருவறையின் சுவர்களில் காணப்படாமல் சுந்தரகுசாம்பாள் என்ற அம்பிகைக்குரிய பிற்காலத்ததாகிய கோயில் தூண்களில் காணப்பட்டுள்ளன. பழைய கர்ப்பக்கிருகம் புதுப்பிக்கப்பட்டபோது அதன் தூண்கள் முதலியன அம்பிகையின் கோயில் கட்டப் பயன்படுத்தப்பட்டனவாதல் வேண்டும். பரகேசரிவர்மனுடைய 3, 6, 15ஆம் ஆண்டுகளைச் சேர்ந்த மூன்று கல்வெட்டுகள் அத் தூண்களில் காணப்படுகின்றன. அவை விசயாலயன் காலத்தனவே. மேலும், முதல் ஆதித்தன், முதற் பராந்தகன் ஆகியவருடைய கல்வெட்டுகளும் அங்கு உள்ளன. முதற் பராந்தகன் கல்வெட்டொன்று திருவகத்தீசுவரப் பெருமானடிகளுக்கு வழங்கப்பட்ட விளக்குத் தானம்பற்றிக் குறிப்பிடுகிறது. அவ் வகத்தீசுவரக் கோயில்பற்றிய சுவடும் தற்போது தென்பட்டிலது. திருவீழிமிழலைக் கோயில் விசயாலயன் காலத்திலேயே எடுப்பிக்கப் பட்டிருக்க வேண்டும் என்ற செய்தி பரகேசரிவர்மன் பெயரால் உள்ள கல்வெட்டுகளால் உறுதி செய்யப்பட்டுள்ளது.

இக் கோயில் புதுப்பிக்கப்பட்டுப் பல மாறுதல்களை அடைந்து விட்டதால் விசயாலயன் காலத்துக் கலைப் பாணிக்கு இதனை எடுத்துக் காட்டாகக் கொள்ளமுடியாது.

3. நார்த்தாமலை விசயாலய சோளீசுவரம் :

முற்பட்ட சோழர்காலக் கோயில்களில் பல்லாற்றானும் தலை சிறந்து மிளிர்வது நார்த்தாமலையிலுள்ள விசயாலய சோளீசுவரமாகும்.

நார்த்தாமலை என்பது நகரத்தார்மலை என்ற சொல்லின் திரிபு எனலாம். புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள இச் சிற்றூர் திருச்சியிலிருந்து மானமதுரை செல்லும் இருப்புப்பாதையில் இப் பெயர் கொண்ட புகைவண்டி நிலையத்திலிருந்து 2½ மைல் (4 கி.மீ.) தொலைவில்

உள்ளது. இவ்வூரைச் சுற்றி எட்டுக் குன்றுகள் உள்ளன. இக் குன்று களுள் ஒன்றுகிய மேலே மலையில் கிழக்கு-நோக்கி இரண்டு குடபோகக் கோயில்களும் அவைகளுக்கு எதிரே ஒரு கட்டுக்கோயிலும் உள்ளன. வடப்பக்கத்திலுள்ள குடபோகக் கோயில் சமணக் குடகு என்று வழங்கப்பட்டது. பிற்காலத்தில் வைணவக் கோயிலாக மாற்றப் பட்ட இக் கோயிலின் அர்த்தமண்டபத்தில் சிற்பத் திறன் வாய்ந்த 12 (பன்னிரண்டு) விஷ்ணு உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

இதற்குத் தெற்கிலுள்ள குடபோகக் கோயில் பழியிலி ஈசுவரம் என்ற சிவன் கோயிலாகும். இக் கோயிலின் முன்பாக இருந்த முக மண்டபத்தின் குமுதப்படையில் உள்ள கல்வெட்டு பல்லவ மன்ன னுன நிருபதுங்க விக்கிரமனுடைய ஏழாம் ஆண்டில் விடேல் விடுகு முத்தரையன் மகன் சாத்தன் பழியிலி இக் கோயிலைக் குடைவித்தான் என்றும், இக் கோயிலுக்கு முகமண்டபமும், இடபமும், இடபக் கொட்டிலும், பலிபீடமும் சாத்தன் பழியிலி மகளும், மீனவன் தமிழ தரையனுன மல்லன் அரையனுக்குப் புக்க பழியிலி சிறிய நங்கை செய்வித்தாள் எனவும் குறிப்பிடுகிறது.

இவ் விரு குகைகளின் அடிவாரத்தின் கிழக்கே கட்டுக்கோயில் ஒன்று உள்ளது. தற்போது கருவறையும் அர்த்தமண்டபமும் கூடிய ஒரு கற்றளியும், இதைச் சுற்றிச் சிதைந்துள்ள, ஒரு தளமாக அமைந்த பரிவார தேவதைகளின் சிறு கற்றளிகள் ஆறும் காணப்படு கின்றன. இத் தளிகளின் வடபாகத்தில் எதிராகவும் சமண குட போகத்துக்கு அடுத்தும்—கோமாறவர்மன் திரிபுவன சக்கரவர்த்திகள் சோணுடு வழங்கிய சுந்தர பாண்டிய தேவரின் 12ஆம் ஆண்டுக் கல்வெட்டு (கி.பி. 1228) ஒன்று காணப்படுகிறது. அக் கல்வெட்டு அவ்வூரிலுள்ள விசயாலய சோளீசுவரமுடைய நாயனுர்க்கு அவ்வூர் நகரத்தார் திருப்படிமாற்றுக்கும், திருவிழா நடப்பிக்கவும், திரு நாளில் ஆளுடையாரை எழுந்தருளுவிக்கவும், திருவீதிக் கூத்து நடத்தி வைக்கவும் செய்த நிவந்தத்தைக் குறிப்பிடுகிறது. இக கல்வெட்டு பதின்மூன்றும் நூற்றுண்டைச் சேர்ந்ததாயினும்—இக் கோயில் விசயாலயன் பெயரால் கட்டப்பட்டுப் பல நூண்றுண்டுகளாக அப் பெயராலேயே வழங்கப்பட்டுவந்த செய்தியை வலியுறுத்தும் அரிய சான்றுகும்.

நடுவில் சிறப்பான தளியும் சுற்றிலும் எட்டுப் பரிவாரத் தளி களில் இரண்டு உருமாற ஏனைய ஆறு தளிகளுடனும் சிதைந்த நிலே யில் காணப்பட்ட இக் கோயில் புதுக்கோட்டை அரசாங்கத்தாரால் சீரிய முறையில் புதுப்பிக்கப்பட்டுள்ளது.

மேற்கு நோக்கிய சந்நிதியை உடைய இக் கோயிலின் ஓங்கார வடிவமுடைய கருவறையில் உருண்டை வடிவமான லிங்கம் பிர

திட்டை செய்யப்பட்டுள்ளது. நான்கு மூலைகளிலும் நான்கு தூண்கள் நிறுவப்பெற்ற 29 அடி பக்கமுடைய சதுரமான மண்டபத்தின் உள்ளே இவ் வோங்கார வடிவமான கருவறை அமைக்கப்பட்டுள்ளது. இது நான்கு தளங்களை உடைய கோயிலாகும். கருவறைக்குமேல் இரண்டு தளங்கள் முகப்பில் சாலைகளாலும் கூடங்களாலும் அவைகளுக்கு நடுவில் நாஸிகை என்ற இடைவெளியாலும் அணி செய்யப்பட்டுள்ளன. நாஸிகையில் அழகிய சிலைகள் காணப்படுகின்றன. நான்காவது தளம் கருவறையின் அமைப்பைப்போலவே வட்டவடிவமானது. இதன் மேற்பாகமான கிரிவத்தின் நான்கு திசைகளிலும் தேவகோட்டங்களும் விமான தேவதைகளும் திகழ்கின்றன. இவைகளில் எஞ்சினவாகக் காணப்பட்ட உமாசகிதரும், வீணாதர தக்ஷிணா மூர்த்தியும் ஆகிய இரண்டு சிலைகளும் தற்போது புதுக்கோட்டைக் கண்காட்சிச்சாலையில் காணப்படுகின்றன. இக் கருவறையின் சிகரமும் வட்டவடிவமானது. தற்போது இங்குக் காணப்படும் ஸ்தூபி புதிதாக அமைக்கப்பட்டதாகும்.

இவ் வோங்கார வடிவமுடைய கருவறையின் உள் விட்டம் 2·6 மீட்டர் ஆகும். அதன் உயரம் 2·4 மீட்டர். சுற்றுச் சுவரின் கனம் 1·5 மீட்டர். கருவறையைச் சுற்றிவரச் சதுரமான மண்டபத்தில் குறுகலான பிராகாரம் அமைந்துள்ளது. கருவறையில் சுவர்கள் அரைத்தூண்களால் (pilasters) அலங்கரிக்கப்பட்டுள்ளன. 9, 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பல்லவ சோழ மன்னர்களின் கோயில்களில் காணப்படுவனவற்றைப்போலச் சுவர்களில் தேவகோட்டங்களோ சிலைகளோ காணப்படவில்லை.

கருவறைக்கு முன்னால் அர்த்தமண்டபம் காணப்படுகிறது. அதன் நடுவில் ஆறு தூண்கள் அதனைத் தாங்கி நிற்கின்றன. அதன் வெளிப்புறச் சுவர்கள் வனப்பு வாய்ந்த அரைத்தூண்களால் பொலிவு பெறுகின்றன. அர்த்த மண்டபத்தின் கூரை சமதளமானது. தூண்கள் அடியில் சதுரமாகவும் நடுவில் எட்டுப் பட்டைகள் திட்டப் பெற்றும் விளங்குகின்றன. அவற்றின் போதிகைகள் கீழ் நோக்கிச் சுருளாக வருவனவாக உள்ளன. நாற்புறங்களிலும் கொடுங்கைகள் காணப்படுகின்றன. கொடுங்கைகளுக்கு மேல் உள்ள கைப்பிடிச் சுவர்கள் பஞ்சரங்கள் என்ற சிறு கோயில்களால் அணி செய்யப்பட்டுள்ளன. ஓரங்களில் கூடங்களும் நடுவில் சாலைகளும் மிளிர்கின்றன. கருவறை, அர்த்தமண்டபம் ஆகியவற்றின் கூரைகள் இரண்டாம் தளத்தோடு ஒன்று கூடி உள்ளன. இரண்டாம் தளத்திற்குமேல் உள்ள மூன்றாம் தளம் அதே அமைப்போடு சற்றுச் சிறுத்துக் காணப்படுகிறது. அர்த்த மண்டபத்தின் முகப்பிலுள்ள ‘உத்தரக் கற்கவி’ (lintel) சிறந்த வேலைப்பாடுடையது.

சில கோயில்களில் துவாரபாலகர் சிலைகள் மூலத்தானத்தின் முகப்பிலேயே காணப்படும். ஆனால், இக் கோயிலில் அர்த்தமண்டபத்தின் முகப்பிலேயே துவாரபாலகர் காணப்படுகின்றனர். ஐந்தடி உயரமுடைய இவர்களின் ஒரு கையில் கதை உள்ளது. மற்றொரு கை வியப்புக் குறியைக் காட்டுகிறது. தலையில் சடாமகுடமும் கொம்பு போன்ற வளைவுகளும் காணப்படுகின்றன. பத்ர குண்டலம், கடி பந்தம், உதரபந்தம், முறுக்கேறின பூணூல், காப்பு என்பன இச் சிலைகளை அலங்கரிக்கின்றன. இவை விசயாலயன் காலத்துச் சிற்பங்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாம்.

பரிவார தேவதைகள் கோயில் எட்டில் தற்போது காணப்படும் ஆறு கோயில்களில் ஒவ்வொன்றும் சதுரமான கருவறை, நீண்ட சதுரமான முன் மண்டபம் என்பனவற்றோடு கூடிய ஒருதளக் கற்றளியாகும்.

ஒரு காலத்தில் மூலத்தானத்தையும் பரிவாரக் கோயில்களையும் சுற்றிச் சிறந்த மதிலொன்று அமைக்கப்பட்டிருந்ததன் சுவடு காணப்படுகிறது. வடப் பக்கத்திலுள்ள துவாரபாலகரின் அடியில் ஒரு கல் வெட்டுக் காணப்படுகிறது. அது செம்பூதியான இளங்கோவடியரையன் கட்டுவித்த கற்றளி மழையால் இடிந்துபோக, மல்லன் விடுமன் ஆன தென்னவன் தமிழ தரையன் அதனைப் புதுப்பித்த செய்தியைக் குறிப்பிடுகிறது.

திரு. கே. ஆர். வேங்கடராமன் என்பார் இக் கல்வெட்டில் கூறப்பட்டுள்ள இளங்கோவடி முத்தரையனும் செந்தலைக் கல்வெட்டில் கூறப்பட்ட இரண்டாம் தலைமுறைத் தலைவனான மாறன் பரமேசுவரனும் ஒருவனே என்பார். அக் கிளை வழி பின்வருமாறு :

பெரும்பிடுகு முத்தரையன் ஆன குவாவன்மாறன்
|
இளங்கோவடி முத்தரையன் ஆன மாறன் பரமேசுவரன்
|
பெரும்பிடுகு முத்தரையனான சுவரன் மாறன். (இவன் இரண்டாம் நந்திவர்மன் என்ற பல்லவ மன்னனின் (கி.பி. 731-96) படைத் தலைவன்.

எனவே, இத் தலைமுறையினர் விசயாலயனுக்கு 150 ஆண்டுகளுக்கு முற்பட்டவர் ஆதல் தேற்றம். அவர் மேலும், இளங்கோவடி முத்தரையனால் இக் கோயில் எடுக்கப்பட்டதாகவே இது இரண்டாம் நந்திவர்மன் காலத்தது எனவும், எட்டாம் நூற்றாண்டினதான இக் கோயில் இடிந்து போகவே எடுக்கப்பட்ட புதுக்கோயிலே விசயாலயன்

காலத்தது என்றும் கூறுவர். நந்திவர்மன் காலத்துக் கோயிலுக்குக் காஞ்சி வைகுந்தப் பெருமாள்கோயிலே உதாரணம் கூறுவது வழக்கம். கட்டடம், சிற்பம் ஆகியவற்றின் அமைப்பில் விசயாலய சோளீசுவரத்துக்கும் வைகுந்தப் பெருமாள் கோயிலுக்கும் வேறுபாடு மிகவும் உள்ளது. எனவே இவ்விரண்டு கோயில்களும் ஒரு காலத்தன அல்ல என்று துணிந்து கூறலாம். நிருபதுங்கனின் ஏழாம் ஆண்டில் (கி.பி. 862) நார்த்தாமலை அவன் ஆட்சியில் இருந்தது. முதல் ஆதித்தன் கி.பி. 871-ல் முடி சூடினன். ஆதலின், இடைப்பட்ட காலத்தில் இப் பகுதி விசயாலயன் ஆட்சிக்குட்பட்டிருக்க வேண்டும். கி.பி. 862-க்கும் கி.பி. 870-க்கும் இடைப்பட்ட காலத்தில் கட்டப்பட்ட இந் நாலடுக்குக் கற்றளி கட்டிய அண்மையில் மழையால் பழுதடைய, உடனடியாகவே புதுப்பிக்கப்பட்டிருக்கவேண்டும். கட்டடம் கட்டப்பட்ட காலத்துக்கும் புதுப்பிக்கப்பட்ட காலத்துக்கும் இடையே 150 ஆண்டுகள் கழிந்திருக்கவேண்டும் என்ற கூற்றுப் பொருந்துவதாக இல்லை.

எனவே, விசயாலய சோளீசுவரம் நான்கு தளக் கருவறை கொண்டு பண்டைச் சோழர்தம் கோயில்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கி அக் காலச் சோழருடைய கலையுணர்விற்கும் கடவுட் பற்றுக்கும் முதற் சான்முக நிற்கிறது என்று கூறலாம்.

4. காளியாப்பட்டி கோயில் :

காளியாப்பட்டி என்ற சிற்றூர் புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள குளத்தூர் வட்டத்தைச் சார்ந்ததாகும். இது கிரனூரிலிருந்து 16 கி. மீட்டர் தொலைவிலும் புதுக்கோட்டையிலிருந்து 50 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

விசயாலயன் காலத்துக் கற்றளிகளுள் ஒன்முன இவ் வொருதளக் கோயில் கிழக்கு நோக்கிய சந்நிதியை உடையது. தற்போது இக் கோயிலின் கருவறையும் கிரீவமும் சிகரமுமே எஞ்சி உள்ளன. ஸ்தூபியும் அர்த்தமண்டபமும் சிதைந்துபோய்விட்டன.

கருவறை எட்டடி சதுரமாகும். அதன் சுவர்கள் $1\frac{1}{2}$ அடி கனம் உடையவை. முப்புறச் சுவர்களும் ஒவ்வொருபுறத்துக்கும் நன்னான்கு அரைத் தூண்களால் அணி செய்யப்பட்டுள்ளன. நார்த்தாமலை விசயாலய சோளீசுவரத்தைப் போலவும் திருப்பூர்ச் சிவன்கோயிலைப் போலவும் போதிகை முதலிய மேற்பாகங்கள் அமைந்துள்ளன. கருவறையில் வெளிச் சுவர்களில் தேவ கோட்டங்கள் இல்லை. கொடுங்கைகள் கூடுகளால் அணி செய்யப்பட்டுள்ளன. கொடுங்கையின் மூலைகளில் அழகிய கொடிக்கருக்குகளைக் காணலாம். கொடுங்கைக்குமேல்

யாளி வரிமானம் அணி செய்கிறது அதன்மேல், கூடுகளால் அழகுறுத் தப்பட்ட நான்கு தேவ கோட்டங்களை உடைய சதுரமான கிரீவம் காணப்படுகிறது. இவைகளும் சிகரத்தின் நான்கு மூலைகளும் மிக அழகான கொடிக்கருக்குகளை உடையன.

கொடும்பாளூர் மூவர் கோயிலைப் போலவே, இங்குள்ள சதுர மான சிகரம் அழகான கும்ப வளைவுடன் காட்சியளிக்கிறது. இச் சிகரத்தின் அடித்தளம் இரத்தின பீடமாகவும் அதன்மேல் பத்மபீட மாகவும் அமைந்துள்ளது. தற்போது காணப்பெறாத ஸ்தூபியும் மூவர் கோயில் ஸ்தூபியும் ஒத்து அமைந்திருக்கக்கூடும் எனக் கருதுகிறோம்.

கருவறைக்குமுன் 6 அடி சதுரமாக அமைந்திருந்த அர்த்த மண்ட பத்தின் அடிச்சுவடே தற்போது காணப்படுகிறது. நந்தி மண்டப அடித்தளமும், பரிவாரத் தேவதைகளின் கோயில்கள் சிலவற்றின் அடித்தளமுமே தற்போது காணப்படுகின்றன. பழைய முன் வாயில், மதில்கள் ஆகியவற்றின் சுவடுகளையும் காணலாம். கிரீவத்தின் நாற் புறங்களையும் அலங்கரித்த நந்திகளின் சிலைகளும் விமானத்திலிருந்த தட்சிணாமூர்த்தி சிலையும் தற்போது கீழே தரையில் கிடக்கின்றன.

கருவறையின் தென் சுவரில் காணப்படும் சிதைவுற்ற கல்வெட் டொன்று பரகேசரிவர்மனின் 18ஆம் ஆண்டினதாக அறியப்படு கிறது. விசயாலயனே பெரும்பாலும் வேறு அடையில்லாமல் பரகேசரி என்று வழங்கப்படுவான். சிற்சில இடங்களில் தஞ்சை கொண்ட பரகேசரி என்று குறிப்பிடப்படுவான். அவன் பெயரனான பராந்தகனே 'மதுரை கொண்ட பரகேசரி' என்றே தன் ஆட்சியின் மூன்றாம் ஆண்டு தொட்டு வழங்கப்பட்டமை உணரப்படுகிறது. இதனால் அடையின் றிக் காணப்படும் இப் பரகேசரிக் கல்வெட்டின் எழுத்தமைப்பை நோக்க இது விசயாலயன் காலத்துக் கல்வெட்டு என்பது ஐயம் திரிபு இன்றி உணரப்படுவதால், இக் கோயில் விசயாலயன் காலத்தது என்று முடிவு செய்யப்படுகிறது.

பண்டைச் சோழர் கோயிலில் மிகச் சிறியதும் மேம்பட்டதும் மிக அழகிய கொடிக்கருக்கை உடையதும் ஆகிய ஒருதளக் கற்றளி இக் காளியாப்பட்டி கோயில் என்பது ஒருதலை.

5. பனங்குடி அகத்தீசுவரம் (பரமேசுவரர் கோயில்):

விசயாலயன் காலத்தைச் சேர்ந்த இவ் வழகிய கோயில் புதுக் கோட்டைப் பகுதியில் சித்தன்னவாசலுக்குத் தென் பாகத்தில் ஒரு குளக்கரையில் உள்ளது. இது கருவறை, அர்த்த மண்டபம், கிரீவம், சிகரம், ஸ்தூபி என்ற எல்லா உறுப்புகளையும் இன்றளவும் பெற்

றிலங்கும் ஒருதளக் கற்றளியாகும். இவற்றிற்கு மேல் முன்னர் இருந்து சிதலமான நந்தி மண்டபம், பரிவாரத் தேவதைகளின் கோயில்களில் ஒன்றன் அடித்தளம் ஆகியவற்றின் சுவடு உற்று நோக்குவார்க்கு இன்றும் காட்சியளிக்கின்றது.

கருவறை சதுர வடிவமானது. வெளிப்புறம் 9 அடி, உட்புறம் 5 அடி. வெளிப்புறச் சுவர்கள் சித்திர வேலைப்பாடு அமைந்த அரைத் தூண்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. வெளிச் சுவர்களிலுள்ள தேவ கோட்டங்களில் இப்போது சிலைகள் காணப்படவில்லை. அர்த்த மண்டபம் கருவறையோடு நன்கு பொருந்தி இணைந்து காணப்படு கிறது. கொடுங்கை கூடுகளாலும் ஓரங்களில் காணப்படும் கொடிக் கருக்குகளாலும் வனப்புறுகிறது. இதன்கீழ் பூதகண வரிசையையும் மேல் யாளி வரிமானத்தையும் காணலாம். யாளி வரிசையில் மூலை களில் மகரத் தலைகள் காணப்படுகின்றன. கிரீவத்தின் நாற்புறங்களி லும் சிங்கத் தலைகள் அமைந்த கூடுகளால் அலங்கரிக்கப்பட்ட தேவ கோட்டங்களில் $1\frac{1}{2}$ அடி உயரமுடைய இந்திரன், தட்சிணாமூர்த்தி, விஷ்ணு, பிரமன் என்ற தெய்வங்களின் உருவங்களைக் காணலாம்.

சிகரம் சதுரமாகவும் நடுவில் பிதுக்கமுடையதாகவும் காணப் படுகிறது. அதன் உச்சியின் அடியில் இரத்தினபீடமும் மேலே பத்ம பீடமும் காணப்படுகின்றன. சிகரத்தைப் போலவே கருங்கல் ஸ்தூபி யும் சதுரமானதே.

முன் காலத்திலிருந்த பரிவார தேவதைகளின் கோயில்களைச் சேர்ந்த ஜேஷ்டை, விநாயகர் ஆகிய உருவச் சிலைகள் தரைமீது காணப்படுகின்றன. நந்திச் சிலையும் உளது.

கருவறையில் வட சுவரில் காணப்படும் பரகேசரிவர்மனின் 14ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டே இக்கோயில் விசயாலயன் காலத்தது என்று அறுதியிட உதவுவதாகும் அக் கல்வெட்டு இக் கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவன் திருப்பெயர் ‘பனங்குடி பரமேசுவரர்’ என்று குறிக்கிறது. விசயாலயன் காலச் சிறு கற்றளி களில் இதுவும் ஒன்று.

6. விரலூர் பூமீசுவரர் கோயில் :

திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த விரலூர் கொடும்பாளூரில் இருந்து 4·8 கி.மீ. தொலைவிலும், விராலிமலையிலிருந்து 2·4 கி.மீ. தொலைவிலும், திருச்சியிலிருந்து 28 கல் தொலைவிலும் உள்ளது. முற்காலத்தில் விரலூர் விராலியூரின் ஒரு பகுதியாக இருந்திருக்க வேண்டும். தற்போது காணப்படும் விராலிமலை என்ற ஊர் பண்டு விராலியூர் மலை என்று வழங்கப்பட்டது.

விராலிமலையில் உள்ள முருகன் கோயில் தற்போது பெரும் புகழ் கொண்டு மிளிர்கிறது. ஆனால், விரலூரிலுள்ள பூமீசுவரர் சிவன் கோயில் பழம் பெருமையும் சிறப்பும் வாய்ந்தது. அது பழைய சோழர் காலத்துக் கோயில்களில் ஒன்றாகும்.

இவ் வொருதளக் கற்றளி கிழக்கு நோக்கிய சந்நிதியை உடையது. சோழர் காலத்துப் பழங் கோயிற் பகுதி கருவறையும் அர்த்தமண்டபமும் உடையதாயிருந்தது. கருவறை சதுர வடிவமானது. அதன் சுவர்களில் நுணுக்கமான வேலைப்பாடு எதுவும் இல்லை. கருவறையின் சுவர்கள் பட்டைகளை உடைய அரைத் தூண்களாலும் அதிக வேலைப்பாடு இல்லாத போதிகைகளாலும் அணி செய்யப்பட்டுள்ளன. கொடுங்கை அழுத்தமாகவும் ஒரே வளைவுடையதாகவும் உள்ளது. அதனைக் கூடுகள் அணி செய்கின்றன. கொடுங்கைக்குமேல் யாளி வரிமானம் உள்ளது. கருவறைச் சுவரின் வெளிப்புறத்தில் மூன்று தேவ கோட்டங்கள் உள்ளன. வடபுறத்தேவ கோட்டத்தில் பிரமனுடைய சிலைக்குப் பதிலாகப் பிட்சாடனர் சிலை காணப்படுகிறது. மேற்புறத் தேவ கோட்டத்தில் நின்ற நிலையிலுள்ள விஷ்ணு சிலையைக் காணலாம். தென்புறத் தேவ கோட்டத்தில் காணப்படவேண்டிய தட்சிணாமூர்த்தி சிலை சுற்றுச் சுவருக்கு வெளியே தரையில் கிடக்கிறது. அங்கு ஜேஷ்டாதேவி, விநாயகர் என்ற சிலைகளும் காணப்படுகின்றன. அவை பரிவாரத் தேவதைகளின் கோயில்களைச் சேர்ந்தன ஆதல் வேண்டும். அர்த்தமண்டபச் சுவர்களில் தேவகோட்டங்கள் ஒன்றும் இல்லை.

கிரீவம் வட்டமாக இருக்கிறது. சிகரம் மணியைப்போல வடிவுடையதாய் இருக்கிறது. ஸ்தூபி உருண்டையாயிருக்கிறது. கிரீவத்திலுள்ள தேவ கோட்டங்கள் நடுவில் சிங்கத்தலை கொண்ட கூடுகளால் அணி செய்யப்பட்டவை. அக்கோட்டங்களில் தற்போது சிலைகள் இல்லை. கருவறையைச் சுற்றிப் பரிவார தேவதைகளின் கோயில்கள் இருந்த அடிச்சுவடு இன்றும் காணப்படுகிறது.

இக்கோயிற் சுவர்களில் கல்வெட்டு ஒன்றும் இல்லை. ஆனால், கலைப்பாணி முதலியவற்றை நோக்கின் இது விசயாலயன் காலத்ததே என்பது தேற்றம். இக் கோயில் அமைப்பின் எளிமை, சிற்பங்களின் திறம், மணி வடிவமான சிகரம், உருண்டையான ஸ்தூபி என்பன இதற்குத் தனிச் சிறப்பை வழங்கியுள்ளன.

**7. விசலூர்—மார்க்கசகாயேசுவரர் கோயில் :**

விசலூர் புதுக்கோட்டையிலிருந்து 35·4 கி.மீ. தொலைவிலும் கிரனூர்—கிள்ளுக்கோட்டை வழியில் கிரனூரிலிருந்து 13 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

இக் கோயில் தொடக்கத்தில் காளியாப்பட்டி, பனங்குடி என்ற ஊர்க் கோயில்களைப் போல ஒரு தளக் கற்றளியாகவே அமைந்திருந்தது. அதிகச் சிற்பங்கள் இல்லாவிட்டாலும் இதன் கம்பீரமான அமைப்பு பழுதடையாமல் பாதுகாக்கப்பட்டுள்ளது.

கருவறைச் சுவர்கள் சிற்ப நுணுக்கங்கள் இன்றிச் சாதாரணமாக அமைந்துள்ளன. கருவறைச் சுவர்களில் தேவ கோட்டங்கள் இல்லை. சுவர்கள் அழகிய அரைத் தூண்களால் அணி செய்யப்பட்டுள்ளன. கொடுங்கை ஒரே வளைவுடையதாய்க் கூடுகளால் அணி செய்யப்பட்டுக் காணப்படுகிறது. கொடுங்கையின் கீழ்ப் பூத வரிசை இல்லை. ஆனல், மேலே யாளி வரிமானம் காணப்படுகிறது.

கருவறை சதுர வடிவமானது. அதன் பக்கங்கள் வெளிப்புறம் 8½ அடியும், உட்புறம் 4 அடி 8 அங்குலமுமாக உள்ளன.

சதுரமான கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் நான்கு இடபங்கள் உள்ளன. கிரீவத்தின் தேவ கோட்டங்கள் நடுவில் சிங்கத் தலை கொண்ட கூடுகளால் அலங்கரிக்கப்பட்டு முறையே தட்சிணாமூர்த்தி, விஷ்ணு, பிரமன் என்ற சிலைகளைக் கொண்டு விளங்குகின்றன.

அர்த்தமண்டபம் கருவறையை ஒட்டி 5½ அடி முன்னேக்கி அமைந்துள்ளது. சிகரம் சதுரமாகவும் நடுவில் பிதுக்கம் உடையதாகவும் காணப்படுகிறது. சிகரத்தின் இரத்தின பீடம், பதும பீடம் ஆகியவற்றின்மேல் காணப்படும் ஸ்தூபி சதுர வடிவில் அமைந்துள்ளது. கட்டடக் கலைப்பாணியைக் கொண்டு இக் கோயிலை விசயாலயன் காலத்ததாகக் குறிப்பிடலாம். திருப்பூர்க் கோயிலைப் போலல்லாமல் இது நன்கு பாதுகாக்கப்பட்டிருக்கிறது. இக் கோயிலில் பண்டைக் கோயிலை ஒட்டிப் பிற்காலத்துச் சேர்க்கப்பட்ட ஏனைய கட்டடங்களையும் அவற்றின் சிற்பங்களையும் நன்கு நோக்கி உணரலாம்.

8. திருப்பூர்க் கோயில் :

புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள குளத்தூர் வட்டத்தைச் சேர்ந்த திருப்பூர் புதுக்கோட்டையிலிருந்து 32 கி.மீ. தொலைவிலும், கிரனூரிலிருந்து 8 கி.மீ. தொலைவிலுமுள்ளது.

இவ் வூரின் பழைய சிவன்கோயில் இவ்வூரின் வடமேற்கு மூலையில் ஊர்க்குளத்தின் கரையில் அமைந்துள்ளது. இவ்வொருதளக் கற்றளி கிழக்கு நோக்கிய சந்நிதியை உடையது. இதன் கருவறையும் அர்த்த மண்டபமும் நன்கு இணைக்கப்பட்டுள்ளன. சிகரத்தின் உச்சியும் ஸ்தூபியும் தற்போது காணப்பெறவில்லை.

கருவறை 7¾ அடி பக்கமுடைய சதுரமாகும். சுவர்கள் 1¾ அடி கனமுடையவை அர்த்தமண்டபம் 6 அடி—பக்கமுடைய சதுரமாகும். அர்த்தமண்டபத்தை யொட்டி மூடப்பட்ட மண்டபம் ஒன்று 3 அடி 2 அங். உயரம், 2 அடி 3 அங். அகலம் கொண்ட வாசற்படியோடு காணப்படுகிறது. கருவறையின் முப்புறங்களிலும் இரண்டு ஓரங்களில் இரண்டு தூண்களும் இடையே இரண்டு அரைத் தூண்களும் காணப்படுகின்றன. அவற்றின் மேல் தாங்கிகள் வெளி நோக்கிச் சாய்வாக நீண்டிருக்கின்றன. கருவறைச் சுவர்களில் தேவ கோட்டங்கள் இல்லை. கொடுங்கை ஒவ்வொரு பக்கத்திலும் இரண்டு கூடுகளுடன் காணப்படுகிறது. கொடுங்கைக்குமேல் யாளி வரிமானம் வனப்புற அமைந்திருக்கிறது.

கருவறையைப் போலவே கிரீவமும் சதுரமாக அமைந்திருக்கிறது. அதன் நாற்புறங்களிலும் சிங்கத் தலையால் அலங்கரிக்கப்பட்ட நான்கு தேவ கோட்டங்கள் உள. சிகரம் கொடிக்கருக்குகளால் அணி செய்யப்பட்டதாகத் தோன்றுகிறது. உருவிலும் அமைப்பிலும் இச் சிகரம் காளியாப்பட்டிக் கோயில் சிகரத்தைப் போலச் சதுரமாகவும் பிதுக்கமுடையதாகவும் அமைந்துள்ளது. வட கோட்டத்திலிருக்க வேண்டிய பிரமன் சிலையே தற்போது உரிய இடத்தில் காணப்படுகிறது. ஏனைய விஷ்ணு, தட்சிணாமூர்த்தி ஆகிய சிலைகளும், கிரீவத்தின் நாற்புறங்களையும் அணி செய்த நந்திகள் முதலியனவும் தற்போது தனியே தரையில் கிடக்கின்றன.

சுற்றுப்புறப் பரிவார தேவதைகளின் கோயில்கள்பற்றிய சுவடு கூடத் தென்பட்டிலது. பிற்கால மன்னரால் கட்டப்பட்ட அம்மன் கோயிலொன்று வடகிழக்குத் திசையில் காணப்படுகிறது.

இக் கோயில் சுவர்களிலிருந்து கல்வெட்டொன்றும் காணக் கிடைக்கவில்லை. காளியாப்பட்டி, பனங்குடிக் கற்றளிகளை இது உருவில் ஒத்திருப்பதுகொண்டே இதனை விசயாலயன் காலத்துக் கோயில்களில் ஒன்றாகக் கொள்ளலாம்.

9. ஏனாதிக் கோயில்:

திருச்சி மாவட்டத்துப் புதுக்கோட்டைப் பகுதியின் திருமெய்யம் வட்டத்தைச் சார்ந்த ஏனாதி என்ற சிற்றூரிலுள்ள சிவன் கோயில் கலைப்பாணியில் திருப்பூர்க் கோயிலை ஒத்திருக்கிறது.

இவ் வொருதளக் கற்றளி சற்று உயரக் குறைவாக அமைக்கப்பட்டுள்ளது. இதன் சுவர்களில் சிற்ப வேலைப்பாடு இல்லை. கருவறையின் சுவர்கள் ஓரங்களில் முழுத் தூண்களாலும், இடையே அரைத்

தூண்களாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளன. அவைகள் போதிகைக ளோடு கூடியுள்ளன. கொடுங்கை அழுத்தமாகவும், வளைவாகவும், கூடுகளால் அணி செய்யப்பட்டும் காணப்படுகிறது. கொடுங்கைக்கு மேல் யாளி வரிமானம் உள்ளது. கிரீவம் சதுரமானது. சிகரமும் சதுரமாகவும் நடுவில் பிதுக்கமாகவும் அமைந்துள்ளது. சிகரத்தின் ஓரங்களில் கொடிக்கருக்குகள் அணி செய்கின்றன. நடுவில் சிங்கத் தலையுடைய நான்கு பெரிய கூடுகள் பக்கத்திற்கு ஒன்றாகச் சிகரத்தை அழகு செய்கின்றன. ஸ்தூபியும் சதுரமாக அமைந்துள்ளது.

தொடக்கத்தில் இக் கோயில் கருவறை மட்டும் உடையதாக எடுப்பிக்கப்பட்டிருக்கவேண்டும். இரண்டு உருண்டைத் தூண்களை முகப்பில் கொண்டு கருவறைக் கொடுங்கையுடன் இணைக்கப்பட்ட திறந்த மண்டபம் பிற்காலத்தில் சேர்க்கப்பட்டிருக்கவேண்டும் என் பது அதன் இணைப்பிலிருந்தே புலனாகிறது.

வடிவிலும் கலைப் பாணியிலும் இது மாமல்லபுரத்தில் உள்ள 'கங்காவதரணம்' அல்லது 'அர்ச்சுனன் தவநிலை' சுட்டும் கற் பாறையை ஒட்டியுள்ள கோயிலின் சிற்றுருவமாகக் காட்சியளிப்ப தைக் காணலாம்.

இக் கோயில் கட்டட அமைப்பின் மிகப் பழைய முறையை எடுத் துக் காட்டுகிறது. இது விசயாலயன் காலத்தின் முற்பகுதியதாக இருக்கலாம்.

## 10. ஸ்ரீரங்கம் – திருவரங்கத்துப் பெருமானடிகள் கோயில் :

திருவரங்கம் திருச்சிக்கு 5 கி.மீ. தொலைவில் உள்ளது. இது வைணவர்களுக்குரிய பழம் பெருந் திருப்பதியாகும். சைவர்கள் சிதம்பரத்தை எங்ஙனம் போற்றுகின்றனரோ அங்ஙனமே வைண வர்கள் திருவரங்கத்தைப் போற்றுகின்றனர். சைவர்கள் சிதம்பரத் தைக் 'கோயில்' என்ற பெயரால் வழங்குவதுபோலவே வைணவர்கள் திருவரங்கத்தையே 'கோயில்' என்ற பெயரால் வழங்குகின்றனர்.

முற்பட்ட சோழர்கள் திருவரங்கத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். இக் கோயிலின் நான்காம் பிராகாரத்தில் அமைந் துள்ள நெல்லடிக்கும் களத்தின் (நெல் குத்தும் சாலை) முகப்பின் இரு புறங்களிலும் முற்பட்ட சோழர்களான விசயாலயன் (2ஆம்ஆண்டு), முதல் ஆதித்தன் (4, 26ஆம் ஆண்டுகள்), முதற் பராந்தகன் (18, 28ஆம் ஆண்டுகள்) ஆகியோரின் கல்வெட்டுகளைக் காணலாம். இத் தூண்கள் ஒருகால் பழைய கருவறையின் பகுதிகளாக இருக்கலாம். அங்ஙனம் கொள்ளின் இப் பழங்கோயில் இம் மன்னர்கள் ஆட்சியில் சிறந்த கற்றளியாக இருந்திருக்கக்கூடும் என்று தெளியலாம்.

இக் கல்வெட்டுகள் திருநந்தாவிளக்குக்கும், கற்றுவல்ல வைண வர்களுக்குத் திருவமுதிடவும் இறைவனுடைய திருமஞ்சனத்திற்கும் ஸ்ரீ வைஷ்ணவ இரட்சையாகத் திருவரங்கத்துப் பெருமானடிகளின் கோயில் காரியங்களை நிர்வகித்து வந்த திருவரங்கச் சபையாரிடம் நிபந்தங்களை ஒப்படைத்த செய்தியைக் குறிப்பிடுகிறது.

ஏழு பிராகாரங்களும், பிராகார தேவதைகளும் ஆகிய எல்லா வற்றாலும் நிரம்பிய இவ் வுத்தமோத்தமமான வகையைச் சேர்ந்த இக் கோயில் சரித்திர காலம் தொட்டு இன்றுவரை சிறப்புப் பெற்று வரும் ஒரு சில கோயில்களுள் ஒன்றாகும்.

11. திருவெள்ளறை :

1. பெருங்காவிதி சடையன் பள்ளி (ஜைனக் கோயில்)
2. கிருஷ்ணன் கோயில் (குடைபோகம்) (விஷ்ணு கோயில்)
3. திருவானைக்கா பெருமானடிகள் கோயில் (சிவன் கோயில்)

திருவெள்ளறை என்பது திருச்சிக்கு வடமேற்கே 20 கி.மீ. தொலைவில் உள்ளது. பல்லவ குலத்தினனும் பாரத்துவாச கோத்திர வழித் தோன்றலுமான தந்திவர்மனுடைய 5ஆம் ஆண்டுக் கல்வெட்டே இங்குள்ள கல்வெட்டுகளில் பழைமையானதாகும். இக் கல்வெட்டு 'நாலு மூலைக்கேணி' (Swastika well) என்று குறிப்பிடப்படும். கிணற் றின் கருங்கல் ஒன்றில் இப் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கேணி, பிற்காலத்து எடுப்பிக்கப்பட்டதாகிய புண்டரீகாட்சப் பெருமாள் கோயிலின் தெற்கில் அமைந்துள்ளது. விசயவல்லுழான் தம்பியான கம்பன் அரையனால் தந்திவர்ம பல்லவனுடைய பெயரால் எடுப்பிக்கப் பட்ட மாற்பிடுகு பெருங் கிணற்றைப்பற்றி இக் கல்வெட்டுக் குறிப் பிடுகிறது. இக் கிணற்று வேலை தந்திவர்மனுடைய 4ஆம் ஆண்டு தொடங்கப் பெற்று, 5ஆம் ஆண்டு முற்றுப்பெற்றது. விசயவல்லுழா வின் கொடை ஒன்று பிற்பட்டதான புண்டரீகாட்சப் பெருமாள் கோயிலின் தெற்கே காணப்படும் குடைபோக விஷ்ணு கோயிலின் மூன்றும் தூணில் பொறிக்கப்பட்டுள்ளது. இக் குடைபோகக் கோயில் தந்திவர்மன் காலத்ததாகக் கருதப்படுகிறது. இரண்டாம் நந்தி வர்ம வின் 61ஆம் ஆண்டில் வழங்கப்பட்ட பட்டத்தாள்மங்கல நிலக் கொடையை ஆலம்பாக்கத்து விசயவல்லுழான் நிறைவேற்றிய அதி காரியான ஆணத்தியாகக் குறிப்பிடப்பட்டுள்ளான். அவனே இரண் டாம் நந்திவர்மனுக்குப் பின் அரியணையேறிய தந்திவர்மன் ஆட்சியின் தொடக்கத்திலும் ஆணத்தி என்ற பெரும் பதவியிலிருந்து செயற்பட் டிருக்கலாம் எனக் கருதுகிறோம்.

கே. வி. சுப்பிரமணிய ஐயர் குறிப்பிடுவது பின்வருமாறு: 'இக் கிணற்றுக்கு அக் காலப் பெருமன்னன் பெயரோ குறுநில மன்னன்

பெயரோ வழங்கப்பட்டிருக்கவேண்டும். கிணற்றை எடுப்பித்தவன் பெயரால் அது வழங்கப்படவில்லை என்பது வெளிப்படை. தந்திவர்ம னுக்கு மாற்பிடுகு என்ற விருதுப் பெயர் இருந்ததாகவும் அறியக் கிடக்கவில்லை. அக் காலத்தில் செந்தலை என்று இன்று வழங்கப்படும் சந்திரலேகை சதுர்வேதி மங்கலத்தைத் தலைநகராகக் கொண்டு அத னைச் சூழ்ந்த பகுதிகளை ஆண்டுவந்த முத்தரையர்கள் பெரும்பிடுகு என்றும், விடேல் விடுகு என்றும் விருதுப் பெயர்கள் புனைந்தாராக அறிகிறோம். இம் முத்தரையர் மரபில் தந்திவர்மன் காலத்தில் ஆண்ட குறுநில மன்னன் மாற்பிடுகு என்ற பெயருடையவனாக இருந் திருக்கலாம்.'

இக் கூற்றுப் பொருந்துவதன்று. முத்தரையர்கள் கொண்ட பெரும்பிடுகு, விடேல்விடுகு என்ற புனைபெயர்களும் அவர்களுடைய பெருநில மன்னர்களான பல்லவர்களின் விருதுப் பெயர்களே. செந்தலை முத்தரையர்கள் திருவெள்ளறைப் பகுதியில் தொடர்பு கொண்டிருந்தாராகக் கருதக் கருவியொன்றும் கிடைத்திலது. ஆலம்பாக்கம் என்ற சிற்றூர் தந்திவர்மன் பெயரால் தந்திவர்ம மங்கலம் என வழங்கப்பட்டது என்பதும் அதனை அடுத்த பெருங் குளம் மாற்பிடுகு ஏரி என வழங்கப்பட்டது என்பதும் வரலாறு உணர்ந்தார் யாவரும் அறிந்த செய்திகளாம். இந்த நாலு மூலைக் கேணியும் அக் காலப் பெருநில மன்னனான தந்திவர்மனுடைய விருதுப் பெயரான மாற்பிடுகு என்பதனோடு தொடர்புறுத்தி மாற்பிடுகுப் பெருங்கிணறு எனப் பெயரிடப்பட்டிருக்கவேண்டும் என்பதே வரலாற்றோடு பொருந்திய செய்தியாகும்.

1. பெருங்காவிதி சடையன் பள்ளி :

தந்தி—நந்தி என்று குறிப்பிடப்படும் மூன்றாம் நந்திவர்ம னுடைய ஆறாவது ஆண்டில் பெருங்காவிதி சடையன் பள்ளி என்ற ஜைன கோயிலைப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. பல்லவர் சிற்றரசருள் ஒருவனான மாற்பிடுகு இளங்கோசாத்தன் என்பான் இக் கோயிலை எடுப்பித்திருக்கலாமெனத் தோன்றுகிறது.

2. கிருஷ்ணன்—உருக்குமணி கோயில் :

தற்போது காணப்படும் புண்டரீகாட்சப் பெருமாள் கோயில் பிற்காலத்து எடுப்பிக்கப்பட்டதாகும். பண்டைய விஷ்ணு கோயில் இங்குள்ள குகைக் கோயிலாக இருந்திருக்கவேண்டும் என்று தோன்று கிறது. இக் கோயில் பிற்காலப் பல்லவர்களின் கலைப் பாணியைக் கொண்டு மிளிர்கிறது. நடுவில் காணப்படும் நான்கு சதுரத் தூண் களிலும் கல்வெட்டுகள் உள்ளன. இரண்டாம் தூணில் பரகேசரிவர்

மனின் 8 ஆம் ஆண்டுக் கல்வெட்டும் 15ஆம் ஆண்டுக் கல்வெட்டும் மற்றொரு தூணில் இராசகேசரியின் கல்வெட்டொன்றும் காணப்படு கின்றன. பரகேசரிவர்மனின் எட்டாம் ஆண்டுக் கல்வெட்டு முதற் பராந்தகனின் முதன் மகனும் தக்கோலப் போரில் உயிர் நீத்து 'ஆனைமேல் துஞ்சிய தேவர்' என்று வழங்கப்படுகின்றவனுமான இராசாதித்தனுடைய தேவியாரான ஈராயிரன்தேவி அம்மனார் என்பார் திருவெள்ளறைப் பெருங்கோயிலில் எழுந்தருளியிருக்கும் கிருஷ்ணனுக்கும் உருக்குமணிக்கும் 20 கழஞ்சுப் பொன் வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. 540 of 1905 என்ற எண் கொண்ட கல்வெட்டில் திருவெள்ளறைக் கோயிலில் தந்திவர்மன் கிருஷ்ண னுடைய படிவத்தையும் அவன் தேவியான உருக்குமணியின் படிவத் தையும் பிரதிட்டிப்பித்த செய்தி குறிப்பிடப்படுவதால், இக் கோயில் தந்திவர்மன் காலத்தது எனலாம். தமிழகத்தில் வழங்கப்படும் பழைய கிருஷ்ணன் கோயில் இதுவே என்பது குறிப்பிடத்தக்கது. ஆனால், தற்போது கோயிலும் உருமாறிவிட்டது. விக்கிரகங்களும் அங்குக் காணப்படுமாறில்லை. எச். கே. சாஸ்திரியார் இப் பரகேசரி வர்மனை உத்தமசோழன் என்று குறிப்பிடுகிறார். பொதுவாகக் குறிப் பிடுவதுபோல அரிஞ்சயன் ஒன்பது ஆண்டுகள் ஆண்டிருந்தால் இக் கல்வெட்டு அரிஞ்சயனது என்று குறிப்பிடுவது இன்னும் பொருத்த மாக இருக்கும். விசயாலயன் பரம்பரையில் முதற் பராந்தகனுக்கும் முதல் இராசராசனுக்கும் இடைப்பட்ட மன்னர்களின் ஆட்சி ஆண்டு பற்றிய செய்தி சிக்கலாகவே உள்ளது. புதிய சான்றுகள் கிடைத் தால் அவை தெளிவாகக்கூடும்.

இரண்டாம் தூணில் காணப்படும் 'வீரபாண்டியனின் முடித்தலை கொண்ட பரகேசரி'யின் 5ஆம் ஆண்டுக் கல்வெட்டு இரண்டாம் ஆதித்தன் காலத்தது ஆகும்.

இராசராசனுடைய மூன்று கல்வெட்டுகள் கோயிலின் நாட் செலவிற்கு நிதியம் வழங்கப்பட்ட செய்தியையும் கோயிலுக்குப் பொன் வழங்கப்பட்ட செய்தியையும் குறிப்பிடுகின்றன.

பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் இத் திருவெள்ளறைப் பெருமான்மீது பாடிய பாடல்கள் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத் தில் காணப்படுகின்றன.

நாதமுனியை அடுத்த புண்டரீகாட்சர் என்ற சான்றோரின் சிடர் களால் எடுப்பிக்கப்பட்ட புண்டரீகாட்சப் பெருமாள் கோயில் தோன்றியபின் இப் பண்டைக் கோயில் சிறப்பிழந்து விட்டது போலும்.

3. திருவானைக்கா அல்லது ஜம்புநாதர் கோயில் :

திருவெள்ளறையில் திருவானைக்காவுடைய நாயனார் பெயரால் அமைக்கப்பட்ட குடபோகக் கோயிலொன்று காணப்படுகிறது. இச் சிவன் கோயில் திருவரங்கத்தின் அருகு காணப்படும் பெரும் புகழ் வாய்ந்த திருவானைக்காக் கோயிலின் வேறானது. இச் சிவன் கோயில் இவ் வூரை அடுத்துள்ள பெருவழிக்கும் விஷ்ணு கோயிலுக்கும் இடையே ஒரு தாழ்ந்த பாறைப் பகுதியில் காணப்படுகிறது.

இங்குப் பரகேசரிவர்மனுடைய கல்வெட்டுகள் இரண்டு காணப் படுகின்றன. பரகேசரியின் மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டு நிருபதுங்க மங்கலம் என்ற பிரமதேய கிராமத்தின் மீயாறு வாய்த்தலை என்ற வாய்க்காலுக்கு மேற்கிலுள்ள நிலம் திருவெள்ளறையிலுள்ள திருவானைக்காப் பெருமானடிகளுக்குத் திருநாமத்துக்காணியாக வழங்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டு விசயாலயன் காலத்தது ஆகலாம். பரகேசரியின் ஒன்பதாம் ஆண்டுக் கல்வெட்டொன்று பாண்டிய நாட்டைச் சேர்ந்த அரசனுடைய அதிகாரி ஒருவன் இக் கோயிலுக்குத் தானமாக வழங்கிய பொன்னைப் பற்றிக் குறிப்பிடுகிறது. பாண்டிய நாட்டின் பெயர்த் தொடர்பு கொண்ட இப் பரகேசரியின் கல்வெட்டு முதற் பராந்தகனுடைய தாகலாம்.

இராசகேசரியின் 2, 3, 25, 30ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் நான்கு உள்ளன. அவை திருவிளக்கிற்கும் வேதங்களில் வல்ல அந்தணர்களின் திருவமுதுக்கும் நிவந்தமாக நிலங்கள் விடப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகின்றன. அவற்றுள் நீண்ட ஆட்சியாண் டாகிய 25, 30 என்ற ஆண்டுகளைச் சார்ந்த கல்வெட்டுகள் முதல் ஆதித்தன் காலத்தவையாகலாம்.

இக் கோயிலில் முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகள் அவ னுடைய 2ஆம் ஆண்டு முதல் 40ஆம் ஆண்டுவரை பல ஆட்சியாண்டு களைச் சேர்ந்தனவாக உள்ளன. அவன் 37ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக் கோயிலைச் சார்ந்த வேதம் வல்லான் ஒருவடைய திருவமுதுக்கு நிவந்தம் விட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. அவன் கல்வெட்டில் திருவானைக்காப் பெருமானடிகள் ‘திருவெள்ளறைப் பட்டாரகர்’ என்றும் குறிப்பிடப்படுகிறார்.

இச் சிவன் கோயில் மேற்கு நோக்கிய சந்நிதியை உடையது. இதில் 3 அறைகள் குடையப்பட்டுள்ளன. முதல் அறை காலியாக இருக்கிறது. நடு அறையில் ஓர் இலிங்கம் இருக்கிறது. மூன்றாம்

அறையில் வலப்புறம் விநாயகரும் அவருக்குப் பின்புறம் விஷ்ணுவும் காணப்படுகின்றனர்.

'இம் மூன்றும் அறையில் ஒவ்வொரு புறமும் இரண்டு தேவ கோட்டங்கள் குடையப்பட்டுள்ளன. வலப்புறம் உள்ள தேவ கோட்டங்களில் முதல் கோட்டத்தில் விஷ்ணு சிலையும் அடுத்த கோட்டத்தில் விநாயகர் சிலையும் காணப்படுகின்றன. இடப்புறமுள்ள இரண்டு தேவ கோட்டங்களிலும் பிற்காலத்தனவாகிய இரண்டு சிலைகள் காணப்படுகின்றன. இக் குகையின் முகப்பில் உள்ள தாழ் வாரத்தைத் தாங்க நான்கு தூண்கள் குடையப்பட்டுள்ளன.'

கோயில் வாயிலுக்கு எதிரே மேற்குப்புறமுள்ள ஒரு தாழ்ந்த பாறையில் பழைய சோழர் காலக் கல்வெட்டுகள் பொறிக்கப் பட்டுள்ளன. தெற்கு நோக்கியுள்ள முக்கியமான கோயிலின் நடுவில் இலிங்கமும், இலிங்கத்தின் பின்புறம் வடபுறத் தேவகோட்டத்தில் நின்ற திருக்கோலத்திலுள்ள அழகிய பிரமன் சிலையும் காணப்படு கின்றன.

பண்டைச் சோழர்காலத்து சப்தமாதர் தொகுதியும் இங்குக் காணப்படுகிறது.

**12. சிதம்பரக் கோயில் :**

1. நடராசர் கோயில்.
2. அனந்தீசுவரக் கோயில்.

தென்னிந்திய இருப்புப் பாதையில் சென்னை தனுஷ்கோடி மார்க்கத்தில் உள்ள சிதம்பரம் இப்பொழுதும் தென்னிந்தியாவில் சிறந்த கோயிலாகத் திகழ்கிறது. திராவிடக் கலைப்பாணிக் கோயில் களில் இது மிக மேம்பட்டனவற்றுள் ஒன்றாகும். திராவிடக் கலா சாரமும் ஆரியக் காலாசாரமும் இங்கு ஒன்றிக் காணப்படுகின்றன. இஃது அத்வைத சித்தாந்தம், சைவ சித்தாந்தம் என்பனவற்றின் இருப்பிடமாகவும், தத்துவம், சமயம், 'கலை இவற்றின் இணைப்பான நடராச தத்துவத்தின் அடிப்படை இருப்பிடமாகவும் திகழ்கிறது.

அநேக கோயில்களின் அடிப்படைகள் தற்போது உணரப் பெறுமாறில்லை. சிதம்பரத்தின் பழம் பெயர் தில்லை என்பது. அங்குத் தொடக்கத்தில் இலிங்கம் ஒன்று இருந்தது. கோயிலின் புஷ்கரணியான சிவகங்கைக் கரையிலுள்ள ஒரு மர நிழலில் அவ் விலிங்கம் திருமூலத்தானத்தார் என்ற பெயரால் பிற்காலத்து வழங்கப்படுவதாயிற்று.

கங்கைக்கும் யமுனைக்கும் இடைப்பட்ட பகுதியிலிருந்த அந்தர் வேதி என்ற பகுதியையாண்ட வடநாட்டு வேந்தனான இரணிய வர்மன் என்பான் தொழு (குஷ்ட) நோயால் பீடிக்கப்படவே, தன் நாட்டைவிட்டுத் தல யாத்திரை செய்துகொண்டு தமிழகத்தை நோக்கி வரவும், தில்லையிலிருந்த வியாக்கிரபாத முனிவர் திருக்குள மான சிவகங்கையில் முழுகி நடராசப் பெருமானை வழிபடுமாறு அவ னிடம் கூறவே, அவன் அவ்வாறு செய்து நோய் நீங்கப்பெற்றான்.

அவன் வியாக்கிரபாதரால் தில்லை நகருக்கு மன்னனாக முடிசூட்டப் பட்டான். தில்லை நகர் வியாக்கிரபுரி எனவும் வியாக்கிர அக்கிர காரம் எனவும், பெரும்பற்றப் புலியூர் எனவும் வழங்கப்படுவதாயிற்று. இரணியவர்மன் நடராசப் பெருமானுக்குக் கோயில் எடுப்பித்தான். அவன் சோழ மரபினன் என்று தன்னைக் கூறிக்கொண்டு புலிப்பொறி யைச் சூடிக்கொண்டான். அப் புலி முத்திரை விசயாலயன் வழியின ராலும் விரும்பிக் கொள்ளப்படுவதாயிற்று.

ஏழாம் நூற்றாண்டில் ஆண்ட மகேந்திரவர்மன் காலத்தவரான திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் என்ற அடியவர் காலத்தில் தில்லை மிகப் பிரசித்தமான சிவ க்ஷேத்திரம் ஆயிற்று.

தற்போது சிதம்பரத்தின் மேற்குப் பகுதியில் காணப்படுவதும் பதஞ்சலி என்ற முனிவரால் வழிபடப்பட்டதுமான திரு அனந்தீ சுவரம் என்ற கோயில் அண்மையில் புதுப்பிக்கப்பட்டது. அக்கோயிற் சுவர்களில் தில்லையின் மிகப் பழைய கல்வெட்டுகள் காணப்பட்டன. அவை விசயாலயன் காலத்தனவாகவும் முதற் பராந்தகன் காலத்தன வாகவும் குறிப்பிடப்படுகின்றன. இப்பொழுது நடராசர் கோயில் பிற்பட்ட சோழர் காலத்தது.[1] (கி. பி. 1070-1270)

13. காப்பளூர் :

1. திருக்காமேசுவரர் கோயில்
2. கலியாதித்த விண்ணகர் கோயில்
3. சங்கர நாராயணர் கோயில்

பண்டு கல்வெட்டுகளில் காமப்புத்தூர் என்று வழங்கப்பட்ட தற்போதைய காப்பளூர் வடவார்க்காடு மாவட்டத்தில் விரசோழ புரத்துக்கு வடக்கே 80 கி. மீ. தொலைவில் உள்ளது. போளூரிலிருந்து

[1] குறிப்பு: அண்ணாமலைப் பல்கலைக் கழக மலர்களின் 12, 13-ஆம் தொகுதிகளில் சிதம் பரத்தின் மிகப் பழைய கல்வெட்டுகள் என்ற தலைப்பில் யாம் வரைந்த கட்டுரையை நோக்குக.

ஆறு கல் தொலைவிலுள்ளது. இங்கு விசயாலயச் சோழனின் மூன்றும் ஆண்டுக் கல்வெட்டொன்று கண்டுபிடிக்கப்பட்டது. அங்குச் சிவன், விஷ்ணு, சங்கர நாராயணர் என்ற முத்தேவர்களுக்கும் தனித்தனியே அமைக்கப்பட்ட மூன்று கோயில்கள் இருந்தன. தற்போது திருக் காமேசுவரர் என்று குறிப்பிடப்படும் சிவபெருமானுடைய பெயர் கல்வெட்டுகளில் 'திருக்காமை நக்கர்' என்றே குறிப்பிடப்பட்டுள் ளது. அக் கோயிலில் தந்திவர்மனின் 3ஆம் ஆண்டுக் கல்வெட்டு, ஆட்சியாண்டு கண்டுபிடிக்க முடியாத கம்பவர்மனின் கல்வெட்டு என்பவை காணப்படுவதால் அக் கோயில் 8ஆம் நூற்றுண்டிலேயே இருந்திருக்கவேண்டும் என்பது தேற்றம்.

அரசாங்கக் கல்வெட்டு இலாக்காவினர் இங்குள்ள பழைய சோழர் கல்வெட்டுப் பரகேசரிவர்மனின் எட்டாம் ஆண்டைச் சேர்ந்தது என்று குறிப்பிட்டுள்ளனர். பங்கள நாட்டு மாதேவர் என்பவர் மகனுரான காமடிகள் என்பவரின் தேவியார் கங்கப் பெருந்தேவி யாரால் உள்ளூர்க் கோயிலில் அந்தணர்களுக்கு அமுது இடுவதற்கு வைத்த நிவந்தம்பற்றி அப் பரகேசரிவர்மன் கல்வெட்டு குறிப்பிடு கிறது. இம் மாதேவர் என்பார் பல்லவ மன்னனுன கம்பவர்மனின் சிற்றரசராகக் குறிப்பிடப்படுகிருர். அதே இடத்தில் காணப்படும் கம்பவர்மன் காலக் கல்வெட்டெழுத்தும் இக் கல்வெட்டெழுத்தும் ஒன்றுபோலக் காணப்படுகின்றன. எனவே, இக் கல்வெட்டில் காணப் படும் பரகேசரிவர்மன் விசயாலயன் என்று கொள்வதில் தடை ஒன்றுமில்லை. அப் பகுதியை விசயாலயன் வென்றிருந்தபோதும் சில காலத்தில் அதை மீண்டும் இழந்தான் என்பது உணரப்படுகிறது. ஏனெனின் அப்பொழுது ஆண்ட மன்னனின் ஆட்சியாண்டு குறிப் பிடப்படாத கல்வெட்டு ஒன்றும் இங்குக் காணப்படுகிறது. ஆனுல், சகரயாண்டு 825-இல் (கி. பி. 904-இல்) முதல் ஆதித்தன் காலத்துக் கல்வெட்டொன்று நந்திப் போசர் தளிப்பெருமாள் என்ற உள்ளூர்த் தலைவனுல் இவ் வூரிலுள்ள விஷ்ணு கோயிலுக்குத் தேவ போகமாக விடப்பட்ட நிலம்பற்றிக் குறிப்பிடுகிறது. இவற்றை நோக்க எல்லைப் புறங்களிலுள்ள பிரதேசங்கள் அடிக்கடி வெவ்வேறு அரசர்களின் வசப்பட்டன என்பதும், அங்கிருந்த நிலபுலங்கள் எந்த அரசருக்கும் இறை இறுக்காமல் சில காலம் தல அதிகாரிவசம் இருந்தன என்பதும் உணரப்படுகின்றன.

மேலும், பரகேசரிவர்மனுடைய 3, 13ஆம் ஆண்டுக் கல்வெட்டு களும் காணப்படுகின்றன. இக் கல்வெட்டுகளை நோக்க இத்தொண்டை மண்டலப் பகுதியை முதற் பராந்தகன் மீண்டும் வென்ருன் என் பது உணரப்படுகிறது. அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட கரந் தைத் தமிழ்ச் சங்கச் செப்பேடுகள் தொண்டைமண்டலத்திலிருந்து

பல்லவர்களை அடியோடு போக்கிய பெருமை முதற் பராந்தகனையே சாரும் என்ற கருத்தை வெளியிடுகின்றன.

இக் கோயிலின் சப்தமாதர் கோட்டத்தின் சுவரில் வெட்டப்பட்டுள்ள பரகேசரிவர்மனின் மூன்றும் ஆண்டுக் கல்வெட்டு சங்கர நாராயணர் கோயிலுக்குப் பிருதிவீ கங்கரையர் என்ற கங்கமார்த் தாண்டரும் அவர் புதல்வரும் வழங்கிய நிலம்பற்றிய நன்கொடையைக் குறிப்பிடுகிறது. இந்தக் கங்க மார்த்தாண்டரின் பெயர் தஞ்சை மாவட்டத்துத் திருப்பழனத்திலுள்ள இராசகேசரிவர்மன் ஆன முதல் ஆதித்தனுடைய 26ஆம் ஆண்டுக் கல்வெட்டிலும் காணப்படுகிறது. எனவே, இப் பரகேசரிவர்மனின் மூன்றும் ஆண்டுக் கல்வெட்டு முதற் பராந்தகன் காலத்தது என்று கொள்வதே மிகப் பொருத்தமுடையது.

பரகேசரிவர்மன் (முதல் பராந்தகன்) உடைய 3ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று கலியாதித்த விஷ்ணுகிருக தேவர் கோயிலுக்கு மிலாடு நாட்டுப் பெருவேங்கூரினர் ஒருவர் விளக்கெரிக்க நன்கொடை உதவிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

பரகேசரிவர்மனுடைய (முதல் பராந்தகன்) 13ஆம் ஆண்டில் அவ் வூர் ஆளுங்கணத்து உறுப்பினர் ஒருவர் ஊர்ச்சபையாரிடமிருந்து ஒரு நிலத்தை விலைக்கு வாங்கிச் சாந்தோக்கியக் கிடைப்புறமாக வேதம் ஓதுவிப்பதற்கு வழங்கிய செய்தி உணரப்படுகிறது.

மதுரைகொண்ட கோப்பரகேசரியின் 25ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று அப் பரகேசரியின் மக்களுள் ஒருவனான பிள்ளையார் கோர்தண்டராமன் உள்ளிட்ட மூவரால் உள்ளூர்க் குளத்தைக் கல்லித் திருத்துவதற்கு உள்ளூர்ச் சபையாரிடம் ரொக்கமாக ஒரு தொகையை ஒப்படைத்த அறக்கட்டளையைக் குறிப்பிடுகிறது. மூன்றும் கிருஷ்ணனின் 25ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் மூன்று கோயிலுக்கு விளக்கு எரிக்கவும், பட்ட விருத்திக்கும் (ஓதும் அந்தணருக்கு உணவிடல்) நன்கொடை வழங்கப்பட்ட செய்திகளைக் குறிப்பிடுகின்றன. இக் கல்வெட்டுகள் இப் பகுதி இராட்டிரகூட (இரட்டையர்) மன்னனான மூன்றும் கிருஷ்ணனால் வெல்லப்பட்ட செய்தியை வலியுறுத்துகின்றன.

மதுரை கொண்ட இராசகேசரி வர்மனான சுந்தர சோழனின் ஆறும் ஆண்டுக் கல்வெட்டொன்று வேதம் ஓதுவிப்பதற்காக விடப்பட்ட நிவந்தம்பற்றிக் குறிப்பிடுகிறது.

வீரபாண்டியன் முடித்தலை கொண்ட கோப்பரகேசரி வர்மனான இரண்டாம் ஆதித்தனுடைய காலத்தனவான 4 (நான்கு) கல்வெட்டு

கள் சிவன் கோயிலுக்கும் விஷ்ணு கோயிலுக்கும் வழங்கப்பட்ட நிவந்தங்கள்பற்றிக் குறிப்பிடுகின்றன.

அரசாங்கக் கல்வெட்டு இலாக்காவினர் குறிப்பிடுவது போல விஷ்ணு கோயில் இரண்டாம் ஆதித்தன் காலத்தை ஒட்டியது என்று கொண்டால், பரகேசரிவர்மனின் 3-ஆம் ஆண்டைச் சேர்ந்தது என்று குறிப்பிடப்படும் கல்வெட்டுப் பராந்தகனுடையதாகாது. அஃது உத்தம சோழன் காலத்ததாகும்.

சிவன் கோயில் ஒன்பதாம் நூற்றுண்டைச் சேர்ந்தது. பத்தாம் நூற்றுண்டினதாகிய சங்கர நாராயணர் கோயில் தற்பொழுது சுவடற்று அழிந்து போய்விட்டது. விஜயராகவர் என்ற விஷ்ணு கோயிலில் இராமர், இலக்குமணர், சிதை, அனுமன் ஆகியோரின் நேர்த்தியான செப்புத் திருமேனிகள் உள்ளன. இவைகள் முதற் பராந்தகன் காலத்தனவாகத் தோன்றுகின்றன.

14. உத்தர மேரூர் :

1. வைகுந்தப் பெருமாள் கோயில்
2 சுந்தரவரதப் பெருமாள் கோயில்

உத்தரமேரூர் சென்னை நகரிலிருந்து தென்மேற்கில் 80 கி. மீ. தொலைவிலும், காஞ்சியிலிருந்து 25 கி. மீ. தொலைவிலும் உள்ளது. பல்லவ மன்னனுன தந்திவர்மன் காலந்தொட்டு இவ் வூர் சரித்திரத் தொடர்புடையதாக வழங்குகிறது. வைகுந்தப் பெருமாள் கோயில் சுவர்களில் இம் மன்னனுடைய 7, 9, 21-ஆம் ஆண்டுகளின் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவனுடைய 10-ஆம் ஆண்டுக் கல்வெட்டு, சுந்தர வரதப் பெருமாள் கோயில் சுவரில் காணப்படுகிறது. எனவே, இவ்விரு கோயில்களும் பல்லவர் காலத்தன என்பது தேற்றம். தந்திவர்மனுக்கு மாற்பிடுகு என்ற விருதுப் பெயரோடு வயிரமேகன் என்ற பெயரும் உண்டு போலும். எனவே, வயிரமேகத் தடாகம் அவனுல் வெட்டுவிக்கப்பட்டதாகவோ. அவன் பெயரால் வெட்டுவிக்கப்பட்டதாகவோ கொள்ளப்படுகிறது. தந்திவர்மனின் பிற்றேன்றலான தெள்ளாறெறிந்த நந்திவர்மன் (III) (கி. பி. 835-860) ஆட்சியில் உத்தரமேரூர் சதுர்வேதி மங்கலத்தின் வடகிழக்குக் கோடியில் இருந்த பிரம்மேசுவர கிருகத்து மகாதேவர் கோயிலுக்கு அவன் 24-ஆம் ஆண்டில் அவிப்புறமாக ஒரு நிலம் விடப்பட்ட செய்தி அறியப்படுகிறது.

நந்திவர்மனுக்குப் பிறகு பல்லவ நாடு நிருபதுங்கன், விஜய கம்பவர்மன் என்ற இருவராலும் பகிர்ந்து ஆளப்பட்டது என அறிகிறோம்.

இங்குக் கம்பவர்மனுடைய (கி. பி. 884-901) ஆறும் ஆண்டு முதல் 23-ஆம் ஆண்டு முடியப் பல கல்வெட்டுகள் உள்ளன. நிருபதுங்க னுடைய 16, 25, 26-ஆம் ஆண்டுக் கல்வெட்டுகளும் இங்கு உள்ளன. சோழபுரக் கல்வெட்டில் கம்பவர்மன் நந்தி—கம்பேசுவரன் என்று குறிப்பிடப்படுவது கொண்டு கம்பவர்மன் நந்திவர்மன் புதல்வனாக அறியப்படுவதால் அவன் நிருபதுங்கனுடைய உடன்பிறந்தான் ஆக வேண்டும் என்று உணர்கிறோம். கம்பவர்மனும் முதல் ஆதித்தனும் ஒரே காலத்தவர்.

மூன்றும் நந்திவர்மனுடைய பிற்பகுதியும், நிருபதுங்கன் அபரா சிதன், கம்பவர்மன் என்பவருடைய ஆட்சிக் காலமும், விசயாலயன், முதல் ஆதித்தன், முதற் பராந்தகன் ஆகியவர் ஆட்சிக் காலமும் ஒரே காலத்தன. எனவே, இப் பல்லவர் காலத்திலேயே இச் சோழ மன்னர்கள் தம் ஆட்சியை விரிவுபடுத்தினரென அறிகிறோம்.

இங்கு வைகுந்தப் பெருமாள் கோயிலில் பரகேசரிவர்மனின் கல் வெட்டுகள் நான்கு உள்ளன அவை யாவும் விசயாலயன் காலத்தன வாக உணரப்படுகின்றன. அவற்றுள் முதலாவது விசயாலயனுடைய 14-ஆம் ஆண்டைச் சேர்ந்தது. அது காலியூர்க் கோட்டத்து உத்தர மேரூர்க் கூற்றத்து உத்தரமேரூர்ச் சபையினர் திட்டத்தில் உள்ள துர்க்கைக்கு 480 குழி நிலத்தை நன்கொடை வழங்கிய செய்தியைக் குறிப்பிடுவதாகும்.

இரண்டாம் கல்வெட்டு 15-ஆம் ஆண்டினது. உத்தரமேரூர் மகா சபையினர் கோயிற் பெருமண்டபத்தில் கூடி வைகுண்டப் பெருமாள் கோயிலில் பிரதிட்டிக்கப்பட்ட இராமருடைய விக்கிரகமான திருவ யோத்திப் பெருமாளடிகளுக்கு வழங்கப்பட்ட நிலத்தை இறையிலி யாக்கி, அச் செய்தியைக் கோயிற்சுவரில் பொறிக்குமாறு ஆணையிட்ட செய்தியை இப் பதினைந்தாம் ஆண்டுக் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. 16-ஆம் ஆண்டுக் கல்வெட்டு உத்தரமேரூருக்குத் தென் பக்கத்தில் உள்ள திட்டாத்தூரிலுள்ள சிவன் கோயிலில் எழுந்தருளியுள்ள திட்டாத்தூரையன் வடக்கில் மகாதேவருக்குத் திருநாமத்துக் காணி யாக வழங்கப்பட்ட நிலம் ஒன்றை இறையிலியாக்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. இச் சிவன் கோயிலுக்கு நன்கொடை வழங்கியவரே குருக்ஷேத்திரப் பெருமானடிகளுக்குச் திருச்சென்னடைக் (அவிசுபலி) காக வழங்கிய நிலத்திற்கு இவ் வுத்தரமேரூர்ப் பெருங்குறிச் சபை யினர் இறை திரவியம் பெற்று இறை இழிச்சிக் கொடுத்த செய்தியும் இக் கோயிற் கல்வெட்டில் காணப்படுகிறது. பல்லவர் ஆட்சி மாறிச் சோழர் ஆட்சி வந்தபோதும் ஊர்ச் சபைகள் தம் கடமைகளைத் தளராது ஒழுங்காகச் செய்து வந்தமை விசயாலயனுடைய இக் கல் வெட்டுகளால் உணரப்படும் செய்தியாகும்.

இப் பகுதி, பல்லவர் சோழர் இவ்விருவருக்கும் எல்லைப்புறமாக இருந்தமையால் இதன்கண் அடிக்கடி ஆட்சியில் மாற்றம் ஏற்பட்டு, இறுதியில் முதற் பராந்தகன் காலத்திலேயே சோழ நாட்டிற்குரிய தாக உறுதி செய்யப்பட்டது என்பது குறித்துணரத்தக்கது.

இராசகேசரிவர்மனுடைய கல்வெட்டுகள் நான்கு உள்ளன. அவனுடைய எட்டாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று குருக்ஷேத்திரப் பெருமானடிகள் கோயிலில் நாள்தோறும் 20 அந்தணர்களுக்கு உணவிட நிவந்தம் விடப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. அம் மன்னனுடைய எட்டாம் ஆண்டுக் கல்வெட்டுகளில் மற்றொன்று உத்தரமேரூர்ப் பெருங்குறி மகாசபையில் முதியரும் இளைஞரும் கூட்டம் குறைவறக் கூடியிருந்து ஒரு குறிப்பிட்ட காலத்துக்குப்பின் பட்டிகாடி என்ற வரி திரட்டக்கூடாது எனவும் அங்ஙனம் திரட்டு பவர்கள் சிரத்தாமந்தார் என்ற ஊர் நலன் கருதும் மேன்மக்களால் தண்டிக்கப்படுவர் எனவும் தீர்மானம் செய்த செய்தியைக் குறிப்பிடு கிறது.

இராசகேசரிவர்மனின் 17ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று காடக்காடி அரையன் என்பான் கட்டுவித்த ஈசுவராலயம் (சிவன் கோயில்) விஷ்ணுகிருகம் (பெருமாள் கோயில்) ஆகியவற்றிற்குப் பூசனை புரிவோருக்கு உத்தரமேரூர் சதுர்வேதி மங்கலத்து மகாசபை யினர் ஜீவிதமாக நிலம் வழங்கிய கொடையைக் குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டு 'இரட்டைத்தளிகை ஈசுவரம்' என்ற சிவன் கோயிலருகில் கிடைத்தது. கல்வெட்டில் குறிப்பிடப்பட்ட சிவன் கோயில் இது தானோ என்பது ஆராய்தற்குரியது.

இராசகேசரியின் 26ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று நாகநந்தி கிரமவித்தன் என்பவன் பங்குனி மாதம் முதல் கார்த்திகை மாதம் வரை, பிரமாண மண்டபத்தில் ஒரு தண்ணீர்ப் பந்தல் அமைப்பதற்கு 25 கழஞ்சுப் பொன்னை நன்கொடையாக அளிக்க, அந் நன்கொடை யைப் பெற்ற உள்ளூர்ச் சபையினர் அவ் வறத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏரிவாரியத்தாரிடம் ஒப்படைத்த செய்தியைக் குறிப்பிடு கிறது. இந்த இராசகேசரிக் கல்வெட்டுகள் ஆதித்தன் காலத்தனவே. ஆதித்தன் இப் பகுதியில் ஆண்ட பல்லவர் ஆட்சியைச் சிறிது சிறிதாக வேரறுத்திருக்கவேண்டும். பல்லவருடைய கல்வெட்டுகள் முதல் ஆதித்தன் காலத்தில் இங்கு அருகியே காணப்படுகின்றன. அபராசிதனுடைய 18ஆம் ஆண்டுக் கல்வெட்டே உயர்ந்த ஆட்சி யாண்டை உடையது. அவன் 18ஆம் ஆண்டிலேயே திருத்தணி வீரட்டானேசுவரர் கோயில் எடுப்பிக்கப்பட்டதாக அறிகிறோம்.

முதல் பராந்தகன் காலத்தில் தொண்டை மண்டலம் முழுவதும் சோழர் வசப்பட்டது. அவன் ஆட்சியில் உத்தரமேரூரின் வரலாறு சிறப்புற்றது. இரண்டாம் பிருதிவிபதியின் உதயேந்திரச் செப்பேடுகள் முதற் பராந்தகன் ஹேமகர்ப்பம், துலாபாரம் முதலிய அறச் செயல்களைச் செய்தான் எனவும் கோயில்கள் எடுப்பித்தல், அவற்றிற்கு நிவந்தம் வழங்குதல், அந்தணர்களுக்கு நிலங்களைத் தானம் செய்தல் முதலிய நற்பணிகள் பலவற்றில் ஈடுபட்டான் எனவும் குறிப்பிடுகின்றன. அதற்கேற்பப் பராந்தகனுடைய 15ஆம் ஆண்டுக் கல்வெட்டில் உத்தரமேரூரில் உள்ள சுந்தர வரதப் பெருமாள் கோயில் 'துலாபாரத் தளி' என்று வழங்கப்படுவது கொண்டு, பராந்தகன் தன் 15ஆம் ஆண்டுக்குச் சற்று முன்னர்த் தற்போது சுந்தர வரதப் பெருமாள் கோயில் எனவும், கோயில் எடுப்பிக்கப்பட்ட காலமான 8ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் 'ஸ்ரீவேலி விஷ்ணு கிருகம் அல்லது கொங்கரையன் வெள்ளை மூர்த்திப் பெருமாள் ஸ்ரீ கோயில்' எனவும் வழங்கப்பட்ட கோயிலில் துலாபார தானம் (தன் எடையளவு பொன்னை நிறுத்து நன்கொடை வழங்குதல்) செய்து, அச் செல்வத்தை இக்கோயிலுக்கு வழங்கி இதனைத் 'துலாபாரத்தளி' அல்லது 'துலாபார ஸ்ரீ கோயில்' என்ற பெயருடையதாக்கினான் எனவும் அறிகிறோம் முதல் இராசராசனுடைய 9ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் இக் கோயில் துலாபார ஸ்ரீ கோயில் என்று குறிப்பிடப்படுவது கொண்டு தன் மூதாதையருடைய செயலை நினைவுபடுத்திக்கொண்டு முதல் இராசராசன் இதன் பெயரை இங்ஙனம் குறிப்பிட்டான் என்றாவது, இராசராசன் தானும் இக் கோயிலில் மற்றொரு துலாபார தானம் செய்தான் என்றாவது கொள்ள வேண்டும். இராசராசன் தன் 29ஆம் ஆண்டில் வேம்பத்தூர் என்கின்ற திருவிசலூர்க் கோயிலில் துலாபார தானம் செய்தான் என்பதும் அவன் பெருந்தேவியான உலக மாதேவி ஹிரணிய கர்ப்பதானம் செய்தாள் என்பதும் நினைவிற் கொள்ளத் தக்க செய்திகளாம்.

தஞ்சை மாவட்டத்துத் திருக்கோடிக்கா திருக்கோயிலினுள்ள பழைய கல்வெட்டின் படியாக அமைந்த கல்வெட்டொன்று நிருபதுங்கனுடைய 22ஆம் ஆண்டில் அவனுடைய தேவியாரான வீர மகா தேவியார் இங்கு இரணியகர்ப்ப தானமும் துலாபார தானமும் செய்து, அத் தானங்களுக்குக் கொள்ளப்பட்ட பொன்னிலிருந்து 50 கழஞ்சுப் பொன்னை இக் கிராமத்து மகாதேவர் கோயிலின் விளக்குக்கும் அவிசு பலிக்குமாக வழங்கினார் எனக் குறிப்பிடுகிறது. துலாபாரக் கோயிலில் உள்ள பல்லவர் கல்வெட்டுகள் தந்திவர்மனுடைய கல்வெட்டும் இக் கோயிலை எடுப்பித்த கொங்கரையர் கல்வெட்டுமேயாம். நிருபதுங்கனைப்பற்றியோ அவன் தேவியைப்பற்றியோ இக் கோயிலில் கல்வெட்டொன்றும் இல்லை. எனவே வீரமகாதேவியார் தாம் செய்த

துலாபார இரணிய கர்ப்பதானங்களை இவ் வுத்தரமேரூர்க் கோயிலில் செய்தான் என்று கொள்வதற்கில்லை. முதற் பராந்தகனுடைய கடைசிக் கல்வெட்டு அவனுடைய 16ஆம் ஆண்டைச் சேர்ந்தது. தக்கோலப் போரில் இராசாதித்தன் இறந்தபின் இப் பகுதி இராஷ்டிர கூட மன்னனான மூன்றும் கிருஷ்ணன் வசப்பட்டது. அம் மன்னனு டைய 18, 23, 25ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் இங்கு காணப்படு கின்றன. அவற்றுள் அவனுடைய 25ஆம் ஆண்டுக் கல்வெட்டு மிகச் சுவை வாய்ந்தது. உத்தரமேரூர்ப் பெருங்குறிச் சபையினர் பேரம் பலத்து மேடையில் பகற் காலத்தில் கூடி, தீங்குச் செய்பவர்களுக்கு வழங்கப்படும் தண்டனையைக் கிராமத்து ஆண்டு நிர்வாகப் பொறுப் புடையவரே சபையின் உதவியைக்கொண்டு தீர்மானிக்கவேண்டும் எனவும், கிராமக் குழுவினரால் நிர்வகிக்க முடியாத குற்றவாளி களுக்கே பெருங்குறிச் சபையார் தண்டனை விதிக்கவேண்டும் எனவும் தீர்மானித்தனர். இங்குச் சோழர் ஆட்சி மாறி வேற்று ஆட்சி தொடங்கியபோது ஏற்பட்ட குழப்பத்தைப் பயன்படுத்தித் தன் னலக்காரர்கள் செயற்பட்டபோது இத்தகைய தீர்மானங்கள் செய்வ தன் அவசியம் ஏற்பட்டது என்பது குறித்து உணரத்தக்கது.

பராந்தகன் காலத்துக்குப்பின் இப் பகுதியில், பாண்டியன் முடித் தலை கொண்ட பார்த்திவேந்திர அதிபதி என்பான் ஆண்டானென அறிகிறோம். இவனுக்கும் சோழர் கிளை வழிக்கும் என்ன தொடர்பு என்பது புலப்படவில்லை. இவனுடைய கல்வெட்டுகள் 2ஆம் ஆண்டி லிருந்து 12ஆம் ஆண்டுவரை கிடைக்கின்றன. முதல் இராசராசனால் தொண்டைமண்டலம் ஒரு வழியாகச் சோழப் பெருநிலத்துடன் சேர்த்துக்கொள்ளப்படுவதன் முன் சோழர் ஆட்சியைத் தொண்டை மண்டலத்தில் மீட்ட பெருமை இவனையே சாரும் எனலாம்.

உள்ளூர்க் கோயில்கள் :

மேல் குறிப்பிடப்பட்ட கோயில்களைத் தவிர உத்தரமேரூர்ப் பெருங்குறிச் சபையினரின் எல்லையில் வேறு பல கோயில்கள்இருந்தன வாக அறிகிறோம். கல்வெட்டுகளில் காணப்படும் பிருந்தாவனத்துப் பெருமாள், கோவர்த்தனப் பெருமாள், குருக்ஷேத்திர தேவர், திரு வாய்ப்பாடிப் பெருமாள், திருவயோத்திப் பெருமாள் முதலிய பெயர் கள் வைகுந்தப் பெருமாள் அல்லது சுந்தர வரதப் பெருமாள் கோயில் களில் வழங்கப்பட்ட தனித்தனி சந்நிதிகளையுடைய இராமர், கிருஷ்ணர் விக்கிரகங்களின் பெயர்களாக இருக்கலாம். உத்தரமேரூரி லிருந்து காஞ்சி செல்லும் பெருவழியில் அவ் வூருக்கு வடக்கே சுமார் 6 கி. மீ. தொலைவில் அமைந்த திருப்புலீசுவரக் கோயிலில் முதற் குலோத்துங்கன் முதலிய பிற்பட்ட சோழர்களின் கல்வெட்டுகளே உள்ளன. ஆனால், இக் கோயில் தனியூரான உத்தரமேரூர்ச் சதுர்

வேதிமங்கலத்து எல்லைக்குள் இருந்ததால் இக் கோயிலைப்பற்றிய குறிப்பு நிருபதுங்க பல்லவன் காலம் முதல் மூன்றும் குலோத்துங்கன் காலம் வரை உத்தரமேரூரிலிருந்து ஏனைய கோயில் கல்வெட்டுகளில் இடம் பெற்றிருந்தது.

உள்ளூர்க் கல்வெட்டுகளில் காணப்படும் ஏனைய கோயில்களின் பட்டியல் பின்வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| 1. | சுப்பிரமணியர் கோயில் | 55/1898 | பார்த்திவேந்திரன் |
| 2. | கைலாசநாதர் கோயில் | 56/1898 | முதல் இராசேந்திரன் |
| 3. | கொலம்பேசுவரர் கோயில் | 57/1898 | மூன்றும் குலோத்துங்கன் |
| 4. | மாரி அம்மன் கோயில் என்ற பிடாரி கோயில் | 58 59,60/1898 | முதல் பராந்தகன் பார்த்திவேந்திரன் |
| 5. | திருவுண்ணியூர்ப் பெருமானடிகள் | 28/1898 | பார்த்திவேந்திரன் |
| 6. | இராசநாராயண விண்ணகர் (ஊர் நடுவிலுள்ளது) | 66/1898 | முதல் குலோத்துங்கன் |
| 7. | திட்டாத்தூர் மகாதேவர் (ஊர் வடக்கிலுள்ளது) | 4/1898 | பரகேசரி 16 - ஆம் ஆண்டு |
| 8. | குமண்பாடி மகாதேவர் | 25,27/1898 | பார்த்திவேந்திரன் |
| 9. | குமண்பாடி ஜேஷ்டைக் கோயில் | 10/1898 | பரகேசரி |
| 10. | உள்ளியூர் ஈசுவரபட்டாரர் | 41/1898 | கன்னரதேவன் |
| 11. | திரு ஏகம்பன் உடையார் | 68/1898 | விக்கிரம சோழன் |
| 12. | வாஸ்துபிடாரிமாரும் வட வாயில் செல்வியும் | 76/1898 | மூன்றும் குலோத்துங்கன் |
| 13. | ஐயன் மகா சாஸ்தா (ஊர் வடக்கில் உள்ளது) | 15/1898 | பார்த்திவேந்திரன் |
| 14. | முல்லைவாயில் மகாதேவர் | 31/1898 | கம்பவர்மன். |

உள்ளூர்க் கோயில்களில் வைகுந்தப் பெருமாள் கோயில் தன் பழஞ் சிறப்பின் பெரும் பகுதியை இழந்துவிட்டது. கம்பவர்மன் முதலிய பிற்காலப் பல்லவர்கள், பராந்தகன் முதலிய முற்காலச் சோழர்கள் ஆகியவர்களுடைய கல்வெட்டுகள் அடங்கிய சுவர்கள் கூடக் கவனிப்பாரற்றுச் சீர்கேடான நிலையில் உள்ளன. கோயிற் பகுதி சிறு சிறு கடைகளால் சீர்குலைக்கப்பட்டுள்ளது. இந்தியாவில் ஸ்தல சுய ஆட்சியின் அமைப்பைப் பற்றிக் கற்க விரும்புவோர்க்கு விலை மதிக்க முடியாத நிதியமாக இலங்குவது இங்குள்ள முதற் பராந்தகனுடைய குடவோலைக் கல்வெட்டு. இதில் குடவோலை வாயிலாகத்

தேர்ந்தெடுக்கும் முறை, வாக்குப் பதிவு செய்பவருக்கு வேண்டிய தகுதிகள், வாக்குப் பதிவு செய்யும் தகுதியற்றவருடைய குறைகள், சம்வத்ஸரவாரியம், ஏரி வாரியம், தோட்ட வாரியம், பஞ்ச வாரியம், பொன் வாரியம் என்ற குழுவினருடைய பணிகள் முதலியன விரிவாகக் கூறப்பட்டுப் பத்தாம் நூற்றுண்டில் நிகழ்ந்த கிராம ஆட்சி பற்றிய அரிய செய்திகள் வெளியிடப்பட்டுள்ளன. இந்தக் கல்வெட்டடங்கிய இக் கோயிலைப் பழுதுருமல் காக்கவேண்டுவது நம் அரசியலாரின் கடமையாகும்.

**சுந்தர வரதப் பெருமாள் கோயில் :**

இக் கோயில் கங்கரையரின் திருப்பணி என்பது கருவறையின் தென்புறச் சுவர்க் கல்வெட்டால் அறியப்படுகிறது. கருவறையின் மேற்குச் சுவரில் தந்திவர்மனுடைய 10ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று காணப்படுவதால் இக்கோயில் தந்திவர்மன் காலத்ததாகிய ஒன்பதாம் நூற்றுண்டைச் சேர்ந்தது என்பது தேற்றம்.

இக் கோயிலின் பழைய பெயர் 'ஸ்ரீவேலி விஷ்ணுகிருகம்' அல்லது 'வெள்ளை மூர்த்திப் பெருமானடிகள் ஸ்ரீ கோயில்' என்பது. முதற் பராந்தகன் காலத்தில் இக் கோயில் 'துலாபார ஸ்ரீ கோயில்' அல்லது 'துலாபாரத்தளி' என்று வழங்கப்பட்டது. முதல் இராசராசன் கல்வெட்டுகளில் இக் கோயிலில் வெள்ளை மூர்த்தி ஆழ்வார், திருவயினிக் குலம் உடையார், ஸ்ரீ இராகவ தேவர், புருஷோத்தமர் முதலிய தெய்வங்களின் படிவங்கள் இருந்தனவாகக் கூறப்பட்டுள்ளன. முதல் இராசேந்திரன் காலத்தில் இக் கோயில் கொங்கரையர் விண்ணகர் அல்லது இராசேந்திர சோழ விண்ணகர் என வழங்கப்பட்டது. இராசேந்திர சோழனின் கல்வெட்டொன்று இக்கோயிலின் மூன்றுவது தளத்தில் நிறுவப்பட்ட அனந்த நாராயணர் சிலையைப் பற்றிக் குறிப்பிடுகிறது. பிற்பட்ட சோழர் காலத்தில் உத்தரமேரூர் இராசேந்திர சோழ சதுர்வேதிமங்கலம் என வழங்கப்பட்டது. மூன்றும் இராசேந்திரன் காலத்தில் காஞ்சியை ஆண்ட வலிமை மிக்க தலைவன் ஒருவன் பெயரால் 'கண்ட கோபால சதுர்வேதி மங்கலம்' என்று பெயர் மாறியது. காஞ்சியில் இரண்டாம் நந்திவர்மனுல் எடுப்பிக்கப்பட்ட வைகுந்தப் பெருமாள் கோயிலுக்கு அடுத்தபடியாகப் பல்லவர் காலக் கோயில்களில் இதுவே மேம்பட்டதாகும்.

இதன் கருவறை உயரமானதாகவும் கம்பீரமாகவும் கருங்கல்லால் அமைக்கப்பட்டுள்ளது. காஞ்சியிலுள்ள வைகுந்தப் பெருமாள் கோயில் போன்று இதுவும் முத்தளக் கற்றளியாக அமைந்திருக்கிறது. கருவறைக்கு மேற் பகுதிகள் சுண்ணும்பாலும் காரையாலும் அமைக்கப்பட்டவை. இது வைகானச ஆகமத்தில் குறிப்பிடப்பட்டது

போன்று 96 விமானங்களை உடையதாகக் கட்டப்பட்டதாம். இது பஞ்ச பாண்டவர்களுக்கு அருள் செய்த பஞ்சவரத க்ஷேத்திரமாகக் கருதப்படுகிறது. ஒவ்வொரு தளத்திலும் காணப்படும் பிரதான தேவதை, பக்கத் தேவதை ஆகியவற்றின் பட்டியல் பின்வருமாறு :

### தேவகோட்ட தேவதைகள்

| தளம் | பிரதான தேவதை | தெற்கு | மேற்கு | வடக்கு |
|---|---|---|---|---|
| 1. | சுந்தர வரதன் | அச்சுதன் | அநிருத்தன் | கல்யாண வரதன் |
| 2. | வைகுந்த நாதன் | கிருஷ்ணார்ஜுனர் | யோக கிருஷ்ணன் | லக்ஷ்மி நாராயணன் |
| 3. | அநந்த நாராயணன் | ப்ருகு | இரதி, மன்மதன், | வாக் வல்லி தேவி. |

சுந்தரவரதப் பெருமாள் வீமனாலும், அச்சுதன் அர்ச்சுனனாலும், அநிருத்தன் நகுலனாலும், கல்யாணவரதன் சகாதேவனாலும், வைகுந்த நாதர் தருமராசனாலும் வழிபடப்பட்டாராகக் குறிப்பிடப்படுகின்றனர்.

### 15. காஞ்சீபுரம்

கௌசிகீசுவரம் என்ற சொக்கேசுவரர் கோயில் :

காஞ்சிபுரம் பாரத தேசத்திலுள்ள ஏழு முக்கியத் திருப்பதிகளில் ஒன்றாகும். அவையாவன: அயோத்தி, மதுரை, ஹரித்துவாரம், காசி, அவந்தி, துவாரகை, காஞ்சி என்பனவாம். இது புத்த மதம், ஜைன மதம், இந்து மதம் என்ற மும் மதங்களுக்கும் இருப்பிடமாகும். கலிங்க நாட்டிலுள்ள புவனேசுவரத்தைப் போலவும், மத்தியப் பிர தேசத்திலுள்ள காஜுராகோவைப் (Khajuraho—Madhya Pradesh) போலவும் இப் பேரூர் பல கோயில்களால் அணி செய்யப்பட்டுள்ளது. காஞ்சி தொடக்கத்தில் பல்லவர்களின் தலைநகராக இருந்தது. பிறகு சோழர்கள், விசயநகர மன்னர்கள் ஆகியோரின் இரண்டாம் தலைநக ராகவும் சோழர்கள் ஆட்சிக்குப்பின் தலையெடுத்த தெலுங்குச் சோழர்களின் தலைநகராகவும் விளங்கிச் சிறப்புற்றது. மணிமேகலை இவ்வூரில் தங்கிப் பல செயற்கரிய செயல்கள் செய்தாளென அறிகிறோம். காஞ்சி கல்விக்குச் சிறந்த இருப்பிடமாக விளங்கியது. பக்கத்து நாடுகளிலிருந்த அறிஞர்கள் காஞ்சிப் பல்கலைக் கழகத்தின் (கடிகை) கல்வி முறையால் கவரப்பட்டனர். பாரவி, தண்டி முதலிய கவிகள் பல்லவர்களின் அவையை அலங்கரித்தனர். காஞ்சியிலிருந்த புத்தமதத் தலைவர் ஒருவர் நாலந்தா பல்கலைக் கழகத்தின் தலைவ ரானார். ஆதி சங்கரர் இங்குள்ள காமாட்சி அம்மன் கோயிலில் ஸ்ரீசக்க

ரத்தைப் பிரதிட்டிப்பித்து அத்வைத சித்தாந்தத்தைப் பரப்புவதற்கு மடம் ஒன்றை நிறுவினர். இராமானுசருடைய விசிட்டாத்துவைதமும் இங்கு வேரூன்றியது. ஜைன காஞ்சி என்ற பகுதி இன்றும் ஜைன மதத்தினரின் இருப்பிடமாதலை அறிகிறோம்.

பல்லவர்கள் தம் தலைநகரான காஞ்சியில் பெருங் கற்றளிகளை நிறுவி அழியாப் புகழ் பெற்றனர், காஞ்சியிலுள்ள கைலாசநாதர் கோயிலும் வைகுந்தப் பெருமாள் கோயிலும் இன்றும் அழிவுறாமல் நாம் காணும் நிலையில் உள்ளன. ஏகாம்பரநாதர் கோயில் சைவர்களாலும், வரதராசப் பெருமாள் கோயில் வைணவர்களாலும் அன்று முதல் இன்றுவரை போற்றிப் புகழப்பட்டு வருகின்றன.

காஞ்சிபுரம் விசயாலயன் காலத்திலேயே சோழர்கள் கைக்கு வந்திருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. கைலாசநாதர் கோயிலில் உள்ள பரகேசரிவர்மனின் 4-ஆம் ஆண்டுக் கல்வெட்டு விசயாலயன் காலத்ததே. உத்தம சோழனுடைய சென்னைப் பொருட்காட்சிசாலைச் செப்பேடுகளில் பரகேசரிவர்மன் விசயாலயனுடைய 22-ஆம் ஆண்டில் இவ்வூரில் வழங்கப்பட்ட அறக் கட்டளை ஒன்றுபற்றிய செய்தி காணப்படுகிறது. காஞ்சிபுரத்தில் காமாட்சியம்மன் கோயிலுக்கு அருகில் அமைந்த சொக்கேசுவரர் கோயிலின் தென்புறச் சுவரில் பரகேசரிவர்மனுடைய 15-ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் காணப்படுகிறது. அக் கல்வெட்டுள்ள சுவர்ப் பகுதி மறைக்கப்பட்டு விட்டதால், அக் கல்வெட்டு முழுமையும் உணரப் படுமாறில்லை. அக் கல்வெட்டு தற்போது கௌசிகேசுவரம் என்று வழங்கப்படும் 'தெற்கிருந்த தேவர்' கோயிலுக்கு விற்கப்பட்ட நில விக்கிரயம்பற்றிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

காஞ்சிபுரம் சொக்கேசுவரர் கோயில் நன்கு அமைக்கப்பட்ட பழைய சோழர் காலத்து ஏகதளக் கற்றளியாகும். கருவறை 19 அடி பக்கமுடைய சதுரமாக அமைந்துள்ளது. அர்த்த மண்டபம் 5 அடி 4 அங்குலம் முன்னேக்கிக் காணப்படுகிறது. சுவர்களில் சிற்ப வேலைப்பாடமைந்த தேவகோட்டங்களும் அரைத் தூண்களும் உள்ளன. ஒவ்வொரு தேவகோட்டத்தின் மேலும் ஒவ்வொரு தோரணம் காணப்படுகிறது. தேவகோட்ட தேவதைகளில் கணேசர் சிலையே உரிய இடத்தில் காணப்படுகிறது. மேற்குத் தேவகோட்டத்தின் மேல் உள்ள தோரணத்தில் சிவலிங்கத்தைப் பார்வதி பூசிக்கும் சிற்பம் காணப்படுகிறது. தட்சிணுமூர்த்தியின் சிலை தரையில் தனியே காணப்படுகிறது. மற்றத் தேவகோட்டங்களில் சிலைகளே இல்லை. கொடுங்கைக்குக் கிழ் பூதகணங்களுக்குப் பதிலாக தாமரைப் பூக்கள் வரிசையாகச் செதுக்கப்பட்டுள்ளன. கொடுங்கை கூடுகளால் அணி செய்யப்பட்டுள்ளது. அதற்குமேல் யாளி வரிமானம் உள்ளது.

வட்டமான கிரீவத்தின் நாற்புறங்களிலும் தேவகோட்டங்கள் உள்ளன. சிகரமும் வட்டமானது. முன்பு பதிக்கப்பட்டிருந்த வட்டமான ஸ்தூபி தற்போது காணப்படுமாறில்லை. இவை விர லூர்க் கோயிலையும் மேல்பாடி அரிஞ்சயேச்சுரத்தையும் ஒத்துள்ளன.

கருவறையிலுள்ள கொடுங்கைகளுக்கு மேல் இக் கோயிலில் யாளி வரிமானம் காணப்படுகிறது. கிரீவத்தின் நாற்புறங்களிலும் உள்ள தேவகோட்டங்கள் சிங்கங்களை நடுவிற் கொண்ட கூடுகளால் அணி செய்யப்பட்டுள்ளன. தேவகோட்டம் ஒன்றில் யோக நரசிம்மரின் சிலை காணப்படுகிறது. பல்லவர், முற்காலச் சோழர் ஆகியோரின் ஏனைய கோயில்களின் விமானங்களைப் போலல்லாமல், கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் கூடங்களே காணப்படுகின்றன; சாலைகள் இல்லை. இவ் வம்சமே இக் கோயில் விமானத்தில் குறிப்பிடத்தக்க தனிச் சிறப்பாகும். தற்போது இக் கோயில் சிர்குலைந்துள்ளது. இக் கோயிலைப் பழுதுபார்த்துக் காக்க வேண்டியது மிக இன்றியமையாத செயலாகும்.

### 16. கூரம் :

கூரம் என்பது பல்லவர் காலத்தில் மேம்பட்டு விளங்கிய ஊர் களில் ஒன்றாகும். இது காஞ்சிபுரத்திலிருந்து 14·5 கி. மீ. வடமேற்கில் உள்ளது. இங்கு ஒரு சிவன் கோயிலும் விஷ்ணு கோயிலும் உள்ளன.

முதல் பரமேசுவரவர்மன் என்ற பல்லவ மன்னனுடைய கூரம் செப்பேடுகளிலிருந்து இச் சிவன் கோயில் 'வித்யாவிநீத பரமேசுவர பல்லவகிருகம்' என்று வழங்கப்பட்ட செய்தி உணரப்படுகிறது. பாழடைந்த பிரதான தளியின் சுற்றெல்லையில் கிடக்கும் கல் ஒன்றில் 'ஸ்ரீ பல்லவ மாராசன் மாமல்லன்' என்ற தொடர் காணப்படுவது கொண்டு இக் கோயிலின் அடிப்படை முதல் நரசிம்மவர்மன் காலத் திலேயே இருந்தது எனவும் அவன் பரம்பரையைச் சேர்ந்த வித்யா விநீதன் என்பான் அதனை விரிவான முறையில் புதுப்பித்து அதன் நடைமுறைச் செலவுகளுக்குப் பெரிய அளவில் நிவந்தங்கள் வழங் கினான் எனவும் கருதுவதற்கு இடம் ஏற்பட்டுள்ளது. புதுப்பிக்கப்பட்ட கோயிலில் தந்திவர்மன், நிருபதுங்கன் ஆகியோரின் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இங்குக் காணப்படும் முதல் ஆதித்தனின் 27-ஆம் ஆண்டுக் கல்வெட்டு இங்குள்ள இறைவனின் பெயர் 'பெருந்திருக் கோயில் மகாதேவர்' என்று குறிப்பிடுகிறது அக் கல்வெட்டு உள்ளூர்த் தட்டான் ஒருவனிடம் கோயிலில் விளக்கெரிப்பதற்குப் பொன் கொண்டு அத் திருப்பணியை ஊர் ஆட்டை நிர்வாகக் குழுவினரின் மேற்பார்வையில் விடுத்த செய்தியைக் குறிப்பிடுகிறது. விஷ்ணு கோயில் ஆதிகேசவப் பெருமாள் கோயில் என்று வழங்கப்படுகிறது. அடிப்படைக் கோயிலில் கருவறையும் அர்த்தமண்டபமுமே இருந்

திருக்க வேண்டும். ஒரு சிறு கோயிலேக் கொண்ட மற்ருெரு மண்டபமும், முகப்பும், துவஜஸ்தம்பமும் பிற்காலத்தில் இணேக்கப்பட்டவையே. கருவறை, மூடப்பட்ட மண்டபம் ஆகியவற்றின் வெளிப்புறச் சுவர்களில் தேவகோட்டங்கள் காணப்படுகின்றன. இக்கோயிலில் தந்திவர்மன், நிருபதுங்கன் ஆகியவர் கல்வெட்டுகளோடு முதல் பராந்தகன், முதல் இராசராசன் ஆகியோருடைய கல்வெட்டுகளேயும் காணலாம்.

இங்குள்ள கூம்பு வடிவான விமானம், காஞ்சிபுரத்தில் காணப்படும் இதனேடு சமகாலத்தனவாகிய ஏனேய கோயில்களின் விமானங்களேவிட நீண்டும் அடி சிறுத்தும் காணப்படுகிறது. இது பல்லவர் காலத்துக் கலேக்கும் சோழர் காலக் கலேக்கும் இடைப்பட்ட காலத்ததாகலாம் எனத் தோன்றுகிறது.

17. களம்பாக்கம் :

களம்பாக்கம் சித்தூர் மாவட்டத்தின் திருத்தணிப் பகுதியில் உள்ளது. இச் சிற்றூரில் இரு கோயில்கள் உள்ளன.

மிகப் பழையதும் முக்கியமானதுமான கோயில் திருஞானேசுவரர் கோயிலாகும். இங்குள்ள அபராசிதனுடைய 8ஆம் ஆண்டுக் கல்வெட்டு இவ் விறைவனுடைய வழிபாட்டிற்காக விடப்பட்ட நன்கொடையைச் சுட்டுகிறது. இம் மன்னனின் 16ஆம் ஆண்டினதாகக் கருதப்படும் கல்வெட்டு இவ் வூரின் பெயர் களம்பாக்கம் என்றும், இறைவனின் பெயர் ‘ தளி உடையார் ’ என்றும் குறிப்பிடுகிறது.

இங்குள்ள பார்த்திவேந்திரவர்மனின் 10ஆம் ஆண்டுக் கல்வெட்டு, தக்கோலத்தில் சாலேப்புறமாக (தர்ம சத்திரத்திற்கு அளிப்பது) விடப்பட்ட நிவந்தத்தைக் குறிப்பிடுகிறது.

மற்ருெரு கல்வெட்டில் களந்தை (களம்பாக்கத்தின் மரூஉ) நக்கரின் கோயிலில் விளக்கெரிப்பதற்கு வைரமேக வர்மன் என்ற உள்ளூர்ப் பல்லவத் தலேவன் காலத்தில் ஆடுகள் விடப்பட்ட செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

இக் கோயில் ஒன்பதாம் நூற்ருண்டைச் சார்ந்தது.

18. நெம்மேலி (நென்மேலி)

வைகுந்தப் பெருமாள் கோயில் (திருமேற்றளிப் பெருமாள் தேவர்):

நென்மேலி என்பது சித்தூர் மாவட்டத்துத் திருத்தணிப் பகுதியில் திருத்தணியிலிருந்து 10 கி. மீ. தொலேவில் உள்ளது. இங்குள்ள



5. பூமீசுவரர் கோயில், விரலூர்



6. சிவன் கோயில், ஏனாதி



7. கௌசிகேசுவரர் கோயில், காஞ்சிபுரம்



8. பாலசுப்பிரமணியர் கோயில், கன்ணனூர்

வைகுந்தப் பெருமாள் கோயில் பல்லவர் காலத்தைச் சார்ந்தது. தொடக்கத்தில் இது 'திருமேற்றளிப் பெருமாள் கோயில்' என்று வழங்கப்பட்டது. இங்குள்ள பழைய கல்வெட்டு அபராசிதவர்மனின் 10ஆம் ஆண்டைச் சார்ந்தது. இப் பகுதியிலமைந்த இவ் விஷ்ணு கோயில் உள்ளிட்ட நான்கு கோயில்களிலும் ஸ்ரீபலி வழங்கும்போது இசைக் கருவிகளை இயக்குவதற்காகப் பக்கத்துச் சிற்றூரான சிங்க புரத்தில் 1000 குழிநிலம் நன்கொடையாக வழங்கப்பட்ட செய்தியை இக் கல்வெட்டு குறிப்பிடுகிறது.

இராசகேசரிவர்மனுடைய 8ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று சிதைந்து காணப்படுகிறது. திருமேற்றளிப் பெருமானடிகளுக்கு வழங் கப்பட்ட திருவிளக்குத் தானம்பற்றிக் குறிப்பிடும் அக் கல்வெட்டில் எண்ணெயை அளப்பதற்கு இராசகேசரி என்ற அளவை வழங்கிவந்த செய்தி குறிப்பிடப்படுகிறது. அது முதல் ஆதித்தன் காலத்ததாகவோ, சுந்தரசோழன் காலத்ததாகவோ கொள்ளப்படுகிறது.

மதுரைகொண்ட பரகேசரியான முதற் பராந்தகனின் 13ஆம் ஆண்டுக் கல்வெட்டும் 38ஆம் ஆண்டுக் கல்வெட்டும் இங்குக் காணப் படுகின்றன. திருமேற்றளிப் பெருமானடிகளுக்குத் திருவிளக்கிற்கும் அவிசுபலி அர்ச்சனுபோகத்திற்கும் நன்கொடைகள் வழங்கப்பட்ட செய்தியை அவை குறிப்பிடுகின்றன. புத்தேரி என்ற ஏரியும் அதற்குக் கீழ் அமைந்த நிலங்கள் சிலவும் கல்வெட்டுகளில் காணப்படு கின்றன.

இராஷ்டிரகூட மன்னன் கன்னர தேவனுடைய 22ஆம் ஆண்டுக் கல்வெட்டு, கிழக்காயிற்றுத் திருவாதி என்பவனால் இக் கோயில் புதுப் பிக்கப்பட்டுக் 'கிழக்காயிற்றுத் திருமேற்றளி' என்று பெயரிடப்பட்ட தாக அறிவிக்கிறது. இம் மன்னனின் 28ஆம் ஆண்டுக் கல்வெட் டொன்று இக் கோயிலின் ஸ்ரீபலித் தொண்டிற்கு ஆத்திரையன் நாரா யணன் வாசுதேவன் என்பவனால் விடப்பட்ட நிவந்தம் பற்றிக் குறிப் பிடுகிறது. இதே வாசுதேவன் என்பவனால் திசை ஆயிரத்து ஐந்நூற்று வர்[1] பெயரால் விளக்கு எரிப்பதற்கு இராசகேசரிவர்மன் சுந்தர சோழன் ஆட்சியின் 17ஆம் ஆண்டில் நன்கொடை வழங்கப்பட்டதாக அறிகிறோம். இந் நாராயணன் வாசுதேவன் 'திசையாயிரத்து ஐந்நூற் றுவர்' என்ற பெரிய வணிகர் குழுவைச் சேர்ந்தவனாவான். இவர்

[1]குறிப்பு: திசை ஆயிரத்தைந்நூற்றுவரைப் பற்றிப் படேவியாதைட்செய்ப்டு என்ற பத்திரிகையில் 13ஆம் தொகுப்பில் கி.பி. 1932-ல் ஸ்ரீ நீலகண்ட சாஸ்திரியார் வரைந்த கட்டுரையையும், கி.பி. 1934-ல் 14ஆம் தொகுப்பில் காணப்படும் எம் கட்டுரை யையும், 1942-43-ல் வெளியிடப்பட்ட இந்தியக் கல்வெட்டறிக்கையின் 146 முதல் 161 வரை எண்ணிடப்பட்டு உள்ள செய்திகளையும் நோக்கி அறிக.

களைப்பற்றிய பழைய குறிப்புகள் விசயாலயன், முதற் பராந்தகன் ஆகியவர் காலத்தைச் சேர்ந்த முனிசந்தைக் கல்வெட்டுகளிலிருந்து அறியப்படுகின்றன. சுமத்ரா தீவிலுள்ள லோபோதீவா என்ற ஊரில் காணப்படும் கி. பி. 1088ஆம் ஆண்டைச் சார்ந்த தமிழ்க் கல்வெட்டு இவர்களுடைய கடலாதிக்கத்தையும் வாணிபப் பெருக்கையும் விரித்துக் கூறுகிறது.

முதல் இராசராசன் காலத்தில் நென்மேலி என்பது 'சளுக்க குலாந்தக சதுர்வேதிமங்கலம்' என்று வழங்கப்பட்டது. இக் கோயி லின் அடிப்பகுதியே பழைமையானதாகக் காணப்படுகிறது. கருவறை யின் தென்புறத்தில் அபராசித பல்லவன் கல்வெட்டைக் காண்கி றோம். மேற்பகுதிகள் யாவும் பின்னர்ப் புதுப்பிக்கப்பட்டவையாகும். இக் கோயிலில் விஷ்ணு, பூதேவி, காளிங்கமர்த்தனர் முதலிய அழகிய, பழங்காலத்தனவாகிய உலோகத் திருமேனிகள் உள்ளன.

## விசயாலயன்

(அ) கோ இளங்கோ முத்தரையர்

| | |
|---|---|
| நியமம் (நேமம்) | 12 of 1899 |
| திருக்கோடிக்காவல் | 39 and 44 of 1930-31 |
| கோயிலடி | 303 D of 1901 |

(ஆ) விசயாலயன்

| | |
|---|---|
| திருநெடுங்களம் | 675 of 1909 |
| திருவெள்ளறை | 81 of 1910 |
| வீரசோழபுரம் | 51 of 1935-36 |
| கீழ்ப்புத்தூர் | 164 of 1915 |
| கீழூர் | 299 of 1902 |
| உத்தரமேரூர் | 4, 14, 34, 35 of 1898 |
| காஞ்சிபுரம் | S II, J. No. 85 |

உத்தம சோழனின் சென்னைப் பொருட்காட்சிசாலைப் பட்டயங் கள், முதல் இராசேந்திரனின் திருவாலங்காட்டுச் செப்பேடுகள், வீர ராசேந்திரனின் கன்னியாகுமரிக் கல்வெட்டு.

## விசயாலயன் காலத்துக் கோயில்கள்

தஞ்சை மாவட்டம்

| | | |
|---|---|---|
| 1. | தஞ்சாவூர் | |
| 2. | திருவீழிமிழலை | 382-449 of 1908 |

திருச்சி மாவட்டம்

| | | |
|---|---|---|
| 3. | நார்த்தாமலை — புதுக் கோட்டைப் பகுதி | 1. Jor. Madras Vols. VII & VIII.<br>2. A manual of the Pudukkottai State Vol. II. pp. 562-9 |
| 4. | காளியாபட்டி ,, | Jor. Madras, Vol. XII Pt. I. |
| 5. | பனங்குடி ,, | Journal of the Madras University Vol. XIII-No. 1. |
| 6. | விரலூர் ,, | A Manual of the Pudukkottai State |
| 7. | விசலூர் ,, | ,, ,, |
| 8. | திருப்பூர் ,, | Jor. Madras. Vol. XII. Pt. IV. |
| 9. | ஈனடி | ,, ,, |
| 10. | ஸ்ரீரங்கம் | Epi. Report 69-73 of 1892; 95 of 1936-7 |
| 11. | திருவெள்ளறை | 512-43 of 1905 & 81-91 of 1910 |

தென் ஆர்க்காடு மாவட்டம்

| | | |
|---|---|---|
| 12. | சிதம்பரம் | Journal of the Annamalai University, Vols. XII and XIII |

வடவார்க்காட்டு மாவட்டம்

| | | |
|---|---|---|
| 13. | காப்பலூர் | Epi.Report 244 to289 of1938-39 |

செங்கற்பட்டு மாவட்டம்

| | | |
|---|---|---|
| 14. | உத்தரமேரூர் | Epi. Report 1-42 and 49-92 of 1898 and 163-197 of 1923 |

15. காஞ்சிபுரம் — 1-37 of 1888; 22-39 of 1890 1-18 and 33-54 of 1893-11-12 of 1895. 40-51 of 1900 etc.

16. கூரம் — S. I. I. Vol. I. Pages 144 etc, 39-A of 1900 and S. I. I. VII, 42.

17. கூளம்பாக்கம் — Epi. Report 173-178 of 1943-44 and Ancient India No.14

சித்தூர் மாவட்டம்

18. நென்மேலி (நெம்மேலி) — 14-15 of 1933

Jor. Journal of Oriental Research, Madras

S. I. I. South Indian Inscriptions

Epi. Report. Epigraphical Report (Southern Circle) Madras State

# 9. இராசகேசரிவர்மன் என்னும் முதல் ஆதித்தன் கி.பி. 871 முதல் 907 முடிய

## முகவுரை

சோழர்களுடைய ஆதிக்கம் விசயாலயன் காலத்திலேயே தொண்டைமண்டலத்தில் திருவெள்ளறை, வீரசோழபுரம், கீழ்ப் புத்தூர், திருக்கோவலூர், உத்தரமேரூர், காஞ்சி என்ற ஊர்கள் வரையில் பரவிய செய்தியை நாம் முன்னமேயே நோக்கியுள்ளோம். பிற்காலப் பல்லவர்களான நிருபதுங்கன், கம்பவர்மன், அபராசிதன் என்பார் பல்லவர் நாட்டில் சோழர்களுடைய ஆதிக்கம் தலைக்காட் டாமல் இருப்பதற்குத் தம்மால் இயன்றவரை தடுத்துப் பார்த்தனர். ஆனால், விசயாலயன் மகன் முதல் ஆதித்தன் காலத்தில் தொண்டை மண்டலம் சிறிது சிறிதாகச் சோழர் ஆட்சிக்குக் கொணரப்பட்டுப் பின் ஒருசேரத் தொண்டைமண்டலம் முழுவதும் சோழ நாட்டின் பகுதியாக இணைக்கப்பட்டு விட்டது.

திருமால்புரத்தில் (திருமாற்பேறு) உத்தமசோழன் என்று கருதப் படும் கோநேரின்மை கொண்டான் என்ற பட்டப் பெயருடைய சோழ மன்னன் ஒருவனுடைய 14ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று 'தொண்டைமானாற் றூர்த்துஞ்சிய உடையாரின்' 21ஆம் ஆண்டில் வழங்கப்பட்ட நிலக்கொடை பற்றிக் குறிப்பிடுகிறது. இத் தொண்டை மானாற்றூர் என்பது தற்போது உள்ள தொண்டைமானாடு என்ற ஊராகும் என்பதும் 'தொண்டைமானாற்றூரில் துஞ்சிய உடையார்' முதல் ஆதித்தன் என்பதும் உளங்கொளத் தக்கன.

பல்லவர்களைத் தொண்டைநாட்டிலிருந்து ஒரு வழியாக அப்புறப் படுத்திய பெருமை முதற் பராந்தகனையே சாரும். எனினும், முதல் ஆதித்தனுடைய 21, 24ஆம் ஆண்டுகளைச் சார்ந்த தக்கோலக் கல்

வெட்டுகளும், 27ஆம் ஆண்டைச் சார்ந்த திருக்கழுக்குன்றக் கல் வெட்டுகளும் தொண்டைமண்டலத்தின் பெரும்பகுதி ஆதித்தன் காலத்திலேயே சோழ நாட்டில் நிரந்தரமாக இணைக்கப்பட்ட செய்தியை அறிவிப்பனவாகும்.

முதல் ஆதித்தன் கொங்கு நாட்டை வென்றான் எனவும் சிறப் பிக்கப்படுகின்றான். சோழ நாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் நடு எல்லையாகிய தென் வெள்ளாற்றைக் கடந்து, பாண்டிய நாட்டிற்குள் புகுந்து, அந் நாட்டுப் பகுதிகளை முதன் முதல் கைப்பற்றத் தொடங் கியவன் முதல் ஆதித்தனேயாவான். திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த புதுக்கோட்டைப் பகுதியில் உள்ள கண்ணனூரில் காணப்படும் ஆதித்தன் கல்வெட்டுகளே, பராந்தகன் காலத்துக்கு முன்பே சோழ நாட்டில் பாண்டிய நாட்டுப் பகுதிகள் சேர்க்கப்பட்டமைக்குத் தக்க சான்றாகின்றன. ஆதித்தன் காலத்துச் சோழ நாட்டின் தென் எல்லை தென்வெள்ளாற்றுக்கு 12 கல் தெற்கிலுள்ள கண்ணனூரைச் சார்ந்த பகுதியாயிற்று. ஆதித்தன் காலத்துச் சோழநாட்டின் வடவெல்லை சித்தூர் மாவட்டத்துக் காளத்திக்கு அண்மையில் உள்ள தொண்டை மாநாட்டைச் சார்ந்த பகுதியாகும். சேலம் கோயம்பத்தூர் மாவட் டங்களின் ஒரு பகுதியான கொங்கு தேசமும், மைசூர் நாட்டின் தென் கிழக்குப் பகுதியிலுள்ள ‘ தழைக்காடு ’ (Talakkad) என்ற பகுதியும் ஆதித்தன் காலத்தில் சோழ நாட்டின் பகுதிகளாக இருந்தன என்று அறிகிறோம்.

பாண்டி நாடு முழுவதையும் வென்று கைக்கொண்டவன் முதற் பராந்தகன் ஆகலின் அவனே ‘மதுரைகொண்ட கோப்பரகேசரி’ என்று வழங்கப்பட்டான்.

சுந்தர சோழனுடைய அன்பில் செப்பேடுகள் முதல் ஆதித்தனைப் பற்றி, ‘ புகழும் பேறும் ஒருசேர அமையப்பெற்ற ஆதித்தன் மன்னர் களுக்குள் இந்திரனாக விளங்கினான். அவன் தோல்வி என்பதையே அறியாத தன் வெற்றிகளுக்கு நினைவுச் சின்னங்களாக, மதியம் மகிழு மாறு கொந்தளித்துப் பொங்கும் அலைகளை உடைய மேலைக் கடலில் தம் கன்னங்களிலிருந்து இடையறாது பெருகிப் பெருக்கெடுத்தோடும் மதநீர் வெள்ளம் சென்று கலக்குமாறு மேம்பட்ட பெருமிதமுடைய யானைகள் வாழுமிடமாவதும் காவிரியின் தோற்றுவாய் ஆவதும் எனப் புகழப்படும் சஹ்யமலை (மேற்கு மலைத் தொடர்ச்சி) யிலிருந்து தொடங்கிக் காவிரியின் இரு கரைகளிலும் பெரிய கற்றளிகள் பல வற்றை வரிசையாக எடுப்பித்துள்ளான் ’ என்று குறிப்பிடுகின்றன.

அன்பில் செப்பேடுகளைப் பதிப்பித்த ஸ்ரீ கோபிநாத ராவ் பின் வருமாறு குறிப்பிடுகிறார்: ‘உண்மையை நோக்குமிடத்துக் காவிரியில்

இரு கரைகளிலும் இராசகேசரிவர்மன் ஆதித்தன் காலத்தில் சிவபெரு மானுக்காக எடுப்பிக்கப்பட்ட கோயில்கள் பல. அவற்றில் சில ஆதித்தன் காலத்துத் தொடங்கப்பட்டு, முதல் பராந்தகன் காலத் திலும் திருப்பணி செய்யப்பட்டனவாகலாம். உதாரணமாக, அந்தநல் லூரிலுள்ள கற்றளி செம்பியன் இருக்குவேள் எனப்பட்ட பூதிபராந் தகனால் எடுப்பிக்கப்பட்டது. திருச்செந்துறையில் தென்னவன் இளங்கோவேளுடைய மகளும், சோழ மன்னனின் மகனான அரிகுல கேசரியின் மனைவியுமான பூதி ஆதித்தபிடாரி என்பாள் சிவபெருமா னுக்காக ஒரு கற்றளி எடுப்பித்தாள். அள்ளூரின் எல்லைக்குள் இருக்கும் பஞ்சநதீசுவரர் கோயிலும், வெளியிலுள்ள பசுபதீஸ்வரர் கோயிலும், நங்கவரத்திலுள்ள சுந்தரேசுவரர் கோயிலும் இக் காலத்தில் எடுப்பிக் கப்பட்ட கற்றளிகளாம். ஆதித்தன் காலத்தனவாகிய இக் கோயில் களுக்கு அவனுடைய புதல்வனும் அவனையடுத்து அரியணையேறியவனு மான முதற் பராந்தகன் காலத்தில் நிவந்தங்கள் வழங்கப்பட்டன. மேலும் திருவையாறு, திருநெய்த்தானம் போன்ற ஊர்களிலிருந்த பழைய செங்கற் கோயில்களும் முதல் ஆதித்தன் காலத்தில் கற்றளிக ளாகப் புதுப்பிக்கப்பட்டன என அறிகிறோம். இக் கோயில்கள் யாவும் காவிரியின் கரைகளிலேயே அமைந்துள்ளன.'

இக் கோயில்களைப்பற்றி விரிவாக ஆராய்ச்சி செய்து, இவற்றின் காலங்களை வரையறுத்துக் கூறியுள்ளோம்.

நீலகண்ட சாஸ்திரியார் தம் விழுமிய நூலாகிய சோழர் வர லாற்றில் ஆதித்தனால் எடுப்பிக்கப்பட்ட கோயில்களை உறுதியாகக் குறிப்பிட முடியவில்லை என்று எழுதியுள்ளார்.

தேவார காலத்தில் காவிரியின் இருமருங்கிலும் சுமார் 190 கோயில்கள் இருந்தனவாக அப் பதிகங்களிலிருந்து கணக்கிட்டறி கிறோம். அவற்றுள் 127 கோயில்கள் காவிரியின் தென்கரையில் உள்ளன. இக் கோயில்களில் எத்தனை கோயில்கள் ஆதித்தன் காலத் தில் எடுப்பிக்கப்பட்டன என்பதை நம்மால் அறுதியிட்டுக் கூற முடியவில்லை.

இத்தகைய சூழ்நிலையில் பண்டைக் கோயில்களைக் கூர்ந்து நோக்கிக் கட்டடக் கலைப்பாணி, கல்வெட்டுகள் முதலிய சான்று களைக் கொண்டு எவை ஆதித்தன் காலத்தனவாகலாம் என்று தேர்ந் தெடுக்க வேண்டியவராயுள்ளோம். இக் காலத்தனவாகக் கிடைக்கக் கூடிய மிகக் குறைந்த ஆதாரங்களைக் கொண்டு 48 கோயில்களை ஆதித்தன்காலக் கோயில்களாக அடுத்த அத்தியாயத்தில் விரித்துக் கூறியுள்ளோம்.

# 10. முதலாம் ஆதித்தன் காலத்துக் கோயில்கள்

## 1. கண்ணனூர்

**(பால) சுப்பிரமணியர் கோயில் :**

முதல் ஆதித்தன் காலத்தனவாகிய பழைய கற்றளிகளில் கண்ண னூரிலுள்ள பாலசுப்பிரமணியர் கோயில் மிகச் சிறந்ததாகும்.

கண்ணனூர் திருச்சி மாவட்டத்துப் புதுக்கோட்டைப் பகுதியி லுள்ள திருமயம் (திருமெய்யம்) தாலுக்காவைச் சார்ந்ததோர் ஊராகும். இது புதுக்கோட்டை நகருக்கு 17 கல் (27·36 கி.மீ.) தென் மேற்கில் அமைந்திருக்கிறது. இக் கிராமத்திலுள்ள குளத்தின் கிழ்க் கரையில் இரண்டு கோயில்கள் அடுத்தடுத்துக் காணப்படுகின்றன. குளக்கரைக்கு மிக அருகில் உள்ள கோயில் பாலசுப்பிரமணியர் கோயி லாகும். மற்றது விஷ்ணு கோயிலாகும். அக் கோயிலிலுள்ள பெருமாள் கல்வெட்டுகளில் 'விருதராச பயங்கர விண்ணகர எம்பெருமான்' என்று குறிப்பிடப்பட்டுள்ளார்.

சுப்பிரமணியருடைய அடிப்படைக் கோயில் 9ஆம் நூற்றாண் டைச் சார்ந்தது. அவ் வடிப்படைக் கோயில் கருவறை அர்த்தமண்ட பம் இவற்றை உள்ளடக்கிய மதிற்சுவர் ஆகியவற்றைக் கொண்ட தாகவே அமைந்திருந்தது. தற்போது பழைய மதிற்சுவரின் அடித் தளமும் வாயிற்படிகளின் தூண்களுமே மதிற்சுவரின் பழைய சின்னங் களாகக் காணப்படுகின்றன.

பிற்காலத்தில், கலைப்பாணியில் சற்று வேறுபட்டதான முக மண்டபமொன்று இணைக்கப்பட்டது. இக் கோயிற் கல்வெட்டு களாகப் பதிப்பித்து வெளியிடப்பட்ட ஒன்பதும் முகமண்டபத்தி லேயே காணப்படுவனவாகும். அவை யாவும் பாண்டிய மன்னர்

களுடைய கல்வெட்டுகளே. அவற்றுள் மிகப் பழைமையானது மதுரையில் கி.பி. 1216ல் அரியணையேறிய மாறவர்மன் சுந்தர பாண்டியனுடைய 3ஆம் ஆண்டைச் சேர்ந்ததாகும். எனவே, இம் முகமண்டபம் 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது எனத் தடையின்றிக் கூறலாம்.

கூர்ந்து நோக்கின விடத்து அர்த்தமண்டபத்து வாயிற்படியின் வெளி முகப்புகள் இரண்டிலும் இரண்டு கல்வெட்டுகள் காணப் பட்டன. அவை வெளியிடப்படாத புதிய கல்வெட்டுகளாம். முக மண்டபம் பிற்காலத்தில் எழுப்பப்பட்டபோது இவ் வெளி முகப்புகள் புதிய கட்டடத்தினுள் பெரும் பகுதி மறைந்துவிட்டதால், இக் கல்வெட்டுகள் முழுமையும் தற்போது காணப்படுமாறில்லை. ஆனல் அக் கல்வெட்டுகளில் படித்துணரப்படுமாறு தற்போது காணப்படும் பகுதி வரலாற்றாசிரியர்களுக்கும், சோழர் கலைகளைப்பற்றிக் கற்பா ருக்கும் மதிப்பிட முடியாத மாணிக்கமாகும். அக் கல்வெட்டுகளில் ஒன்றனுடைய முதலிரண்டு வரிகளில் 'கோவி...கேசரிபன்மர்.' எனக் காணப்படுகிறது. ஐந்தாவது வரி இக் கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனுடைய திருப்பெயரின் முதற் கூறாகிய 'சுப்ரம்' என்பதைக் குறிக்கிறது. இரண்டாவது கல்வெட்டில் இறைவன் பெயர்... 'ப்ரமண்ய தேவர்' எனக் காணப்படுகிறது. மேலும், இறைவனுக்கு ஒரு திருநந்தா விளக்கு வைத்த செய்தியை அக் கல்வெட்டு குறிப்பிடு கிறது. இச் சிதைவுற்ற கல்வெட்டுத் தொடர்களைக் கொண்டு அக் கோயிலில் எழுந்தருளிய இறைவர் சுப்பிரமணிய தேவர் என்பதும், அந் நந்தா விளக்குக் கோவிராசகேசரி வர்மராக அக் காலத்து ஆண்ட மன்னனான முதல் ஆதித்தன் காலத்தது என்பதும் உணரப்படும்.

இராசகேசரி, பரகேசரி என்ற பட்டங்கள் சோழ மன்னர்களால் மாறிமாறித் தரிக்கப்பட்டன. அம் முறையில் விசயாலயன் பரகேசரி என்ற பட்டத்தைக் கொள்ளவே ஆதித்தன் இராசகேசரியானன். ஆதித்தன் தன் காலத்துப் பல கல்வெட்டுகளிலும் இராசகேசரி என்றே வழங்கப்பட்டுள்ளான். இக் கல்வெட்டெழுத்தின் அமைப்பும் ஆதித்தன் காலத்தனவாகிய ஏனைய கல்வெட்டுகளின் எழுத் தமைப்பை ஒத்துள்ளது. சோழ நாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் நடு எல்லையான தென் வெள்ளாற்றுக்குச் சுமார் 12 கல் தெற்கில் அமைந்த கண்ணனூரில் ஆதித்தன் கல்வெட்டுக் காணப்படும் செய்தி பாண்டிநாட்டைக் கைப்பற்றுஞ் செயல் ஆதித்தன் காலத்திலேயே தொடங்கப்பட்டுக் கண்ணனூர் வரையிலுள்ள பகுதியாவது சோழ ருடைய ஆளுகையின்கீழ்க் கொண்டுவரப்பட்ட செய்தியைக் குறிப் பிடுவதாகும். மேலும், ஆதித்தன் மகனான முதற் பராந்தகன் 'மதுரை கொண்ட கோப்பரகேசரி' என்று மதுரை வெற்றியை அடிப்

படையாகக்கொண்டே பெயரிடப்பட்டுள்ளான். இவற்றை நோக்கப் பராந்தகன் தன் தந்தையால் தொடங்கப்பட்ட பாண்டி நாட்டைக் கவருஞ் செயலைத் தொடர்ந்து நடத்தி, அதன் முழுப் பயனையும் கொண்டவன் ஆதல் வேண்டும் என்பது போதருகிறது. எனவே, ஆதித்தன்காலச் சோழ நாட்டின் தெற்கெல்லை தென் வெள்ளாறு அன்று. அதற்குப் பன்னிரண்டு கல் தெற்கிலுள்ள கண்ணனூராக இருக்கவேண்டும் என்று முடிவு செய்கிறோம்.

இக் கண்ணனூர்ச் சுப்பிரமணியர் கோயில் முருகப்பெருமானுக்கென்றே சிறப்பாக அமைக்கப்பெற்ற 'சுவயம்பிரதானக்' கற்றளியாகும்.[1] அதன் கருவறை சதுர வடிவானது. ஒவ்வொரு பக்கத்தின் வெளியளவும் 12 அடி 8 அங்குலமாகும். அதன் சுவர்கள் அகலமாகவும், கால், கலசம், கும்பம், பலகை முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்ட அரைத் தூண்களை உடையனவாகவும் அமைந்திருக்கின்றன. கருவறையோடு இணைந்து காணப்படும் அர்த்த மண்டபம் உட்புறத்தில் எட்டடிப் பக்கம் கொண்ட சதுரமாகக் காட்சியளிக்கிறது. அதன் போதிகைகள் கோண வடிவானவை. உறுதியான கொடுங்கையின் (Cornice) கீழ்ப் பூதகண வரிசையைக் காணலாம். கொடுங்கை வேலைப்பாடமைந்த கூடுகளால் அணி செய்யப்பட்டுள்ளது. கொடுங்கைகளுக்கு மேல் நிற்கும் நிலையிலுள்ள யாளிவரிமானம் காணப்படுகிறது. கருவறையின் வெளிப்புறத்திலுள்ள தேவகோட்டங்களில் தென்புறக் கோட்டத்திலுள்ள தட்சிணாமூர்த்தியின் சிலையே தற்போது காணப்படுகிறது.

இவ் வொருதளக் கற்றளியின் கருவறையின்மேல் அமைந்திருக்கும் விமானம் வட்டமான அடித்தளத்தின்மேல் அமைந்துள்ளது. கிரீவத்தில் உள்ள நான்கு தேவகோட்டங்களும் சிங்கத் தலையால் அலங்கரிக்கப்பட்ட கூடுகளோடு விளங்குகின்றன. அத் தேவகோட்டங்கள் நான்கினுள் இரண்டிலேயே சிலைகள் காணப்படுகின்றன. அவைகளும் காலப்போக்கினால் உருச் சிதைந்து பெயர் உணர முடியாத நிலையில் உள்ளன. கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் முருகப் பெருமானுடைய ஊர்தியாகிய யானையின் சிலைகள் காணப்படுகின்றன. உருண்டை வடிவான சிகரம் அழகான வளைவுகளையும் குவிதல்களையும் பெற்று விளங்குகிறது. உச்சியில் பத்ம பீடமும் இரத்தின பீடமும் காணப்படுகின்றன. மிக்க வேலைப்பாடமைந்த உருண்டை வடிவான ஸ்தூபி சிகரத்திற்கு அணி செய்கிறது.

[1] குறிப்பு: இக் கோயில் பற்றிய விரிவான விளக்கங்கள் சென்னை கீழ்த் திசைக்கலை ஆராய்ச்சி இதழின் 11ஆம் தொகுதியின் நான்காம் பகுதியில் எம்மால் எழுதப் பட்டுள்ளன. Journal of Oriental Research, Madras.

பொதுவாக முருகப் பெருமானுக்குக் கோழிக் கொடியே குறிப்பிடப்படுகிறது. சில சிற்பங்களில் முருகப் பெருமானுடைய திருக்கரத்தில் கோழியே காணப்படுகிறது. முருகனுடைய ஊர்தியாகிய மயில் அவனுக்குப் பின்புறத்தில் சிற்பங்களில் காட்சியளிக்கிறது. ஆனால், சங்க இலக்கியத்தில் முருகப் பெருமான் 'பிணிமுக ஊர்தி ஒண் செய்யோன்'—(புறநானூறு 56) என யானை வாகனமுடையவனாகவும் குறிப்பிடப்படுகிறான். இக் கருத்தைச் சில ஆகமங்களும் புராணங்களும் வலியுறுத்துகின்றன. நமக்குத் தெரிந்த வரையில் முருகப் பெருமான் யானை வாகனமுடையவனாகக் காணப்படும் கோயில் இது ஒன்றேயாகும்.

தற்போது கருவறையில் காணப்படும் சுப்பிரமணியர் உருவம் புதிய சிலையாகும். பழைய சிலை மண்டபத்தில் வைக்கப்பட்டுள்ளது. நின்ற திருக்கோலத்திலுள்ள அவ் வுருவம் 3½ அடி உயரமும் 1 அடி 6 அங்குலம் தோள் அளவும் உடையது. சிலையின் நான்கு திருக்கரங்களில் மேல் நோக்கி உள்ள இரண்டில் ஒன்றில் சக்தி ஆயுதமும் மற்றொன்றில் உருத்திராக்கமாலையும் உள்ளன. கீழ்நோக்கிய வலக்கரம் அபயஹஸ்தமாகவும் இடக்கரம் இடுப்பில் அமைந்தும் காணப்படுகின்றன. மார்பின் குறுக்கே அணியப்படும் சன்னவீரம் என்ற ஆபரணமும் கரண்ட மகுடமும் காணப்படுகின்றன. இச் சிலை மாமல்லபுரத்தில் உள்ள 'பிரம சாஸ்தா' என்று வழங்கப்படும் சுப்பிரமணியர் சிலையைப் பெரும்பாலும் ஒத்திருக்கிறது.

## 2. திருக்கட்டளை

**சுந்தரேசுவரர் கோயில் :**

திருக்கட்டளை என்பது திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த புதுக்கோட்டை நகருக்கு 4 கல் (6·4 கி. மீ.) கிழக்கில் அமைந்துள்ள சிற்றூராகும். இங்கு ஆதித்தன் காலத்துப் பழங் கோயிலொன்று காணப்படுகிறது.

பழைய கல்வெட்டுகளில் இக் கோயில் 'கற்குறிச்சி திருக்கற்றளி' எனவும், இங்கு வீற்றிருக்கும் இறைவன் 'கற்குறிச்சிக் கற்றளிப் பெருமானடிகள்' எனவும் வழங்கப்பட்ட செய்திகொண்டு இவ்வூரின் பழம் பெயர் கற்குறிச்சி என அறிகிறோம். 15ஆம் நூற்றாண்டைச் சார்ந்த விசயநகர மன்னர்களின் கல்வெட்டொன்றில் இவ் வூர்க் கடவுள், 'திருக்கட்டளை ஈசுவரம் உடைய நாயனார்' என்று வழங்கப்படுவது கொண்டு இவ் வூருக்குத் திருக்கட்டளை என்ற பெயர் 15ஆம் நூற்றாண்டை ஒட்டி ஏற்பட்டிருக்கலாம் எனக் கருதுகிறோம். திருக்

கட்டளை என்பது திருக்கற்றளி என்பதன் மரூஉவாகலாம். தற்போது இங்குள்ள கோயில் சுந்தரேசுவரர் கோயில் என வழங்கப்படுகிறது.

கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. கோயிலுக்கு எதிரே மதிற் சுவர்களுக்கு வெளியில் கோயில் திருக்குளம் அமைந்திருக்கிறது. இப்பொழுது தென்புற மதிற்சுவரில் வாயில் அமைத்து அதன் மூலமே கோயிலில் போக்குவரவு நிகழ்த்தி வருகின்றனர்.

இது உபானம் முதல் ஸ்தூபி வரையில் கருங்கல்லாலேயே அமைக்கப்பட்ட இருதளக் கற்றளியாகும் இது கருவறை, அர்த்த மண்டபம், தனியே அமைக்கப்பட்ட அம்மன் கோயில், நடுக் கோயிலைச் சுற்றி அமைக்கப்பட்ட ஏழு பரிவார தேவதைகளின் கோயில்கள். இவற்றை உள்ளடக்கிய மதிற்சுவர் ஆகிய உறுப்பு களைக் கொண்டு விளங்குகிறது. கருவறை, அர்த்தமண்டபம் என்பன வற்றின் சுவர்கள் மிக்க அகலமும் உறுதியும் உடையவை. கருவறையும் அர்த்தமண்டபமும் ஒரே அடிப்படையில் கட்டப்பட்டு இணைந்து தோற்றமளிக்கும் ஒரே காலக் கட்டடங்களாகும். கருவறை, அர்த்த மண்டபம் ஆகியவை கட்டப்பட்ட பல ஆண்டுகளுக்குப்பின் முக மண்டபமும் அம்மன் கோயிலும் ஒரே காலத்தில் எடுப்பிக்கப் பட்டவையாகும். பழைய கோயிற் பகுதியில் காணப்படுங் கல்வெட்டு களில் காலத்தால் மிகப் பிற்பட்டது முதற் குலோத்துங்கன் (கி.பி. 1070—1118) காலத்ததாகும். ஆனால், முகமண்டபத்தில் காணப் படும் மிகப் பழைய கல்வெட்டு மூன்றும் குலோத்துங்கன் (கி.பி. 1178—1216) காலத்ததாகும். ஆகவே, முகமண்டபமும் அம்மன் கோயிலும் சுமார் 100 ஆண்டுகளுக்குப் பின் 11ஆம் நூற்றாண்டின் இறுதியில் கட்டப்பட்டனவாதல் வேண்டும்.

கருவறை சதுர வடிவானது. அது உட்புறம் ஆறடி பக்கம் கொண்ட சதுரமாகவும், வெளிப்புறம் 12 அடி பக்கம் கொண்ட சதுரமாகவும் காணப்படுகிறது. இதனைச் சுற்றி உறுதியான சுவர்கள் உள்ளன. அரைத்தூண்கள் கும்பங்களுக்குக்கீழ் உள்ள மேற் பகுதியில் அழகிய வேலைப்பாடுடையவை. போதிகைகள் வேலைப்பாடற்றுக் கோண வடிவினவாகக் காணப்படுகின்றன. நடுவிலுள்ள அரைத் தூண்களுக்கு இடையே தேவகோட்டங்கள் காணப்படுகின்றன. அவை யாளி வரிமானமும், மகர தோரணங்களும் உடையனவாகும். தென் தேவகோட்டத்தில் திரிபுராந்தகரும், மேலைத் தேவகோட்டத் தில் இலிங்கோத்பவரும், வட தேவ கோட்டத்தில் பிரமனும் காணப் படுகின்றனர். ஒவ்வோர் அரைத் தூணின் உச்சியிலும் கொடுங்கையின் மீது மாவிடத் தலையோடு கூடிய கூடு காணப்படுகிறது. கொடுங் கைக்குமேல் யாளி வரிமானம் உள்ளது.

கருவறையின்மேல் மற்ருெரு தளம் எழுப்பப்பட்டுள்ளது. இதன் முகப்பில் சாலை, கூடம் என்ற உறுப்புகளைக் காணலாம். விமானத் தேவதைக் கோட்டங்கள் வரிசைக்கு மூன்ருக அமைந்துள்ளன. ஓரங்களில் உள்ளவை பட்டையான வடிவமுடையவை. அவை, நான்கு மூலைகளை உடைய நடுவில் பிதுங்கிய சிகரங்களையும், அவற்றின் மேல் ஸ்தூபிகளையும் பெற்றுள்ளன. நடுவில் உள்ள பஞ்சரம் நீண்ட சதுர வடிவுடையது. வண்டிக் கூடு போன்ற கூரை உடையது. நடுவில் சிங்கத் தலையால் அணி செய்யப்பட்டுள்ளது. வட்டமான இரண்டு ஸ்தூபிகளை உடையது. நடுவில் உள்ள பஞ்சரங்களில் தென்புறம் தட்சிணுமூர்த்தியின் சிலையும் மேற்புறம் விஷ்ணு சிலையும் வடபுறம் பிரமன் சிலையும் காணப்படுகின்றன. இவ் விரண்டாம் தளம், கருவறைச் சுவர்கள்மீது எழுப்பப்பட்ட தூண்களாலேயே தாங்கப் பட்டு வருகிறது. இம் மேல்தளத்தை அணி செய்யும் மற்ருெரு கொடுங்கை பக்கங்களில் இரண்டு கூடுகளை உடையது. அதற்குமேல் யாளி வரிமானத்தைக் காணலாம். அதற்குமேல் கிரீவம் அமைக்கப் பட்டுள்ளது.

கிரீவம் ஓரங்களில் அரைத் தூண்களைக் கொண்டுள்ளது. கிரீவத்திலுள்ள தேவகோட்டங்கள் சிங்கத் தலைகளால் அணி செய்யப் பட்டுள்ளன. தெற்கில் தட்சிணுமூர்த்தியும், மேற்கில் வராக மூர்த்தி யும், வடக்கில் பிரமாவும், கிழக்கில் இந்திரனும் தேவகோட்டச் சிலைக ளாகக் காணப்படுகின்றனர். பிரஸ்தரத்தின் நான்கு மூலைகளிலும் நான்கு நந்திச் சிலைகளைக் காண்கிருேம்.

கிரீவம், சிகரம், ஸ்தூபி என்பன யாவும் சதுர வடிவானவை. சிகரம் நடுவில் பிதுக்கங்கொண்டு சிற்ப வேலைப்பாட்டுடன் மிளிர்கிறது. இக் கோயில் கட்டடம் முழுமையும் கருங்கல்லால் ஆகியதே.

இக் கோயிலின் தனிச் சிறப்பு, இது பழுதுபடாத பரிவார தேவதைகளின் ஆலயங்களைக் கொண்டிருப்பதே யாம். இங்குள்ள ஏழு பரிவார தேவதை கோயில்களிலும் சூரியன், சப்தமாதர்கள், கணேசன், சுப்பிரமணியன், சேட்டை, சந்திரன், சண்டீசன் என்ற ஏழு தேவதைகள் உரிய இடங்களில் பிரதிட்டிப்பிக்கப்பட்டுள்ளன. சப்தமாதர் கோயில் நீண்ட சதுர வடிவானது. வண்டிக்கூடு போன்ற கூரையுடையது. சூரியனுடைய சிலை இடக்கரம் இடுப்பில் வைத்து வலக்கரம் அபயமளிக்கும் நிலையில் காட்சி யளிக்கிறது. இச்சிலை தனிச் சிறப்புடையது. ஏனைய இடங்களிலுள்ள சூரிய தேவதையின் சிலைகள் கைகளில் தாமரைப் பூக்களை வைத்திருக்கும் நிலையிலேயே காணப்படு கின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

முதல் பராந்தகன் காலத்ததாகிய எறும்பூர்க் கல்வெட்டு, மூலக் கோயிலைச் சுற்றி எட்டுப் பரிவார தேவதை கோயில்கள் இருந்தன என்ற செய்தியை வெளியிடுகிறது. ஏறக்குறைய அதே காலத்ததாகிய கொடும்பாளூர் முசுகுந்தேசுவரர் கோயில் எட்டாவது பரிவார தேவதையின் கோயில், பைரவர் கோயில் என்பதனையும் அறிவிக் கிறது.

இக் கோயிலில் 12 கல்வெட்டுகள் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று சிதைந்துவிட்டது. எஞ்சிய பதினொன்றில் எட்டுச் சோழருடையன, ஒன்று பாண்டியருடையது, இரண்டு விசயநகர மன்னர் காலத்தவை. பண்டைய கல்வெட்டுகளில் மத்தியக் கோயிலின் தென் சுவரில் உள்ள இரண்டு, பரகேசரிவர்மன் ஒருவனு டைய இரண்டாம் ஆண்டையும் ஒன்பதாம் ஆண்டையும் சார்ந்தவை. அவை பரகேசரிவர்மருள் விசயாலயன் காலத்தனவா அல்லது முதற் பராந்தகன் காலத்தனவா என்பதை அறுதியிட்டுக் கூற முடியவில்லை. விசயாலயன் காலத்தில் திருக்கட்டளைப் பகுதியை அடுத்த பிரதேசம் நிருபதுங்கன் ஆளுகையின்கீழ் இருந்த செய்தி நிருபதுங்கனுடைய நார்த்தாமலைக் கல்வெட்டால் உணரப்படுவதால் இவை விசயாலயன் காலத்தன என்று கொள்வது பொருத்தமுடைய செய்தியன்று. எனவே, இவை முதற் பராந்தகன் காலத்தன என்றே கொள்ள வேண்டியவராக உள்ளோம். முதற் பராந்தகனுடைய சில கல் வெட்டுகள் இம் மத்தியக் கோயிலின் தென் சுவரில் 'மதுரை கொண்ட பரகேசரி' என்ற அவன் வெற்றி விருதோடு காணப் படுவதும், இப் பெயர் விளக்கமில்லாக் கல்வெட்டுகளை முதற் பராந்தகனுடையனவாக முடிவு செய்ய உதவுகிறது. இராசகேசரி வர்மன் ஒருவனுடைய மூன்றும் ஆண்டுக் கல்வெட்டொன்று (வட சுவரிலுள்ள எண் 21, புதுக்கோட்டைக் கல்வெட்டு) விசயாலயன் மகனும் முதற் பராந்தகன் தந்தையுமான முதல் ஆதித்தன் காலத்துக் கல்வெட்டெழுத்தோடு பொருந்துவதாக அமைந்துள்ளது. அதனைக் கொண்டும் இக் கோயிலின் அமைப்பைக் கொண்டும் இது ஆதித்தன் காலமான ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் எடுப்பிக்கப் பட்டது என்று முடிவு செய்யலாம்.

இப் பகுதியைப் பதினைந்தாம் நூற்றாண்டில் ஆண்ட விசயநகர மன்னரான மல்லிகார்ச்சுனருடைய கல்வெட்டொன்று—இக் கோயி லுக்கு வழங்கப்பட்ட நிலக்கொடை ஒன்றுபற்றிக் குறிப்பிட்டு, அச் செய்தி கோயிலில் பொறிக்கப்படவேண்டும் எனவும், அது செப்பேட் டைப் போலவே மூல ஆதாரமாகக் கருதப்படவேண்டும் எனவும் ஆணையிடப்பட்ட செய்தியையும் குறிப்பிடுகிறது.

இத் திருக்கட்டளைக் கோயில் பல செய்திகளில் இன்றியமையாத தாகும். இது உபானுதி ஸ்தூபி வரையில் கருங்கல்லாலேயே கட்டப் பட்டது. தளங்களிலும் கிரீவத்திலும் தேவகோட்டங்கள் காணப் படுகின்றன. பொதுவாகக் கருவறையின் தென்புற வெளிச் சுவரி லுள்ள தேவகோட்டத்தில் தட்சிணாமூர்த்தியின் சிலையே தென்னாட்டுச் சிவன் கோயில்களில் காணப்படுவதாகும். அதற்கு மாறாக இங்கு வேறொரு சிலை காணப்படுகிறது. அது திரிபுராந்தகரின் நின்ற திருக் கோலமாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. இரண்டாம் தளத்தின் தென்புறத் தேவகோட்டத்தில் காணப்படும் பிட்சாடணமூர்த்தியின் சிலை குறிப்பிடத்தக்கது. திரிபுராந்தகர், பிட்சாடணர் முதலிய சிவபெருமானுடைய திருக்கோலங்களை விளக்கும் வடிவங்கள் பிற் காலத்தில் வெளிப்புற வாயில்களின்மேல் அமைக்கப்படும் கோபுரங் களில் இடம் பெறலாயின. பரிவார தேவதைகளின் எட்டுக் கோயில் களில் ஏழு கோயில்கள் தேவதைகளோடு வடிவழியாது அமைந் திருப்பது இக் கோயிலின் தனிச் சிறப்பாகும். திராவிடக் கலைகளில் கட்டடக் கலை வளர்ச்சிபற்றி அறியலுறுவாருக்கு இக் கோயில் பெரு விருந்தாகும்.[1]

### விமான தேவதைகள்

| | தெற்கு | மேற்கு | வடக்கு | கிழக்கு |
|---|---|---|---|---|
| முதல் தளம் | திரிபுராந்தகர் (அல்லது) கிராதார்ச்சுன மூர்த்தி | இலிங்கோத்பவர் | பிரமன் | |
| இரண்டாம் தளம் | பிட்சாடணர் | விஷ்ணு | பிரமன் | |
| கிரீவம் | தட்சிணாமூர்த்தி | வராக மூர்த்தி | பிரமன் | இந்திரன் |

## 3. திருச்செந்துறை

**சந்திரசேகரர் கோயில் :**

திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த திருச்செந்துறை காவிரி யாற்றின் தென்கரையில் திருச்சிக்கு 6½ கல் (10·4 கி.மீ.) தொலை

[1]குறிப்பு: சென்னை, கீழ்க்கலைத் துறை ஆராய்ச்சி இதழின் பத்தாம் தொகுதி மூன்றாம் பிரிவில் இக் கோயில்பற்றி யாம் வரைந்துள்ள விரிவான விவரங்களை அறிய லாம்.

விலும் எலமனூர்ப் புகைவண்டி நிலையத்திலிருந்து 3 கல் (5 கி.மீ.) தொலைவிலும் உள்ளது இங்குள்ள பழைய சோழர் கோயில் தற்போது சந்திரசேகரர் கோயில் என்று வழங்கப்படுகிறது. முன்பு இக் கோயில் 'திருச்செந்துறைப் பெருமானடிகள்' என்று வழங்கப் பட்டது. இக் கோயில் மதிலுக்குள் வளர்ந்துள்ள பலா மரங்களைப் பற்றி ஓர் ஐதிகம் கூறப்படுகிறது. இவற்றின் பழங்கள் கடவுளுக்கு நிவேதனம் செய்யப்பட்டபின் காவிரியில் எறியப்படுகின்றன. இப் பழங்களைத் தின்றால் வயிற்றுவலி ஏற்படும் என்று கூறுகிறார்கள்.

இக் கோயிற் சுவர்களில் உள்ள கல்வெட்டுகள் சோழர் காலம் முழுவதும் அடக்கியுள்ளன. ப்ண்டைய சோழர் கல்வெட்டுகளில் வேறு அடைமொழிகளில்லாத இராசகேசரிவர்மன் கல்வெட்டுகள் நான்கும், பரகேசரிவர்மன் கல்வெட்டுகள் 21-ம், மதுரைகொண்ட பரகேசரியான முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகள் மூன்றும் காணப்படுகின்றன.

பரகேசரியின் கல்வெட்டுகளில் மிக முக்கியமானது அவனுடைய 3ஆம் ஆண்டுக் கல்வெட்டேயாம். அது ஈசானமங்கல பிரம தேயத்தில் அமைந்துள்ள திருச்செந்துறை மகாதேவர் திருக் கோயிலைத் தென்னவன் இளங்கோ வேளாரின் மகளாரும் அரிகுல கேசரியாரின் தேவியாருமான பூதி ஆதிச்சபிடாரியார் கற்றளியாக எடுப்பித்த செய்தியைக் குறிப்பிடுகிறது. அரிகுலகேசரி என்பவன் பரகேசரி வர்மனான சோழப்பெருமானடிகள் எனப்படும் முதற் பராந் தகனின் மகனாவான். அக் கல்வெட்டின் தேவைப்பட்ட பகுதி பின் வருமாறு:

'ஸ்வஸ்தி ஸ்ரீ கோ பரகேசரி வர்மற்கு யாண்டு மூன்றாவது இவ் வாண்டு சோழப் பெருமானடிகள் மகனார் அரிகுலகேசரியார் தேவியார் தென்னவன் இளங்கோவேளார் மகளார் பூதி ஆதிச்ச பிடாரியார் பிரமதேயம் ஈசான மங்கலத்துத் திருச்செந்துறை தாம் எடுப்பித்த கற்றளிப் பெருமானடிகளுக்குச் சென்னுடைத் திருவமு துக்கு முதலாகக் குடுத்த விடேல் விடுகுக் கல்லால் துளைப்பொன் அறுபதின் கழஞ்சு.'

இக் கல்வெட்டு அறுபது கழஞ்சுப் பொன்னின் வட்டியைக் கொண்டு இறைவனுக்கு நிவேதனத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. முதற் பராந்தகன் மகனான அரிகுல கேசரி கண்டராதித்தனுக்குப் பிறகு அரியணையேறியவனாவான். அரிகுலகேசரி சுந்தர சோழனுக்குத் தந்தையும் இராசராசனுக்குப் பாட்டனுமாவான். அவன் தேவியான பூதி ஆதிச்சபிடாரியாலேயே



9. பாலசுப்பிரமண்யர்,
கண்ணனூர்



10. சுந்தரேசுவரர்
கோயில்,
திருக்கட்டளை



11. திரிபுராந்தகர், திருக்கட்டளை



12. ஜேஷ்டா,
திருக்கட்டளை

இக் கோயில் கற்றளியாகப் புதுப்பிக்கப்பட்டது. தென்னிந்தியக் கல்வெட்டின் மூன்றும் தொகுதியின் பதிப்பாசிரியர் இக் கல்வெட்டு பராந்தகன் காலத்தது. ஆகவே, இக் கோயில் அவன் காலத்தில் கட்டப்பட்டது என்று குறிப்பிடுகிறார். இக் கோயில் எடுப்பிக்கப்பட்ட காலத்தை வரையறுப்பதன்முன் கீழ்க்கண்ட ஆதாரங்களைக் கூர்ந்து நோக்க வேண்டும்.

பரகேசரி வர்மன் மூன்றும் ஆண்டுக் கல்வெட்டில் உள்ள 'தாம் எடுப்பித்த' என்ற சொற்றொடர் இக் கற்றளி அதற்கு முன்பே எடுப் பிக்கப்பட்ட செய்தியைக் குறிக்கிறது. இக் கோயிலிலுள்ள பரகேசரி வர்மனின் இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டுகள் இரண்டில் இக் கோயில் கற்றளி என்றே குறிக்கப்படுவதால் இது கற்றளியாக்கப் பட்ட காலம் அதற்கு முற்பட்டது என்பது போதருகிறது. இக் கல் வெட்டுகளும் பூதி ஆதிச்சபிடாரியாலேயே வழங்கப்பட்டன. இக் கல்வெட்டுகளில் புள்ளிகள் உள்ளன. மெய்யெழுத்துகளில் புள்ளி யிடுவது பழைய கல்வெட்டுகளிலேயே காணப்படும் இயல்பாகும். அங்ஙனம் இருந்தும் அரசியல் கல்வெட்டிலாக்காவினர் இக் கல்வெட்டு களை உத்தம சோழன் அல்லது இரண்டாம் ஆதித்தன் காலத்தைச் சேர்ந்தவை என்று முடிவு செய்துள்ளனர்.

பூதி ஆதிச்சபிடாரி பராந்தகன் காலம், உத்தம சோழன் காலம் ஆகிய இருவர் காலத்திலும் வாழ்ந்திருக்க முடியாது. ஆதலின், அரசியலார் கல்வெட்டிலாக்காவினர் கூற்றுப் பொருத்தமானதாக இல்லை.

மேலும், இங்குக் காணப்படும் இராசகேசரிவர்மனுடைய நான்கு கல்வெட்டுகளில் இரண்டு 20, 23 என்ற நீண்ட ஆட்சியாண்டைக் கொண்டிருப்பதால் இவை முதல் ஆதித்தனுக்குரியனவேயாம். பரகேசரிவர்மனின் மூன்றும் ஆட்சியாண்டில் குறிப்பிடப்படும் பூதி ஆதிச்சபிடாரி இராசகேசரி வர்மனின் 23ஆம் ஆண்டுக் கல்வெட் டிலும் குறிப்பிடப்படுகிறாள். அவள் ஈசானமங்கலத்து மகாசபையா ரிடம் 5 கழஞ்சு பொன் கொடுத்து 6 மா நிலத்தை விலைக்கு வாங்கி இக் கோயில் உவச்சர் (மேளம் வாசிப்பவர்) களின் பராமரிப்புக்காக மானியம் விட்ட செய்தி இக் கல்வெட்டில் காணப்படுவதால், இக் கற்றளி முதல் ஆதித்தனின் ஆட்சிப் பிற்பகுதியில் அவன் 23ஆம் ஆண்டுக்கு முன்னரே எடுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

பூதி ஆதிச்சபிடாரியின் நன்கொடைகள் பரகேசரிவர்மனுடைய இரண்டாம் ஆண்டிலிருந்து 14ஆம் ஆண்டுவரை காணப்படுகின்றன.

பரகேசரி வர்மனின் 3ஆம் ஆண்டுக் கல்வெட்டைப் போலவே, இவை யாவும் முதற் பராந்தகன் காலத்தனவே என்று கொள்ளவேண்டும். மேலும், ஈசான மங்கலத்துப் பாரதாயன் நக்கன் கண்டன் என்பான் பரகேசரிவர்மனின் 28ஆம் ஆண்டுக் கல்வெட்டில் குறிக்கப்படுகிருன். அவன் இக் கோயிலுக்கு நன்கொடை வழங்கிய செய்தி மூன்று கல் வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை மூன்றும் மதுரை கொண்ட பரகேசரியின் 12, 16, 20ஆம் ஆண்டைச் சேர்ந்தவை. அவை நந்தாவிளக்கு எரிப்பதற்கும், இறைவனுடைய அபிடேகத் திற்குக் காவிரியாற்று நீர் கொணர்வதற்கும் விடப்பட்ட நன்கொடை களைக் குறிப்பனவாம். பாரதாயனுடைய பெயர் காணப்படும் மூன்று கல்வெட்டுகள் மதுரைகொண்ட பரகேசரியுடையனவாகவே, அவன் பெயர் காணப்படும். பரகேசரிவர்மனின் 28ஆம் ஆண்டுக் கல் வெட்டும் மதுரைகொண்ட பரகேசரியான முதற் பராந்தகனுடை யதே என்று உறுதி செய்யலாம். ஆனுல், பராந்தகனுடைய 28ஆம் ஆண்டாகிய ஆட்சிப் பிற்பகுதியின் கல்வெட்டில் 'மதுரைகொண்ட' என்ற விருது காணப்படாமை குறித்து ஐயுறலாம். குடுமியான் மலையில் உள்ள முதற் பராந்தகனுடைய 38ஆம் ஆண்டுக் கல்வெட்டி லேயே 'மதுரைகொண்ட' என்ற விருது காணப்படாமையால், இங்ஙனம் பராந்தகனுடைய ஆட்சியின் பிற்பகுதியில் தோன்றிய கல் வெட்டுகளும் 'மதுரைகொண்ட' என்ற விருது இன்றிக் காணப் படுவது புதுமையன்று என்பது உணரப்படும்.

**புலாலய விண்ணகரம்:**

இவ் வூர்ச் சந்திரசேகரர் கோயிலில் அமைக்கப்பட்ட விசுவநாதர் ஆலயத்தில் இராசகேசரிவர்மனுடைய 20ஆம் ஆண்டுக் கல்வெட் டொன்று காணப்படுகிறது. இவ்வூரின் மேற்பகுதியில் மேற்றளி என்ற பெயருடைய விஷ்ணு கோயிலிருந்த செய்தியை அது குறிப்பிடுகிறது. பெரும்பாலும் விஷ்ணு கோயில்கள் ஊர்களின் மேற்குப் புறத்தில் அமைக்கப்படுவதால், அவை திருமேற்றளிகள் என்றே வழங்கப்படு கின்றன. தஞ்சாவூரைச் சார்ந்த மாணிக்க வணியன் கருநாடக புலாலய செட்டி என்பான் இக் கோயிலைக் கற்றளியாகப் புதுப்பித்து இவ்வூர்ச் சபையாரிடம் 100 பட்டி நிலத்தை இக் கோயில் செலவு களுக்காக விலைக்கு வாங்கி மானியமாக விட்டான். இக் கோயில் அவன் பெயரால் புலாலய விண்ணகரம் என்று வழங்கப்பட்ட செய்தி கீழ்க்கண்ட கல்வெட்டுப் பகுதியால் உணரப்படுகிறது.

'இவ்வூர்த் திருமேற்றளியான ஸ்ரீ கோயிலைப் புலாலய விண் ணகரம் என்னும் பேரால் கற்றளி எடுப்பித்துத் தேவரைப் பிர திட்டை செய்வித்த புலாலய செட்டி.'

இக் கல்வெட்டும் சந்திரசேகரர் கோயில் முதல் ஆதித்தன் காலத்தது என்று முடிவு செய்ய ஆதாரமாக உதவுவதாகும்.

திருச்செந்துறைச் சந்திரசேகரர் கோயிலில் உள்ள சிறு கோயிலில் காணப்படும் இராசகேசரிவர்மனுடைய உயரிய ஆட்சி யாண்டான 20ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டு, இராசகேசரிவர்ம னுடைய 23ஆம் ஆண்டுக் கல்வெட்டில் காணப்படும் பூதி ஆதிச்ச பிடாரியார் பரகேசரிவர்மனுடைய 14ஆம் ஆண்டுவரை உள்ள பல கல்வெட்டுகளிலும் இடம் பெற்றிருக்கும் செய்தி, பரகேசரிவர்ம னுடைய இரண்டாம் ஆண்டிலேயே இக் கோயில் கற்றளியாகக் குறிப் பிடப்பட்ட செய்தி ஆகியவற்றைக் கொண்டு இச் சிவன் கோயில் முதற் பராந்தகன் காலத்தில் கல்லால் கட்டப்பட்டது அன்று. அவன் தந்தையான முதல் ஆதித்தனுடைய 23ஆம் ஆண்டிற்குச் சற்று முற் பட்டே கற்றளியாக்கப்பட்டிருக்கவேண்டும் என்று முடிவு செய்யலாம்.

இவ்வூர் திருமேற்றளி விண்ணகரமும் ஏறத்தாழ இக் காலத்தி லேயே கற்றளியாகப் புதுப்பிக்கப்பட்டிருக்கலாம். ஆனால், அதன் சுவடு கூடத் தற்போது காணப்படுமாறில்லை.

பழங் கல்வெட்டுகளில் இவ் வூர்ச் சிவபெருமான் உறையூர்க் கூற்றத்துப் பிரமதேயமான ஈசானமங்கலத்துத் திருச்செந்துறைக் கற்றளிப் பரமேசுவரர் அல்லது பெருமானடிகள் என்று வழங்கப்படு கிறார். பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் திருச்செந்துறை ஆகிய ஈசானமங்கலம்—கேரளாந்தக அல்லது இராசமகேந்திர வளநாட்டு விருதராச பயங்கர சதுர்வேதி மங்கலம் என்று வழங்கப்படுவதாயிற்று.

இவ் விருதளக் கற்றளியின் கருவறை சதுரமானது. அதன் சுவர் ஒவ்வொன்றும் வெளிப்புறத்தில் 17½ அடியும் உட்புறம் 7 அடியும் உள்ளது. அதன் சுவர்கள் 5 அடி கனமுடையவை. கருவறைக்கு முன் புறம் அர்த்தமண்டபம் 17½ அடி நீண்டிருக்கிறது. அதை உட்புறம் நடுவில் நான்கு தூண்களும் ஒவ்வொரு பக்கமும் இரண்டு அரைத் தூண்களும் தாங்கி நிற்கின்றன. தூண்களின் போதிகைகளும் கும்பங் களும் மேதக்க சிற்ப வேலைப்பாடுடையவை.

அதிஷ்டானத்தின்மேல் பத்ம வரிசைகளும், குமுத வரிசைகளும் அவற்றின்மேல் யாளி வரிமானமும் உள்ளன. கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையும் மேலே யாளி வரிமானமும் உள்ளன. கொடுங் கைகளின் ஓரங்கள் வட்டங்களால் அணி செய்யப்பட்டுள்ளன.

கருவறை இரு தளங்களை உடையது. கொடுங்கையின் மேற்பாகம் சாலைகளாலும் கூடங்களாலும் அணி செய்யப்பட்டுள்ளது.

கிரீவம் சதுரமானது. சிகரம் சதுரமாகவும் நடுவில் பிதுங்கியும் காணப்படுகிறது.

கருவறைச் சுவர்களிலுள்ள தேவ கோட்டங்களில் தென்புறம் ரிஷபவாகன தேவர் சிலையும் மேற்புறம் விஷ்ணு சிலையும் வடபுறம் பிரமன் சிலையும் காணப்படுகின்றன. சமீப காலத்தில் ரிஷப வாகன தேவர் சிலைக்குமுன் புதிய தட்சிணாமூர்த்தி சிலையொன்று நிறுவப்பட்டுள்ளது.

## 4. லால்குடி

**சப்தரிஷீசுவரர் கோயில் :**

லால்குடி திருச்சியிலிருந்து அரியலூர் செல்லும் பெருவழியில் திருச்சியிலிருந்து 13 கல் (21 கி.மீ.) தொலைவில் உள்ளது. லால்குடி என்பதற்குச் சிவப்புக் கோயில் என்பது பொருள். இங்குள்ள சிவன் கோயிலின் கோபுரம் செந்நிறமாகக் காணப்படுவதுகொண்டு இவ்வூர் முகமதியர்களால் லால்குடி என்று வழங்கப்பட்டது. இதன் பழைய பெயர் திருத்தவத்துறை என்பது. ஒரு காலத்தில் முருகனால் சபிக்கப்பட்ட அத்திரி, பிருகு, புலத்தியர், வசிட்டர், கௌதமர், அங்கிரசர், மரீசி என்ற முனிவர் எழுவரும் இங்குத் தவம் செய்து இங்குள்ள சிவபெருமானை வழிபட்டுச் சாபவிமோசனம் பெற்றனர். இவ்வாறு முனிவர் எழுவரால் வணங்கப்பெற்ற காரணத்தால் இங்குள்ள இறைவர் சப்தரிஷீசுவரர் என்று வழங்கப்பட்டார். இங்குள்ள இறைவர் பெயர் கல்வெட்டுகளில் 'திருத்தவத்துறை ஈசுவர பட்டாரகர்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இலக்குமி இங்குள்ள சிவபெருமானை வழிபட்டு, அவன் அருளால் திருமாலை மணந்தாள். காளி, பயிரவி என்ற பெயருடன் இவ் வூரில் சிவபெருமானுடன் நாட்டியத்தில் போட்டியிட்டுத் தோற்றாள். விஷ்ணு சிவபெருமானைக் குறித்துத் தவமியற்றிப் பூசனை செய்து சக்கராயுதம் பெற்ற இடமும் இதுவே. மாளவ நாட்டு மன்னன் ஒருவன் இவ் வூர் இறைவனை மனம் மொழி மெய்களால் வழிபட்டுத் தனக்கு ஏற்பட்ட குட்டநோய் நீங்கப் பெற்று நல்லுடல் பெற்றான். அவன் வேதங்களில் வல்ல அந்தணர் பலரை இவ்வூரில் குடியேற்றுவித்து அவர்களைக் கொண்டு இத் திருக்கோயிலில் வேத கோஷம் இடையறாது முழங்குமாறு செய்தான்.

இங்கு மூன்றாம் நந்திவர்மனுடைய 5ஆம் ஆண்டு (கி.பி. 840), நிருபதுங்கனுடைய 2ஆம் ஆண்டு (கி.பி. 857), மாறன் சடையனான வரகுண மகாராசனுடைய 13ஆம் ஆண்டு (கி.பி. 875) ஆகியவற்றைச் சேர்ந்த பழைய கல்வெட்டுகள் காணப்படுகின்றன. தற்பொழுது காணப்படும் கோயில் முற்பட்ட சோழர் காலத்தில்

எடுப்பிக்கப்பட்டதாகும். முன்பு நாம் குறிப்பிட்டுள்ள பழைய கல்வெட்டுகள் புதுப்பிக்கப்பட்ட சோழர் காலக் கோயிலில் மீண்டும் பொறிக்கப்பட்டனவாதல் வேண்டும். இங்குள்ள பரகேசரியின் பெயரால் அமைந்துள்ள கல்வெட்டுகளில் ஏதாவது விசயாலயன் காலத்ததாக இருக்கலாம். ஆனுல், அதுபற்றி உறுதியாக ஒன்றும் கூற இயலவில்லே. இராசகேசரிவர்மனின் 27 ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று காணப்படுகிறது. அதன் எழுத்தின் பாணியையும் ஆட்சியாண்டின் உயர்வையும் நோக்கி அது முதல் ஆதித்தன் காலத்ததே என்று முடிவு செய்யலாம். தற்போதுள்ள இக் கற்றளி கி.பி. 898-க்குச் சற்று முற்பட்ட காலத்தில் எடுப்பிக்கப்பட்டதாதல் வேண்டும்.

இங்குப் பரகேசரிவர்மனுடைய 5ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் இரண்டு காணப்படுகின்றன. இவை முதற் பராந்தகன் காலத்தனவாகலாம். இவற்றுள் முதற் கல்வெட்டு அடிகள் பழவேட்டரையன் குமரன் மறவன் என்பான் வழங்கிய பொற்கொடை பற்றியதாகும். இதே பழுவேட்டரையன் கிழையூரில் (மேலப்பழுவூர்) உள்ள திருக்கந்தர்ப்ப ஈசுவரத்திற்கு இராசகேசரிவர்மனுடைய 22ஆம் ஆண்டில் நிவந்தம் ஒன்று வழங்கியுள்ளான். (See my Four Chola Temples) இங்குள்ள மற்ெருரு கல்வெட்டு முதற்பராந்தகன் தேவியும் இராசாதித்தன் தாயுமான கோக்கிழானடிகள் ஒரு நந்தாவிளக்கு எரிப்பதற்காக வைத்த பொற்கொடைபற்றி இயம்புகிறது.

‘மதுரைகொண்ட’ என்ற அடைமொழியோடு கூடிய முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகள் அவனுடைய 20ஆம் ஆண்டு முதல் 40ஆம் ஆண்டுவரை காணப்படுகின்றன. இம் மன்னனின் 31ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று திருத்தவத்துறை ஈசுவர பட்டாரகருக்கு, இடையாற்று நாட்டுப் பராந்தகபுரத்திலுள்ள அரிஞ்சிகையீசுவரத்து நித்த வீர சோழ அணுக்கர் குழுவினருள் ஒருவர் நித்யாவிநீதமங்கலத்துச் சபையாரிடமிருந்து நிலத்தை விலேக்கு வாங்கி நன்கொடையாக வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

அம் மன்னனின் 37ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று சிவகோசாரி பிடாரன் தேச வித்தங்கன் என்பான் நிலம் ஒன்றை விலேக்கு வாங்கிக் கோயிலில் நாள்தோறும் மும்முறை தேவாரம் (திருப்பதியம்) விண்ணப்பிக்கும் அந்தணர்களுக்காக நிவந்தம் வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. இதே தேசவித்தங்கன் தான் பண்டு வழங்கிய நிலக்கொடையின் வருமானம் போதாது என்பதை உணர்ந்து இராசகேசரியின் (கண்டராதித்தன்) மூன்ரும் ஆண்டில் மீண்டும் ஒரு நிலத்தை நன்கொடை அளித்தான் என அறிகிரேும்.

இராசகேசரிவர்மனின் 13ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று திருத்தவத்துறைப் பெருமானடிகளுக்கு மன்னருடைய சகோதரியா ரான நங்கை வரகுணப் பெருமானுரால் ஒரு நந்தா விளக்கிற்காக நிலக்கொடை வழங்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டு சுந்தர சோழனுடைய காலத்தது எனலாம். திருநெய்த் தானத்துக் கல்வெட்டொன்று சுந்தர சோழனுக்கடங்கிய குறுநில மன்னரான கொடும்பாளூர் விக்கிரமகேசரி என்று கருதப்படும் பராந்தக இளங்கோவேளாரின் தேவியாராக நங்கை வரகுணப் பெரு மானுரைக் குறிப்பிடுவது உளங்கொளத்தக்கது.

உத்தம சோழனுடைய 16ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று வடகரை மழ நாட்டைச் சார்ந்த நகர்வலக்கை என்ற ஊரில் உள்ள நகரத் திருமழவனூர் பட்டாரகர் கோயிலுக்கு வழங்கப்பட்ட கொடை ஒன்றைக் குறிப்பிடுகிறது.

இராசகேசரிவர்மன் முதல் இராசராசன் காலத்தனவாகக் கருதப் படும் கல்வெட்டுகள் இரண்டு இக் கோயிலில் காணப்படுகின்றன. அவற்றுள் மூன்றும் ஆண்டுக் கல்வெட்டு ஒரு பூந்தோட்டம் அமைப்ப தற்கு விடப்பட்ட மானியம்பற்றிக் குறிப்பிடுகிறது. ஐந்தாம் ஆண்டுக் கல்வெட்டு திருத்துவத்தறைக்குப் பக்கத்தில் அமைந்த பிரமதேய மான மணக்கால் என்ற ஊரைச் சார்ந்த திருநச்சியூர் என்ற சிற்றூரி லுள்ள மகாதேவருக்கு ஐப்பசி விஷு புண்ணிய காலத்தில் 108 குடம் புனித நீரால் திருமஞ்சனம் செய்வித்தற்குரிய செலவுகளுக்காகப் பொற்கொடை வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. முதல் இரா சாதிராசனுடைய 33ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று திருத்தவத் துறைக் கோயிலிலுள்ள உமாபரமேசுவரியாகிய அம்பிகைக்கு அவிசுபலி அர்ச்சனு போகத்திற்காக வழங்கப்பட்ட கொடைபற்றிய விவரத்தை வெளியிடுகிறது.

இக் கோயில் மேற்குப் பார்த்த சந்நிதியை உடையது. கருவறை சதுரமானது. அதன் ஒவ்வொரு பக்கமும் 16 அடி 4 அங்குல அள வுடையது. நடுவில் அந்தராளம் இருக்கிறது. அர்த்தமண்டபம் அதற்கு வெளியே 12 அடி 10 அங்குலம் முன் நோக்கி நீண்டுள்ளது. அதற்கும் வெளியே காட்சியளிக்கும் முகமண்டபம் 36 அடி நீளமும் 32 அடி அகலமும் உடையது.

இது வட்டமான சிகரத்தை உடைய ஒருதளக் கற்றளி. அதிஷ் டானம் வேலைப்பாடின்றி அமைந்துள்ளது. அதன்மேல் உபானம், பத்மம், குமுதம், கண்டம், கபோதம், யாளியும், வீரர்களைத் தம் மேற்கொண்ட யானைகளும் கொண்ட வரிமானம் ஆகியவை முறையே காணப்படுகின்றன.

கருவறையின் வெளிச் சுவரின் நடுவில் உள்ள தேவகோட்டம் இரண்டு சிறிய தூண்களையும் இரண்டு உயரமான தூண்களையும் கொண்டு விளங்குகிறது. கருவறையின் மூன்று சுவர்களின் ஓரங்களிலும் இரண்டிரண்டு உயரமான அரைத்தூண்களைக் காணலாம்.

பூதகண வரிசையின்மேல், உருவங்கள் எவையும் இல்லாக் கூடுகளால் அலங்கரிக்கப்பட்ட கொடுங்கை காணப்படுகிறது.

கருவறைத் தேவகோட்டங்களில் வடபுறத்தில் பிட்சாடணரும், கிழ்ப்புறத்தில் அர்த்தநாரியும், தென்புறத்தில் வீணாதர தட்சிணா மூர்த்தியும் தோற்றமளிக்கின்றனர்.

கிரீவத்திலும் கோட்ட தேவதைகள் உள்ளன. வடக்கில் பிரமனும், கிழக்கில் சிவ ஆலிங்கனமூர்த்தியும், தெற்கில் தட்சிணாமூர்த்தியும் காணப்படுகின்றனர்.

அர்த்தமண்டபத்தின் முகப்பில் துவார பாலகர் சிலைகளைக் காணலாம். அர்த்தமண்டபம் கும்பம், பலகை முதலிய உறுப்புகளால் அணி பெற்ற நான்கு தூண்களால் தாங்கப்படுகிறது. போதிகைகள் வளைந்த குழைவுகளால் அணி செய்யப்பட்டுள்ளன.

முகமண்டபத்தின் வெளியிலும் இரு துவாரபாலகர் உள்ளனர். 11ஆம் நூற்றாண்டினதான இம் முகமண்டபத்தையும் நடுவே நான்கு தூண்கள் தாங்குகின்றன.

இக் கோயிலில் பழைய சோழர் காலத்துச் சாமுண்டி, துர்க்கை இவற்றின் சிலைகள் பேரழகுடன் காணப்படுகின்றன.

## 5. ஸ்ரீநிவாசநல்லூர்

குரங்கநாதர் கோயில் :

ஸ்ரீநிவாசநல்லூர் திருச்சி மாவட்டத்தைச் சார்ந்தது. இது திருச்சியிலிருந்து 30 கல் (48 கி.மீ.) தொலைவிலும் முசிறியிலிருந்து 6 கல் (9·6 கி.மீ.) தொலைவிலும் உள்ளது. இவ்வூரில் பண்டைச் சோழர் காலத்தனவாகிய கோயில்கள் ஐந்து உள்ளன. அவை குரங்கநாதர் கோயில், பட்டாபிராமன் கோயிலைத் தன்னகத்துக் கொண்ட விசுவநாதர் கோயில், லக்ஷ்மீநாராயணப் பெருமாள் கோயில், இராமநாதசுவாமி கோயில், மாரியம்மன் கோயில் என்பனவாகும்.

திருச்சியிலிருந்து வரும் பெருவழியின் இடப்புறத்தில் அமைந்துள்ள விசுவநாதர் கோயிலகத்துக் காணப்படும் பட்டாபிராமன் ஆலயத்தின் தென்புறச் சுவரில் இராசகேசரிவர்மனின் 7ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று காணப்படுகிறது. இக் கல்வெட்டு ஆதியில் துர்க்கை கோயிலைச் சேர்ந்ததாக இருக்கலாம். இக் கல்வெட்டு மூலஸ்தானத்துத் துர்க்காபட்டாரியாருக்குச் சந்தனக் குழம்பு தயாரிப்பதற்கு உள்ளூர்ச் சபையினர் மானியம் விட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. இவ் விராசகேசரி யார் என்று வரையறுத்துக் கூற இயலவில்லை.

மாரியம்மன் கோயிலின் தென் சுவரில் பரகேசரிவர்மனின் 5ஆம் ஆண்டுக் கல்வெட்டு உள்ளது. பொற்கொடைபற்றிக் குறிப்பிடும் அக் கல்வெட்டும் எவ்வரசன் காலத்தது என்பது உறுதி செய்யப்படவில்லை.

இராமசாமி கோயிலிலுள்ள கணேசர் ஆலயத்தின் கிழ்ச்சுவரில் மதுரை கொண்ட பரகேசரியான முதற் பராந்தகன் கல்வெட்டொன்று உள்ளது.

இங்குள்ள கோயில்களில் மிக முக்கியமானது குரங்கநாதர் கோயிலே.

இக்கோயிலைப்பற்றிப் பிரசித்தமான கதை ஒன்று வழங்கப்படுகிறது. இக்கோயிலைத் துறவி ஒருவர் கட்டினார் எனவும், நடுக் கோயில் கட்டிக் கும்பாபிஷேகம் செய்யப்படுவதற்குமுன் கோயிலின் உச்சியில் குரங்கொன்று காணப்பட்டது எனவும், அதனைத் தீய சகுனமாகக் கருதிக் கோயிற் பணியைக் கைவிட்டனர் எனவும் அக்கதை குறிப்பிடும் செய்தி நமக்குப் பொருந்துவதாக இல்லை. ஆதித்தன் காலம் முதல் முதற் குலோத்துங்கன் காலம்வரை சுமார் 200 ஆண்டுகளைச் சார்ந்த கல்வெட்டுகள் இக் கோயிலில் காணப்படுவது கொண்டு, சுமார் 200 ஆண்டுகளாவது இங்குள்ள பெருமானை மக்கள் இடையறாது வழிபட்டனர் எனவும் இக் கோயிலுக்குப் பல நிவந்தங்களை வழங்கினர் எனவும் உணர்கிறோம். எனவே, குரங்குபற்றிய கதை நம்பப்படுமாறு இல்லை. ஏறக்தாழ 12ஆம் நூற்றாண்டிலேயே மக்கள் இதைப் புறக்கணித்து வாழத் தொடங்கினர் எனலாம்.

இக் கோயில் கல்வெட்டுப்படி இங்குள்ள இறைவர் ‘திருகுரக்குத்துறைப் பெருமானடிகள்’ என்ற பெயருடையவராகக் காணப்படுகிறார். இவ் வூர் பிரமதேயமான மகேந்திரமங்கலம் என வழங்கப்பட்டது.

முதல் மகேந்திரவர்மன் காலத்தில் ஸ்ரீநிவாசநல்லூர் பல்லவர் நாட்டிற்கு உட்பட்டதாதல்வேண்டும். இது நன்செய் வயல்களையும்

கமுகத் தோட்டங்களேயும் தன் இரு கரைகளிலும் கொண்டதும், கவேர மன்னன் புதல்வியாவதுமான காவிரி பாயும் சோழ நாட்டைக் கைப்பற்றிய மகேந்திரவர்மனுடைய பெயரால் அமைக்கப்பட்டது. இன்றும் ஸ்ரீநிவாசநல்லூருக்கு அருகே மகேந்திரமங்கம் என்ற சிற்றூரைக் (பிடாகை) காணலாம்.

இன்னவன் என்று வரையறுக்க முடியாத இராசகேசரியின் கல்வெட்டுகள் நான்கு இங்குக் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று கண்டராதித்தன் காலத்தது ஆகலாம். ஆனல், அர்த்தமண்டபத்தின் தென் சுவரின் அடித்தளத்தில் செதுக்கப்பட்டுள்ள இராசகேசரியின் 24ஆம் ஆண்டுக் கல்வெட்டு அதன் உயரிய ஆட்சியாண்டினுல் முதல் ஆதித்தன் காலத்ததாகவே கொள்ளப்படும். அர்த்தமண்டபத்தின் இதே தென் சுவரில் இராசகேசரியின் 24 ஆம் ஆண்டுக் கல்வெட்டிற்கு மேலே ஒன்றும் பக்கத்தில் ஒன்றுமாக முதற் பராந்தகன் கல்வெட்டுகள் இரண்டு காணப்படுவதையும் அர்த்தமண்டபமும் கருவறையும் ஒரே திட்டத்தின்கீழ் இணைத்துக் கட்டப்பட்ட திறத்தையும் நோக்குமிடத்து இக் கோயில் கி.பி. 895-க்கு முற்பட்டே எடுப்பிக்கப்பட்ட செய்தி உறுதியாகிறது. இது பலர் கருதுவதுபோல முதல் பராந்தகன் காலத்துக் கோயிலன்று. முதல் ஆதித்தன் காலத்துக் கோயிலே என்பது தேற்றம். இக் கோயிலில் முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகள் நான்கு அவனுடைய 20ஆம் ஆண்டு முதல் 37ஆம் ஆண்டுவரை காணப்படுகின்றன. அவனுடைய 20ஆம் ஆண்டுக் கல்வெட்டில் 19ஆம் ஆண்டுச் செய்தியொன்று கூறப்பட்டுள்ளது. இதுவரை இதுவே இக் கோயிலின் பழைய கல்வெட்டு எனக் கருதப்பட்டதாகும். இது ஒரு நிலம் விற்ற செய்தியைக் குறிப்பிடுகிறது. பராந்தகனுடைய ஏனைய கல்வெட்டுகள் – கோயிலுக்கு ஒரு நிலம் விற்கப்பட்ட செய்தி, ஒரு பார்ப்பனி கோயிலுக்குப் பூந்தோட்டம் ஒன்று வழங்கிய செய்தி, விளக்கு எரிப்பதற்கு முதலாகப் பொன் வழங்கிய செய்தி, இறைவனுக்குத் திருமஞ்சனத்திற்கு ஒரு செப்புக் குடம், ஒரு விளக்குத் தண்டு, வெள்ளிப் பேழை ஒன்று ஆகியவை வழங்கப்பட்ட செய்தி என்பனவற்றைக் குறிப்பிடுகின்றன.

பரகேசரியின் 14ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதற் பராந்தகனுடையதாகவோ, உத்தம சோழனுடையதாகவோ இருக்கலாம்.

இராசகேசரிவர்மன் ஒருவனுடைய 2 ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதல் இராசராசன் காலத்ததாகக் கருதப்படுகிறது. அது கோயிலுக்குச் சொந்தமான இறையிலி நிலங்களைப் பதிவு செய்து, அரையன் அக்ரகண்ட பிரமாதிராசன் மேற்பார்வையில் அவற்றின் வரும்படியைக் கோயிலின் பலதிறச் செலவுகளுக்கும் வகுத்த செய்தியை

விரித்துக் கூறுகிறது. இச் செயலுக்காக மகேந்திரமங்கலத்து (ஸ்ரீநிவாச நல்லூர்) ஊர்ச் சபையார் தனியே ஒரு வாரியத்தை நியமனம் செய்தனர். இவ் வாரியத்தார், ஊர்க்கரணத்தான் ஆகியவருடைய உதவியால்—திருவமிர்து, நெய், திருவாராதனை செய்யும் சிவபிராமணருடைய ஊதியம், அவருக்கு உதவியாக உள்ள இருவர் ஊதியம், 18 விளக்குகளுக்கு எண்ணெய், திருப்பலி கொட்டுவாருக்கும் விளக்கிடுவாருக்கும் ஊதியம், திருவாராதனையின்போது இன்னிசை நிகழ்த்த அமர்த்தப்பட்ட மத்தளிகர் மூவர், கரடிகை இயக்குவார் ஒருவர், தாளம், படாகம், சேகண்டிகை இவற்றை இயக்குவார் ஒவ்வொருவர் ஆகிய எழுவருக்கும் உரிய ஊதியம்—என்பனவற்றை வரையறை செய்த செய்தியை இராசராசன் கல்வெட்டு விவரிக்கிறது.

இக் கோயில் இருதளக் கற்றளியாகும். கருவறை சதுரமானது. அதன் பக்கம் 26 அடி 8 அங்குலம் வெளியளவுடையது. உள்ளளவு 8 அடி சதுரம். அந்தராளம் 4 அடி 4 அங்குலம் முன்நோக்கி நீண்டிருக்கிறது.

கருவறைக் கீழ்த்தளம் 5 அடி 2 அங்குல உயரமுடையது. தளத்தின்மேல் குமுதப்படை காணப்படுகிறது. அதன்மேல் யாளி வரிமானம் காணப்படுகிறது. சதுர வடிவாக அமைந்த அர்த்தமண்டபம் 22 அடி பக்க அளவுகொண்டது. அதன் உயரம் 16 அடி ஆகும். நடுவில் உள்ள கருவறை விமானத்தோடு அடித்தளத்திலிருந்து 50 அடி உயரமுடையது. இவ் விமானப் பகுதி செங்கல்லாலும் சுண்ணும்பாலும் அமைக்கப்பட்டது. முற்பட்ட சோழர் கோயில்கள் யாவும் உபானுதி ஸ்தூபி வரையில் கருங்கல்லாலேயே எடுக்கப்பட்டவை. அங்ஙனமாகவும் இக் கோயிலின் கருவறையின் கொடுங்கை வரையிலுள்ள பகுதிகளே கருங்கல்லால் அமைக்கப்பட்டு, ஏனைய விமானப் பகுதிகள் செங்கற்களாலும் சுண்ணும்பாலும் அமைக்கப்பட்டுள்ளமை புதுமையாகக் காணப்படுகிறது. ஒருகால் பழைய கருங்கல் விமானம் சிதைந்துபோக அதற்குப் பதிலாகச் செங்கல் விமானம் பிற்காலத்தில் எடுக்கப்பட்டதோ என்று கருதவும் இடம் உண்டு. இங்குக் கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசை காணப்படவில்லை என்பதும் இக் கோயிலில் காணப்படுவதொரு புதுமையாகும்.

கருவறையின் வெளிச் சுவர்களில் மூன்று தேவ கோட்டங்கள் வெளிநோக்கி நீண்டு காணப்படுகின்றன. வடபுறத்தில் பிரமனும் தென்புறத்தில் தட்சிணாமூர்த்தியும் காணப்படுகின்றனர். மேல்புறத் தேவ கோட்டத்தில் தற்போது சிலை ஒன்றும் இல்லை. தேவகோட்டங்களின் இருபுற இடைவெளிகளிலும் சாமரம் வீசுவோர், கடவுளர், தேவ மாதர்கள் ஆகியவர்களுடைய சிற்பங்கள் அழகுறச் செதுக்கப்

பட்டுள்ளன. தேவ கோட்டங்களின் மேலுள்ள தோரணங்கள் மிக வனப்புறச் செதுக்கப்பட்டுள்ளன. மேற்குத் தேவ கோட்டத்தின் மேலுள்ள தோரணத்தில் நரசிம்மருடைய வடிவம் காணப்படுகிறது.

அர்த்தமண்டபத்தின் வெளியே இருமருங்கிலும் உள்ள தேவ கோட்டங்கள் சிலைகளின்றி உள்ளன. அவற்றில் துவாரபாலகர்கள் சிலை இருந்திருக்கலாம். அங்ஙனமே அந்தராளத்தின் வெளிச் சுவர்களில் காணப்படும் இரண்டு தேவ கோட்டங்களிலும் தற்போது சிலைகள் இல்லை. அவற்றில் கணபதி சிலையும் துர்க்கை சிலையும் இருந்திருக்கவேண்டும். அர்த்தமண்டபத்தை நான்கு தூண்கள் நடுவில் தாங்கி நிற்கின்றன. அர்த்தமண்டபம் அந்தராளத்தோடு இணையும் இடத்திலும் இரண்டு தூண்கள் காணப்படுகின்றன. தூண்களெல்லாம் 9 அடி 8 அங்குல உயரமுடையன. இத் தூண்கள் கும்பமும் உறுதியான பலகையும் பெற்று மிளிர்கின்றன.

கிரீவம் சதுர வடிவானது. ஸ்தூபி சதுர வடிவாகவும் நடுவில் பிதுங்கியும் காணப்படுகிறது.

இக் கோயிலின் கருவறை, அந்தராளம், அர்த்தமண்டபம் ஆகிய மூன்றும் ஒரே திட்டத்தின்கீழ் அமைக்கப்பட்ட பழைய சோழர் காலக் கட்டடங்களாகும். இக் கோயிலின் மிகப்பழைய கல்வெட்டு அர்த்தமண்டபத்தின் தென் சுவர் அடித்தளத்தில் காணப்படுகிறது என்பது குறித்துணரத் தக்கது.

## 6. ஆலம்பாக்கம்

1. செல்லியம்மன் கோயில்
2. ஐயனார் கோயில்
3. வரதராசப் பெருமாள் கோயில் (திருமேற்றளி)
4. கைலாசநாதர் கோயில் (அமிர்தேசுவரர் கோயில்)

ஆலம்பாக்கம் பிற்பட்ட பல்லவர் காலத்திலும் முற்பட்ட சோழர் காலத்திலும் சிறப்படைந்ததோர் ஊராகும். அது கண்டராதித்தத்திற்கும் கொள்ளிடக்கரையில் அமைந்த திருமழபாடிக்கும் இடையில் அமைந்துள்ளது. அது கிழைப்பழுவூருக்கு மேற்கிலும் லால்குடிக்குக் கிழக்கிலும் லால்குடி—அரியலூர் பெருவழியில் புள்ளம்பாடியிலிருந்து திருமழபாடிக்குச் செல்லும் மார்க்கத்தில் ஆறு கல் (9·6 கி.மீ.) தொலைவில் உள்ளது.

ஆலம்பாக்கத்தில் எல்லாவிதச் சமயத்தாருக்கும் மரபினருக்கும் உரிய பழங் கோயில்களைக் காணலாம். கிராம தேவதைகளுக்குரிய செல்லியம்மன் கோயிலும், ஐயனார் கோயிலும், சைவர்களுக்காக அமைந்த கைலாசநாதர் கோயிலும், வைணவர்களுக்காக அமைந்த வரதராசப் பெருமாள் கோயிலும் பலதிற மக்களின் வழிபாட்டிற்கும் உரியனவாக அமைந்தன. இவ்வூரும் இங்குள்ள சில கோயில்களும் பல்லவ மன்னனான தந்திவர்மன் (கி.பி. 785—836) காலத்தில்தோன்றி யவை. இவ்வூரிலுள்ள பழைய கல்வெட்டுகளில் இவ்வூர் தந்திவர்ம மங்கலம் என்று வழங்கப்படுகிறது.

**1. செல்லியம்மன் கோவில் :**

செல்லியம்மன் கோயில் என்ற பிடாரி கோயில் காலபிடாரி கோயில் என்று வழங்கப்படுகிறது. அது சப்தமாதர் கோயில்களில் ஒன்றாகும். இக் கோயில் சுவரிலுள்ள கல்வெட்டொன்று இது திருவொற்றியூரானான இராயர் அலங்காரப் பிரியன் என்பவனால் கட்டப்பட்டது எனவும், இவனே இக் கோயில் செலவுகளுக்காக நிலம் ஒன்றை நிவந்தமாக விட்டான் எனவும் குறிப்பிடுகிறது. தென்னிந்தியக் கல்வெட்டிலாகாவினர் அறிந்த வகையில் இதுவே மிகப் பழைய தனிப்பட்ட சப்தமாதர் கோயிலாகும். இக் கோயில் இன்றும் பக்தர்கள் வழிபடத்தக்க வகையில் நன்முறையில் அமைந்திருப்பது மகிழ்ச்சிக்குரியதாகும். இங்கு இராசகேசரிவர்மனுடைய 25ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று மிகச் சிதைவுற்ற நிலையில் காணப்படு கிறது. ஆலம்பாக்கமான தந்திவர்ம மங்கலத்துச் சபையார் இந்தச் சப்தமாதர் கோயிலுக்கு நிலம் ஒன்றை நிவந்தமாக விட்ட செய்தியை இக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. இது முதல் ஆதித்தன் காலத்துக் கல்வெட்டாகக் கொள்ள வேண்டியதாகும்.

முதல் இராசாதிராசனுடைய 31ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று இக் கோயிலுக்கு வழங்கப்பட்ட மற்றொரு நிலக்கொடைபற்றிக் குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டில் தந்திவர்ம மங்கலம் இராசேந்திர சிங்க வளநாட்டுப் பொய்கை நாட்டுப் பிரமதேயமான மதுராந்தக சதுர்வேதி மங்கலம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இப் பழைய கோயிலும் இதிலுள்ள சப்தமாதர் விக்கிரகங்களும் இன்றும் நன் முறையில் உள்ளன.

**2. ஐயனார் கோயில் :**

ஐயனார் கோயில் பண்டைக் காலம் தொட்டே இங்கு நிலவிய தாகும். இங்கிருந்த பழைய ஐயனார் சிலை தற்போது பக்கத்திலுள்ள சிறிய கற்கோயிலில் தனியாகக் கிடக்கிறது. அக் கோயிலில் முதல்

இராசராசனுடைய எட்டாம் ஆண்டுக் கல்வெட்டும் ஒன்பதாம் ஆண்டுக் கல்வெட்டும் காணப்படுகின்றன. எட்டாம் ஆண்டுக் கல் வெட்டு திருவாய்ப்பாடி ஸ்ரீ கிருஷ்ணப் பெருமாளுக்குத் தந்திவர்ம மங்கலத்தில் வாழ்ந்தவன் ஒருவன் திருநந்தா விளக்கு வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. திருவாய்ப்பாடி என்பது ஆலம்பாக்கத் தைச் சார்ந்த பழைய சிற்றூராகலாம். ஐயனூரின் சிலை காணப்படும் இக் கோயில் பழைய கிருஷ்ணன் கோயிலாக இருக்கலாம். இதன் அருகில் வரதராசப் பெருமாள் கோயில் என்ற பெரிய விண்ணகரத் தைக் காணலாம்.

3. வரதராசப் பெருமாள் கோயில் :

இந்த விஷ்ணு கோயிலில் பரகேசரிவர்மனுடைய 11ஆம் ஆண்டுக் கல்வெட்டும் இராசகேசரி வர்மனுடைய 12 ஆம் ஆண்டுக் கல்வெட்டும் காணப்படுகின்றன. தந்திவர்ம பல்லவனுடைய பெய ரால் அமைக்கப்பட்ட மாற்பிடுகு ஏரியின்கீழ் அமைந்துள்ள நிலத்தை இக் கோயிலுக்கு நிவந்தமாக விட்ட செய்தியை முதற் கல்வெட்டு குறிப்பிடுகிறது. இந் நிவந்தம் இங்குள்ள திருமேற்றளிப் பெருமா னுக்கு விளக்கு எரிப்பதற்காக இவ்வூர் ஆளுங்கணத்தாருள் ஒருவரால் வழங்கப்பட்டதாகும். இராசகேசரிவர்மனுடைய 12 ஆம் ஆண்டுக் கல்வெட்டிலும் இத் தந்திவர்ம மங்கலத்து மாற்பிடுகு ஏரி குறிப்பிடப் பட்டுள்ளது.

இக் கோயிலின் வட சுவரில் உள்ள முதற் பராந்தகனின் 38ஆம் ஆண்டுக் கல்வெட்டு மாற்பிடுகு ஏரியின்கீழ் உள்ள நிலம் ஒன்றைக் கொள்ளிடத்தின் வடகரையில் உள்ள பிரமதேயமான தந்திவர்ம மங்கலத்துப் பெருமாள் திருக்கோயிலுக்கு வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

அரசனுடைய ஆட்சியாண்டு குறிப்பிடப்படாத, தமிழ்ச் செய் யுளும் உரைநடையுமாக அமைந்த கல்வெட்டு ஒன்றில் இம் மாற்பிடுகு ஏரி மதுராந்தகப் பேரேரி என்று புதிதாகப் பெயரிடப்பட்டுள்ளது. அது நரசிம்மதேவன் என்ற படைத் தலைவனுடைய மகனும், தொண்டைநாட்டு மதுராந்தகத்தைச் சார்ந்தவனுமான விட்டப் பதண்டநாயகன் என்பான் இவ்வூர்ச் சிவ கைலாசமுடையார் கோயி லுக்கு மேற்கில் வெகு காலத்துக்கு முன் எடுப்பிக்கப்பட்ட திருமேற் கோயில் பழுதுபட்டதால் அதைப் புதுப்பித்த செய்தியைக் குறிப்பிடு கிறது. பழங் கோயிலினுடைய கலைப்பாணி புதுக் கோயிலில் எந்த அளவு காப்பாற்றிப் போற்றப்பட்டுள்ளது என்பதை வரையறுத்துக் கூறவோ இக் கோயிலைப் புதுப்பித்த விட்டப்பதண்ட நாயகனைப் பற்றிய ஏனைய செய்திகள் அறியவோ இயலவில்லை.

விஷ்ணு கோயில் கிழக்கு நோக்கியுள்ள இருதளக் கற்றளியாகும். இருந்த திருக்கோலத்தில் அமைந்திருக்கும் விஷ்ணு சிலையும் அவருடைய தேவியர் இருவர் சிலையும் இரண்டாம் தளத்திலுள்ள கருவறையில் காணப்படுகின்றன. அவை முதற் பராந்தகன் காலத்தனவாகத் தோன்றவில்லை. கருவறை சதுர வடிவமானது. வெளிப்புறத்தில் அதன் பக்க அளவு 35 அடி. அதற்கு முன்னால் அர்த்த மண்டபம் 25 அடி நீண்டுள்ளது. அதற்கும் முன்னால் அமைந்த கட்டடத்தில் கோயிலுக்குள் செல்வதற்குரிய படிக்கட்டுகள் அமைக்கப்பட்டுள்ளன. அக் கட்டடம் அர்த்தமண்டபத்திலிருந்து 16 அடி முன்நோக்கி உள்ளது.

கருவறைச் சுவர்களிலுள்ள தேவகோட்டங்களில் காணப்படும் சூரியன் சிலையும் விஷ்ணு சிலையும் மிகப் பழைமையானவை. இவற்றைக்கொண்டும் முதற் பராந்தகனுடைய 38ஆம் ஆண்டுக் கல்வெட்டைக்கொண்டும் இக் கோயிலின் பழைமை உணரப்படுகிறது.

**4. கைலாசநாதர் கோயில் :**

இச் சிவன் கோயில் பழைய கல்வெட்டுகளில் அமரேசுவரப் பெருமாள் கோயில் என்று வழங்கப்பட்டுள்ளது. அது திருமழபாடிக்குச் செல்லும் சாலையில் கிழ்ப்புறத்தில் சப்தமாதர் கோயிலுக்கு அருகில் அமைந்துள்ளது. இதுவும் நந்திவர்மன் காலத்தில் எடுப்பிக்கப்பட்டு, முற்பட்ட சோழர்கள் காலத்தில் புதுப்பிக்கப்பட்ட கற்றளியாகும். இங்குக் காணப்படும் பரகேசரியினுடைய 3·ஆம் ஆண்டுக் கல்வெட்டும் 5ஆம் ஆண்டுக் கல்வெட்டும் முதற் பராந்தகனுடையனவாகக் கருதப்படுகின்றன.

முதற் கல்வெட்டு இவ்வூர்ச் சபையார் அமரேசுவரப் பெருமாள் கோயிலுக்கு அளித்த நன்கொடையைக் குறிப்பிடுகிறது. இரண்டாவது அவ்விறைவனுக்கு விளக்கெரிப்பதற்காக வழங்கப்பட்ட நிலக்கொடையைத் தெரிவிக்கிறது. இக் கோயிலில் பிற்பட்ட சோழர்களான முதல் இராசேந்திரன், முதல் இராசாதிராசன் என்பவருடைய கல்வெட்டுகளும் காணப்படுகின்றன. முதல் இராசேந்திரனுடைய கல்வெட்டில் தந்திவர்ம மங்கலம் முதற் பராந்தகன் பெயரால் மதுராந்தக சதுர்வேதிமங்கலம் ஆன செய்தியும், இறைவனுடைய திருப்பெயர் கைலாசமுடைய மகாதேவர் ஆயின செய்தியும் குறிக்கப்பட்டுள்ளன. இராசாதிராசனுடைய கல்வெட்டில் ஆலம்பாக்கமாகிய இவ்வூர் இராசேந்திர சிங்க வளநாட்டுப் பொய்கை நாட்டுப் பிரமதேயமான மதுராந்தக சதுர்வேதிமங்கலம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

தெற்கு நோக்கியுள்ள இச் சிவன் கோயிலின் கருவறை 18 அடி 10 அங்குலம் பக்க அளவுடைய சதுர வடிவாக அமைந்துள்ளது. அதிட்டானம் சாதாரணமாக அமைந்துள்ளது. கருவறையின் வெளிச் சுவர்களிலுள்ள தேவகோட்டங்கள் ஒவ்வொன்றும் இவ்விரண்டு (இரண்டிரண்டு) அரைத் தூண்களால் அணி செய்யப்பட்டுள்ளன. ஒவ்பொரு பக்கத்து மூலேயிலும் தூண்கள் இரண்டு உள்ளன. தேவ கோட்டங்களில் வடக்கில் பிரமன் சிலேயும் மேற்கில் விஷ்ணு சிலேயும் காணப்படுகின்றன. தெற்குத் தேவகோட்டம் சிலேயின்றிக் காணப்படு கிறது. கொடுங்கையின்கீழ்ப் பூதகண வரிசை உள்ளது.

அர்த்தமண்டபம் கருவறையை ஒட்டி 16 அடி முன்நோக்கி யுள்ளது. அர்த்தமண்டபத்தின் வாயிலின் இருமருங்கிலும் இரு துவார பாலகர் சிலேகள் காணப்படுகின்றன. நிலேவாயிலின் அடித்தளத்தில் இரண்டு அழகிய பெண் சிலேகளேக் காணலாம். அர்த்தமண்டபத்தை நடுவில் ஆறு தூண்களும், பக்கச் சுவர்களிலுள்ள ஆறு அரைத் தூண் களும் தாங்கி நிற்கின்றன. தற்போது காணப்படும் தூண்களில் நான்கு புதியனவாக நிறுவப்பட்டனவாகும்.

## 7. கீழையூர்

அகஸ்தீசுவரம்—சோழீசுவரம் (அவனி கந்தர்வ அல்லது கந்தர்ப்ப ஈசுவரகிருகம்) :

கீழையூரும் மேலப்பழுவூரும் ஒன்றன் பக்கலில் ஒன்ருக அமைந் துள்ள இரண்டு ஊர்களாகும். இவ்விரண்டிற்கும் இடையே உள்ள தூரம் ஒரு கல் (1 6 கி.மீ.) இவ்விரண்டு ஊர்களும் முற்காலத்தில் ஒன்று சேர்ந்து பெரும்பழுவூர் அல்லது மன்று பெரும் பழுவூர் என வழங்கப்பட்டன. கீழைப் பழுவூர் என்னும் சிறுபழுவூர் இவற்றி லிருந்து வேறுபட்ட மற்ரேர் ஊராகும். இவ்வூர்கள் திருச்சி—அரிய லூர்ச் சாலேயில் திருச்சியிலிருந்து 30 கல் (48 கி. மீ.) தொலேவில் உள்ளன.

கீழையூரிலுள்ள அவனிகந்தர்ப்ப ஈசுவரகிருகம் என்ற கோயிலில் இரண்டு தளிகள் ஒன்றன்பக்கம் ஒன்ருக அமைந்து மேற்கு நோக்கி உள்ளன. அவற்றுள் தென்புறம் உள்ள அகஸ்தீசுவரம் என்று தற்போது வழங்கப்படும் கோயிலில் உள்ள இறைவர் சில கல்வெட்டு களில் 'தென்வாயில் ஸ்ரீகோயில் மகாதேவர்' என்று வழங்கப்படுகிருர். தற்போது அருணுசலேசுவரம் அல்லது சோழீசுவரம் என்று வழங்கப் படும் வடபுறம் உள்ள கோயில் பழைய கல்வெட்டுகளில் 'வடவாயில் ஸ்ரீ கோயிலில்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

## அகஸ்தீசுரம்

இக் கோயிலின் தென்சுவரில் காணப்படும் இராசகேசரிவர்மனின் இருபத்திரண்டாம் ஆண்டுக் கல்வெட்டில் காணப்படும் மெய் யெழுத்துகள் புள்ளிபெற்று இருப்பதைக் கொண்டும், இக் கல்வெட் டிற்குரிய இராசகேசரியின் உயர்ந்த ஆட்சியாண்டைக் கொண்டும் இக் கல்வெட்டு முதல் ஆதித்தன் காலத்தது என்று கூறலாம். இது பழு வேட்டரையன் குமரன் றவன் என்ற தலைவன், பொய்கைக்குறு விடத்து வேட்டக்குடான் வடுகன் மாதவன் என்பவனைக்கொண்டு உரகன்குடி என்ற தேவதானச் சிற்றூரிலுள்ள எட்டு மாநிலத்தைச் சிர்திருத்தி அமனிகந்தர்வ (அவனிகந்தர்வ) ஈசுவர கிருகத்திலுள்ள இரு தளிகளுக்கும் நந்தாவிளக்கு அமைப்பதற்கு ஏற்பாடு செய்த செய்தியைக் குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டை அரசியல் கல்வெட் டிலாகாவினர் முதல் இராசராசன் காலத்தது என்று குறிப்பிடுவதற்கு நியாயம் எதுவுமில்லை.

நீலகண்ட சாஸ்திரியார் இக் கோயில்களைப்பற்றி எழுதியுள்ள செய்தி பொருத்தமாக இல்லை. 'ஆதித்தனுடைய ஆட்சியில் இதே இடத்தில் அகஸ்தீசுவரம் என்ற மற்றொரு கற்றளியும் எடுப்பிக்கப் பட்டுள்ளது. பல்லவர் கட்டடக் கலையின் முடிவும் சோழர் கட்டடக் கலையின் ஆரம்பமும் ஆகிய இடைப்பட்ட காலத்துக் கலைச்செல்வங்கள் இக் கோயிலில் நன்கு பாதுகாக்கப்பட்ட நிலையில் காணப்படுகின்றன. இதற்கு உதாரணமாக உட்கார்ந்த நிலையில் உள்ள சிங்கத்தைத் தன் கீழ்ப்பாதியாகக் கொண்டு கும்பங்களின்மேல் அகலமான பலகை களுடன் விளங்கும் தூண்களைக் குறிப்பிடலாம்'. (p. 697—The Colas).

தென்கோயிலாகிய அகஸ்தீசுவரத்தின் சிகரம் சதுரமாக உள்ளது. ஆனால் வடபுறத்திலுள்ள கோயில் உருண்டையான சிகரத்தை உடையது. சாஸ்திரியார் இங்கு இரண்டு கோயில்கள் ஒன்றன் பக்கல் ஒன்றாக அமைந்திருப்பதைக் கருதாமல் அருணாசலேசுவரம் என்ற சோழீசுவரத்தைத் தவறாக அகஸ்தீசுவரமாகக் கருதியுள்ளார்.

இங்குக் காணப்படும் இராசகேசரி வர்மனுடைய 13ஆம் ஆண்டுக் கல்வெட்டும் முதல் ஆதித்தன் காலத்ததாகலாம். அது பழுவூர் ஈசுவரத்து தேவனார் மகன் பூதி பழுவேட்டரையன் குமரன் கண்ட னுடைய ஆணையால் குன்றக்கூற்றத்தில் உள்ள அவனி கந்தர்ப்ப ஈசுவர கிருகத்து இரண்டு தளிகளிலும் இரண்டு நந்தாவிளக்குகள் அமைப்பதற்குப் புதிதாகச் சீர்திருத்தப்பட்ட எட்டு மாநிலம் மானிய மாக விடப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. கீழையூரிலுள்ள இக் கோயில்பற்றிய பழைய கல்வெட்டு இதுவேயாகும். முதல் ஆதித்தன் காலமாகிய கி.பி. 884-ல் இக் கோயில்கள் இரண்டும் நன்னிலையில்



**13.** சந்திரசேகரர் கோயில், திருச்செந்துறை





**14.** மகர தோரணம், திருச்செந்துறை



16. குரங்கநாதர் கோயில், சினிவாசநல்லூர்



17. கோபுரம், கீழையூர்



18. வடவாயில் ஸ்ரீகோயில்,
கிழையூர்



*19.* சந்திரசேகரர்,
கிழையூர்



*20.* சுப்பிரமணியர்,
கிழையூர்



21. பிரமன், கிழையூர்



23. தட்சிணாமூர்த்தி, மேலப்பழுவூர்



22. இரு கோயில்கள், கீழையூர்



24. கோபுரம்,
மேலப்பழுவூர்



25. ஹரிஹரர், திருவெறும்பூர்

இருந்தமை இக் கல்வெட்டால் தெளிவாகப் புலப்படுகிறது. முதல் ஆதித்தனுடைய இரண்டு கல்வெட்டுகளிலும் காணப்படும் கழுவேட்டரையன் குமரன் நக்கனும், பழுவேட்டரையன் குமரன் கண்டனும் சகோதரர்களாக இருக்கலாமென ஊகிக்கிறோம்.

இக் கோயிலின் தனியான முகமண்டபத்தின் நான்கு சிங்கத் தூண்களும் காலியூர் கலியுக நிர்மூலன், கங்கமார்த்தாண்டன், மறவன் மானதரன், அரையகள் அரையுளி என்பவர்களால் இக் கோயிலுக்கு வழங்கப்பட்டனவாக அவற்றில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு களால் அறிகிறோம். அவ் வெழுத்துக்களை நோக்கி இத் தூண்கள் 9 ஆம் நூற்றாண்டினவாகும் என முடிவு செய்யலாம்.

அகத்தீசுவரம் ஓர் இருதளக் கற்றளியாகும். அவனிகந்தர்ப்ப ஈசுவரத்திலுள்ள இரண்டு தளிகளில் இதுவே பெரியது. இத் தளியின் கருவறை, முன்னுள்ள மண்டபம், நந்தி, கோபுரம் யாவும் ஒரே திட்டத்தின்கீழ், ஒரே காலத்தில் அமைந்தவை.

சதுரமான கருவறை 19 அடி பக்க அளவுடையது. அதற்கு முன்னுள்ள அர்த்தமண்டபம் $10\frac{3}{4}$ அடி முன்னேக்கி உள்ளது. அது கும்பங்களையுடைய நான்கு தூண்களாலும் நான்கு அரைத்தூண்களாலும் தாங்கப்படுகிறது.

அர்த்தமண்டபத்திற்கும் முகமண்டபத்திற்கும் இடையே $6\frac{3}{4}$ அடி அகலமுடைய அந்தராளம் (இடவெளி) உள்ளது. முகமண்டபம் தென்வடலாக $32\frac{1}{2}$ அடியும் கீழ்மேலாக $25\frac{3}{4}$ அடியும் கொண்டு அமைந்திருக்கிறது. அம் மண்டபத்தை நடுவிலுள்ள 4 வட்டத் தூண்களும் 4 சிங்கத் தூண் வரிசைகளும் தாங்கி நிற்கின்றன.

கருவறையின் வெளிச் சுவரிலுள்ள தேவ கோஷ்டங்கள் மகர தோரணங்கள் கொண்டு மிளிர்கின்றன. தென்கோஷ்டத்தில் மானையும் மழுவையும் கையில் ஏந்தி நிற்கும் சிவபெருமானுடைய சிலை காணப்படுகிறது. மேலுள்ள மகரதோரணத்தின் நடுவே நடனமாடும் சிவனுடைய உருவைக் காணலாம். வடக்குத் தேவகோஷ்டத்தின் தோரணத்தின் நடுவில் கஜசம்ஹார மூர்த்தியின் சிலை பொலிவுற்று விளங்குகிறது. வடக்குத் தேவ கோஷ்டத்தில் பிரமன் சிலையும், (இத் தளி மேற்கு நோக்கியிருப்பதால்) இதன் கிழக்குக்கோஷ்டத்தில் நின்றுகொண்டிருக்கும் முருகன் சிலையும் காணப்படுகின்றன. தென்மேற்கில் உள்ள கணபதி கோயில், வடக்கில் உள்ள முருகன் கோயில், சண்டேசுவரர் கோயில், தெற்கிலுள்ள சப்தமாதர் கோயில்

ஆகிய பரிவார தேவதைகள் கோயில்கள் யாவும் பண்டைய விக்கிரகங்களோடு பழைய நிலை கெடாமல் நன்முறையில் உள்ளன.

இவ்விருதளக் கற்றளியின் கருவறைக்குமேல் அமைந்துள்ள மேல் தளத்தில் சாலைகளும் கூடங்களும் உள்ளன. இரண்டாம் தளத்திலும் கிரீவத்திலும் உள்ள கோஷ்டங்களில் அருமையான சிற்பங்கள் உள்ளன.

கொடுங்கையின் கீழ்க் காணப்படும் பூதகண வரிசையில் உள்ள சில பூதங்கள் இசைக் கருவிகளை இயக்கும் நிலையில் காணப்படுகின்றன. கொடுங்கைக்கு அணிசெய்யும் கூடுகளின் நடுவில் அன்னங்களின் வடிவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. கிரீவமும் சிகரமும் சதுரமாகவும் நடுவில் பிதுங்கியும் காணப்படுகின்றன. கிரீவத்திலுள்ள தேவகோஷ்டங்களைச் சிங்கத் தலைகள் அணி செய்கின்றன. சிகரம் நான்கு மூலைகளிலும் கொடிக்கருக்கால் வனப்புறத்தப்பட்டுள்ளது. சிகரத்தின்மேல் பத்ம பீடமும் இரத்தின பீடமும் உள்ளன. அவற்றிற்குமேல் சதுரமான கருங்கல் ஸ்தூபியைக் காணலாம்.

அவனி கந்தர்ப்ப ஈசுவர கிருகம் நாற்புறமும் மதில்களால் சூழப்பட்டுள்ளது. அகத்திசுவரத்தின் முன்புறம் மதிலில் வாயிலும் அதன் மேல் கோபுரமும் காணப்படுகின்றன. வாயிலின் பக்கங்களும் உத்தரமும் அழகிய கொடிக்கருக்குகளால் அணி செய்யப்பட்டுள்ளன. வாயிலுக்குமேல் பூதகணவரிசையைக் காணலாம். கோபுர வாயிலின் அடித்தளம் கருங்கல்லாலாகியது. அதன்மேல் அமைக்கப்பட்டுள்ள கட்டடம் செங்கல்லாலும் சுண்ணும்பாலும் ஆனது. கோபுர வாயிலில் உள்ள துவாரபாலகர் சிலைகள் இரண்டும் ஒன்பதாம் நூற்றுண்டைச் சேர்ந்தவை. இக் கோபுரம் முற்பட்ட சோழர் காலத்துக் கோயில் உறுப்புகளில் ஒன்ருகக் கருதப்படுகிறது. 9ஆம் நூற்றுண்டினதான இக் கோபுரம் இன்று நன்கு பாதுகாக்கப்பட்டுள்ளது.

**அருணசலேசுவரர் கோயில் என்ற சோளீசுவரம் :**

இங்குள்ள வடபக்கத்துக் கோயில் ஆகிய வடவாயில் ஸ்ரீகோயிலே சோளீசுவரமாகும். இதுவும் முதல் ஆதித்தன் காலத்தைச் சார்ந்தது என்பதை முன்னரே குறிப்பிட்டுள்ளோம்.

சதுர வடிவான இதன் கருவறையின் பக்க அளவு 12 அடி 4 அங்குலமாகும். இக் கோயிலின் அர்த்தமண்டபத்தின் வெளியே இரண்டு துவாரபாலகர் சிலைகளைக் காணலாம்.

கருவறைச் சுவர்களில் உள்ள தேவகோஷ்டங்களில் வடக்கில் பிரமன், தெற்கில் தட்சிணமூர்த்தி, கிழக்கில் அமர்ந்த திருக்கோலத்தி

லுள்ள முருகன் இவர்களின் சிலைகள் காணப்படுகின்றன. இத் தேவ கோஷ்டங்கள் ஒவ்வொன்றையும் இரண்டு அரைத் தூண்கள் தாங்கி நிற்கின்றன. ஒவ்வொரு சுவர் முடிவிலும் இரண்டிரண்டு அரைத் தூண்கள் சுவருக்கு ஆதாரமாக உள்ளன. விமானத்தின்மேல் உள்ள கோஷ்டங்களிலும் சுப்பிரமணியர் சிலையைக் காணலாம்.

இருதளக் கற்றளியாகிய இச் சோளீசுவரத்தின் சிகரமும் ஸ்தூபியும் உருண்டை வடிவமானவை.

இரண்டாம் தளம் சாலைகளாலும் கூடங்களாலும் அழகுபெற்று விளங்குகிறது. நடுச் சாலையின் நடுவில் தட்சிணாமூர்த்தியின் சிலையைக் காணலாம்.

இத் தளத்தின்மேல் மற்றொரு யாளி வரிமானமும் அதற்குமேல் கிரீவமும் உள்ளன. கிரீவத்திலுள்ள தேவகோஷ்டங்கள் சிங்கத் தலைகளின்மேல் அமைந்து வனப்பமைந்த சிலைகளைக் கொண்டு விளங்குகின்றன.

கீழையூரிலுள்ள இவ்விரண்டு தளிகளின் விமானங்களும் மிக உயர்ந்த தரமுடைய சிற்பத்திற்கு எடுத்துக்காட்டாக உள்ளன. சதுரமான கிரீவமும் சிகரமும் கொண்ட கோயிலும் உருண்டையான கிரீவமும் சிகரமும் கொண்ட கோயிலும் ஒன்றன் பக்கம் ஒன்றாக அமைந்து காண்பாருக்குப் பெருவிருந்தளிக்கும் செய்தி குறிப்பிடத் தக்கது.

பண்டைச் சோழர் கோயில்களில் எல்லா உறுப்புகளையும் கொண்டு அமைந்து இன்னும் நன்முறையில் நிலைபெற்றுவரும் கோயில்களில் அவனிகந்தர்ப்ப ஈசுவர கிருகமே தலையாயது என்று கூறுவது புனைந்துரையன்று.

இதன் விரிவை எமது 'நான்கு சோழர் கோயில்கள்' (Four Chola Temples) என்ற நூலில் காண்க.

## மேலைப்பழுவூர்

**சுந்தரேசுவரர் கோயில் :**

மேலைப்பழுவூர் பண்டைக் காலத்தில் மன்னுபெரும் பழுவூரின் ஒரு பகுதியாக இருந்தது. இங்குள்ள சிவன் கோயிலிலுள்ள சுந்தரேசுவர சுவாமி பரகேசரிவர்மனின் 5ஆம் ஆண்டுக் கல்வெட்டில் பகைவிடை ஈசுவர கிருகத்து மகாதேவர் என வழங்கப்பட்டார் என்றும் இக்

கோயில் மன்னுபெரும் பழுவூரிலிருந்தது என்று குறிப்பிடப்பட்ட செய்தியை அறிகிறோம்.

உத்தம சோழன் என்று கருதப்படும் பரகேசரிவர்மன் ஒருவனுடைய 10ஆம் ஆண்டில் இவ்விறைவன் பழுவூர் நக்கர் என்று குறிப்பிடப்பட்டுள்ளார். முதல் இராசராசன், முதல் குலோத்துங்கன் ஆகியவர்களுடைய கல்வெட்டுகளில் இவ்விறைவர் பெரும்பாலும் 'திருத்தோற்றமுடைய மகாதேவர்' என்றே வழங்கப்பட்டார். அதன் மொழிபெயர்ப்பே பிற்காலத்துச் சுந்தரேசுவரர் என்ற வடமொழிப் பெயராயிற்று. புராண இதிகாசங்களில் இடம் பெற்றுள்ள ஜமதக்கினி முனிவர் இப் பெருமானை வழிபட்டார் என்று கூறப்படுகிறது. கீழைப்பழுவூரோடு பரசுராமர் தொடர்பு கொண்டவராகக் கூறப்படுவதும், இவ்வூர்க்கோயிலில் ஜமதக்கினியின் கற்சிலை காணப்படுவதும் இக் கூற்றுக்கு ஆதாரங்களாகும்.

இங்குள்ள அம்மன் கோயிலின் மேலைச் சுவரின் அடித்தளத்தில் உத்தம சோழனுடைய 16ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று காணப்படுகிறது. அது பழுவேட்டரையன் கண்டன் மறவன் இக் கோயிலுக்கு நந்தா விளக்கொன்று வழங்கிய நன்கொடையைக் குறிப்பிடுகிறது. இதே மறவன் இராசகேசரி இராசனுடைய 14ஆம் ஆண்டில் இத் திருத் தோற்றமுடையார் கோயிலைப் புதுப்பித்தான் என்று இக் கோயில் கல்வெட்டொன்று குறிப்பிடுகிறது.

இக் கோயிலில் முதல் குலோத்துங்கனுடைய கல்வெட்டுகள் ஆறு காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று செங்கல்லால் கட்டப்பட்ட திருத்தோற்றமுடைய மகாதேவர் கோயில் வணங்குவாரற்றுப் புறக்கணிக்கப்பட்ட நிலையில் இருந்ததால் அதை வாணகோவரையன் உத்தம சோழனான இலங்கேசன் என்பான் அரசனுடைய நலன்கருதி அவனுடைய பெயரால் குலோத்துங்க சோளீசுவரம் என்ற புதுப் பெயரில் கற்றளியாகப் புதுப்பித்த செய்தியைக் குறிப்பிடுகிறது.

முதல் குலோத்துங்கனுடைய 32ஆம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டு குலோத்துங்கசோழ ஈசுவரமுடைய நாயனாருக்கு இம் மன்னன் தில்லைக்குடி என்ற பழைய பெயருடைய குலோத்துங்க சோழநல்லூர் என்ற கிராமத்தை மானியமாக விட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டில் குலோத்துங்கசோழ ஈசுவரம் உத்துங்க வளநாட்டுப் பெரிய பழுவூரைச் சார்ந்ததாகக் குறிப்பிடப்படுகிறது.

முதற் குலோத்துங்கன் காலத்தில் புதுப்பிக்கப்பட்ட இக்கோயிலில் பண்டைச்சோழர் கோயிலமைப்பைக் காண்பது அரிது.

கருவறை சதுரமானது. அதன் பக்க அளவு 31 அடி. அடித்தளத்தில் வேலைப்பாடு எதுவும் இல்லை. கருவறையின் மேலுள்ள பகுதியில் பஞ்சரங்கள் இல்லை. பரிவார தேவதை ஆலயங்களில் முறைப்படி சிலைகள் காணப்படுகின்றன. அக் கோயில்களில் காணப்படும் கணேசர், உயர்த்திய இடக்கையில் கோழியும் வலக்கையில் சக்தியும் கொண்ட சுப்பிரமணியர், சண்டேசுவரர், சப்தமாதர்கள் ஆகிய சிலைகள் யாவும் பண்டைய சோழர் காலத்தவை.

இக் கோயிலில் உள்ள பழைய கோபுர வாயிலில் காணப்படும் துவாரபாலகர் சிலைகள் ஒன்பதாம் நூற்றுண்டினவாகத் தோற்றமளிக்கின்றன. இக் கோபுரமும் அவனி கந்தர்ப்ப ஈசுவர கிருகத்துக் கோபுரம் எடுப்பிக்கப்பட்ட காலத்ததாகவே உணரப்படுகிறது. ஒருகால் சற்றுப் பிந்தியதாக இருக்கலாம். பழைய சோழர் காலத்துக் கோபுரத்தை உடைய கோயில்களில் இதுவும் ஒன்று எனலாம்.

## கீழைப்பழுவூர்

வட மூலேசுவரர் (திருவாலந்துறை மகாதேவர்) கோயில் :

கீழைப்பழுவூர் திருச்சி—அரியலூர்ப் பெருவழியில் 32 கல் (52·8 கி.மீ.) தொலைவில் உள்ளது. இது கீழையூரிலிருந்து 3 கல் (4.8 கி மீ.) தொலைவிலும் ஜயங்கொண்ட சோழபுரத்திலிருந்து 24 கல் (38·4 கி.மீ.) தொலைவிலும் உள்ளது. இங்கு இரண்டு சிவன் கோயில்களும் ஒரு விஷ்ணு கோயிலும் உள்ளன. சிவன் கோயில்கள் இரண்டும் முற்பட்ட சோழர் காலத்தவை.

திருவாலந்துறை மகாதேவர் கோயில் :

இங்குள்ள கோயில்கள் மூன்றினுள் திருவாலந்துறை மகாதேவர் கோயில் மிகப் பழைமையும் சிறப்பும் வாய்ந்ததாகும். இங்கு ஆலமரங்கள் காடுகள்போல வளர்ந்திருந்தன எனவும் ஓர் ஆலமரத்தடியில் சிவபெருமான் சுவயம்புலிங்கமாகத் தோன்றிக் காட்சியளித்தார் எனவும், தந்தையினுடைய உத்தரவுக்குக் கீழ்ப்பணிந்து தம் தாயைக் கொலை செய்த பரசுராமர் அப் பாவத்தைத் தொலைக்க இக் காட்டுப் பகுதியை அழித்து ஆலமரத்தடியில் அமர்ந்திருந்த சுவயம்பு மூர்த்தியை வழிபட்டுச் சாபவிமோசனம் பெற்றுர் எனவும் தல புராணம் குறிப்பிடுகிறது.

தமிழ் நாட்டு 63 நாயன்மார்களில் ஒருவரும் முதல் மகேந்திர வர்மனுடைய சம காலத்தவருமான சம்பந்தர் இக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனைப்பற்றி ஒரு பதிகம் பாடியிருப்பது

கொண்டே இக் கோயில் அவர் காலத்துக்கு முற்பட்டது என்பது தேற்றம். தம் காலத்தில் இக் கோயில் பூசை மலையாள அந்தணர் வசம் இருந்த செய்தியைச் சம்பந்தர் 'அந்தணர்களான மலையாளர்கள் ஏத்தும்' என்றும் அடிகளால் குறிப்பிடுகிறார். இக் கோயில் மலையாளர்கள் வசப்பட்ட செய்தி விந்தையாகவே உள்ளது. இப் பகுதியைச் சுற்றியுள்ள பிரதேசம் பழுவேட்டரையர்கள் என்ற குறுநிலமன்னர்களால் ஆளப்பட்டது. அவர்கள் மேலைக்கடற்கரையிலிருந்து இப் பகுதியில் வந்து குடியேறிய வேளிர் தலைவர்களாகலாம். அவர்கள் தங்களுடன் மலையாள அந்தணர்களைக் கொண்டு வந்து இங்குக் குடியேற்றியிருக்கலாம். மலையாள நாடு பரசுராமரால் படைக்கப்பட்டது என்று கூறுகிறார்கள். சஹ்ய பர்வதத்திற்கு (மேற்குமலைத் தொடர்) மேற்கிலுள்ள நாடுகளைப் பரசுராமர் கடலிலிருந்து மீட்டு மக்கள் வாழும் பிரதேசமாக்கி அப் பகுதியில் வேதத்தில் வல்ல அந்தணர்களைக் குடியேற்றினார் என்று நூல்கள் கூறுகின்றன. பரசுராமரால் வழிபடப்பட்ட இக் கோயிலுக்குப் பரசுராமரால் படைக்கப்பட்ட நாட்டில் குடியேற்றப்பட்டவர் மரபினரான மலையாள அந்தணர்களைக்கொண்டு பூசை நிகழ்விப்பது சிறந்த செயலாகும் என்று பழுவேட்டரையர்கள் கருதினர் போலும். இப் பழுவேட்டரையர்கள் சோழர்கள் ஆட்சியில் பெரும் பங்கு கொண்டு திகழ்ந்தனர்.

திருநெய்த்தானத்திலுள்ள பிரசித்திபெற்ற முதல் ஆதித்தன் கல்வெட்டில் தொண்டை நாட்டிலும் தன் ஆட்சியைச் செலுத்திய ஆதித்தனுக்கும் சேரமான் தாணுரவிக்கும் இடையே நெருங்கிய அரசியல் உறவு இருந்த செய்தி அறிவிக்கப்படுகிறது. சுந்தர சோழனுடைய 'அன்பில் செப்பேடுகள்' முதற் பராந்தகன் பழுவேட்டரையன் என்ற சேரமன்னன் மகளை மணந்தான் என்று குறிப்பிடுகின்றன. மலையாள அந்தணர்களை இப் பகுதியில் குடியேற்றிய பழுவேட்டரையர்கள் முன்பே இப் பகுதி ஆண்டவர்களாக முதற் பராந்தகனுக்கு மகட் கொடை வழங்கினார்களோ அன்றி முதற் பரந்தாமனுக்கு மகட்கொடை வழங்கிய மலையாளப் பழுவேட்டரையர் மரபு மலையாள அந்தணர்களோடு இப் பகுதியில் குடியேற்றப்பட்டதோ என்பதை உள்ளவாறு அறிவதற்குக் கருவிகள் இல்லை.

பராந்தகனுடைய மகன் முதல் இராசாதித்தன் காலத்தில் கிராமம் என்ற ஊரில் படைவிடமைத்துத் தங்கியிருந்தபோது தம்மை எதிர்க்கவந்த இரட்டர் படைகளை முறியடித்த பெருமை கேரள நாட்டவனான வேளாண்குமரன் என்ற படைத்தலைவனையே சாரும் என்ற செய்தி குறிப்பிடத்தக்கது.

இக் கோயில் முதலாம் பராந்தகன் காலத்தில் கற்றளியாக அமைக்கப்பட்டது.

(பராந்தகன் கோயில்கள் என்ற பகுதியில் இதன் வரலாற்றைக் காணலாம்).

## திருவெறும்பூர்

**திருவெறும்பியூர் ஆழ்வார் கோயில் அல்லது பிப்பிலீசுவரம் :**

திருவெறும்பூர் திருச்சிக்கு ஐந்து மைல் கிழக்கே அமைந்துள்ளது. இக் கோயில் அமைந்திருக்கும் குன்றினைச் சுற்றிச் செழிப்பான நெல் வயல்களும் கரும்பு வாழைத் தோட்டங்களும் உள்ளன. எனவே, இக் கோயில் மிக அழகிய இயற்கைச் சூழ்நிலையில் அமைந்து காணப் படுகிறது.

இக் கோயில் பழம்பெருமை யுடையது. இந்திரனும் மற்றத் தேவர்களும் எறும்பு வடிவில் இங்குள்ள இறைவனை வழிபட்டு நற்கதி அடைந்தனர். திரிசிரஸ் என்பானுடைய அண்ணனும் திருவெறும்பி யூர்ப் பெருமானை எறும்பு வடிவெடுத்து வழிபட்டு, அவருடைய திரு வருளைப் பெற்றான். மேலும் இலக்குமி, அக்நி, முருகன், அகத்தியர் முதலியவர்களும் இவ் விறைவனை வழிபட்டுப் பேரருள் பெற்றனர் என்று இவ்வூர்த் தலபுராணம் குறிப்பிடுகிறது.

இவ்வூருக்குத் திருவெறும்பியூர், பிரமபுரம், லக்ஷ்மிபுரம், மதுவன புரம், இரத்தினகூடம், மணிகூடம், குமரபுரம், பிப்பிலீசுவரம், தென் கயிலாயம் முதலிய பல பெயர்கள் உண்டு. ஆதிசேடனுக்கும் வாயு வுக்கும் இடையே ஏற்பட்ட போட்டியில் இமயமலையின் சில சிகரங்கள் பெயர்ந்து தெற்கில் வந்து விழுந்தன எனவும், அவற்றுள் இதுவும் ஒன்று எனவும் அதுபற்றியே சில கல்வெட்டுகளில் இவ்வூர்ப் பெயர் தென்கயிலாயம் என வழங்கப்பட்டது எனவும் கூறுகின்றனர்.

இத் திருவெறும்பியூர் கோயில் 7ஆம் நூற்றாண்டினரான அப்ப ருடைய தேவாரத்தில் இடம் பெற்றுள்ளது. அவருக்கு எத்தனை யாண்டுகள் இது முற்பட்டது என்று அறிய இக் காலத்தில் கருவிகள் இல்லை. அப்பர் காலத்துக்கு இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பிற் பட்டதே முதல் ஆதித்தன் காலமாகும்.

இங்குள்ள அடைமொழியில்லாத பல இராசகேசரிக் கல்வெட்டு களிலுள்ள சிக்கல்களை விடுவித்து, அவற்றிற்குரிய மன்னர்களை வரை யறுப்பதில் பல மாறுபட்ட கருத்துகள் உள்ளன. அவற்றை நன்கு ஆராய்ந்து இக் கோயில் கட்டப்பட்ட காலத்தை ஓரளவு முடிவு செய்வோம்.

இக் கோயிலில் இராசகேசரி வர்மனுடைய 21 கல்வெட்டுகள் அவனுடைய 3ஆம் ஆண்டு முதல் 19ஆம் ஆண்டு வரை பரவியுள்ளன. அவற்றில் கூறப்பட்டுள்ள செய்திகளைக் கொண்டும் அவற்றின் எழுத் தமைப்பைக் கொண்டுமே அவற்றின் காலத்தை வரையறுக்க வேண்டியவரா யுள்ளோம்.

கல்வெட்டிலாகாவினர் இராசகேசரி வர்மனுடைய 5, 6, 7ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் பழைய எழுத்துகளை யுடையவையாகவும் மெய்யெழுத்தின்மேல் புள்ளி பெற்றும் அமைந்து இருப்பதால் அவை முதல் ஆதித்தன் காலத்தவை என்று முடிவு செய்து, அக் கல்வெட்டு களில் காணப்படும் வானசாத்திர விளக்கங்களைக்கொண்டு தம் முடிவை உறுதிப்படுத்தியுள்ளனர்.

ஆனால் 'எறும்பியூர் ஆழ்வார்' என்று இறைவன் பெயர் குறிப் பிடப்பட்ட கல்வெட்டுகள் பராந்தகன் காலத்துக்கு முற்பட்டன என்றும், 'திருக்கயிலாயமுடையார்' என்று இறைவன் பெயர் குறிப் பிடப்பட்ட கல்வெட்டு பராந்தகன் காலத்தையும் அவனுக்குப் பிற் பட்ட காலத்தையும் சார்ந்தவை என்றும் அவர்கள் தாமாகக்கொண்ட முடிவு பொருந்துவதாக இல்லை. இறைவனுக்குப் பல பெயர்கள் இருக்கும்போது நன்கொடை வழங்குபவர் அவற்றுள் தமக்கு விருப்ப மான பெயரைப் பொறுக்கி யெடுத்துக்கொண்டு அப் பெயரால் நிவந்தம் வழங்குவது இயற்கை. அங்ஙனமாகவும் அப் பெயர்கள் காலவரையறைக்கு எங்ஙனம் உதவ முடியும்? உதாரணமாக இவ்வூர் முதல் இராசேந்திரன் கல்வெட்டொன்றில் இறைவன் பெயர் திருவெறும்பியூருடைய மகாதேவர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இராசகேசரி முதல் ஆதித்தனுடையதாகக் கருதப்படும் 18ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் இறைவன் பெயர் திருக்கைலாயத்து மகாதேவர் என்று காணப்படுகிறது. இவற்றை நோக்கக் கல்வெட் டிலாகாவினர் கொண்ட முடிவு தகர்க்கப்படுகிறது.

அடுத்த செய்தி: முற்பட்ட சோழர்கள் காலத்தில் இரு வேறு பட்ட நன்மக்கள் இக் கோயிலைப் புதுப்பித்தவராக உரிமை பாராட்டு கின்றனர். இராசகேசரி வர்மனுடைய 19ஆம் ஆண்டுக் கல்வெட் டொன்று திருவெறும்பியூரான ஸ்ரீகண்ட சதுர்வேதிமங்கல ஊர்ச் சபை உறுப்பினருள் ஒருவருடைய மனைவியான தத்தன் சேந்தி என்பாள் தான் எடுப்பித்த மலை மேலமைந்துள்ள 'ஆதித்த பட்டாரர்' கோயிலிலே விளக்கெரிப்பதற்கும் இறைவனுடைய நிவேதனத்திற்கும் நன்கொடை வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. 'இவ்வூர்த் திரு மலைமேல் ஆதித்தபட்டாரருக்கு நான் எடுப்பித்த திருக்கோயில் தேவ ருக்குத் திருவமுதுக்கும், திருவிளக்குக்கும், நெய்யமுதுக்குமாக வைத்த

நிலமாவது' என்பது கல்வெட்டு வாசகம். இராசகேசரி வர்மனுடைய 3ஆம் ஆண்டில் வேளான் வீரநாராயணன் ஆன செம்பியன் வேதி வேளான் திருவெறும்பூர் ஆழ்வாருடைய ஸ்ரீவிமானத்தை எடுப்பித் தானுக உரிமை பாராட்டுகிருன்.

இராசகேசரிவர்மனுடைய 21 கல்வெட்டுகளும் கோயிலின் முக்கியமான மூலச் சுவர்களில் காணப்படுகின்றன. அவற்ருல் கூறப் படும் செய்திகொண்டு ஒவ்வொரு கல்வெட்டிற்கும் உரிய இராச கேசரிவர்மன் யார் என்பதை உறுதியாகக் குறிப்பிட முடியவில்லே. சில கல்வெட்டுகளின் காலம் அவற்றின் எழுத்தமைப்பைக்கொண்டும் அவற்றில் காணப்படும் வானசாத்திரக் குறிப்பைக்கொண்டும் அரசியல் கல்வெட்டிலாகாவினர் முதல் ஆதித்தன் காலத்ததாக முடிவு செய்யப்பட்டுள்ளது. வேறு சில சுவரில் காணப்படும் இடம் நோக்கிக் கால எல்லே முடிவு செய்யப்பட்டுள்ளது. இராசகேசரிக் கல்வெட்டும் பரகேசரிக் கல்வெட்டும் ஒன்றன் பக்கம் ஒன்று இருந்த தால் இரண்டும் அடுத்த அடுத்த மன்னர்களுடையன என்று முடிவு செய்யப்பட்டுள்ளது. எந்தத் தனிப்பட்ட செய்தியை வைத்துக் கொண்டும் ஒரு முடிவு காண இயலாது. கிடைக்கக்கூடிய எல்லா ஆதாரங்களேயும் நன்கு பன்முறை ஆய்ந்தே ஒரு முடிவுக்கு வர வேண்டும். இராசகேசரிவர்மனுடைய நான்காம் ஆண்டுமுதல் ஏழாம் ஆண்டுவரை அமைந்துள்ள 10 கல்வெட்டுகளில் சில ஆதித்தன் காலத்தனவாகலாம். செம்பியன் வேதிவேளான் காலத்ததாகிய 3ஆம் ஆண்டுக் கல்வெட்டைத் தவிர இராசகேசரிவர்மனுடைய நான் காம் ஆண்டுக் கல்வெட்டே மிகப் பழைமையானது. அது ஒரு விளக்கு எரிப்பதற்கும் நாடோறும் ஒரு குடம் தண்ணீர் திருமஞ்சனத்திற் காகக் கொணர்வதற்கும் 15 கழஞ்சுப் பொன்னே நிவந்தமாக வைத்த செய்தியைக் குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டில் இறைவன் பெயர் 'ஸ்ரீ கண்ட சதுர்வேதி மங்கலத்துத் திருக்கைலாயத்து மகாதேவர்' என்று குறிக்கப்பட்டிருப்பதுகொண்டு இக் கல்வெட்டு முதற் பராந் தகன் காலத்துக்குப் பிற்பட்டது என்று கல்வெட்டிலாகாவினர் குறிப் பிட்டுள்ளனர். அது ஏற்புடைத்தன்று என்பதை முன்னரே குறிப் பிட்டுள்ளோம். இக் கல்வெட்டு முதல் ஆதித்தன் காலத்தைச் சார்ந்தது என்பதே எம் துணிபு. எனவே, இக் கோயில் முதல் ஆதித்த னுடைய நான்காம் ஆண்டிற்கு முற்பட்டதாதல் உணரப்பட வேண்டிய தொன்ருகும்.

இராசகேசரிவர்மன் பெயரால் அமைந்த 5ஆம் ஆண்டுக் கல் வெட்டுகள் இரண்டும் 6ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் இரண்டும் மெய் யெழுத்துகள் புள்ளி பெற்றிருக்கும் பழைமையைக் கொண்டு 18ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றும் 19ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள்

இரண்டும் உயர்ந்த ஆட்சியாண்டு பெற்றிருப்பதைக்கொண்டும் அவை முதல் ஆதித்தன் காலத்தவை என்று முடிவு செய்யலாம்.

இராசகேசரியினுடைய (முதல் ஆதித்தன்) 19ஆம் ஆண்டில் தத்தன் சேந்தி யென்பான் ஆதித்யபட்டாரகர் கோயிலெடுப்பித்து இறைவனுக்கு அர்ச்சனுபோபமாக அறக்கட்டளை வழங்கிய செய்தியை முன்னரே குறிப்பிட்டுள்ளோம்.

இராசகேசரிவர்மனுடைய 18ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று தென்கயிலாயத்து மகாதேவருக்கு வழங்கப்பட்ட விளக்குத் தானம் பற்றி அறிவிக்கிறது. இறைவனுடைய பெயரைக்கொண்டு இதனையும் பிற்காலத்தது என்று கல்வெட்டிலாகாவினர் முடிவு செய்தது பொருந்தாது. இது சுந்தரசோழன் காலத்தது அன்று. உயரிய ஆட்சியாண்டை உடைய இது முதல் ஆதித்தன் காலத்ததேயாம்.

இராசகேசரியின் 19ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று மலைமேலுள்ள மகாதேவருக்கு விளக்கெரிப்பதற்காக விடப்பட்ட நிலக்கொடைபற்றிக் குறிப்பிடுகிறது. இதனையடுத்து இதற்குக்கீழ் முதற் பராந்தகன் கல்வெட்டொன்று காணப்படுவதால் இது முதல் ஆதித்தன் காலத்தது என்று கல்வெட்டிலாகா குறிப்பிடுகிறது. குறிப்பிடும் காரணம் சரியன்று எனினும் செய்த முடிவு சரியானது.

அடுத்து இராசகேசரிவர்மன் காலத்துக் கல்வெட்டுகள் எட்டு ஒரே தொகுப்பாக அமைந்துள்ளன. அவை இராசகேசரிவர்மனுடைய 3ஆம் ஆண்டு முதல் 7ஆம் ஆண்டிற்குள் தனிப்பட்ட ஒரு மனிதன் செய்த பல அறக் கட்டளைகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. இக் கட்டளைகளை வழங்கியவன் வேளான் வீரநாராயணனுன செம்பியன் வேதி வேளானுவான். இவன் திருவெறும்பியூர் ஆழ்வார் கோயிலை எடுப்பித்தான் என்று சில கல்வெட்டுகள் கூறுகின்றன.

1. இராசகேசரியின் 3ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் கோயில் விமானத்தை எடுப்பித்த செம்பியன் வேதிவேளான் உடுக்கையோடும் தாளத்தோடும் திருப்பதியம் விண்ணப்பிக்க நால்வரை நியமனம் செய்ததைக் குறிக்கிறது.

2. 3ஆம் ஆண்டுக் கல்வெட்டு மற்றொன்று ஸ்ரீகண்ட சதுர்வேதி மங்கலத்துச் சபையாரும் எறும்பியூர் ஊர்ச்சபையாரும் செம்பியன் வேதிவேளானிடம் விற்ற நிலத்தை அவன் திருப்பதியம் பாடுவார் ஊதியத்திற்காக நிவந்தமாக விட்ட செய்தியைக் குறிக்கிறது.

3 5ஆம் ஆண்டுக் கல்வெட்டு, இச் சபையின்ர் இக் கொடையாளருக்கு விற்ற நிலத்தின் வருவாயை 15 அந்தணர்கள் உண்பதற்கு உரிய நிவந்தமாக வழங்கிய செய்தியைக் குறிக்கிறது.

4. 6ஆம் ஆண்டுக் கல்வெட்டு, இச் சபையாரிடம் இவர் விலைக்கு வாங்கிய நிலத்தைக் கோயில் ஊழியர்கள் வீடு கட்டிக்கொண்டு தங்குதற்குரிய மடவளாகமாக இவர் விடுத்ததைக் குறிக்கிறது.

5. 7ஆம் ஆண்டில் இக் கோயில் விமானத்தைக் கட்டிய இக் கொடையாளி கோயில் நிலங்களைச் சாகுபடி செய்வதற்கு மதகோடு கூடிய வாய்க்கால் ஒன்று வெட்டிக்கொள்ள நிலம் வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

6. 7ஆம் ஆண்டுக் கல்வெட்டு மற்ரொன்று, கோயில் விமானத்தை அமைத்த இக் கொடையாளியிடம் நிலம் ஒன்று விற்கப் பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டில் 'உத்தமசீலி வாய்க்கால்' குறிப்பிடப்பட்டுள்ளது.

7. 7ஆம் ஆண்டின் மற்ரொரு கல்வெட்டு இச் செம்பியன் வேதி வேளான் ஈடாகப் பணம் கொடுத்துச் சில நிலங்களுக்கு வரிவிதிக்கும் உரிமை பெற்று அவ் வுரிமையால் வரும் வரும்படியை உள்ளூர்க் குளத்தை நன்கு பராமரிப்பதற்கு வழங்கிய செய்தியை அறிவிக்கிறது.

8. 7ஆம் ஆண்டுக் கல்வெட்டுகளில் மற்ரொன்று திருவெறும்பூர் ஆழ்வார் கோயில் திருமெய்க்காப்பாளனுக்குச் செம்பியன் வேதி வேளான் ஜீவிதம் வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

இவற்ருல் இச் செம்பியன் வேதிவேளான் கோயில் விமானத்தை எடுப்பித்ததோடு திருப்பதியம் பாட ஏற்பாடு செய்து, 15 அந்தணர் களுக்கு உணவிட மானியம் விட்டு, மடவளாகம் அமைத்துக்கொடுத்து வாய்க்கால் வெட்ட நிலம் வழங்கி குளத்தைப் பரா மரிக்க நிவந்தம் விட்டுக் கோயில் மெய்காவலனுக்கு ஜீவிதம் வழங்கிய சிறந்த ஒப்புர வாளன் என அறிகிரும். செல்வமும் கடவுட்பற்றும் மிகப்பெற்ற இப் பெருந்தகையாளன் சோழ மன்னனுடைய அவையில் நிறைந்த செல்வாக்குப் பெற்றிருந்தான். கோயில் நிலத்தின் நீர்ப்பாசனத் திற்கு வேண்டிய வசதிகளைச் செய்ய உள்ளூர்க் குளத்திலிருந்து ஒரு வாய்க்கால் வெட்டிக் கொள்வதற்கு அரசனிடமிருந்து தனிப்பட்ட முறையில் இவன் ஓராணையைப் பெற்றசெய்தி 'இச் செம்பியன் வேதி வேளார் ஸ்ரீமுகம் கொணர்ந்து கல்லி வைத்த கிழையூர் வாய்க்கால்' என்ற கல்வெட்டுத் தொடரால் பெறப்படுகிறது.

ஒரே மன்னன் காலத்தில் ஒரே கொடையாளியால் வழங்கப்பட்ட இக் கல்வெட்டுகளை ஸ்ரீ ஜி. வி. எஸ். ராவ் அவர்கள் கண்டராதித்தன், சுந்தரசோழன், முதல் இராசராசன் என்ற நாற்பதாண்டு இடைவெளியுடைய மன்னர்கள் ஆட்சிகளுக்கு உரியனவாக இணைத்துக் கூறுவதற்குத் தக்க சான்று ஏதும் இன்று. கல்வெட்டொன்றில் உத்தமசிலி வாய்க்கால் எனப் பராந்தகனுடைய புதல்வன் ஒருவன் பெயர் காணப்படுவது கொண்டு இவ் வொப்புரவாளனுடைய கொடைகள் யாவும் பராந்தகனுக்குப் பிற்காலத்தவனுன கண்டராதித்தன் அல்லது சுந்தரசோழன் காலத்தவை என்று அவர் முடிவு செய்த செய்தி, அவர் அவற்றினுடைய வானசாத்திரக் குறிப்புகளைக் கொண்டு அவற்றை முதல் ஆதித்தன் காலத்தவை என்று தாம் முற் கூறிய குறிப்பிற்கே முரணுக உள்ளது.

மேலும் இராசகேசரிவர்மன் கல்வெட்டுகளில் 7ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று முதல் இராசராசன் காலத்தது என்று காரணங் காட்டாமலேயே முடிவு செய்துள்ளார். (1041—1914) குறிப்பிடப் பட்ட நிலத்தின் எல்லைகளுள் உத்தமசிலி சதுர்வேதிமங்கலத்தைச் சார்ந்த சிற்றூர் ஒன்று குறிப்பிடப்பட்டுள்ளது. உத்தமசிலி முதற் பராந்தகன் மகன் பெயராகவே இக் கல்வெட்டுகளில் கூறப்பட்ட தினம் 15-1-991 ஆகிய வியாழக்கிழமையாக வானசாத்திர நிபுணரால் கணிக்கப்பட்டுள்ளமை கொண்டு 105, 112—1914 என்ற இரண்டு கல்வெட்டுகளும் முதல் இராசராசனுடையனவாக முடிவு செய்யப்பட்டுள்ளது. இந்த ஸ்ரீவிமானம் முதல் இராசராசன் காலத்தில் செம்பியன் வேதி வேளானல் எடுப்பிக்கப்பட்டது என்று கொண்டால்—கர்ப்பக்கிருகச் சுவர்களில் முதல் ஆதித்தனுடைய மூன்றும் ஆண்டு முதல் 19ஆம் ஆண்டு முடிய உள்ள கல்வெட்டுகள் காணப்படுவதற்கு நியாயம் இல்லை. இவை மூலக் கல்வெட்டுகள் என்பதும் பிரதி செய்யப்பட்டுப் பின் வெட்டப்பட்டவையல்ல என்பதும் குறித்துணரத்தக்கன சோழர்கள் காலத்தில் விமானம் என்பது கருவறையையும் அதன்மேல் அமைக்கப்படும் கிரீவம், சிகரம் ஸ்துபி ஆகிய எல்லாவற்றையும் குறிப்பதாகும். ஆனுல் இச் செம்பியன் வேதி வேளான் கிரீவம், சிகரம், ஸ்தூபி இவற்றையே புதுப்பித்தானுக வேண்டும் என்று கொண்டு கருவறைப்பகுதி சுந்தர சோழன் காலத்தது என்று கொண்டாலும் அதன் சுவர்களில் முதல் ஆதித்தன் முதற் பராந்தகன் ஆகியோர் கல்வெட்டுகள் இருக்க நியாயமில்லை என்பது உணரப்படும்

இவ் வொப்புரவாளனுடைய எட்டுக் கல்வெட்டுகளும் முதல் ஆதித்தன் காலத்தன என்ருதல், அல்லது கண்டராதித்தன் காலத்தின என்ருதல் கொள்வதே சிக்கல்களில் இருந்து விடுபடுவதற்குரிய வழியாகும்.

கோயிலினடியிலுள்ள இராசகேசரிவர்மனின் 3ஆம் ஆண்டுக் கல்வெட்டில் செம்பியன் வேதி வேளான் அக் கோயிலைக் கற்றளியாக்கி அதற்குப் பல நிவந்தங்கள் வழங்கிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. கோயிலடிக் கோயிலும் ஆதித்தன் காலக் கற்றளியாகும். எனவே, செம்பியன் வேதி வேளான் முற்பட்ட சோழர்கள் காலத்தில் கோயில் கட்டிக் கட்டடக் கலைக்குப் பெருந்தொண்டுகள் செய்தான் என்பது உறுதியாகிறது.

வேளான் வீரநாராயணனான செம்பியன் வேதிவேளான் முதல் ஆதித்தன் காலத்தவன் என்ற கூற்றுக்கு—வீரநாராயணன் என்பது முதற் பராந்தகனுடைய பெயர்களுள் ஒன்று என்பதும், பராந்தகனுடைய மகனான உத்தமசீலியின் பெயரால் அமைக்கப்பட்ட சிற்றூரும், வாய்க்காலும் செம்பியன் வேதிவேளான் கல்வெட்டுகளில் இடம்பெற்றிருப்பதும்—முரணாக அமைகின்றன.

இவற்றை நோக்கச் செம்பியன் வேதிவேளான் முதற் பராந்தகனுக்குப் பின் அவனுக்கு மிக அணியனான கண்டராதித்தன் காலத்தவன் என்று முடிவு செய்யலாமெனத் தோன்றியது. இந்தியக் கல்வெட்டிலாக்காவைச் சார்ந்த சர்க்கார் என்பவரை இதுபற்றி வினவிய போது அவர் விடுத்த மறுமுகம் பின்வருமாறு:

'உம் கடிதத்தில் குறிப்பிடப்பட்ட திருவெறும்பூர், கோயிலடி என்ற ஊர்க் கல்வெட்டுகளைக் கவனத்துடன் உற்று நோக்கியபோது அவை முதல் ஆதித்தன் காலத்தவையாகத் தோன்றவில்லை. அவற்றுள் ஒன்றிலும் மெய்யெழுத்திற்குமேல் புள்ளியில்லை. அவற்றுள் சிலவற்றின் எழுத்தை நோக்க அவை மிகப் பிற்பட்டவையாகத் தோன்றுகின்றன.'

இவை ஆதித்தன் காலத்தன அல்லவாகவே, கண்டராதித்தன் காலத்தனவாகக் கொள்ளப்பட வேண்டியனவாம்.

எனவே, முதல் ஆதித்தன் காலத்தில் அவன் நான்காம் ஆண்டிற்கு முன் தத்தன் சேந்தியால் இக் கோயில் முதன்முதல் கட்டப்பட்டது என்பதும் ஆதித்தனுடைய 19ஆம் ஆண்டில் அவன் தான் முன்பே கட்டிய கோயிலுக்கு நிவந்தம் ஒன்று வழங்கினான் என்பதும் பின் கண்டராதித்தன் காலத்தவனான செம்பியன் வேதிவேளான் இக் கோயிலைப் பல துறையிலும் விரிவாக்கி இதற்கு நிவந்தங்கள் பல வழங்கினான் என்பதும் கொள்ளக் கிடப்பனவாம். இங்குள்ள இறைவன் பெயர் ஆதித்தபட்டாரர் என்று வழங்கப்பட்டதும் இது முதல் ஆதித்தன் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட கற்றளி என்பதற்குச் சான்று பகர்கிறது.

இக் கோயில் வரலாறு இங்ஙனமாகவே, நீலகண்ட சாஸ்திரியார் இக் கோயிலைச் சுந்தர சோழனுடைய சிற்றரசன் ஒருவன் கட்டினான் என்று குறிப்பிடுவது பொருந்துவதாக இல்லை. முதற் பராந்தகனுடைய 26ஆம் ஆண்டு முதல் 35ஆம் ஆண்டுவரை நான்கு கல்வெட்டுகள் உள்ளன. ஸ்ரீகண்ட சதுர்வேதிமங்கலத்திலுள்ள திருவெறும்பியூர் ஆழ்வாருடைய உமாபட்டாரியார் நிறுவப்பட்ட செய்தியை அவற்றுள் ஒரு கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. அம்பிகைக்கென்று தனிக் கோயில் கட்டும் மரபு முதற் குலோத்துங்கன் காலத்திலேயே பிரபலமாயிற்று. அதற்குமுன் முதல் இராசேந்திரன் தான் நிறுவிய கங்கைகொண்ட சோழபுரக் கோயிலில் அம்பிகைக்கென்றே தனிக்கோயில் ஒன்று நிறுவினான் என அறிகிறோம். எனவே, இவ்வுமாபட்டாரியார் என்பது பண்டைச் சோழர்கள் கோயில்களில் அர்த்தமண்டபத்தில் வைக்கப்பட்டிருக்கும் போகேசுவரி என்ற பெயருடைய தேவியின் உலோகத் திருமேனியாகும்.

முதல் இராசேந்திரன் கல்வெட்டொன்றில் வேதங்களில் வல்ல அந்தணர்களுக்கு உணவிடுவதற்கு நிவந்தம் விடப்பட்ட செய்தியும் அரசன் தன் நாட்டைச் சுற்றிவந்தபோது கோயிற் கணக்குகளை அரசியல் அதிகாரி ஒருவன் தணிக்கை செய்த செய்தியும் குறிப்பிடப்பட்டுள்ளன.

இக் கல்வெட்டுகளில் திருவெறும்பியூர் ஊரார் என்ற கிராம சபைப் பெயரும், ஸ்ரீகண்ட சதுர்வேதிமங்கலத்துப் பெருங்குறிசபை என்ற பெயரிய அந்தணர் சபையின் பெயரும் காணப்படுகின்றன. சதுர்வேதிமங்கலம் என்ற பெயர் பெரும்பாலும் அந்தணர்கள் உறையூர்களுக்கே வழங்கப்பட்டது. இச் சபைகள் சிறு செயல்களை நிறைவேற்றும்போது தனித்தனியாகத் தொழிற்பட்டன. ஆனால், பொதுக் காரியங்களை இரண்டும் சேர்ந்தே கவனித்தன. நில உரிமைபற்றிக் குடிமக்கள் இருவருக்கிடையே மனத்தாங்கல் ஏற்பட்டபோது இச் சபையார் இருவரும் ஒன்றுகூடி அந் நிலத்தை ஒரு நன்கொடையாளனுக்கு விற்று அவன்மூலம் கோயிலுக்கு நன்கொடையாகப் பெற்ற செய்தி கல்வெட்டொன்றால் அறியப்படுகிறது.

இக் கோயில் ஒரு கற்றளியாகும். இதனுடைய கிரீவம் முதலிய மேற்பகுதிகள் பிற்காலத்தில் செங்கல்லாலும் சுண்ணாம்பாலும் கட்டப்பட்டனவாகும்.

இதன் கருவறை சதுரவடிவானது. அதன் வெளிப்புறப் பக்க அளவு 18 அடி 10 அங்குலம், உட்புறப் பக்க அளவு 11 அடி 3 அங்குலம். ஒவ்வொரு சுவரிலும் நடுவில் தேவகோஷ்டம் உள்ளது. அது

இரண்டு சிறிய அரைத்தூண்களாலும் இரண்டு சற்று உயரமான தூண்களாலும் அணிசெய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு தேவகோஷ்டத்தின் இருபக்கங்களிலும் முன்னேக்கிய பஞ்சரங்கள் உள்ளன. கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையும் மேல் யாளிவரிமானமும் உள்ளன. ஒவ்வொரு தேவகோஷ்டத்தையும் அணிசெய்யும் மகர தோரணத்தில் அழகிய சிற்றுருவச் சிலைகள் உள்ளன. தேவகோஷ்டங்களில் முறையே கணேசர், தட்சிணுமூர்த்தி, ஹரிஹரர், பிரமன், துர்க்கை ஆகியவர் சிலைகள் காணப்படுகின்றன.

அர்த்தமண்டபம் கருவறையிலிருந்து 14 அடி முன்னேக்கி நீண்டுள்ளது. அதன் முன்புறம் இரண்டு துவாரபாலகர் சிலைகள் உள்ளன.

அடுத்துள்ள முகமண்டபம் 25 அடி பக்க அளவுடைய சதுரமாகும். நடுவழியில் இருமருங்கிலும் பக்கத்தில் மூன்றுக உருண்டையான கும்பங்களையுடைய ஆறு தூண்கள் முகமண்டபத்தைச் சுமந்து நிற்கின்றன. இரு பக்கங்களிலும் சுவரை ஒட்டி மும்மூன்று வட்டத் தூண்கள் காணப்படுகின்றன.

வெளியே மகாமண்டபமும் அம்மன் கோயிலும் உள்ளன. அவை பரந்த வெளிப் பிராகாரத்தில் உள்ளன. எல்லாக் கட்டடங்களையும் உள்ளடக்கி மதில் கம்பீரமாகக் காட்சியளிக்கிறது.

தற்போது பரிவார தேவதைகள் கோயில் எதுவும் காணப்படுமாறில்லை. ஆனல் கருவறையைச் சுற்றியுள்ள உட்பிராகாரத்தில் விநாயகர், சுப்பிரமணியர் ஆகியவர் சிலைகள் உரிய இடங்களில் பிரதிட்டிப்பிக்கப்பட்டுள்ளன.

| | தேவகோஷ்டச் சிலை | — | மகரதோரண நடுவில் உள்ள சிலை |
|---|---|---|---|
| தெற்கு : | கணபதி ; தட்சிணுமூர்த்தி | | கணபதி; நடராஜர் |
| மேற்கு : | ஹரிஹரர் | | யோக நரசிம்மர் |
| வடக்கு : | பிரமர் ; துர்க்கை | | லக்ஷ்மி (அல்லது சரஸ்வதி) ; லக்ஷ்மி |

## திருப்பராய்த்துறை

**தாருகாவனேசுவரர் கோயில் :**

திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த திருப்பராய்த்துறை திருச்சி நகருக்கு மேற்கே 11 கல் (17·6 கி.மீ.) தொலைவில் காவிரியின் தென் கரையில் மேலணைக்கு (Upper Anicut) அருகில் அமைந்துள்ளது. எலமனூர்ப் புகைவண்டி நிலையம் அதன் அருகில் உள்ளது. அகண்ட காவேரியின் தென்கரையில் திருப்பராய்த்துறை என்ற சிவத்தலம் அமைந்திருப்பதுபோலவே, அதன் வடகரையில் குணசேகரம் என்ற வைணவத்தலம் அமைந்திருக்கிறது. கிளை (யாறு எதுவும்) பிரியாத அகண்ட காவேரியின் புனிதமான நீராடுதுறையாகத் தற்போது திருப்பராய்த்துறை விளங்கி வருகிறது.

பழைய நடுக்கோயிலின் மிகப் பழைய கல்வெட்டுகள் இராச கேசரிவர்மன் (முதல் ஆதித்தன்) உடைய 14ஆம் ஆண்டையும், 27ஆம் ஆண்டையும் சார்ந்தவை. முதல் கல்வெட்டு, திருப்பராய்த் துறைப் பரமேசுவரர் கோயிலுக்கு முன்பு வழங்கப்பட்டிருந்த நிலத்தின் வருமானம் கோயில் செலவுகளுக்குப் போதாமையால் விஜயாங்குர சதுர்வேதி மங்கலத்துச் சபையினரும், கோயில் ஸ்ரீகாரியம் பார்க்கும் அலுவலரும் ஒன்று சேர்ந்து கொடியாலம் என்ற சிற்றூரிலிருந்த நிலங்கள் சிலவற்றைக் கோயிலின் பெயரால் விலைக்கு வாங்கி, அதன் வரும்படியையும் கோயிலின் நித்திய நைமித்திய செலவினங்களுக்குப் பயன்படுத்த ஏற்பாடு செய்த செயலைக் குறிப்பிடு கிறது. இக் கோயிலிலுள்ள சப்த மாதர்கள், கணபதி, சுப்பிரமணியர், திருச்சேட்டைக் கிழத்தி (ஜேஷ்டை), துர்க்கை, ஆதித்தபிடாரர் (சூரியன்), நமனர் (திக்பாலகர்களுள் ஒருவனான இயமன்) ஆகிய எல்லாத் தெய்வங்களுக்கும் உரிய நிவேதனங்களுக்கும் திருவிளக் கிற்கும். வாழைப்பழங்கள், காய்கறிகள், தயிர், வெற்றிலை, பாக்கு முதலியன படைப்பதற்கும் ஒரு வேலி நிலத்தை நன்கொடை வழங்கிய செய்தியை இரண்டாம் கல்வெட்டு வெளியிடுகிறது. முற்பட்ட சோழர்கள் காலத்தில் கோயிலைச் சுற்றிப் பரிவார தேவதைகளை அமைக்கும் மரபு வழக்கத்தில் இருந்தது என்பதை நாம் அறிவோம். மூலதேவருக்குப் போலப் பரிவார தேவதைகளுக்கும் வழிபாடும் நிவேதனமும் நிகழ்த்தப்பட்டன என்ற செய்திக்கு இக் கல்வெட்டு சான்றாகிறது. அடைமொழி ஏதுமில்லாத பரகேசரிவர்மன் பெயரால் 9 கல்வெட்டுகள் உள்ளன. அவை 3ஆம் ஆண்டு முதல் 23ஆம் ஆண்டு வரை பரவியுள்ளன. முதற் பராந்தகனுடைய 20, 28, 30ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. கொடும்பாளூர்த் திருப்பூ திசுவரத்துப் பெருமானடிகள் பெயரைக்கொண்ட கொடும்பாளூரில் வாழ்ந்தவர் ஒருவர், ஈசானமங்கலம் என்ற பக்கத்துச் சிற்றூரில்

கிடந்த தரிசு நிலம் ஒன்றைக் கல்லி வயலாக்கி அதனைத் திருப்பராய்த் துறைப் பெருமானடிகள் ஆலயத்தில் விளக்கு எரிப்பதற்கு நிவந்தமாக வழங்கிய செய்தியைப் பரகேசரிவர்மனுடைய 8ஆம் ஆண்டுக் கல் வெட்டு ஒன்று குறிப்பிடுகிறது. பரகேசரிவர்மனுடைய 22ஆம் ஆண்டுக் கல்வெட்டு உறையூர்க் கூற்றத்துத் தலைவாய்ப்பட்டியைச் சார்ந்த மாறன் குடித்தலை அச்சன் ஆன இருபதின் எழுவோன் திருப்பராய்த்துறை சந்திரசேகரப் பெருமாள் (உலோகத் திருமேனி) அடிகளுக்கு நிலம் ஒன்றை 130 கழஞ்சுக்கு விலையாகக் கொடுத்த செய்தியைக் குறிக்கிறது. அரச குடும்பத்தைச் சார்ந்தவரும் கொடும்பாளூர் வாசியுமான நங்கைபூதி மாதேவடிகள் என்பார் உள் ளூர்க் கோயிலில் விளக்கு எரிப்பதற்கு உடலாக 90 ஆடுகளைத் தானம் செய்தமை கல்வெட்டொன்றால் போதருகிறது. பராந்தகனுடைய 20ஆம் ஆண்டுக் கல்வெட்டு அரசனுடைய தமக்கையாரான அரிஞ்சிகை ஆதித்தன் என்ற உமையாள் என்பார் ஒரு விளக்குக்காக 20 கழஞ்சு பொன் வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. ஏனைய இரண்டு கல்வெட்டுகளும் விளக்குகளுக்கும் நெய்க்கும் விடப்பட்ட நிவந்தங்களைக் குறிப்பிடுகின்றன. இக் கோயிலுக்கு முதல் இராச ராசன், முதல் இராசேந்திரன், மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆகிய மன்னர்கள் காலத்தில் நன்கொடைகள் பலவற்றை மக்கள் வழங்கிய செய்தியும் கல்வெட்டுகளால் உணரப்படுகிறது.

முற்பட்ட சோழர்காலத்துப் பழைய கோயில் அடியோடு புதுப் பிக்கப்பட்டதால், கட்டடக்கலை ஆராய்ச்சியாளருக்குப் பண்டைய சோழர்காலக் கலையை உணர்த்தும் வகையில் இக் கோயில் பயன்தருவ தாக இல்லை.

இக் கோயில் கல்வெட்டுகள் கோயில் புதுப்பிக்கப்பட்டபோது பாதுகாக்கப்படவில்லை என்பது வருந்தத்தக்கது. தென்னிந்தியக் கல்வெட்டிலாகாவினர் 'கோயில்களைப் புதுப்பிக்கும்போது பழைய கல்வெட்டுகளைக் காப்பாற்ற முயற்சி செய்யாமல் மக்கள் விடுத் தமைக்குப் பல எடுத்துக்காட்டுகள் உள்ளன. முக்கியமாகத் திருப்ப ராய்த்துறை இத்தகைய செயலுக்கு சிறந்த எடுத்துக்காட்டாகும். அக் கோயில் புதுப்பிக்கப்படுவதன் முன்னரே கல்வெட்டிலாகாவின ரால் 80 கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டுவிட்டன' என்று குறிப் பிட்டுள்ளனர். திருப்பராய்த்துறைக் கோயில் கல்வெட்டுகள் 46 தாம். ஏனையவை கொள்ளிடக்கரையில் திருவரங்கத்திற்குக் கிழக்கே 5 மைல் (8 கி.மீ.) தொலைவிலமைந்திருக்கும் திருப்பால்துறைக் (திருப்பாற்றுறைக்) கோயில் கல்வெட்டுகளே. திருப்பராய்த்துறை யையும் திருப்பால்துறையையும் ஒன்றாகக்கொண்ட மயக்கமே திருப்பராய்த்துறைக் கோயில் கல்வெட்டெண்ணிக்கை 80 ஆக உயர்ந்தமைக்குக் காரணமாகும்.

இப் புதுக்கப்பட்ட கோயிலின் அர்த்தமண்டப முகப்பின் இரு மருங்கிலும் காணப்படும் இரு துவாரபாலகர் சிலையும் தேவகோஷ்டத்தில் காணப்படும் அர்த்தநாரீசுவரர் சிலையும் கோயில் வெளிப் பிராகாரத்தில் ஒரு மரத்தடியில் வைக்கப்பட்டிருந்து தற்போது பம்பாய் பொருட்காட்சி சாலையில் இடம் பெற்றிருக்கும் பிரமன் சிலையும், தட்சிணாமூர்த்தி சிலையும் 9ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பழைய கோயில் சிலைகளாம்.

## திருப்பால்துறை—(திருப்பாற்றுறை)

**ஆதிமூலேசுவரர் கோயில் :**

திருப்பாற்றுறை என்பது ஸ்ரீரங்கம்—திருவானைக்கா என்பன வற்றிலிருந்து கல்லணையை (Grand Anicut) நோக்கி வரும் சாலையில் கொள்ளிடத்தின் தென்கரையில் திருவானைக்காவிலிருந்து 5 கல் (8 கி.மீ.) தொலைவில் உள்ளது. மேலணைக்கு அருகில் அகண்ட காவேரியின் தென்கரையில் அமைந்திருக்கும் திருப்பராய்த்துறையி லிருந்து இது வேறுபட்டதோர் ஊர் ஆகும்.

இவ்வூரில் பெரிய எறும்புப் புற்றுக்கு அடியில் இலிங்கம் ஒன்று புதைந்திருந்தது. இவ்விடத்தில் பொன்மயமான பறவையொன்று அடிக்கடி வந்து வட்டமிடுவதைச் சோழமன்னன் ஒருவன் கண்டான். உடனே இவ்விடத்தினடியில் ஏதோ சிறப்பான பொருளொன்று இருக்கக்கூடும் என்று அவ்வெறும்புப் புற்றை யகற்றி மண்ணைப் பறிக்கு மாறு மன்னன் ஆணையிட்டான். மண்ணைப்பறிக்கையில், மண்வெட்டி, அடியில் புதைந்திருந்த இலிங்கத்தின்மீது பட்டு அதனைச் சிறிது சிதைக்கவே, காயம்பட்ட இடத்திலிருந்து பால் பெருகி வரத் தொடங்கியது. பால் பொழியுமாறு வெளிப்பட்ட இலிங்கத்தைப் பிரதிட்டை செய்த இவ்விடம் திருப்பாற்றுறை என்று வழங்கப்படு கிறது என்று இவ்வூர்த் தலபுராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இவ்விறைவர் கல்வெட்டுகளில் 'மகாதேவ பட்டாரர்' அல்லது 'திருப்பாற்றுறைப் பரமேசுவரர்' என்று வழங்கப்படுகிறார். முதற் பராந்தக சோழன் புதல்வருள் ஒருவனான உத்தமசீலி என்பவன் பெய ரால் அமைந்த பிரமதேயமான உத்தமசீலி சதுர்வேதிமங்கலத்தின் ஒரு கூறாகத் திருப்பனம்பூதூர் என்ற பெயருடன் திருப்பாற்றுறை விளங்கி வந்தது எனவும் திருப்பாற்றுறைப் பரமேசுவரரின் கோயில் நிர்வாகம் உத்தமசீலி சதுர்வேதிமங்கலத்துச் சபையாரிடம் இருந்தது எனவும் அறிகிறோம். இவ்வாதிமூலேசுவரர் கோயில் மண்டபத்தின் வட சுவரில் மூன்றாம் நந்திவர்மனுடைய 22ஆம் ஆண்டுக் (கி.பி. 857) கல்வெட்டொன்று காணப்படுகிறது. அது திருப்பாற்றுறை மகாதேவ

பட்டாரர் கோயிலுக்கு இரண்டு விளக்கு எரிப்பதற்கு நிவந்தம் விட்ட செய்தியைக் குறிக்கிறது. இக் கல்வெட்டைக்கொண்டே இக் கோயில் ஒன்பதாம் நூற்ருண்டின் இடைப் பகுதியில் இருந்த செய் தியை உணரலாம். இக் கோயில் முதல் ஆதித்தன் காலத்தில் இருந்தது எனினும் இதிலுள்ள எந்த இராசகேசரிக் கல்வெட்டையும் முதல் ஆதித்தன் காலத்தது என்று வரையறுத்துக் கூற இயலவில்லை.

இக் கோயிலில் பராந்தகன் கல்வெட்டுகள் இருந்த செய்தி பிற்பட்ட கல்வெட்டொன்றில் உறுதி செய்யப்பட்டுள்ளது.

உத்தம சோழனுடையதாகக் கருதப்படும் பரகேசரிவர்மனின் 8ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று பழைய நடுக் கோயிலின் படிக் கட்டுகளில் வெட்டப்பட்டிருந்த முதற் பராந்தகனுடைய 18ஆம் ஆண்டினையும் 20ஆம் ஆண்டினையும் சார்ந்த இரு கல்வெட்டுகளை உத்தமசீலி சதுர்வேதிமங்கலத்துச் சபையார் கோயிற் சுவர்களில் மீண்டும் வெட்டுமாறு ஆணையிட்ட செய்தியை குறிப்பிடுவது கொண்டு இக் கோயில் இக் கல்வெட்டு தோன்றுவதற்குச் சில ஆண்டு களுக்கு முன் புதுப்பிக்கப்பட்டிருக்கலாம் என்று கருத இடம் ஏற்பட் டுள்ளது.

இராசகேசரிவர்மன் கல்வெட்டுகள் சில முதற் பராந்தகன் மகனான கண்டராதித்தனுக்கு உரியவையாகும். அவனுடைய 8ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று முதற் பராந்தகன் மகனுரான பிள்ளை யார் அரிகுலகேசரியாரின் ஆணை பெற்ற அதிகாரியான பல்லவரையர் என்னும் கீழ்மாத்தூர்ப் பருவூரான் உத்தமசீலி சதுர்வேதி மங்கலத் தாரிடம் இறை திரவியம் செலுத்தி இறையிலியாக்கிய நிலம் ஒன்றை உத்தமசீலி சதுர்வேதி மங்கலத்தைச் சார்ந்த சிற்றூரான திருப்பனம் பூதூர் (திருப்பாற்றுறை) ஆதிமூலேசுவரர் கோயிலுக்கு நிவந்தமாக விட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. இதே கொடையாளியால் இராசகேசரியின் 9ஆம் ஆண்டில் விடப்பட்ட நிலமும் உத்தமசீலி சதுர்வேதிமங்கலத்துச் சபையாரால் இறையிலியாக்கப்பட்ட செய்தி யும் கல்வெட்டால் அறியப்படுகிறது.

சுந்தரசோழன் காலத்ததாகக் கருதப்படும் இராசகேசரியின் 5ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று ஆதனூரைச் சார்ந்த பாலாசிரியன் பட்டன் சிவகூத்தன் என்பான் திருப்பாற்றுறை மகாதேவருக்குத் திருவிளக்கிற்காகவும் நண்பகல் நிவேதனத்திற்காகவும் மற்றத் திருத்தொண்டுகளுக்காகவும் நிலக்கொடை யளித்த செய்தியைக் குறிப்பிடுகிறது. மேலும் உத்தமசீலி சதுர்வேதிமங்கலத்துப் பெருங் குறிச் சபையார் திருவானைக்காவல் திருவெண்ணாவலுடையாரின்

திருச்சுற்றுலேயின் மேற்கு மூலேயில் கூடிப் பாலாசிரியன் நிவந்தமாக விட்ட நிலத்திற்கு இறைதிரவியமாக 50 ஈழக்காசுப் பொன் கொண்டு அந் நிலத்தை இறை இழிச்சி அச் செய்தியைக் கல்லில் வெட்டுமாறு ஆணையிட்ட செய்தியும் இக் கல்வெட்டால் போதருகிறது. 'இத் தர்மத்திற்குத் திங்கு செய்பவர்களைத் திருப்பாற்றுறைக் கோயில் தேவதன்மிகளும் 78 நாட்டுப் பன்மாகேசுவரரும் தண்டிப்பாராக' என்று தர்மத்தின் பாதுகாவலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

காமரசவல்லியிலுள்ள கற்கோடீசுவரர் கோயிலுக்குச் சுந்தர சோழனுடைய 5ஆம் ஆண்டில் இதே பாலாசிரியன் நிலம் ஒன்று வழங்கிய செய்தியும் மனங்கொள்ளத் தக்கது.

உத்தமசோழன் காலத்தில் முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகள் இரண்டு மீண்டும் செதுக்கப்படுவதற்கு ஆணையிடப்பட்ட செய்தியை முன்னர் நோக்கினேம்.

இக் கோயில் ஒன்பதாம் நூற்றுண்டைச் சார்ந்ததாகும்.

அரசினர் கல்வெட்டிலாகாவினர் திருப்பாற்றுறையையும் திருப்பராய்த்துறையையும் ஒரே ஊராகக் கருதி 1903ஆம் ஆண்டில் எடுக்கப்பட்ட 244 முதல் 290 வரை உள்ள கல்வெட்டுகளையும், 1907ஐச் சார்ந்த 169 முதல் 180 வரை உள்ள கல்வெட்டுகளையும், 1908ஐச் சார்ந்த 562 முதல் 586 வரையில் உள்ள கல்வெட்டுகளையும் திருப்பராய்த்துறைக் கல்வெட்டுகளாகவே குறிப்பிட்டுவிட்டனர். 'அண்மையில் திருப்பணி செய்யப்பட்ட திருப்பராய்த்துறைக் கோயிலில் பழைய கல்வெட்டுகளில் ஒன்றுதான் காணப்படுகிறது. கல்வெட்டுகள் அமைந்த பழைய கற்களை உடைத்தும் உட்புறமாக வைத்துக் கட்டியும் கல்வெட்டுகளை அழித்துவிட்டனர். திருப்பணி செய்த நகரத்தார்கள் கல்வெட்டுகளின் அருமையை அறிந்தவர்கள் அல்லர். நல்லகாலமாக இக் கல்வெட்டுகள் முன்னரே படியெடுக்கப்பட்டுவிட்டன.' அவற்றில் 1907ஐச் சார்ந்த 169 முதல் 180 வரை உள்ளனவும் 1908ஐச் சார்ந்த 562 முதல் 586 வரையுள்ளனவுமான கல்வெட்டுகள் காணப்படுவனவாதலால் 1903ஆம் ஆண்டில் எடுக்கப்பட்ட 244 முதல் 290 வரையில் உள்ளனவே (46 கல்வெட்டுகள்) திருப்பராய்த்துறையைச் சேர்ந்தனவாக முடிவு செய்து, இந்தியக் கல்வெட்டிலாக்காத் துறைத் தலைவர் ஸர்கார் என்பவருக்கு நான் எழுதிய அளவில் 'தங்கள் கடிதத்தில் குறிப்பிட்டபடி திருப்பராய்த்துறையும் திருப்பாற்றுறையும் வெவ்வேறு ஊர்களே. இரண்டு ஊர்களையும் ஒன்றாக்கிக்கொண்ட கருத்தை மாற்றிக் கொள்கிறேம்' என்ற விடை கிடைத்தது. எனவே, இவ்வூரைச் சேர்ந்த (திருப்பாற்றுறை) கல்வெட்டுகள் 37 என்பது கல்வெட்டிலாகாவினருக்கும் உடன்பாடாயிற்று. (List of Inscriptions

copied by the Superintendent for Epigraphy, Madras up to 1938, page 90 published in 1941).

நந்திவர்மன் காலத்துக்கு முற்பட்ட இக் கோயில் முதற் பராந்தகன் காலத்தை யொட்டிப் புதுப்பிக்கப்பட்ட நிலை குலையாமலேயே பாதுகாக்கப்பட்டுள்ளது.

## வாலிகண்டபுரம்

### வாலிகண்டேசுவரர் கோயில் :

வாலிகண்டபுரம் திருச்சி மாவட்டத்துப் பெரும்பலூர் தாலுக்காவில் திருச்சியிலிருந்து சென்னைக்குச் செல்லும் பெருவழியில் 38 கல் (60·8 கி.மீ.) தொலைவில் உள்ளது. இவ் வூர் வாலியின் பெயரோடு தொடர்பு கொண்டுள்ளது. இங்குள்ள வாலிகண்டேசுவரப்பெருமாள் வாலியால் வழிபடப்பட்டவர் என்று நம் முன்னவர் கருதினர் போலும். இவ்வூர் வில்வாரண்யம் என்றும் வழங்கப்படுகிறது.

இங்கு இராசகேசரிவர்மனுடைய 4ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் நான்கு காணப்படுகின்றன. அவற்றுள் ஒரு கல்வெட்டின் அடியில் முதற் பராந்தகனுடைய நான்காம் ஆண்டுக் கல்வெட்டு காணப் படுவதுகொண்டு, அக் கல்வெட்டு முதல் ஆதித்தன் காலத்தது எனக் கருதலாம். அக் கல்வெட்டில் சங்கரப்பாடி நகரத்தார் என்ற எண்ணெய் வாணிகக் குழுவினர் 7½ கழஞ்சு பொன்கொண்டு அதற்காக இக் கோயிலில் நந்தா விளக்கு ஒன்று எரிப்பதற்கு ஒத்துக்கொண்ட செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

அடைமொழி ஏதும் இல்லாத பரகேசரிவர்மன் கல்வெட்டுகள் ஏழும், மதுரைகொண்ட பரகேசரியான முதற் பராந்தகனுடைய 4ஆம் ஆண்டு முதல் 40ஆம் ஆண்டுவரை காணப்படும் கல்வெட்டுகள் 16-ம் இக் கோயிலில் காணப்படுகின்றன. அடைமொழியில்லாத பரகேசரியின் கல்வெட்டுகளில் ஒன்றுவது முதற் பராந்தகனுடையதாகத் தோன்றுகிறது. பரகேசரியின் 4ஆம் ஆண்டுக் கல்வெட்டு வன்னாடுடையார் அக்கோப்புகழரையர் மகளாரும் வீரசோழ மிலாடுடையார் தேவியாருமான நாட்டடிகள் என்பார் ஒரு விளக்கிற்கு 7½ கழஞ்சு பொற்கொடை வழங்கிய செய்தியைத் தெரிவிக்கிறது. பரகேசரியின் 16ஆம் ஆண்டில் மங்கலபுரவாசி ஒருவர் இக் கோயில் இறைவற்கு ஒரு களாஞ்சி, கண்ணாடி, ஒரு கழஞ்சு எடையுள்ள பொன்னாலாகிய நெற்றிப் பட்டம் ஆகியவற்றை வழங்கினர் என அறிகிறோம். பராந்தகனுடைய 24ஆம் ஆண்டில் அக்கோப்புகழரையர் இக் கோயிலுக்கு ஒரு விளக்கை நன்கொடையாக வழங்கினர். முதற்

பராந்தகனுடைய மகனுரான பிள்ளையார் இராசாதித்தருடைய அதிகாரியான காணிநாயகம் ஆகிய குமராதி திருவரங்கன் என்பான் இவ்விறைவனுக்கு இரண்டு நெற்றிப் பட்டங்கள் வழங்கிய செய்தி அறியப்படுகிறது. முதற் பராந்தகனுடைய 19ஆம் ஆண்டுக் கல்வெட்டும் 33ஆம் ஆண்டுக் கல்வெட்டும் சங்கரப்பாடி வணிகர் தொகுதியினர் வாழ்ந்த ‘கண்டருள் கண்ட பெருந்தெரு’ என்ற பெருந்தெருவின் பெயரைக் குறிப்பிடுகின்றன.

சுந்தர சோழன் காலத்ததாகக் கருதப்படும் இராசகேசரியின் 14ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று உடையார்குடி எனப்பட்ட காட்டு மன்னுர் குடியில் ‘கண்டருள் கண்டவீதி’ என்ற தெருவின் பெயரைச் சுட்டுகிறது. இவற்றை நோக்கக் கண்டருள் கண்டன் என்ற பெயர் முதற் பராந்தகனுடைய விருதுகளுள் ஒன்ருக இருக்கலாம் என்று தோன்றுகிறது. உடையார்குடி என்பது முதற் பராந்தகனுல் நிர்மாணிக்கப்பட்ட வீரநாராயண சதுர்வேதிமங்கலம் என்ற தற் காலக் காட்டுமன்னுர் கோயிலின் (குடியின்) ஒரு பகுதியாகும். தன்னுல் நிர்மாணிக்கப்பட்ட ஊரின் ஒரு தெருவுக்குத் தன் விருதுப் பெயரையே வழங்கச் செய்வது பொருத்தமானது அன்ருே?

பராந்தகனுடைய 31ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று வெண் ணுட்டு நாட்டார்களும், தேவரடியார்களும், வாலிகண்டபுரத்து நகரத்தார்களும், சிவனடியார்களும் குமராதி திருவரங்கனிடம் பொருளை ஒப்படைத்து வாலிகண்டபுரத்திலுள்ள வாலிகண்டீசு வரத்துப் பெருமாளுக்குத் திருச்சுற்ருலை எழுப்பிக்க ஏற்பாடு செய்த செயலைத் தெரிவிக்கிறது.

சுந்தர சோழன் காலத்ததாகிய மற்ருெரு இராசகேசரிக் கல் வெட்டு மறவன் தூங்கானை என்ற பராந்தக வளநாடுடைய அவன் மைத்துனனுகிய வாணராயன் அரவிந்தன் இராசாதித்தனும் தங்க ளுக்குள் தட்டுப்போர் தொடங்க அதில் வாணராயன் தோற்கடிக்கப் பட்டான். பூசலில் இறந்தவன் இறைவன் அருளை அடைவதற்காக உயிர் தப்பியவன் ஒரு நந்தாவிளக்கு எரிக்குமாறு ஆணையிடப் பட்டான். இக் கல்வெட்டில் பராந்தகன் இராசாதித்தன் என்ற அரச குடும்பத்தார் பெயர்கள் அமைந்திருப்பதுகொண்டு இது முதற் பராந்தகன் மகனுன இராசகேசரி கண்டராதித்தன் காலத்தது என்று கூறுவதும் பொருந்தும். முதல் ஆதித்தன் காலத்ததாகக் கருதப் படும் இக் கோயிலில் பிற்காலச் சோழர் கல்வெட்டுகளும் பலவாக உள்ளன.

இக் கோயிலின் கருவறை சதுரமானது. அதன் பக்க அளவு 15½ அடியாகும். அடித்தளத்தில் தாமரை இதழ்களும், அவற்றிற்கு

மேல் குமுதமும், அவற்றின்மேல் யாளி வரிமானமும் செதுக்கப்பட்டுள்ளன.

குமுதங்களாலும் பலகைகளாலும் அணி செய்யப்பட்ட அரைத் தூண்கள் 5½ அடி உயரம் உடையவை. போதிகைகள் சாதாரணமாகவும் கோண வடிவாகவும் உள்ளன. கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசை இல்லை.

தற்போது காணப்படும் உருண்டையான சிகரம் பிற்காலத்தில் அமைக்கப்பட்டதாகும். முன்புறம் காணப்படும் இரண்டு மண்டபங்களும் பிற்காலக் கட்டடங்களே.

## திருமழபாடி

**வைதீசுவர சுவாமி கோயில் (வயிரத்தூணுதர்):**

திருச்சி மாவட்டத்தில் உள்ள திருமழபாடி கொள்ளிடத்தின் வட கரையில் அமைந்துள்ளது. திருச்சி—அரியலூர்ப் பெரு வழியில் லால்குடியிலிருந்து 7 கல் (11 கி.மீ.) தொலைவிலுள்ள புள்ளம்பாடியிலிருந்து கொள்ளிடக் கரையை நோக்கிச் செல்லும் கிளைச் சாலையில் 11 கல் (17·6 கி.மீ.) தொலைவில் திருமழபாடி அமைந்துள்ளது. மழவர்கள் என்ற கூட்டத்தார் இங்குக் குடியேறியிருந்த காரணத்தால் இது மழபாடி எனப்பட்டது. இப் புனிதமான கோயில் இதனுடைய நீண்ட வரலாற்றுக் காலம் முழுவதும் அரசர்களாலும் மக்களாலும் சிறப்புறக் கொண்டாடப்பட்டு வருவதாகும்.

இங்குள்ள 23, 27ஆம் ஆண்டுகளைச் சார்ந்த இரண்டு இராசகேசரி கல்வெட்டுகள் முதல் ஆதித்தன் காலத்தைச் சார்ந்தவை. முதற் கல்வெட்டு திருமழபாடி மகாதேவருக்குத் தேவதானமாக நிலம் வழங்கப்பட்ட செய்தியைத் தெரிவிப்பதாகும். வல்லப அரையருடைய மகளாரும் சோழப்பெருமானடிகளுக்கு முன்னம் புகுந்த முதல் தேவியாரும் ஆன இளங்கோ பிச்சையாரால் ஒரு விளக்குத் தண்டும் பத்துக் கழஞ்சுப் பொன்னும் திருமழபாடி மகாதேவருக்கு வழங்கப்பட்ட செய்தியை 27ஆம் ஆண்டுக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டின் எழுத்தை நோக்கிக் கல்வெட்டிலாகாவினர் இது முதல் இராசராசனுடையது என்று குறிப்பிட்டுள்ளனர். இக் கோயில் முதல் இராசேந்திரன் காலத்தில் புதுப்பிக்கப்பட்டபின் மீண்டும் வரையப்பட்ட பழங் கல்வெட்டுகளுள் இதுவும் ஒன்று என்பது உளங்கொளத் தக்கது. உயர்ந்த ஆட்சி யாண்டினையும், முதல் இராசராசன் காலத்தது என்று கருதுதற்குப் பயன்படும் மெய்க்கீர்த்திப் பகுதி ஏதும் இன்மையையும், இக்கல்வெட்டு மீண்டும்

வெட்டப்பட்ட பழைய கல்வெட்டின் பிரதி என்பதனையும் நோக்க, இது முதல் ஆதித்தன் காலத்தது என்று கொள்வதே ஏற்புடையது. காலஞ்சென்ற இராமநாதய்யர் இவ் வல்லவரையர் இரட்ட மன்ன ரான இரண்டாம் கிருஷ்ணரே என்றும் இளங்கோ பிச்சை அவருடைய மகளாதல் வேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

முதற் பராந்தகனுடைய 12, 18, 20ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் மூன்றும் விளக்கெரிப்பதற்காக வழங்கப்பட்ட தானங்களைப்பற்றிக் குறிப்பனவாகும்.

சுந்தர சோழனுடையதாகக் கருதப்படும் இராசகேசரியின் 17ஆம் ஆண்டுக் கல்வெட்டும் விளக்கெரிப்பதற்காக வழங்கப்பட்ட நன் கொடை பற்றியே அமைந்துள்ளது. முதல் இராசராசன் தன் னுடைய 28ஆம் ஆண்டு 39ஆம் நாள் இப் பழைய கோயிலை இடித்துப் புதுக்கோயில் எடுப்பிக்குமாறு ஆணையிட்டான் என்று அறிகிறோம். முதல் இராசேந்திரன் தன் 14ஆம் ஆண்டு 70ஆம் நாள் புதிதாக எடுப்பித்த கோயிலின் சுவர்களில் பழைய கல்வெட்டுகளின் பிரதிகளை மீண்டும் வெட்டுவிக்குமாறு ஆணையிட்டான் என்று கல்வெட்டொன்று குறிக்கிறது. பழைய அறக்கட்டளை பற்றிய விவரங்களையும் அவற்றின் மூலம் வரலாற்றுச் செய்திகளையும் பாதுகாப்பதில் சோழமன்னர்கள் கொண்ட சிரத்தை இதிலிருந்து வெளியாகிறதன்றோ !

முதல் ஆதித்தன் காலத்ததாகிய இக் கோயில் மீண்டும் முதல் இராசராசனுடைய 28ஆம் ஆண்டிற்கும் முதல் இராசேந்திரனுடைய 14ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட பகுதியில் புதுப்பிக்கப்பட்ட தாகும்.

## குமாரவயலூர்

**அக்நீசுவரர் கோயில் :**

திருச்சி மாவட்டத்திலுள்ள குமார வயலூரில் பழைய சோழர் கோயில் ஒன்று உள்ளது. தற்போது அக்நீசுவரர் கோயில் என்று வழங்கப்படும் அது 'திருக்கற்றளிப் பரமேசுரர் கோயில்' என்று முற் காலத்தில் வழங்கப்பட்டது. அக் கோயிலில் அடை மொழியில்லா இராசகேசரிவர்மன் கல்வெட்டுகள் ஏழு உள்ளன. அவற்றுள் சில முதல் இராசராசன் காலத்தனவாகலாம். ஆனால் இராசகேசரிவர்ம னுடைய 31ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதல் ஆதித்தன் காலத்த தாகவே கருதப்பட வேண்டுவதாகும். அது வயலூர் மகாதேவருக்கு ஒரு விளக்கிற்காக வழங்கப்பட்ட 30 கழஞ்சுப் பொன்னைக் கொண்டு ஊர்ச் சபையினர் அவ்வறத்தைப் பாதுகாப்பதன் பொருட்டு நிலம் வாங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

முதற் பராந்தகனுடைய மூன்று கல்வெட்டுகள் முறையே அவனுடைய 7, 14, 41ஆம் ஆண்டுகளைச் சார்ந்தனவாக உள்ளன. அவனுடைய 41ஆம் ஆண்டுக் கல்வெட்டு அம் மன்னன் தன்னுடைய 35ஆம் ஆண்டுக்குமுன் கல்லல் என்ற ஊரிலிருந்து பகைவர்களிடம் கைப்பற்றிவந்த பெண்டிர் மூவரை உறையூர்க் கூற்றத்திலுள்ள வயலூர்க் கோயிலில் திருப்பதியம் விண்ணப்பம் செய்யவும், திருச் சாமரம் வீசவும் பணியாட்களாக நியமித்த செய்தியைக் குறிப் பிடுகிறது.

உத்தமசோழன் காலத்ததாகக் கருதப்படும் பரகேசரி வர்ம னுடைய 15ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று அக் கோயிலில் 'உமா பட்டாரிகை' என்ற அம்மனை நிறுவிய செய்தியைக் குறிப்பிடுகிறது. தனக்குப் பின் வாரிசு எதுவும் இல்லா சேந்தன்காரி என்பாள், இந்த அம்பிகையைத் தன் பெண்ணாக ஸ்வீகரித்துக் கொண்டு, இறைவனோடு அம்பிகையின் திருமணத்தைச் சிறப்புற நிகழ்த்தித் தான் சீதன மாகப் பெற்ற செல்வங்களை அம்பிகையின் நிவேதனங்களுக்கும் வழி பாட்டிற்குமாக வழங்கிய செய்தி குறித்துணரத்தக்கது.

## கும்பகோணம்

### நாகேசுவரர் கோயில் :

காஞ்சிபுரத்தையும் உத்தரமேரூரையும் போலவே தஞ்சை மாவட் டத்தைச் சார்ந்த கும்பகோணமும் கோயில்கள் நிறைந்த பேரூ ராகும். இதனை குடமூக்கு என்று வழங்குவர். ஆழ்வார்களின் பாசு ரங்களில் இது திருக்குடந்தை என்றே வழங்கப்படுகிறது. 'சர்வேசு வரன் பிரமனிடம் அமிர்தம் நிரப்பப்பெற்ற குடம் ஒன்றை ஒப்படைத்தான். படைத்தற்றொழிலுக்கு அடிப்படையாக உதவிய அக் குடத்தை பிரமன் மேருமலையில் பத்திரமாக வைத்திருந்தான். பெரிய பிரளயத்தின்போது அக் குடம் மிதந்து வெளியே வரலா யிற்று. வெள்ளம் வடிந்தபோது அக் குடம் திருக்குடந்தைக் கருகில் வந்து தங்கிவிட்டது. சிவபெருமான் அக் குடத்தில் உள்ள பொருளை அறிவதற்காகக் குடத்தின்மீது அம்பு எய்யவே அமிர்தம் வெளியே பெருகி வரலாயிற்று. பெருகி வெளிப்பட்ட அமிர்தத்தி லிருந்து கும்பேசுவரர் தோன்றினார்' என்று தலபுராணம் கூறுகிறது. கும்பேசுவரர் கோயிலே இங்குள்ள மிகப் புனிதமான பழங்கோயி லாகும். அமிர்த குடத்தின் நினைவால் இவ்வூர் திருக்குடமூக்கு என்று வழங்கப்படுவதாயிற்று.

பழையதான கும்பேசுவரர் கோயிலுக்குக் கிழக்கில் அமைந்ததும் நாகராசனால் வழிபடப்பட்ட இறைவனை உடையதுமாகிய பழைய

கோயிலொன்று 'திருக்கீழ்க்கோட்டம்' எனவும் 'நாகேசுவரர் கோயில்' எனவும் வழங்கப்படுகிறது. பொன்னியாற்றின் கரைபுரண் டோடும் நீர்வளம் பெற்ற குடந்தையின் கீழ்க் கோட்டத்தி லமர்ந்த கூத்தனுரான நாகேசுவரருடைய பெருமையைத் திருநாவுக்கரசர் தம்முடைய தேவாரத் திருப்பதியங்களில் பாடியுள்ளார். இக் குடந் தையிலும் இதன் அருகிலும் மூன்று பெரும் போர்கள் நிகழ்ந்தன. தெள்ளாறெறிந்த நந்திவர்மன் குடமூக்கில் பாண்டியனிடம் தோற்றுன். ஆனல் அவன் பாண்டியனே மீண்டும் குடந்தையின் அருகில் ஓடும் அரிசிலாற்றங்கரையிலும், குடந்தைக்குச் சில கல் தொலேவிலுள்ள திருப்புறம்பியம் (திருப்புறம்பயம்) என்ற ஊரிலும் முறியடித்தான் என்று அறிகிருேம்.

இக் கோயிலிலுள்ள அம்மன் ஆலயத்தில் பாண்டிய மாறஞ் சடையனுடைய 8ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் காணப்படுகிறது. இம் மாறஞ்சடையன் என்ற பெயர் பாண்டிய வரகுணனேயோ, பராந் தகன் நெடுஞ்சடையனேயோ குறிப்பதாகலாம். அது திருக்குட மூக்கிலுள்ள திருக்கீழ்க் கோட்டத்துப் பட்டாரருக்கு அப் பாண்டிய மன்னன் இரண்டு விளக்குகள் எரிப்பதற்காக 100 காசும், பாலுக்காக 138 பசுக்களும் நன்கொடை வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. எனவே, இக் கல்வெட்டு அம்மன் கோயிலேச் சார்ந்ததன்று. பழைய தாக இறைவன் கோயில் கல்வெட்டான இது அக் கோயில் புதுக்கப் பட்ட காலத்தில் தோன்றியிருக்கக்கூடிய, பிற்பட்ட காலத்ததான அம்மன் கோயிலில் மீண்டும் இணைக்கப்பட்டது போலும். இக் கோயிலில் அடைமொழிகள் இல்லாத பரகேசரிக் கல்வெட்டுகள் சிலவற்றையும் இராசகேசரிக் கல்வெட்டுகள் சிலவற்றையும் காண லாம். அவற்றுள் இராசகேசரி வர்மனுடைய 15ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று முதல் ஆதித்தன் காலத்தது ஆகலாம். அது கலேயன் மாணிக்கம் என்பான் கோயிலுக்கு ஆடுகள் வழங்கிய செய் தியையும், கோயிலுக்கு இரு தடமும் கடாரம் ஒன்றும் நன்கொடை யளித்த செய்தியையும் குறிப்பிடுகிறது.

முதற் பராந்தகனுடைய 27ஆம் ஆண்டிலிருந்து 40ஆம் ஆண்டு வரையில் சில கல்வெட்டுகள் உள்ளன. பரகேசரி வர்மன் என்று பொதுவாக அடைமொழி எதுவும் இல்லாக் கல்வெட்டும் முதற் பராந்தகன் காலத்ததாகலாம். இவை பெரும்பாலும் இக் கோயி லுக்கு விளக்கு எரிப்பதற்காக விடப்பட்ட நிவந்தங்களேப் பற்றியே அமைந்துள்ளன. தற்போது கோயிலின் வடகிழக்கு மூலேயில் அமைந் திருக்கும் சூரியதேவருக்கு விளக்கு எரிக்கவும் சீதாரி புகைக்கவும் நிவந்தமாக விடப்பட்ட நிலக்கொடை ஒன்று இம் மன்னனுடைய 40ஆம் ஆண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. பராந்தகன்

காலத்தது என்று உறுதியாக வரையறுக்கத் தக்க வகையில் அமைந்துள்ள இச் சூரியன் சிலை 9ஆம் நூற்றாண்டைச் சார்ந்த மிக அழகிய சிலைகளுள் ஒன்றாகும்.

கண்டராதித்தனுக்கு உரியனவாகக் குறிப்பிடத்தக்க இராசகேசரிக் கல்வெட்டுகள் இரண்டு உள்ளன. முதற் கல்வெட்டு, தஞ்சாவூர் வாசியான வீரசோழத்தெரிஞ்ச கைக்கோளரில் ஒருவர் திருவிளக்குக்கு வழங்கிய நன்கொடையைக் குறிப்பிடுகிறது. வீரசோழன் என்பது முதற் பராந்தகனின் விருதுப் பெயராகும்.

அடுத்த கல்வெட்டுப் பாண்டியப் படையின் செலவினங்களுக்காகத் திருக்குடமூக்குச் சபையாருக்கு 3,000 கழஞ்சுப் பொன்னை மதுரைகொண்ட உடையாரான முதற் பராந்தகன் தண்டம் விதித்த செய்தியையும், உள்ளூர்ச் சபையார் அரிசிலாற்றில் (அரசலாறு) தங்களுக்குச் சொந்தமாக இருந்த நிலங்கள் சிலவற்றைத் திருக் கீழ்க் கோட்டத்துப் பரமசுவாமியிடம் 500 கழஞ்சுப் பொன்னுக்கு விற்றுத் தண்டத்தின் ஒரு பகுதியைக் கட்டின செய்தியையும் குறிப்பிடுகிறது. முதற் பராந்தகன் முடிசூடிய காலத்தில் இவ்வூர்ச் சபையாரிடம் அறச் செயல்கள் செய்வதற்கு அபிஷேக தட்சிணையாக வழங்கிய நிலத்தின் ஒரு பகுதியே விற்கப்பட்ட இந் நிலம் என்பதும் இக் கல்வெட்டால் அறியப்படுகிறது.

பாண்டியன் முடித்தலை கொண்ட பரகேசரியான இரண்டாம் ஆதித்தனுடைய கல்வெட்டுகளில் ஆறு இங்குக் காணப்படுகிறது. 3ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று திருக்கீழ்க் கோட்டத்துப் பெருமானடிகள் திருக் கோயிலில் ஐந்து சிவ யோகிகளுக்கும், வேதங்களில் வல்ல அறிஞர்கள் 20 பேர்களுக்கும் உணவிடுவதற்காகக் கோயில் மாவலி என்ற பராந்தக மூவேந்த வேளானிடம் திருக்குடந்தைச் சபையினர் நிலம் ஒன்றை விட்ட விவரத்தை விளம்புகிறது. அதே ஆண்டில் அதே பராந்தக மூவேந்த வேளான் திருக்குடமூக்கு ஊர்ச் சபையாரிடம் நிலம் ஒன்றை வாங்கிப் 'பிரபாகருடைய மீமாம்சைத்' தத்துவத்தைச் சொற்பொழிவு செய்துவந்த ஆசிரியர் ஒருவருக்குப் பட்ட விருத்தியாக வழங்கினான். முதற் பராந்தகனுடைய மகனாரும் தக்கோலத்தில் இறந்தாருமான இராசாதித்தரான ஆனைமேல் துஞ்சிய தேவரின் தாயாரான உடைய பிராட்டியார் கிழான் அடிகளின் பணிப் பெண் ஒருத்தி திருக்கீழ்க் கோட்டத்துப் பரமேசுவரருக்கு விளக்கு ஒன்றை நன்கொடையாக வழங்கிய செய்தியை நான்காம் ஆண்டுக் கல்வெட்டொன்று குறிப்பிடுகிறது. இதே பணிப்பெண் இதே ஆண்டில் 50 அந்தணர்களுக்கு உணவிடுவதற்காக நன்கொடையொன்று வழங்கியுள்ளாள். தஞ்சாவூர்ப் பழைய வேளத்தைச் சார்ந்த

பணிமகள் ஒருத்தி ஒரு சிவயோகிக்கு உணவு இடுவதற்காக திருக் குடந்தைச் சபையாரிடமிருந்து 85 கழஞ்சுப் பொன் கொடுத்து விலைக்கு வாங்கிய நிலத்தை நிவந்தமாக விட்ட செய்தியும் இரண்டாம் ஆதித்தன் காலத்துக் கல்வெட்டொன்றால் உணரப்படுகிறது.

உத்தமசோழனுடைய 4, 8, 13 ஆகிய ஆண்டுகளைச் சார்ந்த கல்வெட்டுகளும் இங்குக் காணப்படுகின்றன. முதல் இரண்டுக் கல் வெட்டுகளும் விளக்குகளுக்காக வைக்கப்பட்ட நன்கொடைகளைக் குறிப்பனவாகும். 13ஆம் ஆண்டுக் கல்வெட்டு உத்தம சோழருடைய நம்பிராட்டியாரான வீரநாராயணியார் கோயிலுக்குப் பூமாலைகள் அமைத்துத் தருவதற்கு வைத்த நிலக்கொடை பற்றிக் குறிப் பிடுகிறது.

முதல் இராசராசனுடையதாகக் கருதப்படும் இராசகேசரியின் 5ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் வீரசோழத் தெரிஞ்ச கைக் கோளர் அங்கத்தினனான தேவன் குப்பன் என்பான் தேவருக்கு 'வெள்ளித் திருமேனி' யொன்று அமைக்கச் செய்து பாண்டியன் முடித்தலை கொண்ட பரகேசரியான இரண்டாம் ஆதித்தன் காலத்தில் தான் நன்கொடையாக வைத்திருந்த 70 ஈழக்காசின் வட்டியைக் கொண்டு இறைவனின் வெள்ளித் திருமேனிக்கு நாள்தோறும் மும் முறை நிவேதனம் வழங்க ஏற்பாடு செய்தான் என்ற செய்தி காணப் படுகிறது.

இக் கோயில் ஸ்ரீ விமானத்திலுள்ள செல்வப் பிரானுக்கு நிவே தனம் வழங்குவதற்கு உள்ளூர்ச் சபையாரால் நிலம் ஒன்று நிவந்த மாக விடப்பட்ட செய்தி முதல் இராசராசனின் 6ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றால் அறியப்படுகிறது. இதனால் விமான தேவதை களுக்கும் பூசனைகள் நிகழ்ந்த செய்தி உணரப்படும். எட்டாம் ஆண்டுக் கல்வெட்டொன்று உற்சவ மூர்த்தியான சந்திரசேகர தேவருக்கும் பூசனை நிவேதனங்கள் முறையாக இருந்துவந்த செய்தியை வெளியிடுகிறது.

நாகேசுவரர் கோயில்:

சூரியபகவான் இக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனை வழிபட்டு விசுவகர்மாவின் சாபத்தால் தாம் இழந்த ஒளியை மீண்டும் பெற்றார் என்று தலபுராணம் கூறும். கதிரவன் பூமத்தியரேகைக்கு நேராக இருக்கும் நாட்களில் காலைக் கதிரவன் கிரணங்கள் இக் கோயில் இறைவன் திருமேனியில் படிகின்றன என்று கூறுகின்றனர். எனவே, இதற்குப் பாஸ்கர க்ஷேத்திரம் என்பதும் பெயர். இக் கோயிலின் தலவிருட்சம் வில்வம் ஆதலின் இது வில்வவனம்

(வில்வாரண்யம்) எனவும் வழங்கப்படுகிறது ஆதிசேடன் இங்குள்ள இறைவனை வழிபட்டு அவன் அருளால் இப் பூமியைத் தாங்கும் ஆற்றல் பெற்றான் ஆதலின் இது நாகேசுவரர் கோயில் எனவும் வழங்கப்படுகிறது.

இது இருதளக் கற்றளி. இதன் சிகரம் வட்டமானது. கருவறை சதுரமானது. அதன் பக்க அளவு 20½ அடி. அதன் முப்புறங்களிலும் தேவகோஷ்டங்கள் உள. தெற்கில் தட்சிணாமூர்த்தியும் மேற்கில் அர்த்தநாரீசுவரரும், வடக்கில் பிரமனும், தேவகோஷ்டச் சிலைகளாகக் காட்சி யளிக்கின்றனர். அர்த்தமண்டப தேவகோஷ்டங்களில் பிட்சாடணர் சிலையையும் துர்க்கை சிலையையும் காண்கிறோம். இத் தேவகோஷ்டங்களுக்கிடையே சிலைகள் நின்ற வடிவில் கண்கவர் வனப்பினவாகக் காட்சி யளிக்கின்றன. கருவறை அடித்தளத்தின் வெளிப்புறத்தில் காணப்படும் சிற்றுருவச் சிலைகளும் (panels of miniature sculptures) சிற்பக் கலையின் உயரிய நிலைக்கு எடுத்துக் காட்டாக உள்ளன.

அரைத்தூண்கள் கும்பங்களும் குழைவுகள் கொண்ட போதிகைகளும் உடையனவாகக் காணப்படுகின்றன. அவற்றின் இடையிடையே கொடிக்கருக்குகளைக் காணலாம்.

கொடுங்கையின் கீழ்ப் பூதகணவரிசை உள்ளது. கொடுங்கையின் மூலைகளில் போதிகை சிலைகள் உள்ளன. மேல்தளத்தில் சாலைகளும் கூடங்களும் வனப்புற விளங்குகின்றன.

இது முற்பட்ட சோழர் காலத்துச் சிறந்த கோயில்களில் ஒன்றாகும். இதன் அமைப்பும் சிற்ப நுணுக்கங்களும் கலைக்கண் கொண்டு நோக்குவார்க்குத் தெவிட்டாத பெருவிருந்தாகும். இதனைப் பிற்காலத்தில் திருப்பணி செய்தவர் கலைநுணுக்க உணர்வின்றிச் சிற்பங்களைச் சாயம் பூசி வனப்புறச் செய்துவிட்ட செய்தி கலைஞர்கள் உள்ளத்தை நைவிப்பதாகும்.

## செந்தலை

**சுந்தரேசுவர சுவாமி கோயில் :**

செந்தலை என்பது திருக்காட்டுப்பள்ளியின் கிழக்கே கண்டியூர் செல்லும் வழியில் 3 கல் (4·8 கி.மீ.) தொலைவிலுள்ளது. அது காவேரியின் கிளைநதியான குடமுருட்டியின் தென் கரையில் அமைந்திருக்கிறது.

இங்குள்ள பழைய சிவன் கோயில் தற்போது சுந்தரேசுவரர் கோயில் என்று வழங்கப்படுகிறது. ஆனால் அக் கோயிற் சுவரில் உள்ள கல்வெட்டுப்படிச் சந்திரலேகை சதுர்வேதிமங்கலத்துத் 'திருப்பெருந் துறை மகாதேவர்' கோயில் என்று பழம்பெயர் காணப்படுகிறது. பிரமதேயமான 'சந்திரலேகை சதுர்வேதிமங்கலம்' என்ற பெயர் தற்போது செந்தலை என்று மருவியுள்ளது.

இங்குக் கி.பி. 700-க்கும் கி.பி. 1265-க்கும் இடைப்பட்ட காலத்தனவாகிய கல்வெட்டுகள் 40 உள்ளன.

பாண்டிய மன்னன் மாறன் சடையனுடைய (கி.பி. 765—815) 16ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று இக் கோயில் பிராகாரத்தின் தென்மேற்குப் பகுதியிலுள்ள விக்னேசுவரர் கோயிலின் முகப்பின் இடப்புறத்திலுள்ள கருங்கல்லில் காணப்படுகிறது. ஆனால் நடுக் கோயில் சுவரில் காணப்படும் மிகப் பழைய கல்வெட்டு இராஜகேசரி வர்மனுடைய (முதல் ஆதித்தன்) இரண்டாம் ஆண்டைச் சேர்ந்ததே யாகும். இவற்றை நோக்கப் பண்டு செங்கற் கோயிலாக இருந்த செந்தலைக் கோயில் முதல் ஆதித்தன் காலத்தில் கற்கோயிலாக எடுப்பிக்கப்பட்ட செய்தி போதருகிறது. இக் கோயில் மணிவாசகப் பெருமானுக்கு இறைவன் குருவடிவில் உபதேசம் செய்த சிவதலமான திருப்பெருந்துறையோடு தொடர்புடைய 'திருப்பெருந்துறை மகா தேவர்' ஆலயம் என்ற பெயரோடு விளங்கும் செய்தி குறித்துணரத் தக்கது. இவ்வூருக்கும் திருப்பெருந்துறைக்கும் எம்முறையில் இயைபு ஏற்பட்டது என்பது போதரவில்லை.

மாறஞ்சடையனுக்குச் சுமார் 100 ஆண்டுகள் பிற்பட்ட முதல் ஆதித்தனுடைய இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டு ஆர்க்காட்டுக் கூற்றத்துப் பிரமதேயமான சந்திரலேகை சதுர்வேதி மங்கலத்துத் திருப்பெருந்துறை மகாதேவர் கோயிலில் நிசதம் உழக்கு நெய்யூற்றி ஒரு நந்தா விளக்கு எரிப்பதற்கு மூவர் ஒன்று சேர்ந்து வழங்கிய 15 கழஞ்சுப் பொன்னைப் பெற்று அப் பொன்னின் வட்டியைக் கொண்டு அவ்வறச் செயலை நடத்துவதற்குக் கோயிலின் நிருவாகக் குழுவினர் ஒத்துக்கொண்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. ஆர்க்காடு தற்போது செந்தலைக்குத் தென்மேற்கில் 6 கல் (9·6 கி.மீ.) தொலைவில் ஒரு சிற்றூராகக் காணப்படுகிறது. நடுக் கோயிலின் மேலைச் சுவரில் உள்ள இராசகேசரிவர்மன் (முதல் ஆதித்தன்) உடைய 9ஆம் ஆண்டுக் கல் வெட்டு, சந்திரலேகை சதுர்வேதிமங்கலத்துப் பெருங்குறிச் சபை யினர் நிலம் ஒன்றை விலைக்கு வாங்கித் திருப்பெருந்துறை மகாதேவர் கோயிலில் வெண்ணாயிலுடையான் வைரமேகனால் அமைக்கப்பட்ட மண்டபத்தில் நாள்தோறும் பாரதம் வாசித்து விளக்கம் சொல்வதற்

காகச் சிங்கி நந்தீசுவரபட்டனுக்கும் அவனுக்குப்பின் அப் பாரதம் படித்து விளக்கம் சொல்பவருக்கும் மானியம் விட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

இக் கல்வெட்டு அந் நிலம் கோயிலான் நாகநந்தியால் விற்கப் பட்டது எனவும் அது அவ்வூரின் 53ஆம் குடும்பைச் சேர்ந்தது எனவும் குறிப்பிடப்படுகிறது.

குடும்பு என்பது ஒவ்வோருரும் தேர்வுக்காகப் பிரிக்கப்படும் வட்டங்களுக்கு (வார்டு) அக் காலத்தில் வழங்கப்பட்ட பெயராகும். முதற் பராந்தகன் காலத்ததாகிய உத்தரமேரூர் சதுர்வேதிமங்கலம் 30 குடும்புகளையே உடையதாகவும், இவ்வூர் குறைந்தது 53 குடும்பு களைக் கொண்ட செய்தி, இது அதைப்போன்று குறைந்தது $1\frac{3}{4}$ மடங்கு பரப்புடைய செய்தியைத் தெரிவிப்பதாகும். இங்ஙனம் ஊராட்சி நலன் கருதி ஊரைப் பல குடும்புகளாகப் பிரித்துக் 'குடவோலை' வாயிலாக உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கும் முறையைத் தெரிவிக்கும் உத்தரமேரூர்க் கல்வெட்டின் காலத்திற்கு இக் கல்வெட்டு 42 ஆண்டுகள் முற்பட்டதாகும்.

பாரதம் படிப்பாருக்கு நிவந்தம் வழங்கிய செய்தி இம் முதல் ஆதித்தன் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது போலவே, பல்லவ மன்னர்கள் காலத்திலும் பரமேசுவரவர்மனுடைய 'கூரம்' செப்பேடு களிலும், இரண்டாம் நந்திவர்மனுடைய 'தண்டந்தோட்டம்' செப்பேடுகளிலும், பாரதம் படிப்பாருக்கு நிவந்தம் வழங்கிய செய்தி இடம் பெற்றுள்ளது

இராசகேசரிவர்மனின் மற்ருெரு கல்வெட்டு இறைவனுடைய நிவேதனத்திற்கு நிலம் வழங்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. இராசகேசரிவர்மனுடைய 9ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று கோயிலில் நிகழ்த்தப்பட்ட விழா ஒன்றின் செலவினங்களுக்கு வழி வகுத்துள்ளது. இராசகேரிவர்மனுடைய 24ஆம் ஆண்டுக் கல்வெட் டொன்று நங்கை ஒருத்தி இறைவனுக்கு விளக்கெரிப்பதற்கு உடலாக 5 கழஞ்சுப் பொன் கொடுத்த செய்தியைக் குறிப்பிடுகிறது. இவ் விரண்டு இராசகேசரிக் கல்வெட்டுகளும் முதல் ஆதித்தன் காலத்தன வாகலாம்.

முதற் பராந்தகன் என்று கருதத்தக்க பரகேசரிவர்மனுடைய கல்வெட்டொன்று 'வீரசிகாமணிப் பேரேரி' என்ற குளத்தை வெட்டு வித்து அதற்குக் கருங்கற்படிகள் அமைப்பதற்காக 150 ஈழக்காசுகள் அறக் கட்டளையாக வைக்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

பாண்டியன் முடித்தலை கொண்ட பரகேசரிவர்மனுன இரண்டாம் ஆதித்தனுடைய நான்காம் ஆண்டுக் கல்வெட்டொன்று கணபதிக்குச் சிறப்பான நிவேதனங்களுக்காகவும் மூன்று சந்தி விளக்குகள் எரிப்பதற்காகவும் நிவந்தம் விடப்பட்ட செய்தியைக் குறிக்கிறது

இங்குள்ள கல்வெட்டுகள் பற்றிய முக்கியமான விவரங்களைக் குறிப்பிட்டோம். இனிக் கோயில் அமைப்பைக் காணலாம்.

முக்கியக் கோயிலின் முகப்பில் கட்டப்பட்ட மண்டபத்திற்கு அமைக்கப்பட்ட நான்கு கருங்கற்றூண்களும் நந்திவர்மன் (இரண்டாம்) என்ற பல்லவ மன்னனுடைய (கி.பி. 731—796) சிற்றரசரான முத்தரையர்களுடைய தலைநகரமாக விளங்கிய நியமத்தில் (நேமம்) கட்டப்பட்ட 'மாகாளத்துப் பிடாரியார்' கோயிலைச் சேர்ந்தவை. அவற்றைப்பற்றி நியமம் என்ற தலைப்பில் காண்போம்.

இது ஆதித்தன் காலத்தில் கற்றளியாக்கப்பட்ட பண்டைய செங்கற் கோயில்களில் ஒன்ருகும். இது கிழக்கு நோக்கிய சந்நிதியை யுடைய இருதள விமானமாகும். இதன் மேலுள்ள கிரீவமும், பின் புதுப்பிக்கப்பட்ட சிகரமும் வட்டமானவை.

கருவறை சதுரமானது. அதன் பக்க அளவு 15 அடி 10 அங்குலம். அர்த்தமண்டபம் 13 அடி 6 அங்குலம் நீளமுடையது. அர்த்தமண்டபத்தின் முகப்பில் இரு துவாரபாலகர்களும் முக மண்டபத்தின் முகப்பில் இரு துவாரபாலகர்களும் காணப்படுகின்றனர்.

பிற்காலத்தில் வேறிரண்டு மண்டபங்களும் அம்மன் கோயிலும் சுற்றுமதிலும் மதிலின் முகப்பில் பெரிய வாயிலையுடைய உயரமான கோபுரமும் எடுப்பிக்கப்பட்டுள்ளன.

பழைய கோயிலில் தேவகோஷ்டங்கள் இல்லை. சுவர்கள் ஒவ்வொன்றிலும் 6¼ அடி உயரமுள்ள நான்கு அரைத்தூண்கள் உள்ளன. அவைகள் கும்பங்களாலும் குழைவுகள் உடைய போதிகைகளாலும் மேம்பட்டு பெருவனப்பினவாகக் காணப்படுகின்றன. திருக்கண்டியூர்க் கோயிலில் காணப்படுவதுபோலவே ஒரு பெரிய பிரமன் சிலை தென் பிராகாரத்தின் திருச்சுற்றுலையில் வைக்கப்பட்டிருக்கிறது. கருவறையின் கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையையும் மேலே யாளி வரிமானத்தையும் காணலாம். கொடுங்கைகளின் ஓரங்களில் வட்டங்கள் (circles) செதுக்கப்பட்டுள்ளன. மூலைகளைக் கொடிக்கருக்குகள் அழகு செய்கின்றன. பிராகாரத்தின்



26. பிரமன்,
நாகேசுவரர் கோயில்,
கும்பகோணம்



27. அர்த்தநாரி,
நாகேசுவரர் கோயில்,
கும்பகோணம்



28. சோழ அரசனின்
உருவச்சிலை,
நாகேசுவரர் கோயில்,
கும்பகோணம்



29. சோழ அரசனின்
உருவச்சிலை,
நாகேசுவரர் கோயில்,
கும்பகோணம்



30. சோழ அரசனின்
உருவச்சிலை,
நாகேசுவரர் கோயில்
கும்பகோணம்



31. சோழ அரசனின்
உருவச்சிலை,
நாகேசுவரர் கோயில்,
'கும்பகோணம்



32. அரசியின்
உருவச்சிலை,
நாகேசுவரர் கோயில்,
கும்பகோணம்



33. அரசியின்
உருவச்சிலை,
நாகேசுவரர் கோயில்,
கும்பகோணம்



34. சோழ அரசனின் உருவச்சிலை, நாகேசுவரர் கோயில், கும்பகோணம்



35. சோழ அரசனின் உருவச்சிலை, நாகேசுவரர் கோயில், கும்பகோணம்



36. திவ்யஞானேசுவரர் கோயில், கோவிலடி



37. அர்த்தநாரீஸ்வரர், கோவிலடி

தென்மேற்கு மூலையில் காணப்படும் கணபதி கோயிலில் இக் கோயிலின் பழைய கல்வெட்டு உள்ளது என்பதை முன்னரே குறிப்பிட்டோம்.

பிரமன், விஷ்ணு, சிவ—பார்வதி, சப்தமாதர்கள் ஆகிய பழங் காலச் சிலைகள் வட பிராகாரத்தில் வைக்கப்பட்டிருந்தன. அவற்றுள் சில தற்போது தஞ்சைக் கலைக்கூடத்தில் இடம் பெற்று விளங்கு கின்றன.

## திருக்காட்டுப்பள்ளி

**அக்நீசுவர சுவாமி கோயில் (தீயாடி அப்பர்):**

தஞ்சை மாவட்டத்திலுள்ள திருக்காட்டுப்பள்ளி பூதலூர்ப் புகை வண்டி நிலையத்திலிருந்து 5 கல் (8. கி.மீ.) தொலைவிலும் தஞ்சை கல்லணை பேருந்து சாலையில் தஞ்சையிலிருந்து 17 கல் (27 கி.மீ.) தொலைவிலும் காவிரியின் தென்கரையிலமைந்த பழைய சிவத்தலம் ஆகும்.

இங்குள்ள பழைய சிவன்கோயில் முதல் ஆதித்தன் காலத்தைச் சார்ந்தது. பள்ளி என்ற சொல்லைக்கொண்டே இப் பிரதேசம் ஒரு காலத்தில் சமணர்கள் வாழ்ந்த இடமாகலாம் என்று ஊகிக் கிறோம். அதற்கேற்ப இங்கு 24ஆம் ஜைன தீர்த்தங்கரரான மகா வீரரின் கற்சிலை கிடைத்துள்ளது. அது திருக்காட்டுப்பள்ளியிலுள்ள உயர்நிலைப் பள்ளியினகத்து வைக்கப்பட்டுள்ளது. இங்குப் பரவி யிருந்த ஜைனமதம் அப்பர், சம்பந்தர் காலத்துச் சிவ வழிபாட்டு வளர்ச்சியால் தேய்ந்து மங்கி அகன்றுவிட்டது.

ஏழாம் நூற்றாண்டினரான அப்பரும் சம்பந்தரும் இங்குக் கோயில் கொண்டருளியிருக்கும் அக்நீசுவர சுவாமியைப்பற்றிப் பதிகங்கள் பாடியுள்ளனர். தற்போதுள்ள கற்றளி ஒன்பதாம் நூற்றாண்டினது ஆகவே, அவ்வடியவர் காலத்துச் செங்கற்கோயில் பின் கற்றளியாகப் புதுப்பிக்கப்பட்டது என்பது போதருகிறது.

அப்பர் இப் பெருமானை, 'காலையே தொழும் காட்டுப்பள்ளி நீலகண்டன்' என்ற அடிகளால் சூரியனாலும் வழிபடப்பட்ட சிறப் புடையவர் என்று குறிப்பிடுகிறார். சில குறிப்பிட்ட நாட்களில் இறைவன்மீது காலைக்கதிரவனுடைய பொன்னிறக் கதிர்கள் அணி செய்யும் வகையில் கருவறை அமைக்கப்பட்டுள்ளது. அப்பரடிகள் கூற்றைக் கருவறையின் அமைப்பு மெய்ப்பிக்கின்றது. கற்றவர்களைப் போலவே கல்வியறிவற்ற கானவேடர்களும் இப் பெருமானை வழி பட்ட செய்தி அப்பருடைய பதிகத்தால் போதருகிறது.

சம்பந்தர் பதிகத்தில், இவ்வூர் காவிரியால் வளமைபெறும் சிறப்பும் காடுகளால் சூழப்பட்டிருந்த பண்டைய நிலையும் குறிக்கப் பட்டுள்ளன.

திருக்காட்டுப்பள்ளியில் முதல் ஆதித்தன் காலத்தில் அமைக்கப் பட்ட கோயில் ஒருதளக் கற்றளியாகும். அதில் கருவறையும் அர்த்த மண்டபமும் ஒரே அச்சில் அமைந்துள்ளன. அர்த்தமண்டபத்தின் வெளியே இரு பக்கங்களிலும் அமைந்திருந்த துவாரபாலகர் சிலைகள் இடம் மாற்றப்பட்டுள்ளன. தற்போது மீண்டும் அர்த்தமண்ட பத்தின் இரு மருங்கிலும் அமைக்கப்பட்டுவிட்டன. பிற்காலத்தில் அர்த்தமண்டபத்தோடு இணைந்து முன்னேக்கியுள்ள முகமண்டபமும், வாயிற்படியும் கோபுரமும் பெற்ற மகா மண்டபமும், தெற்கு நோக்கியுள்ளதும் முன்மண்டபத்தைக் கொண்டதுமான அம்மன் கோயிலும் அதன் எதிரே பிள்ளையார் கோயில் ஒன்றும் எடுப்பிக்கப் பட்டன.

கிழக்கு நோக்கிய கருவறை சதுரவடிவமானது. அதன் பக்கங் களின் வெளியளவு 12 அடி. உள்ளே ஒவ்வொரு பக்கமும் 6 அடி 8 அங்குலம் உள்ளது. கருவறையின் வெளிச்சுவரின் முப்புறங்களிலும் தேவகோஷ்டங்கள் உள்ளன. அவற்றின் தெற்கில் தட்சிணாமூர்த்தியும் மேற்கில் அர்த்தநாரியும் வடக்கில் பிரமனும் காணப்படுகின்றனர். தற்போது காணப்படும் தேவகோஷ்டச் சிலைகள் மூன்றும் புதியனவே. கருங்கல் விமானம் பிற்காலத்தில் காரை பூசப்பட்டுள்ளது. சிகரப் பகுதியும் பிற்காலத்தில் புதுப்பிக்கப்பட்டதாகும். கிரீவத்தில் காணப் படும் யோக தட்சிணாமூர்த்தியின் சிலை கண்கவர் வனப்பினது. அதன் யோக பட்டமும் ஜடாமகுடமும் கலைநுகர்வுடையார் அகக் கண்களை விட்டு என்றும் அகலா எழிலுடையன. அது ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்த பழங்கோயிலின் சிலையாகும். கருவறையின் வடமேற்குத் தூணும் அதனோடு இணைந்த பகுதிகளும் முதல் ஆதித்தன் காலத்து ஏனைய கோயில்களை இது கலைப்பாணியில் ஒப்ப தாகும் என்பதைத் தெற்றென விளக்கும் சான்றுகளாக அமைந் துள்ளன.

கருவறையின் அடித்தளத்தில் யாளி வரிமானம் உள்ளது. அதற்கு மேல் கொடுங்கைக்குக் கீழுள்ள பகுதிகளைக் காளைகள், சிங்கங்கள், புலிகள், பூதகணங்கள் ஆகியவற்றின் சிற்றுருவங்கள் அணி செய் வதைக் காணலாம்.

மிகப் பிற்பட்ட காலத்தில் கட்டப்பட்ட வெளிக் கோபுரத்தின் தென்புறத் தளத்தில் இடம் பெற்றுள்ள கல்லில் இக் கோயிலின்

சிதைவுற்ற பழைய கல்வெட்டொன்று காணப்படுகிறது. கோவிராச கேசரிவர்மனின் பெயரைக் குறிப்பிடும் அக் கல்வெட்டில் ஆட்சியாண்டைக் குறிப்பிடும் பகுதி சிதைந்துவிட்டது. தஞ்சாவூர் வாசி ஒருவன் இக் கோயில் இறைவன் முன் நந்தாவிளக்கு ஒன்று எரிப்பதற்குத் தேவையான நெய் வழங்குவதற்காக ஆடுகள் சிலவற்றை வழங்கிய செய்தியே இக் கல்வெட்டால் அறியப்படுகிறது.

கோபுர வாயிலோடு விளங்கும் மகாமண்டபத்திற்கு வெளியில் வெளிக்கோபுரத்திற்கும் உட்கோபுரத்திற்கும் இடையே அமைக்கப்பட்ட அம்மன் கோயில் முன் மண்டபத்தோடு கூடித் தெற்கு நோக்கி அமைக்கப்பட்ட 13ஆம் நூற்றுண்டைச் சார்ந்த கட்டடமாகும்.

வெளிப்பிராகாரத்தில் சில பரிவார தேவதைகளின் ஆலயங்கள் உள்ளன. அவற்றை உள்ளடக்கி உயரமான மதில் வியாபித்திருக்கிறது. மதிலின் கிழக்குப்புறத்தில் வாயிலும் கம்பீரமான கோபுரமும் அடியார்களை வருக என்று வரவேற்கின்றன.

## நியமம் (நேமம்)

(1) ஐராவதேசுவரர் கோயில்.

(2) மகாகாளத்துப் பிடாரியார் கோயில்.

தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த நியமம் என்ற நேமம் திருக்காட்டுப் பள்ளியிலிருந்து கல்லணை (The Grand Anicut) செல்லும் மார்க்கத்தில் இரண்டு கல் (3·2 கி.மீ.) தொலைவில் காவிரியின் தென் கரையில் அமைந்துள்ளது. முற்பட்ட சோழர்கள் காலத்தையொட்டித் தஞ்சையையும் வல்லத்தையும் ஆண்ட முத்தரையர்கள் என்ற குறுநில மன்னர்களின் தலைநகராக இவ்வூர் விளங்கியது. இம் முத்தரையர்களை வென்றே தஞ்சையில் விசயாலயன் சோழப் பேரரசை நிறுவினுன்.

எட்டாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் இப் பகுதியை யாண்ட பெரும்பிடுகு முத்தரையனுன சுவரன்மாறன் என்பான் பல்லவ இரண்டாம் நந்திவர்மனுடைய படைத்தலைவனுக இருந்து பாண்டியர்களைப் பல இடங்களில் வென்றவனுகக் குறிப்பிடப்படுகிறுன். அவனுடைய கல்வெட்டுகளில் அவன் மகாகாளத்துப் பிடாரியார் கோயிலை நியமத்தில் எடுப்பித்த செயலும், அவன் அடைந்த வெற்றிகளும் அவனுடைய பலவகை விருதுப்பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. இப் பிடாரியார் கோயில் தற்போது சுவடற்றுப் போய்விட்டது. இக் கோயிலின் கற்றூண்கள் நான்கில் இம் முத்தரைய மன்னனுடைய

கல்வெட்டுகளும் அவர்களுக்குப் பிறகு இப் பகுதியை ஆண்டவர்களின் கல்வெட்டுகளும் காணப்படுகின்றன. தற்போது இத் தூண்கள் செந்தலை என்று வழங்கப்படும் ஊரில் [நியமத்திற்கு 5 கல் (8 கி.மீ.) கிழக்கில் உள்ளது] உள்ள சுந்தரேசுவரர் கோயில் முன் மண்டபத் தைத் தாங்கி நிற்கின்றன.

நியமத்து மாகாளத்துப் பிடாரியாருக்குத் தெள்ளாறெறிந்த நந்திவர்மனை மூன்றும் நந்திவர்மன் ஒரு விளக்கு எரிப்பதற்கும் பூசனைக்குமாக 40 காசு பொன் வழங்கிய செய்தி அவனுடைய 12ஆம் ஆண்டுக் கல்வெட்டால் (கி.பி. 847) உணரப்படுகிறது. பிறகு நாடு மாறஞ்சடையன் என்ற பாண்டியன் வசப்பட்டதாக அறிகிறோம். அவனுடைய 10ஆம் ஆண்டில் (கி.பி. 872) விடேல்விடுகு முத்தரைய னுடைய வேலையாள் ஒருவன் இப் பிடாரியாருக்கு விளக்கிற்காகவும் பூசனைக்காகவும் நன்கொடை வழங்கினான்.

இப் பகுதி இராசகேசரிவர்மன் முதல் ஆதித்தனுடைய 18ஆம் ஆண்டிற்கு (கி.பி. 889) முன்னரே சோழர் வசம் வந்திருக்கவேண்டும் என்பது உணரப்படுகிறது. இராசகேசரிவர்மனின் 18ஆம் ஆண்டில் பல்லவ மன்னனான மூன்றும் நந்திவர்மனின் தேவியாரான அடிகள் கண்டன் மாறன்பாவை இவ்வூர் மாகாளத்துப் பிடாரியாருக்கு நந்தாவிளக்கு அமைப்பதற்கு 12 கழஞ்சு பொன் வழங்கினாள். அவளே இராசகேசரிவர்மனின் 24ஆம் ஆண்டில் நியமத்து ஐராவதேசுவரர் கோயிலுக்கு மற்றொரு நன்கொடை வழங்கியுள்ளாள். முதல் ஆதித்த னுடைய 18ஆம் ஆண்டுக் கல்வெட்டே பிடாரியார் கோயிலின் பிற் பட்ட கல்வெட்டாதலின் அதற்குப் பிறகு இக் கோயில் பழுதுபட்டுச் சுவடற்றுப் போயிருக்க வேண்டுமெனக் கருதுகிறோம்.

### ஐராவதேசுவரர் கோயில் :

இக் கோயில் திருக்காட்டுப்பள்ளி—கல்லணைச் சாலையில் இரண்டு கல் (3·2 கி.மீ.) தொலைவில் காவிரியின் தென்கரையில் அமைந்துள்ளது. இவ்வூர் நன்மக்கள் தம் ஐம்பொறிகளையும் அடக்கித் தூய வாழ்வு வாழ்வதற்கு ஏற்றதாக அமைந்த சூழ்நிலையைப் பெற்றிருந்ததால் இப் பெயர் பெற்றது. இது சிலப்பதிகாரத்தில் 'தீதுதீர்நியமம்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு நடுவில் பெரியலிங்கம் ஒன்றை யமைத்துச் சுற்றிப் பலப்பல (ஆயிரம்) லிங்கங்கள் பிரதிட்டிப்பிக்கப் பட்டதால் இவ்வூர் 'நியமம் ஆயிரத்தளி' எனவும் வழங்கப்பட்டது. ஐராவதேசுவரர் கோயிலின் தென் மேற்கே இலிங்கக் குவியல்களை இன்றும் காணலாம்.

இவ்வூர் யுகங்கள் தோறும் பெயர் மாறுபட்டு வழங்கியதாகத் தலபுராணம் கூறுகிறது. இங்கு பாரிசாத மரங்கள் நிரம்ப வளர்ந்த தால் இது பாரசாதவனம் எனவும் வழங்கப்பட்டது. தம் ஐந்தாம் தலையைப் போக்கிய சிவபெருமானுடைய கோபத்தைத் தணிக்க, பிரமன் இங்குத் தவம் செய்தான் எனவும் கூறப்படுகிறது. விருத்தி ராசுரனைக் கொன்ற பிரமகத்தி தோஷம் நீங்குவதற்காக இந்திரன் இங்குத் தவம் செய்தான் என்றும் கூறுகின்றனர். நாரதர் தனக்கு இட்ட சாபத்தைப் போக்கிக்கொள்ளத் தேவலோகத்து அரம்பை மானுட வடுவெடுத்து இவ்விடத்தில் தவம் செய்து கொண்டிருந்தாள். இந்திரன் அவளை அழைத்துவரத் தன் வாகனமான ஐராவதத்தை அனுப்பினான். பாரிசாத வனத்துப் பெருமானிடம் பக்திப் பரவசத்தில் ஈடுபட்ட அரம்பையை அழைத்துச் செல்வதற்கு ஐராவதத்தால் முடியவில்லை. பின் ஐராவதம் அவளை வலியக் கவர்ந்து செல்ல முயன்றும் அம் முயற்சியில் தோல்வியுற்றதை யறிந்த இந்திரன் நேராகப் பாரிசாத வனத்திற்கு வந்து, பெருமானை வணங்கி, அவன் அருளால் ஐராவதத்தையும் மன்னிக்கச் செய்து அரம்பையை மீட்டுச் சென்றான். ஐராவதத்தை மன்னித்த இப் பெருமானுடைய திருப்பெயர் ஐராவதேசுவரராயிற்று என்றும் தலபுராணம் குறிப்பிடு கிறது.

இங்கிருந்து படியெடுக்கப்பட்ட கல்வெட்டுகள் இரண்டு. அவற்றுள் ஒன்று இராசகேசரிவர்மன் முதல் ஆதித்தனுடைய 24ஆம் ஆண்டைச் சேர்ந்தது. இரண்டு விஷு புண்ணிய காலங்களிலும் இறைவனுடைய அபிடேக ஆராதனங்களுக்கு வேண்டிய நெய், பால், தயிர் முதலியவற்றிற்கும் பரிவார தேவதைகளுக்குரிய அபிடேக ஆராதனங்களுக்கும், அந் நாட்களில் 20 அந்தணர்களுக்கு உணவிடு வதற்கும், கோயில் அர்ச்சகரான ஈசுவரகாரணி வாசுதேவன் பட்டுடை யான் வசம், மூன்றும் நந்திவர்மனுடைய தேவியான அடிகள் கண்டன் மாறன்பாவை என்பாள் 5 கழஞ்சு பொன்னை மூலதனமாக வழங்கிய செய்தி இக் கல்வெட்டால் போதருகிறது. தென் சுவரிலமைந்த வாசற் படிக்கருகில் புதைக்கப்பட்ட கல்லில் காணப்படும், விளக்கிற்காக நன்கொடை வழங்கப்பட்ட செய்தியைக் குறிக்கும் முதற் பராந்தக னுடைய 18ஆம் ஆண்டுக் கல்வெட்டு மிகவும் சிதைந்து விட்டது.

இது ஆதித்தன் காலத்தில் கட்டப்பட்ட ஒருதளக் கற்றளி. பழைய கோயில் கருவறை, அர்த்தமண்டபம், கிழக்கு நோக்கிய வாசற்படி, பரிவார தேவதைகளின் கோயில்கள், இவற்றை உள் ளடக்கிய சுற்றுச்சுவர் என்ற உறுப்புகளை உடையது. இக் கோயிலின் சிகரம் அண்மைக் காலத்தில் புதுப்பிக்கப்பட்டுள்ளது. பழைய கருங்கல் ஸ்தூபி பிராகார தளத்தில் கிடக்கும் நிலையில் காணப் பட்டது.

## கோவிலடி

**திவ்யஞானேசுவரர் கோயில் :**

தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த கோவிலடி காவிரியின் கழி முகத்தின் (டெல்டா) தொடக்கத்தில் கல்லணைக்கும் (The Grand Anicut) திருக்காட்டுப்பள்ளிக்கும் இடையே, கல்லணையிலிருந்து 5 கல் (8 கி.மீ.) தொலைவில் அமைந்துள்ளது.

இது பழைய கல்வெட்டுகளில் 'திருப்பேர்நகர்' என்று வழங்கப் பட்டது. இங்குச் செயற்கை மேடு ஒன்றன்மேல் அமைக்கப்பட்ட அரங்கநாதர் ஆலயமும், கல்லணைக்குச் செல்லும் பெருவழிக்கும் விஷ்ணுகோயிலுக்கும் இடையே அமைக்கப்பட்ட சிவன் கோயிலும் காணப்படுகின்றன. ஆழ்வார் பலராலும் பாடப்பெற்ற சிறப்புடைய பெருமாள் கோயில் புதுப்பிக்கப்பட்டதாகும். ஆனால் சிவன்கோயில் புதுப்பிக்கப்பெறாமல் தன் பண்டைய வனப்புடன் காட்சியளிக்கிறது.

இச்சிவன் கோயில்—பழைய கல்வெட்டுகளில் ஏரி (எயில்?) நாட்டுப் பிரமதேயமான 'திருப்பேர்' நகரைச் சார்ந்த 'திருப்பறத் துறைப் பெருமானடிகள்' கோயில் என வழங்கப்பட்டது. நடு விமானத்தின் முன்னர்க் காணப்படும் தூண்களில் பிற்காலப் பல்லவர் களின் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இங்கு மூன்றும் நந்தி வர்மனின் 18ஆம் ஆண்டுக் கல்வெட்டையும் நிருபதுங்கனுடைய 10ஆம் ஆண்டு முதல் 22ஆம் ஆண்டு முடியப் பல ஆண்டுகளில் அமைந்த கல்வெட்டுகளையும் காணலாம். நியமத்தைக் கோநகராகக் கொண்டு, பல்லவர் வீழ்ச்சிக்குப் பின் இப் பகுதியைச் சோழர்கள் தலைதூக்கும்வரை ஆளும் வாய்ப்பினைப் பெற்ற முத்தரையருடைய கல்வெட்டுகளையும் இக் கோயிலில் காணலாம். முத்தரையருள் இளங்கோ முத்தரையன் என்பானே தனிப்பட்ட முறையில் ஆட்சி யாண்டோடு கல்வெட்டமைக்கும் உரிமை பெற்றிருந்தான். அவ னுடைய 13, 17ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் திருக்கோடிக்காவ லிலும், 18ஆம் ஆண்டுக் கல்வெட்டு நியமத்திலும், காணப்படுவது கொண்டு அவன் ஆண்ட நாட்டின் பரப்பை ஓரளவு வரையறுக்கலாம். இவனே, பின்னர் விசயாலயனால் ஒடுக்கப்பட்ட முத்தரைய மன்னன் போலும்.

இங்கு இராசகேசரியின் கல்வெட்டுகள் மூன்று உள்ளன. ஒன்று அவனுடைய 3ஆம் ஆண்டைச் சார்ந்தது. ஆட்சியாண்டு அறியப்பட முடியாத மற்றோர் இராசகேசரிக் கல்வெட்டு, கிளியூர் நாட்டுச் சிறு தாவூர் உடையானான செம்பியன் வேதிவேளான் என்பான் இத் திருப்புறத்து எம்பெருமானுக்குக் கல்லால் விமானம் எழுந்தருளி

வித்த செய்தியைக் குறிக்கிறது. இராசகேசரியின் 3ஆம் கல்வெட்டு அர்ச்சனுபோகமாக மூன்று மாநிலம் வழங்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

இங்குப் படியெடுக்கப்படாத இராசகேசரியின் 4ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றுள்ளது. அது முதல் ஆதித்தன் காலத்தது ஆகலாம்.

செம்பியன் வேதிவேளானைப்பற்றித் திருவெறும்பூர்க் கோயில் பற்றிய கட்டுரையில் கூறியுள்ளோம். முதல் ஆதித்தன் காலத்தில் தொடங்கப்பட்ட இக் கற்றளிப்பணி கண்டராதித்தன் காலத்தில் செம்பியன் வேதிவேளானுல் முடிக்கப்பட்டதாகலாம்.

சதுரமான கருவறை 17 அடி பக்க அளவுடையது. அது வேலைப் பாடற்ற உயரமான அடிப்படை உடையது. அரைத்தூண்கள் 6 அடி 4 அங்குல உயரம் உடையவை. தேவகோஷ்டங்கள் தெற்கில் இரண்டும் வடக்கில் இரண்டும் மேற்கில் ஒன்றுமாக ஐந்து அமைந் துள்ளன. ஒவ்வொன்றும் குட்டையான இரண்டு அரைத் தூண் களாலும் உயரமான இரண்டு அரைத் தூண்களாலும் தாங்கப் படுகின்றன. தென்புறத்தில் கணேசர், தட்சிணமூர்த்தி, மேற்குப் புறத்தில் அர்த்தநாரீசுவரர், வடபுறத்தில் பிரமன், துர்க்கை ஆகிய தேவகோஷ்டச் சிலைகளைக் காணலாம்.

சுமார் 6 அடி நீளமுள்ள அர்த்தமண்டபம் கருவறையோடு இணைந்து கிழக்கு நோக்கி நீண்டிருக்கிறது.

பரிவார தேவதை ஆலயங்கள் எல்லாம் பழுது பட்டுவிட்டன. அப் பழுதுபட்ட பகுதிகளை ஆராய்ந்தபோது 9ஆம் நூற்ருண்டைச் சார்ந்த சுப்பிரமணியர் சிலையொன்று கிடைத்தது. அது திருக் காட்டுப்பள்ளியிலுள்ள உயர்நிலைப் பள்ளியில் வைக்கப்பட்டுள்ளது.

கோயிலைச் சுற்றி அமைந்துள்ள மதிற்சுவர் கிழக்கு நோக்கிய வாயிலை உடையது. .

இது ஆதித்தன் காலத்தில் தொடங்கிக் கட்டப்பட்ட கோயில் என்பது உணரப்படுகிறது.

## திருக்கண்டியூர்

**திருவீரட்டானேசுவரர் :**

திருக்கண்டியூர் தஞ்சாவூரிலிருந்து திருவையாறு வரும் சாலையில் தஞ்சாவூரிலிருந்து 7 கல் (11 கி.மீ.) தொலைவில் உள்ளது. இங்கு உள்ள வீரட்டானேசுவரர் கோயில் சப்தஸ்தான க்ஷேத்திரங்களில்

ஒன்றாகும். இக் கோயில் தமிழகத்தில் சிவபெருமானுடைய வீரச் செயல்களைக் குறிக்கும் ஐதிகங்களை உடைய அட்டவீரட்டத் தலங் களிலும் ஒன்று. இங்குச் சிவபெருமான் பிரமனுடைய ஐந்தாவது தலையைத் தம் முத்தலேச் சூலத்தால் நீக்கினர் என்பது ஐதிகம். ஆகையால் இவ்வூருக்குப் 'பிரமசிரக் கண்டனபுரம்' என்றும் இறை வனுக்குப் பிரமசிரக் கண்டீசுவரர் என்றும் பெயரிட்டுள்ளனர். இங்குள்ள தலவிருட்சமான வில்வமரம் நேராகக் கயிலாயத்திலிருந்து இங்குக் கொண்டுவந்து நடப்பட்டது ஆதலின் இவ்வூருக்கு ஆதி வில்வாரண்யம் என்ற பெயரும் உண்டு.

இவ்வூரில் சிவன், விஷ்ணு, பிரமன் ஆகிய மும்மூர்த்திகளுக்கும் ஆலயங்கள் உள்ளன. விஷ்ணு கோயிலும், பிரமன் கோயிலும், கிழக்கு நோக்கி உள்ளன. சிவன் கோயில் மேற்கு நோக்கி உள்ளது. இம் மூன்று கோயில்களும் திருவையாறு—தஞ்சாவூர் சாலேயை ஒட்டியே அமைந்துள்ளன. விஷ்ணு கோயிலும் பிரமன் கோயிலும் ஒன்றை யொன்று ஒட்டி அமைக்கப்பட்டுள்ளன. சிவன் கோயில் இவற்றி லிருந்து 200 கெஜ தூரத்தில் உள்ளது.

பிரமன், சூரியன், சதாதபமுனிவர் (சதானந்தர்) ஆகியோர் இங் குள்ள சிவபெருமானை வழிபட்டு நற்கதி அடைந்தனர் என்று தல புராணம் கூறுகிறது. இங்குள்ள சிவபெருமான் அப்பராலும், சம்பந்த ராலும் பதிகம் பாடப்பட்டவர். சுந்தரரும் கண்டியூரைத் தம் பதிகத்தில் குறிப்பிட்டுள்ளார்.

கருவறைச் சுவர்களிலுள்ள கல்வெட்டுகளில் மிகப் பழமையானது முதல் ஆதித்தனுடைய சமகால மன்னவனுன கோவிஜய நிருபதுங்க வர்மனின் 21ஆம் ஆண்டுக் கல்வெட்டாகும் (கி.பி. 876). அது இவ் வூரிலுள்ள காலபட்டாரிக்குத் திருவமுதுக்கும் திருவிளக்கிற்குமாக இவ்வூர்ச் சபையார் 100 கழஞ்சு பொன்கொண்டு அதற்காக 11 மாநிலத்தைக் கோயிலுக்கு வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

இங்குக் காணப்படும் சோழர் கல்வெட்டுகளில் பழைமையானது முதற் பராந்தகன் கல்வெட்டெனினும் இக் கோயிலின் கட்டட அமைப்பைக் கொண்டும், சப்தஸ்தான க்ஷேத்திரங்களுள் ஏனையவை முதல் ஆதித்தன் காலத்தனவாகக் கொள்ளக் கிடக்கும் நிலேயைக் கொண்டும், இதில் முதல் ஆதித்தனின் சமகாலத்தவனுன நிருபதுங்க னுடைய கல்வெட்டிருப்பது கொண்டும், இதுவும் முதல் ஆதித்தன் காலத்துக் கோயிலே என்று முடிவு செய்யலாம்.

முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகள் அவனுடைய 11ஆம் ஆண்டிலிருந்து 46ஆம் ஆண்டு வரை பரவியுள்ளன. அவனுடைய

25ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று அவன் மகனுன பிள்ளையார் பராந்தகன் உத்தமசிலி என்பான் ஆர்க்காட்டுக் கூற்றத்துத் திருவீரட்டானமான திருக்கண்டியூர் மகாதேவருக்கு விளக்கு எரிப்பதற்காக 10½ கழஞ்சு பொன்னை நிவந்தமாக விட்ட செய்தியைக் குறிக்கிறது. பிரமதேயமான திருக்கண்டியூர்ச் சபையினர் இந்த 10½ கழஞ்சு பொன்னையும் பெற்று, அதற்காகச் சில நிலங்களை வழங்கி, அதன் வரும்படியைக்கொண்டு திருவிளக்கெரிக்க ஏற்பாடு செய்தனர் எனவும் அறிகிறோம். பராந்தகனுடைய 46ஆம் ஆண்டுக் கல்வெட்டும் ஒரு விளக்குத்தானம் பற்றியதே.

இராசகேசரிவர்மனுடைய 17ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில் கண்டியூர் பெரியவானவன் மகாதேவி சதுர்வேதி மங்கலத்தை ஒட்டியது என்று குறிப்பிடப்படுகிறது. பெரியவானவன் மகாதேவி என்பாள் சுந்தரசோழனுடைய முதற் பெருந்தேவியாவாள். எனவே, இக் கல்வெட்டு சுந்தர சோழன் காலத்ததாகும்.

பாண்டியன் முடித்தலைகொண்ட பரகேசரியான இரண்டாம் ஆதித்தனின் நான்காம் ஆண்டுக் கல்வெட்டில் இவ்வூர் நிர்வாகக் குழு உறுப்பினர்கள் காவிரியின் வடகரையிலமைந்த பெரியவானவன் மகாதேவி சதுர்வேதி மங்கலத்துச் சபையாரிடம் சில நிலங்களை விலைக்கு வாங்கித் திருக்கண்டியூர் மகாதேவருக்கு வழங்கிய செய்தி காணப்படுகிறது.

உத்தம சோழனுடைய 9ஆம் ஆண்டில் மாயன்கஞ்சன் வில்லவன் மூவேந்த வேளான் ஒரு விளக்கெரிப்பதற்கு ஏற்பாடு செய்ததோடு தன்னுடைய ஜன்ம நட்சத்திரமான சுவாதியன்று இறைவனுக்குப் பெருந்திருவமுது நிவேதனம் செய்வதற்கு ஏற்பாடு செய்தான்.

மேற்கு நோக்கிய சந்நிதியை உடைய இக் கோயில் இருதளக் கற்றளி. சதுரமான அதன் கருவறையின் பக்க அளவு 17 அடி 10 அங்குலம். அர்த்தமண்டபம் 12 அடி மேற்கு நோக்கி நீண்டுள்ளது. கருவறையின் வெளிச்சுவர்கள் மூன்றிலும் மூன்று தேவ கோஷ்டங்கள் முன்னேக்கியவாறு அமைக்கப்பட்டுள்ளன. வடக்குத் தேவகோஷ்டத்திலுள்ள பிரமன் சிலையே பழங்காலத்ததாகும். கோயிலின் திருச்சுற்றுலையில் தற்போது காணப்படும் அமர்ந்த திருக்கோலத்திலுள்ள அர்த்தநாரீசுவரர் ஒரு காலத்தில் கிழக்குக் கோஷ்டத்தில் விளங்கியதோ என ஐயம் எழுகின்றது. அர்த்தமண்டபத்தின் வெளிச்சுவரின் தென் கோஷ்டத்தில் பிட்சாடனர் சிலையைக் காணலாம்.

இரண்டாவது தளம் அக்காலத்து மற்றக் கோயில்களைப் போலவே சிறு தேவகோஷ்டங்களுடன் காட்சியளிக்கிறது. அரைத்தூண்கள் 5 அடி உயரம் உடையன. கருவறையைச் சுற்றியுள்ள பிராகாரத்தின் மட்டம் உயர்ந்துவிட்டதால் கருவறையின் அடித்தளம் அரைத் தூண்கள்வரை மறைக்கப்பட்டுவிட்டது. அரைத்தூண்களின் கீழ் நுணுக்கமான வேலைப்பாடுகளை உடைய 'சிற்றுருவச்சிலைகள்' காணப் படுகின்றன. நடுத் தேவகோஷ்டத்தின் அரைத்தூண்கள் வட்ட மாகவும் ஓரங்களில் உள்ளவை பட்டை தீட்டப்பட்டனவாகவும் காண்கிறோம். அவற்றிற்குக் கும்பங்களும் வேலைப்பாடற்ற கோண மாக அமைந்த போதிகைகளும் உள்ளன. அர்த்தமண்டபத்தின் அரைத்தூண்களின் வெட்டுப்பரப்பு சதுரமானதாக அமைந்துள்ளது. கொடுங்கையின் கீழ்ப் பூதகணவரிசையையும் மேலே யாளி வரிமானத் தையும் காணலாம்.

வடபிரகாரத்திலுள்ள கட்டடத்தில் பிரமன், காளி என்ற பெரிய தனிச் சிலைகளைக் காணலாம். இங்குள்ளதைப்போன்ற பிரமன் சிலை செந்தலை, நியமம், கருத்தட்டாங்குடி (தற்போது தஞ்சைக் கலைக் கூடத்தில் உள்ளது) என்ற ஊர்களிலும் உண்டு.

பி. ஆர். ஸ்ரீநிவாசன் என்பார் கண்டியூர்க் கோயிலைப்பற்றி ஆராய்ந்தபோது பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்: 'கும்பகோணம் நாகேசுவரர் கோயில், ஸ்ரீநிவாசநல்லூர் குரங்கநாதர் கோயில், புள்ளமங்கை பிரமபுரீசுவரர் கோயில் முதலிய பல கோயில்களைப் போலவே கண்டியூர்க் கோயிலிலும் கருவறையைச் சுற்றிப் பள்ளம் (pit) உள்ளது. துரதிர்ஷ்டவசமாக அப் பள்ளத்தைச் சமீப காலத்தில் மூடிவிட்டனர். தற்போது கண்டவர்க்கத்திற்கு மேலுள்ள பகுதிகள் காணக் கிடைக்கின்றன. அரைத்தூண்களுக்குக் கீழுள்ள சிற்றுருவச் சிலைகள் உள்ளன'. கருவறையைச் சுற்றிக் காணப்படும் பள்ளத்தைக் கட்டட அமைப்பின் ஒரு கூறாக ஸ்ரீநிவாசன் கொண்டமை வியப்பிற் குரியது. கருவறையின் மட்டம் என்றும் ஒன்றுயிருக்க, அதைச் சுற்றியுள்ள பகுதியின் மட்டம் பல நூற்றுண்டுகளில் உயர்வது இயற்கையே. எனவே, பிராகாரமட்டம் உயரக் கருவறை வெளிச் சுவரின் அடிப்பகுதியில் சில பகுதி கண்ணுக்குப் புலனுகாமல் போவது எங்கும் நிகழக்கூடியதே.

இப் பழைய கோயிற் பகுதி பல்லவர் காலத்ததா அன்றிச் சோழர் காலத்ததா என்று அறுதியிட்டு உறுதியாகக் கூறப் போதிய கருவிகள் இல்லை. ஆனல் இதை ஆதித்தன் காலத்துக் கோயில் என்று கணக் கிடுவது காலத்தை ஒட்டிய ஆராய்ச்சிக்குப் பொருத்தமானதே.

## திருவையாறு

**பஞ்சநதீசுவரர் கோயில் :**

திருவையாறு தஞ்சாவூருக்கு வடக்கே 8 கல் (12.8 கி.மீ.) தொலைவில் காவிரியின் வடகரையில் அமைந்திருக்கும் பழைய சிவத் தலமாகும். காசியை ஒத்த புனிதமுடையதாகக் கருதப்படும் இவ்வூரில் தென்னிந்திய பெருங் கோயில்களில் ஒன்று பெருமிதமாகத் தோற்றமளிக்கிறது. இது காவிரி, அதன் கிளை நதிகளான கொள்ளிடம், குடமுருட்டி, வடவாறு, வெண்ணாறு என்ற 5 ஆறுகளின் பயனைப் பெறுவதால் திருவையாறு எனப் பெயர் பெற்றது என்ப. நந்தி தேவருடைய முடிசூட்டு விழாக் காலத்தில் வெளிப்பட்ட ஐந்துவகை நீர்ப்பெருக்கத்தைக்கொண்டு இவ்வூருக்குத் திருவையாறு என்று பெயர் ஏற்பட்டதாகத் தலபுராணம் கூறுகிறது. கணநாதர்களுள் தலைவரான திருநந்தி தேவருடைய முடிசூட்டு விழாவாகிய நன்னாளில் வெளிப்பட்ட சிவபெருமானுடைய கரகநீர், சிவபெருமான் சடையிலிருந்து வெளிப்பட்ட கங்கைநீர், நந்தியின் வாய்நுரை, சந்திரனுடைய அமுததாரைகள் ஆகிய நான்கும் அகத்தியனுடைய கமண்டல நீராகிய காவிரியோடு சேர்ந்து ஐந்து ஆறுகளை ஆக்கிய சிறப்பினைப் பெற்றதால் இவ்வூர் திருவையாறு என்ற பஞ்சநதி க்ஷேத்திரமாயிற்று என்பர்.

நந்திகேசுவரருடைய வரலாறு பின் வருமாறு :

'திரிசூலி என்ற அந்தணன் சிறுவனாய் இருந்த காலத்தில் ஒரு முனிவருடைய பிச்சையோட்டில் வேண்டுமென்றே உணவுக்குப் பதிலாகக் கல்லையிட்டான். உரிய காலத்தில் அவனுக்குத் திருமணம் செய்து வைத்தார்கள். ஆனால், அவனுக்குப் புதல்வற்பேறு இல்லை. எனவே, திரிசூலி புதல்வற்பேறு கருதி இறைவனைக் குறித்துக் கடுந்தவம் புரிந்தான். அவன் சிறுவனாய் இருந்த காலத்தில் அவனால் அவமதிக்கப்பட்ட முனிவர் அவன் கனவில் தோன்றி அவன் இளமையில் செய்த தீச்செயலின் பயனாகவே அவனுக்குப் புதல்வற்பேறு ஏற்படவில்லையென்றும், அவன் செய்த கடுந்தவத்தின் பயனாகக் காளை மாட்டின் முகமுடைய பிள்ளையொருவன் ஒரு பெட்டியிலிருந்து அவனுக்குக் கிடைப்பான் என்றும் கனவில் கூறிச் சென்றார். அங்ஙனமே திரிசூலி காளை முகத்தவனை புதல்வன் கிடைக்கப் பெற்றான். அப் புதல்வன் சிவனடி மறவாச் செம்மலாக வளர்ந்து கணநாதர்களுக்குத் தலைவனாக முடிசூட்டப்பட்டான். அவன் திருவையாற்றுக்கு வடமேற்கில் கொள்ளிடத்து வடகரையில் 4 கல் (6·4 கி.மீ.) தொலைவில் அமைந்த திருமழபாடியில் திருமணம் செய்து கொண்டான். அவன் திருமணத்திற்குப் பிறகு அவன் திருவை

யாற்றை நடுநாயகமாகக் கொண்ட திருப்பழனம், திருச்சோற்றுத் துறை, திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த் தானம் என்ற ஏழு சிவத் தலங்களையும் சுற்றி ஊர்வலமாக அழைத்து வரப்பட்டான். அத் திருவிழா ஆண்டுதோறும் சித்திரை மாதம் பௌர்ணமி யன்று 'சப்த ஸ்தல யாத்திரை' என்ற பெயரால் நடத்தப்பட்டு வருகிறது. ஆயிரக்கணக்கான சிவனடியார்கள் பெரிய நற்செயலாகும் இந்த சப்தஸ்தல யாத்திரையில் கலந்துகொண்டு நற்பேறு அடைகின்றனர்.

'திருவையாற்றில் மரணமடைகின்றவர்களுக்கு யம பயமே இல்லை. அவர்கள் நேராக முத்தியடைகின்றனர்கள்' எனவும் கூறப்படு கிறது. இங்குச் சிவனடி மறவாது வாழ்ந்த சிறுவன் சிவபெருமானை வழிபட்டுக் கொண்டிருந்தபோது அவன் உயிரை இயமன் கவர்ந்து செல்லவே, சிவபெருமானார் இயமனைக் கொன்றார். பின் தேவர்களின் வேண்டுகோட்படி இறந்த சிறுவனோடு இயமனும் உயிர் பெற்றான். அவனை நோக்கிச் சிவபெருமானார் திருவையாற்றில் இறந்தவர்களை இயமன் துன்புறுத்தக்கூடாது என ஆணையிட்டார். இந் நிகழ்ச்சியை நினைவுறுத்தும் வகையில் திருவையாற்றுத் தென்கோபுர வாயிலுக் கருகில் குங்கிலியக் குழியிலிருந்து எப்பொழுதும் புகை பரவிய வண்ணமாயுள்ளது'—இச் செய்திகள் திருவையாற்றுத் தல புராணத் தில் இடம் பெற்றுள்ளன.

இப்பொழுதுள்ள வெளி மதிலின் தென்புறவாயிலின் மேற்குத் தேவகோஷ்டத்தில் ஆட்கொண்டார் என்ற சிலை உள்ளது. அது பெரும்பாலும் துவாரபாலகர் சிலையை ஒத்திருக்கிறது. ஆனால் அதன் காலடியில் நசுக்கப்படும் இயமனுடைய உருவம் காணப்படுகிறது. க்ஷேத்திரபாலகராக விளங்கும் இச் சிலைக்கு முன்புறம் உள்ள குங் குலியக் குழி எப்பொழுதும் புகைந்துகொண்டிருப்பதற்கு அடி யார்கள் தவறாது குங்கிலியம் வாங்கி வழங்குகின்றனர்.

அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரும் தம் தேவாரப் பாடல் களால் இத் திருவையாற்றுப் பரம மகாதேவரை மனங்கசிந்து துதித்துள்ளனர். எனவே இக் கோயில் 7ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட தாதல் தேற்றம். ஆனால் தற்போதுள்ள மூலக் கோயிலாகிய கற்றளி முதல் ஆதித்தன் காலத்தைச் சேர்ந்தது. பிற்காலத்தில், இராச ராசனுடைய முதல் தேவியாரான உலக மகாதேவியாரால் எடுப்பிக் கப்பட்ட 'வட கைலாசம்', முதல் இராசேந்திரனுடைய தேவியாரால் கட்டப்பட்ட அப்பர் கயிலைக் காட்சி கண்ட 'தென் கைலாயம்', அம்மனுக்கு என்று தனிப்பட்ட முறையில் எடுப்பிக்கப்பட்ட திருக்காமக் கோட்டம், முருகன் கோயிலாக விளங்கும் நூற்றுக்கால்

மண்டபம், திருச்சுற்றுலை உள்மதில், புறமதில், அவற்றின் கோபுரங்கள் ஆகியவை இணைக்கப்படவே இக் கோயில் மாபெரும் கோயிலாகத் தோற்றமளிக்கிறது.

இங்குக் காணப்படும் இராசகேசரிவர்மனுடைய 5ஆம் ஆண்டு முதல் 26ஆம் ஆண்டுவரை பரவியுள்ள கல்வெட்டுகள் முதல் ஆதித்தன் காலத்தைச் சேர்ந்தவை. அவனுடைய 12ஆம் ஆண்டுக் கல்வெட் டொன்று சோழப்பெருமானடிகள் தேவியாரான குல மாணிக்க நம் பிராட்டியார் திருவையாற்று மகாதேவருக்கு ஒரு நந்தா விளக்கு அமைப்பதற்கு அளித்த நன்கொடையைக் குறிப்பிடுகிறது. அவ னுடைய 17-ம் ஆண்டில் சோழப் பெருமானடிகளின் போகியாருள் ஒருவரான நக்கன் ஐயாறடிகள் என்பார் சிவபுரி வணிகர் குழுவிடம் 30 கழஞ்சு பொன் கொடுத்து, அதன் வட்டிக்காகத் திருவையாற்றுக் கோயிலில் நந்தா விளக்கு ஒன்று எரிப்பதற்கு ஏற்பாடு செய்தார். கச்சிப்பேட்டுக் குதிரைச் சேரியைச் சேர்ந்த அம்மக்கனுருடைய மகளும் முதல் ஆதித்தன் தேவியுமான அழிசிக்காட்டடிகள் அரசனின் 19ஆம் ஆண்டில் வைத்த நிவந்தம் பற்றிய செய்தியைக் கல்வெட் டொன்று வெளியிடுகிறது. மற்றொன்று, அழுந்தூர் திருநாரண மகா தேவி என்ற சோழ அரசி இக் கோயில் மகாதேவருக்கும் ஜேஷ்டையா ருக்கும் அரசனுடைய 19ஆம் ஆண்டில் விளக்கு அமைத்த செய்தி யைக் குறிப்பிடுகிறது. 20ஆம் ஆண்டில் முதல் ஆதித்தன் மகனும் முதற் பராந்தகன் சகோதரனுமான கன்னர தேவனுடைய மனைவி யொருத்தி 20 கழஞ்சு பொன்னை முதலாக வைத்து ஒரு விளக்கெரிக்க ஏற்பாடு செய்தாள். இம் மன்னனுடைய 25, 26ஆம் ஆண்டுக் கல்வெட்டுகளும் விளக்கு தானத்தைச் சேர்ந்தவை.

பஞ்சநதீசுவரரிடம் அரசரும் அவருடைய உறவினரும் கொண்ட அளவுக்கு மீறிய பற்றும் ஈடுபாடும் வியக்கத்தக்கன.

பரகேசரிவர்மன் கல்வெட்டுகளில் 3ஆம் ஆண்டுக் கல்வெட்டும் 14ஆம் ஆண்டுக் கல்வெட்டும் முதல் பராந்தகனுக்குரியவை. கிழைப் பழுவூர், திருப்பாற்கடல் என்ற ஊர்க் கல்வெட்டுகளில் சிறப்பிக்கப் பட்டுள்ள வெள்ளூர்ப்போரில் பெருவீரங் காட்டிய பழுவேட் டரையன் கண்டன் அமுதன் என்பவன் ஒரு விளக்கெரிப்பதற்காக வழங்கிய நன்கொடை பற்றிய செய்தியைப் பதினான்காம் ஆண்டுக் கல்வெட்டு வெளியிடுகிறது. முதல் பராந்தகனுடைய 14ஆம் ஆண்டில் அவன் தேவியாரான நம் பிராட்டியார் திரிபுவன மகாதேவி யார் ஒரு விளக்கு எரிப்பதற்காகச் சிவபுரி நகரத்தாரிடம் 15 கழஞ்சுப் பொன் வழங்கவே அவர்கள் அத் தொகையின் வட்டிக்காகத் திருவை யாற்று மகாதேவருக்கு ஒரு விளக்கு எரிப்பதாக ஒத்துக்கொண்டனர்.

நம் பிராட்டியார் சோழ மகாதேவியார் என்ற முதற் பராந்தக னுடைய மற்ருெரு தேவியாரின் பணிமகள் ஒருத்தி அரசனுடைய 21 அல்லது 22ஆம் ஆண்டில் ஒரு விளக்குக்கு நன்கொடை வழங்கிய செய்தி உணரப்படுகிறது.

நிரணப்பாடியார் என்பவரின் மகளாரும் முதற் பராந்தக னுடைய தேவியாருள் ஒருத்தியுமான வானவன் மாதேவியார் அரச னுடைய 31ஆம் ஆண்டில் இப் பெருமானுக்கு 57 பலம் எடையுள்ள வெள்ளி விளக்கைக் காணிக்கையாக வழங்கி அவ் விளக்கெரிப்பதற்கு வேண்டிய எண்ணெய்க்குரிய முதலாக 30 கழஞ்சு பொன் அளித்த செய்தியை இக் கோயிற் கல்வெட்டொன்று குறிப்பிடுகிறது.

நங்குறிநங்கையார் என்பவரின் மகளாரும் முதற் பராந்தகன் தேவியாருள் ஒருவருமான சோழ சிகாமணியார் அரசனுடைய 34ஆம் ஆண்டில் விளக்கு ஒன்றிற்காக நன்கொடை வழங்கிய செய் தியை அறிகிறேம். ஈழத்தரையருடைய மகளாரான அரிஞ்சிகை என்பார் இம் மன்னனுடைய 40ஆம் ஆண்டில் இக் கோயிலில் கல்வி யில் வல்ல அந்தணன் ஒருவனுக்கு உணவிடுவதற்காக நிலம் வழங்கிய செய்தியை அறிகிறேம்.

இருமடிச்சோழ பல்லவரையர் என்னும் நம்பன் ஐயரடிகள் சோழ னுடைய அரசியல் அதிகாரிகளுள் ஒருவர்போலும். அவர் இக் கோயிலின் சார்பில் நியமலன சுவாமிகள் என்பவரால் பரிபாலிக்கப் பட்ட மடம் ஒன்றிற்குச் சிவயோகிகளுக்கு உணவு இடுவதற்காக 5 வேலி நிலம் நன்கொடையாக வழங்கினர்.

ஆதித்த தெரிஞ்ச கைக்கோளர் குழுவினருள் ஒருவனுன அயனதி நெடுப்படை என்பவன் நினைவுக்காக இக் கோயிலில் விளக்கொன்று வைக்கப்பட்ட செய்தி இரண்டாம் ஆதித்தன் கல்வெட்டொன்ருல் புலனுகிறது.

முதல் இராசராசனுடைய 3ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று அவ னுடைய மாதேவியான பஞ்சவன் மகாதேவி திருவையாற்று மாதேவ ருக்கு ஒரு சாமரை வழங்கிய செய்தியை வெளியிடுகிறது.

இப் பஞ்சநதீசுவரர் கோயில் சோழ மரபினரின் உள்ளத்தைக் கவர்ந்த வகையை என்னவென்று சொல்வது?

சமீப காலத்தில் இசையில் வல்ல அடியவரான தியாகராச சுவாமிகளின் தொடர்பால் தமிழ்நாட்டிலும் அதற்கப்பாலும் திருவையாறு பெருமதிப்புப் பெற்று மிளிர்கிறது.

திருவையாற்றுக் கோயில் :

பழைய கல்வெட்டுகளில் இவ்வூர் இறைவர் 'திருவையாற்றுப் பரம மகாதேவர்' என்று குறிப்பிடப்படுகிறார். கிழக்கு நோக்கிய சந்நிதியையுடைய இக் கோயில் இருதளக் கற்றளியாகும். அதன் கிரீவம் வட்டவடிவமானது. சமீப காலத்தில் புதுப்பிக்கப்பட்ட சிகரமும் வட்ட வடிவமானதே.

கருவறை சதுர வடிவமானது. அது 20 அடி பக்க அளவுடையது. கருவறையையும் அர்த்த மண்டபத்தையும் அந்தராளம் இணைக்கிறது. அர்த்த மண்டபத்தின் நீளம் 12½ அடி. அதிஷ்டானத்தின் படை வரிசையில் தாமரை இதழ்போன்ற அமைப்பையும் அதன்மேல் யாளி வரிமானத்தையும் காணலாம்.

கருவறையின் வெளிச் சுவரிலுள்ள தேவகோஷ்டங்களில் தட்சிணாமூர்த்தி, அர்த்தநாரீசுவரர், பிரமன் ஆகிய சிலைகளைக் காணலாம். அரைத்தூண்கள் 7½ அடி உயரமுடையவை. போதிகைகள் குழைவுகளை உடையன.

கொடுங்கையின்கீழ்ப் பூதகண வரிசை உள்ளது. கொடுங்கை அரை வட்டக் கூடுகளாலும் ஓரங்களில் கொடிக்கருக்காலும் வனப்புற்றிருக்கிறது.

அர்த்தமண்டபத்தை நான்கு தூண்கள் தாங்கி நிற்கின்றன. அதற்கு வெளியே வடபுறத்தும் தென்புறத்தும் 4 அடி அகலமுள்ள வாயில்கள் உள்ளன. அர்த்தமண்டபத்திற்கு வெளியே கிழக்கு நோக்கி 35 அடி தூரம் முகமண்டபம் நீண்டுள்ளது. முகமண்டபம் ஒரு காலத்தில் அர்த்தமண்டபத்தோடு சேராமல் தனியே இருந்து, பிற்காலத்தில் அர்த்தமண்டபத்தோடு இணைக்கப்பட்டிருக்கவேண்டும் என்பதற்குரிய சுவடுகள் உள்ளன. முகமண்டபத்தை அர்த்தமண்டபத்தோடு இணைத்த இடத்தின் இருமருங்கிலுமே முன் குறிப்பிட்ட வாயில்கள் உள்ளன. இம் முகமண்டபத்தில் முதல் ஆதித்தன், முதற் பராந்தகன் ஆகியோர் கல்வெட்டுகள் காணப்படுவதால் இது மூலக் கோயிலின் ஒரு கூறே என்று உணரப்படுகிறது.

சப்த மாதர் சிலைகள் முதற் பிராகாரத்தில் திருச்சுற்றில் ஒரு மேடையில் வைக்கப்பட்டுள்ளன. தற்போது கோயிலடைந்திருக்கும் புதுமையையும் விரிவையும் காணும்பொழுது, முன்பு எத்தனை பரிவார தேவதை ஆலயங்கள் இக் கோயிலில் இருந்திருக்கக்கூடும் என்று முடிவு செய்வதற்கு வாய்ப்பற்றவராக நாம் உள்ளோம்.

## திருப்பழனம்

**ஆபத்சகாயேசுவரர் கோயில் :**

திருப்பழனம் திருவையாற்றிலிருந்து கும்பகோணம் செல்லும் சாலையில் திருவையாற்றிற்குக் கிழக்கே 2 கல் (3·2 கி.மீ.) தொலைவில் உள்ள சப்த ஸ்தலங்களில் ஒன்றாகும்.

இவ்வூர் அப்பராலும் சம்பந்தராலும் பாடப்பட்ட பழங்கோயிலை உடையது. இவ்வூரையடுத்த திங்களூரில் வாழ்ந்த அப்பூதியடிகள் என்ற அடியவரைப்பற்றி அப்பர் இவ்வூர்ப் பதிகத்தில் பாடியுள்ளார். இவ்வூரிலுள்ள கற்றளியின் மூலப் பகுதி முதல் ஆதித்தன் காலத்தது ஆகும்.

இராசகேசரிக் கல்வெட்டுகள் 2ஆம் ஆண்டு முதல் 26ஆம் ஆண்டு வரை பரவிக் காணப்படுகின்றன. அவற்றுள் 12ஆம் ஆண்டுக் கல் வெட்டொன்றின் எழுத்தமைப்பை நோக்கிக் கல்வெட்டிலாகாவினர் அதனைச் சுந்தரசோழன் காலத்தது என்று முடிவு செய்துள்ளனர்.

முதல் ஆதித்தன் தன்னுடைய இரண்டாவது ஆண்டில் தானே இக் கோயிலுக்கு நன்கொடை வழங்கியுள்ளான். இக்கல்வெட்டில் இம் மன்னன் 'சோழப்பெருமானடிகள் பெருநற்கிள்ளிச் சோழர்' என்று வழங்கப்படுகிறான். திருவெண்காட்டிலுள்ள சுவேதாரண்யேசுவரர் கோயிலில் இதே ஆதித்தனுடைய இதே இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் இவன் பெயர் 'பெருநற்கிள்ளிச்சோழர்' என்று குறிப்பிடப்படும் செய்தி இக் கருத்தை வலியுறுத்துவதாகும். இக் கல் வெட்டு மிறைக்கூற்றத்துத் தேவதானமான திருப்பழனத்து மகா தேவருக்கு ஒரு நந்தாவிளக்கு அமைப்பதற்கு மூலதனமான 30 கழஞ்சு பொன்னை நன்கொடையாக வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

நான்காம் ஆண்டில் நக்கன் கஞ்சன் என்பான் தன் தந்தையார் காலத்தில் திருப்பழன மகாதேவருக்கு வழங்கப்பட்ட இரண்டு பூந் தோட்டங்களையும் நன்கு பராமரிப்பதற்காக இரண்டு தோட்டக் காரர்களை நியமித்து, அவர்களுக்கு ஊதியம் வழங்குவதற்காகச் சில தரிசு நிலங்களை விலைக்கு வாங்கி, அவற்றை நன்முறையில் சீர்திருத்தம் செய்து கோயிலுக்கு வழங்கிய செய்தியை உணர்கிறோம்.

தஞ்சையைச் சார்ந்த நந்தி பங்கி திருப்பழனத்து மகாதேவருக்கு ஒரு விளக்கிற்காகவும் மார்கழித் திருவாதிரை, மாசி விசாகம் ஆகிய புண்ணிய நாட்கள் ஒவ்வொன்றிலும் இறைவனுடைய திருமுழுக்குக்கு 5 நாழி நெய் வழங்குவதற்காகவும் 100 ஆடுகளை நன்கொடையாக வழங்கிய செய்தி உணரப்படுகிறது.



38. பிரமன்.
கண்டியூர்



39. துர்க்கை,
கண்டியூர்

17ஆம் ஆண்டில் சோழ அரசியான தென்னவன் மகாதேவியார் திருப்பழனமுடைய மகாதேவருக்கு விளக்கு எரிப்பதற்காக 25 கழஞ்சு பொன்னை நன்கொடையாக வழங்கவே, திங்களூர்ச் சபையார் அப் பொன்னைப் பெற்று, விளக்கெரிப்பதற்குரிய செலவினங்களுக்காகச் சில நிலங்களைக் கோயிலுக்கு விற்றுக்கொடுத்தனர். 20ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒரு விளக்கு எரிப்பதற்கும் ஆவணி மாதத்தில் இறைவனுக்கு ஒரு திருமுழுக்குக்கு உதவவும் ஏற்பாடு செய்யப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

21ஆம் ஆண்டில் முதல் ஆதித்தனுடைய பெயர் 'உலகப் பெருமான்' என்று இங்குள்ள கல்வெட்டில் குறிக்கப்படுகிறது. அவ்வாண்டில் இம் மன்னன் இக் கோயிலின் 12 பணியாட்களுக்கும் இரண்டு கண்காணிகளுக்கும் இரண்டு தோட்டக்காரர்களுக்கும் நிலம் மானியமாக விட்டான்.

வயிரிநத்தன் என்ற திரிபுவனமாதேவியாரின் தாயாரும் சோழப் பெருமானடிகளின் தேவியாருமான காடுபட்டிகள் தாமரமெட்டியார் இக் கோயில் இறைவனுக்கு விளக்கெரிப்பதற்காக 20 கழஞ்சு பொன்னை வழங்கியுள்ளார்.

புரிசை என்ற பகுதியின் தலைவனான செம்பியன் ஆர்க்காட்டு வேளான் என்ற மறவன் நக்கன் இம் மன்னனுடைய 25ஆம் ஆண்டில் திருப்பழனக் கோயிலில் விளக்கெரிப்பதற்கு 30 கழஞ்சு பொன் நன்கொடையளித்தான்.

இம் மன்னனின் 26ஆம் ஆண்டில் பங்களநாட்டு மகாதேவரின் மகனான கங்கமார்த்தாண்டன் என்ற செம்பியன் பிருதிவிபதி கங்கரையன் திருப்பழனமுடைய மகாதேவருக்கு மணிகள் பதிக்கப் பட்டுத் தங்கக் கட்டுப்போடப்பட்ட உருத்திராட்ச மாலையொன்றை வழங்கினான்.

இங்கு முதற் பராந்தகன் கல்வெட்டுகள் அவனுடைய மூன்றும் ஆண்டு முதல் 35ஆம் ஆண்டுவரை பரவியுள்ளன. அவற்றுள் பெரும்பான்மையன திருவிளக்குகளுக்கு விடப்பட்ட நிவந்தங்கள் பற்றியனவே. இங்கு அடைமொழியில்லாது காணப்படும் இரண்டு பரகேசரிவர்மன் கல்வெட்டுகள் முதற் பராந்தகன் காலத்தனவே. அவற்றுள் முதலாவது முதல் ஆதித்தன் தேவியும் அவனுக்குப்பின் வாழ்ந்தவளுமான தென்னவன் மாதேவி விளக்கிற்காக வைத்த நிவந்தம் பற்றியதாகும். மற்றொன்று முதல் ஆதித்தனுடைய 26ஆம் ஆண்டில் குறிக்கப்பட்ட மகாதேவனுடைய மகனான பிருதிவி

கங்கரையன் ஒரு விளக்கு எரிப்பதற்காக 30 கழஞ்சு பொன் நன்கொடையளித்த செய்தியைக் குறிப்பதாகும்.

முதற் பராந்தகனுடைய 21ஆம் ஆண்டில் அம்பிகையின் சிலை யொன்று கோயிலில் நிறுவப்பட்டு அதற்கு விளக்கு எரிப்பதற்கு நிவந்தம் வழங்கப்பட்டது. காவிப்பூம்பட்டினத்தைச் சார்ந்த சேயபுவன சிந்தாமணி என்ற பெயருடைய பராந்தகனுடைய தேவி அவனுடைய 28ஆம் ஆண்டில் இக் கோயிலில் ஒரு விளக்கு எரிப்ப தற்காக 90 ஆடுகளை வழங்கியுள்ளாள்.

அடைமொழிகள் இன்றிக் காணப்படும் பரகேசரியின் இரண் டாம் ஆண்டைச் சார்ந்த இரு கல்வெட்டுகள் அரிஞ்சயன் காலத்தன வாகலாம். அக் கல்வெட்டுகள் குமணப்பாடியைச் சார்ந்த அரையன் ஆதித்தன் வீமன் என்பான் பூசனைக்கும் விளக்கிற்கும் மத்தளம் வாசிப்பார் ஐவர் ஊதியத்திற்கும் நிலக்கொடை வழங்கிய செய்தியை வெளியிடுகின்றன.

உத்தம சோழனுடையதாகக் கருதப்படும் பரகேசரியினுடைய 2ஆம் ஆண்டுக் கல்வெட்டில் அருண்மொழித் தேவ தெரிஞ்ச கைக் கோளருள் ஒருவன் கற்று வல்ல அந்தணர் நால்வருக்கு உணவிடுவ தற்கு வேண்டிய நிலக்கொடை அளித்தான் என்ற செய்தியைக் காண்கிறோம். உத்தம சோழன் காலத்தில் இளவரசாக இருந்து புகழ் பெற்ற முதல் இராசராசனுடைய இயற்பெயரைக்கொண்டு அருண் மொழித்தேவ தெரிஞ்ச கைக்கோளர் குழு நிலவியது. எனவே, அதன் உறுப்பினருள் ஒருவன் உத்தம சோழன் காலத்தவனாகலாம் என்று ஊகிக்கிறோம்.

முதல் இராசராசனுடைய 14ஆம் ஆண்டுக் கல்வெட்டு கம்பன் மணியன் என்ற விக்கிரமசிங்க மூவேந்த வேளான் இராசராசன் மலை நாட்டின்மீது படையெடுத்து அதனை வென்ற காலத்துக் கவர்ந்து வந்த பொருள்களுள் ஒன்றான 'மரகததேவர்' என்ற விக்கிரகத்தை அரசனை வேண்டிப் பெற்றுத் திருப்பழனக் கோயிலில் நிறுவிய செய்தியை வெளியிடுகிறது.

**திருப்பழனக் கோயில் :**

இக் கோயில் இருதளக் கற்றளி. அதன் கிரீவமும் சிகரமும் ஸ்தூபியும் சதுரமானவை. கருவறை சதுரமானது. அதன் பக்க அளவு 24 அடி 2 அங்குலம். கருவறையின் வெளிச்சுவர்களிலுள்ள மூன்று முக்கியமான தேவகோஷ்டங்களின் இரு பக்கங்களிலும் பஞ்ச ரங்கள் உள்ளன. தேவகோஷ்டச் சிலைகள் சாயம் படிந்து பழைய

அழகு மங்கிக் காணப்படுகின்றன. கோயிலை முறையறியாது புதுப் பிக்கும் அண்மைக்கால நன்மக்களின் செயல் பழைய அழகைக் குலைப்ப தாக உள்ளது. நடுவிலுள்ள தேவகோஷ்டங்களில் சிலைகளுக்கருகில் இரண்டு உருண்டையான தூண்களும் வெளிப்புறம் பட்டைகளை உடைய தூண்களும் உள்ளன. போதிகை குழைவுகளைப் பெற்றிருக் கிறது. கொடுங்கையின் கீழ்ப் பூதகண.வரிசை உள்ளது. கொடுங்கைக் கீழ் ஓரங்களில் வட்டங்களால் அணி செய்யப்பட்டுள்ளது.

கருவறையையும் அர்த்தமண்டபத்தையும் இணைக்கும் அந்தராளம் 4 அடி அகலமுடையது. அர்த்தமண்டபம் 15 அடி முன்னோக்கி யுள்ளது.

இக் கோயிலின் ஏனைய மண்டபங்களும், கோபுரங்களும், சிற்பங் களும், மதில்களும் பிற்காலத்தனவே.

## திருவேதிகுடி

**வேதபுரீசுவரர் கோயில் :**

தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவேதிகுடி காவிரிக் கரையில் கண்டியூரின் தென்கிழக்கே 2½ கல் (4 கி.மீ.) தொலைவிலுள்ளது. திருவையாற்று ஸப்தஸ்தலத் தொகுதியில் ஒன்றான இக் கோயிலை அப்பரும் சம்பந்தரும் பாடியுள்ளனர். இவ்விறைவன் வேதங்களால் பூசிக்கப்பட்டமையின் வேதபுரீசுவரர் என்று வழங்கப்பட்டார்.

இக் கோயிலில் 6 (ஆறு) கல்வெட்டுகள் உள்ளன. அவற்றுள் இராசகேசரிவர்மன் கல்வெட்டுகள் மூன்றும் முதல் ஆதித்தன் காலத்தனவாகலாம். கல்வெட்டெழுத்தின் அமைப்பும் மெய் யெழுத்துகள் புள்ளி பெற்றிருக்கும் செய்தியும் இக் கூற்றுக்கு அரண் செய்கின்றன.

இராசகேசரிவர்மனின் 19ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஆர்க்காட்டுக் கூற்றத்துப் பிரமதேய தேவதானமான திருவேதிகுடி மகாதேவர் சந்நிதியில் ஒரு நந்தாவிளக்கு எரிப்பதற்கு ஒப்புரவாளர் ஒருவர் வழங்கிய 10 கழஞ்சு பொன்னையும் திருவேதிகுடித் திருகோயிலுடை யார்கள், தம்முடைய அர்ச்சனாபோகமான நிலத்தை ஒற்றியாக வைத்துப் பெற்றுத் தர்மத்தை முட்டாமல் நடத்துவதற்கு உறுதி செய்த செய்தியை வெளியிடுகிறது.

மணிகள் வைத்து இழைக்கப்பட்ட 145 கழஞ்சு எடையுள்ள பொன் இராசகேசரிவர்மனுடைய 25ஆம் ஆண்டில் திருவேதிகுடி

மகாதேவருக்கு மலையான்குடி (மயிலையான் குடான்) கொற்றன் என் பவனால் வழங்கப்பட்டது.

பரகேசரிவர்மனுடைய மூன்றும் ஆண்டுக் கல்வெட்டு (முதல் பராந்தகன்) பல்லவத் தலைவன் ஒருவனால் கிழார்க் கூற்றத்துப் பரகேசரி புரத்து மகாதேவருக்கு ஒரு விளக்கு நன்கொடையாக வழங்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

முதல் இராசராசனுடையதாகக் கருதப்படும் இராசகேசரியின் ஐந்தாம் ஆண்டுக் கல்வெட்டு இராசராசன் ஆணையினால் கோயில் ஸ்ரீகாரியம் ஆராய்கின்ற அதிகாரி, மிகுதியாக இருந்த கோயில் பணத்தைக் கொண்டு இரும்புப் பிடியை உடைய 30 விளக்குகள் அமைத்து, அவற்றிற்கு எண்ணெய் ஊற்றி, அவற்றை நன்முறையில் காக்கவும், கோயிலைத் துப்புரவாக வைத்துக்கொள்ளவும், மாலைகள் கட்டவும், தோட்டங்களைப் பராமரிக்கவும், திருமடைப்பள்ளித் தொழில்கள் செய்யவும், காளம் ஊதவும் தேவைப்பட்ட பணி யாட்களை நியமித்த செய்தியைக் குறிக்கிறது.

இக் கோயில் முதல் ஆதித்தன் காலத்து இருதளக் கற்றளி. இதன் கிரிவமும் சிகரமும் வட்டமானவை. கருவறை 18½ அடி பக்கமுடைய சதுரமாகும். அர்த்தமண்டபம் கருவறையை ஒட்டி 15 அடி முன்னேக்கி நீண்டுள்ளது. இங்குள்ள தேவகோஷ்டச் சிலை களில் துர்க்கை, அர்த்தநாரீசுவரர், பிரமன் என்ற மூன்றும் பழைய கோயிலைச் சார்ந்தவை. தேவகோஷ்டங்களைத் தாங்கும் அரைத் தூண்கள் வட்டமாக உள்ளன. ஓரங்களில் உள்ள அரைத்தூண்கள் பட்டையுடையவை. அவற்றில் கும்பங்களும் குழைவுகளை உடைய போதிகைகளும் காணப்படுகின்றன.

கொடுங்கையில் அரைவட்டமான கூடுகள் உள்ளன. கொடுங்கை யின்மேல் யாளி வரிமானத்தைக் காணலாம்.

## திருச்சோற்றுத்துறை

**ஓதவனேசுவரர் கோயில் :**

திருச்சோற்றுத்துறை தஞ்சாவூர்—திருவையாறு வழியில் திருவை யாற்றிலிருந்து 2 கி.மீ. தொலைவிலுள்ள கண்டியூரிலிருந்து பாபநாசம் செல்லும் வழியில் 2 கல் (3·2 கி.மீ.) தொலைவிலுள்ளது. சப்த ஸ்தலங் களில் ஒன்முன இவ்வூர் கௌதம முனிவருடைய இருப்பிடமாகக் கூறப்பட்டுள்ளது. இந்திரனும் சூரியனும் இங்குள்ள இறைவனை வழிபட்டு நற்கதி பெற்றனர் என்றும், அருளாளர் என்ற பெய

ருடைய அந்தணர் இவ்விறைவனுடைய அருளால் அட்சயபாத்திரம் ஒன்று பெற்றார் என்றும் தலபுராணம் கூறும்.

தேவாரப் பதிகங்களைப் பெற்றுள்ள இக் கோயிலும் முதல் ஆதித்தன் காலத்தைச் சேர்ந்ததே யாம்.

இங்குள்ள இராசகேசரிவர்மன் கல்வெட்டுகளின் எழுத்தமைப் பையும் மெய்யெழுத்துகள் புள்ளி பெற்றுள்ள செய்தியையும் நோக்கி அவற்றை முதல் ஆதித்தன் காலத்தனவாக முடிவு செய்யலாம்.

இராசகேசரிவர்மனின் 13ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று தஞ்சாவூர் நங்கைபங்கி என்பவள் இவ்விறைவன் சந்நிதியில் ஒரு நந்தா விளக்கு எரிப்பதற்கு உரிய நெய்க்காக 90 ஆடுகள் வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. அவளே இவ்வாண்டில் திருப்பழனம் கோயிலுக்கும் ஆடுகள் வழங்கியிருக்கிறாள். 14ஆம் ஆண்டுக் கல்வெட்டும் திருவிளக்குக்கு ஆடுகள் வழங்கிய செய்தியைத் தெரிவிப் பதேயாம். 17ஆம் ஆண்டுக் கல்வெட்டு சோழமாதேவி யொருத்தி நந்தா விளக்கிற்காக 100 ஆடுகள் வழங்கிய செய்தியைக் குறிக் கிறது. கல்வெட்டிலாகாவினர் இவ்வரசியின் பெயர் புலனாகாததால் இக் கல்வெட்டு சுந்தர சோழன் காலத்தது ஆகலாம் என்று முடிவு செய்தனர். கல்வெட்டில் 'சோழப்பெருமானடிகள் தேவியார் கிழா......' என்று காணப்படுவதால் தேவியார் பெயர் 'கிழானடிகள்' என்று ஊகிக்கலாம். கிழானடிகள் முதல் ஆதித்தனுடைய தேவியா ராகவே, இக் கல்வெட்டும் ஆதித்தன் காலத்ததேயாம். இவ்வாதித்த னுடைய 17ஆம் ஆண்டிலேயே குணவன்புத்தன் என்பான் திருப்பூந் துருத்திக் கோயிலிலும் திருநெய்த்தானக்கோயிலிலும் விளக்கு எரிப்ப தற்குப் பொற்கொடை வழங்கினான் என அறிகிறோம். 19ஆம் ஆண்டில் நக்கன் ஆதித்தன் என்பான் இக் கோயிலுக்கு இரண்டு (காளங்கள்) சங்குகள் வழங்கித் திருவாராதனைக் காலத்தில் அவற்றை ஊதுவோருடைய ஊதியத்திற்காக நிவந்தம் விட்ட செய்தி உணரப் படுகிறது. 23ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று விளக்கிற்காக 25 கழஞ்சு வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. சிதைவுற்ற 25ஆம் ஆண்டுக் கல்வெட்டு, கோயிலுக்கு வழங்கப்பட்ட பொற்கொடை பற்றிப் பேசுகிறது. அது காடுபட்டிகள் தாமரமெட்டியாரின் மகளா ரான திரிபுவன மகாதேவ வயிரியக்கனார் என்ற சோழப் பேரரசியார் ஒரு நந்தாவிளக்கு எரிக்க 20 கழஞ்சு பொன் வழங்கிய செய்தியைக் குறிக்கிறது. தாமரமெட்டியாரின் பெயர் திருப்பழனத்திலுள்ள இராசகேசரிவர்மன் முதல் ஆதித்தன் கல்வெட்டிலும் இடம் பெற் றுள்ளது.

பரகேசரிவர்மனுடைய 2ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று திருச்சோற்றுத்துறை அகஸ்தீசுவர மகாதேவருக்கு மூன்று விளக்கு எரிப்பதற்கு விடப்பட்ட நன்கொடையைக் குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டு, கண்டியூர்—திருக்காட்டுப்பள்ளி வழியில் கண்டியூரில் இருந்து 3 கல் (4·8 கி.மீ.) தொலைவில் உள்ள திருவாலம்பொழில் மகாதேவரைக் குறித்துள்ளது போலும்.

நந்திபுரம் என்ற ஆயிரத்தளியைச் சார்ந்த வணிகன் ஒருவன் பரகேசரியின் 11ஆம் ஆண்டில் இக் கோயிலில் இறைவியின் சிலையை நிறுவினன் என அறிகிறோம். முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகள் இக் கோயிலில் அவனுடைய 11ஆம் ஆண்டிலிருந்து 45ஆம் ஆண்டு வரை பரவியுள்ளன. 11ஆம் ஆண்டில் சோழ அரசியான திரிபுவன மகாதேவி தன் தாயார் நங்குட்டியார் பெயரால் விளக்கெரிப்பதற்கு 30 பொன் வழங்கினள். திருவையாற்றுக் கல்வெட்டொன்றிலிருந்தும் சோழ மகாதேவியார் முதற் பராந்தகனுடைய தேவியாருள் ஒருவர் என்பது போதருகிறது. அவருடைய தாயான முள்ளூர் நங்கை பரகேசரியினுடைய 3ஆம் ஆண்டில் இக் கோயிலில் ஒரு விளக்கு எரிப்பதற்கு 30 கழஞ்சு பொன் வழங்கினள். அதே யாண்டில் அவ்வம்மை பக்கத்துக் கோயில்களுக்கும் நிவந்தம் வழங்கிய செய்தி திருநெய்த்தானம், திருப்பழனம், திருப்பூந்துருத்திக் கல்வெட்டுகளால் வெளியாகிறது.

இக் கோயில் ஆதித்தன் காலத்தைச் சார்ந்த இருதளக் கற்றளி. இதன் கிரிவமும் சிகரமும் ஸ்தூபியும் சதுரமாக உள்ளன. கருவறை 18 அடி பக்கமுடைய சதுரமாகும். அர்த்தமண்டபம் 7¾ அடி முன்னோக்கி நீண்டுள்ளது. அர்த்தமண்டபத்தின் வெளியே இருமருங்கிலும் துவாரபாலகர் சிலைகளைக் காணலாம்.

அரைத்தூண்கள் கும்பங்களோடுகூடி நாற்பட்டையாக அமைந்துள்ளன. போதிகை குழைவுடையது. கொடுங்கையின்கீழ்ப் பூதகண வரிசையையும் மேல் யாளி வரிமானத்தையும் காணலாம். கொடுங்கையின் ஓரங்களை வட்டங்கள் அழகு செய்கின்றன.

தேவகோஷ்டச் சிலைகள் நின்ற திருக்கோலத்தில் உள்ளன. பழைய பரிவாரக் கோயில்களைச் சார்ந்தவை சப்த மாதர், பைரவர், சூரியன் என்ற சிலைகளேயாம்.

## தில்லைஸ்தானம்

திருநெய்த்தானம் :

1. கிருத ஸ்தானேசுவரர் கோயில் (நெய்யாடியப்பர் கோயில்).
2. இராசகேசரி மாகாளத்துப் பரமேசுவரி (காளி) கோயில்.

3. திருமேற்றளி (விஷ்ணு கோயில்).

தில்லைஸ்தானம் என்பது திருவையாற்றிலிருந்து கல்லணை செல்லும் சாலையில் திருவையாற்றிலிருந்து 1·2 கல் (2 கி.மீ.) தொலைவு மேற்கில் காவிரியின் வடகரையிலமைந்த சப்தஸ்தலங்களில் ஒன்றாகும். இங்குள்ள பெருமானை வழிபட்டுக் கலைமகள் பயன்பெற்றாள் என்று தலபுராணம் கூறுகிறது.

முற்காலத்தில் இங்குச் சிவன், காளி, திருமால் ஆகிய மூவருக்கும் கோயில்கள் இருந்தன. தற்போது சிவன் கோயில் ஒன்றே எஞ்சியுள்ளது. இங்குள்ள இறைவனுடைய பெயர் 'கிருத ஸ்தானேசுவரர்' என்பது. அதன் தமிழ் ஆக்கம் 'நெய்யாடியப்பர்' என்பது. இவ்வூர் இறைவனைப்பற்றி அப்பரும் சம்பந்தரும் பாடல்கள் பாடியுள்ளனர்.

மூலஸ்தானக் கோயிலின் முகப்பில் சோழர்கள் காலத்துக்கு முற்பட்ட காலத்துக் கல்வெட்டுகள் இரண்டு உள்ளன. முதல் கல்வெட்டு மூன்றாம் நந்திவர்மனுடைய 10ஆம் ஆண்டில் (கி.பி. 845) ஒரு நந்தா விளக்கு அமைப்பதற்காக 60 கழஞ்சு பொன் வழங்கிய செய்தியைத் தெரிவிக்கிறது. மற்றொன்று அவன் சமகாலத்துப் பாண்டிய மன்னனான மாறஞ்சடையன் வரகுண மகாராசனின் நான்காம் ஆண்டைச் (கி.பி. 866) சார்ந்தது. அது திருநெய்த்தான மகாதேவருக்கு மூவர் ஒன்று சேர்ந்து 420 கழஞ்சுப் பொன்னை நன்கொடையாக வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. இவற்றை யடுத்து முதல் ஆதித்தனின் கல்வெட்டுக் காணப்படுகிறது. இவற்றை நோக்க, இவ்விடத்து ஆதிக்கம் பல்லவர், பாண்டியர் வழியாகச் சோழர் வசம் முறையாக வந்த நிலையை உணரலாம்.

முதல் ஆதித்தனுடைய கல்வெட்டுகள் அவனுடைய 8ஆம் ஆண்டு முதல் 17ஆம் ஆண்டுவரை பரவியுள்ளன. 8ஆம் ஆண்டுக் கல்வெட்டு சோழப் பெருமானடிகள் மகனார் ஆதித்தன் கன்னர தேவனால் 20 கழஞ்சு பொன் நன்கொடையாக வழங்கப்பட்ட செய்தியைத் தெரிவிக்கிறது. இக் கன்னர தேவன் முதற் பராந்தகனுடைய சகோதரனாதல் வேண்டும். இவ்வூர்ச் சபையார் இப் பொன் இருபதின் கழஞ்சையும் பெற்று ஒரு விளக்கெரிப்பதற்கு ஒத்துக்கொண்டனர்.

இராசகேசரி கல்வெட்டுகளில் (Nos. 35, 36, 37, 39, 41, 42 of 1895 and 282 of 1911) 11 முதல் 17 வரை ஆண்டுகளைச் சேர்ந்தவை யாவும் ஆதித்தன் காலத்தனவே.

அவற்றுள் ஒரு கல்வெட்டு இக் கோயிலின் ஸ்ரீகாரியம் பற்றி விசாரணையொன்று நிகழ்த்தி, நகரக் கரணத்தான், கணக்கு எழுது

னின்றவன், மற்றொருவன் ஆகிய மூவரும் பொய்க்கணக் கெழுதிப் பணத்தைத் துர்வினியோகம் செய்த குற்றத்திற்காக அவர்களுக்கு 3 கழஞ்சு தண்டம் விதித்து, அப் பொன்னைக்கொண்டு திருநெய்த் தானத்து எம்பெருமானுக்கு இரண்டு நெற்றிப் பட்டங்கள் அமைத்த செய்தியைக் குறிப்பிடுகிறது.

சோழப் பெருமானடிகளுடைய போகியார் நங்கை சாத்தப் பெருமானார் திருநெய்த்தானத்து மகாதேவர் சந்நிதியில் இரு விளக்கு எரிப்பதற்கு 30 கழஞ்சு பொன் நன்கொடையாக வழங்கத் திருநெய்த் தானத்துச் சபையார் பெரும்புலியூர்ச் சபையாரிடமிருந்து கோயிலுக் காக விலைக்கு வாங்கிய நிலத்தின் வரும்படியிலிருந்து விளக்கு எரிப்ப தாக ஒத்துக்கொண்டு, நங்கை சாத்தப்பெருமானார் வழங்கிய பணத்தைக்கொண்டு திருநெய்த்தானத்துப் பெருமானாருக்கு ஒரு ஸ்நான (ஸ்தபன) மண்டபம் அமைத்த செய்தியை அவன் 36ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது.

இராசகேசரிவர்மனுடைய 17ஆம் ஆண்டில் சோழப்பெருமானடி களின் தேவியார் கிழாரடிகள் ஒரு நந்தா விளக்கிற்காக 100 ஆடுகளை வழங்கினார். முதல் ஆதித்தனின் மற்றொரு தேவியாரான தென்னவன் மாதேவியார் ஒரு விளக்குக்காக 20 கழஞ்சு பொன் வழங்கினார்.

ஆதித்தன் கல்வெட்டுகளில் மிக முக்கியமானது அவன் தொண்டைநாட்டு வெற்றியைக் குறிக்கும், ஆட்சியாண்டு அறியப் படாத கல்வெட்டாகும்.

'ஸ்வஸ்திஶ்ரீ தொண்டை நாடுபாவின சோழன் பல்யானைக் கோக்கண்டனாயின இராசகேசரி வர்மனாரும், சேரன் கோத்தாணு ரவியும், தவிசும், சாமரையும், சிவிகையும், திமிலையும், கோயிலும் போனகமும், காளமும், செம்பியன் தமிழவேள் என்னும் குலப் பெயரும் பெற்ற விக்கியண்ணன் தேவியான கடம்ப மாதேவி திருநெய்த்தானத்து மகாதேவருக்குக் கொடுத்த நந்தா விளக்கிற்கு ஆடு நூறு. பன்மஹேசுவர ரக்ஷை.'

இக் கல்வெட்டு, தொண்டைநாடு கொண்ட சோழனான இராசகேசரி முதல் ஆதித்தனும் சேரமான் தாணு ரவியும் செம்பியன் தமிழவேள் என்ற விக்கியண்ணனுக்கு அவன் போர்க்களத்தில் செய்த வீரச்செயல்களின் பராட்டுதலாகப் பலவகைச் சிறப்புகளையும் செய்த செயலைக் குறிப்பிடுகிறது.

முதற் பாராந்தகனுடைய கல்வெட்டுகள் அவனுடைய 14ஆம் ஆண்டு முதல் 35ஆம் ஆண்டுவரை பரவியுள்ளன. அவற்றுள் 24ஆம்

ஆண்டுக் கல்வெட்டொன்று அம் மன்னனுடைய புதல்வனான அரிகுல கேசரியால் இக் கோயிலுக்கு 30 கழஞ்சு பொன் வழங்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

பரகேசரியின் 10ஆம் ஆண்டில் கோயில் நிர்வாகத்தை மேற்பார்வையிடும் அரசியல் அதிகாரி கிராமத்து அங்காடிக் கூலியை வாங்கும் உரிமையை நகர வாரியத்திற்கு வழங்கி, அதன் வருவாய்க்காகக் கோயிலில் ஒரு விளக்கு எரிக்குமாறு ஆணையிட்டான்.

பராந்தகனுடைய 25ஆம் ஆண்டுக் கல்வெட்டு மிகச் சுவையான செய்தியைத் தெரிவிக்கிறது. அது கோயில் ஸ்ரீகாரியத்தைப்பற்றி விசாரணை செய்த அரசியல் அதிகாரியான பவதேய நக்கனும் ஊர் நகர வாரியத்தாரும் தவறு செய்தவர்களுக்குத் தண்டம் விதித்து அப் பொருளைக்கொண்டு திருநெய்த்தானத்து இறைவருக்கு ஒரு நெற்றிப் பட்டம் செய்து, மிகுந்ததுகொண்டு திரு விசாகத் திருவிழா நடத்த ஏற்பாடு செய்த செய்தியைக் குறிக்கிறது. இக் கல்வெட்டு வெட்டப்பட்ட கோயிற் கட்டடப் பகுதிகளான அர்த்தமண்டபம், ஸ்தபன (ஸ்நான) மண்டபம், உத்தரம், போதிகை, கண்டம், பட்டிகை, குமுதம் ஆகியவற்றின் பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன.

பராந்தனுகடைய 27ஆம் ஆண்டில் ஆதித்தபுரத்து மணிக்கிராமத்தைச் சேர்ந்த வணிகன் ஒருவன் விளக்கு ஒன்றிற்காக நன்கொடை வழங்கினான்.

மல்லீசுவரத்து நம்பிராட்டியார் தென்னவன் மகாதேவியார் ஆன நாராயண நங்கை நங்கையார் என்ற பெயருடைய முதற் பராந்தகன் தேவியார் இம் மன்னனுடைய 34ஆம் ஆண்டில் விளக்கெரிப்பதற்கு நன்கொடையொன்று வழங்கியுள்ளார்.

இங்குள்ள இராசகேசரிவர்மனுடைய 3ஆம் ஆண்டினவாகிய கல்வெட்டுகள் நான்கும் கண்டராதித்தன் காலத்தன. சமரகேசரி என்றும் விக்கிரமசிம்மன் என்றும் முதற் பராந்தகனுடைய பெயர்களால் வழங்கப்பட்ட கைக்கோளர் குழுவைச் சார்ந்த நன்மக்கள் வழங்கிய கொடைகள் பற்றி அக் கல்வெட்டுகள் குறிப்பதால் அவை கண்டராதித்தன் காலத்தனவாகக் கொள்ளப்பட்டன.

இராசகேசவரிவர்மனின் 11ஆம் ஆண்டுக் கல்வெட்டு சுந்தர சோழனைச் சார்ந்ததாகும். நகரத்தார் இனத்தைச் சேர்ந்த மூவர் கோயில் நிர்வாகத்தை ஆராயும் அரசியல் அதிகாரியால் 14 கழஞ்சு பொன் தண்டம் விதிக்கப்பட்டனர். அது திருநெய்த்தானத்துப்

பெருமானுக்கு இரண்டு நெற்றிப் பட்டங்களாக அமைக்கப்பட்டது. இந் நகரத்தாருள் ஒருவன் அரிஞ்சிகை நெய்த்தானன் என்று பராந்த கனுடைய புதல்வனுன அரிஞ்சயன் பெயரை ஒட்டியிருப்பதால் இக் கல்வெட்டு அரிஞ்சயனுக்குப்பின் அரியணையேறிய இராசகேசரி வர்மனுன சுந்தரசோழனுக்கு உரியதாக முடிவு செய்யப்பட்டது.

இக் கோயில் இருதளக் கற்றளி. இது கிழக்கு நோக்கிய சந்நிதியை உடையது இதன் சிகரமும் கிரீவமும் சதுரமானவை. தற்போது காணப்படும் செப்பு ஸ்தூபி பிற்காலத்தது. கருவறை 18½ அடி பக்க அளவுடைய சதுரமாகும். அர்த்தமண்டபம் அதற்கு முன்னே 16 அடி நீண்டுள்ளது. அரைத்தூண்கள் 6½ அடி உயரமுடையவை. தேவகோஷ்டங்களுக்கு அருகில் உள்ள அரைத்தூண்கள் உருண்டையாகவும் சுவர் ஓரங்களில் உள்ளவை பட்டைகள் தீட்டப்பட்டனவாகவும் அமைந்துள்ளன. போதிகைகள் குழைவுகளால் அழகு செய்யப்பட்டுள்ளன. கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையையும், மேலே யாளி வரிமானத்தையும் காணலாம். கொடுங்கைகளை நடுவில் மனிதத் தலைகொண்ட அரைவட்டமான கூடுகளும், ஓரங்களில் கொடிக்கருக்குகளும் அணி செய்கின்றன. தேவகோஷ்டங்களில் தெற்கில் தட்சிணுமூர்த்தியையும் மேற்கில் மகாவிஷ்ணுவையும் வடக்கில் நின்ற திருக்கோலத்திலுள்ள ஒருதலைப் பிரமனையும் காணலாம். அர்த்தமண்டபத்தைக் கும்பங்களை உடைய எண்பட்டைத் தூண்கள் தாங்கி நிற்கின்றன. அர்த்தமண்டபத்தின் முகப்பில் இரு பக்கங்களிலும் இரு துவாரபாலகர் சிலைகளைக் காணலாம்.

மேல்தளம் சாலைகளாலும் கூடங்களாலும் அணிபெற்று விளங்குகிறது. கிரீவத்தின் நாற்புறங்களிலும் நான்கு காளைகள் உள்ளன. கிரீவத்திலுள்ள தேவகோஷ்டங்களில் சிலைகள் உள்ளன.

## திருப்பூந்துருத்தி

**புஷ்பவனேசுவரர் கோயில் :**

திருப்பூந்துருத்தி திருக்கண்டியூருக்கு மேற்கே கல்லணை செல்லும் சாலையில் 2 கல் (3·2 கி.மீ.) தொலைவில் உள்ளது. இது திருவையாறு சப்தஸ்தலத் தொகுப்பில் ஒன்ருகும். இந்திரன், காசியப ரிஷி, மார்க்கண்டேயர், மருத்துக்கள், சூரியன் முதலியோர் இங்குள்ள இறைவனை வழிபட்டு நற்பேறு பெற்றனர் என்பர். அப்பரும் சம்பந்தரும் இங்கு ஒருவரையொருவர் சந்தித்துப் பின் இறைவனை வழிபட்டனர். இங்கு அப்பர் ஒரு திருமடத்தை நிறுவி, அங்குச் சில காலம் தங்கியிருந்தார் என அறிகிறோம். அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரும் இங்குள்ள இறைவனைப்பற்றித் தேவாரம் பாடியுள்ளனர்.

இராசகேசரிக் கல்வெட்டுகளில் 11ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று அதன் பழைய எழுத்துகளை நோக்க முதல் ஆதித்தன் காலத்தது எனலாம். அது சோழப் பெருமானடிகளின் போகியாரான நங்கை சோழப் பெருமாஞர் தேவதானமான திருத்துருத்தி மகா தேவருக்கு ஒரு நந்தா விளக்கு அமைப்பதற்கு 30 கழஞ்சு பொன் வழங்கிய கொடை பற்றியதாகும். இம் மன்னனுடைய 14ஆம் ஆண்டில் இதே அம்மையாரே திருநெய்த்தானக் கோயிலுக்கு இது போன்ற நன்கொடையொன்று வழங்கியுள்ளார்.

இராசகேசரியின் 25ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று ஆட்சியாண்டின் உயர்வாலும் எழுத்தமைப்பாலும் முதல் ஆதித்தன் காலத்ததாகும். அது திருத்துருத்தி மகாதேவருக்குப் பாண்டிய நாட்டைச் சார்ந்த காவிதி சுப்பிரமணியன் என்பான் ஒரு விளக்குத் தண்டினையும் விளக்கு எரிப்பதற்கு உடலாக 25 கழஞ்சு பொன்னையும் வழங்கிய செய்தியைக் குறிப்படுகிறது.

ஆண்டு உணரப்படாத இரண்டு இராசகேசரிக் கல்வெட்டுகள் முதல் ஆதித்தனைச் சார்ந்தன எனக் கருதுகிறோம். முதல் கல்வெட்டு காந்தர்வன் பாரதாயன் சிங்கன் சிகந்தனுல் வழங்கப்பட்ட விளக்கு தானத்தைப் பற்றியது. இரண்டாவது குணவன் புத்தன் திருத்துருத்திச் சபையாரிடம் பொன் வழங்கி கோயிலில் விளக்கு எரிவிக்க ஏற்பாடு செய்த செய்தியை வெளியிடுகிறது. இக் குணவன் புத்தனும் திருநெய்த்தானத்து இராசகேசரியின் 17ஆம் ஆண்டுக் கல்வெட்டில் இடம்பெற்றுள்ள குணவன் புத்தடியும் ஒருவரே என்று கருதுகிறோம்

மதுரைகொண்ட பரகேசரியின் கல்வெட்டுகள் 11ஆம் ஆண்டிலிருந்து 34ஆம் ஆண்டுவரை பரவியுள்ளன. அடைமொழியில்லாத சில பரகேசரிக் கல்வெட்டுகளும் முதற் பராந்தகன் காலத்தனவாகலாம். முதற் பராந்தகனுடைய தேவியாரான சோழமாதேவியாருடைய தாயாரான முள்ளூர் நங்கை என்பார் வழங்கிய விளக்குத் தானத்தை 3ஆம் ஆண்டுக் கல்வெட்டு வெளியிடுகிறது. இம் முள்ளூர் நங்கையே திருநெய்த்தானம், திருச்சோற்றுத்துறை, திருப்பழனம் என்ற ஊர்களுக்கும் நிவந்தம் வழங்கியுள்ளாள்.

பரகேசரியின் 4ஆம் ஆண்டுக் கல்வெட்டில் இவ்வூர் அம்மனுடைய சனிவிழா குறிக்கப்பட்டிருக்கிறது. 20ஆம் ஆண்டுக் கல்வெட்டு, திருத்துருத்தி ஊர்ச்சபையாரிடம் பராந்தகனுடைய தேவியாரான கோக்கிழானடிகள் ஒரு நிலத்தை விலைக்கு வாங்கி, அதனை விளக்கு எரிப்பதற்கும் திரிபுரசம்மாரமூர்த்தியின் பூசனை நிவேதனங்களுக்கும் முதலாக வைத்த செய்தியை வெளியிடுகிறது. 24ஆம் ஆண்டில்

பராந்தகனுடைய மகனான அரிகுலகேசரி ஒரு விளக்கெரிப்பதற்கு 40 ஈழக் காசுகளை முதலாக வைத்த செய்தியைக் காண்கிறோம்.

முதற் பராந்தகனுடைய 33ஆம் ஆண்டில் பரகேசரி மூவேந்த வேளான் என்னும் நெற்குப்பை பெருமான்பள்ளி கூத்தன்குடி என்ற ஊர்ச் சபையாரிடம் நிலத்தை விலைக்கு வாங்கி, தான் இவ்வூர்க் கோயிலில் நிறுவிய வெள்ளித் திருமேனியையுடைய அனாகுணவர்ச் சித்தர் என்ற இறைவருக்கு நண்பகல் பூசனை நிவேதனங்கள் நடத்தவும் உடனடியாக 10 அந்தணர்களுக்கு உணவிடுவதற்காகவும் கோயில் நிர்வாகிகளிடம் அந் நிலத்தை ஒப்படைத்தான்.

சுந்தர சோழன் காலத்ததாகக் கருதப்படும் இராசகேசரிக் கல்வெட்டொன்று மிகச் சுவைபட அமைந்துள்ளது. திருத்துருத்திச் சபையார் அவ்வூர் வாசியான நாராயணன் ஸ்ரீமாதவன் என்பவனுக்கு 72 கழஞ்சு பொன் தண்டம் விதித்தனர். இங்ஙனம் தண்டம் விதிக்கப் படுவதற்கு அவன் செய்த தவறு என்ன என்பது குறிப்பிடப்படவில்லை. குற்றவாளி தலைமறைவாக இருந்து மறைந்துவிட்டான். ஊர்ச் சபையார் ஓடிவிட்டவனுடைய சொத்துகளைப் பறிமுதல் செய்தும் 72 கழஞ்சு பொன் கிடைக்காமையால் அவனுடைய சகோதரர்களையும் எஞ்சிய பொருளைக் கொடுக்குமாறு வற்புறுத்தினர். அத் தொல்லையால் அச் சகோதரர்கள் தம் நிலங்களைக் கோயிலுக்கு விற்க வேண்டியவர் ஆயினர். சகோதரர்கள் தம் நிலங்களைத் திருத்துருத்தி இறைவனுடைய மூலப்ருத்யனான சண்டேசன் உள்ளிட்ட கன்மிகளுக்கு விற்றுக் கொடுத்த செய்தி இக் கல்வெட்டின் முதற் பகுதியாக அமைந்துள்ளது. கல்வெட்டின் பிற்பகுதி, துன்புறுத்தப்பட்ட சகோதரர்கள் அரசனிடம் எழுத்து மூலமாகத் தங்கள் வேண்டுகோளைச் சமர்ப்பிக்கும் முகத்தான் திருத்துருத்தி ஊர்ச்சபையாரின் செயல் நியாயத்துக்குப் புறம்பானது என்று எழுதித் தெரிவித்ததையும் நன்கு விசாரணை நிகழ்த்தியபின் திருத்துருத்திச் சபையாரின் முடிவு நியாய விரோதமானது என்பதும் சகோதரர் இருவரும் மாசற்றவர் என்பதும் முடிவாகவே, அரசன் தன் அதிகாரிகளுக்குக் குற்றமற்ற அச் சகோதரர்கள் இழந்த நிலத்தைத் திருப்பிப்பெற ஆவன செய்யுமாறு ஸ்ரீமுகம் அனுப்ப, அதிகாரிகள் மூலம் சகோதரர்கள் இழந்த நிலத்தைத் திருப்பிப் பெற்றனர் என்பதையும் குறிப்பிடுகிறது. இந் நாட்டுப் பண்டைய மன்னர்களின் செங்கோல் பிற்பட்ட சோழர் காலத்திலும் மங்கவில்லை என்பதற்கு மனு நீதி வழங்கியவனாகக் கருதப்பட்ட சுந்தர சோழனுடைய காலத்தைச் சார்ந்த இந் நிகழ்ச்சி ஒன்றே போதிய சான்றாகும்.

இத் திருப்பூந்துருத்திக் கோயில் ஏகதளக் கற்றளி. இதன் சதுரமான கருவறை 20 அடி பக்க அளவுடையது. கருவறையின் வெளியே

முப்புறச் சுவர்களிலும் காணப்படும் தேவகோஷ்டங்கள், கோஷ்டங்களுக்கு அருகிலுள்ள இரண்டு குட்டையான அரைத் தூண்களாலும் வெளியோரத்தில் இரண்டு உயரமான அரைத்தூண்களாலும் தாங்கப்படுகின்றன. சுவர்களின் ஓரங்கள் ஒவ்வொன்றிலும் 2 தூண்கள் உள்ளன.

கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையும் மேலே யாளி வரிமானமும் உள்ளன. கிரீவத்தின்மேல் அரை வட்டமான சிகரம் இருக்கிறது.

தேவகோஷ்டங்களில் வடக்கில் பிக்ஷாடனரும், மேற்கில் அர்த்த நாரீசுவரரும், தெற்கில் வீணாதர தட்சிணாமூர்த்தியும் காணப்படுகின்றனர்.

அர்த்த மண்டபம் 16 அடி நீளம் 15 அடி அகலமுடையது. இம் மண்டபத்தின் முகப்பில் இருமருங்கிலும் துவாரபாலகர் சிலைகள் உள்ளன.

முக மண்டபம் 30 அடிப் பக்க அளவுடைய சதுரமாகும். அது உருண்டையான கும்பங்களை உடைய நான்கு தூண்களால் தாங்கப்படுகிறது.[1]

## திருவிளாக்குடி (திருவேள்விக்குடி)

திருவிளாக்குடி தஞ்சை மாவட்டத்தில் காவிரிக் கரையில் அமைந்ததோர் ஊராகும்.

பழங்காலத்தில் இக் கோயில் திருமணவேள்விக்குடி எனவும் திருவேள்விக்குடி எனவும் வழங்கப்பட்டது. தான் விரும்பிய பெண்ணொருத்தியை மணந்துகொள்ள உறவினரால் மறுக்கப்பட்ட இளவரசன் ஒருவன் இங்குள்ள இறைவனைக் குறித்துத் தவம் செய்து, அவன் அருளால் தான் விரும்பிய பெண்ணை மணக்கும் வாய்ப்பைப் பெற்றதால் இவ்வூர் திருமணவேள்விக்குடி என வழங்கப்பட்டது என்று தலபுராணம் கூறுகிறது. இங்குள்ள கோயில் சம்பந்தராலும் சுந்தரராலும் பாடப்பட்டது.

[1] 'லலிதகலா' (Lalit Kala) என்ற நூலில் பி. ஆர். ஸ்ரீநிவாசன் இக் கோயில் பற்றியும் திருவாலம்பொழில் கோயில் பற்றியும் சுருக்கமாக எழுதியுள்ளார். அவர் திருவாலம்பொழில் சப்தஸ்தானக் கோயில்களுள் ஒன்று என்று கூறியிருப்பது தவறான செய்தியாகும்.

இவ்விரு நாயன்மார்களும் திருத்துருத்தியும் (குற்றாலம்) திருவேள்விக்குடியும் என்ற இவ்விரு ஊர்களையும் இணைத்தே பாடியுள்ளார்கள். ஆகையால் குறைந்தது ஏழாம் நூற்றாண்டிலிருந்தே திருவேள்விக்குடிக் கோயில் இருந்திருக்க வேண்டும். முதலாம் ஆதித்தன் காலத்திலேயே இது கற்றளியாக எடுப்பிக்கப்பட்டிருக்கவேண்டும். இக் கோயில் சுவர்களின்மீது முதலாம் ஆதித்தன் காலம் முதல் மூன்றாம் இராசராசன் காலம் வரையில் பல கல்வெட்டுகள் உள்ளன.

அடைமொழியோ, மன்னனின் சிறப்புப் பெயரோ இல்லாத ஆறு இராசகேசரிவர்மனின் கல்வெட்டுகள் இக் கோயிலில் உள்ளன. அவைகளில் இரண்டு பழுதுபட்டோ, சில பகுதிகள் மறைபட்டோ கோயிலின் தென் சுவரில் கிடைத்துள்ளன. ஒன்று 96 ஆடு வழங்கி நந்தா விளக்கு வைத்ததையும் (A. R. 132—1926; S. I. I. XIII, 345), மற்றொன்று இக் கோயிலைக் கற்றளி என்றும், விடேல்விடுகு சதுர்வேதி மங்கலத்துத் திருவேள்விக்குடி மஹாதேவருக்கு ஓர் வியாபாரி கொடுத்த பரிசையும் (A. R. 133—1926; S. I. I. XIII, 346) குறிக்கின்றன. இக் கோயிலின் வடசுவரில் கோவிராஜகேசரியின் 15ஆம் ஆண்டில் ஒரு வியாபாரியின் ஆன்ம நலத்திற்காக அவனுடைய மக்களிருவர் திருவேள்விக்குடி ஆள்வார்க்கு நந்தாவிளக்கு ஒன்றும் 96 ஆடுகளும் நிவந்தமாகக் கொடுத்ததைக் கூறுகிறது. (A. R. 111—1926; S. I. I. XIII, 258). இவைகளில் ஏதேனும் ஒன்றாவது முதலாம் ஆதித்தன் காலத்ததாக இருக்கலாம். உத்தம சோழன் காலத்தில் இக் கோயில் புதுப்பிக்கப்பட்டதால் நேரில் பார்வையிடாமல் இவைகளை மூலக் கல்வெட்டுகளா, அல்லது பிரதிகளா என்று உறுதியாகக் கூறுவதற்கில்லை.

பழைய கல்வெட்டுகளில் இவ்வூர் காவிரியின் வடகரையிலமைந்த குறுக்கை நாட்டுப் பிரமதேயமான முருகவேள் மங்கலம் என்று வழங்கப்படுகிறது. இவ்வூர் இறைவர் மங்கலநக்கர் என்று பழங் கல்வெட்டுகளில் வழங்கப்படுகிறார். பழைய கல்வெட்டொன்றில் வாரிசு ஏதுமின்றி இறந்த இரண்டு சகோதரர்களுடைய நிலம் ஒன்றையும், மற்றொரு நிலத்தையும் ஸ்ரீ பலிகொட்டிக் காளம் ஊதிச் சேகண்டி கொட்டுவதற்காகக் கோயிலில் நியமிக்கப்பட்ட மூவருக்கும் மானியமாக விட்ட செய்தி கூறப்பட்டுள்ளது.

சற்றுப் பிற்பட்ட காலத்தில் இவ்விறைவர் 'நடுவில் ஸ்ரீ கோயில் தேவர்' எனவும், 'திருவேள்விக்குடி யாழ்வார்' அல்லது 'உடையார்' எனவும் வழங்கப்பட்டார்.

இராசகேசரியின் 16ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று ஸ்ரீ கோயில் நிர்வாகம் செய்த ஆதித்தபிடாரன் உள்ளிட்டோர் கோயில் நிலம்

ஒன்றை உடைய பிராட்டியார் என்ற அரசமாதேவியின் பணிப்பெண் ஒருத்தியிடம் அடகு வைத்து 15 கழஞ்சு பொன் பெற்ற செய்தியைக் குறிப்பிடுகிறது. ஆதித்தபிடாரர் என்ற பெயர்கொண்டு இது முதல் ஆதித்தன் காலத்ததாக இருக்கலாம். இல்லையேல் சுந்தரசோழன் காலத்ததாகலாம்.

இங்குப் பரகேசரிவர்மனின் 2ஆம் ஆண்டு முதல் 14ஆம் ஆண்டு வரை பல கல்வெட்டுகள் உள்ளன. அவற்றுள் மிகச் சிலவே முதற் பராந்தகன் காலத்தனவாகலாம். ஏனையவை உத்தம சோழன் காலத் தனவே.

பரகேசரியின் இரண்டாம் ஆண்டில் நல்லாற்றூர் அல்லது குறுக்கை நாட்டுப் பிரமதேயமான விடேல்விடுகு சதுர்வேதி மங்க லத்தின் ஒரு கூறுக வேள்விக்குடி குறிப்பிடப்படுகிறது. கரிகாலச் சோழத்தெரிஞ்ச கைக்கோளர்க் குழுவைச் சேர்ந்த ஒருவன் 50 கழஞ்சுப் பொன் கொடுத்துக் கோயிலுக்குச் சொந்தமான நிலம் ஒன்றை இறையிலியாக்கிக் கொடுத்தான். இக் கல்வெட்டு உத்தம சோழன் காலத்ததாக இருக்கலாம். (*136—1926*).

பரகேசரிவர்மனின் ஆறும் ஆண்டு உள்நாட்டு வெளிநாட்டு வியா பாரத்தில் ஈடுபட்ட நானாதேசித் தொகுதியைச் சார்ந்த வணிகனான எடுத்தபாத மூத்தசெட்டி என்பான் இக் கோயிலில் அமைந்த கூத்தப் பெருமான் (நடராசர்) என்ற உலோகத் திருமேனிக்கு ஒரு விளக்கு வைப்பதற்கு நன்கொடை வழங்கினான். (*121—1926*).

பரகேசரிவர்மனின் ஆறும் ஆண்டு செம்பியன் மாதேவி இத் திரு வேள்விக்குடி யாழ்வாருக்கு 142 கழஞ்சு எடையுள்ள வெள்ளிக் கலசம் ஒன்று அளித்துள்ளாள். (*128—1926*). இக் கல்வெட்டு உத்தம சோழன் காலத்தது.

பரகேசரிவர்மனின் 14ஆம் ஆண்டில் ஐயன் நரசிங்கன் என்ற வீர சேகர மூவேந்தவேளான் திருவிளக்கெரிக்கவும், காவிரியிலிருந்து திரு மஞ்சனநீர் கொணரவும் நிலத்தை மானியமாகவிட்டுக் காவிரியில் இருந்து நீர்கொணர 30 ஈழக் காசு எடையுடைய வெள்ளிப் பாத் திரத்தை வழங்கினான் என அறிகிறோம். இக் கொடை பரகேசரி வர்மனான உத்தம சோழன் காலத்தது.

ஸ்ரீ கரணப்பிச்சன் என்பான் விநாயகர் சந்நிதியில் ஒரு விளக்கு எரிக்க ஏற்பாடு செய்தான்.

முதல் இராசராசனுடைய 27ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட க்ஷேத்திர பாலதேவர் என்ற கற்சிலைக்கு நள்ளிரவில் நிகழ்த்தப்பட வேண்டிய நிவேதனங்களுக்கு இராசேந்திரன் காலத்தில் மானியம் விடப்பட்டது.

முதல் இராசேந்திரன் காலத்தில் இவ்வூர் கங்கைகொண்ட சதுர்வேதிமங்கலத்தோடு இணைக்கப்பட்டது. இவ்வூர் ஆளுங்கணத் தாருள் ஒருவன் இக் கோயில் நிறுவிய திருவாரூர் நம்பியாரான சுந்தர ருடைய விக்கிரகத்துக்கும் பூசனை நிவேதனங்களுக்குரிய ஏற்பாடு செய்யப்பட்டது.

கடலங்குடி என்ற விடேல்விடுகு சதுர்வேதிமங்கலம் காவிரியின் எதிர்க்கரையில் அமைந்த ஊர். அவ்வூர்ச் சபையாரும் இவ்வூர்ச் சபையாருமாகச் சேர்ந்து இக் கோயில் நிர்வாகங்களைக் கவனித்து வந்தவரென அறிகிறோம்.

முதல் இராசேந்திரனின் 7ஆம் ஆண்டில் இலிங்கோற்பவருக்கு வழங்கப்பட்ட மானியம்பற்றிய செய்தி அறியப்படுகிறது. கடலங் குடிச் சபையார் அடியார்களுக்கு உணவிடும் தர்மசத்திரம் நடத் தவும், இவ் விறைவனுக்குச் செவ்வந்திப்பூவை நாடோறும் வழங்கவும் சாலாபோகமாக நிலம் ஒன்றைப் பெற்றனர் என அறிகிறோம்.

இரண்டாம் இராசேந்திரனுடையது என்று கருதப்படும் பரகேசரி வர்மனுடைய 19ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று மணவாள நம்பி கோயிலில் பெரிய தேவர் சிலையும் அவருடைய நம்பிராட்டியார் சிலையும் பிரதிட்டிப்பிக்கப்பட்டன என்று கூறுகிறது. மூன்றும் இராச ராசன் காலத்தில் குழப்பமான நேரத்தில் இவை வாணகோவரைய னுடைய ஆட்களால் திருச்சத்திமுற்றம் கோவிலுக்குக் கொண்டு சொல்லப்பட்டு, 12ஆண்டுகளுக்குப் பின் மீண்டும் தொண்டைமான் என்பவரால் இங்குக் கொணரப்பட்டன (கி.பி. 1233).

இக் கோயில் ஒப்புரவாளர் பலருடைய நன்கொடையால் கட்டப் பட்டதாகும். அவர்களுடைய பெயர்களை அவர்கள் கட்டிய அவ்வப் பகுதிகளில் காணலாம்.

இக் கோயில் உத்தமசோழன் காலத்தில் புதுப்பிக்கப்பெற்றிருக்க வேண்டும். கொடையாளிகள் பலர் சிறுசிறு பகுதிகளைக் கட்டி அவர்களுடைய பெயர்களையும் பொறித்துள்ளார்கள். (*109, 110, 122, 126, 127, 129, 131, 138, 139, 142, 148, 149, 151—1926*) கால்படை வரையில் கட்டடத்தையும், தாடிப்படையில் பதினன்கு

கற்களையும் திருவையாற்று யோகி என்பவர் உதவினர். கோயிலின் நாலில் ஒரு பகுதியை வளஞ்சியர், திசை ஆயிரத்தைந்நூற்றுவர் என்ற வர்த்தகக் குழுவினர் கட்டினர் (131—1926). திணைக்களம் அங்கத்தினரின் கொடை கோயில் வாயிலின் அரிகால்களாகும் (150—1926). துவாரபாலகருக்கு அருகிலுள்ள மூன்று கற்களை கண்டராதித் தத் தெரிஞ்ச கைக்கோளரின் குழுவினரில் மூவர்கொடுத்தனர். (145—1926) துவாரபாலகனுன மகாகாளன் சிலை மற்றொருவரின் பரிசு (149—1926). தட்சிணமூர்த்தி சிலை வேறொருவரின் உபயம் (129—1926). இவ்விதம் பலரால் உத்தமசோழன் காலத்தில் இக் கோயில் புதுப்பிக்கப்பட்டிருக்கவேண்டும்.

கருவறையின் புறச்சுவரில் தட்சிணமூர்த்தி, லிங்கோத்பவர், பிரமன் என்ற சிலைகளும், அர்த்தமண்டபத்தில் அகஸ்தியர், நடராஜர், கணபதி, சண்டேசானுக்கிரக மூர்த்தி, துர்க்கை, பிச்சை தேவர் (கோஷ்டத்தில் இல்லை) என்ற சிலைகளும் காணப்படுகின்றன— [Madras Epigraphical Report 1926: Early Chola Bronzes by Douglas Barrett pp. 21-22]

## திருவிசலூர் வேம்பத்தூர் அல்லது வேப்பத்தூர்

**சிவயோகநாத சுவாமி கோயில் :**

தஞ்சை மாவட்டத்துத் திருவிசலூர் திருவிடைமருதூருக்கு 2 கல் (3·2 கி.மீ.) வடக்கே மண்ணியாற்றின் வடகரையில் உள்ளது.

இங்கு முதல் ஆதித்தன் காலத்துப் பழங்கோயிலொன்று உள்ளது. மாதேவடிகளுடைய தாயாரான பூர்வதேவியார் இராசகேசரிவர்மனுடைய 12, 17 ஆம் ஆண்டுகளில் திருவிசலூர்ப் பெருமானடிகளுக்கு நன்கொடை வழங்கியுள்ளார். கல்வெட்டிலாகாவினரால் சுந்தர சோழனுடையனவாகக் கருதப்படும் இக் கல்வெட்டுகள் உயர்ந்த ஆட்சியாண்டை நோக்கி முதல் ஆதித்தன் காலத்தனவாகலாம்.

மற்றொரு இராசகேசரிவர்மன் கல்வெட்டை உற்று நோக்கின் அது இராசகேசரியின் 23ஆம் ஆண்டினதாக உணரப்படுகிறது. அது முதல் ஆதித்தன் காலத்ததேயாகும். அது மூன்றும் நந்திவர்மனுடைய விருதுப்பெயரால் அமைக்கப்பட்ட அமனிநாராயண சதுர் வேதிமங்கலத்தின் ஒரு கூறுகிய திருவிசலூரிலுள்ள பெருமானடிகளுக்கு அர்த்தசாமப் பூசனை நிவேதனங்களுக்காக நக்கபிரான் என்ற பெயருடைய வேளாளரால் மங்கலக்குடியிலிருந்த நிலம் ஒன்று இறைநீக்கி மானியமாக வழங்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

பராந்தகனுடைய கல்வெட்டுகள் அவனுடைய 3ஆம் ஆண்டு முதல் 41ஆம் ஆண்டுவரை பரவியிருக்கின்றன. அவற்றில் பெரும்பாலான விளக்கு எரிப்பதற்காக வழங்கப்பட்ட நன்கொடைகளே. காவிரியின் வடகரையிலுள்ள தேவதான பிரமதேயமான அமனி நாராயண சதுர்வேதிமங்கலம் என்ற திருவிசலூர்ப் பெருமானடிகளுக்குக் காமவியக்கனுடைய பரிவாரத்தைச் சேர்ந்த ஒருவர் விளக்கிற்காக வழங்கிய நன்கொடையை அவனுடைய 3ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது.

பராந்தகனுடைய 27ஆம் ஆண்டில் திருவிசலூர் வேம்பத்தூர் எனவும் வழங்கப்படுகிறது. அவ்வாண்டுக் கல்வெட்டு வேம்பத்தூராகிய அவனி நாராயண சதுர்வேதிமங்கலத்துத் திருவிசலூர் மாதேவ பட்டாருக்குத் திருமஞ்சனத்திற்காகக் காவிரி நீர் கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

சுந்தர சோழனான இரண்டாம் பராந்தகனுடைய படைத் தலைவன் ஆன சிறியவேளார் என்பவன் பக்கத்தில் உள்ள திருக்களித் தட்டை என்ற ஊருக்கு வழங்கியிருப்பது போலவே இவ்வூருக்கும் மிகுந்த நன்கொடைகள் வழங்கியுள்ளான். இராசகேசரியின் 2ஆம் ஆண்டில் பராந்தக இருங்கோளன் ஆகிய சிறியவேளார் 50 கழஞ்சு பொன் வழங்கி ஒரு நிலத்தை இறையிலியாக்கிக் கற்றுவல்ல அந்தணன் ஒருவனை உண்பிப்பதற்கு அதனை மானியமாக விட்டான். அம் மன்னனுடைய 4ஆம் ஆண்டில் 130 ஈழக் காசு வழங்கி மற்றொரு நிலத்தை இறையிலியாக்கி அதனை திருவிசலூர்ப் பெருமானடிகளுடைய நண்பகல் பூசனைக்கு நிவந்தமாக வழங்கினான். இவ் வீரன் முதற் பராந்தகனுடைய மகளுடைய குடும்பத்தில் மிக மேம்பட்ட உறுப்பினனாக 'இருங்கோள குளப்ரதீபன்' என்று வடமொழிக் கல்வெட்டொன்றில் புகழப்படுகிறான். இச் செய்தி கொடும்பாளூர் இருங்கோ வேளிருக்கும் சோழருக்கும் இடையே நிகழ்ந்த மணவினைத் தொடர்பை நினைவுறுத்துவது போலும்.

சுந்தர சோழன் தன் 5ஆம் ஆண்டில் கோயிலைப் பழுது பார்ப்பதற்காகத் திருவிசலூரிலிருந்து தனக்குக் கிடைக்கும் அவ்வாண்டைய வருமானத்தை வழங்கியதோடு திருவிசலூர் மகாதேவருக்குத் திருவிளக்கு ஒன்றும் வழங்கினான்.

பாண்டியன் முடித்தலை கொண்ட பரகேசரியான இரண்டாம் ஆதித்தனுடைய 5ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று திருவிசலூர் இறைவனுக்கு விளக்கெரிக்க வழங்கப்பட்ட நன்கொடை பற்றி இயம்புகிறது.

உத்தம சோழனுடைய தாயாரான உடையபிராட்டியார் செம்பியன் மகாதேவியார் சுற்றி இரத்தினங்கள் பதிக்கப்பட்ட, 35 கழஞ்சு பொன்னல் செய்யப்பட்ட கவசம் ஒன்றைத் திருவிசலூர்ப் பெருமானுக்கு வழங்கியுள்ளார்.

முதல் இராசராசனுடைய 3ஆம் ஆண்டில் இவ்வம்மையாரே மற்ருெரு நன்கொடையும் வழங்கியுள்ளார். இராசராசனுடைய 24ஆம் ஆண்டுக் கல்வெட்டு, பிச்சத்தேவர் ஆலயத்தில் பூசனை செய்வதற்காக விடப்பட்ட நிலக்கொடை ஒன்றுபற்றிக் குறிப்பிடுகிறது.

முதல் இராசராசன் தன் 29ஆம் ஆண்டில் திருவிசலூர்க் கோயிலில் துலாபார தானம் செய்தான். அவன் தேவியான தந்தி சக்தி விடங்கியாரான உலோகமாதேவியார் ஹிரணிய கர்ப்பதானம் புரிந்தார். அக் காலத்தில் திருவிசலூர் இராசேந்திரசிங்க வளநாட்டு மண்ணிநாட்டு பிரமதேயமான சோழமார்த்தாண்ட சதுர்வேதி மங்கலம் வேம்பத்தூர் என வழங்கப்பட்டது.

முதல் இராசேந்திரனுடைய 3ஆம் ஆண்டுக் கல்வெட்டு, திருச்சுற்ருலையும் கோபுரமும் எடுக்கப்பட்ட செய்தியை வெளியிடுகிறது. ஆலய நிர்மாணம் விக்கிரம சோழன் காலத்தில் முடிந்திருக்கலாம்.

கும்பகோணத்துக்கு அருகிலுள்ள பழையாற்றில் தங்கியிருந்த இம் மன்னனின் அத்தையான பராந்தகன் குந்தவைப் பிராட்டியார் இம் மன்னனுடைய 4ஆம் ஆண்டில் நிவந்தம் ஒன்று வழங்கியுள்ளார்.

இக் கோயிலை எடுப்பித்த ஆனந்தசிவன் என்பவருடைய சிலை இக் கோயிலில் காணப்படுகிறது.

தற்போது காணப்படும் கோயில் பராந்தகன் காலத்தில் புதுப்பிக்கப்பட்டதாகும். கருவறை 19½ அடிப் பக்கமுடைய சதுரமாகும். அடித்தளத்தில் தாமரை இதழ்ப் படையும், யாளி வரிமானமும் உள்ளன. அர்த்தமண்டபம் கருவறையை ஒட்டி 12 அடி 4 அங்குலம் நீண்டுள்ளது.

தற்போதுள்ள மூலஸ்தானத்திற்குத் தெற்கே சேமிப்பு அறையாகப் பயன்படுத்தப்படும் கோயிலொன்று உள்ளது. இதுவே முதல் ஆதித்தன் காலத்துக் கோயிலாகத் தோன்றுகிறது. அதன் சுவர்களில் தேவகோஷ்டங்கள் உள்ளன. கிழக்குத் தேவகோஷ்டத்தில் வீணாதர தட்சிணாமூர்த்தியின் சிலை காணப்படுகிறது.

## திருவிடைமருதூர்

**மகாலிங்கேசுவரர் கோயில் :**

தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த திருவிடைமருதூர் கும்ப கோணத்தை யடுத்துச் சென்னை மார்க்கத்திலுள்ள இரண்டாம் புகைவண்டி நிலையமாகும். இவ்வூர்க் கோயில் தென்னாட்டு மிகப் புனிதமான கோயில்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது. சோழ நாட்டையே கோயிலாகக் கருதினால் திருவிடைமருதூர் மூலத்தான மாகவும் திருவாவடுதுறை நந்திகேசுவரர் தானமாகவும், திருவலஞ்சுழி விநாயகர் தானமாகவும், சுவாமிமலை சுப்பிரமணியர் தானமாகவும், சூரியனார் கோயில் நவக்கிரகத் தானமாகவும், சேய்ஞலூர் சண்டேசு வரர் தானமாகவும் அமையும் ஆதலின், இவ்வூரிலுள்ள இறைவன் பெயர் மகாலிங்கம் என அமைந்தது என்று சான்றோர் கூறுகின்றனர். இக் கோயிலின் தலவிருட்சம் மருதமரமாகும். வடக்கில் கர்நூல் மாவட்டத்திலுள்ள ஸ்ரீசைலம், தெற்கில் திருநெல்வேலி மாவட் டத்திலுள்ள திருப்புடைமருதூர் ஆகிய மருத மரங்களைத் தலவிருட்ச மாக உடைய இரண்டு ஊர்களுக்குமிடையே அமைந்த இவ்வூர் இடைமருது என வழங்கப்படுகிறது. இங்குள்ள இறைவனை வணங்கிச் சோழன் ஒருவன் பிரமஹத்தி தோஷத்திலிருந்து விடுபட்டான். பிரமஹத்தியால் பிடிக்கப்பட்ட சோழனுடைய சிலை இக் கோயில் கிழைக் கோபுரத்தில் உள்ளது. இங்ஙனமே வரகுணன் என்ற பாண்டிய னும் சனியினுடைய பிடியிலிருந்துவிடுபட்டான் என அறிகிறோம்.

பழைய சோழர் காலத்துக் கோயில் உத்தம சோழன் காலத்தில் புதுப்பிக்கப்பட்டது. அண்மைக் காலத்தில் நகரத்தார் குழுவினரால் பழைய கோயில் அடியோடு அழிக்கப்பட்டும், புதுக் கோயில் எழுப்பப் பட்டும் விட்டது. அதிட்டவசமாகப் பழைய கல்வெட்டுகள் யாவும் கல்வெட்டிலாகாவினரால் 1895ஆம் ஆண்டிலும், 1907ஆம் ஆண்டி லும் படி யெடுக்கப்பட்டுவிட்டன. அக் கல்வெட்டுகளில் மிகப் பழமையானவை முற்பட்ட சோழர்கள் காலத்தவை. அவை மூலத் தானச் சுவர்களில் காணப்பட்டன.

பழைய மூலத்தானத்தின் தென் சுவரிலிருந்த இராசகேசரி வர்மனின் 16ஆம் ஆண்டுக் கல்வெட்டு திரைமூர்நாட்டுத் திருவிடை மருதூர் மூலத்தானப் பெருமானடிகளுக்கு விளக்குக்காக விடப்பட்ட 90 ஆடுகள் பற்றிய நன்கொடையை விளக்கும் முதல் ஆதித்தன் கல் வெட்டாகும். முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகள் நான்கு இருந்தன. அவற்றுள் 16ஆம் ஆண்டுக் கல்வெட்டு, தொண்டை நாட்டைச் சேர்ந்த ஒருவனால் இறைவனுக்கு மார்கழித் திருவாதிரை

நாளில் 30 நாழி நெய் வழங்குவதற்கு உடலாக 15 கழஞ்சு பொன் வழங்கப்பட்ட செய்தியைக் குறிக்கிறது.

பரகேசரியின் 27ஆம் ஆண்டில் உடுக்கைவாசிப்பான் ஒருவனுக்குத் திரைமூர் சபையினர், திருவிடைமருதூர் நகரத்தார் பதிபாதமூலத்தார் (குருக்கள்) ஸ்ரீகாரியம் ஆராய்கின்ற அதிகாரி எல்லோரும் கோயில் நாடக சாலையில் கூடி $\frac{3}{4}$ வேலி நிலத்தை மானியமாக விட்ட செய்தியைக் கல்வெட்டொன்று குறிப்பிடுகிறது.

முதற் பராந்தகனுடைய 35ஆம் ஆண்டில் திருமுடி சோழப் பல்லவரையன் என்பான் திரைமூர் சபையினர், திருவிடைமருதூர் நகரத்தார் ஆகியவரிடமிருந்து 14 வேலி நிலத்தை வாங்கிக் கோயில் நிர்வாகத்திற்குரிய பல செலவுகளுக்கும் இறைவனுடைய மெய்ப் பூச்சுக்கும், விளக்குக்கும், பிட்டமுது நிவேதிப்பதற்கும், அர்ச்சகர்களின் சம்பளத்திற்கும், அந்தணர்களுக்கு உணவிடுவதற்கும் அந் நிலத்தை வழங்கினான் என அறிகிறோம்.

இரண்டாம் ஆதித்தனுடைய 4ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று கோயிலில் 7 நாட்கள் 'ஆரியக்கூத்து' நடப்பதற்கு வாய்ப்பு அளிக்கப் பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. ஸ்ரீகாரியம் ஆராய்கின்ற அதிகாரிகள் சிற்றிங்கள் உதயன் கோயில் காயிலே என்கின்ற பராந்தக மூவேந்த வேளானும், திரைமூர்ச் சபையினரும், திருவிடைமருதூர் நகரத்தாரும், தேவதன்மிகளும் நாடக சாலையில் கூடித் தாம் பெற்ற ஆணைப்படி கோயிலில் ஆரியக்கூத்துகளில் ஏழுவகை ஏழுபேரால் ஏழுநாட்கள் நிகழ்த்தப்பெறவேண்டும் எனவும், நடிகன் ஒவ்வொருவனுக்கும் 14 கலம் நெல் வ்ழங்க வேண்டும் எனவும் முடிவு செய்த செய்திை அக் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது.

இரண்டாம் ஆதித்தனுடைய 4ஆம் ஆண்டுக் கல்வெட்டு மற்றொன்று இதே ஸ்ரீகாரியம் ஆராய்கின்ற அதிகாரி கோயில் அறக் கட்டளைகளையும் அப்பொழுது இருந்த கோயிற் செலவுகளையும் நோக்கி, அவற்றில் ஒழுங்கீனங்களைக் கண்டு ஒழுங்கீனங்களை அடியோடு அகற்றிக் கோயிலின் வருமானத்திற்கு ஏற்பக் கோயில் செலவுகளை உயர்ந்த திட்டத்தில் அமைப்பதற்கு ஏற்பாடுகள் செய்த செயலைக் குறிப்பிடுகிறது.

இராசகேசரிவர்மனின் 17ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று இதே பராந்தக மூவேந்தவேளான் திரைமூர்ச் சபையினர் திருவிடைமருதூர் நகரத்தார், கோயில் தேவகன்மிகள் ஆகியவரின் உதவி கொண்டு கோயில் செய்திகளைப்பற்றி விசாரணை நடத்தித் தொடர்பு

ஏதுமில்லாத சில தோட்டக்காரர்களிடம் இருந்த பத்து மா நிலத்தை மீண்டும் கோயிலுக்காகப் பெற்று, அவர்கள் அந் நிலத்தில் மல்லிகைப் பந்தரை அமைத்ததற்காக அவர்களுக்கு அரைச் சேய் நிலம் வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டு, சுந்தரசோழன் காலத்த தாகக் கருதப்படுகிறது.

பரகேசரிவர்மன் உத்தமசோழனுடைய 4ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று மிக முக்கியமானது. ஸ்ரீகாரியம் ஆராய்கின்ற அதிகாரிகளும், கோயில் தேவகன்மிகளும், கோயில் கணக்கனும், திரைமூர்ச் சபையினரும், திருவிடைமருதூர் நகரத்தாரும் கோயில் நாடக சாலையில் கூடி விளக்குகளுக்காக வைக்கப்பட்ட அறக்கட்டளைகளைப் பற்றி விசாரணை நடத்தினர். கோயில் புதுப்பிப்பதன்முன் அறக்கட்டளைகள் சம்பந்தமான செய்திகளையுடைய கற்பலகைகள் யாவும் பூமிக்கு அடியிலுள்ள அறையில் வைக்கப்பட்டிருந்தன. கோயில் புதுப்பிக்கப்பட்டபின் அவற்றை உரிய இடங்களில் மீண்டும் வெட்டுவிக்குமாறு ஆணை பிறப்பிக்கப்பட்டது. கூர்ந்து நோக்கிய விடத்து காடுவெட்டிகள் நந்திப் போத்தரையன் அளித்த 50 கழஞ்சு நன் கொடை பற்றிய செய்தி விடுக்கப்பட்டது. எனவே, புதுக் கோயிலில் அதையும் செதுக்குமாறு இவர்கள் ஆணையிட்டனர்.

பார்ப்பனர் மிக்க ஊரிலுள்ள ஊராள் குழு சபை என வழங்கப் பட்டது. வியாபாரிகள் மிக்க ஊரின் ஊராள் குழு நகரம் எனப் பட்டது. சில சமயங்களில் இத் திரைமூர், திருவிடைமருதூர் என்ற ஊர்களில் இருந்தனபோலச் சபையும் நகரமும் ஒன்றன் பக்கத்தில் ஒன்ருக அமைந்திருந்ததால் இருவகைக் குழுவினரும் ஒன்றுசேர்ந்தே பொதுக்காரியங்களைக் கவனித்து வந்தனர்.

திருவிடைமருதூர்க் கோயில் காரியங்களைத் திரைமூர்ச் சபை யினரும், திருவிடைமருதூர் நகரத்தாரும் ஒன்று சேர்ந்தே, தேவகன்மி களின் துணைக்கொண்டு நன்முறையில் நடத்திவந்த செய்திகளை இக் கோயிலில் உள்ள பல கல்வெட்டுகளும் குறிப்பிடுகின்றன.

வரவு செலவுக் கணக்குப்பற்றி இவ்வூரான் குழுக்கள் கொண்ட விழிப்பும் பொதுக் காரியங்களை அவை கண்காணித்த வனப்பும், பொதுச் சொத்து துர்விநியோகம் ஆகாதபடி அரசியல் அதிகாரிகள் அடிக்கடி மேற்பார்வையிட்ட சிறப்பும் இக் கால மக்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

இக் கோயில் குறிப்பிடும் மற்றொரு முக்கியமான செய்தி பண்டையவர் செய்த அறச் செயல்களும், பண்டு நிகழ்ந்த சிறப்பான நிகழ்ச்சி

களும்பற்றிய செய்திகளைப் போற்றிவந்த திறனும். கோயில் புதுக்குவதன்முன் கல்வெட்டுகள் அமைந்த கற்களைக் கவனிப்புடன் அடுக்கி வைத்துக்கொண்டு, கோயில் புதுக்கப்பட்டதும் அவற்றை உரிய இடத்தில் செதுக்கச் செய்வதும், அவை யாவும் விடாது செதுக்கப்பட்டுவிட்டனவா என்று மேற்பார்வை செய்வதும் போல்வன நம் முன்னவர்கள் அறங்களைப் பாதுகாப்பதில் கொண்ட கருத்தையும், அறஞ்செய்தவர் பெயர்களை மறவாமல் மனத்துக் கொள்ளக் கருதிய செய்ந் நன்றியறிதலையும், பண்டைய நிகழ்ச்சி களைத் தவறாமல் அறிய விரும்பிய வரலாற்று நுகர்ச்சியின் விருப்பை யும் வெளியிடுவனவாகும்.

உத்தம சோழன் காலத்தில் புதுப்பிக்கப்பட்ட இவ்வாதித்தன் காலப் பழங்கற்றளி நகரத்தாரால் அடியோடு அழிக்கப்பட்டுப் புதுக் கோயிலாக உருவெடுத்துள்ளது. இதில் முற்காலச் சோழர் கலைப் பாணியின் சுவடுகூடத் தற்போது காணப்படவில்லை.

## திருநாகேசுவரம்

1. நாகநாத சுவாமி கோயில் — சிவன்
2. மிலாடுடையார் பள்ளி — ஜைன (சமண)
3. ஒப்பிலியப்பன் கோயில் (திருவிண்ணகரம்) — விஷ்ணு

தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்துக்குக் கிழக்கே 3 கல் தொலைவில் (4·8 கி.மீ.) திருநாகேசுவரம் உள்ளது. இது புகைவண்டி நிலையமும் ஆகும். இங்கிருந்த ஜைனக் கோயில் அழிந்துவிட்டது. ஏனைய இரண்டு கோயில்களும் பிற்காலத்தில் மிகவும் புதுப்பிக்கப் பட்டு விட்டதால் பழைய சுவடற்று விட்டன.

**ஜைனப் பள்ளி (சமணப் பள்ளி):**

சிவன் கோயிலுக்கு முன்னேயுள்ள சந்நிதித் தெருவின் கோடியி லுள்ள மண்டபத்தில் காணப்படும் தூண் ஒன்றில் உள்ள முதல் ஆதித்தனுடைய இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில் நகரத் தாரால், இரண்டாம் நந்திவர்மன் பெயரால் அமைக்கப்பட்ட குமார மார்த்தாண்டபுரம் எனப்படும் திருநாகேசுவரத்தின் ஒரு பகுதியில் அமைந்த மிலாடுடையார் பள்ளி என்ற ஜைனக் கோயிலின் கோபுரத் தையும் திருச்சுற்றுலையையும் புதுப்பிக்க ஏற்பாடு செய்யப்பட்ட செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

**நாகேசுவரர் கோயில்:**

சுந்தர சோழனுடையதாகக் கருதப்படும் இராசகேசரியின் 9ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று முதற் பராந்தகன் மகனான அரிஞ்சயனுடைய மகளும் பாணச் (Bana) சிற்றரசன் தேவியுமான அரிஞ்சிகைப் பிராட்டியின் பெயரைக் குறிப்பிடுகிறது. இவன் முதல் இராசராசனுடைய 14ஆம் ஆண்டில் திருநாகேசுவரம் உடைய மகாதேவருக்கு நன்கொடைகள் பல வழங்கியுள்ளான்.

தென் சுவரில் உள்ள சிதைவுற்ற கல்வெட்டொன்றில் இக் கோயில் எடுப்பிக்கப்பட்ட செய்தி சுட்டப்பட்டிருக்கிறது. அக் கல்வெட்டில் மதுராந்தகன், அவனுடைய தாயார், அவனுடைய தேவியர், கண்டராதித்தன் ஆகியவர்களுடைய பெயர்கள் காணப்படுவதால் முதல் ஆதித்தன் காலத்ததாகிய இக் கோயில் கண்டராதித்தனுடைய நினைவாக அவன் மகன் மதுராந்தகன் உத்தம சோழனால் புதுப்பிக்கப்பட்டிருக்கலாம் என்று கருதுகிறோம். இங்ஙனம் புதுப்பிக்கப்பட்ட செயலைக் கருந்தட்டாங்குடி (கரந்தை) திருப்புறம்பியம் முதலிய இடங்களிலும் காணலாம்.

முதல் இராசேந்திரனுடைய 14ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் திருநாகேசுவரம் உடைய மகாதேவர் கோயில் உய்யக் கொண்டான் வளநாட்டுப் பாம்பூர் நாட்டுத் திருக்குடமூக்கில் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இராசேந்திரனுடைய மற்றொரு கல்வெட்டில் பசுபதி தேவர் என்ற உற்சவ விக்கிரகத்தின் பெயர் காணப்படுகிறது.

**நாகேசுவரர் கோயில்:**

இக் கோயில் கிழக்கு நோக்கிய சந்நிதியை உடைய ஏகதளக் கற்றளி. இதனுடைய சிகரம் உருண்டை வடிவமானது. கருவறை 14½ அடி பக்கமுடைய சதுரமாகும். அர்த்தமண்டபம் 12½ அடி முன்னோக்கி நீண்டுள்ளது. இரண்டையும் இணைக்கும் அந்தரானம் 2 அடி 3 அங்குலம் அகலமுடையது.

தேவகோஷ்டங்களில் கணபதி, நடராசன், அகஸ்தியர், தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், பிரமன், அர்த்தநாரீசுவரர், துர்க்கை, பிட்சாடனர் என்ற சிலைகள் உள்ளன. உத்தம சோழன் காலத்தில் செம்பியன் மாதேவி எடுப்பித்த தேவாலயங்களில் தேவகோஷ்டங்களின் எண்ணிக்கை மிகுந்திருப்பதை நோக்க இது உத்தம சோழன் காலத்தது எனலாம். தேவகோஷ்டம் ஒவ்வொன்றும் மகரதோரணத்தால் அலங்கரிக்கப்பட்டுள்ளது.

முதல் ஆதித்தன் காலத்ததாகிய இக் கோயில் உத்தம சோழன் காலத்தில் புதுக்கப்பட்டதாகலாம் என்பதை முன்னரே குறிப்பிட்டுள்ளோம்.

விஷ்ணு கோயில்:

திருநாகேசுவரத்துத் திருவிண்ணகரம் என்ற திருக்கோயில் இப்போது ஒப்பிலியப்பன் கோயில் என வழங்கப்படுகிறது.

இங்குள்ள இராசேந்திரனுடைய 6ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று முதல் இராசேந்திர சோழ தேவனுடைய சேனையில் பணியாற்றிய உதவி மாவுத்தன் வழங்கிய நிலக் கொடையின் வருமானத்திலிருந்து சேர்ந்த பெருந் தொகையைக் கொண்டு முத்துகளும் இரத்தினங்களும் பதிக்கப்பட்ட பொன்னணியொன்று இறைவனுக்கு வழங்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

இக் கோயில் திருப்பதி—திருமலை வேங்கடாசலபதி கோயிலை ஒத்த புனிதமுடையதாக அடியவர்களால் கருதப்படுகிறது. இவ்வொப்பிலியப்பரான இறைவனுடைய அவதாரமாகக் கூறப்படும் இவ்வூரவரான கோபால தேசிகர் வைணவத்தின் முனித்திரய முறையைத் தோற்றுவித்தவராவர்.

## திருப்பனந்தாள்

அருணசடேசுவரர் கோயில் (செஞ்சடையப்பர் கோயில்):

தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த திருப்பனந்தாள் கும்பகோணம் கிழக்குச் சாலையில் கிழக்கிலிருந்து 3 கல் (4·8 கி.மீ.) தெற்கில் உள்ளது. இங்குத் தில்லைநாயகத் தம்பிரானால் கி.பி. 1720-ல் நிறுவப்பட்ட, தருமபுரத்துக் கிளை மடமான காசி மடம் என்ற சைவ மடமொன்று தமிழையும் சைவ சித்தாந்தத்தையும் பேணுவதற்காக அமைக்கப்பட்டதாகும். பிரபலமான சைவ மடங்களில் அதுவும் ஒன்றாகத் திகழ்கிறது.

இக் கோயிலின் தலவிருட்சம் பனைமரம். எனவே இது திருப்பனந்தாள் அல்லது தாலவனம் என வழங்கப்படுகிறது. தாடகை என்ற அரக்கி இங்குள்ள சிவபெருமானை நாடோறும் மனம் ஒன்றி வழிபட்டு வந்ததால் இக் கோயில் தாடகையீசுவரம் எனவும் வழங்கப்படுவதாயிற்று. இக் கோயிலில் வீற்றிருக்கும் இறைவனை அப்பரும் சம்பந்தரும் போற்றிப் புகழ்ந்து பதிகம் பாடியுள்ளனர்.

இக் கோயிலின் தென்வாயிலில் உள்ள இராசகேசரிவர்மனின் 18ஆம் ஆண்டுக் கல்வெட்டு, திருப்பனந்தாள் வடகரை மண்ணி

நாட்டிலுள்ள தேவதானம் ஆகும் எனவும், இங்குள்ள இறைவர் திருத்தாடகையீசுவரத்து மகாதேவர் அல்லது பட்டாரர் என வழங்கப்பட்டார் எனவும் குறிப்பிடுகிறது. இக் கோயிலுக்கு விளக் கெரிப்பதற்காக விடப்பட்டதொரு நன்கொடைபற்றிக் குறிப்பிடும் இக் கல்வெட்டு முதல் ஆதித்தன் காலத்தது எனலாம்.

மதுரைகொண்ட பரகேசரியுடைய 29ஆம் ஆண்டுக் கல் வெட்டுகள் இரண்டு, ஒரு விளக்கெரிப்பதற்கும், இவ்விறைவனுடைய பூசனை நிவேதனச் செலவுகளுக்கும் வாய்ப்பு அளிக்கின்றன.

இராசராசாக்கள் திருப்பாமரையன் என்பவனால் க்ஷேத்திரபால தேவருடைய உலோகத் திருமேனியொன்று இக் கோயிலில் நிறுவப் பட்டது.

இவ்வூர் குங்குலியக்கலய நாயனார் என்ற அடியவரோடு தொடர் புடையது. இவர் 63 நாயன்மார்களில் ஒருவர். சுந்தரர் தம்முடைய திருத்தொண்டத்தொகையில் இவரைப்பற்றிக் ‘கடவூரில் கலயன்தன் அடியார்க்கும் அடியேன்’ என்று குறிப்பிட்டுள்ளார். கடவூரில் அந்தணர் குலத்தில் பெருஞ் செல்வராய் வாழ்ந்த கலயனார் தம் ஊர்க்கோயிலில் குங்குலியப் புகை இடுவதையே கடப்பாடாகக் கொண்டார். தாம் இறைவன் அருளால் செல்வமற்ற வறியவரான காலத்தும் இத் திருப்பணியைத் தவறாமல் செய்வாரானார். இரண்டு நாட்களாக உணவின்றி வீட்டில் எல்லோரும் பட்டினியா யிருந்தது கண்டு பொறாத அவர் மனைவியார் தம் தாலியை விலைக்கு விற்று நெல் வாங்கி வருமாறு வேண்ட, இவர் அதற்கும் குங்கிலியம் வாங்கிப் புகைக்கவே, இவர் பக்தியை மெச்சிய இறைவன், குசேலருக்குக் கண்ணன் அருளியது போலவே, இவருக்கு இவர் அறியாமலேயே பெருஞ் செல்வம் அருளினார். அச் செல்வத்தால் குங்கிலிய தூபம் இடுவதையும் சிவனடியாரை உண்பிப்பதையும் தவறாமல் நடத்தி வந்த கலயனார் திருப்பனந்தாளிலுள்ள சிவபெருமான் சாய்ந்திருப்பது கேட்டு அங்குச் சென்றார். அப் பகுதியை ஆண்ட அரசன் யானை, குதிரை முதலியவற்றைக் கொண்டு இழுத்தும் சாய்ந்த இலிங்கம் நிமிர வில்லை. கலயனார் இலிங்கத்தைச் சுற்றிப் பூமாலையைக் கட்டி அத னோடு கயிறு ஒன்றை இணைத்து அதன் மறுமுனையைத் தம் கழுத்தில் சுருக்கிட்டுக் கொண்டு இழுக்கவே, அடியாருடைய அன்புக்கு உருகும் பெருமான் நிமிர்ந்தருளினார் என்று சேக்கிழார் பெருமான் அருளிச் செய்துள்ளார்.

மூன்றாம் குலோத்துங்கனுடைய 8ஆம் ஆண்டுக் கல்வெட் டொன்று கடவூர் குங்கிலியக்கலய நாயனாருக்கும் ஏனைய சிவனடி

யாருக்கும் பூசனைக்கு நன்கொடை வழங்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

மேற்கு நோக்கிய சந்நிதியை உடைய இக் கோயிலின் கருவறை 21 அடி 10 அங்குலம் பக்கமுடைய சதுரமாகும். அது ஓங்கார வடிவினதாயுள்ளது என்ப. அர்த்தமண்டபம் 11 அடி முன்நோக்கி நீண்டுள்ளது. அதன் இருமருங்கிலும் இரு துவாரபாலகர் சிலைகள் உள்ளன. அர்த்தமண்டபத்தை ஒட்டி இருமருங்கும் வாயிற்படிகள் உள்ளன. நடுத் தேவகோஷ்டத்தின் இருமருங்கிலும் கும்ப பஞ்சரங்கள் உள்ளன. அடித்தளத்தின் குமுதப்படைக்குமேல் யாளி வரிமானம் உள்ளது. அரைத்தூண்களின் புறத்தோற்றம் எண்பட்டை வடிவாக உள்ளது. அவை கும்பங்களை உடையனவாகக் காண்கிறோம்.

இக் கோயில் அமைப்பை நோக்க இது முதற் பராந்தகன் காலத்தில் புதுப்பிக்கப்பட்டதாகத் தோன்றுகிறது.

## கோயில் தேவராயன்பேட்டை

1. மத்ஸ்யபுரீசுவரர் கோயில்

2. பூமி சுந்தர விண்ணகரம்.

தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த கோயில் தேவராயன்பேட்டை புகைவண்டி நிலையங்களுள் ஒன்றான பண்டாரவாடையை அடுத்த சிற்றூராகும். அது முற்பட்ட சோழர்கள் காலத்தில் முதல் ஆதித்தன் பெயரால் இராசகேசரி சதுர்வேதி மங்கலம் என்று வழங்கப்பட்டது. தற்பொழுது ஐயம்பேட்டைக்கும் பண்டாரவாடைக்கும் இடையே உள்ள முகம்மதியர் மிகுந்து காணப்படும் ‘இராசகிரி’ என்ற ஊர்ப் பெயர் இராசகேசரி சதுர்வேதி மங்கலம் என்பதன் மரூஉ ஆகும்.

இவ்வூரில் பழைய சிவன் கோயில் ஒன்று உள்ளது. இக் கோயிலிலுள்ள முதற் பராந்தகனின் 38ஆம் ஆண்டுக் கல்வெட்டு இராசகேசரி வர்மனுடைய 17ஆம் ஆண்டைச் சார்ந்த நன்கொடை ஒன்றைக் குறிப்பிடுகிறது. இவ்விராசகேசரி முதல் ஆதித்தனே என்பதில் ஐயமில்லை. எனவே, இக் கோயில் முதல் ஆதித்தன் காலத்தை ஒட்டியதாகும். இவ்விறைவனின் பெயர் கல்வெட்டுகளில் ‘திருச்சேலூர் (திருச்சேய்லூர்) பரமேசுவரர்’ (மகாதேவர்) என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

இராசகேசரிவர்மனின் 17ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று இக் கோயிலைச் சார்ந்த மூன்று பணியாட்கள் தாம் முன்பு பெற்ற ஆடுகள், மாடுகள், பணம் இவற்றிற்காகக் கோயிலில் நந்தாவிளக்கு எரிப்ப தற்கு நெய்யும், இறைவனுடைய திருமஞ்சனத்திற்காக நீர் கொண்டு வருவாருடைய ஊதியத்திற்காக நெல்லும் தருவதாக ஒத்துக் கொண்ட செய்தியைச் சொல்லுகிறது. இக் கல்வெட்டில் அரச னுடைய பெயர் கோதனமாராயர் என்று பிழைபட வெட்டப் பட்டுள்ளது. இப் பிழைபட்ட கல்வெட்டுச் செய்தியைக் கல்வெட் டிலாகாவினர் ஓரளவு திருத்திச் செய்தியைப் புலப்படுத்த முயன் றுள்ளனர். இக் கல்வெட்டில் உள்ள மதுரைகொண்ட மாராயர் சுந்தர சோழன் என்று அவர்கள் கொண்டுள்ளனர். மதுரை கொண்ட மாராயனின் 19ஆம் ஆண்டு என்ற கல்வெட்டுத் தொடர் சுந்தர சோழனுக்கு ஏலாது. அவன் 19 ஆண்டுகள் ஆண்டதாக வரலாறு குறிப்பிடவில்லை. எனவே, 'கோதனமாராயர்' என்பதைக் 'கோதண்ட மாராயர்' என்று கொண்டால், அது முதல் ஆதித்தன் விருதுப் பெயராகவே, இப் பதினேழாம் ஆண்டுக் கல்வெட்டு முதல் ஆதித்த னுடையது என்று கொள்ளலாம். மதுரைகொண்ட மாராயர் என்ற பெயரை வழக்கம்போல முதல் பராந்தகனுடைய விருதுப் பெயராகக் கொள்ளவே, அவன் பல்லாண்டுகள் ஆண்டவன் ஆதலின் 19ஆம் ஆண்டு பற்றிய சர்ச்சையில்லை. எனவே, இக் கல்வெட்டு இராச கேசரி வர்மனை சுந்தர சோழன் காலத்தில், முன்பே தன் 17ஆம் ஆண் டில் கோதண்டமாராயனும் இராசகேசரியுமான முதல் ஆதித்தன் விடுத்த இரண்டு நன்கொடைகளையும், மதுரைகொண்ட பரகேசரி யான முதல் பராந்தகன் தன் 19ஆம் ஆண்டில் விடுத்த நன்கொடை யையும் மீண்டும் சேர்த்து நினைவுறுத்தும் கல்வெட்டாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. இக் கல்வெட்டு இராசகேசரி சுந்தர சோழ னுடைய 17ஆம் ஆண்டைச் சார்ந்தது என்பதும் கொள்ளத்தக்கது. எது எங்ஙனமாயினும் இக் கோயில் முதல் ஆதித்தன் காலத்தில் இருந்தது எனவும் அவன் இக் கோயிலுக்கு நன்கொடைகள் வழங்கி யுள்ளான் எனவும் கூறுவதில் தடையொன்றுமில்லை.

இராசேகசரியின் கல்வெட்டுகளில் 11 இக் கோயிலில் காணப் படுகின்றன. அவற்றுள் 3ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் ஆதித்ய வாய்க்கால் என்ற நீர் ஓடுகால் குறிப்பிடப்படுவதால் அது முதல் ஆதித்தன் காலத்தது என்பது தேற்றம்.

அடைமொழியில்லாத பரகேசரிவர்மன் கல்வெட்டுகளும் இக் கோயிலில் 11 இருக்கின்றன. அவற்றுள் முதற் பராந்தகனுடையன யாவை என்பதை வரையறுத்துக் கூற இயலவில்லை. மதுரைகொண்ட பரகேசரி என்ற முதல் பராந்தகனுடைய விருதுகளோடு கூடிய

அவனுடைய 37, 38ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் உள்ளன. அவற்றுள் ஒன்று இறைவனுடைய நண்பகல் பூசனை நிவேதனங்களுக்கும், ரிஷப வாகன தேவருடைய திருமேனியின் திருமஞ்சனத்திற்காக நாள் தோறும் காவேரியில் இருந்து ஒரு குடம் புனித நீர் கொண்டு வருவதற்கும் விடப்பட்ட நில நன்கொடை பற்றியது. மற்றொன்று இறைவனுடைய நள்ளிரவு பூசனையின் போது முரசு கொட்டிக் காளம் ஊதுவதற்காக விடப்பட்ட மானியமாகும்.

பரகேசரிவர்மனான திரிபுவன சக்கரவர்த்தி பராந்தக தேவனுடைய 9ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் 'பூமங்கை வளர்' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி உளது. அது வரலாற்றுச் செய்தி ஒன்றும் குறிப்பிடவில்லை. இதே இளவரசனைப்பற்றிய வேறு இரண்டு கல்வெட்டுகள் திருவாலங்காடு, திருவிடத்துறைக் கோயில்களில் காணப்படுகின்றன. இவன் முதற் பராந்தகன் அல்லன். இவன் முதற் குலோத்துங்கனுடைய ஆட்சியின் பிற்பகுதியில் இளவரசனாக வாழ்ந்தவன் என்பது குறித்துணரத்தக்கது (நீலகண்ட சாஸ்திரி—சோழர்கள் என்ற நூலின் பக்கம் 165).

இங்குச் சுந்தர சோழன் காலத்தனவாகிய கல்வெட்டுகள் சில உள்ளன. அவனுடைய 7ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று கூற்றமங்கலத்து வாசி ஒருவன் இக் கோயிலில் இரண்டு நந்தா விளக்குகள் எரிப்பதற்கு 6 மாநிலத்தை நன்கொடையாக வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. இதே கூற்றமங்கலத்து வாசி இம் மன்னனின் 14ஆம் ஆண்டில் இக் கோயிலுக்கு 20 கருங்காசு நன்கொடையாக வழங்கி, அதன் வருஷ வட்டியாகிய 3 கருங்காசுகளை ஆண்டுதோறும் மார்கழி மாதம் திருவாதிரை நாள் இறைவனுடைய புனிதத் திருமஞ்சனத்தின் பிறகு 'ஜைமினிய சாம' வேதத்தில் குறிப்பிடப்பட்ட பகுதிகளைப் பிழையற ஓதுபவரில் முதல்வருக்கு நன்கொடையாக வழங்கவும், ஒரு முறை இப் பரிசு பெற்றவர் மீண்டும் இப் போட்டியில் கலந்து கொள்ளக்கூடாது என்று நிபந்தனை விதிக்கவும் ஏற்பாடு செய்தான்.

சுந்தரசோழனுடைய 5ஆம் ஆண்டுக் கல்வெட்டு, பக்கத்துச் சிற்றூராகிய கஞ்சனூர் என்று தற்போது வழங்கும் சிம்மவிஷ்ணு சதுர்வேதி மங்கலத்தில் கண்ணந்தை அறிவாணன் புவனி சுந்தரன் என்ற பெயருடையவனும் தொண்டைநாட்டு வாசியுமான சுந்தர சோழ மூவேந்தவேளான் தன் பெயரால் எடுப்பித்த புவனி சுந்தர விண்ணகர பரமேசுவரர் கோயிலின் நித்திய நைமித்திக செலவுகளுக்காக 100 காசுப் பொன்னைச் சிம்மவிஷ்ணு சதுர்வேதிமங்கலச் சபையாரிடம் இறை திரவியமாகக் கொடுத்துக் குந்தமங்கலம் என்ற ஊரை இறை இழிச்சித் தானமாக வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

பாண்டியன் முடித்தலை கொண்ட பரகேசரியான இரண்டாம் ஆதித்தனுடைய ஐந்து கல்வெட்டுகள் இங்கு உள்ளன. அவற்றுள் 5ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று மனோரமாச்சேரி வாசி ஒருவர் மார்கழி மாதம் திருவாதிரை யன்று இக் கோயிலிலுள்ள கணபதி பட்டாரருக்குப் பூசனை நிவேதனங்களுக்காகப் பணக் கொடை வழங்கிய செய்தியை அறிவிக்கிறது.

அடைமொழியில்லாத சில பரகேசரிக் கல்வெட்டுகள் உத்தம சோழனுடையனவாகலாம். அவற்றுள் ஏழாம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் இறைவனுடைய அந்திப் பூசனைகள் நிகழ்த்தவும், பக்கத்தில் ஓடும் குறனை (குடமுருட்டியின் பழைய பெயர்போலும்) ஆற்றிலிருந்து நாள்தோறும் இறைவனுடைய திருமஞ்சனத்துக்கு நான்கு குடம் தூயநீர் கொணரவும் வழி வகுக்கப்பட்ட செய்தியைக் காணலாம்.

உத்தம சோழனுடைய 9ஆம் ஆண்டுக் கல்வெட்டில் அவனுடைய நலன் குறித்து அவனுடைய தாயாரான செம்பியன் மாதேவியார் ஒவ்வொரு மாதப் பிறப்பின் போதும் இறைவனை 108 குடம் தூய நீர் கொண்டு நீராட்டவும், இறைவனுக்குப் பூசனை நிவேதனங்கள் நிகழ்த்தவும் நிலம் நன்கொடையாக விடுத்த செய்தியைக் காணலாம். இவ்வம்மையாரே இராசராசனுடைய 9ஆம் ஆண்டில் இக் கோயிலுக்கு ஒரு வெள்ளித் தட்டும், வெண்கல விளக்குத் தண்டும், 12ஆம் ஆண்டில் ஒரு தங்கக் குடமும் நன்கொடையாக வழங்கியுள்ளார்.

முதல் இராசராசனுடைய 16ஆம் ஆண்டில் இவ்வூரையடுத்த சிற்றூரான பண்டிதவத்சலச் சேரியைச் சார்ந்தவன் ஒருவன் இக் கோயில் ரிஷப வாகனப் பெருமானுடைய அம்பிகையின் திருமேனிக்குப் பொன்னணிகள் பல வழங்கினான்.

முதல் இராசேந்திரன் காலத்தில், முதல் இராசராசன் திருத்தமக்கையாரும், இராசேந்திரனுடைய அத்தையாருமான ஆழ்வார் ஸ்ரீ பராந்தகன் ஸ்ரீ குந்தவைப் பிராட்டியார்தாம்— தஞ்சாவூரில் தம் தந்தையின் நினைவுக் குறியாக நிறுவிய 'சுந்தரசோழ விண்ணகர் ஆதுலர் சாலை' யின் செலவுகளுக்காக இராசகேசரி சதுர்வேதி மங்கலத்து மகாசபையாரிடம் நிலங்களையும் வீடு கட்டுவதற்குரிய மனையையும் விலைக்கு வாங்கி அவற்றின் வரும்படியை அவ்வாதுலர் சாலை அடைவதற்கு ஏற்பாடு செய்தார். அதனை அவ்வாதுலர் சாலையை நிர்வகித்த சரவணன் அரையன் மதுராந்தகனும் அவனுக்குப்பின் அதனை நிர்வகித்தவரும் அனுபவிப்பவராயினர். சோழமன்னர் குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் கல்வி, மருத்துவம், கடவுட் பூசனை, அறச்

சாலை யமைத்தல், கோயிற் கட்டடங்களை எடுப்பித்தல் ஆகிய தக்க செயல்களுக்கே தம் பெரும் செல்வங்களை நன்கொடையாக வழங்கினர் என்பது வெளிப்படை.

## வேதாரண்யம் (திருமறைக்காடு)

**வேதாரண்யேசுவரர் கோயில் :**

தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த வேதாரண்யம் வங்காள விரிகுடாவின் தென் கிழக்கு மூலையில் அமைந்துள்ளது. இங்குப் பழைய புனிதமான கோயிலுள்ளது. இவ்வூரின் பக்கத்தில் கோடிக்கரை என்ற மற்றொரு புனிதத் தலம் உள்ளது.

இவ்வூர்ப் பெருமானை வேதங்கள் வணங்கின எனவும், அவை கோயிலை விட்டுச் சென்றபோது தாம் திரும்பிச் சென்ற வழியிலமைந்த கதவுகளை மூடிச் சென்றன எனவும், அக் கதவுகள் திறக்குமாறு அப்பர் பாடினரெனவும், மீண்டும் மூடிக் கொள்ளுமாறு சம்பந்தர் பாடினர் எனவும் அறிகிறோம்.

இக் கோயிலிலுள்ள இராசகேசரிக் கல்வெட்டுகள் 3ஆம் ஆண்டு முதல் 26ஆம் ஆண்டு வரை பரவியுள்ளன. திருமறைக்காட்டு மகா தேவருக்கு விளக்கெரிப்பதற்காக வழங்கப்பட்ட நன்கொடையைக் குறிப்பனவே அவற்றில் பெரும்பான்மையவாகும். அவற்றுள் அதிகமான ஆட்சியாண்டை யுடைய இரண்டு கல்வெட்டுகள் முதல் ஆதித்தன் காலத்தனவாகலாம்.

இக் கோயிலிலுள்ள தியாகராசன் தளியில் முகப்பிலுள்ள மண்டபத்தின் தூண் ஒன்றில் காணப்படும் இராசகேசரியின் 20ஆம் ஆண்டுக் கல்வெட்டு திருமறைக்காட்டு மகாதேவருக்குச் சதைய நட்சத்திரங்கள் தோறும் அபிஷேக ஆராதனங்களைச் சிறப்பாக நிகழ்த்தவும், சந்நிதியில் ஒரு நந்தா விளக்கு எரிக்கவும் நிவந்தம் விடப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. இது இராசராசன் காலத்ததா?

இக் கோயிலிலுள்ள இராமநாதேசுவரர் ஆலயத்தின் முகப்பிலுள்ள தூண்களில் இரண்டு இராசகேசரிக் கல்வெட்டுகள் உள்ளன. அவற்றுள் இரண்டாவது இராசகேசரியின் 21ஆம் ஆண்டைச் சார்ந்தது. அது பாண்டிய நாட்டுக் கானப்பேர்க் கூற்றத்துப் பாகுலம் என்ற ஊர்வாசி ஒருவனால் வழங்கப்பட்ட நிவந்தம்பற்றிக் குறிப்பிடுகிறது.

26ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக் கோயிலில் தேவரைச் சேர்ந்தவரான ஸ்ரீகாரியம் செய்வாரிடம் மலைநாட்டைச் சேர்ந்த இருவர்

இரண்டு விளக்கெரிக்க 180 ஆடுகளை ஒப்படைத்த செய்தியைக் குறிக்கிறது.

இக் கல்வெட்டுகள் பழைய சோழர் காலத்துக் கோயிலைச் சார்ந்த தூண்களில் உள்ளனவாகலாம். தற்போது இக் கோயில் அடியோடு புதுப்பிக்கப்பட்டுவிட்டது.

## திருப்புறம்பியம் (திருப்புறம்பயம்)

**சாட்சீசுவர சுவாமி :**

திருப்புறம்பயம் கும்பகோணத்திற்கு வடமேற்கே 6 கல் (9·6 கி.மீ.) தொலைவில் உள்ளது. இங்குள்ள பெருமான் சுந்தன், உபசுந்தன் என்ற அசுரர்களுடைய தவச் சிறப்பைக் கண்டு அவர்களுக்கு அருள் செய்தவர் என்று குறிப்பிடப்படுகிறார். எல்லா ஆன்மாக்களும் செய்யும் எல்லாவிதச் செயல்களுக்கும் தான் அந்தர்யாமியாய்ச் சாட்சி பூதனாய் உள்ள பெருமான் ஆதலின் சாட்சீசுவர சுவாமி எனவும் வழங்கப்படுகிறார். இத் திரும்புறம்பியத்தில்தான் வரகுண பாண்டியன் அபராசித பல்லவனிடம் படுதோல்வி யடைந்தான்.

இங்கு வீற்றிருக்கும் பெருமானுடைய புகழைச் சம்பந்தரும் சுந்தரரும் பாடியுள்ளனர். இக் கோயில் முதல் ஆதித்தன் காலம் முதல் மூன்றும் இராசராசன் காலம் முடியச் சோழ நாட்டை யாண்ட மன்னவர் பலருடைய கல்வெட்டுகளைப் பெற்றுள்ளது. கல்வெட்டுகளில் இறைவன் பெயர் திருப்புறம்பியம் உடையபட்டாரகர்' அல்லது 'ஆதித்யேசுவரம் உடையார்' என்று குறிப்பிடப்படுகிறது.

இங்குள்ள அடைமொழியில்லாத சில இராசகேசரிக் கல்வெட்டுகளையும் பரகேசரிக் கல்வெட்டுகளையும் கால வரையறை செய்ய முடியவில்லை. மூலத்தானத்தின் தென் சுவரில் காணப்படும் 7ஆம் ஆண்டுக் கல்வெட்டும் 15ஆம் ஆண்டுக் கல்வெட்டும் முதல் ஆதித்தன் காலத்தனவாகலாம். இக் கல்வெட்டுகளில் இறைவன் பெயர் 'திருப்புறம்பியம் பட்டாரகர்' என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. இக் கல்வெட்டுகள் விளக்குகளுக்காக வழங்கப்பட்ட நன்கொடைகள் பற்றியவை. முதல் இராசேந்திரன் காலத்துக் கல்வெட்டிலும் பிற்பட்ட கல்வெட்டுகளிலும் இறைவன் பெயர் 'ஆதித்தேசுவரமுடைய மகாதேவர்' என்றே காணப்படுகிறது.

முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகள் அவனுடைய 12ஆம் ஆண்டு முதல் 25ஆம் ஆண்டுவரை பரவிக் காணப்படுகின்றன. அவை

யாவும் விளக்கு எரிப்பதற்காகக் கொடுக்கப்பட்ட நன்கொடைகள் பற்றியனவே:

மதுரைகொண்ட இராசகேசரியான சுந்தர சோழனின் 14ஆம் ஆண்டுக் கல்வெட்டும் விளக்குக்காக வழங்கப்பட்ட நன்கொடை பற்றியதே. இரண்டாம் ஆதித்தனுடைய 4ஆம் ஆண்டுக் கல்வெட்டில் இருமடிச்சோழ அணுக்கன் என்பான் இறைவனுக்குப் பூக்கள் இடுவ தற்காகப் பூந்தோட்டம் அமைக்க விடுத்த நிவந்தம் பற்றிய செய்தி உள்ளது. இராசகேசரிவர்மன் முதல் இராசராசனுடைய 3ஆம் ஆண்டில் உத்தமசோழனுடைய தாயாராகிய உடையபிராட்டியார் தம் புதல்வனுடைய நலத்திற்காக இவ்வூர் இறைவனுக்கு ஒரு வெள்ளிக்குடம் வழங்கினுள். இராசராசனுடைய 10ஆம் ஆண்டில் வானவன் மூவேந்தவேளான் இக் கோயிலில் 'அஷ்ட பரிவார' தேவதை களின் திருமேனிகளை நிறுவி, அவற்றிற்குப் பூசனைக்கும் விளக்கு களுக்கும் ஏற்பாடு செய்தான்.

இலங்கேசுவர குல கால தெரிஞ்ச திருமாநாட்டார் வேளத்தைச் சார்ந்த பணிமகள் ஒருத்தி பள்ளிக்கட்டில் உமாபரமேசுவரிகள் என்ற திருப்பள்ளியறை நாய்ச்சியாரின் திருமேனியை நிறுவி, அதற்குப் பூசனைக்குரிய ஏற்பாடுகளை முதல் இராசராசனுடைய 24ஆம் ஆண்டில் செய்வித்தாள்.

இரண்டாம் குலோத்துங்கனுன அனபாயனுடைய 7ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று நன்மக்கள் இருவர் ஆளுடைய நம்பிகள், பள்ளி யறை நாய்ச்சியார், கூத்தாடும் தேவர், பிராட்டியார், பிள்ளையார் முத்து மூலக்குன்று (விநாயகர்) பிள்ளையார், அறம் பயந்த பிள்ளை யார் (முருகன் அல்லது தட்சிணுமூர்த்தி) ஆகியோருக்கு ஓவ்வோ ராண்டிலும் நிகழும் 12 அமாவாசை நாட்களிலும் சிறப்பாகப் பூசனை நிவேதனங்களைச் செய்ய ஏற்பாடு செய்த செயலை வெளியிடுகிறது.

மூன்றும் இராசராசனின் 20ஆம் ஆண்டு கல்வெட்டு அவன் முன்னவனுன மூன்றும் குலோத்துங்கனின் 37ஆம் ஆண்டில் திருவலஞ்சுழி உடையார், புற்றிடங்கொண்டார், அறம் உரைத்த நாயனுர் ஆன சுப்பிரமணியர் ஆகியவர் சிலைகள் இக் கோயிலில் நிறுவப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

மூலக் கோயில் முதல் ஆதித்தன் காலத்தைச் சார்ந்தது. முதல் இராசராசன் காலத்தில் மூவேந்தவேளான் ஒருவன் அஷ்டபரிவாரங் களின் சிலைகளைப் பழைய தேவகோஷ்டங்களோடு புதிய தேவகோஷ் டங்களையும் அமைத்து நிறுவினுதல் வேண்டும். இங்ஙனம் கருவறை

யிலும் அர்த்தமண்டபத்திலும் புது தேவகோஷ்டங்களை அமைத்து, அவற்றில் சிலைகளை நிறுவிய மரபைக் கரந்தையிலும் காணலாம். இப்பொழுது தேவகோஷ்டங்களில் வீணாதர தட்சிணாமூர்த்தி, கங்காள மூர்த்தி, நடராசர், கணபதி, அகத்தியர், தட்சிணாமூர்த்தி, இலிங் கோத்பவர், பிரமன், காலசம்மாரர், அர்த்தநாரீசுவரர், துர்க்கை, கங்கா விசர்சனமூர்த்தி, பிட்சாடனர் ஆகிய சிலைகள் உள்ளன. அவற்றுள் தட்சிணாமூர்த்தியும், இலிங்கோத்பவரும், பிரமனும் பழைய மூலக் கோயிலின் சிலைகள் ஆகலாம்

இக் கோயில் ஒருதளக் கற்றளி. இதன்கண் தற்போது காணப் படும் புதுப்பிக்கப்பட்ட சிகரம் எண்பட்டை வடிவமானது. இதன் கருவறை சதுரமானது. அதன் பக்க அளவு 18 அடி 2 அங்குலம். கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் மூன்று பிதுக்கங்களும் அவற்றிற்கேற்ப உட்குழிவுகளும் உள்ளன.

நடுப் பிதுக்கங்களின் இருமருங்கிலும் பஞ்சரங்கள் உள்ளன. கொடுங்கைக்குமேல் ஓரங்களில் போதிகைச் சிற்றுருவங்கள் செதுக் கப்பட்டுள்ளன. அரைத் தூண்கள் 6 அடி 4 அங்குலம் உயரமானவை. அரைத் தூண்களின்கீழ்ச் சிற்றுருவச் சிலைகள் பல உள்ளன. அரைத் தூண்கள் கும்பங்களுடையவை. போதிகைகள் சுருள்களால் அணி செய்யப்பட்டுள்ளன.

கருவறைக்கு முன் அர்த்தமண்டபம் 15 அடி முன்னேக்கி உள்ளது. அதன் முகப்பில் இருமருங்கிலும் துவாரபாலகர் சிலைகள் உள்ளன.

## நாவலூர்—திருமெய்ஞ்ஞானம் (திருமயானம்)

**ஞான பரமேசுவரர் கோயில் ஸ்ரீ மூலத்தானத்து மகாதேவர் :**

திருமெய்ஞ்ஞானம் என்பது சம்பந்தர் பாடலில் காணப்படும் திருநாலூர்த் திருமயானமாகும். இது கும்பகோணத்துக்குத் தென் கிழக்கில் குடவாசலுக்குச் செல்லும் வழியில் திருச்சேரைக்கு அருகில் அமைந்துள்ளது. நாலூரில் இரண்டு கோயில்கள் உள்ளன. நாலூர் மயானம் என்ற கோயில் நாலூர்க் கோயிலிலிருந்து ஒரு கல் தொலைவில் உள்ளது.

நாலூர்க் கோயில் மாடக் கோயிலாகும். இக் கோயிலில் உள்ள இறைவர் 'சம்பாரீசுவரத்துப் பெருமானடிகள்' அல்லது மகாதேவர் என்று கல்வெட்டுகளில் வழங்கப்பட்டுள்ளார். தற்போது இவர்

பலாசவனநாதசுவாமிகள் என வழங்கப்படுகிறார். இவ் விறைவரைப் பற்றிச் சம்பந்தர் பதிகம் பாடியுள்ளார்.

திருநறையூர் நாட்டுத் தென்கரை பிரமதேயமான அக்கிராமக் கோட்டச் சதுர்வேதிமங்கலத்து ஊர்ச் சபையாரால் முதற் பராந்தகனுடைய நான்காவது ஆண்டில் இக் கோயிலுக்கு நன்கொடையொன்று வழங்கப்பட்டது. சுந்தர சோழனுடைய 12ஆம் ஆண்டில் இக் கோயிலுக்குப் பல நன்கொடைகள் வழங்கப்பட்டன. இராசராசனுடைய 24ஆம் ஆண்டிற்குமுன் இக் கோயில் முகப்பில் அவன் பெயரால் ஒரு பெரிய மண்டபம் எடுப்பிக்கப்பட்டதாக அறிகிறோம்.

நாலூரிலுள்ள மற்றொரு கோயில் 'நாலூர் மயானம்' ஆகும். இக் கோயில் மூலத்தானத்தின் வடசுவரில் காணப்படும் இராசகேசரிவர்மன் கல்வெட்டு எழுத்தமைப்பாலும் புள்ளி பெற்றிருப்பதாலும் முதல் ஆதித்தன் காலத்தது என்று முடிவு செய்யத்தக்கது. எனவே, இக் கோயில் முதல் ஆதித்தன் காலத்திலேயே கற்றளியாக எடுப்பிக்கப்பட்டிருக்கலாமெனத் தோன்றுகிறது. இக் கல்வெட்டு, சிற்றார்க் கூற்றத்துப் பிரமதேயமான நாலூர்ப் பெருங்குறிப் பெருமக்களும் பட்டப் பெருமக்களும், 25 கழஞ்சு பொன் பெற்று அவ்வூரின் அங்காடிக் கூலியைத் தற்போது ஞானபுரீசுவரர் என்று வழங்கப்படும் திருமயானத்து ஸ்ரீமூலத்தானத்துப் பெருமானடிகளுக்கு வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

சுந்தர சோழனுடையதாகவோ முதல் இராசராசனுடையதாகவோ கருதப்படும் இராசகேசரியின் 7ஆம் ஆண்டுக் கல்வெட்டு உத்தம சோழனுடைய தாயாரின் பெயரால் இக் கோயில் உள்ள ஊர்ப் பகுதி பெரிய செம்பியன் மகாதேவி சதுர்வேதிமங்கலம் என்று வழங்கப்பட்டதாகக் குறிப்பிடுகிறது. தஞ்சை மாவட்டத்து நாகைப் பட்டினம் தாலுக்காவிலும் செம்பியன்மாதேவி என்ற ஊர் உத்தம சோழனுடைய தாயாரின் பெயரால் விளங்குகிறது.

அகஸ்தீசுவரம் உடையார் கோயில் என்ற கோயிலொன்று இவ் வூரிலிருந்ததாக முதல் இராசேந்திரன் கல்வெட்டால் அறிகிறோம். இவ்வூரிலுள்ள கோயில்கள் யாவற்றிலும் பழைமையானதும் முக்கியமானதும் முதல் ஆதித்தன் காலத்ததாகிய இத் திருமயானக் கோயிலேயாகும்.

இக் கோயில் கிழக்கு நோக்கிய சந்நிதியையுடைய ஏகதளக் கற்றளியாகும். சதுரமான கருவறையை உடையது. அதன் பக்க அளவு 13½ அடியாகும். அர்த்தமண்டபம் கருவறையை ஒட்டி 12½ அடி நீண்டுள்ளது.

அரைத் தூண்கள் 5½ அடி உயரமுடையவை. கிரீவமும் சிகரமும் உருண்டையானவை. தேவகோஷ்டங்கள் கருவறையின் மூன்று சுவர்களிலும் உள்ளன. இம் மூன்று தேவகோஷ்டங்களும் இரு மருங்கிலும் பஞ்சரங்களால் அணி செய்யப்பட்டுள்ளன. அர்த்தமண்ட பத்தின் முகப்பின் இருமருங்கிலும் துவாரபாலகர் சிலைகள் உள்ளன. பிற்காலத்து முகமண்டபம் 45 அடி பக்க அளவு உடையதாகும்.

பிராகாரத்தில் காணப்படும் சூரியனின் சிதைவுற்ற சிலை ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்தது. அதில் சிற்ப நுணுக்கங்களைக் காணலாம். இச் சிலை தற்போது பம்பாய் கலைத்தாபனம் ஒன்றில் இடம் பெற்றுள்ளது.

இப் பழங் கோயில் இன்னும் பழைய சோழர் கலைப் பாணியை வெளிப்படுத்தி நிற்கிறது. கோயிலின் அறங்காவலர் கோயிலைப் புதுப் பிக்கப்போவதாக அச்சுறுத்துகின்றனர். பழைய கலைநலம் கெடாத வாறு கோயிலைப் புதுப்பிக்குமாறு செய்வது அரசியலார், சென்னை மாநில இந்து அறங்காவல் துறையினர், கல்வெட்டிலாக்காவினர் ஆகியோருடைய தலையாய கடமையாகும். இதுபற்றிச் சென்னைக் கோயில் பரிபாலன இலாக்காவைச் சார்ந்த அதிகாரிகளுக்கு விடுக்கப் பட்டுள்ள வேண்டுகோள் நற்பயன் தரும் என நம்புகிறோம்.

## திருவெண்காடு

தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த திருவெண்காடு மிகப் புகழ் பெற்ற பழங் கோயிலை உடையது. இது சீகாழிப் புகைவண்டி நிலை யத்துக்கும் காவிரிப்பூம்பட்டினத்துக்கும் இடையில் உள்ளது.

இதற்கருகில் அமைந்த புகார் என்ற காவிரிப்பூம்பட்டினம் சங்க காலச் சோழ மன்னர்களின் தலைநகராய சிறப்புடைத்து. சிலப்பதி காரக் காவியத் தலைவியான கண்ணகி பிறந்து வளர்ந்து மணந்து வாழ்ந்து கணவனைப் பிரிந்து, பின்னும் அவனுடன் கூடி மதுரையை நோக்கிக் கிளம்பிய இடமாகும். அடியார் வடிவில் வந்த இறைவன் வேண்டியபடி தம் மனைவியையே அவருக்கு வழங்கித் தம் செயலுக்கு இடையூறுக வந்த உறவினர் அனைவரையும் வெட்டி வீழ்த்திய இயற் பகை நாயனுர் வாழ்ந்ததும், தெய்வத் தன்மை பொருந்திய, முற்றத் துறந்த துறவியான பட்டினத்தடிகள் வாழ்ந்ததும் இவ்வூரிலேயாம்.

பட்டினத்தடிகள் பிறந்த ஊர் புகாருக்கு அருகிலுள்ள திருவெண் காடு ஆதலின் அவர் திருவெண்காடர் என்று வழங்கப்பட்டார். சிறுத்தொண்ட நாயனுருடைய மனைவியார் இவ்வூரவர் ஆதலின்

வெண்காட்டு நங்கை என்று பெயரிடப்பட்டார். வெண்காட்டில் அமர்ந்துள்ள விகிர்தர் என்று போற்றப்படும் இவ்வூர்ப் பெருமானுடைய அருளினாலேயே மகப்பேறற்றுப் பலகாலம் மனம் நொந்த அச்சுதகளப்பாளருடைய மகனாராகச் சைவ சித்தாந்த சாத்திரங்களுக்கு வித்திட்ட 'மெய்கண்டார்' தோன்றினார். இவ்வூர்க் கோயிலிலுள்ள முக்குளங்களும் தெய்வீக அருளுடையன என மதிக்கப் படுகின்றன.

அப்பர், சம்பந்தர், சுந்தரர் என்ற அடியார் மூவரும் இவ்வூர்ப் பெருமான்மீது தேவாரம் பாடியுள்ளனர். சிவபெருமானைக் குறித்துக் கடுந்தவம் புரிந்து அதன் பயனாக அப் பெருமானிடம் சூலாயுதம் பெற்று அதன் உதவியால் மனித இனத்திற்கும் தேவர் இனத்திற்கும் பெருந்தீங்கு விளைத்த மருத்துவன் என்ற அசுரனை அழிப்பதற்காகச் சிவபெருமானது பயங்கரமான வடிவம் 'அகோர மூர்த்தி' என்பது. அவ் வடிவத்தை நினைவுறுத்தும் அகோர மூர்த்தியின் சிலை இக் கோயிலின் மேற்குப் பிராகாரத்தின் வட பகுதியில் உள்ள கோயிலில் தெற்குநோக்கி அமைந்திருக்கிறது. இம் மூர்த்தி தனிச் சிறப்புடையது. கல்வெட்டுகளில் இவ்வூர் 'நாங்கூர்' எனவும் இறைவர் 'திருவெண்ணகாடு தேவர்' எனவும் வழங்கப்படுவதைக் காண்கிறோம். திருவெண்ணகாட்டிலிருந்து 3.கல் (5 கி.மீ.) தொலைவில் பிரசித்தமான விஷ்ணு கோயிலைக்கொண்ட சிற்றூராகக் காட்சியளிக்கும் இப்பொழுது உள்ள நாங்கூர் முற்பட்ட சோழர்கள் காலத்தில் தற்போது திருவெண்ணகாட்டுக் கோயில் இருக்கும் பரப்பை யெல்லாம் உள்ளடக்கிய பெரும் பரப்புடையதாக இருந்தது.

இக் கோயில் மூலத்தானத்தில் காணப்படும் மிகப் பழைய கல் வெட்டு முதல் இராசராசன் காலத்தது. ஆகவே, இப்பொழுதுள்ள கோயில் இராசராசன் காலத்தது என்று கொள்ள வேண்டியவராயுள்ளோம். ஆனால், இதே கோயிலில் இராசராசனுக்கு முற்பட்ட சோழர்கள் காலக் கல்வெட்டுகள் மூலத்தானத்தைச் சுற்றி நடப் பட்ட தூண்களிலும் இக் கோயிலின் உட்புறம் காணப்படும் கிழக்குக் கோபுரம், மேற்குக் கோபுரம் ஆகியவற்றின் வாயிற்படிகளின் இருமருங்கிலும் காணப்படுகின்றன.

இக் கோயிலிலுள்ள மிகப் பழைய கல்வெட்டு மூலத்தானச் சுவரில் வடக்கில் நாட்டப்பட்டுள்ள தூண் ஒன்றில் காணப்படுகிறது. விளக்கிற்காக 96 ஆடுகளை நன்கொடை வழங்கிய செய்தியைத் தெரிவிக்கும் இராசகேசரியின் அவ்விரண்டாம் ஆண்டுக் கல்வெட்டில், திருப்பழனம் கல்வெட்டில் காணப்படுவதுபோலவே முதல் ஆதித்தனுடைய விருதுப் பெயராகிய 'பெருநற்கிள்ளிச் சோழர்' என்ற

தொடர் காணப்படுவதால் இக் கல்வெட்டு நிச்சயமாக முதல் ஆதித்தன் காலத்தது ஆகும்.

அடைமொழியின்றிக் காணப்படும் பரகேசரிவர்மன் கல்வெட்டு களில் சில முதல் பராந்தகன் காலத்தனவாகலாம். சில உத்தம சோழன் காலத்தனவாகலாம்.

மூலத்தானச் சுவருக்கு வடக்கிலுள்ள தூண் ஒன்றில் காணப்படும் முதல் பராந்தகனுடைய 45ஆம் (8+37) ஆண்டுக் கல்வெட்டு மலையாள நாட்டுக் கொடுங்கோளூரைச் (கரங்கனூர்) சார்ந்த அடியவர் ஒருவர் திருவெண்காட்டுப் பெருமானுக்கு அர்ச்சனபோக மாக நிலம் வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. இரண்டாம் ஆதித்தனுடைய 4ஆம் ஆண்டில் திருவெண்காட்டுக் கோயிலுக்கு நந்தனவனம் ஒன்று வழங்கப்பட்டது.

உத்தம சோழனுடைய 8ஆம் ஆண்டில் அவன் தேவிமார்களில் ஒருத்தி இக் கோயிலில் விளக்கு எரிப்பதற்காக நிலக்கொடை வழங் கினள்.

உத்தம சோழனுடைய 10ஆம் ஆண்டுக் கல்வெட்டு உட் பிராகாரத்துக் கிழைக் கோபுரத்தில் காணப்படுகிறது. அது வேளுடையாருடைய தேவியாரான சேதிராயன் உத்தமசீலியார் ஒரு விளக்கு எரிப்பதற்காக 25 கழஞ்சு பொன் வழங்கிய செய்தியைக் குறிக்கிறது.

முதல் இராசராசனுடைய கல்வெட்டுகள் அவனுடைய 2ஆம் ஆண்டிலிருந்து 28ஆம் ஆண்டுவரை பலவாகக் காணப்படுகின்றன. 2ஆம் ஆண்டுக் கல்வெட்டுப் பார்த்திவசேகரத்தெரிஞ்ச கைக்கோளர் குழுவினன் ஒருவன் விளக்கெரிப்பதற்காக வைத்த நிலக் கொடை பற்றியது.

முதல் இராசராசனுடைய 6ஆம் ஆண்டுக் கல்வெட்டில் திருவெண் காட்டுத் தேவருக்கு அரச குடும்பத்தைச் சார்ந்த செம்பியன் மாதேவி முதலியவர்களால் வழங்கப்பட்ட நன்கொடைகள் பற்றிய தொகுப்புக் காணப்படுகிறது. ஆனல் இவை வழங்கப்பட்ட காலத்தை அடிப் படையாகக் கொண்டு வரையப்படவில்லை. உத்தம சோழனுடைய 4ஆம் ஆண்டில் செம்பியன் மாதேவி வழங்கிய செப்புப் பாத்தி ரங்கள், 6ஆம் ஆண்டில் வழங்கிய இரத்தினங்கள் பதிக்கப்பட்ட பொற்பணிகள், இராசகேசரிவர்மனின் 6ஆம் ஆண்டில் வழங்கிய பொற்கலசம், சந்திரசேகர தேவருடைய பொன் திருமேனி, மணிகள்

பதிக்கப்பட்ட பொன் வெள்ளி அணிகள் என்பனவும், உத்தம சோழனுடைய 10, 11ஆம் ஆண்டுகளில் அவன் தேவிமாரும், அவன் தாயாரான செம்பியன் மாதேவியும் வழங்கிய நன்கொடைகளும் குறிக்கப் பட்டுள்ளன. மேலும் கண்டராதித்தனை மும்முடிச் சோழனுடைய 2ஆம் ஆண்டில் நாங்கூர் நாட்டு நாங்கூர்ச் சபையாரிடம் செம்பியன் மாதேவி 400 காசுகள் வழங்கி அக் காசுகளுக்கு நிலம் வாங்கி, அதன் வருமானத்தால் திருவெண்காட்டுத் தேவருக்கு மாதப் பிறப்புகள் தோறும் புனிதத் திருமஞ்சனம் ஆட்டுவிக்குமாறு கூற, அச் சபையார் முதல் இராசராசனுடைய 5ஆம் ஆண்டுவரை நிலம் வாங்காது இருக்கவே, அவன் ஆறும் ஆண்டில் அந்த 400 காசுக்கு நிலம் வாங்குமாறு நாங்கூர்ச் சபையாருக்கு ஆணையிடப்பட்ட செய்தி அக் கல்வெட்டில் காணப்படுகிறது. கோயில் நிர்வாகம் செய்பவருக்கும், கோயில் நிர்வாகம் நன்முறையில் நடப்பதில் சிரத்தைகாட்டும் பொது மக்களுக்கும் கோயில் சொத்துபற்றிய செய்தி தவறாது புலனாவதற்காக இங்ஙனம் நன்கொடைகள் பலவற்றையும் தொகுத்து வெட்டுவித்த கல்வெட்டுப் பெரும்பயன் தருவதாயிற்று. மேலும் கண்டராதித்தன் தனியாட்சி செலுத்தியமையும் அவன் 'மும்முடிச் சோழன்' என்ற விருதுப் பெயர் கொண்டமையும் இக் கல்வெட்டால் வெளியாகின்றன.

இராசராசனுடைய 19ஆம் ஆண்டில் அவன் தேவியாருள் ஒருவராகிய கூத்தன் வீரநாராயணியார் என்னும் சோழ மாதேவியார் இரத்தினங்கள் வைத்திழைக்கப்பட்ட பொற்பணியொன்றை வழங்கியுள்ளார். நம்பிராட்டியார் திட்டைப்பிரான் பெருமானார் என்னும் சோழ மாதேவியார் அவனுடைய 20ஆம் ஆண்டில் ஒரு தங்கப் பாத்திரத்தை நன்கொடையாக வழங்கியுள்ளார். அவனுடைய 24ஆம் ஆண்டில் அவனுடைய பணிமக்கள் பலரும் ஒன்றுசேர்ந்து திருவெண்காட்டுப் பெருமானுக்குச் செங்கழுநீர்த் திருவாசிகை அமைப்பதற்காகப் பொற்கொடையும் பொற்பூக்களும் வழங்கியுள்ளார். அவனுடைய 25ஆம் ஆண்டில் அவன் தேவியாருள் மற்றொருத்தியான வானவன் மாதேவி என்னும் திரிபுவன மாதேவி ஒரு விளக்கு எரிப்பதற்காக 30 கழஞ்சு பொன் வழங்கியுள்ளாள். அவனுடைய 26ஆம் ஆண்டில் ரிஷபவாகன தேவருடைய திருமேனி கோலக்கோவன் என்பவனால் இக் கோயிலில் நிறுவப்படவே, அதற்குப் பொற்பணிகள் இடப்பட்டுப் பூசனைக்காகப் பொற்கொடை அளிக்கப்பட்டது. மறு ஆண்டு இராசராச சனநாத தெரிஞ்ச பரிவாரத்தாரால் விருஷப வாகன தேவருடைய அம்பிகையின் செம்புத் திருமேனி நிறுவப் பட்டது. 28ஆம் ஆண்டில் வில்லவன் மாதேவியின் தாய் இக்கோயிலில் விளக்கெரிப்பதற்காகப் பொற்கொடை வழங்கினாள். 28ஆம் ஆண்டுக் கல்வெட்டு மற்றொன்றில், நாங்கூரிலுள்ள திருவெண்காட்டு உடையார்

கோயிலிலுள்ள ஆடவல்லாருக்குப் பூசனை நிகழ்த்துவதற்காக இம் மன்னனுடைய தேவி கூத்தன் வீரநாராயணியால் பொற்கொடை வழங்கப்பட்ட செய்தி காணப்படுகிறது.

முதல் இராசேந்திரன் ஆட்சித் தொடக்கத்தில் முதல் இராச ராசன் தேவிமார்களான உடைய பிராட்டியார் திரிபுவன மாதேவி யாரும் நக்கன் கருக்காமந்தல் என்னும் பஞ்சவன் மாதேவியாரும் இக் கோயிலுக்கு நன்கொடைகள் வழங்கியுள்ளனர்.

முதல் இராசாதிராசனுடைய 29ஆம் ஆண்டில் துப்பயன் உத்தம சோழி என்பாள் அர்த்தநாரித்தேவருடைய திருமேனியைக் கோயிலில் நிறுவவே, அத் தேவர் பூசனைச் செலவுக்காகச் சில கோயில் நிலங்கள் இறை இழிச்சிக் கொடுக்கப்பட்டன.

முதல் இராசாதிராசனுடைய 30ஆம் ஆண்டில் அமலன் செய்ய வாயன் என்பான் இக் கோயிலில் பிச்சைத்தேவர் திருமேனியை நிறுவி, அதன் அர்ச்சனுபோகத்திற்காக, அவன் தந்தை இராசேந்திரனிட மிருந்து தான்பெற்ற நிலத்தை வழங்கினான். மேலும் அவ் விறை வனுக்குப் பொற்பணிகளும் வெண்பொன்னணிகளும் வழங்கினான்.

முதற் குலோத்துங்கனுடைய 45ஆம் ஆண்டில் ஊர்ச் சபையார் கூட்டம் நிகழ்த்திய இராசாதிராச சதுஸ்சாலை என்ற மண்டபம் குறிப் பிடப்படுகிறது.

விக்கிரம சோழனுடைய 4ஆம் ஆண்டில் இக் கோயில் நிலங்கள் சில பெரும்பற்றப்புலியூர் என்னும் சிதம்பரத்து இறைவரான திருச் சிற்றம்பல முடையார் கோயில் நந்தனவனத்திற்காக வழங்கப்படவே, அந் நிலத்தின் இறை திரவியத்தை நாங்கூர் நாட்டுப் பிரமதேயமான இருக்கையூர்ச் சபையினர் இறுப்பதாக ஒத்துக்கொள்ள அச் செய்தி இக் கோயிலில் வெட்டுவிக்கப்பட்டது.

விக்கிரம சோழனின் 5ஆம் ஆண்டில் இக் கோயில் விழாவிற்கு வரும் யாத்திரிகர்களுக்கு உணவிடுவதற்காக ஒரு மடம் நிறுவப்பட்டு அதற்கு 18 காசுகள் கொடுத்து விலைக்கு வாங்கிய ஆறு மா நிலம் அரையன் அலைந்த கோலரையனால் வழங்கப்பட்டது. மும்முடிச் சோழ சதுர்வேதிமங்கலத்துச் சபையார் (நாங்கூராக இருக்கலாம்) இரா சேந்திர சோழப் பேரம்பலம் என்ற பிரமத்தான மண்டபத்தில் கூடி அந் நிலத்திற்குரிய இறை திரவியத்தை அவ்வரையன் அலைந்த கோவரையனிடம் பெற்று இறையிழிச்சிக் கொடுத்தனர்.

சோழ மன்னர்களுடைய ஆட்சிக் காலம் முழுதும் அரச குடும்பத்தினர் இக் கோயிலுக்குப் பல நன்கொடைகளை வாரி வழங்கினர் என்பது மேற்குறிப்பிடப்பட்ட கல்வெட்டுகளால் உள்ளங்கை நெல்லிக்கனியாகும்.

திருவெண்காட்டிலுள்ள வெண்கலத் திருமேனிகள் பற்றிய செய்திகளை ஸ்வேதாரண்யம் பற்றி—லலித் கலையில் (Lalit Kala, Bombay) டி. என். இராமச்சந்திரன் எழுதியுள்ளார். (Lalit Kala, Nos. 3 and 4, 1956-57) Also Transactions of the Archaeclogical Society of South India 1959-60. 'New Bronze Finds from Tiruvenkadu' by R. Nagaswamy.)

தற்பொழுதுள்ள வெண்காட்டுக் கோயில் சோழர்களின் இடைக் காலத்தைச் சார்ந்தது எனலாம்.

### கூகூர்

**ஆம்ரவனேசுவரர் கோயில் :**

கூகூர் தஞ்சை மாவட்டத்துக் கும்பகோணம் தாலுக்காவைச் சார்ந்த நாச்சியார் கோயிலிலிருந்து 3 கல் (4·8 கி.மீ.) தொலைவில் உள்ளது. கல்வெட்டுகளில் இவ்வூர் கூருர் என்று வழங்கப்பட்டுள்ளது. இங்குள்ள ஆம்ரவனேசுவரர் ஆதித்யேசுவரமுடைய பட்டாரகர் அல்லது பரமசுவாமி என்று வழங்கப்பட்டார்.

இக் கோயிலைத் தவிர, பழைய கல்வெட்டுகளில் வேறு நான்கு கோயில்களின் பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன.

1. திருமாம்பழ உடைய மகாதேவர் கோயில் (முதல் இராசராசன் காலம் முதல் விக்கிரமச் சோழன் காலம்வரை இது சிறப்புற்று விளங்கியது).

2. திருவெள்ளருக்கீசுவரம் உடையார் கோயில்.

3. கரிகாலசோழ ஈசுவரமுடைய மகாதேவர் கோயில்.

4. திருக்காளத்தி மகாதேவர் கோயில்.

ஆம்ரவனேசுவரர் கோயிலில் பழைய கல்வெட்டு பரகேசரிவர்மனின் 9ஆம் ஆண்டைச் சார்ந்தது. அது திருநறையூர் நாட்டிலுள்ள கூருரில் அமைந்த ஆதித்யேசுவரபட்டாரகர் கோயிலில் ஒரு விளக்கு எரிப்பதற்கு அஸ்திரசிவன் என்பான் 25 பொற்காசு வழங்கிய

செய்தியைக் குறிப்பிடுகிறது. இக் கோயில் பெயரைக்கொண்டு இது முதற் பராந்தகன் காலத்தது என்று கல்வெட்டிலாகா குறிப்பிடுகிறது. நாம் இதே காரணத்தைக் கொண்டு இது அக் காலத்தில் ஆண்ட முதல் ஆதித்தன் பெயரால் 'ஆதித்யேசுவரம்' என்று பெயரிடப்பட்டது என்று கருதுகிறோம்.

உத்தம சோழனுடைய 2ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று இறைவனுடைய பூசனை நிவேதனங்களுக்கு நிலம் வழங்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

முதல் இராசராசனுடைய 7ம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் பரகேசரிவர்மன் உத்தம சோழன் தன் 7, 8, 9ஆம் ஆண்டுகளில் வழங்கிய கொடைகள் பற்றிய செய்தி காணப்படுகிறது. அதே யாண்டில் இராசராசனுடைய பணி மகனான குவலாலபுரத்தைச் (கோலார்—மைசூர் நாடு) சார்ந்த இராசராச பல்லவரையன் என்பான் இக் கோயிலுக்கு நன்கொடை வழங்கியுள்ளான்.

இராசராசனுடைய 9ஆம் ஆண்டில் தண்டம் விதிக்கப்பட்ட சிலர் அத் தண்டத் தொகையைக் கட்டத் தவறியதால் அவர்களுடைய நிலம் கோயிலுக்கு வழங்கப்பட்டுத் தண்டத்தொகை வசூலிக்கப்பட்டது.

இராசராசனுடைய 10ஆம் ஆண்டில் சுந்தரமூர்த்தி நாயனாரான நம்பியாரூரரின் கோயிலில் சித்திரை விழா நடத்துவதற்கு உரிய செலவுக்காக ஒப்புரவாளர் ஒருவர் நிலம் ஒன்றும் வீடுகட்டும் மனையொன்றும் மானியமாக வழங்கினார். திருப்பதியம் பாடிய பிள்ளை நம்பியாகிய சுந்தரருக்கு உள்ளூர்க்காரர் சிலரும் நிலக்கொடை வழங்கினர்.

இக் கூகூர் ஆம்ரவனேசுவரர் கோயில் முதல் ஆதித்தன் காலத்தில் எடுப்பிக்கப்பட்டு உத்தம சோழன் காலத்தில் புதுப்பிக்கப்பட்டதாகலாம்

மூலக் கோயில் சதுரமான கருவறையை உடையது. கருவறையின் பக்க அளவு 19 அடி. அர்த்தமண்டபம் 13 அடி முன்னேக்கி நீண்டுள்ளது.

அடித்தளத்தில் தாமரை இதழ்கள் செதுக்கப்பட்டுள்ளன. அரைத் தூண்களில் கும்பங்கள் உள்ளன. போதிகைகளில் சுருள்கள் உள்ளன. கொடுங்கையின்கீழ்ப் பூதகண வரிசையும் மேல் யாளி வரிசையும் உள்ளன.

இவ் விருதளக் கற்றளியின் இரண்டாம் தளத்தில் நடுவில் உள்ள கோஷ்டங்கள் நீண்ட சதுரமாகவும், ஓரங்களில் உள்ளவை சதுர மாகவும் உள்ளன. பிற்காலத்ததாகிய இதன் சிகரம் உருண்டை வடிவானது.

தேவகோஷ்டங்களில் விநாயகர், நடராசர், துர்க்கை, தட்சிணு மூர்த்தி, பிரமன், பிட்சாடணர் முதலிய சிலைகளைக் காண்கிறோம்.

## திருவக்கரை

**சந்திரமௌளீசுவரர் கோயில் :**

திருவக்கரை தென்னார்க்காட்டு மாவட்டத்துச் செஞ்சியையடுத்த வராக நதிக்கரையில் விழுப்புரத்திலிருந்து 12 கல் (19·2 கி.மீ.) தொலைவில் மைலம்—செஞ்சிப் பெருவழியில் உள்ளது இங்கு முதல் ஆதித்தன் காலத்துக் கற்றளியொன்று உள்ளது.

மூலத்தானத்தின் தென்வாயிலின் இரு பக்கங்களிலும் இராச கேசரியின் 19, 26ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் உள்ளன. முதல் கல் வெட்டு திருவக்கரைக் கற்றளிப் பெருமானடிகளுக்கு 15½ கழஞ்சுப் பொன் நன்கொடையாக வழங்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. மற்றொன்று ஒவ்வோராண்டும் சித்திரை மாதத்துச் சித்திரை நட்சத் திரத்திலும் புரட்டாசி மாதத்து ஓரை நட்சத்திரத்திலும் இறைவ னுடைய சிறப்பான திருமஞ்சனத்திற்காக விடப்பட்ட மானியம் பற்றியது. இவ்விரண்டும் முதல் ஆதித்தன் காலத்தவை.

முதல் இராசராசனுடைய 16ஆம் ஆண்டுக் கல்வெட்டு இவ் வூரில் செம்பியன் மகாதேவியாரால் அமைக்கப்பட்ட சிவலோக முடைய பரமசுவாமியின் கற்றளிக்கு ஒரு கிராமத்தைத் தேவதான மாக வழங்கிய செய்தியைக் குறிக்கிறது. முதல் ஆதித்தன் காலத்துப் பழங்கோயில் செம்பியன் மகாதேவியாரால் புதுப்பிக்கப்பட்டு வேற்றுப் பெயரிடப்பட்டது போலும்.

இச் சிவன் கோயிலில் சங்க காலத்தை ஒட்டி வாழ்ந்தவனை கோச்சோழன் என்ற கோச்செங்கணுல் செங்கல்லால் எடுப்பிக்கப் பட்ட வரதராசப் பெருமாள் கோயில் என்ற விஷ்ணு கோயில் இருந்தது எனவும், அதிராசேந்திரனுடைய இரண்டாம் ஆண்டில் அவ் விஷ்ணு கோயில் கற்றளியாகப் புதுப்பிக்கப்பட்டது எனவும் அறி கிறோம். திருமங்கை ஆழ்வார் தம்முடைய திருநறையூர்ப் பதிகத்தில் ‘இருக்கிலங்கு செந்துவர்வாய் எண்டோள் ஈசற்கு (சிவன்) எழில் மாடம் எழுபது செய்து உலகமாண்ட திருக்குலத்து வளச் சோழன்’

ஆன செங்கணன் திருநறையூரில் வீற்றிருக்கும் திருமாலை வழிபட்டவன் என்று குறிப்பிடுவது கொண்டு செங்கணன் திருமாலிடத்தும் பற்றுடையவன் என்பது உணரப்படும்.

இக் கோயில் கிழக்கு நோக்கிய சந்நிதியை உடையது. கருவறை 20 அடி நீளமும் 18½ அடி அகலமும் உடையது; அதன் அடித்தளத் தரையிலிருந்து 4 அடி உயரத்தில் உள்ளது. அரைத்தூண்கள் 5 அடி உயரமுடையவை. கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசைக்குப் பதிலாக அன்ன (வாத்து) வரிசைகளைக் காணலாம்.

விமானம் புதிதாக அமைக்கப்பட்டது. இலிங்கம் மற்றவற்றைப் போலன்றி 'முகலிங்கமாக' உள்ளது. அது மும்முகங்களை உடையது என்ப.

கருவறையையும் அர்த்தமண்டபத்தையும் 5 அடி அகலமுடைய அந்தராளம் இணைக்கிறது. அர்த்த மண்டபம் கிழக்கு மேற்கில் 24½ அடியும் தெற்கு வடக்கில் 23 அடியும் உள்ளது. அர்த்தமண்டபத்தின் முகப்பில் இரண்டு துவாரபாலகர் சிலைகள் உள்ளன.

தேவகோஷ்டங்களில் தற்போது சிலைகள் இல்லை. விஷ்ணு கணேசர், லிங்கோத்பவர், பிரமன், பைரவர், அர்த்தநாரீசுவரர், நாற்கரத் துர்க்கை, எண்கர கிரிதுர்க்கை, சண்டேசுவரர், க்ஷேத்திரபாலர், வீரபத்திரர் ஆகிய சிலைகள் கோயில் பிராகாரங்களில் வைக்கப்பட்டுள்ளன. இவை பெரும்பாலும் தேவகோஷ்டங்களையும், பரிவார தேவதை ஆலயங்களையும் சேர்ந்தனவாகலாம்.

இக் கோயில் தாழ்வார மேடையின் முகப்பில் இராச சிம்ம பல்லவன் காலத்ததாகிய பட்டை தீட்டப்பட்ட இலிங்கம் ஒன்றும், சப்தமாதர் குழு ஒன்றும் காணப்படுகின்றன. இவ் வூர்த் தலபுராணத்தில் இடம் பெற்றுள்ள குண்டாலி முனிவர் அவருடைய பெயரனான வக்ரசூரன் ஆகியவர் சிலைகள் தென் பிராகாரத்தில் காணப்படுகின்றன.

கோபுரத்தின் அருகே வெளிப் பிராகாரத்தினுள் குதிரைகளால் இழுக்கப்படும் தேர்வடிவில் முகப்பில் சில சிங்கத் தூண்களைக் கொண்ட நூற்றுக்கால் மண்டபம் காட்சியளிக்கிறது. இதனைக் கல்வெட்டிலாகாவினர் மூன்றும் குலோத்துங்கன் காலத்து ஆயிரக்கால் மண்டபம் என்று குறிப்பிட்டுள்ளது பொருந்தாது. இது நூற்றுக்கால் மண்டபமே.

இக் கோயிலின் தென் கோபுரத்தருகில் சப்த மாதர் குழுவோடு கூடிய 'வக்கிரகாளி' கோயிலொன்று, ஆலம்பாக்கத்துக் கோயிலை

ஒப்ப அமைந்துள்ளது. வக்கிரகாளி வடிவம் தஞ்சை நிசும்பசூதனியை ஒத்துள்ளது. வாயிலின் இருமருங்கிலும் காவற்காரர்களாகப் பெண் சிலைகள் உள்ளன. இக் கோயிலைச் சார்ந்த சிலைகள் முற்பட்ட சோழர்கள் காலத்தவை.

திருவக்கரைக் கோயில் உலோகச் சிலைகளில் நடராசர், சந்திர சேகரர் சிலைகள் பழமையானவை.

இக் கோயில் சிலைகள் பிற்காலத் திருப்பணியாளரால் இட மாற்றப்பட்டுள்ளன.

## கிளியனூர்

1. வைகுந்தவாசப் பெருமாள் கோயில்.
2. அகத்திசுவரசுவாமி கோயில்.

கிளியனூர் தென்னார்க்காட்டு மாவட்டத்தில் திண்டிவனம் தாலுக்காவில் புதுச்சேரியிலிருந்து (புதுவை) திண்டிவனம் செல்லும் வழியில் புதுச்சேரியிலிருந்து 15 கல் (24 கி.மீ.) தொலைவில் உள்ளது. பழைய பிரமதேயமான இவ்வூரில் பழங்காலத்து விஷ்ணு கோயில் ஒன்றும் சிவன் கோயில் ஒன்றும் இருந்தன. மிகப் பழங்காலத்ததாகிய விஷ்ணு கோயில் பிற்காலத்தில் புதுப்பிக்கப்பட்டதால் பண்டைக் கலைச் சுவடுகளை இழந்துவிட்டது.

பழங்காலத்தில் இங்குள்ள விஷ்ணு கோயில் திகைத்திரள விஷ்ணுகிருகம் என வழங்கப்பட்டது. மூன்றும் நந்திவர்மன் காலத்துத் திகைத்திரளார் என்பர் இவ் விண்ணகரை எடுப்பித்து, அதன் பூசனை நிவேதனங்களுக்கு நிலமும், விளக்கெரிப்பதற்கு ஆடுகளும் வழங்கிய செய்தி இக் கோயிலின் மூலத்தானத்துத் தென் சுவரிலுள்ள கல்வெட்டொன்றால் அறியப்படுவதால் இக் கோயில் மூன்றும் நந்திவர்மன் (கி.பி. 835—860) காலத்ததாகிய 9ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்பது போதருகிறது.

அதே சுவரில் உள்ள இராசகேசரியின் 18ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதல் ஆதித்தனைச் சார்ந்தது. அது வழுதாவூரைச் சேர்ந்த நன்மகன் ஒருவனிடம் ஒய்மாநாட்டுக் கிளிஞலூரைச் சேர்ந்த ஊர்ச் சபையாரிடம் 75 கழஞ்சு பொன் கொடுத்து நாள்தோறும் அந்தணர் ஐவருக்கு உணவு இடுவதற்கு ஏற்பாடு செய்த நற்செயலைச் சுட்டுகிறது.

மூலத்தானத்தின் வடசுவரிலுள்ள பரகேசரிவர்மனின் 16ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதற் பராந்தகனுடையதாகும். அது உள்ளூர்க் குளத்தை ஆண்டுதோறும் பழுதுபார்ப்பதற்காக விடப்பட்ட மானியம் பற்றியது. பிற்பட்ட கல்வெட்டுகளில் இப் பெருமாள் 'வீற்றிருந்த பெருமாள்' என்று குறிப்பிடப்படுகிறார். 9ஆம் நூற்றாண்டில் எடுப்பிக்கப்பட்ட இக் கோயில் முதல் ஆதித்தன் காலத்துக் கோயில்களில் ஒன்றாகக் கணக்கிடத் தக்கதாகும்.

அகத்தீசுவரம் :

தற்போது அகத்தீசுவரம் என்று வழங்கப்படும் சிவன் கோயில் கல்வெட்டுகளில் ' திரு அக்நீசுவரம் உடையார் திருக்கோயில்' என வழங்கப்படுகிறது. அது பெருவழியிலிருந்து இரண்டு பர்லாங் தொலைவில் உள்ளது.

முதற் பராந்தகனுடைய 10ஆம் ஆண்டில் அவ்வூர் ஆளுங் கணத்தாரில் ஒருவர் சிவபெருமானுக்கு அமாவாசை நாட்களிலும் சங்கராந்தி நாட்களிலும் பூசனை நிவேதனங்களுக்காக மானியத்தை வழங்கியுள்ளார். (சங்கராந்தி—மாதப் பிறப்பு). அக் கல்வெட்டு 'ஒய்மா நாட்டுப் பிரமதேயமான கிளிஞலூர் திரு அக்நீசுவரம் உடையார்' என்று இவ்விறைவன் பெயரைச் சுட்டுகிறது.

இக் கோயில் ஒரு குளத்தின் கிழக்குக் கரையில் அமைந்திருக்கிறது. இது மேற்குப் பார்த்த சந்நிதியை உடையது இது ஓரளவு பழுதடைந்த மதிலையுடையதாக இன்று காட்சியளிக்கிறது. வாயிற் படியின் இருமருங்கிலும் சுப்பிரமணியர், விநாயகர் சிலைகள்—துவார பாலகர் தானத்தில் காணப்படுகின்றன. இக் கோயில் வெளிமதிலின் முகப்பில் முன் கோபுரம் அமைந்திருக்கக்கூடும்.

இக் கோயில் இருதளக் கற்றளி. உப பீடத்தின்மேல் அதிஷ்டானம் அமைந்திருக்கிறது. அதற்குமேல் பத்மபடையும் அதன்மேல் குமுதப் படையும் அமைந்துள்ளன. அவற்றின்மேல் ஓரங்களில் மகரங்கள் கொண்ட யாளி வரிமானத்தைக் காணலாம்.

பழங்கோயில் கருவறை, அர்த்தமண்டபம் என்ற இரண்டுடன் அமைந்திருக்கலாம். அர்த்தமண்டத்தின் முகப்பில் இருமருங்கிலும் இரு துவாரபாலகர் சிலைகளைக் காணலாம்.

வடகிழக்கில் காணப்படும் சண்டேசர், பைரவர் ஆகியவரின் சிறு கோயில்கள் பழைய பரிவார தேவதைகள் கோயில்களைச் சேர்ந்தனவாகலாம். கருவறை, அர்த்தமண்டபம் ஆகியவற்றின் வெளிச் சுவர்களில் ஐந்து தேவகோஷ்டங்கள் உள்ளன. தெற்கில் பிட்சாடனர்,

தட்சிணாமூர்த்தி சிலைகளும், கிழக்கில் சுப்பிரமணியர் சிலையும், வடக்கில் பிரமன், துர்க்கை சிலைகளும் காணப்படுகின்றன.

கருவறை 13 அடி பக்கங்களையுடைய சதுர வடிவானது. அதிலுள்ள தேவகோஷ்டங்கள் முன்னேக்கிப் பிதுங்கியனவாகக் காணப்படுகின்றன. கருவறையின் வெளிச் சுவர்களைச் சிற்ப வேலைப் பாடுடைய அரைத் தூண்கள் அணி செய்கின்றன. கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையைக் காணலாம்.

இரண்டாம் தளத்தில் சாலைகளும் கூடங்களும் உள்ளன. சிகரம் சதுரமானது.

கிரீவத்திலுள்ள கோஷ்டங்களில் மேற்கில் ரிஷபவாகனர், கிழக்கில் கங்காதரர், வடக்கில் தேவியரோடு கூடிய பிரமன் ஆகியவர் சிலைகளையும், தெற்கில் கல்லாலின் கீழமர்ந்த நிலையில் காணப்படும் தட்சிணாமூர்த்தி சிலையையும் காணலாம்.

இது கீழையூர் அகஸ்தீசுவரத்தை ஒத்த கலை நலங்களை உடையதால் இதுவும் முதல் ஆதித்தன் காலத்தது ஆகலாம்.

## காவேரிப்பாக்கம்

**சுந்தரவரதப்பெருமாள் கோயில் :**

வட ஆர்க்காட்டு மாவட்டத்தில் வாலாஜாபாத்திற்குக் கிழக்கே ஆறு கல் தொலைவில் அமைந்திருக்கும் காவேரிப்பாக்கம் பழம் பெருமையையுடையது. இது கல்வெட்டுகளில் காவிரிப்பாக்கம் எனவும் மூன்றும் நந்திவர்மனுடைய விருதுப் பெயரால் அவனி நாராயண சதுர்வேதி மங்கலம் எனவும் வழங்கப்படுகிறது. இங்கு நிருபதுங்கன், கம்பவர்மன் என்ற பல்லவ மன்னர்களுடைய கல் வெட்டுகள் காணப்பட்டன.

கர்ஹாடு செப்பேடுகளில் இரட்ட மன்னனுன மூன்றும் கிருஷ்ணன் மேற்பாடியில் தங்கியிருந்தபோது இங்குக் காலப்பிரியர், கங்கமார்த்தாண்டர், கிருஷ்ணர் ஆகிய மூவருக்கும் கோயில்கள் எடுப்பிக்க ஆணையிடப்பட்ட செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனல் அரசியல் மாற்றங்களால் இவ்விடத்தில் இருந்த அம் மூன்று கோயில்களும் சுவடற்றுப் போயின.

தற்போது சுந்தர வரதப் பெருமாள் கோயில் என்று வழங்கப் படும் கற்றளியில் பழைய கல்வெட்டுகள் உள்ளன. நிருபதுங்கனுடைய 15ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் இக்கோயில் 'காவிரிப் பாக்கத்துத் திருமேற்றளி' என்று குறிக்கப்பட்டுள்ளது.

இராசகேசரிவர்மனுடைய ஆறும் ஆண்டுக் கல்வெட்டில் இக் கோயில் இறைவர் ‘கீர்த்தி மார்த்தாண்ட காலப் பிரிய தேவர்’ என்று மூன்றும் கிருஷ்ணன் எடுப்பித்த மூன்று கோயில்களில் ஒரு கோயிலில் இருந்த இறைவன் பெயரோடு இணைத்து வழங்கப்படுகிறார். கோயில் மண்டபத் தூண்களில் உள்ள இராசகேசரிவர்மனுடைய 24, 25ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் முதல் ஆதித்தன் காலத்தைச் சேர்ந்தவையே. 24ஆம் ஆண்டுக் கல்வெட்டில் உள்ளூர் மகாசபையில் ஊர்வாரியம், உதாசினவாரியம், பொன் வாரியம், கழனி வாரியம், ஸ்ரீகோயில் வாரியம் என்ற பல வாரியங்களைச் சேர்ந்த நன்மக்களும் பட்டரும், விசிட்டரும் உறுப்பினராக இருந்து கோயிலுக்கு அறக் கட்டளை பெறுவது முதலிய ஊர்ப் பொதுக் காரியங்களை நிர்வகித்த செய்தி கூறப்பட்டுள்ளது.

பழுதடைந்துபோன பழைய கட்டடங்களைக்கொண்டு பழைய கட்டடக் கலையின் இப் பகுதியில் அமைந்த அமைப்புகள் பற்றி உறுதி யான செய்தி உணரப்படுவதாக இல்லை. இவ்விடத்திலிருந்து கிடைத்த பழைய அருமையான சிலைகள் சென்னைப் பொருட்காட்சிச் சாலைக்கும் வெளியிடங்களுக்கும் கொண்டு செல்லப்பட்டுவிட்டன.

தற்போது இவ்வூரில் காணப்படும் கொங்கணேசுவரர் கோயில், கோட்டை அபயவரதப் பெருமாள் கோயில், முக்தேசுவரர் கோயில் என்பன பழைய காலச் சோழர்கள் கோயில் கலைகளைப் பற்றிக் கற்ப வருக்குப் பயன்படுவனவாக இல்லை. இவை யாவும் பிற்காலத்தில் எடுப்பிக்கப்பட்டனவே.

## திருப்பாற்கடல்

### திருக்கரபுரீசுவரர் கோயில் :

திருப்பாற்கடல் வடவார்க்காட்டு மாவட்டத்துக் காவேரிப்பாக் கத்துக்கு இரண்டு கல் தெற்கில் உள்ளது. இவ்வூர் இறைவர் பாலாற்றங்கரையிலுள்ள ‘திருக்கரபுரத்துப் பெருமானடிகள்’ என்று கல்வெட்டுகளில் வழங்கப்படுகிறார். முற்காலத்துக் கல்வெட்டுகளில் பாலாறு ‘பார்யாறு’ என்று வழங்கப்படுகிறது. இவ்வூர் காவேரிப் பாக்கத்துச் சபையாருடைய நிர்வாகத்தின்கீழ் அடங்கியதொரு சிற்றூராகலாம்.

இங்குள்ள கல்வெட்டுகளில் உள்ளூர் ஏரியும் ஏர் வாரியத்தாரும் பற்றிய செய்திகளே பெரும்பான்மையாக உள்ளன. பழைய சோழர் கல்வெட்டுகளில் முதற் பராந்தகனுடைய 12ஆம் ஆண்டுக் கல்வெட்டே மிக முக்கியமானது. சோழநாட்டு அரைசூரைச் சேர்ந்த



42. அர்த்தநாரி,
திருப்புறம்பயம்



43. அகஸ்தீசுவரர்
கோயில், கிளியனூர்



44. சுப்பிரமணியர்,
கிளியனூர்



45. பிரமன்,
கிளியனூர்

அரைசூர் உதயதிரன் சென்னிப் பேரரையன் என்பான் இவ்வூர் ஏரி வாரியப் பெருமக்களிடம் 120 கழஞ்சு பொன் அளித்து அதன் பொலிசையை (வட்டி) கொண்டு ஏரியைக் கல்லி, அந்த வண்டலைக் கரையிலிட்டுக் கரையை உறுதி செய்வதற்கு ஏற்பாடு செய்திருந்தான். ஏறக்குறைய இதே காலத்தில் முதற் பராந்தகன் பாண்டியர், சிங்களர், சேனைகளை வெள்ளூரில் எதிர்த்துத் தோற்கடித்து விரட்டவே, அவ் வெற்றி கிழைப்பழுவூரில் கொண்டாடப்பட்டது. அப் போரில் வீரர் நால்வர் எதிரிப் படைகளைக் கொன்று குவித்து விழுப்புண்பட்டுப் போர்க்களத்தில் மாண்டனர். இறந்த இச் சோழ வீரர்களின் வெற்றிப் புகழைக் கொண்டாடி, அவர்களுடைய ஆன்ம சாந்திக்காக நற்செயல் செய்ய விரும்பிய அரைசூர் உதயதிரன், அந்தணர் நால்வருக்கு நாள்தோறும் உணவிடுவதற்கு அறச்சாலை மண்டபமொன்று நிறுவ நினைத்தான். அவனுடைய வேண்டுகோட்படி காவிரிப்பாக்க மாகிய அவனி நாராயண சதுர்வேதி மங்கலத்துக் குடும்ப வாரியம், தோட்ட வாரியம், கழனிவாரியம், வடகழனி வாரியம் ஆகிய தொகுப்புகளைச் சேர்ந்தவர்களும் பட்டர்களும், விசிட்டர்களும் ஒன்றுகூடி அரைசூர் உதயதிரனுடைய வேண்டுகோளை நிறைவேற்று முகத்தான் வேதங்களில் வல்ல அந்தணர் நால்வருக்கு நாள்தோறும் நான்கு காய் கறிகள், ஒருழக்கு நெய், ஒரு நாழித் தயிர், வெற்றிலை, பாக்கு முதலிய வற்றோடு உணவிடவும், அதனை ஏரி வாரியத்தினர் கவனிக்கவும் எல்லோரும் ஒருமுகமாக ஆணையிட, அதனை மத்தியத்தன் ஆகிய உள்ளூர்க் கரணத்தான் எழுதிய செய்தியை இப் பன்னிரண்டாம் ஆண்டுக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. எனவே, ஓரறச் செயலுக்குச் செய்யப்பட்ட மானியத்தைக் கொடையாளர் வேறொன்றுக்கு மாற்றும் வழக்கமும் அக் காலத்திருந்தமை போதருகிறது. முதற் பராந்தகனுக்குப் பிற்பட்டவனும் வீரபாண்டியனை வென்றவனும் ஆகிய பார்த்திவேந்திரவர்மன் என்ற இப் பதியில் ஆண்டுவந்த சோழர் குலத்தலைவனின் 3ஆம் ஆண்டில் வழங்கப்பட்ட கல்வெட்டொன்று அக் காலக் கிராம நிர்வாகக் குழுவினருடைய அமைப்பும் வேலையும் பற்றிக் குறிப்பிடுகிறது.

ஆறு கரையை உடைத்துக் கொண்டுபோய்க் கோயிலுக்குச் சொந்தமான விளை நிலங்களை மணற்காடாக்கிவிட்டபடியால், கோயில் காரியங்கள் நிகழ்வதற்குரிய வருவாய்க்கு இடையூறு வந்து விட்ட செய்தி காவிரிப்பாக்கத்து ஊர்ச் சபையாரிடம் அறிவிக்கப் படவே, அவ்வூர் நிர்வாகத்தைச் செய்துவந்த சம்வத்சரவாரியம், தோட்ட வாரியம், ஏரி வாரியம், கழனி வாரியம், பஞ்ச வாரியம், கணக்கு வாரியம், கலிங்கு வாரியம், தடிவழி வாரியம் ஆகிய குழுவினைச் சேர்ந்தவர்களும் பட்டர்களும், விசிட்டர்களும் வடவீரநாராயணத்து மக்களும் ஊராள்கின்ற பல்லவன் பிரமாதிராசன் அரும்பைக்

கிழானும், ஊர்க் கண்காணியும் உள்ளூர்ப் பெருங்கோயிலின் அபிஷேக மண்டபத்தில் கூடியிருந்து ஊருக்குச் சொந்தமான மாஞ் சிக்கம் (புறம்போக்கு) 1,400 குழி நிலத்தைக் கோயிலுக்கு அர்ச்சனு போகமாக இறையிலியாக்கிவிடுத்து, நாள்தோறும் மூன்று சந்தி பூசைக்கும் திருவிளக்கிற்கும், ஒருவேளை நிவேதனத்திற்கும் ஏற்பாடு செய்யவே, அதைக் கழனி வாரியர் ஏற்றுக் கல்லில் வெட்டி வைக்க ஏற்பாடு செய்த செய்தியை இக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. பழைய ஊர்ச் சபைத் தேர்தல் முறை, வாக்காளர் தகுதி முதலியன முதற் பராந்தகனுடைய உத்தரமேரூர் வைகுந்தப் பெருமாள் கோயில் இரு கல்வெட்டுகளால் அறியப்படுகின்றன.

இக் கோயிலின் கருவறை 16 அடிப் பக்கமுடைய சதுரமாகும். இதனோடு இணைந்த அர்த்தமண்டபம் 11 அடி முன்னேக்கி நீண்டுள் ளது. அடித்தளத்தில் வேலைப்பாடுகள் இல்லை. அவற்றில் 5 தேவ கோஷ்டங்கள் உள்ளன. தற்போது வடக்கில் பிரமன் சிலையும் மேற்கில் விஷ்ணு சிலையுமே காணப்படுகின்றன.

பழங்கால சேட்டாதேவியின் சிலை ஒன்று கோயிலின் உட் பிராகாரத்தில் தனியே காணப்படுகிறது.

## பிரமதேசம்

**சந்திரமௌளீசுவரர் கோயில் :**

பிரமதேசம் என்பது வடவார்க்காட்டு மாவட்டத்துச் செய்யாறு தாலுக்காவில் அந்தணர்களுக்காக விடப்பட்ட பிரமதேய கிராம மாகும். இவ்வூரில் அக் காலத்தில் நான்கு கோயில்களாவது இருந் திருக்க வேண்டும்.

தற்பொழுதுள்ள சந்திரமௌளீசுவரர்கோயில், பழங் கல்வெட்டு களில் திருவேகம்பபுரத்து இராசமல்ல சதுர்வேதிமங்கலத்துப் 'பண்டைப் பெருமானடிகள் கோயில்' என வழங்கப்படுகிறது.

தற்பொழுது உருத்திரகோடீசுவரர் கோயில் என்று வழங்கப்படும் தேவாலயம் முற்காலத்தில் உருத்திரசோழ உடையார் கோயில் என வழங்கப்பட்டது.

முதல் இராசாதிராசன் கல்வெட்டுகளில் சோழ கேரள விண்ணகர ஆழ்வார் கோயில், திருவயோத்தியாழ்வார் கோயில் என்ற இரண்டு கோயில்கள் இவ்வூரில் இருந்தனவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

இப் பகுதி சோழ மன்னருள் மிக மேம்பட்டவனுன முதல் இரா சேந்திரன் என்ற கங்கைகொண்ட சோழன், அவனேடு உடன்கட்டை யேறிய அவன் தேவியான வீரமாதேவி ஆகியவர் இறந்த இடமாகும். முதல் இராசாதிராசனுடைய 26ஆம் ஆண்டுக் கல்வெட்டு வீரமா தேவியின் சகோதரரான சேனுபதி மதுராந்தகன் என்ற பரகேசரி வேளான் உடையார் இராசேந்திர சோழதேவர், அவர் சமாதி வைக் கப்பட்ட கல்லறையிலேயே தானும் உடன் சமாதியாகி இறைவன் திருவடிகளைத் தன் கணவனேடு ஒருசேர அடைந்த வீரமாதேவி ஆகியவருடைய ஆன்மாக்களின் தாக சாந்திக்காகத் தண்ணீர்ப் பந்தர் அமைப்பதற்கு நிலக்கொடை வழங்க, அது துக்கமான சந்தர்ப்பம் ஆதலால் ஊர்ச் சபையார் ஒரு புளியமரத்தடியில் கூடி அக் கொடையை உறுதி செய்தனர். இங்கு மற்ருெரு பள்ளிப்படைக் கோயில் இருந்து உருவற்றுப் போயிருக்கவேண்டும்.

உள்ளூரிலுள்ள பல கோயில்களிலும் சந்திரமௌளீசுவரர் கோயிலே மிக முக்கியமானது. அக் கோயில்பற்றிக் கல்வெட்டிலாக்கா குறிப்பிடும் செய்தி பின்வருமாறு: 'பழைய பல்லவர் காலக் கட்டடக் கலைக்கு இது நல்ல உதாரணமாகும். இது கற்றளி. சுவர்களிலுள்ள தேவகோஷ்டங்களில் காணப்படும் சிலைகள் மிக அழகுடையன. இக் கோயில் முழுவதும் பெருமதிப்புடைய பழங்காலக் கல்வெட்டுகளால் நிரப்பப்பட்டுள்ளது'. போந்தநாதர் என்ற இறைவனைக் கிருதயுகத்தில் அக்நியும் திரேதாயுகத்தில் சந்திரனும், துவாபரயுகத்தில் ரோமச முனியும் வழிபட்ட அதே இடத்தில் கலியுகத்தில் இக் கோயில் அமைக்கப்பட்டுள்ளது என்று இங்குள்ள வடமொழிக் கல்வெட் டொன்று குறிப்பிடுகிறது. பிற்பட்ட சோழர் காலத்ததாகிய மேலைக் கடம்பூர்க் கோயிலிலும் இதே ஐதிகத்தைக் காணலாம். (எமது 'நான்கு சோழர் கோயில்கள்' என்ற நூலைக் காண்க).

இச் சிற்றூர் 'திருவேகம்பபுரத்து இராசமல்ல சதுர்வேதி மங்கலம்' என்று பண்டு வழங்கப்பட்டது. இராசமல்லன் என்பது தலைக்காட்டுப் பகுதியை ஆண்ட மேலைக் கங்க மன்னன் ஒருவனுடைய பெயராகும். இது ஞானப் பெருமக்கள் அல்லது அஞ்சஸ்த சாது சபை என்ற ஊராள் மன்றத்தால் நிர்வகிக்கப்பட்ட பார்ப்பனருடைய குடியேற்ற ஊராகும். இவ்வூரில் கிராம காரிய ஆளுங்கண வாரியம், கோயில் வாரியம் என்ற வேற்றுச் சபைகளும் பணிபுரிந்தன. இவ் வூர்க் கல்வெட்டுகளில் காணப்படும் 'த்ரை ராஜ்யகடிகாமத்யஸ்தன்' என்ற அதிகாரியின் தொழில் இன்னது என்று புலனுகவில்லை.

இங்கு முதல் ஆதித்தனுடையனவாகக் கருதப்படும் இராசகேசரியி னுடைய 20, 27ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் இரண்டு உள்ளன.

முதற் கல்வெட்டு, இராசமல்ல சதுர்வேதிமங்கலத்தைச் சார்ந்த திருவேகம்பபுரத்து ஆளுங்கணத்தாருள் ஒருவர் அந்தணர் ஒருவருக்குக் கோயிலில் உணவிடுவதற்கு நன்கொடை வகுத்த செய்தியை வெளியிடுகிறது. இரண்டாவது எண்ணெய் வாணிகர் குழுவைச் சேர்ந்த உறுப்பினர்களின் இருப்பிடமான சங்கரப்பாடியில் வாழ்ந்த அட்டமூர்த்தி என்பார் இக் கோயிலில் அந்தணர் ஒருவருக்கு உணவிடுவதற்கும் ஒரு விளக்கு எரிப்பதற்கும் பொற் கொடை வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. இதற்குக் கீழ்க் காணப்படும் மதுரை கொண்ட பரகேசரியின் 17ஆம் ஆண்டுக் கல்வெட்டைக் கொண்டு மேலே உள்ள இராசகேசரியின் 27ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதல் ஆதித்தன் காலத்ததே என்பது உறுதியாகிறது.

இங்குள்ள நான்கு கல்வெட்டுகளில் சகர (Saka) யாண்டே குறிப்பிடப்பட்டுள்ளது. அவற்றுள் மிகப் பிற்பட்டது கம்பவர்மனுடைய 20ஆம் ஆண்டைச் சேர்ந்தது. (கி.பி. 898). அது முதல் ஆதித்தனுடைய 26ஆம் ஆண்டாகும். பின் இங்கு அரசியல் குழப்பங்கள் ஏற்பட்ட செய்தி, இங்கு அரசர் பெயரிடாமல் சகரயாண்டு கொண்டு கால நிர்ணயம் செய்தது கொண்டே உணரப்படுகிறது. சகரயாண்டு 830-ல் ஒரு கல்வெட்டுள்ளது (830 + 78 = கி.பி. 908). இங்குக் காணப்படும் முதற் பராந்தகன் கல்வெட்டில் பழைமையானது அவனுடைய 5ஆம் ஆண்டுக் கல்வெட்டே (கி.பி. 912). இவற்றை நோக்க இப் பகுதியில் ஆண்ட கம்பவர்மனுடைய ஆட்சி கி.பி. 898-க்கும் 908-க்கும் இடையே அழிக்கப்பட்டிருக்க வேண்டும் என்று முடிவு செய்யலாம்.

முதற் பராந்தகனுடைய புள்ளமங்கைக் கல்வெட்டு வெளியிடுவது போலவே, தன்னுடைய 6ஆம் ஆண்டிற்கு முன்னமேயே சோளிங்கபுரக் கல்வெட்டுக் குறிப்பிடும் திருவல்லத்தில் மேலைக் கங்க நாட்டு மன்னனும் தன் நண்பனுமான இரண்டாம் பிருதிவீபதியின் துணையைக்கொண்டு பாணர்களை (வாணர்களை) அடியோடு தோற்கடித்து, அவர்களுடைய நாட்டைக் கவர்ந்த முதற் பராந்தகன் ‘கங்க பிருதிவிபதிக்குச் செம்பியன் மாவலி வானராயன்’ என்ற விருதுப் பெயர் அளித்தமை உணரப்படுகிறது. எனவே, அக் காலத்தில் இவ்விடத்தில் அரசியல் குழப்பங்கள் இருந்து, பராந்தகனால் அமைதி நிலை நாட்டப்பட்டமை வரலாறு கண்ட உண்மையாகும். முதல் ஆதித்தன் காலத்தில் இப்பகுதியில் பல்லவகம்பவர்மனும் உரிமை கொண்டாடியதாகக் காண்கிறோம். முதற் பராந்தகன் தன் ஆட்சியின் தொடக்கத்திலேயே இரண்டாம் பிருதிவீபதியின் உதவியைக்கொண்டு கம்பவர்மனை அடியோடு தொலைத்து, அப் பகுதியை மீண்டும் சோழர் ஆளுகைக்குக் கொண்டு வந்தவனாதல் வேண்டும்.

இக் கோயிலில் முதற் பராந்தகன் கல்வெட்டுகள் அவனுடைய 5ஆம் ஆண்டு முதல் 40ஆம் ஆண்டு வரை பரவிக் கிடக்கின்றன: 15ஆம் ஆண்டுக் கல்வெட்டுத் தோட்ட வாரியத்தாரின் கரணத் தானுடைய ஊதியத்தை வரையறுக்கிறது. சங்கரப்பாடியாரைச் சார்ந்த ஒருவன் தட்சிணாமூர்த்தி கோயிலின் பூசனைக்காக இம் மன்ன னுடைய ஆட்சியில் 25 குழி நிலத்தை நன்கொடையாக அளித்தான். 29ஆம் ஆண்டுக் கல்வெட்டு நாரணமங்கலத்து வாசி ஒருவன் இக் கோயிலில் உள்ள பண்டைப் பட்டாரகருக்குப் பொற்பணி ஒன்று வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. ஏனையவை விளக்கிற்காக விடப் பட்ட நன்கொடைகள் பற்றியன. கன்னர தேவனின் 17ஆம் ஆண்டுக் கல்வெட்டும் விளக்கிற்காக வழங்கப்பட்ட பொற்கொடை பற்றியது. இப் பகுதியில் பார்த்திவேந்திரவர்மன் ஆண்ட செய்தி இக் கோயிலில் காணப்படும் அவனுடைய இரண்டு முதல் 13ஆம் ஆண்டுவரை உள்ள கல்வெட்டுகளால் வெளியாகிறது. அவனுடைய இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டு ஊர்ச் சபையாரால் கோயில் நிலங்கள் யாவும் இறையிலி யாக்கப்பட்ட செய்தியை வெளியிடுகிறது. இங்ஙனம் இறையிலி யாக்கிய காரணம் ஊர்ச் சபையார் கோயிலில் இருந்து கடனாகப் பெற்ற தொகையை ஈடுசெய்வதற்காகவேயாம் என்பதும் அக் கல் வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. 4ஆம் ஆண்டில் இக் கோயிலில் நிறுவப்பட்ட ரிஷப வாகன தேவருடைய பூசனைக்கும் திருவிளக்கிற்கு மாகப் பொற்கொடை வழங்கப்பட்டது. 13ஆம் ஆண்டில் பண்டைப் பெருமானடிகளுடைய அபிஷேகத்திற்காக 'த்ரைராஜ்ய கடிகா மத் யஸ்தன்' மூவைரவன் என்பவன் பொற்கொடை வழங்கினான். மேலும் அவனே இதேயாண்டில் இக் கோயிலில் விளக்கு எரிப்பதற்கு 30 கழஞ்சு பொன்னைத் தான வாரியப் பெருமக்கள் வசம் ஒப் படைத்து, அவர்கள் இவ்வறம் செய்யத் தவறினால் அரசனுடைய சார்பாக, அவர்களுக்கு உள்ளூர் அறக்கட்டளை நிர்வாகத்தில் ஈடு பாடுடைய சிரத்தாமாந்தரால் தண்டம் விதித்துப் பின் இவ்வறத்தை முட்டாமல் நடத்த ஏற்பாடு செய்யுமாறு வேண்டியுள்ளான்.

சுந்தர சோழனுடைய 17ஆம் ஆண்டில் இறைவனுக்குச் சந்தனக் குழம்பு வழங்கும் செலவிற்காக இரண்டு தடி நிலங்கள் கோயில் தான வாரியப் பெருமக்கள் மேற்பார்வையில் தானமாக வழங்கப்பட்டன.

முதல் இராசராசன், முதல் இராசேந்திரன் ஆகியவர் ஆட்சிக் காலத்தில் இவ்வூர் கரைக்கோட்டுப் பிரமதேயம் என்றும் பராக்கிரம சோழ சதுர்வேதிமங்கலம் என்றும் வழங்கப்படுவதாயிற்று.

இராசராசனுடைய 16ஆம் ஆண்டில் இக் கோயிலில் திருப்பதியம் பாடுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அவனுடைய 31ஆம்

ஆண்டில் ஒரு பொற்பணி திருவாசிகை இவ்விறைவனுக்கு வழங்கப் பட்டது.

இராசேந்திரனுடைய 26ஆம் ஆண்டில் சுப்பிரமணியதேவர் என்னும் சோழ கேரள நாடார் கோயில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இராசாதிராசனுடைய 26ஆம் ஆண்டுச் செய்திபற்றி முன்னரே குறிப்பிட்டுள்ளோம். அவனுடைய 32ஆம் ஆண்டில் இக் கோயிலிலுள்ள திருச்சிற்றம்பலம் உடையார் திருமேனியின் பூசனைக்கு வாய்ப்பு அளிக்கப்பட்டது. ஸ்ரீபலிச் சடங்கின்போது வெளியே ஊர் வலமாகக் கொண்டுவரப்படும் பாசுபதமூர்த்தியின் திருமேனிக்குப் பூசனை நிவேதனங்களுக்காக, முன் கல்வெட்டிற்கு இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் பொற்கொடை வழங்கப்பட்டது.

இப் பண்டைக் கங்கர் கோயில் சோழர்களுடைய தொடர்பை மிகவும் கொண்டுள்ளது. ஒருகால் இது தொடக்கத்தில் பிற்காலப் பல்லவராலோ கங்க மன்னர்களாலோ எடுப்பிக்கப்பட்டு, முற்பட்ட சோழர்கள் காலத்தில் பெருஞ் சிறப்படைந்திருக்கலாம்.

இக் கோயில் மிகப் பழுதுற்ற நிலையிலுள்ளது. கலையுணர்வோடு இதனைப் புதுப்பித்து வைத்தால் பழைய சோழர் காலத்து அருங்கலைச் செல்வம் ஒன்றைப் போற்றியவராவோம்.

இது முத்தளக் கற்றளி. கிழக்கு நோக்கிய சந்நிதியை உடையது. அடித்தளத்தில் வேலைப்பாடுகள் இல்லை. கருவறை 21 அடி பக்கமுடைய சதுரமாகும். அதற்கடுத்த அந்தரானம் 8 அடி அகலமுடையது. அதனை அடுத்துள்ள அர்த்தமண்டபம் பாழடைந்து விட்டது. தேவகோஷ்டச் சிலைகள் விரும்பப்பட்டவர்களால் வெளிப் படையாகத் தூக்கிச் செல்லப்பட்டுவிட்டன.

கருவறையின் மேல் இரு தளங்கள் உள்ளன. தற்போதைய சிகரம் பிற்காலத்தில் செங்கல்லாலானது. ஏனைய முற்பட்ட சோழர்கள் காலக் கோயில்களைப்போலவே மேல்தளங்களில் சிறு கோஷ்டங்கள் உள்ளன. கொடுங்கைமீது கூடுகள் உள. கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையையும் மேலே யாளி வரிமானத்தையும் காணலாம்.

இரண்டாம் தளத்தின் கிழக்குத் தேவ கோஷ்டத்தில் அழகிய நரசிம்மர் சிலை உள்ளது.

இக் கோயிலை இந்த அளவுக்கு ஏற்பட்ட பழுதுகளிலிருந்து காத்தால், தென்னிந்திய கலைக்கருவூலம் ஒன்று காக்கப்பட்ட பேறு பெறலாம்.

## உக்கல்

### புவன மாணிக்க விஷ்ணுகிருகம் :

செங்கற்பட்டு மாவட்டத்தைச் சார்ந்த உக்கல் கூழம் பந்தலுக்கு ஒரு மைல் (1·6 கி.மீ.) கிழக்கிலும் மாமண்டூருக்கு 5 மைல் (8. கி.மீ.) தெற்கிலும் காஞ்சிபுரம்-வந்தவாசிப் பெருவழியை ஒட்டி அமைந்துள்ளது.

இங்கு ஒன்பதாம் நூற்றுண்டினதாகிய விஷ்ணு கோயிலொன்று பாழடைந்த நிலையில் உள்ளது. இங்குப் பல்லவ கம்பவர்மனுடைய 10ஆம் ஆண்டு, 15ஆம் ஆண்டு இவற்றைச் சார்ந்த இரு கல்வெட்டுகள் உள்ளன. பரகேசரிவர்மனுடைய 16ஆம் நூற்றுண்டைச் சார்ந்த பழைய சோழர் கல்வெட்டொன்றை அதன் எழுத்தமைப்பு முதலியவற்றை நோக்கி ஹுல்ஷ்ச் (Hultzsch) என்பார் விசயாலயன் காலத்ததாகக் கருதுகிமுர். ஆனுல் அது முதற் பராந்தகன் காலத்தது என்று கொள்வது பொருத்த முடையதாகும் எனக் கருதுகிறேன். இக் கல்வெட்டில் உக்கல் காலியூர்க்கோட்டத்துக் காலியூர்க் கூற்றத்துச் ‘ சிவ சூடாமணிமங்கலம் ஆகிய விக்கிரமாபரண சதுர்வேதிமங்கலம்’ என்று வழங்கப்படுகிறது. இந்த விஷ்ணு கோயிலில் உள்ள இறைவர் ‘ புவன மாணிக்க விஷ்ணு கிருகத்துப் பெருமானடிகள்’ என்று குறிப்பிடப் படுகிமுர். முதல் இராசராசனுடைய 13ஆம் ஆண்டைச் சார்ந்த பிற்பட்ட கல்வெட்டுகளில் இப் பெருமான் பெயர் ‘ திருவாய்மொழித் தேவர் ’ என வழங்கப்படுகிறது. இக் கல்வெட்டு, கோயில் நிர்வாகரின் வேண்டுகோட்படி சம்வத்சர வாரியரும், ஏரி வாரியரும் உள்ளிட்ட ஊர்ச் சபையார் இக் கோயிலுக்குத் திருவிளக்கிடுதல், தூபமிடுதல் முதலியவற்றிற்கும் திருவிழாக்கள் நிகழ்த்துவதற்கும், குற்றம் செய்தவர்களுடைய பாவ நீக்கத்திற்காகச் செய்யப்படும் கோயில் தொண்டுகளுக்கும், இறைவனுடைய திருமேனியை உத்தராயனம், தட்சிணுயனம், சித்திர விஷு, ஐப்பசி விஷு ஆகிய புண்ணிய நாட்களில் திருமஞ்சனம் செய்வித்தலுக்குமாகச் சில நிலங்களை விடுத்த செய்தியைக் குறிப்பிடுகிறது.

முதல் ஆதித்தன் காலத்ததாகிய இராசகேசரிவர்மனின் 23ஆம் ஆண்டுக் கல்வெட்டு உத்தரமேரூர் ஆளுங்கணத்தைச் சார்ந்த ஒருவர் வழங்கிய 200 கழஞ்சு பொன்னைப் பெற்று, அதன் வட்டிக்காக இவ்வூர்ச் சபையார் வேதத்தில் வல்ல 12 அந்தணர்களுக்கு உணவிடுவதற்கு ஒத்துக்கொண்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. அநேகமாக இவ்வாண்டில் இப் பகுதியில், கம்பவர்மன் ஆட்சி நீங்கிச் சோழர் ஆட்சி தொடங்கி விட்டதைக் காண்கிமுேம்.

முதற் பராந்தகனுடைய 37ஆம் ஆண்டில் இவ்வூர்ச் சபையார் இக் கோயிலுக்குத் தேவபோகமாக வடபுறத்திலுள்ள சோடியம்

பாக்கம் என்ற சிற்றூரை அதன் நந்தனவனம், வீடுகட்டுதற்குரிய மனையிடம், குளம், நன்செய், புன்செய் நிலங்கள் முதலியவற்றோடு வழங்கி. அதிலிருந்து கிடைக்கும் வரும்படியைக்கொண்டு இறை வழிபாட்டிற்கு வேண்டிய பொருள்கள் வாங்குதல், தூபத்திற்குரிய சீதாரி புகைத்தல், விளக்கு எரித்தல், திருவிழாக்கள் நிகழ்த்துதல், இறைவனுக்கு உத்தராயனம், தட்சிணயனம், (பகலும் இரவும் சமமாக இருக்கும்படியான கதிரவன் பூமத்தியரேகைக்கு நேரே இருக்கும் நாட்கள்,) கிரகண நாட்கள் ஆகிய தினங்களில் புனிதத் திருமஞ்சனம் நிகழ்த்துதல், ஸ்ரீபலி வழிபாடுகள், கோயிற் பண்டக சாலைக்குப் பொருள்கள் வாங்குதல் முதலிய செயல்கள் நிகழ்த்த ஏற்பாடு செய்தனர். 'கோயிலுக்காக விடப்பட்ட சோடியம்பாக்கம் என்ற சிற்றூருக்கு வரிவிதிப்பதற்கும் ஊர்ப்பொதுக் காரியத்தில் ஈடுபடுமாறு அவ்வூரவரைக் கட்டுப்படுத்தவும் இவ்வூர் சம்வத்ஸரவாரியத்தார், ஏரி வாரியத்தார், தோட்ட வாரியத்தார் முதலிய ஒருவருக்கும் உரிமை யில்லை. தவறு செய்த அவ்வூரவரைத் தண்டிக்கும் உரிமை அரசன் ஒருவனுக்கே உண்டு. இதனை மீறிச் செயற்படுபவர்களைத் தண்டிக்க வேண்டும்' என்றும் அவ்வூர்ச் சபையார் முடிவு செய்தாராக அறிகிறோம்.

கன்னரதேவனுடைய 16ஆம் ஆண்டுக் கல்வெட்டில் ஊர்ச் சபையினர் இவ் விஷ்ணு கோயிலின் முகமண்டபத்தில் கூடி, அது வரையில் யாருக்கும் வழங்கப்படாத ஊர்ப் பொது நிலங்களுக்கு ஓரளவு வரி விதித்து, அவ் வரியைக் கட்ட ஒத்துக்கொள்பவரிடம் அந் நிலங்களை விட்டுவிடுவதென்று முடிவு செய்த செய்தி குறிப்பிடப் பட்டுள்ளது.

இரண்டாம் ஆதித்தனுடைய 4ஆம் ஆண்டில் இவ்வூர்ப் பெரு மகன் ஒருவன் வேதங்களில் வல்ல சான்றோரான ஊராள் பெருமக்கள் கூடும் பிரம்மத்தான மண்டபத்தில் கோடை ஆறு மாதங்களிலும் குடி தண்ணீரும் குளிர் மிக்க ஆறு மாதங்களில் குளிர் காய கணப்பும் (அக்னிஷ்டம்) உதவ அதற்குரிய நன்கொடை வழங்கி, அந் நன்கொடையை சம்வச்சர வாரியரின் மேற்பார்வையில் விடுத்தான். இவ் வித தர்மத்தைப்பற்றி ஏற்பாடு செய்யப் பல்லவ முதற் பரமேசுவரனுடைய கூரம் பட்டயத்திலும் இரண்டாம் நந்திவர்ம னுடைய தண்டந்தோட்டம் பட்டயத்திலும் குறிப்புள்ளது.[1]

[1] குறிப்பு: முதல் இராசராசனுடைய 11ஆம் ஆண்டைச் சேர்ந்த தென்னேரி என்ற ஊர்க் கல்வெட்டொன்று அவ்வூரான் குழுவினர் பிரமத்தான மண்டபத்தில் கூடி, மந்திரங்களில் வல்ல அந்தணர்களே ஊரான் குழுவினரான வாரியம் செய்வா ராகத் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்றும், அத்தகைய தகுதி உடையாரே ஊர்ச் சபையினரின் கூட்டங்களில் பங்கெடுத்துக்கொள்ளவேண்டும் என்றும் முடிவு செய்த தைக் குறிப்பிடுகிறது.

முதல் இராசேந்திரனுடைய நான்காம் ஆண்டில் இவ்வூர்க் குளத்தில் தூர் எடுத்து இதை ஆழமும் தூய்மையும் உடையதாக எப் பொழுதும் வைத்துக் கொள்வதற்கு இரண்டு படகுகள் வழங்கப் பட்டன. அவற்றை நிர்வாகம் செய்யவும் குளக்கரையைப் பழுது பார்க்கவும் மானியம் வழங்கப்பட்டது.

இரண்டாம் இராசராசனுடைய கல்வெட்டுகள் இரண்டால் இவ்வூரில் ஒரு பிடாரி கோயிலும் ஐயனுர் கோயிலும் இருந்தன எனவும், அவை ‘சாத்த கணத்தார்’ என்ற குழுவினரால் நிருவகிக்கப் பட்டு வந்தன எனவும் அறிகிறோம்.

உள்ளூர்ச் சபையினருக்கே வரிவிதிக்கும் உரிமையிருந்தது. பிடாரி கோயில் எல்லையைத் தவிர வேறிடங்களில் வெற்றிலை விற்பா ருக்கு ஒரு கழஞ்சு வரையில் தண்டம் விதிக்கும் உரிமை ஏரி வாரியத் தாருக்கு வழங்கப்பட்டிருந்தது. அங்ஙனம் தண்டம் விதிப்பதால் கிடைக்கும் பணம் ஏரி வாரியத்தார் வசம் வழங்கப்பட்ட நிதியோடு சேர்ந்தது.

**வைத்தியநாத சுவாமி கோயில் :**

இவ்வூரில் இப்பொழுது வைத்தியநாத சுவாமி கோயில் என்று வழங்கப்படும் சிவாலயம் பண்டு ‘பெருந்திருக் கோயில் பெருமா னடிகள் கோயில்’ எனவும், ‘மதுராந்தக ஈசுவரம் உடையார் கோயில்’ எனவும் வழங்கப்பட்டது. இது தொடக்கத்தில் செங்கற்கோயிலா கவே இருந்தது. முதல் இராசேந்திரனுடைய 29ஆம் ஆண்டில் குமாரகாலன் வாசுதேவன் எனப்பட்ட உக்கலைச் சார்ந்த அரசியல் அதிகாரியான அதிசய சோழ மூவேந்தவேளான் என்பவன் அதனைக் கற்றளியாக்கினுன்.

இக் கோயிலில் பரகேசரிவர்மன் ஒருவனுடைய 10, 15ஆம் ஆண்டுகளைச் சார்ந்த சிதைவுற்ற கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இக் கல்வெட்டுகளில் பின்னது உத்தம சோழன் காலத்தது என்று முடிவு செய்துள்ள கல்வெட்டிலாக்காவைச் சேர்ந்த ஸ்ரீலக்ஷ்மி நாரா யண ராவ் கூறுவன பின்வருமாறு : ‘இக் கல்வெட்டிலும் பரகேசரிவர்ம னுடைய 16ஆம் ஆண்டைச் சேர்ந்ததாகிய மற்ருெரு கல்வெட்டிலும் உக்கல்—சிவசூளாமணி மங்கலம் எனவும் விக்கிரமாபரண சதுர்வேதி மங்கலம் எனவும் குறிக்கப்பட்டுள்ளது. மூன்ரும் கிருஷ்ணனுடைய 16ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டுகளிலும் இதே இரண்டு பெயர்களே காணப்படுகின்றன. ஆனுல் முற்பட்ட மன்னனுன முதல் ஆதித்தன் ஆட்சியில் இவ்வூர் சிவசூளாமணிமங்கலம் என்ற அபராசித சதுர்வேத மங்கலம் என்றே வழங்கப்பட்டுள்ளது.

இவற்றை நோக்க அபராசித சதுர்வேதி மங்கலம் என்ற பெயர் முதல் ஆதித்தனுடைய காலத்திற்கும் மூன்றும் கிருஷ்ணனுடைய காலத்திற்கும் இடையே முதற் பராந்தகனுடைய விருதுப் பெயர்கள் பலவற்றில் ஒன்ருல் விக்கிரமாபரண சதுர்வேதி மங்கலம் என்று வழங்கப்பட்டிருத்தல் வேண்டும்.'

கம்பவர்மனுடைய கல்வெட்டுகள் இரண்டிலும் இவ்வூர் உக்கல் (உற்கல்) என்றே வழங்கப்பட்டுள்ளது. முதல் ஆதித்தனுடைய 23ஆம் ஆண்டில் இவ்வூர் சிவசூளாமணி மங்கலம் என்ற அபராசித சதுர்வேதிமங்கலம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. முதற் பராந்தகன் காலத்திலிருந்து முதல் இராசேந்திரன் காலம்வரை எல்லாக் கல்வெட்டுகளிலும் இவ்வூர் 'சிவசூளா மணிமங்கலம் என்ற விக்கிரமா பரண சதுர்வேதிமங்கலம்' என்றே வழங்கப்படுகிறது. விக்கிரமா பரணன் என்பது முதற் பராந்தகனின் விருதுப் பெயராகலாம் என்று கல்வெட்டிலாகாவினர் கூறுவது நமக்கும் உடன்பாடே. ஆனல் கல் வெட்டெழுத்தின் அமைப்பைக்கொண்டு சிறந்த கல்வெட்டறிஞரான ஊல்ஷ் (Hultzsch) என்பார் குறிப்பிட்ட விசயாலயன் காலத்த தெனப்படும் கல்வெட்டை நூறு ஆண்டுகளுக்குமேல் பிற்பட்டவனுன உத்தம சோழனுடையது என்று கொள்வது அவருடைய ஆராய்ச்சித் திறனுக்கு இழுக்குத் தேடுவதாகும். மேலும் இக் கல்வெட்டு விசயாலய னுடையது அன்று என்று காரணங்காட்டி நிறுவியது போலவே உத்தம சோழனுடையதுதான் என்பதற்குக் காரணங்காட்ட இயலவில்லை. பராந்தகனுடைய கல்வெட்டுகள் பல அடைமொழியின்றி உள்ளன என்பதை நாம் பார்த்திருக்கிறேம். ஆதலின் இவ்வூரிலுள்ள 15, 16ஆம் ஆண்டுப் பரகேசரிக் கல்வெட்டுகள் முதற் பராந்தகனுடை யனவே என்று கொள்வதில் தவறு ஒன்றுமில்லை. அதனுடன் அடுத்துக் காணப்படும் சிதைவுண்ட இராசகேசரியின் 17ஆம் ஆண்டுக் கல் வெட்டு, சுந்தர சோழன் காலத்தது என்று கொள்ளலாம்.

விஷ்ணு கோயிலை விசயாலயன் காலத்ததாகக் கொள்ள முடியாது போனுலும் அது முதல் ஆதித்தனுடைய 23ஆம் ஆண்டுக்கு முற் பட்டதாதல் தேற்றம். இதன் சுவர்களில் பல்லவ கம்பவர்மனுடைய 10ஆம் ஆண்டு (கி.பி. 888) 15ஆம் ஆண்டுக் (கி.பி. 893) கல் வெட்டுகள் காணப்படுவன கொண்டு இது பிற்காலப் பல்லவர் கோயில் எனினும் தவறில்லை.

இவ்வூர்ச் சபையினர் பலவகைப்பட்ட உரிமைகளைப்பெற்று ஊராட்சியைத் திறம்பட நடத்திவந்தனர் எனவும், இங்கிருந்த விஷ்ணு கோயிலை ஒட்டியே இவ்வூர் மக்களுடைய சமூக, ஆன்மிக, பொருளாதார, அரசியல் வாழ்க்கை வளம் பெற்றது எனவும், ஊரும்

கோயிலும் பிரிக்கமுடியாத அறவுணர்ச்சியால் பிணிக்கப்பட்டிருந்தன எனவும் உணர்கிறோம்.

இக் கோயில் பாழடைந்துவிட்டது. எனினும் கல்வெட்டுகள் நிரம்பியுள்ள மகாமண்டபமும் கருவறையும் சிதைவுறவில்லை. அங்குள்ள பழைய கற்களைக்கொண்டே பண்டைய கலைப்பாணியும் வரலாற்றுச் சிறப்பும் கெடாமல் கோயிலைப் புதுக்குதல் இயலும். நன்மக்கள் இச் செயலில் ஈடுபடுவாராக.

## தக்கோலம்

### ஜலநாதேசுவரர் கோயில் திருவூறல் மகாதேவர்:

செங்கற்பட்டு மாவட்டத்தைச் சார்ந்த தக்கோலம் காஞ்சிபுரத்திலிருந்து 6 கல் (9·6 கி.மீ.) தொலைவில் உள்ளது. பண்டைச் சோழர் வரலாற்றில் தக்கோலம் தனியிடம் பெற்றுள்ளது. அது 2000 ஆண்டுகளாகவே வரலாற்றுச் சிறப்புடையதாக விளங்கி வருகிறது. வட அமெரிக்காவில் குடியேறிய ஆங்கிலேயர் அங்குப் புதிய இங்கிலாந்து என்று குடியேற்றப் பகுதிக்குப் பெயரிட்டதுபோலவே, மலேயா தீபகற்பத்தில் குடியேறிய இந்தியர்கள் அங்குப் 'புதிய தக்கோலம்' என்ற பெயரில் புதிய ஊரை அமைத்தனர். கி.பி. 2ஆம் நூற்றுண்டைச் சார்ந்த டாலமி (Ptolemy) என்ற கிரேக்க நிலநூலாசிரியர் இவ்வூரை தகோலா என்று வழங்கியுள்ளர். கி.பி. 5ஆம் நூற்றுண்டைச் சார்ந்த மிலிந்த பன்ஹாவிலும் தக்கோலம் இடம் பெற்றுள்ளது.

புதிய தக்கோலம் சியாம் நாட்டைச் சார்ந்த தாகோபா (Takopa) மாவட்டத்திலுள்ளது. அது நாரணன் (கோப்ராநரை) என்ற பெயருடைய குன்றிற்கு எதிரே தக்கோலம் என்ற ஆற்றின் இடக்கரையில் அமைந்துள்ளது. அங்கு தமிழ்க் கல்வெட்டுடைய பாறை ஒன்றில் மூன்று சிற்பங்கள் கிடைத்துள்ளன. குன்றின் பெயர் நாரணன் என்று வழங்கப்படுவது, சிற்பங்கள் விஷ்ணு ஸ்ரீதேவி பூதேவி இவர்களைக் குறிப்பது, தமிழ்க் கல்வெட்டு ஒன்பதாம் நூற்றுண்டைச் சார்ந்ததாக இருப்பது, அது அவனி நாரணன் என்ற விருதுப் பெயருடைய மூன்றும் நந்திவர்மன் பெயரால் தஞ்சை மாவட்டத்து வைணவத் திருப்பதியான நாங்கூரைச் சார்ந்த தலைவன் ஒருவன் குளம் ஒன்றை வெட்டுவித்து, அதனை மணிக்கிராமத்தார் என்ற வணிகக் கூட்டத்தினர் இராணுவப் பாடியில் தங்கியிருக்கும் சேனாமுகத்தார் ஆகியவர் பராமரிப்பில் விடுத்த செய்தியைக் குறிப்பிடுவது என்பனவற்றைக்கொண்டு மலேயாத் தீபகற்பத்தில் கி.பி. 9ஆம் நூற்றுண்டில் வைணவ சமயத்தைச் சார்ந்தவரும், திருமாலுக்குக்

கோயில் கட்டி வழிபட்டவருமான ஒரு கூட்டத்துத் தமிழக மக்கள் குடியேறி வாழ்ந்தனர் எனவும், அம் மக்களுள் ஒரு சாராரான மணிக் கிராமத்தார் என்ற வணிகக் குழுவினர் வேற்று நாடுகளில் வாணிப நிலையங்களை நிறுவினர் எனவும், அவர்கள் தமக்கும் தம் வணிகத் துறைக்கும் காவலாக வீரர்குழுவைப் பெற்றிருந்தனர் எனவும், அக் காலத்தில் இந்திய வணிகர் குழுவினருக்கு வேற்று நாட்டில் அத் தகைய மேதக்க தனிச் சலுகை வழங்கப்பட்டது எனவும் உணர் கிறோம். கங்கையும் கடாரமும் கொண்ட சோழனான முதல் இராசேந்திரனுடைய 18ஆம் ஆண்டில் (கி.பி. 1030) அவனுடைய மெய்க்கீர்த்தியில் கல்வியில் வல்ல சான்றோரால் புகழப்படுவது மேம் பட்ட தக்கோலம் என்ற ஊராகும் என்ற கருத்தில் 'கலைத்தக்கோர் புகழ் தலைத்தக்கோலம்' என்ற அடி காணப்படுகிறது.

தமிழகத்துத் தக்கோலத்தில் கி.பி. 9ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பழங் கோயிலொன்றுள்ளது. அதன்கண் முதல் ஆதித்தனுடைய தொண்டைநாட்டு வெற்றிக்குப் பிற்பட்டனவான 21, 24ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. அரை நூற்றாண்டுக்குப் பின் இத் தக்கோலத்திலேயே கன்னரதேவன் என்ற இராஷ்யடிகூட மன்னனான (மூன்றாம் கிருஷ்ணன் முதல் பராந்தகனுடைய முதல் மகனான) மும்முடிச் சோழ இராசாதித்தனைப் போர்க்களத்தில் கொன்று (கி.பி. 949) சோழ நாட்டின் வட பகுதியைக் கைப்பற்றி, ஏறத்தாழக் கால் நூற்றாண்டு அப் பகுதியை ஆண்டான். ஆதகூர்க் கல்வெட்டில் மூன்றாம் கிருஷ்ணனுடைய சிற்றரசரான பூதகன் என்பான் இராசாதித்தனைத் தக்கோலத்தில் கொன்றான் என்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. தக்கோலம் தென்னிந்தியாவில் ஒரு தனிச் சிறப்பு வாய்ந்த இடம் என்றும், அங்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகள் சோழர்கள், அவர்களுடைய சமகால மன்னர்கள் ஆகியவர் வாழ்க் கையில் பெரிய மாறுதல்களை ஏற்படுத்தி, வரலாற்றையே திருப்பி யுள்ளன எனவும் அறிகிறோம்.

முற்காலத்தில் இவ்வூரில் மூன்று கோயில்கள் இருந்தன. தற் போது பாழடைந்த நிலையிலுள்ள விஷ்ணு கோயிலின் சுவரில் காணப் படும் முதல் இராசேந்திரனுடைய கல்வெட்டொன்றில் அக் கோயிலின் இறைவர் 'இராசராசத் திருநாராயண விண்ணகர ஆழ்வார்' என்று முதல் இராசராசன் பெயரால் அழைக்கப்படுவதால் அக் கோயில் முதல் இராசராசன் காலத்தில் எடுப்பிக்கப் பட்டதாகலாம்.

மற்றொரு சிவன் கோயில் பாலேசுவரர் கோயில் என்று வழங்கப் பட்டது. அதன் சுவரில் உள்ள மூன்று கல்வெட்டுகளும் முறையே முதல் இராசேந்திரன், விக்கிரம சோழன், திரிபுவன இராசேந்திர

சோழன் (இரண்டாம் இராசேந்திரன் போலும்) ஆகியவர் காலத்தைச் சேர்ந்தவை. முதல் கல்வெட்டுத் திருப்பாலூறல் மூமலை யீசுவரத்து மகாதேவருக்குக் காலைப் பூசனைக்கு அபிடேகத்தின் பொருட்டு 32 பசுக்கள் தானமாக விடப்பட்ட செய்தியைக் குறிக்கிறது. திருப்பாலூறல் தக்கோலத்தின் ஒரு பகுதி எனவும், அங்கிருந்த இயற்கை ஊற்றொன்றின் நீர் பால்போல வெண்மையதாயிருந்ததால் அப் பகுதிக்குத் 'திருப்பாலூறல்' என்ற பெயர் ஏற்பட்டது எனவும் கூறுப. இவ்வறக்கட்டளை முதல் இராசேந்திர சோழனுடைய தாயாரின் நினைவு குறித்து வழங்கப் பட்டதெனவே, இக் கோயில் முதல் இராசேந்திரன் காலத்தை ஒட்டியதாக இருக்கலாம்.

தக்கோலத்திலுள்ள மூன்று கோயில்களிலும் மிகப் பழைமை யானதும் முக்கியமானதும் 'ஜலநாகேசுவரர்' கோயில் என்று தற்போது வழங்கும் 'திருவூறல் மகாதேவர்' கோயிலாகும். அது விசய நகர மன்னர் காலத்தில் நந்தி தீர்த்தம் என வழங்கப்பட்டது.

அக் கோயிலின் சுவரிலுள்ள கல்வெட்டுகள் 9ஆம் நூற்றாண்டு முதல் 16ஆம் நூற்றாண்டு வரை பரவியுள்ளன. ஒரே ஒரு கல்வெட்டே அண்மைக் கால எழுத்தில் அமைந்துள்ளது.

அங்குள்ள கல்வெட்டுகளில் மிகப் பழைமையானது அப் பகுதியை யாண்ட கோவிமலாதித்தன் என்ற வாணர் (பாணர்) தலைவனுடைய 3ஆம் ஆண்டைச் சார்ந்தது. இராசகேசரியின் பெயரில் அமைந்த மூன்று கல்வெட்டுகளின் காலத்தை வரையறுக்க முடியவில்லை. இக் கோயிலிலுள்ள மிகப் பழைய சோழர் கல்வெட்டுகளில் ஒன்று இராச கேசரிவர்மனுடைய 21ஆம் ஆண்டைச் சார்ந்தது. அது திருவூறலிலுள்ள கற்றளி மகாதேவருக்கு ஒரு விளக்கு எரிப்பதற்காக 30 கழஞ்சு பொன் வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. பழைய கல்வெட்டு களில் மற்றொன்று இராசகேசரியின் 24ஆம் ஆண்டைச் சார்ந்தது. இவ் விரண்டும் முதல் ஆதித்தன் காலத்தனவாகும். இவ் விருபத்து நான்காமாண்டுக் கல்வெட்டு மாரமரையருடைய புதல்வனான இரண்டாம் பிருதிவீபதி திருவூறல் மகாதேவருக்கு ஒரு சூரியகிரகண தினத்தன்று ஒரு வெள்ளிக் கெண்டி வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

ஆதித்தனின் 24ஆம் ஆண்டுக் கல்வெட்டு :

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோவிராசகே
2. சரி பன்மர்க்கு யாண்டு
3. இருபத்து நாலாவது ஆ
4. னித்தலைப் பிறையில்

5. நீண்டின சூரிய கிரஹணத்
6. து நாளன்று திருவூறல் மாதேவ
7. ர்க்கு மாரமரையர் மகனூர்
8. பிரிதிபதியார் குடுத்த வெ
9. ள்ளிக் கெண்டி நிறை முன்னூ
10. ற்று ஒரு பத்தேழு கழஞ்சு
11. இது பன்மாஹேசுவார ரக்ஷை 5—1897

திருப்புறம்பியப் போரில் அபராசித பல்லவனுடைய பக்கத்தில் இருந்து வரகுணபாண்டியனோடு போரிட்ட கங்க குலத்தலைவனை முதல் பிருதிவீபதியின் பெயரனை இவ்விரண்டாம் பிருதிவீபதி முதல் பராந்தகனுடைய சிற்றரசனாகி அவனிடம் நன்றி யறிதலோடு பழகி, அவன் வாணர்களுடைய நாட்டின்மீது படையெடுத்தபோது அவன் பக்கம் உதவியாகச் சேர்ந்து வாணர்களையும் அவர்களுக்கு உதவிய இரட்டமன்னனான இரண்டாம் கிருஷ்ணனையும் திருவல்லப் போரில் முறியடித்த வீரத்தைப் பாராட்டி, அவனை முதற் பராந்தகன் வாண நாட்டுச் சிற்றரசனாக்கி, அவனுக்குச் செம்பியன் மாவலி வாணராயன் என்ற பட்டமும் வழங்கினான் என்று வரலாறு கூறுகிறது.

முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகள் அவனுடைய 7ஆம் ஆண்டு முதல் 35 ஆம் ஆண்டுவரை பரவிக்கிடக்கின்றன. இங்குள்ள பெரிய குளத்தில் படகொன்று செலுத்துவதற்கு நங்கை ஒருத்தி நன்கொடை வழங்கினாள். மற்றொருத்தி அக் குளத்தை நன்முறையில் பராமரிக்க நிவந்தம் அளித்தாள். 24ஆம் ஆண்டுக் கல்வெட்டு இறைவனுடைய கவசத்திற்காக 455 கழஞ்சு பொன் வழங்கப்பட்ட செய்தியை வெளியிடுகிறது.

சோழமன்னன் முதற் பராந்தகனுடைய மகளான வீரமகாதேவி இரட்டமன்னன் கோவிந்தவல்லவரையன் என்ற நான்காம் கோவிந்தனை மணந்தாள். அவன் மக்களிடையே நற்பெயர் பெறுததால் மூன்றும் அமோகவர்ஷன் அவன் நாட்டைக் கைப்பற்றி அவனை அப்புறப்படுத்தவே, அவன் வாணர் நாட்டின் எல்லையில் வாழலானான். இவ் வீரமாதேவி முதற் பராந்தகனுடைய 31ஆம் ஆண்டில் இவ்வூர் இறைவனுக்கு இரண்டு விளக்கு எரிப்பதற்கு நன்கொடை வழங்கி யுள்ளாள்.

கன்னரதேவனுடைய 27ஆம் ஆண்டில் (கி.பி. 967) தக்கோலம் சோழரிடமிருந்து இரட்டர்வசம் கைம்மாறியபோது, உள்ளூர் மடத்

தலைவர் ஒருவர் இவ் விறைவனுக்கு விளக்கெரிக்க நன்கொடை வழங்கினர்.

இக் கோயிலிலுள்ள கல்வெட்டுகள் பலவற்றில் மாசிமகப் பெரு விழாவும் அதனுடைய ஆறும் நாள் சிறப்பு விழாவும் குறிப்பிடப்பட்டுள்ளன.

இத் தக்கோலம் முதல் இராசராசன் காலத்தில் க்ஷத்திரிய சிகாமணிபுரம் எனவும், முதல் இராசாதிராசன் காலத்தில் இரட்டபாடி கொண்ட சோழபுரம் எனவும், முதற் குலோத்துங்கன் காலத்தில் பல்லவபுரம் எனவும் குலோத்துங்க சோழபுரம் எனவும், காஞ்சீபுரம் விசயகண்டகோபாலன் காலத்திலும் விசயநகர மன்னர் காலத்திலும் 'வட முடிகொண்ட சோழபுரம்' எனவும் வழங்கப்பட்டதாக அறிகிறோம்.

கல்வெட்டுகள் திருவூறல் மகாதேவர் கோயில் 16ஆம் நூற்றூண்டுவரை அரசர்கள் முதல் பொதுமக்கள்வரை எல்லோருடைய நன்கொடையையும் பெற்றுச் சிறப்புற்ற செய்தியைப் பரக்கக் குறிப்பிடுகின்றன.

இனி, தக்கோலத்திலுள்ள திருவூறல் மகாதேவர் கோயிலாகிய ஜலநாகேசுவரர் கோயில் அமைப்புப்பற்றி நோக்குவோம்.

இக் கோயில் கிழக்குப்பார்த்த சந்நிதியை உடையது. கருவறை சதுரமானது. அதன் பக்க அளவு 18 அடி 4 அங்குலம். அடித்தளம் 4 அடி 4 அங்குல உயரத்தில் அமைந்துள்ளது. அடித்தளத்தின் தொடக்கத்தில் யாளி வரிமானம் உள்ளது.

அர்த்தமண்டபம் கருவறையை ஒட்டி 16 அடி 2 அங்குலம் முன்னேக்கி அமைந்துள்ளது. அதன் முகப்பில் இரு துவாரபாலகர் சிலைகள் உள்ளன.

அர்த்தமண்டபத்தின் வெளிச் சுவர்களில் கணபதி, துர்க்கை அர்த்தநாரீசுவரர் என்ற சிலைகளும், கருவறையின் வெளிச் சுவர்களில் தடசிணுமூர்த்தி, விஷ்ணு, பிரமன் என்ற சிலைகளும் உள்ளன. அரைத் தூண்கள் 5 அடி உயரமுடையவை. கொடுங்கை மனிதத் தலையை நடுவில் கொண்ட கூடுகளால் அணி செய்யப்பட்டுள்ளது. அதன் ஓரங்களில் வட்டங்கள் செதுக்கப்பட்டுள்ளன. கொடுங்கையின் கீழ்ப் பூத கண வரிசையைக் காணலாம்.

இக் கோயில் ஒன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் வாணர் களால் (பாணர்கள்) எடுப்பிக்கப்பட்டுப் பின் முற்பட்ட சோழர் களால் சிறப்பிக்கப்பட்ட கட்டடத்தை உடையதாதல் வேண்டும்.

## திருவல்லம்

### வில்வநாதேசுவரர் கோயில் :

திருவல்லம் என்னும் வாணவரம் (பாணபுரம்) வடஆர்க்காட்டு மாவட்டத்தில் பாலாற்றின் உபநதியான நீவா நதி பாலாற்றோடு கலப்பதற்குச் சற்றுத் தூரத்தில் அமைந்துள்ள சிற்றூராகும். அவ்வூர் மேல்பாடி (மேற்பாடி)க்கு 6 கல் (9·6 கி.மீ.) தெற்கில் அமைந் துள்ளது. அவ்வூர் பண்டு 'தீக்காலி' என்றும், 'தீக்காலி வல்லம்' என்றும் வழங்கப்பட்டது. பாணர் அல்லது வாணர் என்ற சிற்றரசர் களின் கோநகராக அமைந்த காரணத்தால் பாணபுரம் என்றும் வாணபுரம் என்றும் வழங்கலாயிற்று. 'மாவலி வாணராயர் வடுகவழி பன்னிராயிரமும் ஆள' என்று காணப்படும் கல்வெட்டுத் தொடரால் பாணர்களின் நாடான பெரும்பாணப்பாடி என்பது 12,000 சிற் றூர்களை உடையது எனவும், அது ஆந்திர நாட்டை அடைவிக்கும் பெருவழிக்கு மேற்கில் அமைந்தது எனவும் அறிகிறோம்.

நீவா நதிக்கரையில் திருவல்லத்துக்கு ஒரு கல் வட கிழக்கில் அமைந்த கற்பாறை ஒன்றில், விசயநந்தி விக்கிரமவர்மன் ஆகிய இரண்டாம் நந்தி வர்மனுடைய 62ஆம் ஆண்டுக் (கி.பி. 793) கல் வெட்டு ஒன்று காணப்படுகிறது. அது மாவலி வாணராயர் ஆட்சியில் வாணபுரத்துப் பொற்கொல்லனான மாதன் மகன் அரிதீரன் என்பான் வாணபுரத்து 'வட சிகரக் கோயிலைப்' புதுக்குவித்து, அதற்கு இளங் கிழவர் மகன் மன்றுடி என்பவனிடமிருந்து அழிஞ்சிக்களம் பட்டி என்ற வயலை விலைக்கு வாங்கிக் கொடுத்த செய்தியைக் குறிப்பிடு கிறது. அவ் 'வடசிகரக் கோயில்' தற்போது சுவடற்றுப் போய் விட்டது.

இவ்விடத்திலுள்ள ஏனைய கல்வெட்டுகள் எல்லாம் வாணபுரத்துத் தென்சிகரக் கோயிலாகிய 'தென்தளித் தீக்காலிப் பெருமானடிகள்' கோயிலிலிருந்தே கிடைத்துள்ளன. வில்வமரத்தைத் தலவிருட்ச மாகக் கொண்டுள்ள அக் கோயில் தற்போது வில்வநாதேசுவரர் கோயில் என்றே வழங்கப்படுகிறது.

இக் கோயிலில் சோழர் காலத்துக்கு முற்பட்ட கல்வெட்டுகள் சில உள்ளன. கோயில் தளத்தில் புதைக்கப்பட்டுள்ள கல் ஒன்றில் காணப் படும் கல்வெட்டொன்று நீங்கலாக ஏனைய கல்வெட்டுகளெல்லாம்,



46. கணேசர்,
தக்கோலம்



47. விஷ்ணு,
தக்கோலம்



48, தட்சிணாமூர்த்தி,
தக்கோலம்



49. பிரமன்,
தக்கோலம்

50. ஸ்ரீவிமானம், (சிகரம்) திருவல்லம்





51. வீணாதரர், திருவல்லம்



52. தட்சிணாமூர்த்தி,
திருவல்லம்



53. துர்க்கை,
திருவல்லம்

கோயில் புதுக்கப்பட்டபின் அதன் சுவர்களில் மீண்டும் பொறிக்கப் பட்ட கல்வெட்டுகளேயாம். இக் கோயில் முதற் பராந்தகன் காலத் திற்கும் பின்னரும் முதல் இராசராசன் காலத்துக்கு முன்னரும் புதுக்கு விக்கப் பட்டதாதல் வேண்டும்.

மிகப் பழையதும் சுவையான வரலாறுடையதுமாகிய இக் கோயில் புதுக்கப்பட்ட காலம்பற்றி ஹுல்ட்ஷ் (Hultzsch) என்பார் குறிப் பிடுவன பின்வருமாறு:

'இக் கோயில் முதல் இராசராசனுடைய 7ஆம் ஆண்டிற்குமுன் புதுக்குவிக்கப் பட்டதாதல் வேண்டும். ஏனெனில், அவ்வாண்டில் அக் கோயிலுக்கு விஜயம் செய்த மதுராந்தகன் உத்தம சோழனுடைய மகனுன கண்டராதித்தன் திருத் தீக்காலிப் பெருமானடிகளுக்கு ஆயிரம் குடம் நிறையப் புனித நீரை அபிடேகம் செய்வித்தான். இச் செயல் கோயில் புதுக்குவிக்கப் பட்டபின் நிகழ்த்தப்படும் கும்பாபி டேக நிகழ்ச்சியைக் குறிக்கிறது. எனவே, இச் செயல் நிகழ்ந்த முதல் இராசராசனுடைய 7ஆம் ஆண்டிலோ, அதற்கு முன்னோ இக் கோயில் புதுப்பிக்கப்பட்ட செய்தி உறுதியாகிறது.'

முதல் இராசராசன் காலத்தில் அரசியலில் உயர் பதவி வகித்த அலுவலரான, மதுராந்தகன் கண்டராதித்தன் என்பவர், தமிழகத்தி லிருந்த கோயில்கள் பலவற்றையும் மேற்பார்வை செய்து வரவு செலவுக் கணக்குகளைத் தணிக்கை செய்து, குறைகள் இருப்பின் அவற் றிற்கு முடிவு காணும் உத்தமச் செயல் புரிந்து வந்தவராவர். அக் கண்டராதித்தன் இத் தீக்காலி வல்லக் கோயிலை மேற்பார்வையிட்ட செய்தி இவ்வேழாம் ஆண்டுக் கல்வெட்டால் அறியப்படுகிறது. அவர் இக் கோயிலுக்கு வந்த நாளன்று சந்திர கிரகணம் நிகழ்ந்தது. எனவே, அவ் வுத்தம தினத்தில் இறைவனுக்கு 1000 குடங்கள் புனித நீரால் அபிடேகம் செய்வித்தான் என்று இக் கல்வெட்டுக் கூறுகிறது. அவர் கோயிலில் தங்கியிருந்த காலத்தில், கோயிலின் அபிடேக ஆராதனைத் திட்டங்கள் மிகச் சுருங்கிய நிலையில் நிகழ்த்தப்பட்டதையும், கோயில் விளக்குகள் மிக மங்கலாக எரிக்கப்பட்டதையும் நோக்கிக் கோயிலின் விரிவான வரவு செலவுக் கணக்குகளைக் கொண்டுவரச் செய்து, உற்று நோக்கிய செய்தியைக் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. மேல் நிகழ்ந்த விவரம்பற்றிக் கூறும் கல்வெட்டுப் பகுதி பிற்காலத்து எடுக்கப்பட்ட கட்டடப் பகுதிக்குள் அடைபட்டுவிட்டதால் அதனை அறியக்கூட வில்லை. கண்டராதித்தன் செய்த முடிவு யாதாயினும் அவன் சந்திர கிரகணத்தன்று கோயிலுக்கு விசயம் செய்த செய்தி வெளிப்படை. கும்பாபிடேகம் போன்ற சிறந்த நற்காரியங்களை இந்துக்கள் பட்டினி கிடந்து மந்திரங்களை ஓதக்கூடிய கிரகண தினத்தன்று நிகழ்த்த மாட்

டார்கள் என்பதையும், அன்று இறைவனுக்குச் சிறந்த அபிடேக ஆரா தனங்கள் செய்வார்கள் என்பதையும் மேனுட்டாரான ஊல்ட்ஷ் என்பார் உணரார்; ஆதலின் அவன் அதனைக் கும்பாபிடேக தினமாகக் கொண்டு குறிப்பிட்ட செய்தி ஏற்றுக் கொள்ளத் தக்கதன்றுகிறது. எனவே, கோயில் புதுக்கப்பட்ட காலத்தைக் கோயிலின் சிற்ப அமைப்பு முதலியவற்றைக் கொண்டே கணக்கிட வேண்டியவராக உள்ளோம்.

அடுத்துத் தெள்ளாறெறிந்தவனுன மூன்றும் நந்திவர்மனுடைய 17ஆம் ஆட்சியாண்டில் (கி.பி. 852) ஆண்ட குறுநில மன்னனுன மாவலி வாணராயன் என்ற விக்கிரமாதித்த வாணராயனுடைய கல் வெட்டொன்று காணப்படுகிறது. மூன்றும் நந்திவர்மனுடைய சிற்றரசனுன விக்கிரமாதித்த வாணராயன் நந்திவர்மனுன காடு வெட்டிப் பேரரையன் இசைவு பெற்று ஐம்பூணி, விளத்தூர், அமரூன்றிமங்கலம் என்ற மூன்று ஊர்களையும் 'விடேல் விடுகு விக்கிர மாதித்த சதுர்வேதிமங்கலம்' என்ற ஏகக் கிராமமாக்கித் திருத்தீக் காலிப் பெருமானடிகளுக்கு அர்ச்சனுபோகமாக அளித்து, அவ் விடேல் விடுகு விக்கிரமாதித்த சதுர்வேதிமங்கலம் இக் கோயில் மகாதேவ ருக்கு ஆண்டுதோறும் 2000 காடி நெல்லும், 20 கழஞ்சு பொன்னும் காணிக் கடனுக இறுக்கவேண்டும் எனவும், அவ் வரும்படியில் 500 காடி திருவமிர்திற்கும், 600 காடி திருபுண்ணுழிகை உள்ளாராதிக்கும் சிவப்பிராமணருக்கும், 500 காடி திருப்பலி கொட்டுவாருக்கும், 400 காடி திருநந்தனவனம் அமைத்து மாலை தொடுப்பாருக்கும், திருப் பதியம் ஓதுவாருக்கும் கொள்ளவேண்டும் எனவும், 20 கழஞ்சு பொன்னையும் திருவிளக்கு எரிப்பதற்கும் ஏனைய செலவுகளுக்கும் கொள்ளவேண்டும் எனவும் ஏற்பாடு செய்த செய்தி அக்கல்வெட்டில் காணப்படுகிறது.

முதல் ஆதித்தன் காலத்ததாகிய சகரயாண்டு 810-ல் (கி.பி.888) மகாவலிவாணராயர் என்ற பட்டப் பெயர் குறிப்பிடப்பட்டு, இயற் பெயர் குறிக்கப்படாத வாணர் தலைவன் ஒருவனுடைய ஆட்சியில் காவிரிப்பாக்கமாகிய அவனி நாராயண சதுர்வேதி மங்கலத்து எட்டுக் கூரைச் சேர்ந்த மாத வக்கிரமவித்தன் என்ற அந்தணன் திருத்தீக் காலிப் பெருமானடிகளுக்கு நிசதம் உழக்கு ஆழாக்கு எண்ணெய் அட்டு, ஒரு நந்தாவிளக்கு எரிப்பிக்க 25 கழஞ்சு பொன்னை நிவந்தம் வழங்கிய செய்தி குறிப்பிடப்படுகிறது. இக் கல்வெட்டைக் கூர்ந்து நோக்கின் இக் காலத்தில் பல்லவர் ஆதிக்கம் மறைந்தமையும் வாணர்கள் தனியாட்சி செலுத்தத் தொடங்கியமையும், சோழ மன்னனுன முதல் ஆதித்தன் இப் பகுதியை இன்னும் கைப்பற்றுமை யும் போதரும். எனவே, ஆதித்தன் தொண்டை நாட்டின் இப் பகுதி

யைக் கைப்பற்றியமை கி.பி. 888-க்குப் பின்னரேயாம் என்பது இக் கல்வெட்டால் போதருகிறது.

இயற்பெயரும், தோன்றியகாலமும் இல்லாத மாவலிவாணராய ருடைய கல்வெட்டொன்று கச்சிப்பேட்டைச் சேர்ந்த ஒருவன் தீக்காலிப் பெருமானடிகளுடைய அர்ச்சனுபோகத்திற்கும் கோயிலில் விளக்கு எரிப்பதற்கும் ஒரு நிலத்தை நன்கொடையாக வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

முதல் விக்கிரமாதித்தன் ஆகிய வாணவித்யாதர வாணராயர் ஆட்சியில் அவன் தேவி தென்தளித்தீக்காலிப் பெருமானடிகளுக்கு ஒரு நந்தா விளக்கு எரிப்பதற்கு 20 கழஞ்சு பொன்னே உடலாக வைத்த செய்தி அக் கோயில் தளத்தில் பதிக்கப்பட்டுள்ள கற்பாறையில் பொறிக்கப்பட்டுள்ளது. அக் கோயிலிலுள்ள வேறு இரண்டு கல் வெட்டுகளை நோக்குவோம்.

மேலைக் கங்கநாட்டைக் குணிலபுரத்தைத் (குவலாலபுரம் என்னும் கோலார்) தலைநகராகக் கொண்டு ஆண்ட ஸ்ரீநாதர் என்று வழங்கப் பட்ட சிவமகாராசப் பெருமானடிகளின் மகனை பிருதிவீபதியரையர் என்ற முதலாம் பிருதிவிபதியின் மகளாரும் வாண வித்தியாதரர் என்ற வாணராயரின் பெருந்தேவியாருமான வாணமகாதேவியார் திருத்தீக்காலிப் பெருமானடிகளுக்கு ஒரு நந்தா விளக்கு அளித்த செய்தியை முதற் கல்வெட்டும் அதே வாணமகாதேவியாரான குந்தவையார் அதே மகாதேவருக்கு விளக்குகளுக்காக 40 கழஞ்சு பொன் வழங்கிய செய்தியை இரண்டாம் கல்வெட்டும் குறிப்பது கொண்டு இக் கோயில் தொடக்கத்தில் வாணர்களால் கட்டப்பட்ட கோயிலாதல் கூடும் என்று கருதப்படுகிறது.

இக் கோயிலில் உள்ள நகுளீசுவரர் ஆலயச் சுவரில் முதற் பராந்தகனுடைய 4ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் காணப்படுவது கொண்டு, தொண்டை நாட்டின் பெரும்பகுதி முதல் ஆதித்த னுடைய 21 முதல் 27க்கு இடைப்பட்ட ஆட்சியாண்டுகளுக்குள் சோழர்கள் கைக்கு மாறியிருக்கவேண்டுமெனவும், ஆதித்தனுடைய ஆட்சியின் பிற்பகுதியில் வாணருடைய பெரும்பாணப்பாடி சோழப் பேரரசின் ஒரு கூறாக ஆகியிருக்க வேண்டும் எனவும் உணர்கிறோம். வாணர்கள் காலத்ததாகிய இக் கோயில் உத்தம சோழன் காலத்தில் புதுப்பிக்கப்பட்டிருக்கலாம். கோயிலுடைய அமைப்பு முதல் இராச ராசன் காலத்துக்கு முற்பட்டது என்று கொள்வதில் தடையொன்று மில்லை,

இராசராசனுடைய 7ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில் திருத்திக்காலி ஆழ்வார் கூத்தப்பெருமானடிகளுவடய தேவியாரான உமா பட்டாரிகை பிரதிட்டிப்பிக்கப்பட்ட செய்தி குறிக்கப்பட்டுள்ளது.

**திருவையா ஈசுவரம் :**

முதல் இராசராசன் ஆட்சியில் வில்வநாதேசுவரர் கோயிலுக்குத் தென்புறத்தில் 'திருவையா ஈசுவரம்' என்ற கோயில் எடுப்பிக்கப் பட்டது. வாணபுரத்து ஊர்ச் சபையினர் திருத்திக்காலிப் பெருமானடிகள் கோயிலுக்குத் தெற்கிலுள்ள திருவையா ஈசுவரத்துக்குத் தன் தந்தை பெயரால் அர்ச்சனுபோகம் வழங்குவதற்கு, கங்கு மரபைச் சார்ந்த சிவ மகாராச திருவையன் என்பவன் மகனுன சங்கர தேவனிடம் 700 குழி தரிசு நிலத்தை விற்ருர் என அறிகிறேம். முதல் இராசேந்திரனுடைய ஆட்சியில் வாணபுரத்து ஊர்ச் சபையினர், மேல் குறிப்பிடப்பட்ட சங்கர தேவனுடைய மகனுன, சிவ மகாராச வைதும்பன் சங்கர தேவன் சோமநாதன் என்பவனிடம் 1000 குழி நிலத்தை விற்ருர் எனவும், அவன் திருவல்லமுடையார் கோயிலுக்குத் தென்புறத்தில் அமைந்த, தன் குடும்பத்தவரால் எடுப்பிக்கப்பட்ட திருவையா ஈசுவரத்துக்கு அந் நிலத்தை வழங்கினுன் எனவும் கல் வெட்டுக் குறிப்பிடுகிறது. இக் கோயிலுக்குச் சோழர்களுடைய ஆட்சியின் இறுதிக் காலம் வரை மன்னர் பலரும் வழங்கிய நிவந் தங்கள் பல உள.

**வாணபுரத் தென்சிகரக் கோயில் :**

கோயிலின் அடித்தளம் வேலைப்பாடின்றி அமைந்துள்ளது. கருவறை ஒவ்வொரு பக்கமும் 12 அடி 10 அங்குலம் கொண்ட சதுரமாக உள்ளது. 4 அடி 2 அங்குலம் நீளமுள்ள அந்தராளம் கருவறையையும் அர்த்தமண்டபத்தையும் இணைக்கிறது. அர்த்தமண்டபம் அந்தராளத் திற்கு வெளியே 12 அடி 2 அங்குலம் முன்னேக்கி அமைந்துள்ளது. அதற்கும் முன்னர் 37 அடி நீளமும் 32 அடி அகலமும் உடையதாய் நடுவே ஆறு தூண்களால் தாங்கப்படும் முகமண்டபம் உள்ளது. அர்த்தமண்டபத்தின் முகப்பில் இரண்டு துவாரபாலகர் சிலைகள் உள்ளன.

கருவறை, அந்தராளம் இவற்றின் வெளிச் சுவர்களில் தேவ கோஷ்டங்கள் உள்ளன. இவற்றில் விநாயகர், தட்சிணுமூர்த்தி, விஷ்ணு, பிரமன், துர்க்கை என்ற சிலைகள் உள்ளன.

தேவகோஷ்டங்கள் உச்சியில் சிற்பங்கள் பல கொண்ட மகர தோரணங்களால் அணி செய்யப்பட்டுள்ளன. விஷ்ணுவின் தேவ

கோஷ்டத்து உச்சியில் நடனமாடும் கூத்தப்பிரான் சிலை, பிரமனுடைய தேவகோஷ்டத்து உச்சியில் ரிஷி பத்தினியர்களோடு கூடிய பிட்சாடனர் சிலை, துர்க்கையின் தேவகோஷ்டத்து உச்சியில் இராவணனுக்கிரஹமூர்த்தி சிலை என்பனவற்றைக் காண்கிறோம்.

இக் கோயிலின் தென்புறத் தாழ்வாரத்தில் பழைய விஷ்ணு, பழைய பிரமன் சிலை என்பன காணப்படுகின்றன. வடபுறத்தில் சண்டேசுவரரின் தேவகோஷ்டம் காணப்படுகிறது.

நகுளீசுவரர் கோயில் என்பது முதற் பராந்தகன் காலத்தில் கோயில் பிராகாரத்தில் எடுப்பிக்கப்பட்டதொரு சிறு கோயிலாகும். அதன் சுவர்களில் பிரமன், துர்க்கை என்ற தேவகோஷ்டச் சிலைகள் உள்ளன. நகுளீசுவரர் கோயில் தற்போது வகுளீசுவரர் கோயில் என்று வழங்கப்படுகிறது. அதற்கு எதிர்த்தாற்போல எடுப்பிக்கப்பட்டுள்ள அருணசலேசுவரர் கோயில் தாழ்வாரத்தில் இரு சிறிய துவாரபாலகர் சிலைகள் காணப்படுகின்றன.

மூலத்தான விமானத்தின் கிரீவம் மிக கவர்ச்சிகரமாக உள்ளது. இதன்கண் இந்திரன், வீணதர தட்சிணமூர்த்தி, விஷ்ணு, பிரமன் என்ற பெரிய உருச் சிலைகள் காணப்படுகின்றன. இச் சிலைகளுக்கு இடையே பூதகணங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இவை யாவும் மிகச் சிறந்த சிற்ப வேலைப்பாடுடையவை. இவை ஒவ்வொன்றின்மேலும் கூடு அமைந்துள்ளது. இக் கூடுகளை உள்ளடக்கி எண்கோண வடிவமுள்ள சிகரம் அமைந்துள்ளது.

சிகரத்தின்மேல் அமைந்துள்ள தூபி புதியது. இக் கோயில் முற்பட்ட சோழர்கள் காலத்தில் வாணத் தலைவர்களால் எடுப்பிக்கப்பட்டு, முதல் இராசராசன் காலத்துக்கு முற்பட்டுப் புதுப்பிக்கப்பட்ட பழங் கோயிலாதல் வேண்டும்.

## திருக்கழுக்குன்றம்

### மூலத்தானப் பெருமானடிகள் :

திருக்கழுக்குன்றம் மிகப் பழையனவும் புனிதமானவையுமான கோயில்களைக் கொண்ட சிவத்தலமாகும். அது செங்கற்பட்டுக்குத் தென்கிழக்கே 9 கல் (14·4 கி.மீ.) தொலைவில் அமைந்துள்ளது. பல்லவர்களின் பண்டைக் கடல்துறைமுகமான கடல்மல்லை எனப்பட்ட மாமல்லபுரம் (மகாபலிபுரம்) அங்கிருந்து 6 கல் (9·6 கி.மீ.) தொலைவில் உள்ளது.

இங்குள்ள குன்றம் வேதமே குன்றுவடிவெடுத்து வந்ததாக ஆன்ஞேர்களால் கருதப்பட்டு, 'வேதகிரி' என்ற பெயரால் வழங்கப் படுகிறது. இக் குன்றிலுள்ள சிவபெருமான் கழுகாகச் சபிக்கப்பட்ட முனிவர் இருவரால் வழிபடப்பட்டு வருகிருர் என்று நன்மக்கள் கருது கின்றனர். இங்கு வரும் யாத்திரிகர்கள் நண்பகல் நேரத்தில் கழுகுகள் வருவதையும், அவற்றிற்குப் பூசாரி உணவு வழங்குவதையும் கண்டு மகிழ்கின்றனர்.

இக் குன்றிலேயே இரண்டு கோயில்கள் உள்ளன. இப் பாறையின் நடுவே கிழ்ப்புறத்தில் பல்லவர்கள் காலத்தில் குடைவிக்கப்பட்டதும் தற்போது 'ஒருகல் மண்டபம்' என்று வழங்கப் படுவதுமாகிய கோயில் உள்ளது. இவ்வொருகல் மண்டபம் கருவறையையும் இருதளங் கொண்ட முன் மண்டபத்தையும் கொண்டது. முன் மண்டபத்தை நான்கு சதுரத்தூண்களும் பக்கங்களில் அமைந்த நான்கு அரைத் தூண்களும் தாங்கி நிற்கின்றன. இக் குடைகோயிலின் கருவறையின் இரு மருங்கிலும் துவாரபாலகர் சிலைகள் காணப்படுகின்றன. இக் கோயிலின் நடுப்பகுதியின் பின்சுவரில் பிரமன், விஷ்ணு ஆகியவர்களின் சிலைகள் செதுக்கப்பட்டுள்ளன. முன் மண்டபத்தின் முகப்பின் இரு மருங்கிலும் அழகிய வேலைப்பாட்டு நுணுக்கங்களை உடைய இரு துவாரபாலகர் சிலைகளைக் காணலாம். 17ஆம் நூற்ருண்டில் இக் குடைகோயிலைக் காணவந்த உலாந்துக்காரர்கள் தம் பெயர்களை வெட்டுவித்த கல்லெழுத்துகளைத் தூண்களில் காண்கிருேம். ஆனுல் திருக்கழுக்குன்ற ஸ்ரீமலைமேல் மூலத்தானப் பெருமானடிகளுக்கு வழி பாட்டுப் புறமாக வாதாபிகொண்ட பல்லவ மன்னனுன நரசிம்ம வர்மனின் கொடையை விளக்கும் கல்வெட்டொன்று முன் மண்ட பத்தின் மேல்புறத்தின் இரண்டாம் தூணின் உச்சியின் கிழ்ப்புறத்தில் சிதைவுற்ற நிலையில் காணப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது. அது 'ஸ்ரீ திருக்கழுக்குன்றத்துப் பெருமானடிகளுக்குக் களத்தூர்க் கோட்டத்துத் திருக்கழுக்குன்றத்து ஸ்ரீமலைமேல் மூலத்தானத்துப் பெருமானடிகளுக்கு வழிபாட்டுப் புறமாக வாதாபி கொண்ட நரசிங்கப் போத்தரையர் வைத்தது' என்று காணப்படுகிறது.

இக் கல்வெட்டை நோக்கி இக் குடைகோயிவ் 7ஆம் நூற்ருண்டில் வாதாபி கொண்ட நரசிம்மனுல் குடைவிக்கப்பட்டதாதல் வேண்டும் எனவும், இங்கு எழுந்தருளியுள்ள இறைவர் 'ஸ்ரீமலைமேல் மூலத் தானத்துப் பெருமானடிகள்' என்று வழங்கப்பட்டார் எனவும், முதல் நரசிம்மன் அக் கோயிலுக்கு வழிபாட்டுப் புறமாக ஏதோ ஒரு நிலத்தை வழங்கினுன் எனவும் உணர்கிருேம்.

அடுத்து. மலையின் உச்சியில் கற்கோயில் ஒன்று எடுப்பிக்கப்பட் டுள்ளது. இதனை அரசியல் கல்வெட்டிலாகாவினர் மலைமேல் உள்ள

திருக்கழுக்குன்றமுடைய நாயனுர் கோயில் எனவும், வேதகிரிக் கோயில் எனவும் குறிப்பிடுகின்றனர். இக் கோயில் ஒரு கற்றளி. சுவர்களின் உட்புறத்தில் பல சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. மேற்குப் புறச்சுவரில் சிவபெருமான் பார்வதி இடையே முருகன் என்ற வடிவமுடைய சோமாஸ்கந்தர் சிற்பம் காணப்படுகிறது. சோமாஸ்கந்தரின் தென்புறம் பிரமனும், வடபுறம் விஷ்ணுவும் சிவபெருமானின் திருவடியின்கிழ் மார்க்கண்டேயரும் காட்சியளிக் கின்றனர்.

வடபுறச்சுவரில் யோக தட்சிணுமூர்த்தியின் சிலையும் ஒருகால் கழுகாகுமாறு சபிக்கப்பட்டு நாடோறும் திருக்கழுக்குன்றத்து இறைவனை வழிபடுவாராகக் கருதப்படும் முனிவர்களின் சிற்பங்களும் காணப்படுகின்றன. அல்லது முனிவர்கள் அறவுரை கேட்கும் நிலை யோடு தென்புறச் சுவரில் அர்த்தநாரீசுவரருடைய உருவம் காணப் படுகின்றது.

சோமாஸ்கந்தர் உருவங்களை அமைப்பதும். பக்கத்தில் சிங்கத் தூண் ஒன்று அமைந்திருந்ததும் ஆகிய இச் செய்தியைக் கொண்டே இக் கற்றளி எட்டாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் ஆண்ட இரண் டாம் நரசிம்மவர்மன் (கி.பி. 695–722) எனப்படும் இராசசிம்மன் காலத்தது என்று உறுதி செய்யப்படுகிறது.

குன்றின் அடியில் பெரிய மண்டபங்களும் கோபுரங்களும் மதில் களும் கொண்ட பக்தவத்சலர் கோயில் என்ற பெரிய கோயில் காணப்படுகிறது. அதன் இரண்டாம் பிராகாரத்தின் முகப்பில் கி.பி. 1251-ல் அரியணையேறிய சடையவர்மன் சுந்தரபாண்டியனுடைய 9ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று காணப்படுகிறது. அக் கல்வெட்டு திருக்கழுக்குன்றத்திலுள்ள உடையார் திருக்கழுக்குன்றமுடைய நாய னுர் கோயிலைச் சார்ந்த ஆதிசண்டேசுவ தேவரை உள்ளிட்ட தேவ கன்னிகள் பாண்டிய மன்னனுடைய அரசியல் அதிகாரி ஒருவனிடம் நாயனுர் பொன்னிட்டீசுவரமுடைய நாயனுரின் கோயிலைக் கட்டுதல், நந்தனவனம் அமைத்தல், கோயிலைச் சுற்றி விடுகள் கட்டுதற்குரிய நிலம் வாங்குதல் ஆகிய செலவுகளுக்காக நிலங்கள் சிலவற்றை விற்ற செய்தியைக் குறிப்பிடுகிறது. பதின்மூன்றும் நூற்றுண்டில் எடுப்பிக் கப்பட்ட இப் புதுக் கோயிலே தற்போது ‘பக்தவத்சலர் கோயில்’ என வழங்கப்படுகிறது ஆனுல் இக் கோயிலின் பழைய கல்வெட்டுகள் இக் கோயிலின் கருவறைச் சுவர்களில் காணப்படாமல் இக் கோயிலின் இரண்டாம் பிராகாரத்தின் வடபுறத்தில் உள்ள ‘திருவாபரணக் கொட்டடி’ என்ற கட்டடத்தில் காணப்படுகின்றன. இத் திருவாபர ணக் கொட்டடி ஒன்பதாம் நூற்றுண்டைச் சார்ந்த பண்டைக்

கோயில்களின் அமைப்பில் பெரும்பான்மையைக் கொண்டுள்ளது. அது பண்டைக் கோயிலின் கருவறையை ஒத்துள்ளது எனலாம். அரைத் தூண்கள் சிற்ப வேலைப்பாடுகளின்றிக் காணப்படுகின்றன. ஒன்பதாம் நூற்றாண்டுக் கோயில்களில் காணப்படுவன போலத் தேவகோஷ்டங்களில் கணேசர், தட்சிணாமூர்த்தி, விஷ்ணு, பிரமன், துர்க்கை ஆகிய சிலைகள் உரிய இடங்களில் காணப்படுகின்றன. பல செய்திகளில் பிற்பட்ட பல்லவர் காலத்ததாகிய திருத்தணி வீரட்டானேசுவரர் கோயிலை அது ஒத்திருக்கிறது. உச்சியில் பூதகண வரிசை காணப்படுகிறது. தற்போது கொடுங்கை, கிரீவம், சிகரம், தூபி என்பன காணப்படவில்லை. இவ்வூரிலுள்ள பழைய கல்வெட்டுகள் யாவும் இக் கோயிலின் சுவர்களிலேயே காணப்படுகின்றன அவை முதலாம் ஆதித்தனுடைய 27ஆம் ஆண்டு (கி.பி. 898) முதல் இரண்டாம் இராசாதிராசனின் 9ஆம் ஆண்டு (கி.பி. 1171) வரை தொடர்ந்து காணப்படுகின்றன.

அங்குள்ள கல்வெட்டுகளில் மிக இன்றியமையாதது முதல் ஆதித்தனுடைய 27ஆம் ஆண்டைச் சேர்ந்தது. அக் கல்வெட்டுப் பின்வருமாறு: 'ஸ்வஸ்திஸ்ரீ கோவிராஜகேசரி பர்மற்கு யாண்டு இருபத்தேழாவது களத்தூர்க் கோட்டத்துக் களத்தூர்க் கூற்றத்துத் திருக்கழுக்குன்றத்து ஸ்ரீ மூலத்தானத்துப் பெருமானடிகளுக்கு இறையிலியாக ஸ்கந்த சிஷ்யர் கொடுத்தமையில் அப்படியே வாதாபி கொண்ட நரசிம்மப் போத்தரையரும் அப் பரிசே ரக்ஷித்தமையில் அந்துரையன் குணவன் மகன் புக்கன் விண்ணப்பத்தினுல் பூர்வ ராஜாக்கள் வைத்தபடியே வைத்தேன் இராசகேசரி பன்மனேன். இத் தன்மம் ரக்ஷித்தான் அடி என் முடிமேலன'.

இக் கல்வெட்டிலிருந்து தற்போது திருவாபரணக் கொட்டடி என்று வழங்கப்படும் பகுதியில் பண்டு பிரதிட்டிப்பிக்கப்பட்டிருந்த லிங்கம் திருக்கழுக்குன்றத்து 'ஸ்ரீ மூலத்தானத்துப் பெருமானடிகள்' என்று வழங்கப்பட்டது எனவும், அப் பெருமானுக்கு கி.பி. 5ஆம் நூற்றாண்டினனான ஸ்கந்த சிஷ்யன் என்ற பண்டைப் பல்லவமன்னனால் வழங்கப்பட்ட நிவந்தம் பற்றிய செய்தி வாதாபி கொண்ட நரசிம்மவர்மனால் புதுப்பிக்கப்பட்டது எனவும், அதுவே மீண்டும் இரண்டாம் முறையாகத் தொண்டைமண்டலம் கொண்ட இராசகேசரிவர்மனான முதல் ஆதித்தனின் 27ஆம் ஆண்டு இரட்சிப்பிக்கப் பட்டது எனவும் அறிகிறோம்.

இக் கல்வெட்டால் பழைய சிவன் கோயில் குன்றின் நடுவழியில் அமைக்கப்பட்டுள்ள குடைகோயிலன்று என்பதும், குன்றின் அடியில் அமைக்கப்பட்ட வேறொரு கோயிலாகும் என்பதும், ஸ்கந்த சிஷ்யன்

காலத்ததாகிய கோயில் தொடக்கத்தில் செங்கல்லால் கட்டப்பட்டு, ஆதித்தனுடைய 27ஆம் ஆண்டுக்குச் சற்று முற்பட்டு மீண்டும் கற்றளியாகப் புதுப்பிக்கப்பட்டது என்பதும், அது தெற்கு நோக்கி அமைந்திருந்தது என்பதும், இங்குள்ள கோயில்கள் பலவற்றுள்ளும் அதுவே பழமையானது என்பதும், இக் கல்வெட்டாராய்ச்சிக்கு உதவும் மிகப் பழைய கோயில்களில் அதுவும் ஒன்று என்பதும் உண ரப்படுகின்றன.

காலஞ்சென்ற வேங்கையா அவர்கள் எழுதியுள்ள கீழ்க்கண்ட குறிப்புகளால் இக் கோயிலும் பழுதுபட்டு மீண்டும் புதுப்பிக்கப் பட்ட செய்தி உணரப்படுகிறது :

'முதல் ஆதித்தன், முதற் பராந்தகன், கன்னரதேவன் ஆகிய வர்களுடைய கல்வெட்டுகள் பொறிக்கப்பட்ட சுவர்ப்பகுதியில் தமிழ் எண்கள் கொத்தர்களால் செதுக்கப்பட்டுள்ளன. அவை சுவரை இடித் துப் பழுது பார்த்துப் புதுக்குவதன்முன் கல்வெட்டு வரிசை தவரு திருப்பதற்காகச் செய்துகொண்ட அடையாளங்களாகத்தோன்றுகின் றன. புதிதாகச் சுவரெடுக்கும்போது கற்களை எவ் வரிசையில் அடுக்க வேண்டும் என்ற முறையை அந்த எண்ணிக்கைகள் குறிப்பிடுவன வாகலாம். 13ஆம் நூற்றுண்டில் பக்தவத்சலர் கோயில் எடுப்பிக்கப் பட்ட காலத்தை யொட்டி அச் சுவர் பழுது பார்க்கப்பட்டிருக்கலாம். கொடுங்கைக்குக் கீழுள்ள பூதகண வரிமானம் கூடக் கோணுத வகையில் அக் கற்கள் மீண்டும் அடுக்கப்பட்டமை போற்றற்குரிய செய்தியாகும். கல்வெட்டுத் தொடர்களும் தொடர்பு அருத வகையில் கற்கள் மீண்டும் இணைக்கப்பட்டுள்ளன. இதனுல் அக் காலத்தில் கல்வெட்டுகள் போற்றப்பட்ட செய்தி வலியுறுகிறது.'

வேளூர்ப்பாளையச் செப்பேடுகளைப் பதிப்பித்தவர் ஸ்கந்த சிஷ் யனைப்பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகிருர் : 'வீரகூர்ச்சன் நாகர் குலத் தலைவன் ஒருவனுடைய மகளை மணந்தான். அவ் விருவருக்கும் புதல்வனுகத் தோன்றிய ஸ்கந்த சிஷ்யன் சத்யசேனனிடமிருந்து கடிகை என்ற பகுதியைக் கைப்பற்றினுன்.'

'இந்த ஸ்கந்த சிஷ்யன் திருக்கழுக்குன்ற மூலத்தானப் பெருமா னுக்கு நிவந்தம் ஒன்று வழங்கினவனுகத் திருக்கழுக்குன்றக் கல் வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள பல்லவ மன்னனை ஸ்கந்த சிஷ்யன் ஆகலாம். ஸ்ரீவேங்கையா குறிப்பிடுவதுபோல ஸ்கந்த சிஷ்யனும் ஸ்கந்தவர்மனும் ஒருவராயின், நாம் இவனை இரண்டாம் ஸ்கந்த வர்மன் என்றே கொள்ளவேண்டும். அங்ஙனம் கொள்ளின், வேளூர்ப் பாளையச் செப்பேடுகள் இவனுடைய பிற்றோன்றல்களாகக் குறிப்

பிடும் இரு தலைமுறையினர் பெயர்களும், குமாரவிஷ்ணுவினுடைய சேந்தலூர்ச் செப்பேடுகள் குறிப்பிடும் பெயர்களும் ஒத்திருப்பதைக் காணலாம்.'

ஸ்ரீவேங்கடசுப்பையர் இந்த ஸ்கந்த சிஷ்யனும் வல்லத்தில் குடை கோயிலமைத்த ஸ்கந்தசேனனும் ஒருவரே என்று கொள்வதை ஸ்ரீகிருஷ்ணமாசார்லு அவ்வளவு பொருத்தமானதாகக் கொள்வதற்கில்லை என்று குறிப்பிடுகிறார். மேலும் ஸ்ரீவேங்கடசுப்பையர் ஸ்கந்த சிஷ்யன் காலத்து மூலத்தானப் பெருமானடிகள் கோயிலைக் குன்றில் குடையப்பட்டுள்ள ஒரு கல்மண்டபமாகக் கருதி மயங்குகிறார்.

இத் தவறான அடிச்சுவட்டிற்கு வித்திட்டவர் ஸ்ரீவேங்கையாவே யாவார். அவர் இந்தியக் கல்வெட்டுகளின் (Epigraphia Indica) மூன்றாம் தொகுதியில் 'திருக்கழுக்குன்றத்தில் இரு கோயில்கள் உள்ளன. முதலாவது திருக்கழுக்குன்றக் கிராமத்திலிருக்கும் வேதகிரீசுவரர் கோயில். மற்றொன்று பக்கத்துக் குன்றில் அமைந்த பக்தவத்சலர் கோயிலாகும். வேதகிரீசுவரர் கோயிலில் திருவாபரணக் கொட்டடி என்று தற்போது வழங்கும் அறையில் செதுக்கப்பட்டுத் தொடர்பாக அமைந்து காணப்படும் நான்கு கல்வெட்டுகளில் மூன்றினைப் படியெடுத்துச் சென்னைக் கிருத்துவக் கல்லூரி இதழில் வெளியிட்டுள்ளேன்' என்று குறிப்பிட்டுள்ளார்.

குன்றின் உச்சியில் உள்ள கோயிலின் பெயர் வேதகிரீசுவரர் கோயில் என்பது. அடிவாரத்தில் உள்ள கோயில் பக்தவத்சலர் கோயில் என்பது. இதனை ஸ்ரீவேங்கையா அவர்கள் சரியாக மனத்திற் கொள்ளவில்லை. இப் பிழை தென்னிந்தியக் கல்வெட்டுகளின் (South Indian Inscriptions—Text Vol. V) ஐந்தாம் தொகுதியிலும் காணப்படுகிறது. செங்கற்பட்டு மாவட்டத்துச் செங்கற்பட்டுத் தாலுக்காவைச் சேர்ந்த திருக்கழுக்குன்றத்து வேதகிரீசுவரர் கோயில் சுவர்களில் உள்ளனவாகப் பக்தவத்சலர் கோயிலின் திருவாபரணக் கொட்டடியிலுள்ள கல்வெட்டுகள் குறிக்கப்பட்டுள்ளன.

இக் கருத்துப் பின் வெளியிடப்பட்ட கல்வெட்டறிக்கைகளிலும் பிறழ உணர்ந்தவாறே வெளியிடப்பட்டுள்ளது. பிற்பட்ட பல அறிஞர் நூல்களும் இப் பிறழ்பட்ட கருத்தை உட்கொண்டு வரையப் படலாயின.

காலஞ்சென்ற லாங்ஹர்ஸ்ட்டு (A. H. Longhurst) என்பவருடைய கருத்துகள் பின்வருவன:

'திருக்கழுக்குன்ற வேதகிரீசுவரர் கோயிலின் திருவாபரணக் கொட்டடியின் மேலைச் சுவரில் காணப்படும் கல்வெட்டு ஒன்று மூலத்தானர் கோயிலுக்கு ஸ்கந்த சிஷ்யன் என்ற பல்லவ மன்னனால் கொடுக்கப்பட்டு முதல் நரசிம்மனால் புதுப்பிக்கப்பட்ட நிவந்தம் ஒன்று இராசகேசரி வர்மன் முதல் ஆதித்தனால் மறுபடியும் புதுப் பிக்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. ஒருகல் மண்டபத்திலுள்ள கல்வெட்டு, இராசகேசரி வர்மனுடைய கல்வெட்டில் குறிக்கப் பட்டுள்ள மூலஸ்தானர் கோயிலுக்கு வழங்கப்பட்ட நன்கொடையை முதல் நரசிம்மன் புதுக்கிய செய்தியைக் குறிக்கலாம். எனவே, ஒரு கல்மண்டபத்தின் கருவறையிலிருந்து கவனிப்பாரற்றுப்போன லிங்கத்தை உடைய அப் பகுதியே பழைய மூலத்தானமாக இருக் கலாம்.'

குன்றின் அடிவாரத்திலுள்ள வேதகிரீசுவரர் கோயில் பிற்பட்ட காலத்தில் புதுக்கப்பட்ட இணைப்பினைக்கொண்ட மிகப் பழைய கோயிலாகும்.

ஒருகல் மண்டபத்திலுள்ள கவனிப்பாரற்றுப்போன கருவறை ஸ்கந்த சிஷ்யன் காலத்தில் இருந்த அடிப்படையான மூலத்தான மாகும் என்பது தவறான கூற்றாகும்.

கங்குலி என்பாரும் கோஸ்வாமி என்பாரும் வரைந்த 'பல்லவர் காலக் கலைகள்' என்ற நூலில் திருக்கழுக்குன்றம் பற்றிய விரிவான குறிப்புக் காணப்படுகிறது. (The Art of the Pallavas—by G. C. Gangoly and A. Goswami) அதில் கூறப்படும் செய்தி பின்வருமாறு: 'வேதகிரி மலையில் இரண்டு குடை கோயில்கள் உள்ளன. கீழே உள்ள குடை கோயில் ஒருகல் மண்டபம் என்று வழங்கப்படுகிறது. அது அதிகச் சிற்ப வேலைப்பாடின்றி சாதாரணமாகக் காணப்படுகிறது. அக் குடை கோயிலில் காணப்படும் கல்வெட்டொன்று சிக்கலை அளிக்கிறது. மூலத்தானம் என்று வழங்கப்படும் இக் கோயிலுக்கு ஸ்கந்த சிஷ்யன் என்ற பல்லவ மன்னனால் வழங்கப்பட்ட நன்கொடை, பிறகு முதல் நரசிம்ம வர்மனால் புதுப்பிக்கப்பட்டு, மறுபடியும் சோழ மன்னன் ஒருவனால் மீண்டும் புதுப்பிக்கப்பட்ட செய்தியை அக் கோயில் கல் வெட்டொன்று குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டில் காணப்படும் ஸ்கந்த சிஷ்யன், முற்பட்ட பல்லவ செந்தலூர்ச் செப்பேடுகளில் குறிப்பிடப்படும் ஸ்கந்தவர்மனைக் குறிப்பிடுவதாயின், இக் கோயில் தென்னிந்தியாவிலுள்ள பண்டைய இந்துக் கோயில்களில் ஒன்று என்று கொள்ளவேண்டும்'.

'பல்லவ காலக் கலைகள்' என்ற நூல் குறிப்பிடுவதுபோல இக் குன்றில் குடைகோயில்கள் இரண்டில்லை. ஒருகல் மண்டபம் என்ற



ஒரே குடை கோயிலே உள்ளது. ஒருகல் மண்டபத்திலுள்ள முதல் நரசிம்ம வர்மனின் கல்வெட்டையும், கீழே உள்ள பக்தவத்சலர் கோயிலின் பிராகாரத்தில் உள்ள திருவாபரணக் கொட்டடியில் காணப்படும் ஸ்கந்த சிஷ்யன் பற்றிய செய்தி கூறும் கல்வெட்டையும் ஒன்றாகப் பிணைத்துக் கூறும் மயக்கச் செய்தியை இந் நூல் வெளியிடுகிறது.

திருக்கழுக்குன்றத்து மூலத்தானக் கோயில் பற்றி, 'பண்டை இந்தியா' (Ancient India) வைப்பற்றிக் கட்டுரைகள் வரைந்த ஸ்ரீ K. R. ஸ்ரீநிவாசன் என்பாருடைய 14ஆம் தொகுதியிலுள்ள கட்டுரையாகிய 'பல்லவர்களுடைய கட்டடக்கலை' என்பது வெளியிடும் செய்தி பின்வருமாறு :

'திருக்கழுக்குன்றத்து உச்சியில் காணப்படும் வேதகிரீசுவரர் கோயிலின் கருவறைச் சுவர்கள் மூன்று பெரிய பாறைகளால் ஆகியவை. மேற்பகுதி கற்பாறையால் மூடப்பட்டிருக்கிறது. பிற்பட்ட காலமாகிய சோழர் காலக் கோயில்களில் பலதிற வேலைப்பாடுகள் அமைந்த கற்றளங்களும் சுவர்களும் காணப்படும். சோழர்களுக்கு முற்பட்ட இப் பல்லவர் காலக் கோயிலின் கருவறை மூன்று பெரிய பாறைகளையே சுவர்களாகக்கொண்டு காணப்படுகிறது. கருவறையின் உட்புறம் பின்புறச் சுவரில் சோமாஸ்கந்தர் உருவமும் மற்றச் சுவர்களில் தட்சிணாமூர்த்தி, நந்தி, சண்டிகேசுவரர் முதலிய உருவங்களும் செதுக்கப்பட்டுள்ளன. இவை பரமேசுவரன் காலத்தைச் சேர்ந்தவை. இக் குன்றில் சற்றுக் கீழே அமைந்துள்ள மாமல்ல பல்லவனுடைய குடைகோயிற் சுவர்களில் காணப்படும் தம் குல முன்னவருள் ஒருவனான ஸ்கந்த சிஷ்யன் என்பவனால் செங்கல்லைக் கொண்டும், சுண்ணும்பைக் கொண்டும் எடுக்கப்பட்ட மூலத்தானர் கோயிலே இப் பாறைகளைக்கொண்டு கற்றளியாகப் புதுக்கப்பட்டதாகும். பரமேசுவரன் இக் கோயிலை எடுப்பித்தபோது பெரிய பாறைகளைச் சுவர்களாக அமைத்த காரணத்தால் சுவர்களுக்கு உறுதி தருவதற்காக அரைத் தூண்கள் முதலியவற்றை அமைக்கவேண்டிய தேவை இல்லாது போயிற்று. அடித்தளம், மேலுள்ள விமானப்பகுதி முதலியன செங்கற்களால் அமைக்கப்பட்டனவாகலாம். பழைய சாளுக்கியர் கோயில்களிலும் கருவறையில் மேற்றளத்தைக் கற்பாறையால் மூடி அதன்மேல் செங்கல்லால் விமானம் முதலியவற்றை எழுப்பிய முறையைக் காணலாம்.

மலையடிவாரத்துக் கோயிலிலுள்ள தென்புறம் நோக்கிய கோயில் தற்போது கோயில் கருவூலமாக விளங்குகிறது. இது பிற்பட்ட பல்லவரின் 'கஜபிருஷ்ட' (தூங்கானைமாடம்) விமானத்திற்கு ஒருதாரண

மாகும். ஆனால், தற்போது அதன் மேற்புறக் கட்டடங்கள் யாவும் உருவற்றுப் போய்விட்டன. அதன் எளிய அமைப்பை நோக்க அது வீரட்டானேசுவரர் கோயிலுக்குச் சற்று முற்பட்ட காலத்தில் நிருப துங்கன் ஆட்சியில் கட்டப்பட்டதாகத் தோன்றுகிறது.

ஸ்கந்த சிஷ்யன் செங்கல்லாலும் சுண்ணும்பாலும் கட்டியிருந்த மூலத்தானேசுவரமே பின் வேதகிரீசுவரமாகப் பரமேசுவரவர்மனால் புதுப்பிக்கப்பட்டது என்பதும் பிழைபட்ட கருத்தேயாகும். நன்கு தெளிவாக விளங்குவதற்காக என் கருத்துகளை மீண்டும் வரிசைப்படுத்திக் குறிப்பிடுகிறேன்.

1. திருமூலத்தானத்துப் பெருமானடிகள் கோயில் :

தற்போது திருக்கழுக்குன்ற மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ள பக்தவத்சலர் கோயிலின் இரண்டாம் பிராகாரத்திலுள்ள திருவாபரணக் கொட்ட்டி' என்று வழங்கப்படும் கட்டடமே பண்டைத் திருமூலத்தானத்துப் பெருமானடிகள் கோயிலாகும். இவ்வூரில் உள்ள மிகப் பழைய கோயில் இதுவே. இவ்வொருதளக் கற்றளியின் மேற்கட்டடங்கள் சிதைந்து போய்விட்டன. இதன் சுவர்களில் கீழ்க்கண்ட மன்னர்களின் கல்வெட்டுகளைக் காணலாம்.

இராசகேசரிவர்மனான முதல் ஆதித்தனின் 27ஆம் ஆண்டுக் கல்வெட்டு—இது மூலத்தானத்துப் பெருமானுக்குப் பல்லவ அரசனான ஸ்கந்த சிஷ்யன் வழங்கிய நன்கொடை. அது மாமல்லன் என்ற முதல் நரசிம்மவர்மன் காலத்தில் புதுப்பிக்கப்பட்ட செய்தி, முதல் ஆதித்தன் தொண்டைமண்டலத்தை வென்றபின் அவன் காலத்தில் அந் நன்கொடை இரண்டாம் முறையாகப் புதுப்பிக்கப்பட்ட செய்தி ஆகியவற்றைக் குறிக்கிறது.

இதே சுவரில் முதல் பராந்தகன், கன்னரதேவன், முதல் இராசராசன், முதல் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன், வீரராசேந்திரன், முதற் குலோத்துங்கன், விக்கிரமசோழன், இரண்டாம் இராசாதிராசன் ஆகியவர் காலத்துக் கல்வெட்டுகளும் காணப்படுகின்றன. சுருங்கச் சொல்லின் இங்குள்ள கல்வெட்டுகளின் காலம் ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதி முதல் 12ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி வரையில் நிலவியிருப்பதைக் காணலாம்.

2. ஒருகல் மண்டபம் அல்லது மலைமேல் மூலத்தானத்துப் பெருமானடிகள் கோயில் :

இது ஒரு குடைகோயில். இது மகேந்திரனுடைய குடைகோயில் பாணியில் உள்ளது. அவனால் தொடங்கப்பட்டு நரசிம்மன் காலத்தில்

முடிக்கப்பெற்றிருக்கலாம். முதல் நரசிம்மவர்மனின் சிதைவுற்ற கல்வெட்டொன்று இக் கோயிலை 'ஸ்ரீமலைமேல் மூலத்தானத்துப் பெருமானடிகள்' கோயில் என்று குறிப்பிடுகிறது. மலையின் அடிவாரத்தில் உள்ள கோயில் மூலத்தானத்துப் பெருமானடிகள் கோயில் என்பதும் இது மலைமேல் மூலத்தானத்துப் பெருமானடிகள் கோயில் என்பதும் குறித்துணரத்தக்கன.

3. மலைமேல் அமைந்துள்ள கற்றளி. வேதகிரீசுவரர் அல்லது திருக்கழுக்குன்றமுடைய நாயனார் கோயில் :

இது இரண்டாம் நரசிம்மன் எனப்பட்ட இராசசிம்மன் காலத்துக் கோயில். முதல் பரமேசுவரன் காலத்துக் கோயிலன்று. கருவறையில் சோமாஸ்கந்தர் வரிசைச் சிலைகளையுடைய கோயில்கள் யாவும் இராசசிம்மன் காலத்தனவே. அவனுக்கு முந்தியோ இரண்டாம் நந்திவர்மன் காலத்திற்குப் பிந்தியோ இச் சிலைகள் அமைக்கப் பெறவில்லை என்பது குறித்துணரத்தக்கது. எனவே, இது இராசசிம்மன் காலத்துக் கோயில் என்பது அறுதியிட்டுக் கூறத்தக்க உறுதியான செய்தியாகும். இதனைப் பக்தவத்சலர் கோயிலின் திருவாபரணக் கொட்டடியாகத் தற்போது வழங்கப்படும் பண்டைய மூலத்தானத்துப் பெருமானடிகள் கோயில், மலை நடுவில் குடையப்பட்ட ஒருகல் மண்டபமாகிய மலைமேல் திருமூலத்தானத்துப் பெருமானடிகள் கோயில் என்ற இரண்டிலும் வேறுபட்ட கோயிலாக உணரவேண்டும்.

4. பக்தவத்சலர் கோயில் :

இது மலையடிவாரத்தில் சடையவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் அவன் 9ஆம் ஆண்டிற்கு முன்பு (கி.பி. *1260*) கட்டப்பட்ட புதுக் கோயிலாகும். இக் கோயிலுக்குள் அகப்பட்ட ஸ்கந்த சிஷ்யன் காலத்ததான திருமூலத்தானத்துப் பெருமானடிகள் கோயில் பண்டைச் சிறப்பு இழந்து திருவாபரணக் கொட்டடியாகத் தற்போது பயன்பட்டு வருகிறது.[1]

திருக்கழுக்குன்றம் :

(*1*) இந் நூல் அச்சகம் செல்லுமுன் (K. R.) சீனிவாஸன் என்பவர் பல்லவர் குடபோகக் கோயில்கள் (Cave Temples of the Pallavas—by Sri K. R. Srinivasan, Archaeological Survey of India—pp. 100-107) என்ற நூலை ஆங்கிலத்தில் பிரசுரம் செய்துள்ளார். இந் நூலில் திருக்

[1] இக் கோயில்கள் பற்றிய விரிவான செய்திகள் யாவும், சென்னைப் பல்கலைக் கழகப் பத்திரிகையிலும் கீழ்த்திசைக் கலையாராய்ச்சிப் பத்திரிகையிலும் (பதினான்காம் தொகுப்பின் நான்காம் பகுதியில்) எம்மால் விரிவாக வெளியிடப்பட்டுள்ளன.

கழுக்குன்றக் கோயில்கள் சம்பந்தமான அவருடைய முடிவுகள் பின் வருமாறு :

திருக்கழுகுன்றத்து மலைமீதுள்ள கடவுளரை நாயன்மார்கள் மூவரும் பாடியுள்ளார்கள். மலையின் உச்சியிலே உள்ள கடவுளையே அப்பர் குறிப்பதால் அவர் குறிப்பிடுவது வேதகிரீசுவரரையே உணர்த்தும். இக் கோயில் அக் காலத்தில் சுடுமண்ணாலும், சுண்ணம் பாலும் கட்டப்பட்ட மண்டளியாக இருக்கலாம். இது முதல் பரமே சுவரவர்மன் காலத்தில் மூன்று கற்பலகைகளால் அமைந்த கோயி லாகக் கட்டப்பட்டிருக்க வேண்டும். கருவறையின் உட்புறத்துப் பின் சுவரில் சோமாஸ்கந்தர் சிலை உளதே இதற்குப் போதிய சான்றாகும். இப் பழைய தேவருக்கே முந்திய பல்லவ மன்னனான ஸ்கந்த சிஷ்யன் நிலதானம் செய்திருந்தான். இம் மூலசாஸனம் ஓலையிலோ, செப் பேட்டிலோ வரையப்பட்டிருக்கவேண்டும். பின்னால் வாதாபி கொண்ட நரசிம்மன் 'ஒருகல்' குகைக் கோயிலைக் குடைவித்தபோது இத் தானம் இவ்விரு கோயில்களிலும் எழுந்தருளியுள்ள கடவுளர் களுக்கும் உதவுமாறு அதை மாற்றி அமைத்தான். இக் கருத்தை ஒருகல் குடபோகத்திலுள்ள வாதாபி நரசிம்ம பல்லவனின் கல் வெட்டே வலியுறுத்தும். இக் கல்வெட்டில் முதலிரண்டு வரிகளில் கூறப்பட்டுள்ள திருக்கழுக்குன்றத்துப் பெருமானடிகள் என்னும் வாசகம் ஒருகல் மண்டபமாகிய இக் கோயிலில் குடிகொண்டுள்ள கடவுளரையும் 3-6 அடிகளில் கூறப்பட்டுள்ள 'திருக்கழுக்குன்றத்து ஸ்ரீ மலைமேல் மூலத்தானத்துப் பெருமானடிகள்' என்பது மலை உச்சியி லுள்ள வேதகிரிப் பெருமானையும் குறிக்கும். மலைமேலுள்ள கடவுளர் இருவருக்கும் பழைய பல்லவ மன்னர்கள் வழங்கிய கொடையையே சோழ இராசகேசரிவர்மரான முதலாம் ஆதித்தன் தொண்டை நாட்டை வென்ற பிறகு இதை ஊர்ச்சிதம் செய்து இங்கு மலையடி வாரத்தில் நிறுவப்பட்டதும், தூங்கானை மாட வடிவிலுள்ளதுமான கற்றளியின் சுவரில் அந்த தானத்தைப் பற்றிப் பொறிப்பித்தான்.

இக் கூற்று ஏற்புடைத்தன்று. இவ்விரு கல்வெட்டுகளையும் பற்றி வேறு வகையில் யான் பொருள் கொள்வதால் யான் கண்ட முடிவை மாத்திரம் சுருக்கமாக இங்குக் கூறுகிறேன். நாயன்மார்கள் மூவரும் பொதுவாகத் திருக்கழுகுன்றத்து அமர்ந்துள்ள பெருமானையே பாடி யுள்ளார்கள். அப்பர் மாத்திரம் திருப்புகலூர்த் திருப்பதிகத்தில் 'கழுக் குன்றத்துச்சியாய் கடவுளே' என்று போற்றியுள்ளார். ஆகவே இம் மலையின் உச்சியே கடவுள் இருப்பிடமாகக் கொண்டார் என்று கொள்ளவேண்டும். வேதங்கள் மலையுருவாய்ச் சுவாமியைத் தாங் கலின் இம் மலை வேதகிரி எனப் பெயர்பெற்றதென்பர். ஆனால் தற் பொழுது உள்ள கோயில் ஒரு கற்றளி, கருவறையின் உட்புறத்துச்

சுவர்களிலும், வெளிச் சுவர்களிலும் சிலைகள் உள்ளன. உட்புறத்துப் பின் சுவரை சோமாஸ்கந்தரும், வடசுவரை தட்சிணாமூர்த்தியும், தென்சுவரை அர்த்தநாரீசுவரரும் அலங்கரிக்கின்றனர். சிற்பக் கலைப் பாணியைக்கொண்டு இக் கற்றளி பல்லவ இராசசிம்மன் காலத்ததாக இருக்கவேண்டும் என்று கூறலாம். பல்லவ பரமேசுவர்மன் காலத்ததன்று.

**ஒருகல் மண்டபக் கல்வெட்டு :**

வேறுபடுத்திக் கூறாத வரையில் ஒவ்வொரு கோயிலின் கல்வெட்டுகளையும் அவ்வக் கோயிலிலேயே பொறிப்பது பண்டைய மரபு. ஒரு கல் மண்டபக் கல்வெட்டு வாதாபிகொண்ட நரசிம்மன் காலத்தது. அதன் வாசகம் பின்வருமாறு :

1. ஸ்ரீ திருக்கழுக்குன்றத்துப் பெருமா
2. னடிகளுக்குக் களத்தூர்க் கோட்டத்
3. துத்தன் கூற்றுத் திருக்கழுக்குன்ற
4. த்து ஸ்ரீ மலைமேல்
5. மூலத்தானத்துப் பெருமா
6. னடிகளுக்கு வழிகாட்டுப் புறமா
7. கவாதாபிகொண்ட நரசிங்கப்
8. போத்தரசர் வைத்தது—

இது ஸ்ரீ மலைமேல் மூலத்தானப் பெருமானடிகளுக்கு 'வழிபாட்டுப் புறமாக' வழங்கிய நிலதானத்தைக் குறிக்கிறது. இரு கடவுளருக்குக் கொடுத்ததானமன்று. முதல் இரு வரிகளில் திருக்கழுக்குன்றத்துப் பெருமானடிகள் என்று பொதுவாகவும், 3-6 வரிகளில் இங்கு எழுந்தருளியுள்ள கடவுளரின் பெயர் சிறப்பாகவும் விவரமாகவும் குறிக்கப்பட்டுள்ளது. எனவே, இது ஒரே கோயிலிலுள்ள ஒரே கடவுளருக்கு ஒரே மன்னனால் வழங்கப்பட்ட தானமாகும். இரு கடவுளரைக் குறிப்பதாயின், இறுதியில் ஸ்ரீ திருக்கழுக்குன்றத்துப் பெருமானடிகளுக்கும்;...ஸ்ரீ—ஸ்ரீ மலைமேல் மூலத்தானத்துப் பெருமானடிகளுக்கும் என்பதான எண்ணும்மை சேர்க்கப்பட்டிருக்கவேண்டும்.

**திருவாபரணக் கொட்டடிக் கல்வெட்டு:**

திருவாபரணக்கொட்டடி என்பது மலையடிவாரத்தில் எடுப்பிக்கப் பெற்றுள்ள பக்தவத்சலர் கோயிலின் வடக்கு இரண்டாம் பிராகாரத்

தில் உள்ள கோயிலின் கருவூலமாகும். இதன் அமைப்பைக் கொண்டு இது பண்டைக் காலத்தில் தெற்கு நோக்கிய சந்நிதியையுடைய ஒரு சிறு கோயிலாகும். மண்டளியாக இருந்து கற்றளியாக எடுப்பிக்கப் பட்டிருக்கவேண்டும். பிந்திய பல்லவக் கோயிலான திருத்தணி வீரட்டானேசுவரர் கோயிலின் அமைப்பை இது கொண்டுள்ளது. இது தூங்கானைமாடம் அமைப்புடையது. ஐந்து தேவகோஷ்டங்களும், கலைப் பாணியில் ஒன்பதாம் நூற்றுண்டிற்குரியனவாகிய சிலைகளும் இதில் உள்ளன. இதன் கிரீவம், சிகரம், ஸ்தூபி என்ற கூறுகள் தற்பொழுது அழிந்துபோயின. இக் கட்டடத்தின் சுவர்களின்மீது முந்திய சோழ ஆதித்தன் காலம் முதல், பிந்திய சோழனுன இரண்டாம் இராசாதிராசன் காலம் வரையில் (9முதல்—12ஆம் நூற்றுண்டு வரை) ஆண்ட பல சோழ மன்னர்களின் கல்வெட்டுகள் பொறிக்கப் பெற்றுள்ளன.

இதிலுள்ள மிகப் பழமையான கல்வெட்டு முதலாம் ஆதித்த சோழனதாகும். இதில்தான் திருக்கழுக்குன்றத்து ஸ்ரீமூலத்தானத்துப் பெருமானடிகளுக்கு மேனுளில் பல்லவ மன்னவனுன ஸ்கந்த சிஷ்யன் இறையிலி நிலதானம் செய்திருந்ததும், அப் பரிசை வாதாபிகொண்ட நரசிம்மன்காத்ததும், அப் பரிசையேபுத்தன் என்பவனுடைய விண்ணப்பத்தால் தொண்டை மண்டலத்தைக்கொண்ட ஆதித்த சோழன் தன் ஆட்சியின் 27ஆம் ஆண்டில் அப்படியே இரட்சித்தான் என்பதும் கூறப்பட்டுள்ளன. பல்லவ ஸ்கந்த சிஷ்யன், நாயன்மார் அப்பருக்கும், அவருடைய சமகாலத்தவரான பல்லவ முதலாம் மகேந்திர வர்மனுக்கும் முற்பட்டவன். ஸ்கந்தசிஷ்யனுல் வழிப்படப்பட்டவரும், வழிபாட்டுக்காக நிலப்பரிசும் அளிக்கப்பெற்றவருமான கடவுளர் இக் கோயிலில் குடிகொண்டிருந்த சிவபெருமான் ஆவார். இக் கொடை மலைமீதுள்ள இரு மூர்த்திகளுக்கும் உரித்தானது என்பது ஏற்றுக்கொள்வதற்கில்லை. மேலும் இவ்விரண்டு கல்வெட்டுகளும் மேனுள் ஸ்கந்த சிஷ்யன் வழங்கிய ஒரேதானத்தைக் குறிக்கின்றன வென்றும், இப் பரிசை நரசிம்மவர்மன் மலைமீதுள்ள இரு கடவுளர்க்கும் பகிர்ந்து கொடுத்தான் என்றும், இந்தப் பழைய ஒரே பரிசைத்தான் ஆதித்த சோழன் ஊர்ச்சிதம் செய்தான் என்றும் கொள்வதற்கு இடமில்லை. இரு கல்வெட்டுகளும் வெவ்வேறுன இரு கடவுளருக்கு வழங்கப்பட்ட இரு பரிசுகளாகும்.

(Vide my article in the Journal of the Madras University, Vol. XIV, No 1. on Tirukkalukkunram and in Lalit Kala No 11, on the date of the Dharmaraja Ratha of Mamallapuram.)

## ஆதித்தன் காலத்துக் கோயில்கள்

திருச்சி மாவட்டம்:

| | | |
|---|---|---|
| 1. | கண்ணனூர் | Jor. Madras XI Part IV. |
| 2. | திருக்கட்டளை | Jor. Madras X pp. 231-9 |
| 3. | திருச்செந்துறை | 291-327 of 1903, 143-148 of 1938 |
| 4. | லால்குடி | 84-89 of 1892, 98-142 of 1928-29, 250 of 1930-31 (E. 1. XX) |
| 5. | சிறிவாசநல்லூர் | 586-610 of 1904. |
| 6. | ஆலம்பாக்கம் | 704-733 of 1909. |
| 7. | கீழையூர் | 355-403 of 1924. |
| 8. | மேலைப்பழுவூர் | (355-403 of 1924.) |
| 9. | கீழைப்பழுவூர் | 216-263 of 1925-26. |
| 10. | திருவெறும்பூர் | 100, 101 of 1892 and 96-142 of 1914. |
| 11. | திருப்பராய்த்துறை | 244-290 of 1903. |
| 12. | திருபால்துறை | 169-180 of 1907 and 562-86 of 1908. |
| 13. | வாலிகண்டபுரம் | 238-39 of 1943-44. |
| 14. | திருமழபாடி | 70-99 of 1895 and 1-103 of 1920 |
| 15. | குமாரவயலூர் | 135-157 of 1936-37. |

தஞ்சை மாவட்டம்:

| | | |
|---|---|---|
| 16. | கும்பகோணம் | 13-25 of 1908, 223-260 of 1911, 3 of 1915 and 290 to 302 of 1927. |
| 17. | செந்தலை | 56-68 of 1897, 6-14 of 1899, 197-215 of 1926 S. 1. 1. XIII Nos. 187, 202, 251, 310 and 311. |
| 18. | திருக்காட்டுப்பள்ளி | 52-57 of 1897. |
| 19 | நேமம் | 16 of 1899 (செந்தலைத் தூண் கல்வெட்டுகள்) |
| 20. | கோயிலடி | 270-281 of :1901. S. 1. 1. VII, 495-501. |

| | | |
|---|---|---|
| 21. | திருக்கண்டியூர் | 13-23 of 1895. (S. I. I. V 568-579.) |
| 22. | திருவையாறு | 213-256 of 1894, 135-157 of 1918, 426 of 1924. |
| 23. | திருப்பழனம் | 123-129 of 1895, 234-291 of 1928. |
| 24. | திருவேதிக்குடி | 65-69 of 1895 (S. I. I. V. 622-626.) |
| 25. | திருச்சோற்றுத்துறை | 53-64 of 1895, 121-208 of 1931. |
| 26. | தில்லைஸ்தானம் | 24-52 of 1895, 276-291 of 1911 (S. I. I. III, Plate VII, and E. I. IV, P. 293) |
| 27. | திருப்பூந்துருத்தி | 166 of 1894, 75-120 of 1930-31. |
| 28. | திருவிளக்குடி | 108-151 of 1926. |
| 29. | திருவிசலூர் | 1-52 of 1907 and 314-355 of 1907. |
| 30. | திருவிடைமருதூர் | 130-159 of 1895, 193-313 of 1907 (S. I. I. XIII, Nos. 7, 37, 38, 133, 195 and 270). |
| 31. | திருநாகேசுவரம் | 81-84 of 1897, 211-222 of 1911, 65-73 of 1932 S. I. I. II, page 166, S. I. I. III, page 91, S. I. I. VI, No. 31., S. I. I. XIII, No. 197. |
| 32. | திருப்பனந்தாள் | 28 of 1908, 29-47 of 1914, 72-80 of 1932. |
| 33. | கோயில் தேவராயம்பட்டி | 228-282 of 1923, E. I. XXXII, No. 22, S. I. I. V-879 |
| 34. | வேதாரண்யம் | 471, 477 and 487 of 1904. |
| 35. | திருப்புறம்பியம் | 69-80 of 1897, 323-357 of 1927, 146-161 of 1932. |
| 36. | நாலூர் - திருமயானம் | 308-332 of 1910 |
| 37. | திருவெண்காடு | 110-122 of 1896, 442-521 of 1918, S. III. XIII, 144. |
| 38. | கூகூர் | 273-316 of 1917. |

தென்னார்க்காட்டு மாவட்டம் :

| | | |
|---|---|---|
| 39. | திருவக்கரை | 166-208 of 1904, S. I. I. XIII, Nos. 285 and 317. |
| 40. | கிளியனூர் | 148-160 of 1919. |

வடவார்க்காட்டு மாவட்டம் :

| | | |
|---|---|---|
| 41. | காவேரிப்பாக்கம் | 381-415 of 1905, 56-57 of 1934-35. |
| 42. | திருப்பாற்கடல் | 685-703 of 1904. |
| 43. | பிரமதேசம் | 189-272 of 1915. |
| 44. | உக்கல் | 29-32 of 1893, 412 of 1902, 156-170 of 1939-40. |
| 45. | தக்கோலம் | 1-19 of 1897 (5 of 1897-24th year) and 243-277 of 1921. |
| 46. | திருவல்லம் | 75-82 of 1889, 298-304 of 1897, 1-18 of 1890, 149, 150 of 1898, 190 of 1904, 208-240 of 1921. |

செங்கற்பட்டு மாவட்டம் :

| | | |
|---|---|---|
| 47. | திருக்கழுக்குன்றம் | 65 of 1909 (Madras Ephigraphical Report 1932-33, p. - 55), 167 of 1894, E. I. III No. 38. page 279 (27th year), Journal of the Madras University XIV, No. -1 and Jor. Madras XIV Part IV. |

சுந்தர சோழனுடைய அன்பில் செப்பேடுகள். திருமால்புரம் கல்வெட்டு 286 of 1906—கோநேரின்மை கொண்டவனை உத்தம சோழனுடைய 14ஆம் ஆண்டைச் சார்ந்தது.

புதுக்கோட்டை சமஸ்தான கல்வெட்டறிக்கை—இரண்டாம் தொகுதி.

புதுக்கோட்டை சமஸ்தான கல்வெட்டுத் தொகுப்பு.

## முதற் பராந்தகன் காலக் கோயில்கள்

திருச்சி மாவட்டம் :

| | | |
|---|---|---|
| 1. | அள்ளூர் (அல்லூர்) | Ep. Rep. 365-385 of 1903-Ep. Ind. XXVI. No. 8, pp. 82-84. |
| 2. | அந்தநல்லூர் | Ep. Rep. 348-364 of 1903. |

| | |
|---|---|
| 3. சித்தூர் | Inscriptions ( Text ) Pudukkottai State No. 24-26. |
| 4. உய்யக்கொண்டான்— திருமலை | Nos. 95-99 of 1892 SII II, pt. III, No. 75, 455-479 of 1908. |
| 5. கொடும்பாளூர் | Gazetteer, Pudukkottai State, Vol. II, Part II, pp. 1030-40, Journal of Indian Museum-1958-60. |
| 6. கிழைப்பழுவூர் | Ep. Rep. 216-263 of 1925-26; Four Chola Temples. |
| 7. கோவிந்தபுத்தூர் | Ep. Rep. 157-194 of 1928-29. |
| 8. நங்கவரம் | Ep. Rep. 328-347 of 1903. |
| 9. சோமூர் | Ep. Rep. 198-208 of 1917. |
| 10. நீர்ப்பழனி | Nos. 30, 154, 241 - Inscriptions (Text) Pudukkottai State. |

தஞ்சை மாவட்டம் :

| | |
|---|---|
| 11. புள்ளமங்கை | 546-559 of 1921. |
| 12. திருவாடுதுறை | Ep. Rep. 101-162 of 1925, 59-72 of 1926. |
| 13. திருக்களாவூர் | Ep. Rep. 35-46 of 1910...South Indian Temple Inscriptions Vol. II, p. 621. |
| 14. திருச்சென்னம்பூண்டி | Ep. Rep. 282-303 of 1901. |
| 15. திருக்களித்தட்டை | Ep. Rep. 291-303 of 1908 Ep. Ind. XII. No. 16. 116 of 1896. |

தென்னார்க்காடு மாவட்டம் :

| | |
|---|---|
| 16. கிராமம் | Ep. Rep. 735-745 of 1905 ; 150-198 of 1906. AR. D.G. of Archaeology 1905-6. Ep. Ind. VII, p. 195. |
| 17. திருநாமநல்லூர் | 325-380 of 1902. Ep. Ind. VII, pp. 132-4. |
| 18. எறும்பூர் | Ep. Rep. 379-398 of 1913. |
| 19. காட்டுமன்னார்குடி | Ep. Rep. 529-627 of 1920. |

| | | |
|---|---|---|
| 20. | திருவாமாத்தூர் | 402-435 of 1903, 1-71 of 1922, S.I.I. VIII 718-751. |
| 21. | கரடி | Ep. Rep. 218-222 of 1936-37. |
| 22. | சித்தலிங்கமடம் | Ep. Rep. 367-431 of 1909; 261-265 of 1937. |
| 23. | திருவாண்டார் கோயில் | Ep. Rep. 359-377 of 1917. |
| 24. | திருக்கோயிலூர் (கீழூர்) | Ep. Rep. 230-306 of 1902; 3-25 of 1905; 200-201 of 1935. |
| 25. | பாகூர் | Ep. Rep. 172 of 1902...Bahur Plates of Nipatunga Pallava. |

வடவார்க்காடு மாவட்டம் :

| | | |
|---|---|---|
| 26. | சோழபுரம் | Ep. Rep. 11-15 of 1887 (SII I, Nos. 95-97, 53 and 98); 346 of 1901; 421-429 of 1902) Ep. Ind. VII, p. 195) 343-345 of 1912. |
| 27. | திருமால்புரம் (திருமாற் பேறு) | Ep. Rep. 255-344 of 1906, 298 of 1906. SII III No. 197 and 142. |

செங்கற்பட்டு மாவட்டம் :

| | | |
|---|---|---|
| 28. | திருவொற்றியூர் | Ep. Rep. 104-110 of 1892; 399-405 of 1896. 363-372 of 1911; 91-246 of 1912. 162-167 of 1938; S. II XIII No. 149. |
| 29. | மதுராந்தகம் | Ep. Rep. 126-138 of 1896; 262-3 of 1901, 391-409 of 1922. |

சித்தூர் மாவட்டம்:

| | | |
|---|---|---|
| 30. | தொண்டை மாநாடு | Ep. Rep. 230-233 of 1903. S. II VIII. No. 529. |

Note :

Ep. Rep. - Madras Ephigraphical Report.

EP. Ind. - Ephigraphia Indica.

S. I. I. (Text) - South Indian Inscriptions (Text).

# 11. முதற் பராந்தகன் (கி.பி. 907—955)

## தொடக்கம்

முற்பட்ட சோழர்களுக்குள் பராந்தகனே மிகப் பெரு வீரனுகக் காட்சியளிக்கிருன். ‘இவன் கொற்றவையின் திரு அவதாரம். இவன் பாண்டிய நாட்டின்மீது படையெடுத்துச் செல்வங்களைக் கைப்பற்றி மதுரையை எரித்ததனுல் மதுராந்தகன் என்று வழங்கப்பட்டான். அருச்சுனனை ஒத்த பெருவீரனுன இம் மன்னன் பிறரால் வெல்லப் படாமல் செருக்கித் திரிந்த கிருஷ்ணராசனை வென்று வீரசோழன் என்ற விருதுப் பெயர் பூண்டான். மன்னர் பலரும் வணங்கும் பெருமை சான்ற பராந்தகன் தன் படையுடன் கடலைக் கடந்து ஈழ நாட்டின் எல்லையை அடைந்து, அங்குத் தன்னை எதிர்த்த ஈழ மன்னனை வென்று, வாகை சூடிச் சிங்களாந்தகன் என்று புலவர்கள் பாடும் புகழ்பெற்ருன். குணங்களால் உயர்ந்த இச் செம்மலுக்கு உவமையாகக் கூறத்தக்க வேறு மன்னரும் உளரோ? பகைவர் பலரையும் போரிடை வென்று வாகை சூடிய இம் மன்னனுடைய வீரத்துக்கு இணையான வீரம் சான்ற மன்னரும் உளரோ? பிரமன் சுவர்க்கத்தைப் படைத்துத் தேவர்களுக்கு வழங்கியதுபோலப் பராந்தகன் வீர நாராயணம் முதலிய செல்வ வளங் கொழிக்கும் சிரூர்களைப் படைத்துக் கற்று வல்ல அந்தணர் பலருக்கும் அருங்கொடையாக வழங்கினுன்’ என்று கன்னியாகுமரிக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

முற்பட்ட பாண்டியப் பேரரசின் கடைசி மன்னனுன இரண்டாம் இராசசிம்மனைப் பராந்தகன் அடியோடு முறியடிக்கவே, அப் பாண்டிய மன்னன் முதலில் ஈழ நாட்டில் சரண் புகுந்து பின் சேர நாட்டை அடைந்தான். பராந்தகன் ஈழ நாட்டை நோக்கிச் சென்று போர் புரிந்தது உண்மையே. ஆனுல், அவன் ஈழ நாட்டை வென்ற தாகக் குறிப்பிடுஞ் செயல் பொருளற்ற தற்புகழ்ச்சியேயாம்.

சுசீந்திரத்திலுள்ள பரகேசரி வர்மனின் 34ஆம் ஆண்டுக் கல் வெட்டு விசயாலயனுடையதன்று. முதற் பராந்தகனுடையதே என்பது குறித்துணரத்தக்கது,

பராந்தகன் வடதிசை நோக்கிப் படையெடுத்துத் தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றினன். மூன்றும் நந்திவர்மனுக்குப் பிறகு நிருபதுங்கன் 41 ஆண்டுகளும் (கி.பி. 855—896), கம்பவர்மன் 32 ஆண்டுகளும் (கி.பி. 878—910), அபராசிதன் 18 ஆண்டுகளும் (கி.பி. 879—897) தொண்டைமண்டலத்தின் வெவ்வேறு பகுதிகளில் ஆட்சி புரிந்தனர் என்று அறிகிறோம். புதியனவாகக் கண்டுபிடிக்கப்பட்ட கரந்தைத் தமிழ்ச் சங்கச் செப்பேடுகள் முதல் இராசேந்திரனுடைய எட்டாம் ஆண்டைச் சேர்ந்தவை. அவை முதற் பராந்தகன் பல்லவ மன்னன் ஒருவனைத் தொலைத்து, அவனுடைய நாட்டையும், செல் வங்களையும், ஊர்திகளையும் கைப்பற்றினன் என்று குறிப்பிடுகின்றன. இச் செப்பேடுகளில் குறிக்கப்பட்ட பல்லவ மன்னன் நிருபதுங்கன் அல்லன், கம்பவர்மனே என்ற செய்தி இப் பல்லவ மன்னர்களின் ஆட்சிக் காலத்தையும் முதற் பராந்தகனுடைய ஆட்சிக் காலத்தையும் ஒப்பிட்டு நோக்கின் தெற்றெனப் புலனாகும்.

தொண்டைமண்டலத்தை வென்ற பிறகு முதற் பராந்தகன் வாணர்களையும் வைதும்பர்களையும் தோற்கடித்தான். அப்பொழுது ஆண்ட வாணர் குலத் தலைவர்கள் விசயாதித்ய பிரபு என்ற மாவலி வாணராயனும் அவனுடைய புதல்வன் விக்கிரமாதித்யனுமாவர். இவர்கள் தாங்கள் வழங்கிய நன்கொடைகளைத் தங்கள் பேரரசனான பல்லவனுடைய ஆட்சியாண்டுகளைக் குறிப்பிட்டு வழங்காமல் சக யாண்டுகளைக் குறிப்பிட்டு வழங்கியிருப்பதை நோக்கின் பல்லவர் ஆட்சி சீர்குலையத் தொடங்கியதும் இவர்கள் தன்னுரிமை பெற்றுத் தன்னரசு செலுத்தத் தொடங்கியிருக்க வேண்டும் என்று அறிகிறோம். தோல்வியடைந்த இவ் வாணர் குலத் தலைவர்கள் இரண்டாம் கிருஷ்ணன் (கி.பி. 879—912), என்ற இரட்ட மன்னனுடைய உதவியை நாடினர்போலும். இவ் வாணர்களையும் இரட்ட மன்னனையும் சேர்த் துத் திருவல்லம் என்ற ஊரில் முதற் பாரந்தகன் அடியோடு முறி யடித்து, வீரசோழன் என்ற விருதுப் பெயர் பூண்டான். இப் பெயர் இம் மன்னனுடைய 9ஆம் ஆண்டில் வெட்டப்பட்ட சோளிங்கபுரக் கல்வெட்டிலும், வீர ராசேந்திரனுடைய கன்னியாகுமரிக் கல் வெட்டிலும் காணப்படுகிறது. சோளிங்கபுரக் கல்வெட்டை நோக்க இத் திருவல்லப் போர் கி.பி. 911-12-ல் நிகழ்ந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. முதற் பராந்தகனுடைய நண்பனும் மேலைக் கங்க நாட்டையாண்ட சிற்றரசனுமான அத்திமல்லன் என்ற இரண்டாம் பிரதிவிபதிக்கு முதற் பராந்தகன் செம்பியன் மாவலி வாணராயன்,

வாணுதிராசன் என்ற விருதுப் பெயர்கள் வழங்கி, வாணர்களுடைய நாட்டையும் அவனுக்கு வழங்கினுன். இந் நிகழ்ச்சி பராந்தகனுடைய 6ஆம் ஆண்டை ஒட்டி நிகழ்ந்திருக்கலாம். இவ் வெற்றிக்குப்பின் சோழப் பேரரசு வடக்கே நெல்லூரிலிருந்து தெற்கே கன்னியாகுமரி வரை பரவிவிட்டது.

இந் நிலையில் இரட்ட மன்னனுன மூன்ரும் கிருஷ்ணன் என்ற கன்னரதேவன் புதிதாக வெல்லப்பட்ட இச் சோழ நாட்டின் வட பகுதியான தொண்டைமண்டலத்தைச் சோழரிடமிருந்து கைப்பற்றி, ஏறத்தாழக் கால் நூற்ருண்டு காலம் அதனைத் தன் நாட்டின் ஒரு பகுதியாகக் கொண்டு ஆண்டு வந்தான்.

முதற் பராந்தகனைப்பற்றி அன்பில் செப்பேடுகள், 'வீரம் இம் மன்னனைச் சார்ந்து உச்சநிலையை அடைந்தது. இம் மன்னனே திறமையின் அவதாரமாவான். தீரம் இவனைப்பற்றியே உயர் வடைந்தது. நற்குணங்கள் இவனைச் சார்ந்து நலிவின்றி நிலை பெற்றன. பூதேவி உயர்ந்த மன்னனைப் பெற்ருள். கவிதைக்கு இவன் தன் ஆட்சியில் தக்க உயரிடம் வழங்கினுன். நுண்கலைகள் பலவும் தக்க ஆதரவைப் பெற்றன. இவன் புகழைக் கண்டு நான்கு திசைகளி லுள்ளாரும் பெருவியப்பு உற்றனர்' என்று குறிப்பிடுகின்றன.

முதற் பராந்தகன் தில்லை நடராசப் பெருமானிடம் சலியாத பக்தியுடையவன். புராந்தகரின் திருவடித் தாமரையை வட்டமிடும் தேனீயாக இவனைத் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் குறிப்பிடு கின்றன. வெள்ளிமலையில் வீற்றிருக்கும் சிவபெருமானுக்கு இவன் பொன் மன்றம் அமைத்த திருப்பணியையும் அவைகள் தெரிவிக் கின்றன. இவன் காலத்தில் சிதம்பரம்—ஹேமசபை, ஹிரண்யசாலை, கனகசபை, பொன்னம்பலம் எனப் பலவாறு வழங்கப்படுவதாயிற்று. 'கோயில் பொன் வேய்ந்த பெருமாள்' என்று முதற் பராந்தகன் வழங்கப்படலானுன். இவன் காலம் முதல் தில்லை நடராசப் பெருமான் சோழ மன்னர்களின் குலநாயகமானுர்.

இவனுடைய மேதக்க ஆட்சிக் காலத்தில் மண்டளிகள் கற்றளிக ளாக்கப்பட்டன. புதுக் கற்றளிகள் சிலவும் எடுப்பிக்கப்பட்டன. போர்த் துறைகள் திறம்பெற்றனபோலவே நுண்கலைகளும் பெருமை யுற வளர்க்கப்பட்டன.

# 12. முதற் பராந்தகன் காலக் கோயில்கள்

## 1. அள்ளூர் (அல்லூர்)

1. பஞ்சநதீசுவரர் கோயில்

2. பசுபதீசுவரர் கோயில்.

காவிரியின் தென்கரை வழியே திருச்சியிலிருந்து கருவூர் செல்லும் பெருவழியில் 6 கல் (9·6 கி.மீ.) தொலைவில் அள்ளூர் இருக்கிறது. இச் சிற்றூரில் முற்பட்ட சோழர்கள் காலக் கோயில்கள் இரண்டு உள்ளன.

பஞ்சநதீசுவரர் கோயில் ஊரின் வடபுறத்தில் பெருவழிக்கு அருகில் அமைந்துள்ளது. இக் கோயிலில் வீற்றிருக்கும் பெருமான் கல்வெட்டுகளில் 'திருவடகுடி பரமேசுவரர்' என்றும், 'திருவடகுடி மகாதேவர்' என்றும் குறிக்கப்படுகிறார்.

மதுரை கொண்ட பரகேசரியான முதற் பராந்தகனுடைய ஆறும் ஆண்டுக் கல்வெட்டொன்று இக் கோயிலில் காணப்படுகிறது. அது பூதிமாதேவடிகள் ஈசனமங்கலத்துச் சபையாரிடமிருந்து வாங்கி இக் கோயிலுக்கு நன்கொடையாக வழங்கிய நிலம் பற்றியதாகும்.

கண்டராதித்தன் என்று கருதப்படும் இராசகேசரிவர்மனுடைய 5ஆம் ஆண்டில் வீர சோழ இளங்கோ வேளானுடைய மகன் ஒருவன் இக் கோயிலில் விளக்கெரிப்பதற்காகப் பொற்கொடை வழங்கினான் என அறிகிறோம். 'வீர சோழ இளங்கோ வேளான் ஒற்றி மதுராந்தகன் மகனார் பராந்தக தேவர்க்காக' என்று தொடங்கும் அக் கல்வெட்டுச் செய்தியை முழுவதும் உணர முடியாத வகையில் அது சிதைவுற்றிருக்கிறது. *(366—1903)*

இக் கோயில் இருதளக் கற்றளியாகும். இது முதற் பராந்தகன் காலத்தில் எடுப்பிக்கப்பட்டு முதல் இராசராசன் காலத்தில் புதுப்பிக்கப்பட்டதாதல் வேண்டும்.

இதன் கருவறை சதுரமானது. கருவறையின் பக்க அளவு 18 அடி. அடித்தளம் வேலைப்பாடுகளின்றிக் காணப்படுகிறது. அடித் தளத்தில் குமுதப் படையையும் யாளி வரிமானத்தையும் காணலாம். கருவறையின் மூன்று புறங்களிலும் அரைத்தூண்களால் அணி செய் யப்பெற்ற தேவகோஷ்டங்களைக் காணலாம். அர்த்தமண்டபம் 17 அடி நீளமும் 13 அடி 9 அங்குல அகலமும் உடையது. அர்த்தமண்ட பத்தின் முகப்பில் துவாரபாலகர் சிலைகள் உள்ளன.

பசுபதீசுவரர் கோயில் :

இக் கோயில் ஊருக்குத் தென்புறத்தில் பெருவழிக்கு இரண்டு கல் (3·2 கி.மீ.) தொலைவில், நெல்லடிக்குங் களமாகப் பயன்பட்டு வரும் பெரிய தென்னந்தோப்பில் அமைந்திருக்கிறது. இக் கோயிலி லுள்ள பெருமான் கல்வெட்டுகளில் அல்லூர் நக்கர் கோயில் பரமேசு வரர் என்று வழங்கப்படுகிறார்.

இங்கு இராசகேசரிவர்மனுடைய 12ஆம் ஆண்டுக் கல்வெட் டொன்று காணப்படுகிறது. அது ஆதித்தன் காலத்ததா என்பதை உறுதியாகக் கூற இயலவில்லை.

முதல் பராந்தகனுடைய கல்வெட்டுகள் அவனுடைய 17ஆம் ஆண்டு முதல் 40ஆம்ஆண்டு முடியக் காணப்படுகின்றன. தரிசு நிலங் களையும் காவிரி வெள்ளத்தால் பாழாக்கப்பட்ட நிலங்களையும் சீர் திருத்தம் செய்து விளைநிலன்களாக்கி அல்லூர் நக்கனுக்கு அர்ச்சனா போகத்திற்கும், விளக்கு எரிப்பதற்கும் தேவதான நிலமாக ஊர்ச் சபையார் வழங்கிய செய்தியே பல கல்வெட்டுகளிலும் குறிக்கப்பட் டுள்ளது. ‘அல்லூர் தலைவாய்ச் சான்றோம்’ என்று குறிப்பிடப் படும் கற்று வல்ல அறிஞர் குழாம் காவிரி வெள்ளத்தால் பாழாக்கப் பட்டு ஆறு, ஏழு ஆண்டுகளாகத் தரிசுகிடந்த நிலத்தைப் பகிரங்க மாக ஏலம் விட்ட செய்தியை முதற் பாந்தகனுடைய 37ஆம் ஆண் டுக் கல்வெட்டொன்று குறிப்பிடுகிறது. சிறியன் புல்லன் என்பான் அந் நிலங்களைச் சீர்திருத்தம் செய்து அல்லூர் நக்கன் பரமேசுவர ருக்கு நிவந்தமாக வழங்கத் தயாராக இருப்பதாகக் கூறி முன்வரவே, அல்லூர்த் தலைமைச்சான்றோர்கள் 10 மாநிலத்தை இறை இழிச்சி அவனுக்கு விற்றுக் கொடுத்தனர் என அறிகிறோம். (375—1903) இதுபோன்ற கல்வெட்டுகளை நோக்கக் கல்வியறிவு ஒழுக்கங்களால் மேம்பட்ட சான்றோர்கள் முற்பட்ட சோழர் ஆட்சியில் பெருஞ் செல்வாக்குடன் இருந்தனர் என்பதும், அவர்களே கிராம நிர்வா கத்தைத் திறம்பட நடத்திவந்தனர் என்பதும் புலனாகின்றன. ஸ்ரீநிவாச நல்லூரிலும், உத்தம சோழனுடைய தாயாரால் அமைக்கப் பட்ட ஊரான செம்பியன் மாதேவியிலும், தலைமை சான்ற அறிஞர்

களாலேயே கிராம நிர்வாகம் திறம்பட நிகழ்த்தப்பட்டதாகக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. அறிஞர் பிளேடோ (Plato) தம் நூலில் குறிப்பிடும் 'குடியரசு' முறையை இந் நிர்வாகம் பெரும் பாலும் ஒத்துள்ளது என்பது பாராட்டத்தக்கது. முதற் பராந்தக னுடைய 41ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று தேவாரம் பாடுவதற் காக நிவந்தம் வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

கண்டராதித்தன் காலத்தது என்று கருதக்கூடிய இராசகேசரியின் 3ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று புதுக்கோட்டைவாசி ஒருவன் பராந்தக குஞ்சரமல்லன் என்ற வீர சோழ இளங்கோவேளின் அனுமதி பெற்றுச் சில தரிசு நிலங்களைச் சீர்திருத்தி அவற்றை அல்லூர் நக்கன் கோயில் பரமேசுவரருக்குத் தேவதானமாக வழங்கிய செய் தியைக் குறிப்பிடுகிறது. (*380—1903*)

பரகேசரி அரிஞ்சயனுடைய 3ஆம் ஆண்டினதாகக் கருதப்படும் கல்வெட்டு வீர சோழ இளங்கோவேளுடைய மனைவியாரான கங்க மாதேவியார் தம் கணவனுடலோடு உடன்கட்டை யேறுமுன், 20 கழஞ்சுப் பொன்னை நன்கொடையாக வழங்கி, அதனைக் கொண்டு ¼ செய் அளவுடைய தரிசு நிலத்தைச் சீர்திருத்தி, அதன் வரும்படியைக் கொண்டு திருக்கோயில்பட்டுடையார் ஆகிய குருக்களைக் கொண்டு ஒரு விளக்கு எரிப்பதற்கு ஏற்பாடு செய்த செய்தியை வெளியிடு கிறது. (*376—1903*)

முதல் இராசராசனுடைய 6ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றி லிருந்து, மும்முடிச் சோழன் என்ற விருதுப் பெயரை முதன்முதல் தரித்த சோழ மன்னன் கண்டராதித்தனே என்று அறிகிறோம். பரகேசரி வர்மனுடைய நான்காம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் மும் முடிச் சோழ இளங்கோவேள் என்ற பெயர் காணப்படுகிறது. மும் முடிச் சோழன் கண்டராதித்தன் விருதுப் பெயராகவே, இப் பரகேசரி வர்மன் கண்டராதித்தனை அடுத்து அரியணையேறிய அரிஞ்சயனே என்று முடிவு செய்யலாம். அக் கல்வெட்டு மும்முடிச் சோழ இளங்கோவேளான் ஆதித்தன் முனையராதித்தர் அல்லூரைச் சார்ந்த பிரமதேயக் கிழவரும் நாட்டோரும் ஒரு வேலி நிலத்தைக் குடி நீங்கத் தேவதான இறையிலியாக வழங்குமாறு அரசன் இட்ட ஆணை குறிப் பிடப்பட்ட ஸ்ரீமுகத்தை வழங்க, அதை ஊர்ச்சபையார் மரியாதை யோடு பெற்று, அலந்தியகோவன் பல்லவரையனான மயிலை திண்டன் மூலம் நிறைவேற்றி, அச் செய்தியைக் கல்லில் பொறிக்க ஏற்பாடு செய்தனர். மதுரைகொண்ட இராசகேசரியின் (சுந்தர சோழனாக இருக்கலாம்) 17ஆம் ஆண்டில் இக் கோயிலுக்குப் பொற்கொடை யொன்று வழங்கப்பட்டது. இக் கோயிலிலுள்ள ஏனைய கல்

வெட்டுகள் பிற்பட்ட சோழர்கள் காலத்தவை. முதல் இராசராச னுடைய 22ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் இக் கோயிலில் கற்று வல்ல அந்தணர்களுக்கு உணவளிப்பதற்காக 33 கழஞ்சுப் பொன்னை மூலதனமாக வைக்கப்பட்ட செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. முதல் இராசேந்திரனுடைய 4ஆம் ஆண்டுக் கல்வெட்டு திருவடகுடிச் சபை யாரிடம் 5 கழஞ்சுப் பொன்னை மூலதனமாக வழங்கி வேதங்களில் வல்ல அந்தணர்களுக்கு அமாவாசைதோறும் நல்லுணவளிக்க ஏற் பாடு செய்த நன்கொடையைக் குறிப்பிடுகிறது.

தற்போது சிதைவுற்றுக் காணப்படும் முதல் இராசாதிராச னுடைய கல்வெட்டொன்று ஓகை உடையான் காரி உதையன் என்ற நிர்வாகச் சீர்திருத்த அதிகாரி இக் கோயிலில் உமையோடும் முருக னோடும் அமைந்த சிவபெருமானுடைய சோமாஸ்கந்த வடிவத்தை உலோகத் திருமேனியாக நிறுவி நீலிவனவிடங்கருக்கும், பிராட்டியா ருக்கும், விநாயகருக்கும், பாசுபத தேவருக்கும் நிவேதனம், பூசனை ஆகியவற்றிற்கு ஏற்பாடு செய்த செய்தியைத் தெரிவிக்கிறது. (369—1903)

அதே மன்னனுடைய 27ஆம் ஆண்டுக் கல்வெட்டு, கோயிலைச் சார்ந்த மடத்தில் தேவாரத் திருப்பதியம் விண்ணப்பம் செய்யும் அம்பலத்தாடி திருநாவுக்கரையனுக்கும் அவன் சந்ததியாருக்கும் ஒரு நிலத்தை மடப்புறமாக வழங்கிய செய்தியை வெளியிடுகிறது.

மூன்றாம் குலோத்துங்கனுடைய 37ஆம் ஆண்டில் இக் கோயிலின் இரண்டாம் பிராகாரத்தில் திருக்காமக்கோட்டமுடைய நாச்சியார் கோயில் என்று கல்வெட்டுகளில் வழங்கப்படும் தர்ம சம்வர்த்தனி அம்மன் கோயில் எடுப்பிக்கப்பட்டது.

இக் கோயில் முதல் பராந்தகன் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட ஒரு தளக் கற்றளியாகும்.

சதுரமான கருவறையின் உட்புறப் பக்க அளவு 9 அடி. அதன் சுவர்கள் 4 அடி 8 அங்குல கனமுடையவை. அர்த்தமண்டபம் 11 அடி 4 அங்குல நீளமும் 7 அடி 5 அங்குல அகலமும் உடையது. அதனைத் தாங்குவதற்குப் பிற்காலத்தில் 4 தூண்கள் புதியனவாக இணைக்கப் பட்டுள்ளன. அர்த்தமண்டபத்தில் முகப்பில் முதற் பராந்தகன் காலத்தனவாகிய துவாரபாலகர் சிலைகளைக் காணலாம். பிற்காலத்தில் 12 அடி 3 அங்குல நீளமும் 10 அடி அகலமும் உடைய முகமண்டபம் ஒன்று எடுப்பிக்கப்பட்டது. அதனையும் நான்கு தூண்கள் தாங்கி நிற்கின்றன. நந்தி அதன் பழைய உரிய இடத்திலிருந்து அப்புறப்படுத்

தப்பட்டு முகமண்டபத்தில் வைக்கப்பட்டுள்ளது. வட்ட வடிவமான கருங்கல் சிகரம் பெரிதும் காரை பூசப்பட்டுள்ளது. தேவகோஷ்ட விக்கிரங்கள் காணப்படவில்லை. பழைய தட்சிணாமூர்த்தி விக்கிரகம் சிதைந்த நிலையில் அருகிலுள்ள மாமரத்தின் அடியில் வைக்கப் பட்டுள்ளது. முகமண்டபத்தில் பிட்சாடனர், சண்டேசுவரர், கார்த்தி கேயர், சூரியர் ஆகிய தெய்வங்களின் சிலைகளைக் காணலாம்.

[பஞ்சநதீசுவரம்—*365—372, 1903*. (திருவடகுடி பரமேசுவரர்) பசுபதீசுவரம், *373—385, 1903*.] (அல்லூர் நக்கன் பரமேசுவரர்).

## 2. அந்தநல்லூர்

**திரு ஆலந்துறை மகாதேவர் கோயில் :**

அந்தநல்லூர் கல்வெட்டுகளில் 'அந்தவநல்லூர்' என்று குறிப் பிடப்படுகிறது. அது திருச்சியிலிருந்து கருவூர் செல்லும் பெருவழியில் அள்ளூருக்கும் திருச்செந்துறைக்கும் இடையில் திருச்சிலிருந்து 7 மைல் 3 பர்லாங் தொலைவில் (12 கி.மீ.) உள்ளது. இங்குள்ள முற்பட்ட சோழர் காலத்துக் கோயிலில் வீற்றிருக்கும் இறைவன் வடமொழியில் வடதீர்த்தநாதர் எனவும் தமிழில் திருவாலந்துறை மகாதேவர் எனவும் வழங்கப்படுகிறார்.

இக் கோயில் சுவர்களில் அடைமொழி எதுவும் இல்லாத பரகே சரியின் கல்வெட்டுகள் பத்துக் காணப்படுகின்றன. அவை பரகேசரி யின் 10ஆம் ஆண்டு முதல் 25ஆம் ஆண்டுவரை வெட்டப்பட்டன. அவை பெரும்பான்மையும் செம்பியன் இருக்குவேளான பூதிபராந்த கன், அவனுடைய தேவிமார்களான புலியூர் நாட்டடிகள், சிங்கன் நிம்மடிகள் என்பவரால் வழங்கப்பட்டவை.

பரகேசரியின் 10ஆம் ஆண்டில் கிழையூர் நாட்டு அந்தவநல்லூரி லுள்ள திருவாலந்துறை மகாதேவர் கோயிலில் நாள்தோறும் உழக்கு நெய் ஊற்றி ஒரு நந்தாவிளக்கு எரிய விடுவதற்கு நன்னல்லூர்ச் சபையார் புலியூர் நாட்டடிகளிடம் 30 கழஞ்சுப் பொன்னை மூலதன மாகப் பெற்ற செய்தி உணரப்படுகிறது. (*348—1903*).

பரகேசரியின் 11ஆம் ஆண்டுக் கல்வெட்டில் திருவாலந்துறைப் பெருமானடிகள் கோயிலைச் செம்பியன் இருக்குவேளான பூதி பராந்த கன் எடுப்பித்த செய்தி முதன் முதல் இடம் பெறுகிறது (*359—1903*). இவ்வாண்டின் பூதி பராந்தகன் தான் விலைக்கு வாங்கிக் குடி நீக்கிய தேவதானமாக ஆக்கிய நிலம் மூன்று வேலியைக் கோயிலுக்கு உரிய தாக்க அரசனுடைய இசைவு பெற்றான்.

பரகேசரியின் 18ஆம் ஆண்டில் வழங்கப்பட்ட ஸ்ரீமுகத்தின்படி, அம் மூவேலி நிலமும் குடி நீக்கிய தேவதானக் காணிக் கடமையாக ஆக்கும் பொருட்டு அரையன் வீர சோழனிடம் ஒப்படைக்கப்பட்டது.

பரகேசரியின் 25ஆம் ஆண்டுக் கல்வெட்டில் இம் மூவேலி நிலமும் அரையன் வீர சோழனுல் கோயிலுக்கு குடி நீக்கிய தேவதானக் காணிக் கடமையாக மாற்றப்பட்ட செய்தி பதிவு செய்யப் பட்டுள்ளது (360—1903).

பரகேசரியின் 14ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஈசன மங்கலத்து அத்தணன் ஒருவனிடமிருந்து பூதி பராந்தகன் ஒரு நிலத்தை விலைக்கு வாங்கி, அதைக் கோயில் நந்தன வனத்திற்காக விடுத்த செய்தியைக் குறிக்கிறது. அதே யாண்டுக் கல்வெட்டு மற்றொன்றில் இக் கோயில் பூதி பராந்தகனுல் கற்றளியாகப் புதுப்பிக்கப்பட்ட செய்தி இடம் பெற்றுள்ளது.

இவற்றை நோக்க இக் கோயிலைக் கட்டிய பூதி பராந்தகனுடைய தொடர்புடைய கல்வெட்டுகளே பரகேசரியின் 10ஆம் ஆண்டு முதல் 18ஆம் ஆண்டுவரை காணப்படுவனவாகும் என்பதும், இவன் வழங்கிய நிலக்கொடை பற்றிய செய்தியே பரகேசரியின் 25ஆம் ஆண்டில் முடிவாக உறுதி செய்யப்பட்டது என்பதும் புலனுகின்றன. 25 ஆண்டு வரை ஆண்ட பழைய பரகேசரி முதல் பராந்தகன் ஒருவனே ஆதலின் இக் கல்வெட்டுகள் யாவும் முதற் பராந்தகன் காலத்தனவே என்று அறுதியிட்டு உறுதி கூறலாம்.

இம் முடிவை மீண்டும் உறுதி செய்ய மற்றொரு சான்றும் கிடைத் துள்ளது. முதல் ஆதித்தன் மக்களுள் ஒருவனும் முதற் பராந்தக னுடைய சகோதரனுமான கன்னர தேவனுடைய மனைவியார் பூதி மாதேவடிகளாவார். அவர் பரகேசரியின் 15ஆம் ஆண்டில் வழங்கிய பொற்கொடையைக் கொண்டு உறையூர்க் கூற்றத்துச் சாத்தனூர் சபையாரிடம் நிலம் ஒன்று வாங்கி அதன் வரும்படியைக் கொண்டு அந்தவநல்லூர் இறைவன் சந்நிதியில் விளக்கெரிக்க ஏற்பாடு செய்யப் பட்டது. இக் கல்வெட்டில் குறிக்கப்படும் பரகேசரி முதற் பராந் தகனே என்பது வெளிப்படை. எனவே, இதனை ஒட்டி வெட்டப் பட்டுள்ள ஏனைய பரகேசரிக் கல்வெட்டுகளும் முதல் பராந்தகன் காலத்தனவே எனத் துணியலாம். இவ்வந்தவநல்லூர்க் கோயில் முதற் பராந்தகனுடைய 11ஆம் ஆண்டினை ஒட்டிய காலத்தில் எடுப்பிக்கப்பட்டதாதல் வேண்டும்.

கல்வெட்டிலாகாவினர் பூதி பராந்தகனைப் பூதி விக்கிரமகேசரி என்ற கொடும்பாளூர்ச் சிற்றரசனுடைய மகனை பராந்தகனுகக்

கொண்டதற்கு ஆதாரம் ஒன்றும் இல்லை. இக் கோயிலிலுள்ள பரகேசரியின் 14ஆம் ஆண்டுக் கல்வெட்டு உத்தம சோழன் காலத்தது என்று நீலகண்ட சாத்திரியார் குறிப்பிடும் செய்தியும் ஏற்றுக் கொள்ளத் தக்கதன்று. (The Colas I.p. 471, 1st edition)

இவ்விருதளக் கற்றளியின் அடிப்படை அதிகச் சிற்ப வேலைப் பாடின்றி அமைந்துள்ளது. இதன் கருவறை தென் வடலாக 18 அடி 6 அங்குலமும் கிழக்கு மேற்கில் 14 அடி 2 அங்குலமும் கொண்டதாக அமைந்துள்ளது. அர்த்தமண்டபம் கிழக்கு மேற்கில் 12½ அடி முன்னோக்கி அமைந்துள்ளது. பிற்காலத்து முகமண்டபம் 17½ அடி நீளமுடையது. கருவறையின் மேலுள்ள சிகரம் உருண்டை வடிவானது.

## சித்தூர்

**திரு அக்நீசுவரர் கோயில் :**

சித்தூர் திருச்சி மாவட்டத்துப் பழைய புதுக்கோட்டை சமஸ்தானத்தைச் சேர்ந்தது. அது பெருமாநாடு—கொன்னையூர்ச் சாலையில் புதுக்கோட்டையிலிருந்து 9 கல் (14·4 கி.மீ.) தொலைவில் உள்ளது. கல்வெட்டுகளில் இவ்வூர் கூடலூர் நாட்டைச் சேர்ந்த பிரமதேயமான சிற்றையூர் என்று குறிப்பிடப்படுகிறது. இறைவனுடைய திருப்பெயர் திருஅக்நீசுவரத்துப் பரவேசுவரர் என்று காணப்படுகிறது.

இங்குள்ள கல்வெட்டுகளில் மிகப் பழமையானது இராசகேசரி வர்மனுடைய 4ஆம் ஆண்டைச் சேர்ந்தது. அது கொடும்பாளூரைச் சார்ந்த பராந்தகன் வீர சோழனான மகிமாலய இருக்குவேள் என்ற தலைவன் ஸ்ரீபலி சடங்கிற்கு உரிய நிவேதனத்திற்காகவும், முரசறை வாருக்கு ஊதியம் வழங்குவதற்காகவும் மூன்று வேலி நிலத்தைத் தேவதானமாக வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

இத் தலைவனும் இவனுடைய காரியஸ்தனும்—குடுமியான்மலை, சித்தூர், பாலூர், அள்ளூர், நீர்ப்பழனி முதலிய கோயில்களுக்கு இராசகேசரிவர்மனுடைய ஆட்சியில் பல நன்கொடைகள் வழங்கிய செய்தி கல்வெட்டுகளால் அறியப்படுகிறது.

ஓராண்டு புரட்டாசி மாதம் உத்திராட நட்சத்திரத்தில் சந்திர கிரகணம் வந்தது. அன்று மகிமாலய இருக்குவேள் திரிப்பராய்த் துறையில் தங்கியிருந்தான். அதே தினத்தில் அவன் அள்ளூர், பாலூர், திருப்பராய்த்துறை, நீர்ப்பழனி என்ற நான்கு ஊர் இறைவருக்கும்

நன்கொடைகள் வழங்கினான். அள்ளூர், பாலூர் என்ற ஊர்க் கல்வெட்டுகளில் இச் செய்தி இராசகேசரிவர்மனுடைய 5ஆம் ஆண்டில் நிகழ்ந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால், நீர்ப்பழனியிலுள்ள கல்வெட்டில் இராசகேசரியின் ஆட்சியாண்டு பத்தாம் ஆண்டாகக் குறிக்கப்பட்டுள்ளது. நீர்ப்பழனிக் கல்வெட்டும் இராசகேசரியின் 5ஆம் ஆண்டைச் சேர்ந்ததே எனவும் தவறிப் பத்தாம் ஆண்டாக வெட்டப்பட்டுவிட்டது எனவும் நம்ப வேண்டியிருக்கிறது.

இக் கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்ட சந்திரகிரகண காலத்தைக் கணக்கிட்டுக் காலஞ்சென்ற (A. S.) இராமநாதய்யர் இராசகேசரியின் அவ்வைந்தாம் ஆண்டுக் கல்வெட்டின் காலம் 15-9-954 என்று முடிவு செய்துள்ளார். அதனை நோக்க இராசகேசரிவர்மன் கண்டராதித்தன் என்பதும் அவன் 949—50-ல் அரியணை யேறியிருக்க வேண்டும் என்பதும் உணரப்படுகின்றது. அவர் கூறுவன பின் வருமாறு :

'புதுக்கோட்டை சமஸ்தானத்தைச் சோந்த நீர்ப்பழனிக் கல்வெட்டொன்று இராசகேசரிவர்மனுடைய 10ஆம் ஆண்டைச் சார்ந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அது பாலூர்க் கல்வெட்டில் குறிப்பிடப்பட்ட அதே தலைவனை மகிமாலய இருக்குவேள் என்ற பராந்தக வீர சோழன் திருப்பராய்த்துறைக் கோயிலைப் பார்வையிட்டபோது நீர்ப்பழனிக் கோயிலுக்கு ஒரு நன்கொடை வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. அந்நாள் புரட்டாசி மாதம் உத்திராட நட்சத்திரம், சந்திரகிரகண தினம் எனக் குறிக்கப்படுகிறது. பாலூர் கல்வெட்டில் குறிக்கப்பட்ட புரட்டாசி மாதம் உத்திராட நட்சத்திரம், சந்திர கிரகண தினம் என்பன யாவும் இக் கல்வெட்டிலும் ஒத்திருப்பதால் இதில் குறிக்கப்பட்டுள்ள 10 என்ற ஆட்சியாண்டு தவறாக எழுதப்பட்டதாகும். 5 என்ற ஆட்சியாண்டே சரியானது என்று கொள்ளத்தக்கது. இத் தலைவன் ஒரு கோயிலில் தங்கி இந்தச் சிறந்த நாளில் பக்கம் பக்கமாக அமைந்த அல்லூர், பாலூர், நீர்ப்பழனி, திருப்பராய்த்துறை என்ற நான்கு கோயில்களுக்கும் நன்கொடை வழங்கியிருக்கக்கூடும் என்பது நிகழக்கூடிய செய்தியே. இந் நிகழ்ச்சி இராசகேசரிவர்மனின் 5ஆம் ஆண்டில் நிகழ்ந்ததால் அவ் விராசகேசரிவர்மன் 16-9-949-க்கும் 15-9-950-க்கும் இடையே ஒரு நாளில் அரியணை யேறியிருக்க வேண்டும் என்று முடிவு செய்யலாம்'.

இராசகேசரிவர்மனுடைய 10ஆம் ஆண்டு என்பது கண்டராதித்தனுக்குப் பொருந்துவது அன்று. ஏனெனின், அவன் 8 ஆண்டுகளுக்கு மேல் ஆண்டதாகத் தெரியவில்லை. இந் நீர்ப்புழனிக் கல்வெட்டு சுந்தரசோழன் காலத்தது என்று கொள்வோமெனின் சுந்தரசோழ

னுடைய 10ஆம் ஆண்டில் சந்திரகிரகணம் வந்ததாகவே அறியப்பட வில்லை. எனவே, இந் நீர்ப்பழனிக் கல்வெட்டும் 5ஆம் ஆண்டினது என்றே கொள்ள வேண்டியவராயுள்ளோம். ஆனால், 4-9-955-ல் நிகழ்ந்த ஒரு சந்திரகிரகணத்தை உட்கொண்டு (K. R.) ஸ்ரீநிவாசன் இக் கல்வெட்டு இராசகேசரியினுடைய 6ஆம் ஆண்டினது ஆகலாம் என்று குறிப்பிட்டதை (K. R.) வேங்கடராம ஐயரும் பின்பற்றியுள் ளார். 10ஆம் ஆண்டிற்கு பதிலாக 5ஆம் ஆண்டையோ 6ஆம் ஆண்டையோ கொள்வது ஆராய்ச்சிக்குரிய செய்தியேயாம்.

முதல் இராசராசன் காலத்துக் கல்வெட்டுகள் சில விளக்கு எரிப்பதற்கும் அவிசுபலி அர்ச்சனுபோகத்திற்கும் நன்கொடைகள் வழங்கப்பட்ட செய்தியை வெளியிடுகின்றன. அக் கல்வெட்டுகள் ஊர்ச் சபையாருடைய இசைவு பெற்றே வெட்டப்பட்டன என அறி கிறோம்.

இக் கோயில் முதற் பராந்தகன் ஆட்சியிறுதியிலோ கண்டராதித் தனுடைய 4ஆம் ஆண்டிற்கு முற்பட்டோ எடுப்பிக்கப்பட்டதாதல் வேண்டும். எனவே, இதனைப் பராந்தகன் அல்லது கண்டராதித்தன் காலத்துக் கோயிலாகக் கொள்ளலாம்.

பனைமரக் காட்டின் இடையே (பனந்தோப்பு) அமைந்துள்ள இக் கோயில் மேற்கு நோக்கிய சந்நிதியை உடையது. மூலக் கோயிலின் உறுப்புகள் கருவறை, அதன் மேலமைந்த விமானம், அர்த்த மண்டபம் என்பனவே.

சதுர வடிவமான கருவறையின் பக்க அளவு 18 அடி. அதன் சுவர்கள் 5 அடி கனமுடையவை. அடித்தளம் வேலைப்பாடுகள் இன்றி அமைந்துள்ளது. மூலத்தானச் சுவர்களிலுள்ள அரைத் தூண்கள் எட்டுப் பட்டைகள் திட்டப்பட்டவை. அவை நன்கு அமைக்கப்பட்ட கலசம், கும்பம், பத்மம், பலகை என்ற உறுப்புகளை உடையன. போதிகைகளின் அடிப்பக்கம் சுருள்களாக அமைந்துள்ளது. நடுவில் சற்று உயரமான பட்டைகள் அமைக்கப்பட்டுள்ளன.

அர்த்தமண்டபத்தின் அரைத் தூண்கள் நான்கு பக்கங்கள் உடையன. அவற்றின் போதிகைகள் வேலைப்பாடுகள் இன்றிச் சரி வாக அமைந்துள்ளன.

கொடுங்கைக்குக் கீழும் போதிகைகளுக்கு மேலும் இடை யிடையே சிங்கம், காளை, யானை, அன்னம், சோழருடைய முத்திரை யாகிய (இலாஞ்சினை) புலி இவற்றின் வடிவங்கள் செதுக்கப்பட்ட

பூதகண வரிசை அமைந்துள்ளது. கொடுங்கை கனமாகவும் ஒரே வளைவுடையதாகவும் முத் தலைகளை உடைய கூடுகளால் அணி செய்யப்பட்டும் காட்சி வழங்குகிறது. கொடுங்கையின் கீழ் ஓரம் அரை வட்டங்களால் அணி செய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு மூலையிலும் அழகிய கொடிக்கருக்குகள் செதுக்கப்பட்டுள்ளன. அர்த்தமண்டபம், கருவறை என்ற இரண்டின் வெளிச் சுவர்களிலும் தேவகோஷ்டங்கள் உள்ளன.

யாளிவரிமானத்திற்குமேல் காணப்படும் சிகரம் பிற்காலத்தில் அமைக்கப்பட்டது. கல்வெட்டிலாகாவினர் அச் சிகரத்தைப் புதுப்பித்துள்ளனர். ஆனால், பழைய கிரீவம், சிகரம், ஸ்தூபி என்பன திருக்கட்டளை, கொடும்பாளூர் என்ற கோயில்களில் காணப்படுவன போலச் சதுர வடிவினவாகவே அமைந்திருக்கவேண்டும்.

தேவகோஷ்டங்களின்மேல் தோரணங்கள் செதுக்கப்பட்டுள்ளன. தேவகோஷ்ட விக்கிரகங்களில் பெரும்பாலானவை அவற்றிற்கு உரிய இடங்களில் காணப்படவில்லை. பிரமன், விஷ்ணு என்ற இரண்டு விக்கிரகங்கள் தரையில் புதைந்த நிலையில் காணப்படுகின்றன. தற்போது காணப்படும் தட்சிணாமூர்த்தி சிலை தேவகோஷ்டத்திற்கு ஏற்ற உருவினதாக இல்லை. மிகச் சிறிய அச் சிலை பிற்காலத்தில் வைக்கப்பட்டதாதல் வேண்டும். அர்த்தமண்டபத்தின் உட்புறம் 12 அடி நீளமும் 9¼ அடி அகலமும் உள்ளது. அதன் குறுக்கே அமைக்கப்பட்ட விட்டத்தை இரண்டு தூண்கள் தாங்கி நிற்கின்றன. விட்டம் விரிந்துவிடவே அர்த்தமண்டபமே விழுந்துவிடுமோ என்ற நிலை ஏற்பட்டுவிட்டது. உடனே அப்பொழுது இவற்றைப் பராமரித்துவந்த புதுக்கோட்டை சமஸ்தானத்தார் சுவர்களை ஒட்டி இரண்டு சுவர் தாங்கிகளை எழுப்பினர். அவற்றால் அர்த்தமண்டபத்தின் அழகே குலைந்துவிட்டதை அறிந்த கல்வெட்டிலாகாவினர் அந்தத் தாங்கிகளை யகற்றித் திருப்பணி செய்து வருகின்றனர். முற்பட்ட சோழர்கள் காலப் புகழ்ச் சின்னங்களான ஏனைய கோயில்களும் இத் தகைய கவனிப்பைப் பெறுவனவாக.

பிற்காலத்தில் 20 அடிப் பக்கமுடைய முகமண்டபமும் அம்மன் கோயிலும் எடுப்பிக்கப்பட்டன. ஆனால், தற்போது அவைகள் பாழடைந்துவிட்டன. கோயிலுக்கு முன்னுள்ள நந்திமண்டபத்தில் 10ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சிற்ப வேலைப்பாடுடைய அழகிய நந்தி விக்கிரகத்தை இன்றும் காணலாம்.

இக் கோயிலின் பழைய திருச்சுற்று மதிலின் அடிப்படையையே தற்போது காண்கிறோம்.

முன்பு குறிப்பிட்ட பிரமன், விஷ்ணு விக்கிரகங்களைத்தவிர கோயில் முகப்பில் சண்டேசுவரர், ஜேஷ்டாதேவி, பைரவர் என்ற விக்கிரகங்களும் தனியே கிடக்கின்றன.

குறிப்பு :

**ஸ்ரீபலிச் சடங்கு :**

ஸ்ரீபலி என்பது கோயிலில் நிகழும் முக்கியமான சடங்குகளில் ஒன்றாகும். இச் சடங்கின்போது சிவபெருமான் அல்லது திருமாலுடைய ஒரு குறிப்பிட்ட வடிவமுடைய உலோகத் திருமேனி, கோயிலுக்குள்ளாகவோ ஊரைச்சுற்றி வலமாகவோ, நன்கு அலங்கரிக்கப்பட்ட நிலையில் பலரும் புடைசூழக் கொண்டு வரப்படும். இறைவனுடைய இவ்வுலாக் காட்சி மக்களுக்கு முரசறைந்து தெரிவிக்கப்படும். இறைவன் உலா வரும்போது இன்னிசைக் கருவிகளை முழக்கியவாறே உடன் வருவார்கள்.

வடவார்க்காடு மாவட்டத்திலுள்ள கள்ளத்தூரில் உள்ள கும்பேசுவரர் கோயிலில் ஞாயிற்றுக்கிழமைகள் தோறும் ஸ்ரீபலிச் சடங்கு நிகழ்த்திப் பாசுபதமூர்த்தியை ஊரைச்சுற்றி வலமாகத் திருவுலாக் காட்சியில் கொண்டுவரத் தனிப்பட்ட முறையில் 37 காசுகள் நன்கொடை வழங்கப்பட்ட செய்தி கல்வெட்டொன்றால் அறியப்பட்டுள்ளது (நெ. 157—1916).

## 4. உய்யக்கொண்டான் திருமலை

**உஜ்ஜீவநாதர் கோயில் :**

உய்யக்கொண்டான் திருமலை என்ற ஊர் திருச்சியின் மேற்கே மூன்று கல் (4·8 கி.மீ.) தொலைவில் உள்ளது. இங்குள்ள உஜ்ஜீவநாதர் கோயில் தேவார காலத்தில் திருக்கற்குடி என வழங்கப்பட்டது. இக் கோயிலின் உள் திருச்சுற்றுப் பிராகாரத்தின் தூண் ஒன்றில் காணப்படும் பரகேசரிவர்மனின் 10ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதற் பராந்தகன் காலத்ததாகக் கொள்ளப்படுகிறது. அக் கல்வெட்டில், இங்குள்ள இறைவன் காவிரியின் தென் கரையிலமைந்த பிரமதேயமான நந்திவந்மமங்கலத்துத் திருக்கற்குடிப் பரமேசுவரர் எனக் குறிக்கப்பட்டுள்ளார். அக் கல்வெட்டு கொடும்பாளூர் இளங்கோவேளானுடைய பெருந்தனத்தைச் சார்ந்த பேரானன் வீர நாராயணன் என்ற செம்பியன் மாறராயன் இவ் விறைவன் திருமுன் ஒரு நந்தாவிளக்கு அமைப்பதற்கு 90 ஆடுகளை நன்கொடையாக வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

மூலத்தானத்தைச் சுற்றியுள்ள தாழ்வாரத்தின் தென்கிழக்கோடியிலுள்ள தூண் ஒன்றில் மதுரைகொண்ட பரகேசரியான முதற்

பராந்தகனுடைய 34ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று காணப்படு கிறது. அக் கல்வெட்டு முதற் பராந்தகனுடைய மகனுரான கண்டரா தித்த தேவருடைய தேவியாரும், மழப் பெருமாளுடைய மகளாரு மான பராந்தகன் மாதேவடிகளார் திருக்கற்குடிப் பெருமான் சந்நிதியில் நாள்தோறும் ஓர் உழக்கு நெய்யிட்டு நந்தாவிளக்கு எரிப் பதற்குத் தொண்ணூறு பெண் செம்மறியாடுகளை நன்கொடை வழங்கிய செய்தியை வெளியிடுகிறது.

வீரபாண்டியன் தலைகொண்ட பரகேசரியான இரண்டாம் ஆதித் தனுடைய இரண்டாம் ஆண்டில் இருங்கோளக்கோன் என்னும் புகழ் விப்பிரகண்டன் அவனிவல்லான் ஒரு விளக்கு எரிப்பதற்குத் தொண் ணூறு ஆடுகளை நன்கொடையாக வழங்கினுன் என அறிகிறோம்.

உத்தமசோழன் காலத்துச் சிதைவுற்ற கல்வெட்டு ஒன்று இவ் விறைவனுடைய நிவேதனங்களுக்காக வழங்கப்பட்ட நன்கொடை பற்றிப் பேசுகிறது. இக் கல்வெட்டு சகயாண்டு 901-க்குச் சரியான கலியுகம் 4080ஆம் ஆண்டு என்ற காலத்தில் ஏற்பட்டதாகும். இது உத்தம சோழனுடைய காலத்தை வரையறுப்பதற்குப் பெரிதும் உதவுகிறது.

முதல் இராசராசனுடைய 10ஆம் ஆண்டில், உத்தம சோழ னுடைய தாயாரான செம்பியன் மாதேவியார் 149 கழஞ்சுப் பொன்னும் 190 கழஞ்சு வெள்ளியும் 700 முத்துகளும் 3 இரத்தினங் களும் 27 வயிரங்களும் கொண்ட மகுடம் ஒன்றைத் திருக்கற்குடிப் பெருமானுக்கு வழங்கினுர்.

இவற்றுல், திருக்கற்குடிப் பரமேசுவரம் பராந்தகனுடைய 10ஆம் ஆண்டிற்கு முன்னரே எடுப்பிக்கப்பட்டு, அரச குடும்பத்தினருடைய நன்கொடைகள் பலவற்றையும் பெற்றது என்பது தேற்றம். இக் கோயிலைச் சேக்கிழார் பெருமான் தம் திருத்தொண்டர் புராணத்தில் குறிப்பிட்டுள்ளார் என்பது அறிந்து மகிழத்தக்கது.

## 5. கொடும்பாளூர்

1. திருப்பூதீசுவரம்
2. முசுகுந்தேசுவரம்

புதுக்கோட்டையிலிருந்து குடுமியாமலைக்கும் மணப்பாறைக்கும் செல்லும் சாலையில் கொடும்பாளூர் புதுக்கோட்டையிலிருந்து 25 கல் (40 கி.மீ.) தொலைவில் அமைந்துள்ளது.

கொடும்பை என்றும், இருக்குவேளூர் என்றும் வழங்கப்படும் கொடும்பாளூர் பண்டைக் காலந்தொட்டே வரலாற்றுப் புகழொடு விளங்கும் ஊராகும். கோனாடு என்ற பகுதியில் அமைந்த அவ்வூர் சோழ நாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் இடைப்பட்ட பெருவழி யில் பகைவர்களை ஏமாற்றுவதற்கு ஏற்ற வகையில் அமைந்துள்ளது. கொடும்பாளூரிலிருந்து தமிழகத் தலைநகர்களுக்கு முப்புறங்களில் பெருவழிகள் சென்ற செய்தி,

'கொடும்பை நெடும்புறக் கோட்ட கம்புக்கால்
பிறைமுடிக் கண்ணிப் பெரியோன் ஏந்திய
அறைவாய்ச் சூலத்து அருநெறி கவர்க்கும்'

என்று சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

சேக்கிழாருடைய பெரியபுராணத்தில் இடம் பெற்றுள்ள 63 நாயன்மார்களில் இடங்கழிநாயனார் என்பவர் இக் கொடும்பாளூரைச் சார்ந்தவர். இவர் அகத்தியர் தென்னாட்டுக்கு வந்தபோது துவாரகை யிலிருந்து தென்னாட்டிற்குக் கொண்டுவந்து குடியேற்றிய யாதவர் குலத்தைச் சார்ந்த வேளிர் தலைவர் எனக் கருதப்படுகிறார். இவர், கொங்கு நாட்டை வென்று கொணர்ந்த பசும்பொன்னால் சிதம் பரத்தில் நடராசர் நடனமாடும் சபையைப் பொன்வேய்ந்த ஆதித்த னுடைய குல முதல்வர் என்ற செய்தியைச் சேக்கிழார்,

'மன்னிய பொன்னம்பலத்து மணிமுகட்டில் பாக்கொங்கின்
பன்னுதுலைப் பசும்பொன்னால் பயில்பிழம்பாம் மிசை அணிந்த
பொன்னெடுந்தோள் ஆதித்தன் புகழ்மரபிற்குடி முதலோர்'

என்ற பாடற் பகுதியால் வெளியிடுகிறார்.

இடங்கழியார் தமது ஆட்சியில் சிவனடியார் ஒருவர் சிவபெரு மானுக்குப் படைக்க உணவு கிடையாமையால் அரண்மனைக் களஞ்சி யத்திலிருந்து சிறிது களவாட அச் செய்தி உணர்ந்து தாம் தேடிய செல்வத்தின் பயனைக் கொள்வாராய்க் களஞ்சியத்தையும், பொக்கி ஷத்தையும் ஏழைகளுக்கும் அடியார்களுக்கும் வாரி வழங்கிய வள்ள லாவார். கொடும்பாளூர் அடியார் பலரும் வாழ்ந்த புனிதத் தல மாகும். இவ்வூரில் ஆதியில் 108 சிவன் கோயில்கள் இருந்தன என்று இவ்வூர்த் தலபுராணம் குறிப்பிடுகிறது. இவ்வூரும் காஞ்சி, குடந்தை, உத்தரமேரூர் என்பனவற்றைப் போலக் கோயில் நகரமாக விளங் கியது. கயவர்களுடைய தீச் செயலால் இங்கிருந்த கலைச் செல்வங்கள் பல பாழாக்கப்பட்டுவிட்டன.

இக் கொடும்பாளூர் இருக்குவேளிர்கள் நியமத்து முத்தரையர்களைப் போலச் சிறந்த அரசியல் தலைவர்களாகவும் தானைத் தலைவர்களாகவும் விளங்கித் தென்னாட்டு ஆட்சியின் தலைமைப் பதவிக்குப் பல்லவர்களும், பாண்டியர்களும், சோழர்களும் தமக்குள் நிகழ்த்திய போர்களில் பெரும் பங்குக்கொண்டு விளங்கினர். இக் கொடும்பாளூரில் அரசர்கள், அரச குடும்பத்தினர் ஆகியோர்களின் தலைவிதியை முடிவு செய்யக்கூடிய போர்கள் பல நிகழ்ந்துள்ளன.

திருப்பூதீசுவரம் :

தற்போது கிடைத்துள்ள சான்றுகளைக் கொண்டு, இங்குள்ள கோயில்களில் மிகப் பழைமையானது முதல் ஆதித்தன் காலத்ததாகிய திருப்பூதீசுவரம் என்று அறிகிறோம்.

முசுகுந்தேசுவரர் ஆலயத்து முன்மண்டபத் தூண் ஒன்றில் காணப்படும், அரசனுடைய பெயர் சிதைவுற்ற 5ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று திருப்பூதிசுவரத்துக் கோயில் இறைவனாக ரிஷபப் பெருமானடிகள் பெயரைக் குறிப்பிடுகிறது. அதே மண்டபத்திலுள்ள மற்றொரு தூணில் காணப்படும் இராசகேசரிவர்மனுடைய 21ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று திருப்பூதிசுவரத்து மகாதேவருக்கு விளக்குக்காக வழங்கப்பட்ட நன்கொடை ஒன்றுபற்றிக் குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டின் எழுத்தமைப்பையும் உயர்ந்த ஆட்சியாண்டையும் நோக்க இது முதல் ஆதித்தன் காலத்தது என்பது உறுதியாகிறது.

1908ஆம் ஆண்டுக் கல்வெட்டறிக்கை குறிப்பிடும் செய்தி பின்வருமாறு:

'திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த திருப்பராய்த்துறைக் கல்வெட்டொன்றும் திருச்செந்துறைக் கல்வெட்டொன்றும் கொடும்பாளூர் திருப்பூதிசுவரத்தைப்பற்றிக் குறிப்பிடுகின்றன. திருப்பூதிசுவரம் என்பது பூதிவிக்கிரமகேசரியால் எடுப்பிக்கப்பட்ட மூவர் கோயிலின் பழைய பெயராக இருக்கலாம்'. இக் கூற்றினை ஆராய்வோம். மூவர் கோயில் 10ஆம் நூற்றாண்டில் பூதிவிக்கிரமகேசரியால் கட்டப்பட்டதாகும். அக் கோயில் சுந்தர சோழனான இரண்டாம் பராந்தகன் காலத்தது. எனவே, அக் கோயில் முன்பு குறிக்கப்பட்டுள்ள தூண் ஒன்றில் காணப்படும் இராசகேசரியான முதலாம் ஆதித்தனுடைய 21ஆம் ஆண்டில் குறிப்பிடப்பட்டுள்ள கோயிலாக இருக்க முடியாது என்பது ஒருதலை. அக் கல்வெட்டு பூதி விக்கிரம கேசரியின் காலத்துக்குச் சுமார் 70 ஆண்டு முற்பட்டது என்பது உணரத்தக்கது.

இந்த இராசகேசரிக் கல்வெட்டு முசுகுந்தேசுவரர் கோயிலின் முன் மண்டபத்தில் காணப்படுவதால் இக் கல்வெட்டில் குறிப்பிடப் படும் கோயில் முசுகுந்தேசுவரர் கோயிலாகவே இருக்கவேண்டும் என்று கருதுவதே இயற்கை. ஆனல், இம் முன் மண்டபம் முசுகுந் தேசுவரர் கோயிலின் மூலக் கட்டடத்தின் பகுதியன்று என்பதும், பிற் காலத்தில் எடுப்பிக்கப்பட்டது என்பதும் உளங்கொளத்தக்கன. பாழ்பட்ட மற்றொரு கோயிலின் தூண்கள் இம் மண்டபம் கட்டப் பயன்பட்டன என்பதும் உணரத்தகும். மேலும், இக் கோயிலைச் சார்ந்த கல்வெட்டுகள் யாவும் இக் கோயில் இறைவனைத் திருமுது குன்றம் உடையார் என்றே குறிப்பிடுகின்றன. புதிதாகக் கிடைத் துள்ள கல்வெட்டொன்றும் இக் கருத்தை வலியுறுத்துகிறது. அது மகிமாலய இருக்குவேள் என்பான் புதிய கோயிலாகிய முதுகுன்ற முடையார் கோயிலில் வழிபாடு நிகழ்த்த திருப்பூதீசுவரத்துச் சிவா சாரியார்களை நியமித்தான் என்று குறிப்பிடுகிறது. இதனல் ‘ திருப் பூதீசுவரம் வேறு ; திருமுதுகுன்றமுடையார் கோயில் வேறு; திருப்பூ தீசுவரம் பின்னதைவிடப் பழைமையானது ’ என்ற செய்தி வெளியா கிறது. மேலும், திருமுதுகுன்றமுடையார் கோயிலிலுள்ள சடைய வர்மன் வீர பாண்டியனுடைய 13ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று (கி.பி. 1270) அக் கோயிலுக்கு உள்ளூர்க் கைக்கோள முதலிமார்கள் சிலர் சிலநிலங்களை விலைக்கு விற்ற செய்தியைக் குறிப்பிடுகிறது. அந் நிலங்களுடைய எல்லைகளைக் குறிப்பிடுகையில் திருப்பூதீசுவரமுடை யார் கோயிலுக்குச் சொந்தமான தேவதான நிலங்கள் குறிப்பிடப் படுவதும் இரண்டும் வெவ்வேறு கோயில்கள் என்ற கருத்தை வலி யுறுத்தும். இவற்றை நோக்கத் திருப்பூதீசுவரம் என்பது முசுகுந்தே சுவரர் கோயிலும் அன்று; மூவர் கோயிலும் அன்று; கொடும்பாளூர்ப் பகுதியில் முதல் ஆதித்தன் காலத்தில் இருந்த பழங் கோயில் என்ப தும், அது தற்போது சுவடற்றுப் போய்விட்டது என்பதும் உணரப் படும்.

இச் செய்தியோடு தொடர்புடைய திருப்பராய்த்துறைக் கல் வெட்டுகள் இரண்டைக் கவனிப்போம். அங்குள்ள இராசகேசரி வர்மனின் 27ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதல் ஆதித்தன் காலத்த தாகும். எனவே, கி.பி. 896-ல் ஏற்பட்ட இக் கல்வெட்டு, பத்தாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் விக்கிரமகேசரியால் எடுப்பிக்கப்பட்ட மூவர் கோயிலோடு தொடர்புடையதாக முடியாது. மற்றோர் இராச கேசரிக் கல்வெட்டின் ஆட்சியாண்டு சிதைவுற்று விட்டதால் அக் கல்வெட்டில் குறிக்கப்பட்ட இராசகேசரி யார் என்பதை உறுதி செய்ய இயலவில்லை. தென்னவன் இளங்கோவேளானுன மறவன் பூதியாகும். பூதி விக்கிரமகேசரியும் ஒருவனே என்று கொள்வதற்கு இருவருடைய அரசியாரின் பெயரும் கற்றளிப்பிராட்டியார் என்று

குறிக்கப்படுவதையே சான்று காட்டுகின்றனர். அரசியின் பெயர் ஒன்றுதலாகிய சான்று ஒன்றைக்கொண்டே இருவரும் ஒருவர் என்று முடிவு செய்வது இயலாது.

திருச்செந்துறையிலுள்ள பரகேசரியின் இரண்டாம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டுச் சிதைவுற்றுக் காணப்படுகிறது. அது தென்னவன் இடுங்கோவேளான மறவன் பூதியாருடைய தேவியாரான நக்கன் விக்கிரகேசரியார் வழங்கிய நன்கொடைபற்றியதாகும் என்று கொள்கிறோம். கல்வெட்டுச் சிதைவுற்றிருப்பதால் உறவு முறையை நன்கு அறுதியிட்டுக் கூற முடியவில்லை. இக் கல்வெட்டுகள் விக்கிரமகேசரியின் காலத்தனவாகவே இவை சுந்தரசோழன், உத்தமசோழன் காலத்தன என்று கொள்ளத்தகும்.

முசுகுந்தேசுவரர் கோயில்:

15ஆம் நூற்றாண்டுவரை காணப்படும் கல்வெட்டுகளில் இக் கோயில் திருமுதுகுன்றம் உடையார் கோயில் எனவே வழங்கப்படுகிறது. பிறகு இப் பெயர் திரிந்து சோழ மன்னனுடைய புராண கால முன்னோருள் ஒருவனான முசுகுந்தன் பெயரால் முசுகுந்தேசுவரம் என்று வழங்கப்படுவதாயிற்று. திருமுதுகுன்றம் உடையார் என்பது தென் ஆர்க்காட்டு மாவட்டத்து விருத்தாசலக் கோயிலிலுள்ள இறைவனுக்கும் உரிய பெயர் என்பது மனங் கொளத்தக்கது. இதன் முன்மண்டபத் தூண்களின் கல்வெட்டுகள் பற்றி முன்னரே குறிப்பிட்டோம். இங்குள்ள கல்வெட்டுகளில் வரலாற்றறிவிற்குப் பயன்படுவது உடையார் மதுராந்தக சுந்தர சோழனுடைய சிதைவுற்ற கல்வெட்டாகும். அது கொடும்பாளூரிலிருந்த நகரத்தார் இருவரைப் பற்றிக் குறிப்பிடுகிறது. பூதிவிக்கிரமகேசரியினுடைய புரவலனும் பெருந்தலைவனுமான சுந்தர சோழனுடைய் கல்வெட்டு இவ்வூரில் காணப்படுவதும், சுந்தரசோழனுக்கும் மதுராந்தகன் என்ற விருதுப் பெயர் இருப்பதும் சோழர் வரலாற்றில் புதிதாக உணரப்பட்ட செய்திகளாம்.

மூலத்தானத்தின் அடித்தளத்தில் வெட்டப்பட்டனவாகப் புதியனவாகக் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டுகளால் திருமுதுகுன்றமுடையார் கோயிலாகிய கற்றளியை முதற்பராந்தகனுடைய பிற்பகுதியிலும் கண்டராதித்தன் காலத்திலும் வாழ்ந்த மகிமாலய இருக்குவேள் என்பான் நிறுவித் திருப்பூதீசுவரத்துச் சிவாசாரியர்களையே அப் புதுக்கோயிலின் இறைவழிபாட்டையும் நிகழ்த்துமாறு ஏற்பாடு செய்தமை புலனாவதால் இக் கோயில் பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியில் (கி.பி. 921-ல்) நிறுவப்பட்டுத் திருப்பூதீசுவரத்திற்கும் மூவர் கோயிலுக்கும் இடைப்பட்ட காலத்ததாதல் உணரப்படும்.

மூலக்கோயில் 13½ அடி பக்க அளவுள்ள கருவறையையும், 7 அடி 8 அங்குலம் முன்னோக்கி இணைந்துள்ள அர்த்தமண்டபத்தையும் கொண்டு, கிழக்கு நோக்கிய சந்நிதியை உடைய கற்றளியாகும். அதிட்டானம் (அடித்தளம்) அதிக வேலைப்பாடின்றி அமைந்துள்ளது. நடுவிலுள்ள தேவகோஷ்டத்தின் இருபுறமும் இரு அரைத் தூண்களும் ஒவ்வொரு சுவரின் இரு மூலைகளிலும் இரு அரைத் தூண்களும் ஆக ஒவ்வொரு சுவரிலும் நன்னான்கு அரைத் தூண்கள் உள்ளன. ஒவ்வொரு தேவகோஷ்டத்தின் மேலும் தோரணம் செதுக்கப்பட்டுள்ளது. போதிகைகள் சுருள்களும் நடுவில் பட்டையும் கொண்டுள்ளன. கொடுங்கையின்கிழ்ப் பூதகண வரிசையும் மேலே யாளி வரிமானத்தையும் காணலாம்.

இவ்விருதளக் கற்றளியின் மேற்றளத்தில் முற்பட்ட சோழர்கள் கால ஏனைய கோயில்களைப் போலவே சாலைகளும் கூடங்களும் அமைந்துள்ளன. இவற்றின் கீழ்க் கருவறையின் முதல் தளத்தின் கொடுங்கையும் யாளிவரிமானமும் காணப்படுகின்றன.

(மூவர் கோயில்—சுந்தரசோழன் காலத்தது)

## 6. கீழைப்பழுவூர்

**திரு ஆலந்துறை மகாதேவர் :**

கீழைப்பழுவூர் திருச்சி மாவட்டத்தில் திருச்சி—அரியலூர்ச் சாலையில் திருச்சியிலிருந்து 33 கல் (52·8 கி.மீ.) தொலைவில் உள்ளது.

பழைய கல்வெட்டுகளில் கீழைப்பழுவூர் பிரமதேயமான சிறு பழுவூர் என வழங்கப்பட்டது. மன்னு பெரும்பழுவூர் என்ற மேலைப் பழுவூர், தற்போதுள்ள கீழையூர், மேலைப்பழுவூர் என்ற இரண்டு ஊர்களையும் உள்ளடக்கியதாகும். இவ்வூரில் பசுபதீசுவரம், திருவாலந்துறை மகாதேவர் கோயில் என முற்பட்ட சோழர் காலக் கோயில்கள் இரண்டு உள்ளன.

**திருவாலந்துறை மகாதேவர் கோயில் :**

இக் கோயிற் சுவர்களில் முதற்பராந்தகனுடைய கல்வெட்டுகள் அவனுடைய 10ஆம் ஆண்டு முதல் 37ஆம் ஆண்டுவரை பரவியுள்ளன. அவனுடைய 12ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று மிக இன்றியமையாதது. அது வேலூர்ப் (வெள்ளூர்) போரில் பாண்டியர் ஈழர் என்ற இரு மன்னருடைய படைகளையும் முதற் பராந்தகன் வென்று வாகை சூடிய பெரு வெற்றியைக் கொண்டாடும் முகத்தான் குமரக்

கூற்றத்துச் சிறுபழுவூர் திருவாலந்துறை மகாதேவர் கோயிலில் ஒரு விளக்கு எரிப்பதற்கு 90 ஆடுகள் வழங்கப்பட்ட செய்தியை வெளியிடுகிறது. வடவார்க்காடு மாவட்டத்துத் திருப்பாற்கடல் என்ற ஊரிலுள்ள முதற் பராந்தகனுடைய 12ஆம் ஆண்டு கல்வெட்டு மற்ரென்றில் வேலூர்ப் போர்க்களத்தில் முன்னணிப் படையில் நின்று பொருது உயிர் துறந்த நான்கு வீரர்களுடைய ஆன்ம சாந்திக்காக நன்கொடையாளர் ஒருவர் நாள்தோறும் சாலை மண்டபத்தில் வேதங்களில் வல்ல அந்தணர் நால்வருக்கு உணவிடுதலுக்கு உடலாக (capital endowment) 120 கழஞ்சு பொன் கொடுத்து அதன் பொலிசையைக் கொண்டு அவ்வறச் செயலை முட்டாமல் நடத்த ஏற்பாடு செய்த செய்தி காணப்படுகிறது. முதற் பராந்தகன் காலத்து இவ் வேலூர்ப் போர் தென்னக வரலாற்றிலேயே ஒரு திருப்பமாக அமைகிறது. முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகளைக் கொண்டு இக் கோயில் முதற் பராந்தகன் காலத்தது என்று கொள்ளலாம். ஆனல், இது எப்பொழுது கற்றளியாக்கப்பட்டது என்று வரையறுத்துக் கூறிவதற்குரிய சான்றுகள் கிட்டவில்லை.

பரகேசரிவர்மன் ஒருவனுடைய 15ஆம் ஆண்டுக் கல்வெட்டுப் பழுவேட்டரையன் மறவன் கண்டன் என்ற தலைவன் திருவாலந்துறை மகாதேவர் கோயிலை எடுப்பித்தான் என்று குறிப்பிடுகிறது. இப் பரகேசரிவர்மன் பராந்தகனுக்குப் பிற்பட்டவனுயின் இக் கல்வெட்டு உத்தம சோழன் காலத்தது ஆகலாம். அங்ஙனமாயின், முதற் பராந்தகன் காலத்தில் தொடங்கப்பட்ட இப் பெருங் கோயிலின் கட்டட வேலை உத்தம சோழன் ஆட்சியில் முடிவுற்றிருக்கலாம் என்று கொள்ள வேண்டியவராயுள்ளோம்,

இவ்வொருதளக் கற்றளி கிழக்கு நோக்கிய சந்நிதியை உடையது. இது சதுரமான கருவறையையும் வட்டமான சிகரத்தையும் உடையது. கருவறையின் பக்க அளவு 14 அடி. அர்த்தமண்டபம் கிழக்கு மேற்கில் 6 அடி கருவறையை ஒட்டி முன்னேக்கி அமைந்திருக்கிறது. அதனை அடுத்துக் காணப்படும் முகமண்டபம் 29 அடி நீளமுடையது.

கருவறையின் தேவகோஷ்டங்களில் தெற்கில் தட்சிணுமூர்த்தியையும் மேற்கில் இலிங்கோத்பவரையும் வடக்கில் பிரமனையும் காணலாம். அர்த்தமண்டபத்தின் தென் சுவரில் விநாயகரும் வட சுவரில் துர்க்கையும் காட்சி வழங்குகின்றனர். அர்த்தமண்டபத்தின் முகப்பில் பழைய துவாரபாலகர் இருவர் காணப்படுகின்றனர். அர்த்தமண்டப வாசற்படியின் உத்தரத்திற்குமேல் அநந்தசயனப் பெருமாளின் சிலையைக் காணலாம். தந்தையாருடைய ஆணைப்

படித் தாயைக் கொன்ற பாவம் தொலையப் பரசுராமர் தவம் செய்யும் கோலம் அது என்று ஊர் மக்கள் கூறுகின்றனர்.

கொடுங்கையிலுள்ள கூடுகளின் நடுவில் திரிபுராந்தகர் வடிவமும், அடியார்கள் சூழ்ந்த இலிங்க வடிவமும் செதுக்கப்பட்டுள்ளன.

தேவகோஷ்டங்கள் மகர தோரணங்களால் அணி செய்யப் பட்டுள்ளன. தட்சிணாமூர்த்தி கோஷ்டத்தின்மேல் காணப்படும் மகர தோரணத்தினிடையே நடராசர் வடிவத்தைக் காணலாம். ஏனைய தேவகோஷ்டங்களின் மேலுள்ள மகர தோரணங்களில் யோகநரசிம்மர், கஜசம்ஹாரமூர்த்தி, அர்ச்சுன பார்த்தசாரதிகள், பள்ளிகொண்ட பெருமாள், இலிங்கத்தை வழிபடும் அடியார் இருவர் என்ற சிலைகளைக் காணலாம்.

முகமண்டபத்தில் காலசம்ஹாரர், அர்த்தநாரீசுவரர், கல்யாண சுந்தரர், கங்காளமூர்த்தி, பையரவர் ஆகிய சிலைகள் காணப்படு கின்றன.

கோயில் திருச்சுற்றுமாளிகையிலுள்ள மேல் மூடிய தாழ்வாரத் தில் துர்க்கை, சண்டேசுவரர், சம்பந்தர், அப்பர், தட்சிணாமூர்த்தி, சப்த ரிஷிகள், சப்த மாதர்கள், கணேசர், வீரபத்திரர் ஆகிய சிலைகள் நிறுவப்பட்டுள்ளன. இவற்றில் சில பழைய பரிவாரக் கோயில்களைச் சார்ந்தனவாகலாம். இங்குள்ள உலோகத் திருமேனி களில் திரிபுராந்தகர் சிலையும் சுந்தரமூர்த்தி சிலையும் கண்கவர் வனப்பினவாம்.

## 2. பசுபதீசுவரம்:

இக் கோயில் திருவாலந்துறை மகாதேவர் கோயிலை அடுத்தே அமைந்துள்ளது. பரகேசரிவர்மனுடைய கல்வெட்டுகளில் இக் கோயில் மறவனீசுவரம் என்று வழங்கப்படுகிறது. பரகேசரிவர்ம னுடைய 9ஆம் ஆண்டில் அடிகள் பழுவேட்டரையன் மறவன் கண்ட னாரின் மாமடிகள் மறவனீசுவரத்து மகாதேவர் கோயிலில் ஒரு விளக்கு எரிப்பதற்கு மூலதனமாக நிலம் ஒன்றை வாங்கி நன்கொடை யாக அளித்தார். பரகேசரிவர்மனுடைய 9ஆம் ஆண்டுக் கல்வெட்டு மற்றொன்று திருவாலந்துறை மகாதேவர் கோயிலில் உள்ளது. அது பழவேட்டரையன் மறவன் கண்டனார் என்ற இதே தலைவரே சில நிலங்களை விலைக்கு வாங்கி மறவனீசுவரத்துத் தேவர் கோயிலில் பணி புரியும் பல அலுவலர்களுக்கு மானியமாகவும், திருவிளக்கிற்கு மூல தனமாகவும் வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. இக் கல்வெட்டுகள் முதற் பராந்தகனுடையனவா அல்லது உத்தமசோழனுடையனவா

என்பதை உறுதியாக முடிவுசெய்ய இயலவில்லை. மறவன்கண்டன் என்ற பெயர் சுந்தரசோழனுடையது என்று கருதத்தக்க பல இராச கேசரிக் கல்வெட்டுகளில் இடம் பெற்றுள்ளது.

முதற் பராந்தகனுடைய 29, 33, 36ஆம் ஆண்டுகளைச் சார்ந்த மூன்று கல்வெட்டுகள் இக் கோயிலில் காணப்படுகின்றன. 36ஆம் ஆண்டுக் கல்வெட்டு, கோயிலில் இறைவனுடைய திருமஞ்சனத்திற்காக அமைந்த கிணற்றிலிருந்து கால்நடைகளுக்கு நீர் வார்க்கவும், நந்தன வனத்திற்கு நீர் பாய்ச்சவும் இரண்டு ஏற்றங்கள் இறைப்பார்க்கு மானியம் வழங்கிய செய்தியை வெளியிடுகிறது.

இக் கல்வெட்டுகளை நோக்க மறவனீசுவரமாகிய தற்காலத்துப் பசுபதீசுவரர் கோயில் முதற் பராந்தகன் காலத்திலேயே இருந்தது என்பதும், இக் கோயிலுக்குப் பழுவேட்டரயன் மறவன் கண்டன் பல நன்கொடைகள் வழங்கியுள்ளான் என்பதும் உறுதியாகின்றன. ஒரு கால் இக் கோயில் கண்டன் என்பவனால் தன் தந்தையின் நினைவுக் குறியாக அவன் பெயரில் எடுப்பிக்கப்பட்டிருக்கலாம். அரசாங்கக் கல்வெட்டிலாகாவினர் 'மறவனீசுவரம் என்று பண்டு வழங்கிய தற்காலப் பசுபதீசுவரம் பழுவூர்வாசியான பழுவேட்டரையன் கண்டன் மறவனால் எடுப்பிக்கப்பட்டிருக்கவேண்டும்' என்று குறிப்பிடுகின்றனர். மறவன் கண்டன் என்ற கல்வெட்டுகளில் காணப்படும் பெயரைக் கண்டன் மறவன் என்று கல்வெட்டிலாகாவினர் மாற்றிக் குறிப்பிட்டமை குழப்பம் தருவதாகும்.

## 7. கோவிந்த புத்தூர்

**கங்கா ஜடாதரர் கோயில் :**

கோவிந்தபுத்தூர் திருச்சி மாவட்டத்தில் உடையார்பாளையம் பகுதியில் உள்ளது. திருநாவுக்கரசர் இங்குக் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள இறைவனைப்பற்றிப் பாடியுள்ளார். அக் காலத்தில் இக் கோயில் கொள்ளிடக்கரையிலமைந்த கோவிந்தபுத்தூரிலுள்ள திருவிசயமங்கை என்று வழங்கப்பட்டது. பாண்டவருள் ஒருவனான அர்ச்சுனனாகிய விசயனால் இக் கோயில் வழிபடப்பட்டதால் இது விசயமங்கை அல்லது விசயமங்கலம் என்று வழங்கப்பட்டதாகத் தல புராணம் குறிப்பிடுகிறது.

இங்குப் பரகேசரியின் கல்வெட்டுகள் பல அடைமொழியின்றிக் காணப்படுகின்றன. அவற்றுள் பெரும்பாலான உத்தமசோழன் காலத்தனவாகலாம்.

மூலத்தானத்தின் தென்சுவரில் காணப்படும் முதற் பராந்தகனுடைய 22ஆம் ஆண்டுக் கல்வெட்டே இக் கோயிலில் உள்ள கல்வெட்டுகளில் மிகப் பழைமையானது. அது விசயமங்கலத்து மகாதேவருக்குத் திருநாமத்துக்காணியாக மூன்று வயல்கள் வழங்கப்பட்ட செய்தியை அறிவிக்கிறது. இவ்வூர் பராந்தக சதுர்வேதிமங்கலம் எனவும், பின்னர் சுந்தர சோழனுடைய தேவியாரும் முதல் இராசராசனுடைய தாயாருமான வானவன் மாதேவியாரின் பெயரால் பெரிய வானவன் மகாதேவி சதுர்வேதிமங்கலம் எனவும் வழங்கப் பட்டது.

இங்குள்ள உத்தம சோழனுடையனவாகக் கருதப்படும் கல்வெட்டுகளில் அவனுடைய 14ஆம் ஆண்டைச் சார்ந்த தமிழ், வடமொழி என்ற இரு மொழிப் பகுதிகளை உடைய கல்வெட்டு, விசயமங்கலத்து மகாதேவர் கோயிலின் ஸ்ரீவிமானம் அம்பலவன் பழுவூர் நக்கனான விக்கிரம சோழ மாராயனால் கருங் கற்களைக்கொண்டு எடுப்பிக்கப்பட்ட செய்தியை வெளியிடுகிறது. தமிழ்ப் பகுதியில் இக் கல்வெட்டு, பரகேசரியின் 14ஆம் ஆண்டைச் சார்ந்தது எனவும், வடமொழிப் பகுதியில் இக் கல்வெட்டு விக்ரமசோழனுடைய 14ஆம் ஆண்டைச் சார்ந்தது எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்விரண்டையும் நோக்க விக்கிரம சோழன் என்பது உத்தம சோழனுடைய விருதுப் பெயர்களில் ஒன்றாகலாம் என்று தோன்றுகிறது. ஸ்ரீ விமானத்தை எடுப்பித்த அருஞ்செயலுக்காக உடையார் பெருந்தரத்தைச் சார்ந்த பழுவூர் நக்கனான இவ்வதிகாரிக்கு உத்தம சோழன் 'விக்கிரம சோழ மாராயன்' என்ற பட்டம் வழங்கினான். உத்தம சோழன் காலத்தவனான தலைவன் ஒருவன் இவ் விமானத்தை எடுப்பித்தான் என்று கூறப்படுவதாலும், இக் கோயிற்சுவரில் பராந்தக (முதல்) னுடைய கல்வெட்டு காணப்படுவதாலும், முதற் பராந்தகன் காலத்தில் தொடங்கப்பட்ட இக் கோயிற்பணியை இத் தலைவன் முடித்தான் என்றாவது, உத்தமசோழன் காலத்தில் இக் கோயில் கற்றளியாகப் புதுப்பிக்கப்பட்டபின் முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகள் மீண்டும் வெட்டப்பட்டன என்றாவது கொள்ள வேண்டியவராயுள்ளோம்.

முதல் இராசராசனுடையது என்று கருதப்படும் இராசகேசரியின் மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டொன்று பெரிய ஸ்ரீ வானவன் மகாதேவி சதுர்வேதி மங்கலத்துச் சபையார் வினயாபரண விண்ணகர எம்பெருமான் கோயிலின் முன் மண்டபத்தில் கூடிய செய்தியைத் தெரிவிக்கிறது. அக் கல்வெட்டு மும்முடிச் சோழனுடைய பெருந்தனத்தைச் சார்ந்த குவளாலம் அம்பலவன் பழுவூர் நக்கன் என்ற விக்கிரமசோழ மாராயனிடமிருந்து சபையார் 200 கழஞ்சுப் பொன்கொண்டு அவன்

இக் கோயிலுக்கு விட்ட $1\frac{1}{4}$ வேலி நிலத்தை இறையிலியாக்கிய செய்தியையும் தெரிவிக்கிறது. இக் கல்வெட்டால் இங்கு விண்ணகரம் ஒன்றிருந்த செய்தியை உணர்கிறோம். அக் கல்வெட்டு வாசகம் பின் வருமாறு :

'நடுவில் ஸ்ரீ கோயிலான வினயாபரண விண்ணகரம் எம்பெருமானடிகள் ஸ்ரீ கோயிலின் முன்பில் கூடத்தில் கூடி, பெருங்குறி கூட்டம் குறைவறக் கூடியிருந்து பணிப் பணியால்பணித்து ஸ்ரீ விசயமங்கலமுடைய பரமேசுவரருக்கு ஒட்டி இறைகாவல் ஒட்டோலையிட்டுக் குடுத்த பரிசாவது—இப் பரம சுவாமிக்கு ஸ்ரீ விமானம் கல்லாலே எழுந்தருளுவித்தான் உடையார் ஸ்ரீ மும்முடிச் சோழ தேவர் பெருந்தரத்துக் குவளாலமுடையான் அம்பலவன் பழுவூர்நக்கனுன. விக்கிரம சோழ மகாராசன்'.

இராசகேசரி முதல் இராசராசனுடைய 5ஆம் ஆண்டில் இத் தலைவன் இராசராச பல்லவராயன் என்ற விருதுப் பெயர் வழங்கப் பட்டுள்ளான்.

உத்தமசோழன் காலத்தில் பதவியேற்ற இத் தலைவன் முதல் இராசராசன் காலத்திலும் அவன் நம்பிக்கைக்கு உரியவனாகி உயர்ந்த அமைச்சர் பதவியில் இருந்த செய்தி பாராட்டத்தக்கது.

முதல் இராசராசனுடைய ஏழாம் ஆண்டில் இதே தலைவன், சாத்தபோசன் வெண்ணெய்க் கிரமவித்தன் என்பானை இக் கோயில் நிர்வாகியாக்கி, அவனுடைய அதிகாரத்தை எதிர்த்துக் கீழ்ப்படியாமல் நடந்த வேளாள குலத்து வேலையாட்களை நீக்கவும், அந்தண குலத்து அலுவலர்களுக்கு 25 கழஞ்சுப் பொன் தண்டம் விதிக்கவும் ஊர்ச் சபையார் மூலம் அவனுக்கு உரிமை வழங்கினான். இவ்வாண்டில் இவ்வூர்க் கோயில் அலுவலர்களிடையே அமைதியின்மையும் கீழ்ப்படியாமையும் இருந்தன என்பதும், அவற்றை அகற்றிக் கோயில் நிர்வாகத்தை நன்முறையில் அமைதியாக நடத்த கடுமையான ஒழுங்கு நடவடிக்கை எடுக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது என்பதும் உணரப்படுகின்றன.

முதல் இராசராசனுடைய ஏழாம் ஆண்டுக் கல்வெட்டு இத் தலைவன் இவ்வூர்க் கோயிலில் கூத்தப்பெருமான், உமாபட்டாரிகை என்ற உலோகத் திருமேனிகளை எடுப்பித்து, அவற்றிற்குப் பொன்னணிகள் பல வழங்கிய செய்தியை வெளியிடுகிறது.

முதல் இராசேந்திரனுடைய பணிமகன் ஒருவன் ஆடவல்லார் நம்பிராட்டியார் கோயிலுக்குப் பாத்திரங்கள் பலவற்றை நன்கொடை

யாக வழங்கினன் என அறிகிறேம். மூன்றும் குலோத்துங்கன் ஆட்சியில் கோயில் செல்வத்தைத் தவறான வழிகளில் செலவிட்ட பணி மகன் ஒருவனுடைய சொத்துக்கள் பறிமுதல் செய்யப்படவும், அவனை வேலையிலிருந்து நீக்கவும் ஆணை வழங்கப்பட்டது.

மூன்றும் இராசராசன் காலத்தில் (கி.பி. 1248) இவ்வூரில் திருத்தொண்டத்தொகை மடம் என்ற அறநிலையம் இருந்ததாக அறிகிறேம்.

பரகேசரிவர்மன் சுந்தர சோழனுடைய இரண்டு கல்வெட்டுகளில் இப் பெரிய வானவன் மகாதேவி சதுர்வேதி மங்கலத்தில் சேக்கிழான் அரையன் சங்கர நாராயணனை தொண்டைநாட்டுக் காவனூர் சோழ முத்தரையனல் கைலாசத்துப் பரமசுவாமி அல்லது கைலாசத்து ஆழ்வார் கோயில் என்ற மற்ருெரு சிவன் கோயில் எடுப்பிக்கப்பட்டு, அதனுடைய நித்திய நைமித்திகச் செலவினங்களுக்குத் தேவதானமாக நிலங்கள் வழங்கப்பட்ட செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

இவ்வூரில் முற்பட்ட சோழர்கள் காலத்தில் இரண்டு சிவன் கோயில்களும் ஒரு விஷ்ணு கோயிலும் இருந்தன என்று அறிகிறேம்.

## 8. நங்கவரம்

1. சுந்தரேசுவரர் கோயில்.
2. பிடாரி கோயில்.

நங்கவரம் திருச்சிக்கு வடகிழக்கில் 15 கல் (24 கி.மீ.) தொலைவில் உள்ளது. இங்கு முற்பட்ட சோழர்கள் காலத்துச் சிவன் கோயில் ஒன்றும் பிடாரி கோயில் ஒன்றும் காணப்படுகின்றன. உறையூர்ச் சோழன் ஒருவனுடைய மகள் நரித் தலையுடன் பிறந்து, இவ்வூரிலுள்ள சிவபெருமானை வழிபட்டு நரித்தலை நீங்கி அழகிய மனித உருப் பெற்ருள் ஆதலின் இவ்வூர் நங்கை பிரமதேயபுரம் என்று வழங்கப்பட்டது. அவ்வூர் பிற்காலத்தில் நங்கவரம் என்று மருவிவிட்டது.

இவ்வூர்க் கல்வெட்டுகளில் நங்கை பிரமதேயம் எனவும், முதற் பராந்தகனுடைய புதல்வர்களுள் ஒருவனை அரிஞ்சிகையின் பெயரால் அரிஞ்சிகை சதுர்வேதிமங்கலம் எனவும் வழங்கப்படுகிறது. தற்போது சுந்தரேசுவரர் என்று வழங்கப்படும் இவ்வூர்ச் சிவபெருமான் கல்வெட்டுகளில் திருமறவனிசுவரத்துப் பெருமான் என்று வழங்கப்படுகிருர்.



54. தட்சிணுமூர்த்தி,
திருமூலஸ்தானர்
கோயில்,
திருக்கழுக்குன்றம்



55. துர்க்கை,
திருமூலஸ்தானர்
கோயில்,
திருக்கழுக் தன்றம்



56. லிங்கோத்பவர்,
கீழப்பழுவூர்



57. பிரமன்,
கீழப்பழுவூர்



58. கங்காளமூர்த்தி,
கீழப்பழுவூர்



59. கல்யாணசுந்தரர்,
கீழப்பழுவூர்



60. துர்க்கை,
கீழப்பழுவூர்



61. சிவன் கோயில்,
நங்கவரம்

இங்குள்ள பரகேசரிக் கல்வெட்டுகளில் சில முதல் பராந்தகன் காலத்தனவோ அரிஞ்சயன் காலத்தனவோ ஆகலாம். நான்காம் ஆண்டுக் கல்வெட்டில் காவிரியின் தென்கரையிலமைந்த தேவதான பிரமதேயமான அரிஞ்சிகை சதுர்வேதிமங்கலத்துக் கோயிலில் முன்பே நியமிக்கப்பட்ட முரசறைவார் இருவரோடு புதியராக நியமிக்கப் பட்ட இருவருடைய சீவிதத்துக்கு மானியம் வழங்கப்பட்ட செய்தி இடம்பெற்றுள்ளது. அதே ஆண்டுக் கல்வெட்டு மற்றொன்றில் ஒரு நந்தனவனம் நிறுவி, அதனைப் பராமரிக்கும் மூன்று தோட்டக்காரர் களுக்கும் ஐந்து வேலைக்காரர்களுக்கும் சீவிதத்திற்காக மானியம் விடப்பட்ட செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

பரகேசரிவர்மனுடைய 10ஆம் ஆண்டில் செம்பியன் இருக்கு வேளாகிய பூதிபராந்தகனுருடைய தேவியாரான சோழப் பெருந் தேவியார் என்னும் பெருநங்கை, தன் பிறந்த நாளன்று ஏற்பட்ட சூரிய கிரகணத்தின்போது அரிஞ்சிகை சதுர்வேதிமங்கலத்துப் 'பெருங் குறிச் சபையாரிடம் 1080 கழஞ்சுப் பொன் கொடுத்து, அதற்குரிய நிலத்தை விலைக்கு வாங்கி, மறவனீசுவரத்துப் பெருமானடிகளுடைய நிவேதனம், அர்ச்சனை, திருவிழாக்கள் முதலியவற்றிற்காகத் தேவ தானமாக விடுத்தாள். அக் கல்வெட்டுப் பகுதி பின்வருமாறு: 'செம்பியன் இருக்குவேளாரான பூதிபராந்தகனுர் தேவியாரான சோழப் பெருந்தேவியாரான பெருநங்கை திருப்பிறந்தநாள் சூரிய கிரகணமாக உதகம் பண்ணிப் பெருமானடிகள் மேலேற்றின மாற் றிலி செம்பொன் 1080 கழஞ்சு'. முதற் பராந்தகன் என்று கொள்ளப் படும் பரகேசரிவர்மனுடைய 10ஆம் ஆண்டு முதல் 14ஆம் ஆண்டு வரை இதே செம்பியன் இருக்குவேளான பூதி பராந்தகன் அந்த நல்லூர்க் கோயிலுக்கு நன்கொடை வழங்கியுள்ளான்.

இராசகேசரிவர்மனுடைய 4ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று கொடும்பாளூரையடுத்த கார்க்கோட்டை என்ற ஊரைச் சார்ந்த திரை லோக்கியன் என்னும் கோதண்ட ராமமாராயன் உள்ளூர்ச் சபையா ரிடம் 80 கழஞ்சுப் பொன் கொடுத்து ஒரு நிலத்தை விலைக்கு வாங்கி, அரிஞ்சிகை சதுர்வேதிமங்கலத்தின் குளத்தில் விடப்படும் படகைப் பராமரிப்பதற்கு மானியமாக வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. கோதண்டராமன் என்பது முதல் ஆதித்தனுடைய விருதுப்பெயர் ஆதலின் இவ்விராசகேசரிக் கல்வெட்டைக் கண்டராதித்தன் காலத் தது என்று கொள்வதைவிட முதல் ஆதித்தன் காலத்தது என்று கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகிறது.

பரகேசரிவர்மனுடைய 12ஆம் ஆண்டில் லக்கவித்தியாதர பிரஹ்மமாராயன் என்பான் சில தரிசு நிலங்களைச் சீர்திருத்தி, ஊர்ச்

சபையாருடைய இசைவு பெற்று அவற்றை அம்பிகையான உமாபட்டாரிகை பெயரால் மானியமாக வழங்கினான். இப் பரகேசரி முதற் பராந்தகனாகவோ உத்தமசோழனாகவோ இருக்கலாம்.

**2. பிடாரி கோயில் :**

இவ்வூரிலுள்ள பிடாரி கோயில் முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகளில் 'பிடாரியார் சாத்தனூர் நங்கை கோயில்' என்று வழங்கப்படுகிறது. இக் கல்வெட்டு அரிஞ்சிகை சதுர்வேதிமங்கலத்திலுள்ள இப் பிடாரி கோயிலின் நிவேதனத்திற்கு வழங்கப்பட்ட நன்கொடையைக் குறிக்கிறது. இக் கல்வெட்டால் இவ்வூர் முதற் பராந்தகன் காலத்திலேயே அரிஞ்சிகை சதுர்வேதிமங்கலம் என்று வழங்கப்பட்ட செய்தியை உணர்கிறோம். இக் கோயிற் சுவர்களிலுள்ள இராசகேசரியின் பெயரைக்கொண்ட 4ஆம் ஆண்டுக் கல்வெட்டும் 12ஆம் ஆண்டுக் கல்வெட்டும் சுந்தரசோழன் காலத்தன ஆகலாம். இக் காளி கோயில் 'காளிகணத்தார்' என்ற தனிப்பட்ட நிர்வாகக் குழுவினரால் பராமரிக்கப்பட்டுவந்தது என்று அறிகிறோம்.[1]

நங்கவரம் சுந்தரேசுவரர் கோயில் முதற் பராந்தகன் காலத்தைச் சார்ந்த, கிழக்கு நோக்கிய சந்நிதியை உடைய இருதளக் கற்றளியாகும்.

சதுரமான கருவறையின் பக்க அளவு 19 அடி 4 அங்குலம். அதன் மூன்று சுவர்களும் நடுவில் பிதுங்கியுள்ளன. கருவறையின் தேவகோஷ்டங்களில் முன்பு தென்புறம் வீணாதர தட்சிணாமூர்த்தியின் சிலையும், மேற்குப் புறத்தில் விஷ்ணு சிலையும், வடபுறத்தில் பிரமன் சிலையும் காணப்பட்டன. தற்போது தட்சிணாமூர்த்தியின் சிலை சப்த மாதர் கோயிலில் வைக்கப்பட்டுள்ளது. பிரமன் சிலை இரண்டாக உடைந்து தரையில் கிடக்கிறது. அர்த்தமண்டபம் 13 அடி 6 அங்குலம் முன்னோக்கி உள்ளது. அதன் முகப்பில் இரண்டு துவாரபாலகர் சிலைகள் உள்ளன. பிற்காலத்தில் எடுப்பிக்கப்பட்ட முகமண்டபம் 32½ அடி நீளமும் 23 அடி அகலமும் உடையது.

அரைத் தூண்கள் 7 அடி உயரம் உடையன. அவற்றில் கும்பங்களும் பலகைகளும் உள்ளன. போதிகைகள் சுருள்களும் நடுவில் பட்டையும் பெற்றுள்ளன.

[1] கம்பவர்மனுடைய ஆட்சியில் கொடும்பாளூரினரான விடேல்விடுகு இளங்கோவரையர் தேவியான பூதி அரிஞ்சிகை திருவொற்றியூர் ஆதிபுரீசுவரர் கோயிலுக்கு 27 கழஞ்சுப் பொன்னை நன்கொடை வழங்கினாளென அறிகிறோம். கே. ஆர். வேங்கடராமய்யர் இப் பூதி அரிஞ்சிகையின் பெயரால் அரிஞ்சிகை சதுர்வேதிமங்கலம் அமைந்திருக்கவேண்டும் என்று கொண்டதற்குச் சான்றுகள் இல்லை.

கொடுங்கையின் கீழே பூதகண வரிசையையும் மேலே யாளி வரிமானத்தையும் காணலாம். கூடுகளின் நடுவில் மனிதத் தலைகளும் மேலே சிங்கத் தலைகளும் செதுக்கப்பட்டுள்ளன.

இரண்டாந் தளத்தில் சாலைகளும் கூடங்களும் உள்ளன. அதன் முகட்டில் மற்றொரு கொடுங்கையும் யாளி வரிமானத்தையும் காண்கிறோம்.

கிரீவத்தின் நான்கு புறங்களிலும் தேவகோஷ்டச் சிலைகள் உள்ளன. கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் நான்கு இடபங்கள் காணப்படுகின்றன.

சிகரமும் ஸ்தூபியும் உருண்டையானவை. அவை பிற்காலத்தில் திருப்பணி செய்யப்பட்டுள்ளன.

பழைய பரிவார தேவதைகளின் கோயில்களில் தற்போது வண்டிக் கூடு போன்ற மேற்றளத்தை உடைய நீண்ட சதுரமாக அமைந்த சப்தமாதர் கோயிலும், தட்டையான மேற்றளத்தை உடைய கணபதி கோயிலும் வட்டமான சிகரங்களை உடைய விக்கிரகங்கள் இல்லாத வேறிரண்டு கோயில்களுமே எஞ்சியுள்ளன.

## 9. சோமூர்

**சோமேசுவரம் உடையார் கோவில் :**

பழைய கொங்கு நாட்டைச் சார்ந்த சோமூர் திருச்சி மாவட்டத்துக் கருவூர்த் தாலூக்காவைச் சார்ந்தது.

இக் கோயில் சுவர்களிலுள்ள கல்வெட்டுகளில் பழைமையானது பரகேசரிவர்மனுடைய 6ஆம் ஆண்டுக் கல்வெட்டாகும். அது திருநொளம்பலூர் மகாதேவர் கோயிலில் ஒரு விளக்கு எரிப்பதற்குத் தானதுங்கத்தெரிஞ்ச கைக்கோளர் குழுவைச் சார்ந்த பராந்தகன் புருஷோத்தமன் என்பான் வழங்கிய நன்கொடைபற்றியதாகும். தானதுங்கன் என்பது முதற் பராந்தகனுடைய விருதுப் பெயராகலானும், இந் நன்கொடை வழங்கியவன் பராந்தகன் என்ற பெயருடையன் ஆகலானும் இக் கல்வெட்டு முதற் பராந்தகன் காலத்தது என்பது வெளிப்படை. முதல் ஆதித்தன் கொங்கு நாட்டை வென்றதாக்கூறிக் கொள்கிறான். அவனையடுத்து அரியணையேறிய முதற் பராந்தகனுடைய 6ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் கொங்குநாட்டுப் பகுதியில் காணப்படுவதால் கொங்கு நாடு முதல் ஆதித்தன் ஆட்சியிலும் முதற் பராந்தகன் ஆட்சித் தொடக்கத்திலும் சோழர்கள் வசம் இருந்த

செய்தி வலியுறுகிறது. முதற் பராந்தகனுடையதாகக் கருதப்படும் பரகேசரி வர்மனின் 34ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றும் விளக்கு எரிப்பதற்கு வழங்கப்பட்ட நன்கொடைபற்றியதே.

முதல் இராசராசனுடைய 17ஆம் ஆண்டில், சோழ நாட்டின் நிலங்களை அளந்து கணக்கிடும் அதிகாரியான உலகள விட்டத் திருவடிகள் சாத்தன் என்பான் இக் கோயில் கணக்குகள் பற்றி விசாரணை நிகழ்த்தித் தவறு செய்தவர்களுக்கு அபராதம் விதித்தான். அவ்வபராதத் தொகையைக் கொண்டு தேவானப் (தேவகண) பள்ளியிலுள்ள திருநொளம்பலூர் பரமேசுவரருக்குப் பொன்னாலொரு நெற்றிப் பட்டம் அமைக்கப்பட்டது. முதல் இராசராசனுடைய 21ஆம் ஆண்டில் திருவிளக்கிற்கும், அவிசுபலி அர்ச்சனா போகத்திற்கும் பல நன்கொடைகள் வழங்கப்பட்டன.

முதல் இராசராசன் காலத்துக் கல்வெட்டொன்றால் நீற்றலை வாயன் தென்னுணிகாமன் எழுவான் என்ற தேவகணப் பள்ளி அரையன் இக் கோயிலில் உள்ள துவாரபாலகர் சிலைகளைச் செதுக்குவித்தான் என அறிகிறோம்.

இக் கோயில் பழைய கொங்கு நாட்டில் முதற் பராந்தகன் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட கோயிலாகும்.

## 10. நீர்ப்பழனி

**வளர்மதீசுவரர் கோயில் :**

நீர்ப்பழனி புதுக்கோட்டையிலிருந்து கீரனூர், விராலிமலை செல்லும் சாலையில் 21 கல் (33.6 கி.மீ.) தொலைவில் உள்ளது.

இக் கோயிலின் நந்திமண்டபத்தருகில் காணப்படும் பாறைப் பலகையில் சடையவர்மன் பராந்தகன் நெடுஞ்செழியன் என்ற வரகுண மகாராசனின் (கி.பி. 765—815) கல்வெட்டொன்று காணப்படுவதால் இக் கோயில் ஒன்பதாம் நூற்றாண்டிலேயே இருந்த செய்தி வெளியாகிறது. ஒருகால் அது அக் காலத்தில் செங்கற் கோயிலாக இருந்து பிற்காலத்தில் 10ஆம் நூற்றாண்டில் கற்றளியாகப் புதுப்பிக்கப்பட்டதாகலாம்.

மூலத்தானத்தின் வடபுறச் சுவரில் இராசகேசரிவர்மனுடைய 10ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று காணப்படுகிறது. அது மகிமாலய இருக்குவேளான் பராந்தகன் வீர சோழன் நீர்ப்பழனி மகாதேவருடைய கோயில் செலவினங்களுக்காக ஒரு நிலத்தை நன்கொடை

வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. அத் தலைவன் ஒரு சூரியகிர கணத்தினத்தன்று காவிரிக் கரையில் அமைந்த திருப்பராய்த் துறையி லிருந்து கொண்டு இந் நன்கொடையை வழங்கினான். இக் கல்வெட்டுப் பற்றிச் சித்தூர்க் கோயிலைப் பற்றிப் பேசுகையில் குறிப்பிட் டுள்ளோம். இதில் கூறப்பட்டுள்ள இராசகேசரியின் 10ஆம் ஆண்டு தவறிப்போய்ப் பிழையாக எழுதப்பட்ட ஆண்டு எனவும், அள்ளூர், பாலூர் என்ற கோயில்களில் காணப்படும் இராசகேசரிக் கல்வெட்டு களைப் போல இங்குள்ள இராசகேசரிக் கல்வெட்டின் ஆண்டும் 5 என்றே கொள்ளப்படவேண்டும் எனவும் ஏ. எஸ். இராமநாத ஐயர் குறிப்பிட்டுள்ள செய்தியைக் குறிப்பிட்டுள்ளோம். ஒருகால் இத் தலைவனே இக் கோயிலைக் கற்றளியாகப் புதுக்கியவன் போலும். இக் கோயில் முதற் பராந்தகன் காலத்திலோ கண்டராதித்தனுடைய 5ஆம் ஆண்டுக்கு முற்பட்டோ கற்றளியாக எடுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும்.

சதுரமான கருவறை 22 அடி 6 அங்குலப் பக்கம் உடையதாய்த் தன் முன் அமைந்த அர்த்தமண்டபத்தோடு இணைந்துள்ளது.

மூலத்தானத்தைச் சுற்றிப் பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்த கணேசர், சுப்பிரமணியர், சந்திரன், :சேட்டாதேவி, சண்டேசுவரர், சூரியன், பைரவர் என்ற பரிவார தேவதைகளின் கோயில்கள் காணப் படுகின்றன.

## 11. புள்ளமங்கை

**பிரமபுரீசுவரர் கோயில் :**

புள்ளமங்கை தஞ்சாவூருக்கு 9 கல் (14.4 கி.மீ.) தொலைவில் தஞ்சை—கும்பகோணச் சாலையில் அமைந்துள்ள பசுபதி கோயிலை ஒட்டிய சிற்றூராகும். இங்குள்ள முற்பட்ட சோழர்கள் காலத்து பிரமபுரீசுவரர் கோயில் பண்டைய கல்வெட்டுகளில் திருவாலந்துறை மகாதேவர் கோயில் என்று வழங்கப்பட்டது.

இக் கோயிற் சுவர்களில் அடைமொழி யில்லாத பரகேசரிக் கல் வெட்டுகள் பல உள்ளன. அவற்றுள் சில முதல் பராந்தகன் காலத் தனவாகலாம். மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டொன்று அக் கிராமச் சபையார் திருவாலந்துறை மகாதேவர் கோயிலின் முன் மண்ட பத்தில் கூடி மது (நடு) விர்ச்சேரி (நல்லுச்சேரி) யிலுள்ள காலபிடாரி கோயிலுக்கு 1½ மாநிலத்தை 25 கழஞ்சுப் பொன் கொண்டு இறை நீக்கி விற்றுக் கொடுத்த செய்தியைக் குறிப்பிடுகிறது. பரகேசரியி னுடைய 6ஆம் ஆண்டுக் கல்வெட்டு இப் பெருமானுடைய நித்தியக்

காலே வழிபாட்டுச் செலவினங்களுக்காகச் செம்பியன் மாவலி வாணராயன் ஒரு நிலத்தை மானியம் விட்ட செய்தியை விளம்புகிறது. இச் செம்பியன் மாவலி வாணராயன் மதுரை கொண்ட பரகேசரி யான முதற் பராந்தகனுடைய சோளிங்கபுரக் கல்வெட்டிலும், உத யேந்திரம் செப்பேடுகளிலும் குறிக்கப்பட்டுள்ள இரண்டாம் பிருதிவீ பதியாவான். இவனேப்பற்றித் தொடக்கத்தில் குறிப்பிட்டுள்ளோம்.

ஏனேய பரகேசரிக் கல்வெட்டுகள் கோயில் செலவினங்களுக்கும் விளக்கெரிக்கவும் வழங்கப்பட்ட நன்கொடைகள் பற்றியனவேயாம்.

மதுரைகொண்ட பரகேசரி என்ற அடைமொழியோடு கூடிய கல் வெட்டுகள் இரண்டு உள்ளன. 11ஆம் ஆண்டுக் கல்வெட்டு விளக்கிற் காக ஒருவர் வழங்கிய நன்கொடை பற்றியது. 12ஆம் ஆண்டுக் கல் வெட்டு, அரசர் இக் கோயிலுக்கு 5½ வேலி நிலமும் 5 கழஞ்சுப் பொன்னும் வழங்கிய செய்தியைக் குறிப்பதாகும்.

பாண்டியன் முடித்தலேகொண்ட பரகேசரியான இரண்டாம் ஆதித்தனுடைய 5ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று ஒரு விளக்கிற் காக வழங்கப்பட்ட நன்கொடையைச் சுட்டுகிறது.

சுந்தரசோழன் காலத்தது என்று கருதத்தக்க இராசகேசரியின் 15ஆம் ஆண்டுச் கல்வெட்டும் திபதானம் பற்றியது.

இக் கல்வெட்டுகளே நோக்க நாயன்மார் காலத்தில் மண்டளியாக (சுடுமட்கோயிலாக) இருந்திருக்கக்கூடிய இக் கோயில் முதற் பராந் தகன் காலந் தொட்டாவது கற்றளி வடிவில் காட்சி வழங்குவ தொன்று என்று உணர்கிறேம்.

இக் கோயிலின் கருவறையும் அர்த்தமண்டபமும் முதற் பராந் தகன் காலத்தவை. இது கிழக்குப் பார்த்த சந்நிதியை உடையது. மூலத்தானம் 25 அடி பக்கமுடைய சதுர வடிவமானது. அதன் வெளித்தளத்தில் காணப்படும் அதிட்டானத்தில் குமுதப் படையும், கண்டமும், கபோதமும், யாளிவரிமானமும் சீரிய வேலேப்பாடு கொண் டவை. கருவறை, அர்த்தமண்டபம் என்ற இரண்டின் வெளிச்சுவர் களிலுள்ள தேவகோஷ்டங்களில் முறையே கணபதி, தட்சிணுமூர்த்தி, இலிங்கோத்பவர், பிரமன், துர்க்கை என்ற சிலேகளேக் காணலாம். தேவகோஷ்டங்களின் அடித்தளத்தில் கபோதத்திற்குக் கீழுள்ள கண்டம் என்ற பகுதியில் மிக நுணுகிய சிற்ப வேலேப்பாடுடைய சிற் றுருவச் சிலேகள் உள்ளன. கொடுங்கையின் விளிம்புகளில் வட்டங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அதன் நடுவிலும் இரண்டு ஓரங்களிலும்

கொடிக்கருக்குகள் செதுக்கியுள்ளனர். அதற்குமேல் யாளி வரிமானம் உள்ளது. ஓரங்களில் உள்ள மகரத்தலைகளில் அவற்றின் திறந்தவாய்க ளிடையே பலப்பல நிலைகளிலிருக்கும் மனித உருவங்களைக் காண லாம். ஒவ்வொரு தேவகோஷ்டத்திலும் இந்த யாளிவரிமானத்தின் மேல் 4 வரிசைகள் சிற்றுருவச் சிலைகள் செதுக்கப்பட்டுள்ளன. தேவ கோஷ்டங்களை ஒட்டி மகர தோரணத்தைத் தாங்கியவாறு இரண் டிரண்டு அரைவட்ட அரைத் தூண்களைக் காணலாம். அவற்றிற்கும் சுவர்களின் இரண்டு ஓரங்களிலுமுள்ள எண்பட்டைத் தூண்களுக்கும் இடைப்பட்ட சுவர்ப் பகுதியில் காவல் தெய்வங்கள் அவற்றின் வாகனங்களோடு காணப்படுகின்றன. அரைத் தூண்களின் மேலுள்ள பகுதிகளில் கொடிக்கருக்குகள் செதுக்கப்பட்டுள்ளன. அரைத் தூண் களின் பலகைகள் கனமாகவும் மிகுந்த பரப்புடையனவாகவும் உள்ளன. கீழே வீரர்களைத் தாங்கிய இரண்டு மகரங்கள் திறந்த வாயோடு காணப்படுகின்றன. அவற்றிற்கு நேராக மேலே அவற் றைப் போன்ற இரண்டும் இடையே சிறிய மகரங்களும் செதுக்கப் பட்டுள்ளன. தோரணத்தின் வெளி விளிம்பின் உச்சியில் அழகிய வடிவம் இருக்கிறது. அதற்கு மேலுள்ள மற்றொரு மகர வரிசையின் நடுவில் தெய்வ வடிவம் ஒன்று அமைந்திருக்கிறது. அரைத் தூண் களில் கொடிக்கருக்குகள், கூத்தாடும் உருவங்கள், பறவைகள், யாளி, உருத்திராக்கம் அல்லது முத்து மாலைகள் முதலியன அழகிய வேலைப் பாட்டோடு செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். எண்பட்டை வடிவமான அரைத் தூண்களின் பலகையின் மேலும் கொடுங்கையின் கீழும், சாஞ்சிதோரணத்தில் (Sanchi torana) காணப்படுவன போன்ற, வானத்தில் பறப்பன போலக் காணப்படும் ஆட்களோடு கூடிய யாளி களின் சிற்பங்கள் கவர்கின்றன.

மூன்று தளங்களை உடைய இக்கோயிலின் மேலிரண்டு தளங் களிலும் தேவகோஷ்டங்களின் இடையே பஞ்சரங்கள் உள்ளன. கீழ்த் தளத்தில் நான்கு பக்கங்களை உடைய அரைத் தூண்கள் இரண்டு உள்ளன. அவை யாளி வரிமானத்தின்மேல் நிறுவப்பட்டுள்ளன. அரைத் தூண்களில் சிற்றுருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. கொடுங் கைகள் சாய்வாகவும் சுருள்களை உடையனவாகவும் அமைந்துள்ளன. சிற்றுருவங்களின் நடுவில் காணப்படும் மனித உருவங்கள் பூக் கொடி களால் வளைக்கப்பட்டுள்ளன. கொடுங்கை முழுவதும் கொடிக் கருக்குகள் செதுக்கப்பட்டுள்ளன. இரண்டு அரைத் தூண்களின் மேலும் கொடுங்கையில் இரண்டு கூடுகள் அமைந்துள்ளன. கொடிக் கருக்குகள் செதுக்கப்பட்டுப் பெருவனப்புடைய அரைவட்ட வடிவின வாகிய கூடுகளின் உச்சியில் சிங்கத் தலைகளைக் காணலாம். கொடுங் கையின்மேலும் ஒரு யாளி வரிமானம் காணப்படுகிறது. அதன் ஓரங் களில் திறந்த வாயை உடைய மகரத் தலைகளைக் காணலாம்.

இரண்டாம் தளம் மேல் அறை வடிவத்தில் அமைந்துள்ளது. நடுவிலுள்ள கோஷ்டத்தின் சிலை மேதக்க கவர்ச்சியோடு திரிபங்க (மூன்று வளைவு) நிலையில் அமைந்துள்ளது. இருமருங்கிலும் பின்னங் கால்கள் மேல் நின்று விலாப்புறத்தை நோக்கித் தாக்க இருக்கும் இரு யாளி உருவங்களைக் காணலாம். தேவகோஷ்டத்தின் சிகரம் செவ்வக வடிவினதாய் வண்டிக் கூடு போன்ற அமைப்போடு கொடுங்கையின் கூட்டோடு இணைத்துக் கட்டப்பட்டுள்ளது. கருவறையின் அடித்தளக் கொடுங்கைக்கும் மேற்றளத் தொடக்கத்துக்கும் இடையே பறவைகள் விலங்குகள், கணேசர் உருவங்கள் இவற்றைக் கொண்ட பூதகண வரிசை ஒன்று உளது. அக் கொடுங்கை ஓரங்களில் வட்டங்களாலும், முகப்புகளில் கூடுகளாலும் அணி செய்யப்பட்டுள்ளது.

கருவறைக்கு மேலுள்ள இருதளங்களும் ஏனைய கோயில்களில் உள்ளனபோலவே சாலைகளும் கூடங்களும் பெற்றுள்ளன. மூன்றும் தளத்தின் மேல் கிரீவம் உள்ளது. நாற்புறங்களிலுமுள்ள தேவ கோஷ்டங்களில் சிவபெருமானுடைய சிலைகள் காணப்படுகின்றன. சிகரமும் ஸ்தூபியும் சதுர வடிவினவாகவும் நடுவில் பிதுங்கியும் உள்ளன. தொடக்கத்தில் யாவும் கருங் கல்லால் அமைக்கப்பட்ட இக் கோயிலின் மேற்றளங்கள் பிற்காலத்தில் காரையால் புதுப்பிக்கப் பெற்றுள்ளன.

இக் கோயிலின் ஒரு கூறுன அர்த்தமண்டபத்தை நடுவில் நான்கு தூண்களும் ஓரங்களில் நான்கு அரைத் தூண்களும் தாங்கி நிற்கின்றன. அது 26 அடி நீளமும் 22 அடி அகலமும் உடையது. கொடுங்கையின் ஓரங்களை உச்சியிலுள்ள சிறு கோயில்களின் விளிம்புகள் அணி செய் கின்றன. அர்த்தமண்டபத்தின் வாயிலின் இருபுறங்களிலும் காணப் படும் இரு துவார பாலகர் சிலையும் திருக்கட்டளைக் கோயிலிலுள் வற்றைப் போல வெவ்வேறு வடிவினவாக உள்ளன. துவார பாலகரின் தலைப்பாகை, நன்கு பட்டையாக உள்ள முறுக்கேறிய பூணூல், கழுத்தணிகள், கேயூரம் முதலியன பிற்பட்ட பல்லவர் காலத்தை நினைவுறுத்துகின்றன.

தற்போது பரிவார தேவதைகளின் கோயில்களில் ஒன்றுகூடக் காணப்படுமாறில்லை.

முதற் பராந்தகன் காலத்ததாகிய இக் கோயிலில் உள்ள முதல் இராசராசனுடைய 12ஆம் ஆண்டுக் கல்வெட்டு இப் புள்ளமங்கை ஊர்ச் சபையினர் முரசறைந்து ஒன்று கூடி இருக்கு வேதத்திலும் சாம வேதத்திலும் வல்ல அந்தணர் சிலருக்கு மானியம் விட்ட செய்தி யைக் குறிப்பிடுகிறது.

விக்கிரம சோழனுடைய 9ஆம் ஆண்டுக் கல்வெட்டில் குற்ற விசாரணை ஒன்று குறிக்கப்பட்டுள்ளது. கோயில் மெய்க்காவற்காரர் களுக்குள் பூசல் நிகழ, அப் பூசலில் மெய்க்காவற்காரர் ஒருவருடைய புதல்வன் கொல்லப்படவே, கொலைக்குக் காரணமாக இருந்தவர்கள் இறந்தவனுடைய பெயரால் கோயிலில் ஒரு நந்தா விளக்கு இடுமாறு உத்தரவிடப்பட்ட செய்தியை இக் கல்வெட்டு வெளியிடுகிறது.

மூன்றும் குலோத்துங்கனுடைய கல்வெட்டொன்று கோயில் நிலங்கள் சிலவற்றிற்கு இறை இழிச்சிய செய்தியை வெளியிடுகிறது.

முதற் பராந்தகன் காலக் கோயில்கள் பலவற்றுள் இது சிற்பக் களஞ்சியமாக விளங்கிக் காட்சியளிக்கிறது என்று தெற்றெனக் கூறலாம்.

## 12. திருவாடுதுறை

**கோமுகீசுவரர் கோயில்:**

திருவாவடுதுறை என்று பண்டு வழங்கப்பட்ட திருவாடுதுறை என்னுமூர் தஞ்சை மாவட்டத்தில் நாரசிங்கம் பேட்டைப் புகைவண்டி நிலையத்திலிருந்து 1½ கல் (2·5 கி.மீ.) தொலைவில் உள்ளது. இவ்விடம் ஆன்மாக்கள் உலகப் பற்றுகளைத் தொலைத்து இறைவனருளில் முழு மனத்தோடு ஈடுபடுவதற்குரிய இயற்கைச் சூழ்நிலை முற்காலத்தில் அமைந்திருந்ததால், இது திருவாவடுதுறை என வழங்கப்பட்டது. தற்போது கோமுகீசுவரர் என்று வழங்கப்படும் இவ்வூர் இறைவர் பழைய கல்வெட்டுகளில் திருவாவடுதுறை உடையார் எனவும், திருவாவடுதுறை பரமசுவாமி எனவும் வழங்கப்படுகிறார். இக் கோயில் தேவாரப் பதிகங்களுடையது.

இங்குள்ள அடைமொழியில்லாத பரகேசரிக் கல்வெட்டுகள் ஐந்தும் முதற் பராந்தகன் காலத்தனவாகலாம். பரகேசரியின் 2ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று இக் கோயிலைத் தம் எல்லைக்குள் கொண்ட சாத்தனூர்ச் சபையார், முதல் ஆதித்தன் பெயரால் ஆதித்தபன்ம தெரிஞ்ச கைக்கோளர் என்ற படை வகுப்பைச் சார்ந்த ஒருவரிடம் நன்கொடை பெற்று, இக் கோயிலின் தென்னந் தோப்பையும் நந்தன வனத்தையும் பராமரிப்பதற்கு வேண்டிய மானியமாக நிலம் ஒன்றை இறையிலியாக்கிக் கோயிலுக்கு விற்றுக் கொடுத்த செய்தியை வெளி யிடுகிறது.

பரகேசரிவர்மனுடைய 3ஆம் ஆண்டில் கற்றளிப் பிச்சன் என்பான் பக்கத்துக் கிராமமாகிய சிற்றுனைச்சூரில் சில நிலங்களை

விலக்கு வாங்கி, அவற்றைக் கோயிலில் திருப்பதியம் பாடுவாருக்கும் திருமஞ்சனத்துக்கு நீர் கொணர்வாருக்கும், இன்னியம் இயக்கு, வாருக்கும் தனித்தனியே மானியமாக விடுத்தான். இவனே இங்குள்ள பரகேசரியின் பல கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ளான்.

மதுரை கொண்ட பரகேசரியாகிய முதற் பராந்தகனுடைய 25ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக் கோயில் திருக்கற்றளிப்பிச்சனல் எடுப்பிக்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுவதோடு இன்னியம் இயக்குவாருக்கு மீண்டும் மானியம் விடப்பட்ட செய்தியையும் வெளி யிடுகிறது. இவனே, பராந்தகனுடைய 35ஆம் ஆண்டில் காளம் ஊதுவோன், சங்கு ஊதுவோன், இறைவனுக்குக் குடை பிடிப்போன், திருநந்தனவனத்தைப் பராமரிப்போன் ஆகியவர்களுக்கு மானியம் வழங்கினுன். இவனே, முதற் பராந்தகனுடைய 38ஆம் ஆண்டில் வேறு பல நன் கொடைகளும் வழங்கியுள்ளான்.

முதற் பராந்தகனுடைய 38ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று குடப்படைக்கு மேலுள்ள கோயிற் பகுதிகளை எடுப்பிக்கப் பராந்தக தேவனே 500 கழஞ்சுப் பொன் நன்கொடையாக வழங்கிய செய்தி யைக் குறிப்பிடுவதால், திருக்களிற்றுப்பிச்சன் தொடங்கி நடத்திய திருப்பணி முற்றுப் பெறுவதற்குப் பராந்தகனுடைய பொருளுதவியும் தேவைப்பட்டது என அறிகிறோம்.

பிற்காலத்தில் முதல் இராசராசன் தஞ்சைப் பெருவுடையார் கோயிற் கல்வெட்டுகளில் விளக்கி வரைந்திருப்பது போலவே, இக் கோயிலிலும் இக் கோயிலுக்குச் சொந்தமான தங்க வெள்ளிப் பாத்தி ரங்கள், தெய்வங்களின் உலோகத் திருமேனிகளின் விவரம் ஆகியவை அடங்கிய பட்டியல் கல்லில் வெட்டப்பட்டுள்ளது.

இக் கோயிற் சுவர்களில் இக் கோயிலுக்கு நன்கொடை வழங்கிய வள்ளல்கள், அடியார்கள் ஆகியவர்களுடைய உருவங்கள் அவர் தம் பெயர்களோடு பொறிக்கப்பட்டுள்ளன. முற்பட்ட சோழர்கள் கோயில்களில் இதுவே இத் தனிச் சிறப்பைப் பெற்றுள்ளது.

திருக்கற்றளிப்பிச்சன் தன் முன்னுள்ள இலிங்கத்தை வழிபடும் சிலை, திருவாவடுதுறையைச் சார்ந்த அடியவரான அம்பலவன் திருவிசலூரான் என்ற திருநாவுக்கரசையர் சிலை, கைகூப்பி இறைவனை வணங்கும் நிலையிலுள்ள இளைய திருநாவுக்கரையரின் சிலை, திரைமூர் நாட்டுச் சிற்ருடியைச் சார்ந்த தாமன் அம்பலவன் என்ற நமசிவாயத் தின் சிலை, இக் கோயிலின் ஒரு படை (தளம்) அமைத்த வாரம்பு சலைச் சார்ந்த எழுவன் சாந்தீரதனுடைய நின்ற நிலையில் காணப்படும்

சிலை, அரண்மனையின் பணி மகளான நக்கன், வண்ணாத்தடிகளின் சிலை என்பன இக் கோயிற் சுவர்களில் செதுக்கப்பட்டுள்ள தனிச் சிறப்புக் கண்டு மகிழத்தக்கது.

சதுரமாக அமைந்துள்ள கருவறை 19 அடி 6 அங்குலம் பக்க அளவுடையது. 1¾ அடி அகலமுள்ள அந்தராளம் இக் கருவறையையும் 20 அடி முன்னேக்கி அமைந்துள்ள அர்த்தமண்டபத்தையும் இணைக்கிறது.

தேவகோஷ்டங்களில் கணபதி, அகஸ்தியர், தட்சிணமூர்த்தி, லிங்கோத்பவர், பிரமன், துர்க்கை ஆகிய சிலைகளைக் காணலாம். தேவகோஷ்டங்களின்மேல் தோரணங்கள் செதுக்கப்பட்டுள்ளன. தட்சிணமூர்த்தி கோஷ்டத்தின் மேலுள்ள தோரணத்தின் நடுவில் நடராசர் சிலையைக் காணலாம்.

## 13. திருக்களாவூர்

**மதுவனேசுவரர் அல்லது முல்லைவனேசுவரர் கோயில் :**

தஞ்சை மாவட்டத்திலுள்ள திருக்களாவூர் கல்வெட்டுகளில் திருக்கருகாவூர் என்றே வழங்கப்பட்டது. இக் கோயில் கி.பி. 7ஆம் நூற்றுண்டினரான திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் ஆகியோருடைய தேவாரப் பாடல்களைப் பெற்ற தலமாகும். இப் பெருமான் சந்திரனாலும் தாராகணங்களாலும் வழிபடப்பட்டவர். இப் பெருமான் அநாதையாயிருந்த ஒரு பெண்ணின் கருவிலிருந்த குழந்தையைக் காத்ததால் திருக்கருகாவூர் என்று இவ்வூர் பெயர் பெற்றது என்று தலபுராணம் கூறுகிறது. கருச்சிதைவு ஏற்படும் பெண்கள் பலர் இங்குள்ள அம்பிகையை வழிபட்டு, அப்பிணி தீர்ந்து நன்மக்களைப் பெற்றுள்ளனர். இங்குள்ள இறைவியின் பெயர் கர்ப்பரட்சாம்பிகை என்பது. இவ்வூர் பாபநாசத்துக்கு அருகில் உள்ளது.

இக் கோயில் முதல் ஆதித்தன் காலத்தது என்றாலும் இங்குள்ள பழைய கல்வெட்டு மதுரைகொண்ட பரகேசரியான முதற் பராந்தகனுடைய 14ஆம் ஆண்டைச் சார்ந்ததேயாகும். இக் கோயிலில் படியெடுக்கப்படாத கல்வெட்டுகள் சில உள்ளன. அவைபற்றி அரசாங்கக் கல்வெட்டிலாக்காவினருக்குத் தெரிவித்திருந்தோம். அவை தற்போது படியெடுக்கப்பட்டுவிட்டனவாக அறிகிறோம். பராந்தகனுடைய 14ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் காவிரியின் வட கரையில் பம்பூர் நாட்டுத் தேவதானமும் திருக்குடமூக்கிற்கு (கும்ப கோணம்) அருகில் உள்ளதுமான திருக்கருகாவூர் மகாதேவருக்கு ஒரு

விளக்கு எரிப்பதற்காகச் சாமுந்தன் மூர்த்தி என்பான் வழங்கிய நிலக்கொடையைக் குறிப்பிடுகிறது. அந் நில எல்லைகளுள் காவிரியி லிருந்து பிரியும் வடிகால் வாய்க்காலான உப்பலாறு என்ற வாய்க் காலின் பெயர் காணப்படுகிறது. அடுத்துப் பரகேசரிவர்மனுடைய 3ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று தொடங்கித் திடீரென்று முடிந்து விடுகிறது. பின் பரகேசரியின் 16ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று காணப்படுகிறது. அது பராந்தகனுடைய 14ஆம் ஆண்டுக் கல்வெட் டைப் போலப் புள்ளிகள் பெற்றிருப்பதால் அதுவும் முதற் பராந்தக னுடையதே என்று உறுதியாகக் கூறலாம். அது அவ்வூர் மூலப் பெரு மக்கள் கோயிலில் ஒரு விளக்கு எரிப்பதற்கு ஒரு நிலத்தை விற்ற செய்தியைக் குறிப்பிடுகிறது. 27ஆம் ஆண்டுக் கல்வெட்டில் பால்க் கருகாவூர் என்ற இவ்வூரில் மகாதேவர், காலபிடாரி, மகாவிஷ்ணு இவர்கள் கோயில்களுக்கு உரிமையான நிலங்களின் பட்டியல் பொறிக்கப்பட்டுள்ளது. 39ஆம் ஆண்டுக் கல்வெட்டு வில்லவன் மாதேவியாருடைய பணிமகள் ஒருத்தி வழங்கிய நன்கொடை பற்றி யது. ஏனைய பராந்தகனுடைய கல்வெட்டுகள் விளக்கெரிக்கவும் நிவேதனங்கள் அமைக்கவும் திருவிழாக்கள் நிகழ்த்தவும் நன் கொடைகள் வழங்கிய செய்திகளை வெளியிடுகின்றன.

மூன்று கல்வெட்டுகள் அடைமொழியில்லாத பரகேசரி ஒருவன் பெயரால் அமைந்துள்ளன. அக் கல்வெட்டுகளில் கோயில் மயிலடி என்ற பராந்தக மூவேந்த வேளான், சிங்கன் கலியன் என்ற உத்தம சோழ மூவேந்த வேளான் ஆகியோரின் பெயர்கள் காணப்படுவதால் அவை உத்தம சோழன் காலத்தனவாகவோ, இரண்டாம் ஆதித்தன் காலத்தனவாகவோ ஆகலாம். பராந்தக மூவேந்த வேளானுடைய பெயர் இரண்டாம் ஆதித்தனுடைய மூன்றும் ஆண்டைச் சார்ந்த குடந்தைக் கல்வெட்டொன்றிலும் காணப்படுகிறது. (*230—1911*).

காலபிடாரி கோயிலும் விஷ்ணு கோயிலும் இங்கு இருந்தன என்ற குறிப்பை நோக்க இக் கோயில் முதல் ஆதித்தன் காலத்தில் எடுப்பிக்கப்பட்டதோ என்று ஐயுறற்கு இடம் ஏற்பட்டுள்ளது. கருவறைக்குப் பின்னுள்ள தேவகோஷ்டத்தில் அர்த்தநாரி சிலை இருப் பதும் இக் கருத்தை வலியுறுத்தும். (Vide also Nos. 651, 652, 653 and 655 of South Indian Temple Inscriptions, Vol. II, pp. 621 ff; 24th, 17th, 18th and 21 st years of Rajakesarivarman ; who may be identified with Aditya I. These are only *eye copies* by the Mackenzie collection staff.)

## 14. திருச்சென்னம்பூண்டி

**திருச்சடைமுடியுடைய மகாதேவர் கோயில் (தற்போது பிடாரிகோயில்):**

திருச்சென்னம்பூண்டி தஞ்சை மாவட்டத்தில் கொள்ளிடத்தின் தென்கரையில் கோயிலடிக்கு ஒரு கல் (1.6 கி.மீ.) வடக்கில் அமைந்துள்ள சிற்றூராகும். முன் காலத்தில் இவ்வூர் திருப்பேர்நகர் என்று வழங்கப்பட்ட கோயிலடியைச் சார்ந்த சிற்றூராக விளங்கியது. கோயிலடியிலுள்ள சிவன் கோயில் சுவரில் காணப்படும் விக்கிரம சோழனுடைய கல்வெட்டொன்றில் திருப்பேர்நகரான பிரமதேயத்தின் வடபுறத்துப் பிடாகையான திருச்சென்னம்பூண்டியிலுள்ள திருச்சடைமுடியுடைய மகாதேவர் பெயர் குறிப்பிடப்பட்டுள்ள செய்தி முற்காலத்தில் இவ்வூர் கோயிலடியைச் சார்ந்த சிற்றூர் என்ற கருத்தை வலியுறுத்துகிறது.

இக் கோயிலில் விசய நிருபதுங்க விக்கிரமவர்மனுடைய இரண்டாம் ஆண்டு முதல் 22ஆம் ஆண்டு வரை கல்வெட்டுகள் காணப்படுவதால் இது பல்லவர் காலத்திலேயே எடுப்பிக்கப்பட்ட கோயில் என்ற செய்தி வெளியாகிறது. இப் பல்லவர் கல்வெட்டுகள் கோயிலின் முன்புறத்திலுள்ள தூண்களில் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று மூன்றும் நந்தி போத்தரையனுடைய தேவியான அடிகள் கண்டன் மாறம்பாவை வழங்கிய நன்கொடை பற்றியது.

இக் கோயிற் சுவர்களில் முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகள் அவனுடைய 14ஆம் ஆண்டு முதல் 37ஆம் ஆண்டு முடியக் காணப்படுகின்றன. 14ஆம் ஆண்டுக் கல்வெட்டில் இவ்விறைவர் தென்கரை இண்டையாற்று நாட்டுத் திருச்சடைமுடி மகாதேவர் என வழங்கப்படுகிறார். முதற் பராந்தகன் தேவியாரும் பழுவேட்டரையன் மகளாருமான நம்பிராட்டியார் அருண்மொழி நங்கையாருடைய பரிவாரத்தைச் சேர்ந்த குணவன் சூரதொங்கி திருவிளக்கிற்கும் வேறு சில தொண்டுகளுக்குமாக 16 கழஞ்சுப் பொன்னை இவ்வரசனின் 17ஆம் ஆண்டில் வழங்கிய செய்தியை அறிகிறோம். 30ஆம் ஆண்டில் மாசி மகத் திருவிழாவிற்காக ஒரு நன்கொடை வழங்கப்பட்டுள்ளது. ஏனைய நன்கொடைகள் யாவும் விளக்கு எரிப்பதற்கு அமைந்தனவே.

பல்லவர் காலத்ததான இக் கோயில் மீண்டும் பராந்தகன் காலத்தில் கற்றூண்கள் தாங்கி நிற்கும் மண்டபத்தோடு புதுப்பிக்கப்பட்டதாதல் வேண்டும். பராந்தகனுடைய கல்வெட்டுகள் கோயிற் சுவர்களிலும் பல்லவர்களுடைய கல்வெட்டுகள் வெளித் தூண்களிலும் காணப்படும் செய்தி இக் கருத்தை வலியுறுத்தும்.

பிற்காலத்தில் இப் பழைய சிவன் கோயில் பிடாரி கோயிலாக மாற்றப்பட்டுவிட்டது.

## 15. திருக்களித்தட்டை

**வேதபுரீசுவரர் கோயில் :**

தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த திருக்களித்தட்டை என்ற ஊர் திருவிடைமருதூரிலிருந்து 2 கல் (3·2 கி.மீ.) தொலைவில் வேப்பத்தூருக்கும் திருவிசலூருக்கும் அருகில் உள்ளது. கல்வெட்டுகளிலும் தேவாரங்களிலும் இது குடித்தட்டை என்ற பெயராலேயே வழங்கப்பட்டுள்ளது.

சிதைவுற்ற நிலையிலிருக்கும் இக் கோயிலில் காணப்படும் மிகப் பழைய கல்வெட்டுப் பரகேசரிவர்மனுடைய 22ஆம் ஆண்டைச் சார்ந்தது. முதற் பராந்தகன் காலத்ததாகக் கருதப்படும் அக் கல்வெட்டு ஸ்ரீ குடித்தட்டைப் பெருமானுக்குக் காவிரியின் வட கரையிலமைந்த பிரமதேய தேவதானமான அமளி நாராயண சதுர்வேதிமங்கலத்து (திருவிசலூர்) ஊர்ச்சபை உறுப்பினருள் ஒருவர் விளக்கிற்கு வைத்த நன்கொடையைக் குறிப்பிடுகிறது.

பாண்டியனைக் கானகத்துக்கு விரட்டிய பெருமாள் சுந்தர சோழ தேவருடைய 7ஆம் ஆண்டுக் கல்வெட்டு அம் மன்னனுடைய சேனாதிபதியான பராந்தகன் சிறிய வேளார் என்னும் திருக்கற்றளிப்பிச்சன், காவிரியின் வடகரையிலமைந்த வேம்பற்றூரிலுள்ள குடித்தட்டை உடையாருக்குத் திருநாமத்துக் காணியாக நிலம் ஒன்றை இறையிலியாக வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. இத் தலைவனுடைய பெயர் பொறிக்கப்பட்டுள்ள சுந்தர சோழன் காலத்ததாகிய மற்றொரு கல்வெட்டுச் சிதைந்துவிட்டது. திருவிசலூரில் இத் தலைவன் பெயரால் இரண்டு கல்வெட்டுகள் உள்ளன. முதற் கல்வெட்டு இராசகேசரிவர்மன் சுந்தர சோழனுடைய இரண்டாம் ஆண்டைச் சார்ந்தது. அது பராந்தகன் இளங்கோளன் என்னும் கொடும்பாளூர் சிறிய வேளான் நாள்தோறும் உச்சிவேளையில் ஓர் அந்தணனுக்கு நல்லுணவளிக்க வழங்கிய நிலக்கொடையைக் குறிப்பிடுகிறது. நான்காம் ஆண்டுக் கல்வெட்டு அவன் திருவிசலூர் இறைவனுடைய உச்சிக் கால நிவேதனம் நிகழ்த்துவதற்காக மானியம் வழங்கிய செய்தியைச் சுட்டுகிறது.

முதல் இராசராசனுடைய கல்வெட்டொன்றிலிருந்து, சிறிய வேளாரென்ற இப் படைத்தலைவன் பொன்மாளிகையில் துஞ்சிய சோழராகிய சுந்தர சோழருடைய 9ஆம் ஆண்டில் அவர் பாண்டிய

ருடனும் சிங்களவருடனும் சிங்கள நாட்டில் நிகழ்த்திய போர்க்களத்தில் உயிர் நீத்துப் புகழ்கொண்ட செய்தி புலனுகிறது. இராசகேசரி சுந்தர சோழனுடைய 14ஆம் ஆண்டில் சிறிய வேளானுடைய மனைவியான இராசாதிச்சி குஞ்சரமல்லியும் மகனுன வேளான் சுந்தர சோழனும் இக் கோயிலில் விளக்குகள் எரிக்க நன்கொடை வழங்கிய செய்தியை அறிகிறோம்.

இராசகேசரிவர்மன் முதல் இராசராசனுடைய 3ஆம் ஆண்டுக் கல்வெட்டில் விழுப்பரையன் மகளாரும் உத்தமசோழன் தேவியாருமான கிழானடிகள் இவ் வவனி நாராயண சதுர்வேதிமங்கலத்து இறைவனுக்கு மாதப் பிறப்புகள்தோறும் 108 குடம் திருமஞ்சன நீர் கொணர்வதற்கு நிவந்தம் விட்ட செய்தி காணப்படுகிறது.

ஆண்டு சிதைவுற்ற மற்ருெரு இராசகேசரிக் கல்வெட்டு உத்தம சோழனுடைய தாயாரான செம்பியன் மகாதேவியார் ஸ்ரீ குடித் தட்டை மகாதேவர் கோயிலுக்கு 181½ கழஞ்சு எடையுள்ள வெள்ளிக் குடத்தை நன்கொடையாக வழங்கிய செய்தியை வெளியிடுகிறது.

இக் கோயில் முதற் பராந்தகன் காலத்துக் கோயில்களில் ஒன்ருகும்.

## 16. கிராமம்

**சிவலோக நாதேசுவரர் கோயில் :**

முற்காலத்தில் 'மவுலி—கிராமம்' என்று வழங்கப்பட்ட ஊர் அதன் முற்பகுதி நீங்கித் தற்போது 'கிராமம்' என்றே வழங்கப்படுகிறது. அது பெண்ணையாற்றின் தென் கரையில் அமைந்த ஊர் என்று கல்வெட்டுகளில் கூறப்பட்டுள்ளது. தற்போது இச் சிற்றூரினருகில் ஓடிக் கொண்டிருக்கும் ஆறு மலட்டாறு என்று வழங்கப்படுகிறது. இவ்வூர் சென்னைப் பெருவழியின் 107 ஆவது கல்லிலிருந்து மேற்குப்புறமாகத் திருக்கோவலூருக்குச் செல்லும் கிளை வழியில் 2 கல் (3·2 கி.மீ.) தொலைவில் அமைந்துள்ளது.

இவ்வூர் முதற் பராந்தகன் ஆட்சியின் பிற்பகுதியில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளுக்கு இருப்பிடமாகிச் சிறப்படைந்தது. சோழ மண்டலத்தின் வடபகுதி இரட்ட மன்னர்களால் தாக்கப்படும் என்ற அச்சம் இருந்த காலத்தில், நாட்டின் வட பகுதியைப் பகைவர்களுடைய தாக்குதலிலிருந்து காப்பதற்கெனவே இங்கு ஓர் இராணுவ நிலையம் (படை வீடு) முதற் பராந்தகனுடைய முதல் மகனுன இராசாதித்தனுடைய மேற்பார்வையில் நிறுவப்பட்டது.

கிராமத்தின் பக்கத்திலுள்ள திருநாவலூர் தற்போது திருநாம நல்லூர் என்று வழங்கப்படுகிறது. இது சுந்தரமூர்த்தி நாயனருடைய பிறப்பிடமாகும். அவ்வூர் முதற் பராந்தகன் காலத்தில் இராசாதித்த புரம் என்றும் அங்குள்ள கோயில் இராசாதித்தீசுவரம் என்றும் புதுப் பெயர்கள் இடப்பட்டனவாக அறிகிறோம். இராசாதித்தனுடைய குதிரைப் படையும், யானைப்படையும், அவனுடைய கேரளப் படைத் தலைவனும் இவ்வூரில் இருந்த செய்தியைக் கொண்டும், இவ்வூருக்கு இராசாதித்தபுரம் என்ற புதுப் பெயர் வழங்கப்பட்டதைக் கொண்டும் காலஞ்சென்ற வெங்கையா அவர்கள் 'முதற் பராந்தகனுடைய ஆட்சியில் இராசாதித்தன் ஆண்ட பகுதியின் தலைநகராகத் திருநாம நல்லூர் இருந்தது' என்று குறிப்பிட்டுள்ளார். கிராமமும் திருநாம நல்லூரும் அருகில் இருக்கும் இரண்டு ஊர்கள் எனினும், இராசாதித் தன் ஆண்ட பகுதியின் தலைநகரம் மவுலிக் கிராமம் (முடிசூட்டு விழா நடந்த ஊர்—தமிழில் திருமுடியூர்) என்ற ஊராகத்தான் இருக்க வேண்டும் என்றும், இவ்வூரில் இராசாதித்தனுக்கு இளவரசாக முடி சூட்டு விழா நிகழ்ந்திருக்கவேண்டும் எனவும் கருதுகிறோம்.

கிராமத்துக் கல்வெட்டுகள் பல இராசாதித்தனுடைய கேரள நாட்டுப் படைத் தலைவனும் அவன் படையைச் சேர்ந்த பிறரும் வழங்கிய நன்கொடைகளைக் குறிப்பிடுகின்றன. அத் தலைவன் மலை நாட்டு நந்தியாற்றின் கரையிலமைந்த புத்தூர் என்னும் நவாக்ர காரத்தைச் (நனிக்கரைப்புத்தூர்) சார்ந்த வேளான் குமரன் என வழங்கப்படுகிறான். அவன் இங்குள்ள கல்வெட்டொன்றின் வட மொழிப் பகுதியில் சாமுநாயகன் (படைத் தலைவன்) என்று வழங்கப் படுகிறான். தமிழ்ப் பகுதியில் இராசாதித்தனுடைய பெரும் படை நாயகன் எனவும் சோழர்களின் 'மூலப்ருத்யன்' எனவும் வழங்கப்படு கிறான். இவனே கிராமத்திலுள்ள திரு அருட்டளி மகாதேவர் ஆலயத்தை எடுப்பித்தவன். தற்போது அக் கோயில் சிவலோகநாத சுவாமி கோயில் என வழங்கப்படுகிறது. அக் கல்வெட்டுப் பின்வருமாறு :

'உத்தம கேரளனும் ராஜாதித்தஸ்ய ஸாக்ஷாத் அவிகலித சாமு நாயக மதுராந்த, மவுலிக் கிராமேதிபன்ன தாததரணி சிலாமந்த்ரம்' ......... 'ஸ்வஸ்தி ஸ்ரீ கலியுகவர்ஷம் 4044 மதுரை கொண்ட கோபர கேசரி பன்மற்கு யாண்டு 36ஆவது கலியுக நாள் 14, 77, 037 ஆகத் திருமுடியூர் ஆற்றுத் தளிப் பெருமானடிகள்.........திருக்கற்றளியாக எடுப்பித்து—சிறு ஆற்றுத் தளிப்பெருமானடிகளைத் திருக்கற்றளியின் உள் புக எழுந்தருளுவித்துப் பிரதிஷ்டை செய்வித்தார் சோழர்கள் மூல ப்ருத்யர் ஸ்ரீ பராந்தக தேவரான ஸ்ரீ வீரசோழப் பெருமானடிகள்



62. கணேசர்,
புள்ளமங்கை



63. லிங்கோத்பவர்,
புள்ளமங்கை



64. பிரமன்,
புள்ளமங்கை



65. துர்க்கை,
புள்ளமங்கை



66. கோஷ்ட பஞ்சரம், புள்ளமங்கை



67. ரிஷபாந்திகா, திருநாமநல்லூர்



68. பிட்சாடனர், திருநாமநல்லூர்

மகனார் இராசாதித்ய தேவ பெரும்படை நாயகர் மலைநாட்டு நந்திக் கரைப்புத்தூர் வேளான் குமரன்'.

இக் கல்வெட்டில் அரசனுடைய ஆட்சியாண்டோடு கலியுக வருஷமும் நாளும் குறிக்கப்பட்டிருக்கும் செய்தி புதுமையானதாகும். கலியுக ஆண்டு, நாள் இவற்றைக் கொண்டு இக் கல்வெட்டின் காலம் 14-1-943 என்று கணக்கிட்டுள்ளனர்.

சோழபுரத்தில் இரட்டமன்னன் கன்னரதேவனான மூன்றாம் கிருஷ்ணனுடைய கல்வெட்டொன்றில் அதன் காலம் 3 விதங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆண்டு இரண்டாவது என்று முதலிலும் சகயாண்டு 871 ஆவது என்றும் இரண்டாவதும் கன்னரதேவன் தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றியதால் அவனுடைய ஆட்சி யாண்டு மூன்றாவதும் அக் கல்வெட்டில் இடம் பெற்றுள்ளன. அறிஞர் ஹூல்ஷ் (Hultzsch) என்பார் ஆண்டு இரண்டாவது என்பது இராசாதித் தனுக்கு இளவரசுப் பட்டம் கட்டியபின் எண்ணப்பட்ட ஆண்டு என்று குறிப்பிட்டுள்ளார். அவனுடைய இரண்டாம் ஆண்டிலேயே தக்கோலப் போரில் (கி.பி. 949) கன்னரதேவன் அவனைத் தோற் கடித்துக் கொன்று தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றியிருக்க வேண்டும். 'ஸ்வஸ்தி ஸ்ரீ யாண்டு இரண்டாவது சக வருஷம் 871 சக்கரவர்த்தி கன்னரதேவ வல்லபன் இராசாதித்தனை இரிந்து தொண்டை மண்டலம் புகுந்த ஆண்டு' என்பது அக் கல்வெட்டுப் பகுதியாம். சகயாண்டு 872-ல் தோன்றிய இதாகூர்க் கல்வெட்டுத் தக்கோலப் போரில் மூன்றாம் கிருஷ்ணனுடைய நண்பனான பூதகனால் இராசாதித்தன் கொல்லப்பட்டான் எனவும் அவனுக்கு மூன்றாம் கிருஷ்ணன் பல கிராமங்களை நன்கொடையாக வழங்கினான் எனவும் குறிப்பிடுகிறது. இக் கருத்தை மைசூர் எல்லையிலுள்ள நீலகிரியில் காணப்படும் வீரக்கல் கல்வெட்டு வலியுறுத்துகிறது. பெரிய லைடன் பட்டயங்கள் இராசாதித்தன் யானையின் பிடரியில் அமர்ந்திருந்த போது பகைவருடைய வேல் மார்பைப் பிளந்ததால் வீர சுவர்க்கம் அடைந்தான் என்று குறிக்கின்றன. இதனால் இராசாதித்தனுக்கு 'ஆனைமேல் துஞ்சிய தேவர்' என்ற பெயர் ஏற்பட்டது.

தஞ்சை அரண்மனையிலிருந்த அந்தப்புரத்தின் ஒரு பகுதி ஆனை மேல் துஞ்சிய தேவருடைய தாயாரான உடைய பிராட்டியார் கிழானடிகளின் பெயரால் கிழார் வேளம் என வழங்கப்பட்டது. இராசாதித்தனான மும்முடிச் சோழனுடைய தாயாரும் முதற் பராந் தகன் தேவியாருமான கோக்கிழானடிகளும் இக் கிழானடிகளும் ஒருவரே. இவ் ஆனைமேல் துஞ்சிய தேவரின் நம் பிராட்டியார் ஈராயிரவன் தேவி அம்மனார் பரகேசரிவர்மன் முதற் பராந்தகனுடைய

8ஆம் ஆண்டில் திருவெள்ளறையிலுள்ள கிருஷ்ணன் உருக்குமி கோயிலுக்கு நன்கொடையொன்று வழங்கியுள்ளார்.

கிராமம் கோயில் சுவர்களில் முதற் பராந்தகனுடைய கல் வெட்டுகள் அவனுடைய 23ஆம் ஆண்டு முதல் 41ஆம் ஆண்டுவரை காணப்படுகின்றன.

திருமுடியூர் ஆற்றுத்தளியிலுள்ள மூலத்தானத்து மகாதேவருக்கு இராசாதித்தனுடைய படைத் தலைவனான வெள்ளான்குமரன் முதற் பராந்தகனுடைய 23ஆம் ஆண்டிலும் 29ஆம் ஆண்டிலும் முறையே இரண்டு விளக்குகள் எரிப்பதற்கு நன்கொடைகள் வழங்கியுள்ளான். இங்குள்ள பராந்தகனுடைய கல்வெட்டுகளில் மிக முக்கியமானது இக் கோயில் எடுப்பிக்கப்பட்ட செய்தியைத் தெரிவிக்கும் கல் வெட்டாகும். இக் கல்வெட்டைப்பற்றி முன்னரே நோக்கியுள்ளோம். இக் கோயில் செங்கற் கோயிலாக இருந்த காலத்தில் ஏற்பட்ட நன்கொடைகள் சில இது கற்றளியாக்கப்பட்டபின் மீண்டும் சுவர் களில் செதுக்கப்பட்டனவாதல் வேண்டும்.

மூன்றும் கிருஷ்ணனுடைய 20, 22, 25ஆம் ஆண்டுக் கல் வெட்டுகள் இக் கோயிலில் காணப்படுவதால், இப் பகுதி அவனுடைய ஆட்சியில் இருந்த செய்தி வலியுறுகிறது. பண்டை மன்னர்கள் தாம் புதிய நாடுகளை வென்றபோதும் அங்குள்ள மக்கள் வாழ்க்கையையும் அறநிலைய நிகழ்ச்சிகளையும் சீர்குலைக்காமல், தம்மால் இயன்றவரை அவற்றை வளர்த்தனர் என்பது மனங்கொள்ளத்தக்கது.

**கிராமம் கோயில் :**

இக் கோயிலின் கருவறை சதுரமானது. அதன் பக்க அளவு 13 அடி 6 அங்குலம். அடித்தளம் வேலைப்பாடின்றி அமைந்துள்ளது. அர்த்தமண்டபம் கிழக்கு மேற்கில் 9 அடி பரவியுள்ளது. கருவறையில் வெளிச் சுவர்களில் 3 தேவகோஷ்டங்களும் அர்த்தமண்டபத்தின் வெளிச் சுவர்களில் 2 தேவகோஷ்டங்களும் உள்ளன. தேவ கோஷ்டங்களை ஒட்டி 2 அரைத் தூண்களும் ஒவ்வொரு தூணின் இரு மூலைகளிலும் 2 அரைத் தூண்களும் உள்ளன. தேவகோஷ்டங்களில் கணேசர், தட்சிணாமூர்த்தி, விஷ்ணு, பிரமன், துர்க்கை என்ற சிலைகள் உரிய இடங்களில் உள்ளன.

கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையையும் அதன் மேல் யாளி வரிமானத்தையும் காணலாம்.

## 17. திருநாமநல்லூர் (திருநாவலூர்)

### திருத்தொண்டீசுவரம் உடையார் கோயில் அல்லது பக்த ஜனேசுவரர் கோயில் :

சென்னைப் பெருவழியில் 113ஆம் கல்லிலிருந்து கடலூருக்குச் செல்லும் கிளைவழியில், ஒரு கல் கிழக்கே கெடிலம் என்ற ஆற்றின் வடகரையில் திருநாமநல்லூர் என்ற சிற்றூர் உள்ளது. இது சுந்தர மூர்த்தி சுவாமிகள் அவதரித்த திருப்பதியாகும்.

முற்காலத்தில் இங்கு மூன்று சிவன் கோயில்களும் ஒரு திருமால் கோயிலும் இருந்தன. அவற்றுள் ஒன்று 'கலிநாரீசுவரம்' என்ற பெயருடைய பழைய பல்லவர் காலத்துக் கோயிலாகும். இது கலிநாரி என்ற பல்லவ மன்னன் பெயரால் அமைந்ததுபோலும். இக் கோயிலில் மண்டியிட்ட யானையொன்றின்மேல் சாய்ந்த நிலையில் பருத்த வீரன் ஒருவனுடைய சிலை அதன் அடியில் கிரந்த லிபியில் 'கலிநாரி' என்று பொறிக்கப்பட்ட நிலையில் காணப்பட்டது. இச் சிலை இக் கோயிலைக் கட்டிய பல்லவ மன்னனுடைய சிலையாக இருக்கலாம். அவன் பெயரால் இக் கோயில் கலிநாரீசுரம் என வழங்கப்பட்டதாக லாம். இக் கோயில் உள்ளூர் மக்களால் இடிக்கப்பட்டுவிட்டதாக அறிகிறோம்.

முதற் பராந்தகனுடைய 32ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று திருமுனைப்பாடி நாட்டுத் திருநாவலூரிலுள்ள திருமேற்றளி மகா விஷ்ணுவுக்கு ஒரு நந்தா விளக்கு அமைப்பதற்குப் பிள்ளையார் இராசாதித்த தேவருடைய பரிவாரத்தைச் சார்ந்த உறுப்பினர் ஒருவர் நன்கொடை வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. இதனால் முதற் பராந்தகன் காலத்தில் திருநாவலூரில் ஒரு திருமால் கோயில் இருந்த செய்தி வெளியாகிறது. அது தற்போது சுவடற்றுப்போன செய்தி வருந்தத்தக்கது.

முதற் பராந்தகனுடைய 29ஆம் ஆண்டுக் கல்வெட்டில் இரா சாதித்தீசுவரம், திரு அகத்தீசுவரம் என்ற இரண்டு சிவன் கோயில்கள் குறிக்கப்பட்டுள்ளன. அகத்தீசுவரம் தற்போது சுவடற்றுப் போய் விட்டது. தற்போது இச் சிற்றூரை அணி செய்வது இராசாதித் தீசுவரமே. தற்போது அது திருத்தொண்டீசுவரம் என்றும் பக்த ஜனேசுவரம் என்றும் வழங்கப்படுகிறது.

இங்குள்ள இராசகேசரிக் கல்வெட்டொன்றும் பரகேசரிக் கல்வெட் டொன்றும் அடைமொழியின்றிக் காணப்படுவதால் இவை இன்னா ருடையன என்று வரையறுத்துக் கூற இயலவில்லை. முதற் பராந்தக

னுடைய பெயரினுல் அவனுடைய 17ஆம் ஆண்டு முதல் 39ஆம் ஆண்டுவரை 29 கல்வெட்டுகள் உள்ளன. 17ஆம் ஆண்டுக் கல்வெட்டில் திருமுனைப்பாடி நாட்டு மேலூர் நாட்டுத் 'திருநாவலூர் திருத்தொண்டீசுவரத்துத் தேவர் கோயில்' என்று இக் கோயில் குறிப்பிடப்பட்டுள்ளது. 23ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக் கோயில் இராசாதித்ததேவரால் கற்றளியாக்கப்பட்ட செய்தியை வெளியிடுகிறது. அவனுடைய தாயாரான நம்பிராட்டியார் கோக்கிழானடிகளின் பரிவாரத்தைச் சேர்ந்தவர் ஒருவர் ஒரு விளக்கும் அதனை நந்தாமல் எரியவிட 90 ஆடுகளும் நன்கொடை வழங்கினர். இக் கல்வெட்டு வாசகம் இக் கோயில் இராசாதித்தருடைய தாயாரால் கட்டப்பட்டது என்று கொள்ளவும் இடம் தருகிறது. அவ் வாசகம் பின்வருமாறு:

'ஸ்வஸ்தி ஸ்ரீ மதுரை கொண்ட கோபரகேசரிவர்மற்கு யாண்டு 28ஆவது திருமுனைப்பாடித் திருநாவலூர் திருத்தொண்டீசுவரம் திருக்கற்றளி செய்வித்த ராஜாதித்த தேவர் தாயார் நம்பிராட்டியார் கோக்கிழானடிகள் பரிவாரத்தாள் சித்திரகோமளம் வைத்த நந்தாவிளக்கு ஒன்றுக்கு வைத்த சாவா மூவாப் பேராடு தொண்ணூறு, ஈழவிளக்கு ஒன்று'.

முதற் பராந்தகனுடைய 29ஆம் ஆண்டு முதல் இக் கோயில் 'இராசாதித்த ஈசுவரம்' எனவும் வழங்கப்படுவதாயிற்று. இவ்வரசருடைய பரிவாரத்தார்களும் பெரும்பாலும் மலையாள நாட்டைச் சேர்ந்தவர்களான இராணுவ அதிகாரிகளும் வீரர்களும் இக் கோயிலுக்குப் பல நன்கொடைகள் வழங்கியுள்ளனர். பிள்ளையார் இராசாதித்தருடைய படையைச் சேர்ந்த வீரர்கள் மவுலி கிராமத்தில் இராணுவ நிலையம் அமைத்துத் தங்கியிருந்த செய்தியை முன்னர் குறிப்பிட்டுள்ளோம்.

38ஆம் ஆண்டுக் கல்வெட்டு திருநாவலூர் வணிகன் ஒருவன் கூத்தப்பெருமான் ஆகிய நடராசருக்கு விளக்கெரிப்பதற்கு நன்கொடை வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. ஈழத்தரையர் மகளாரும் பிள்ளையார் இராசாதித்த தேவர் நம் பிராட்டியாருமான மாதேவடிகளுடைய தமயனுர் பராந்தகனுடைய 39ஆம் ஆண்டில் இக் கோயிலில் விளக்கெரிப்பதற்கு 100 ஆடுகளை நன்கொடையாக வழங்கினுர்.

இரட்டமன்னன் மூன்ரும் கிருஷ்ணனுடைய படையெடுப்பால் இப் பகுதியில் அரசியல் குழப்பம் நிகழ்ந்த காலத்தில் இங்குள்ள கல்வெட்டுகள் எந்த அரசனுடைய ஆட்சியாண்டிலும் வழங்கப்பெருது சகயாண்டில் வழங்கப்பட்டன. அத்தகைய கல்வெட்டுகளில்

ஒன்று சகயாண்டு 875-ல் (கி.பி. 953) முனைவதரையன் குலமாணிக்க இராமன் தேவன் இக் கோயிலுக்கு விளக்கெரிப்பதற்காக அளித்த நன்கொடை பற்றி நவில்கிறது.

சோழ நாட்டின் வடபகுதி இரட்டமன்னனான மூன்றாம் கிருஷ்ண னால் கவரப்பட்ட செய்தியை இவ்வூரில் அவனுடைய 17, 19, 23ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் இருக்கும் செய்தி வலியுறுத்துகிறது. மூன்றாம் கிருஷ்ணன் 'காஞ்சியையும் தஞ்சையையும் கொண்ட கன்னரதேவன்' என்று புகழ்மாலை சூடிக்கொண்டுள்ளான். முதல் இராசராசன் காலத்திலேயே இப் பகுதி மீளவும் சோழர் ஆட்சிக்குக் கொண்டுவரப் பட்டது.

இக் கோயிலின் கருவறை சதுரமானது. அதன் பக்க அளவு 15 அடி 6 அங்குலம். அர்த்தமண்டபம் 9 அடி 7 அங்குலம் முன் னோக்கி நீண்டுள்ளது. தேவகோஷ்டங்கள் ஒவ்வொன்றையும் இரண் டிரண்டு குட்டையான அரைத் தூண்கள் அணி செய்கின்றன. அடித்தளம் (அதிஷ்டானம்) அதிக வேலைப்பாடின்றிப் பத்மப்படை, யாளி வரிமானம், குமுதப்படை என்பனவற்றைக் கொண்டுள்ளது. அரைத்தூண்களின் பலகைக்கு மேலும் கொடுங்கையின் கீழும் நடன மாடும் உருவங்கள் உள்ளன. தென் தேவகோஷ்டத்தில் தட்சிணா மூர்த்தியின் சிலை உள்ளது. கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசை யையும் மேலே யாளி வரிமானத்தையும் காணலாம். கிழக்கிலுள்ள அரைத் தூணின் வடபக்கத்துப் படையில் முரசறைவோன் வடிவ மொன்று செதுக்கப்பட்டுள்ளது. இக் கோயிலில் அந்தராளம் இல்லை.

பிற்பட்ட காலத்தனவாகக் காணப்படும் கிரீவமும் சிகரமும் சதுர வடிவினவாக உள்ளன.

இக் கோயிலில் பிட்சாடணர் சிலை, சுந்தரமூர்த்தி நாயனார், பரவை நாச்சியார், சங்கிலி நாச்சியார், நரசிங்கமுனையரையர் ஆகி யவருடைய சிலை என்பன மிக உயர்ந்த வேலைப்பாடுடைய உலோகச் சிலைகளாம்.

இக் கோயில் பிற்காலச் சோழர்களான முதல் இராசராசன் முத லியோர் காலத்தும் பல நன்கொடைகளைப் பெற்றுள்ளது.

திருநாவலூரான குடி நீங்கிய தேவதானத்துக் கோயிலுக்கு வரு மானமாக வரவேண்டிய தானியங்கள் பற்றியும் பொன் பற்றியும் அர சியல் அதிகாரி ஒருவன் முதல் இராசராசனுடைய 18ஆம் ஆண்டில் விசாரணை நிகழ்த்தினான். மூலதனமாக வழங்கப்பட்ட நன்கொடை

களின் மூல ஓலைகள் சில அவ்வூர்ப் பகுதியில் நிகழ்ந்த அரசியல் குழப்பத்தால் காணப்படவில்லை. எனவே கோயில் நிலங்களை மீண்டும் அளந்து வரையறுக்குமாறு ஆணையிட்டான். அவ்வூர் வணிகர் குழுவினர் அந் நன்கொடைகளை ஏற்று ஆண்டுதோறும் கோயிலுக்கு 700 கலம் தானியமும் 30 கழஞ்சுப் பொன்னும் வழங்குமாறு ஏற்பாடு செய்தான். இதனை நோக்க, ஊர் நிர்வாகத்திலும் கோயில் நிர்வாகத்திலும் ஊழல்கள் ஏற்பட்டபோது சோழ மன்னர்கள் விசாரணை நிகழ்த்திக் கணக்குகளைத் தணிக்கை செய்து ஒழுங்கை நிலைநாட்டினர் என்ற செய்தி வெளியாகிறது.

முதல் இராசராசனுடைய 21ஆம் ஆண்டில் பல வகையிலும் திரட்டப்பட்ட அபராதத் தொகையைக் கொண்டு ஸ்ரீ கோயிலில் ஆடியருளுகின்ற கூத்தப் பெருமானுக்கு 21 கழஞ்சு 6 மஞ்சாடி எடையுடைய தங்கப் பட்டம் ஒன்று அமைக்கப்பட்டது.

முதல் இராசராசனுடைய 24ஆம் ஆண்டில் அரசியல் அதிகாரி ஒருவன் கோயிலை மேற்பார்வை செய்து, கோயிற் காரியங்கள்பற்றி விசாரணை நிகழ்த்தியபோது சில ஆண்டுகளாக வழங்கப்பட்ட நன் கொடைகள் கோயிற் சுவர்களில் செதுக்கப்படாமையை உணர்ந்து அவை பற்றிய செய்திகளை உடனே கல்லில் வெட்டுமாறு ஆணையிட்டான்.

முதல் இராசேந்திரன் ஆட்சியில் விலையுயர்ந்த இரத்தினங்கள் பதிக்கப்பட்ட மேம்பட்ட அணிகள் பல ஆடவல்லானுக்கு அளிக்கப் பட்டன.

வீர ராசேந்திர மன்னனே இக் கோயிலுக்கு நிலமொன்றை நன் கொடையாக வழங்கியுள்ளான். முதற் குலோத்துங்கன் ஆட்சியில் விளக்கு எரிப்பதற்குப் பல நன்கொடைகள் வழங்கப்பட்டன. இரண்டாம் குலோத்துங்கனுடைய சிற்றரசன் ஒருவன் கூத்தாடும் தேவரான நடராசப் பெருமானுக்கு 100 கழஞ்சுப் பொன் எடையுடைய மகரதோரணம் செய்து வழங்கியதோடு கோயிலுக்குத் தேவையான பல வெள்ளி வெண்கலப் பாத்திரங்களையும் நன்கொடையாக அளித்தான்.

இவற்றை நோக்கத் திருத்தொண்டீசுவரத்திற்குச் சோழ மன்னர் ஆட்சிக் காலம் முழுவதும் அரசர்களும், இளவரசர்களும், பிரபுக்களும், பொது மக்களும் பல நன்கொடைகள் வழங்கி, அக் கோயிலைச் சிறப்பித்தனர் என்பது வெள்ளிடைமலை.

## 18. எறும்பூர்

**கடம்பவனேசுவரர் கோயில் :**

தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள எறும்பூர் சிதம்பரத்தி லிருந்து விருத்தாசலம் செல்லும் சாலையில் 14ஆவது கல்லிலும் (22·4 கி.மீ.) திருச்சி—சென்னைப் பெருவழியில் உள்ள சேத்தியா தோப்பிலிருந்து 3 கல் (4·8 கி.மீ.) தொலைவிலும் உள்ளது.

இக் கோயில் கருவறையின் தென் சுவரில் தட்சிணாமூர்த்தியின் கோஷ்டத்தின் இடப்புறம் மதுரைகொண்ட பரகேசரியான முதற் பராந்தகனுடைய 29ஆம் ஆண்டுக் கல்வெட்டு (கி.பி. 935) காணப் படுகிறது. அக் கல்வெட்டு இருங்கோளன் குணவன் அபராசிதன் என் பவனால் மூலத்தானமும் மூலத்தானத்தைச் சுற்றியுள்ள அஷ்ட பரி வார தேவதைகளின் எட்டு ஆலயங்களும் கற்றளியாக எடுப்பிக்கப் பட்ட செய்தியை வெளியிடுகிறது. அக் கல்வெட்டில் இவ்வூர் நல் வயலூர்க் கூற்றத்துத் தேவதானமாகிய உறுமூர் என்று வழங்கப் படுகிறது. அவ்வூர் விக்கிரம சோழன் (கி.பி. 1118—1135) ஆட்சியில் விக்கிரம சோழ சதுர்வேதிமங்கலம் என்று பெயர் மாற்றப்பட்டது. கல்வெட்டுகளில் இறைவனுடைய திருப்பெயர் 'உறுமூர் சிறு திருக் கோயில் பெருமானடிகள்' என்று வழங்கப்பட்டது. பிற்காலத்தில் இப் பெருமான் கடம்பவனேசுவரர் என்று வழங்கப்படுகிறார். இக் கோயில் சோழப் பெருமானடிகள் ஸ்ரீ பராந்தக தேவரின் இசைவு பெற்றுக் கற்றளியாக்கப்பட்டது.

இக் கோயிலிலுள்ள கல்வெட்டுகளில் இந்தப் பரகேசரியின் 28ஆம் ஆண்டுக் கல்வெட்டே மிகப் பழைமையானது என்று கொள்வதற் கில்லை. அடைமொழியில்லாத பரகேசரிக் கல்வெட்டுகள் 5ஆம் ஆண்டு முதல் 16ஆம் ஆண்டுவரை காணப்படுகின்றன. அவையும் முதற் பராந்தகன் காலத்தனவே. மதுரைகொண்ட பரகேசரி என்ற பெயரால் 3 கல்வெட்டுகள் உள்ளன. முற்பட்ட இக் கல்வெட்டுகள் இக் கோயில் கற்றளியாக்கப்படுமுன் தனித்தனிக் கற்பலகைகளில் செதுக்கப்பட்டுத் தனித்தனியே தரையில் பதிக்கப்பட்டோ, இன்றேல் செங்கற் கோயில் கட்டிடத்தின் இடையிடையே புதைக்கப்பட்டோ, பின் புதுக் கோயில் எடுப்பிக்கப்பட்டபின் அதன் சுவர்களில் பதிக்கப் பட்டிருக்க வேண்டும் அல்லது இக் கல்வெட்டுச் செய்திகள் புதுக் கோயிலில் மீண்டும் செதுக்கப்பட்டிருத்தல் வேண்டும்.

இவ் வெறும்பூர்க் கோயில் கிழக்கு நோக்கிய சந்நிதியை உடையது. முதற் பராந்தகன் காலத்தில் இது கருவறை, அர்த்தமண் டபம் என்ற இரண்டு உறுப்புகளையே உடையது. சதுரமாக உள்ள

இதன் கருவறையின் பக்க அளவு வெளிப் பக்கத்தில் 15 அடி 2 அங்குலம்; உட்பக்கத்தில் 8 அடி 4 அங்குலம். அர்த்தமண்டபத்தின் வெளி நீளம் 11 அடி. வெளி அகலம் 7 அடி. கருவறையின் சுவர்கள் கனமானவை. அவற்றின் கனம் 3½ அடி முதல் 4½ அடிவரை உள்ளது. அடித்தளத்தில் வேலைப்பாடுகள் அதிகம் இல்லை. கருவறையின் மேல் தற்போது காணப்படும் வட்டமான சிகரம் பிற்காலத்தில் செங்கல்லால் கட்டப்பட்டதாகும். கருவறையின் வெளிச் சுவர்களில் உள்ள தேவகோஷ்டங்களில் தென்புறம் தட்சிணாமூர்த்தி சிலையும் மேல்புறம் அருணாசலேசுவரர் அல்லது மகாயோகி சிலையும் வடபுறம் பிரமன் சிலையும் முற்பட்ட சோழர் காலச் சிற்பங்களின் பேரழகுக்கு எடுத்துக் காட்டுகளாக விளங்குகின்றன.

மூலத்தானத்தைச் சுற்றி ஒன்றிரண்டு சிறு கோயில்கள் செங்கற்களால் கட்டப்பட்டுள்ளன. அவற்றில் சிலைகள் இல்லை. ஆனால், அஷ்டபரிவார தேவதைகளின் கோஷ்டங்கள் இங்கு இருந்ததற்குரிய சுவடுகூடத் தற்போது காணப்படுமாறில்லை. நந்தி சிலையும் பைரவர் சிலையும் பிற்காலத்தில் எடுப்பிக்கப்பட்ட முகமண்டபத்தில் வைக்கப் பட்டுள்ளன. 29 அடி நீளமும் 24½ அடி அகலமுமுடைய இம் முகமண்டபம் பிற்காலத்தில் செங்கற்களையும் சுண்ணும்பையும் கொண்டு வளைவு ஒட்டாகக் கட்டப்பட்டுள்ளது. இம் முகமண்டபத்தின் வடபுறத்திலுள்ள பிதுக்கத்தில் அம்மன் கோயிலுள்ளது. சோழப் பேரரசு நிலை குலைந்தபின் தலையெடுத்த பிற்காலப் பாண்டியருள் ஒருவனான மாறவர்மன் வீரபாண்டியனுடைய (கி.பி. 1267) கல்வெட்டில் இவ்வம்பிகையின் பெயர் காணப்படுவதால், இம் முகமண்டபமும் அம்பிகை கோயிலும் 13ஆம் நூற்றாண்டில் எடுப்பிக்கப்பட்டிருக்கலாம் என்று கருதுகிறோம்.

மூலத்தானத்தையும் பரிவார தேவதைகள் ஆலயங்களையும் சுற்றி எடுக்கப்பட்டு, கிழ்ப்புறம் வாயிற்படியைக் கொண்ட மதிற்சுவரின் அடித்தளங்களே காணப்படுகின்றன. அங்குக் காணப்படும் செங்கற்கள் 1 அடி 2 அங்குல நீளம் 7½ அங்குல அகலம் 2¼ அங்குல உயர (கன) முடையனவாய் முற்பட்ட சோழர்கள் காலத்துச் செங்கற்களை நினைவுறுத்துகின்றன.

எறும்பூர்க் கோயில் முதற் பராந்தகன் காலத்தது என்பது கல்வெட்டுச் சான்றாலேயே உறுதியாகிறது. ஆதியில் இக் கோயிலில் மூலத்தானத்தோடு எட்டுப் பரிவார தேவதைகளின் ஆலயங்களும் இருந்தமைக்கு இக் கோயில் மூலத்தானத்திலுள்ள (கருவறைச் சுவரிலுள்ள) கல்வெட்டொன்றே சான்றாக உள்ளது. முற்பட்ட சோழர்கள் காலத்து ஏனைய கல்வெட்டுச் சான்றுகளை நோக்க அஷ்டபரிவார

தேவதைகள் முறையே சூரியன், சப்த மாதர்கள், கணேசன், சுப்பிர மணியன், சேட்டாதேவி, சந்திரன், சண்டேசுவரன், பைரவன் என்று அறிகிறோம். சைவ நாயன்மார்களும் ஆழ்வார்களும் சிவ விஷ்ணு வழிபாடுகளையே பெரிதும் வற்புறுத்திப் பதிகம் பாடியதால், சப்த மாதர்கள், சேட்டாதேவி இவர்களுடைய வழிபாடுகள் புறக்கணிக்கப் பட்டன. பரிவார தேவதைகள் கோயில்களை முற்பட்ட சோழர்கள் காலக் கோயில்களான விஜயாலய சோளீசுவரம் முதலியவற்றில் இன்றும் காண்கிறோம். ஆனால், முற்பட்ட சோழர்கள் காலத்தில் மூலத்தானத்தைச் சுற்றிப் பரிவார தேவதைகளின் ஆலயங்கள் எட்டு அமைக்கப்படும் வழக்கம் இருந்தது என்பதற்கு இக் கோயிற் சுவரி லேயே கல்வெட்டுச் சான்று உள்ளது. 'அஷ்டபரிவார தேவதை களுக்கு'க் கோயில்கள் அமைக்கும் பழக்கம் முதல் இராசராசன் காலத்திலும் தொடர்ந்து இருந்துவந்தது என்ற செய்தி திருப்புறம்பி யத்தில் காணப்படும் அவனுடைய 10ஆம் ஆண்டுக் கல்வெட்டால் உணரப்படுகிறது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மதுரைகொண்ட கோப்பரகேசரிவன்மற்கு யாண்டு இருபத்தெட்
2. டாவது வடகரை நல்வயலூர்க் கூற்றத்துத் தேவதானம் உறுமூர்ச் சிறுத்திருக் கோயில்
3. பெருமானடிகளுக்கு ஸ்ரீ விமாநங்கற்றளி யெடுப்பித்து அஷ்ட பரிவார கோயில்
4. செய்வித்து உடையார் சோழப் பெருமானடிகள் ஸ்ரீ பராந் தகதேவர்க்கு இருங்கோள
5. னகுணவன பராஜிதன் விண்ணப்பஞ்செய்ய........."

## 19. காட்டுமன்னார்குடி

1. வீரநாராயண விண்ணகர்.
2. உடையார்குடி அனந்தீசுவர சுவாமி கோயில்.

தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள காட்டுமன்னார்குடி என்பது சிதம்பரத்திலிருந்து 16 கல்லும் (25·6 கி.மீ.) கொள்ளிடத்தின் வடகரையிலுள்ள கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்து 8 கல்லும் (12·8 கி.மீ.) உள்ள தொலைவில் உள்ளது.

இது வைணவர்களுக்கு மிகச் சிறந்த திருப்பதியாகும். இங்கு வைணவப் பெரியார் நாதமுனிகளும் அவருடைய பெயரரான யமுனைத் துறைவன் ஸ்ரீ ஆளவந்தாரும் அவதரித்தனர். ஸ்ரீ ஆளவந்தாரே சுவாமி எம்பெருமானார் என்னும் ஸ்ரீ இராமாநுசருடைய ஆன்மீக குரு

ஆவார். இந்நாதமுனிகளே நம்மாழ்வாரைத் திருக்குருகூரில் அர்ச்சாவதாரத்தில் தரிசித்துத் தியானம் செய்து அவர் அருளால் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தை உலகுக்கு அருளிச் செய்தவராவர். ஏறத்தாழ இதே காலத்தில் பக்கத்து ஊராகிய திருநாரையூரில் அவதரித்த நம்பியாண்டார் நம்பிகள் பொல்லாப் பிள்ளையாரின் அருள் பெற்று முதல் இராசராசன் காலத்தில் சிதம்பரத்திலிருந்து சைவத் திருமுறைகளை உலகிற்கு வெளியிட்டார் என்பதும் உளங்கொளத் தக்கது.

வைணவர்கள் காட்டுமன்னார்குடியை வீரநாராயணபுரம் என்று குறிப்பிடுகின்றனர். கல்வெட்டுகளில் அது வீரநாராயண சதுர்வேதி மங்கலம் என்று வழங்கப்படுகிறது. இது வீரநாராயணன் என்ற விருதுப் பெயருடைய பராந்தகனால் புதிதாக நிர்மாணிக்கப்பட்ட அழகிய ஊராகும். கன்னியாகுமரிக் கல்வெட்டுகள் 'பகைவர்களுக்கு யமனைப் போன்ற பராந்தகன் பிரமன் சுவர்க்கத்தைப் படைத்தாற் போல வீரநாராயணம் முதலிய சிற்றூர்களைப் படைத்து அவற்றைக் கற்றுவல்ல அந்தணர்கள் அனுபவிக்குமாறு விடுத்தான்' என்று குறிப்பிடுகிறது. இவ்வூர் பராந்தகன் நிர்மாணித்த சிற்றூர்களில் மிகச் சிறந்தது. இங்குக் கற்றுவல்ல அந்தணரே குடியேற்றப்பட்டனர். இவ்வூரின் அருகில் தமிழ் நாட்டிலுள்ள பெரிய பாசன ஏரிகளில் ஒன்றும் முதல் பராந்தகனால் அவனுடைய விருதுப் பெயரான வீரநாராயணன் என்ற பெயரால் அமைக்கப்பட்டதுமான 'வீரநாராயணன் ஏரி' என்ற 'விராணத்தேரி' உள்ளது.

1. வீரநாராயண விண்ணகரம்:

இவ்வூரிலுள்ள விஷ்ணு கோயில் வீரநாராயண விண்ணகர் எனவும், இறைவனுடைய பெயர் வீரநாராயண எம்பெருமான் எனவும் கல்வெட்டுகளில் வழங்கப்பெறுகின்றன. இக் கோயில் 13ஆம் நூற்றாண்டில் புதுப்பிக்கப்பட்டுள்ளது. ஏனைய கோயில்களில் நிகழ்த்துவதுபோலப் புதுப்பிக்கப் புகுமுன் பழைய கோயிற் கல்வெட்டுகளைப் படியெடுத்துக் கோயிலைப் புதுக்கிய பின் குறிப்பிட்ட இடங்களில் அவற்றை வெட்டுவிக்கும் முறை இக் கோயிலில் பின்பற்றப்படாமையால், பெருமதிப்பு வாய்ந்த பழைய சாசனங்கள் பலவற்றை நாம் இழந்துவிட்டோம். இதனால் வீரநாராயண சதுர்வேதி மங்கலத்தைச் சார்ந்த பகுதியின் பழைய வரலாறு அழிந்துவிட்ட செய்தி மிகவும் வருந்தத்தக்கது. தற்போது இக் கோயில் சுவர்களில் காணப்படும் முக்கியமான கல்வெட்டுகள் பொன்வேய்ந்த பெருமான் என்ற விருதுப் பெயருடைய, கி.பி. 1251-ல் அரியணையேறிய சடையவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தனவும், கி.பி. 1283-ல் அரியணையேறிய மாறவர்மன் விக்கிரம பாண்டியன் காலத்தனவும், மிகப் பிற்

பட்ட காலப் பல்லவனுன, கி. பி. 1243-ல் அரியணையேறிய கோப் பெருஞ்சிங்கன் காலத்தனவும் ஆகும். சுந்தர பாண்டியன் பொன் வேய்ந்த பெருமாள் என்ற தன் பெயரால் ஒரு சிலையை நிறுவிச் சுந்தர பாண்டியன் சந்தி என்ற ஒரு வேளை நிவேதனம் முதலிய வற்றிற்கு நன்கொடை வழங்கினுன். இவ் விண்ணகரத்துப் பெருமான் பெயர் மதுராபுரி எம்பெருமான் எனவும் இக் கிராமத்தின் பெயர் 'சுந்தர பாண்டிய சதுர்வேதிமங்கலம்' எனவும் மாற்றப்பட்டன.

## 2. உடையார்குடி—அனந்தீசுவர சுவாமி கோயில் :

காட்டுமன்னுர்குடியை அடுத்த சிற்றூராகிய உடையார் குடியில் அனந்தீசுவர சுவாமி கோயில் என்ற சிவன் கோயில் எடுப்பிக்கப்பட் டுள்ளது. முதற் பராந்தகன் காலத்து இக் கோயில் ஓரளவு கால இடையீட்டால் புதுமை குன்றிச் சிறுசிறு திருப்பணிகள் அவ்வப் போது செய்யப்பட்டபோதிலும் பண்டை வனப்புக் குன்ருமல் பாது காக்கப்பட்டுள்ளது. பராந்தகனுடைய 33ஆம் ஆண்டு முதல் 38ஆம் ஆண்டுவரை இக் கோயிலில் எட்டு கல்வெட்டுகள் உள்ளன. இக் கோயிலும் இவ்வூரும் இம் முதற் பராந்தகனுடைய 33ஆம் ஆண்டிற்கு முன் எப்பொழுது ஏற்பட்டனவோ என்று அறிவதற்குக் கருவிகள் இல்லை. இங்குள்ள கல்வெட்டுகளில் பெரும்பாலான அந்தணர்களுக் கும், கோயில் விளக்குகளுக்கும் விடப்பட்ட நில நன்கொடைகளையும் பொற்கொடைகளையும் பற்றியனவேயாம். இங்குள்ள பெருமான் திருவனந்தீசுவரத்துப் பெருமானடிகள் எனவும். 'வீரநாராயண சதுர்வேதி மங்கலத்து அனந்தீசுவரம் உடையார்' எனவும் வழங்கப் படுகிருர். 38ஆம் ஆண்டுக் கல்வெட்டு, ஊர்ச்சபையினர் முதற் பராந்தகனுல் 'நம் மகனுர்' என்று அன்பு பாராட்டப்பட்ட பெருமை வாய்ந்த தென்னவன் விழுப்பரையனுல் கட்டப்பட்ட மண்டபத்தில் கூடினர் என அறிகிருேம். அது 25 அந்தணர்களுக்கு உணவிடுவதற்குத் தேவையான முதலீடாக தேவன்மங்கலம் என்ற ஊரான் ஒருவன் 3 வேலி நிலத்தை நன்கொடையாக வழங்க அரசன் அதற்கு இறை கட்டிய செய்தியை வெளியிடுகிறது.

அடைமொழியில்லாத இராசகேசரிக் கல்வெட்டுகள் பல 2ஆம் ஆண்டு முதல் 12ஆம் ஆண்டுவரை உள்ளன. அவை பெரும்பாலும் கண்டராதித்தன், சுந்தர சோழன் என்பவர் காலத்தன. ஒரு சில முதல் இராசராசன் காலத்தனவாகும்.

இராசகேசரிவர்மனுடைய 4ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று உள்ளூர் நிர்வாகக் குழுவின் அமைப்புபற்றிய செய்திகளை வெளியிடுவ தாகும். அரசாங்கக் கல்வெட்டிலாகாவினர் அது கண்டராதித்தன்

காலத்ததாகவோ சுந்தரசோழன் காலத்ததாகவோ இருக்கலாம் என்று குறிப்பிட்டுள்ளனர். துர்அதிர்ஷ்டவசமாக அக் கல்வெட்டு சிதைந்தும் முடிவு பெறுமலும் காணப்படுகிறது. அது அவ்வாண்டு கிராம காரியங்களைக் கவனித்த பெருமக்களுடைய ஆணை ஒன்றினைக் குறிப்பிடுகிறது. அவ்வூர்ச் சபையார் 'சம்வத்ஸரம் கிராம காரியம் திருத்துகிற நூற்றிருபதின்மர் பெருமக்கள்' என்று குறிப்பிடப்படுவதால் அவ்வூர்ச் சபை 120 உறுப்பினர்களைக் கொண்டிருந்த செய்தி புலனுகிறது.

அவ்வூர்ப் பெருங்குறிப் பெருமக்களால் ஒரு நிலப் பகுதி இறைவனுடைய நித்திய ஆராதனைக்கும் அவிசுபலிக்கும் வழங்கப்பட்டது. ஆனுல், அது சில காலமாக நடைமுறையில் கோயில் செலவிற்குப் பயன்படுத்தப்படவில்லை. இதற்கிடையில் கிராம நிர்வாகத்திற்குப் புதுக்குழு தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டது. புத்தாண்டுச் சபையார் பழைய வயலை மாற்றிக் கோயிலுக்கு மிகுதியும் பயன்படும் வகையில் புதிய வயல் ஒன்றை வழங்கினர் என அறிகிறோம். இவ்வூரும் உத்தர மேரூர், செந்தலை முதலிய ஊர்களைப்போலப் பல குடும்புகளை உடையதாய் இருந்தது என்பதும் கிராமச் சபையின் உறுப்பினர் இவ்வூரில் 120 பேர் இருந்தனர் என்பதும் பத்தாம் நூற்றுண்டில் நம் நாடு ஸ்தல சுய ஆட்சியில் எவ்வளவு மேம்பட்ட நிலையிலிருந்தது என்பதை நமக்கு எடுத்துக்காட்டும் சுவைமிக்க செய்திகளாம்.

கற்றுவல்ல அந்தணர்கள் குடியேறிய கிராமங்கள் சிலவற்றில் 'சாசன பட்ட சதுர்வேதிபட்ட—பெரும்பாடி சகஸ்ரதானப் பெருமக்கள்' என்ற அறிஞர்கள் சபை அறக்கட்டளைகளை நிர்வகித்து வந்த செய்தியை அறிேறோம். மேற்பழுவூரைச் சார்ந்த சேக்கிழான் அரையன் சங்கர நாராயணன் ஆன சோழ முத்தரையன் பலரிடமிருந்து துண்டு துண்டாகப் பத்து வயல்களை வாங்கி, அவற்றை அறச் செயல்களுக்குப் பயன்படுத்துமாறு வேதங்களில் வல்ல அறிஞர்களை உடைய இச் சபையாருடைய பராமரிப்பில் விடுத்தான் என அறிகிறோம். இக் கல்வெட்டு சுந்தர சோழன் காலத்ததாகலாம். இத்தகைய சபைகள் ஸ்ரீநிவாசநல்லூர், செம்பியன் மகாதேவி முதலிய ஊர்களிலும் இருந்த செய்தி கல்வெட்டுகள் வாயிலாக வெளியாகின்றது.

பராந்தகன் சுந்தர சோழனுடைய தாயாரும் அரிஞ்சயனுடைய தேவியாருமான வீமன் குந்தவையாரின் பெயர் சுந்தர சோழனுடைய 12ஆம், 14ஆம் ஆண்டுக் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. ஒவ்வொரு மாதப் பிறப்பு நாளன்றும் திருமூலத்தானத்துப் பெருமானடிகளைத் திருமஞ்சனமாட்ட 1000 குடம் தண்ணீர் கொண்டுவருவதற்கு நிவந்தமாக நிலமொன்று வீமன் குந்தவையாரால் விடப்பட்ட

செய்தி 12ஆம் ஆண்டுக் கல்வெட்டால் புலனாகிறது. 'ஸ்தான மாட்டுவதற்கு ஸ்ரீ அரிஞ்சயபராந்தக தேவர் ஆச்சியார் உடைய பிராட்டியார் வீமன் குந்தவையார் கொண்டு கொடுத்த பூமி' என்பது அக் கல்வெட்டுப் பகுதி. ஆற்றூர்த் துஞ்சிய தேவரான அரிஞ்சயப் பெருமானுடைய தேவியார் ஆதித்தன் கோதைப்பிராட்டியார் இறைவனுடைய நிவேதனத்திற்கும், திருமஞ்சனத்திற்கு 108 குடம் தண்ணீர் கொண்டுவருவதற்கும் நிவந்தம்விட்ட செய்தியை 12ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று தெரிவிக்கிறது. வீமன் குந்தவையார் மாதப் பிறப்புகள்தோறும் திருமுழுக்குக்கு 1000 குடம் நீர் கொண்டு வருவதற்கு முன்பு விடுத்த நிலக்கொடைக்கு மேலும் சில நிலங்களை நன்கொடையாக வழங்கிய செய்தியும் இக் கல்வெட்டில் இடம் பெற்றுள்ளது.

சுந்தர சோழனுடையதோ என்று ஐயுறப்படும் உயர்ந்த ஆட்சியாண்டுடைய இராசகேசரிவர்மனுடைய 17ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று ஆதித்தன் பட்டாலகன் என்பான் 150 பலம் எடையுடைய விளக்கை நன்கொடையாக வழங்கி விளக்கெரிப்பதற்கு ஒரு நிலத்தை நன்கொடையாக வழங்கிய செய்தியும் புலனாகிறது.

வீரபாண்டியன் முடித்தலை கொண்ட பரகேசரிவர்மனான இரண்டாம் ஆதித்தன் கல்வெட்டொன்று 'தவதொங்க தெரிஞ்ச கைக்கோளர்' தொகுதியைச் சார்ந்த அரையன் ஜயவிடங்கன் என்பான் திரு அனந்தீசுவரப் பெருமானுடைய மூலத்தானத்திற்குத் தெற்கில் கூத்தப் பெருமாள் கோயிலும் கணபதி கோயிலும் பிச்சைத் தேவர் கோயிலும் கட்டுவித்த செய்தியை வெளியிடுகிறது. அதே ஆண்டில் சிங்களாந்தக தெரிஞ்ச கைக்கோளர் தொகுதிக்கு மாறிய அதே கொடையாளி 3 காசு நன்கொடை வழங்கி, அதன் வட்டியைக் கொண்டு திருவனந்தீசுவரத்துக் கூத்தப்பெருமாளுக்கு ஒரு ஜோடி ஆடைகள் வழங்க ஏற்பாடு செய்தான். இவ் வரசனுடைய ஏனைய கல்வெட்டுகள் விளக்குக்கும் திருமஞ்சனத்திற்கும் வழங்கப்பட்ட நிவந்தங்கள் பற்றியனவே.

பரகேசரிவர்மன் உத்தம சோழனுடைய 2ஆம் ஆண்டில் பழுவேட்டரையர் கண்டனார் தப்பிலி தர்மன் மூலத்தானத்தில் ஒரு விளக்கு எரிப்பதற்கு 12½ கழஞ்சுப் பொன் வழங்கினான். இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டில் மற்றொன்று புலால சேகரையர் மகளார் கோயில் பெருமாள் ஆகிய வானவன் மகாதேவியார் இக் கோயிலில் விளக்கிற்கும், நண்பகல் நிவேதனத்திற்கும், வேதங்களில் வல்ல அந்தணன் ஒருவனுக்கு நாள்தோறும் உணவு இடுவதற்கும் பொற்கொடை வழங்கிய செய்தியை வெளியிடுகிறது.

கண்டராதித்தன் தேவியாரான பராந்தகன் மாதேவடிகளான செம்பியன் மாதேவியார் அதே ஆண்டில் வீரநாராயண சதுர்வேதி மங்கலத்துத் திரு அனந்தீசுவரத்து ஆழ்வாருக்கு 96 பெண்ணாடுகளும் ஒரு செம்மறியாடும் விளக்கிற்காக நன்கொடை வழங்கினான். இக் கல்வெட்டில் கண்டராதித்தன் 'மேற்கெழுந்தருளிய தேவன்' என வழங்கப்படுகிறான். மேற்கெழுந்தருளுதல் என்பது வடக்கிருத்தல் என்பது போலத் தூயோர்கள் உண்ணா விரதம் இருந்து உயிர்விடும் புனிதச் செயலைக் குறிப்பிடுவது போலும்.

பரகேசரிவர்மனுடைய (உத்தம சோழன்) 10ஆம் ஆண்டில் பனிப்பாக்கத்தைச் சார்ந்த செம்பியன் மூவேந்த வேளான் என்பவன் ஒரு விளக்கெரிப்பதற்கு 20 ஈழக் காசு நன்கொடை வழங்கினான். அதே ஆண்டில் நம்பி என்பான் ஓர் அறச்சாலையை நிறுவி, அங்கு 100 அந்தணர்களுக்கு உணவிடுவதற்கு நிலம் நன்கொடையாக வழங்கினான்.

12ஆம் ஆண்டில் அடிகள் பழுவேட்டரையன் கண்டன் சுந்தர சோழன் என்பான் நாடோறும் ஐந்து அந்தணர்களுக்கு உணவிடுவதற்கும், தன் தம்பி கண்டன் சத்ரு பயங்கரனுடைய ஆன்ம சாந்திக்கு ஒரு நந்தாவிளக்கு எரிப்பதற்கும் மானியம் வழங்கினான்.

12ஆம் ஆண்டுக் கல்வெட்டு மற்றொன்று இராசராசன் திருத் தமக்கையாரும் சுந்தர சோழன் மகளாருமான குந்தவையார் சூரிய தேவனுடைய உலோகச் சிலையை அமைப்பதற்கு 500 கழஞ்சுப் பொன் வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. அவ் விக்கிரகத்தின் திருமுன் ஒரு விளக்கு எரிப்பதற்குத் தனியே 25 கழஞ்சுப் பொன் முதலாக வைக்கப்பட்ட செய்தியும் உணரப்படுகிறது.

இரண்டாம் ஆதித்தன் பெயரால் அமைந்த உடையார் கரிகால சோழத் தெரிஞ்ச கைக்கோளர் தொகுப்பைச் சார்ந்த காளி கற்றளி என்பான் சிம்ம விஷ்ணு சதுர்வேதிமங்கலமான திருமுள்ளூரிலுள்ள பரமேசுவரர் கோயிலில் இன்னியம் (இன்னிசை) இயக்குவாருக்கு ஊதியம் அளிப்பதற்கு மானியமாக ஒரு நன்கொடை வழங்கினான்.

வாணியர் இருவர் ஒரு தரிசு நிலத்தையும் அதனைச் சீர்திருத்துவதற்குப் பொன்னையும் நன்கொடையாக வழங்கினர். வீரநாராயண சதுர்வேதிமங்கலத்திலும் நின்ற நல்லூரிலும் உள்ள அந் நிலவரும்படியைக்கொண்டு தன் மாமனுடைய ஆத்ம சாந்திக்காகப் பரகேசரியன் (உத்தம சோழன்) என்பார் 16ஆம் ஆண்டில் தாம் நிறுவிய அறச் சாலையில் 100 அந்தணர்களுக்கு உணவிட ஏற்பாடு செய்தனர்.

இக் கோயிலின் கருவறை சதுரமானது. அதன் பக்க அளவு 20 அடி. தேவகோஷ்டங்கள் கருவறைச் சுவர்களின் முன்னேக்கி உள்ளன. கருவறைக்கும் அர்த்தமண்டபத்துக்கும் இடையே 2½ அடி நீளமும் 1¾ அடி அகலமுமுடைய அந்தராளம் உள்ளது.

அர்த்தமண்டபம் 26¾ அடி நீளம் முன்னேக்கி உள்ளது. இதனை உருண்டையான கும்பத்தை உடைய நான்கு வட்டத் தூண்கள் தாங்கி நிற்கின்றன.

அரைத் தூண்களும் அன்னவரிமானமும் பூதகண வரிசையும் கொடுங்கையும் நன்முறையில் அமைந்துள்ளன. இக் கோயிலின் பழைய சிகரம் தற்போது இல்லை.

இச் சிவன் கோயிலில் முதல் இராசராசன் முதலிய பிற்பட்ட சோழர்கள் காலத்து அரிய கல்வெட்டுகளும் உள்ளன. அவற்றையும் நோக்குவோம்.

முதல் இராசராசனுடைய 2ஆம் ஆண்டுக் கல்வெட்டுப் பாண்டியன் முடித்தலை கொண்ட இரண்டாம் கரிகாலனைக் கொன்ற துரோகிகளின் நிலங்களையும் வீடுகளையும் பறிமுதல் செய்யுமாறு வீர நாராயண சதுர்வேதிமங்கலத்துப் பெருங்குறிச் சபையினருக்கு அரசன் ஆணையிட்ட செய்தியை வெளியிடுவதோடு அவர்களோடு தொடர்புடையவர் உடைமைகளையும் கவர்ந்த செய்தியை வெளியிடுகிறது. அந்தச் சொத்துக்களை அரசியல் அதிகாரியோடு கலந்து ஆலோசித்து அன்றைய விலைப்படி விற்றுவந்த தொகையை அரசர் பண்டாரத்தில் செலுத்தவேண்டும் எனவும் வற்புறுத்தப்பட்டது. அவ்வாணைப்படி கவரப்பட்ட 2 வேலி 16 மா நிலமும் நன்கு குடியிருப்பதற்கு வசதிகளுடைய 6 வீடுகளும் ஊர்ச் சபையோர்களால் பாரன் என்ற வியாழ கஜமல்ல பல்லவரையனுக்கு 150 கழஞ்சுப் பொன்னுக்கு விற்கப்பட்டது. கஜமல்ல பல்லவரையன் இவற்றைக் கோயிலுக்கு நன்கொடையாக வழங்கி, இவற்றின் வரும்படியைக் கொண்டு திருவனந்தீசுவரத்து பட்டாரகரின் மூலத்தானத்துக்கு முன் எடுப்பிக்கப்பட்ட பிரமஸ்தான மண்டபமான மூவாயிரத்து அறுநூறு என்னும் நிலையம்பலத்தில் தண்ணீர் வழங்கும் அந்தணன் ஒருவனுக்கு ஊதியம் வழங்கி நாள்தோறும் 10 அந்தணர்களுக்கும் 5 சிவயோகிகளுக்கும் உணவு வழங்கவும் ஏற்பாடு செய்யப்பட்டது.

உத்தமசோழன் காலம் முழுவதும் துப்பி விசாரித்து முதல் இராசராசனுடைய அண்ணன் ஆதித்த கரிகாலனைக் கொலை செய்வதில் ஈடுபட்டவர்களைக் கண்டுபிடித்துத் தண்டனை வழங்க இத்தனை கால இடைவெளி ஏற்பட்டுள்ளது என்பது உளங்கொளத் தக்கது.

முதல் இராசராசனுடைய 27ஆம் ஆண்டுக் கல்வெட்டு வீர நாராயண சதுர்வேதிமங்கலத்துச் சபையினர் இராசராசன் என்ற மண்டபத்தில்கூடி, அவ்வூர் நிலங்கள், குளங்கள் ஆகியவற்றின் வரும் படியில் நான்கில் ஒரு பங்கு திரு அனந்தீசுவரர் கோயிலைச் சேர வேண்டும் என்று முடிவு செய்தார்கள் என அறிகிறோம். இம் முடிவினால் சிவன் கோயிலுக்கும் விஷ்ணு கோயிலுக்கும் வரும்படி பற்றி யிருந்த பிணக்கம் நீங்கியதுபோலும்.

முதல் இராசேந்திரன் இத் திரு அனந்தீசுவரத்துப் பெருமானை 'நம் மூல தெய்வம்' என்ற பெயரால் முக்கியமான குலதெய்வமாகக் கொண்டுள்ளான். இவன் தேவியாரான திரிபுவன மகாதேவியார் வானவன் மகாதேவியார்தாம் இக் கோயிலில் நிறுவிய சந்திரசேகரப் பெருமாள் அவருடைய நம்பிராட்டியார் ஆகிய இரண்டு உலோகத் திருமேனிகளையும் ஸ்ரீபலிச் சடங்கின்போது ஊர்வலமாக எடுத்து வருவதற்குரிய அவிசுபலி அர்ச்சனுபோகத்திற்காக நன்கொடை வழங்கியுள்ளார்.

மற்றொரு கல்வெட்டு 27½ கழஞ்சு எடையுடைய தங்கப் பிடியைக் கொண்டு 19,908 முத்துகள் வைத்து இழைக்கப்பட்ட குடைஒன்றை இவ்வூர்வாசியான கைக்கோளன் ஒருவன் இப் பெருமானுக்கு வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. இந் நன்கொடையின் மதிப்பை நோக்க மக்கள் இப் பெருமானிடம் எவ்வளவு அன்பும் ஈடுபாடும் கொண்டிருந்தனர் என்பது புலனாகிறது.

## 20. திருவாமாத்தூர்

**அபிராமேசுவரர் கோயில் :**

இக் கோயில் தென்னார்க்காடு மாவட்டத்தில் விழுப்புரத்தி லிருந்து செஞ்சிக்குச் செல்லும் சாலையில் 4 கல் (6·4 கி.மீ.) தொலைவில் ஒரு கிராமத்துக்குப் பிரிகின்ற கிளைச்சாலையை ஒட்டி அமைந்துள்ளது. இங்குள்ள அபிராமேசுவரர் கோயில் முதற் பராந்தகன் காலத்தது ஆகும்.

பரகேசரியின் மூன்றும் ஆண்டு முதல் 16ஆம் ஆண்டுவரை அடைமொழிகளில்லாத பல கல்வெட்டுகள் உள்ளன. அவற்றுள் சிலவாவது முதற் பராந்தகன் காலத்தனவாகலாம். மூன்றும் ஆண்டுக் கல்வெட்டொன்று முதற் பராந்தகனுடைய புதல்வன் கண்டராதித்தனின் அதிகாரியான பிரபூமிகமல்லன் என்ற கண்டராதித்த பல்லவரையனால் திருவாமாத்தூர்ப் பெருமானடிகளுக்கு ஒரு நந்தாவிளக்கு அமைப்ப



69. கதம்பவனேசுவரர் கோயில்,
எறும்பூர்



70. தட்சிணாமூர்த்தி,
எறும்பூர்



71. யோகி சிவன்,
எறும்பூர்



72. பிரமன்,
எறும்பூர்

தற்காக 10 பொன் நன்கொடை வழங்கப்பட்ட செய்தியை வெளியிடுகிறது. இதனை முதற் பராந்தகன் காலக் கல்வெட்டாகக் கொள்ளலாம்.

மூலத்தானத்தின் மேற்புற அடித்தளத்தில் உள்ள பரகேசரியின் ஆறும் ஆண்டுக் கல்வெட்டில் இத் திருவாமாத்தூர்க் கோயிலைக் கட்டிய கொத்தன் பெயர் காணப்படுகிறது. 'இத்தளி செய்த அருக் கூர்த்தச்சன் நாரணன்வேகண்டன் ஆகிய திருவாமாத்தூர் ஆசார்யன்' என்று குறிப்பிடும் இக் கல்வெட்டின் பிற்பகுதி கட்டடத்திற்குள் மறைந்துவிட்டது. எனினும், கோயிலைக் கட்டிய கொத்தன் பெயரைத் தெரிவிக்கும் இக் கல்வெட்டுத் தனிச் சிறப்புடையது. பெரும்பாலும் தென்னாட்டுக் கோயில்களைக் கட்டிய சிற்பிகளின் பெயரை வெளியிடும் மரபே காணப்பட்டிலது. பரகேசரியின் 15, 16ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் இரண்டும் முதற் பராந்தகன் காலத்தனவே யாகலாம்.

மதுரைகொண்ட பரகேசரி என்ற அடைமொழியுடைய முதற் பராந்தகன் கல்வெட்டுகள் பல 15ஆம் ஆண்டு முதல் 41ஆம் ஆண்டு வரை காணப்படுகின்றன. ஆட்சி ஆண்டு நன்கு குறிப்பிட முடியாதபடி 'பதி' என்பதற்குமேல் சற்றுச் சிதைந்துள்ள கல்வெட்டொன்று இக் கோயிலில் பெருமானடிகளுக்கு ஸ்ரீபலி சுமந்து சென்ற யானை மாவுத்தனுக்கு வழங்கப்பட்ட மானியமான நிலம் கைக்கொள்ளப் படவே, கோயிலில் ஸ்ரீபலிச் சடங்கு நின்றுவிட்டதால், கோயிலிலுள்ள பன்மாஹேசுவரர்கள் அரசனிடம் சென்று இச் செய்திபற்றி முறையிட, அதனை நன்கு விசாரித்த மன்னனான பரகேசரி ஸ்ரீ பராந்தக தேவன் அம் மானியத்தைத் திருப்பித் தருமாறு ஆணையிட்ட ஸ்ரீமுகம், அக் கோயில் இருந்த கோட்டத்து அரசியல் அதிகாரியான சோழ சிகாமணி பல்லவரையனுக்கு அனுப்பப்பட, அவன் மாவுத்தனுக்கு மானியம் மீண்டும் கிடைக்கவேண்டிய ஏற்பாடு செய்தானெனக் குறிப்பிடுகிறது. இச் செயல், கோயில் நன்கொடைகளில் ஏற்படும் குறைகள் சோழர்கள் ஆட்சியில் உடனே கவனிக்கப்பட்டுப் போக்கப் பட்ட செய்திக்கு எடுத்துக்காட்டாகிறது. முதற் பராந்தகனுடைய ஏனைய கல்வெட்டுகள் விளக்கிற்கு வழங்கப்பட்ட நன்கொடை பற்றியன.

பரகேசரியின் 3ஆம் ஆண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பட்ட பிர பூமிகன் மல்லனாகிய கண்டராதித்த பல்லவரையன் சகயாண்டு 879-ல் (கி.பி. 957) இக் கோயிலில் இரண்டு விளக்குகள் எரிப்பதற்கு 20 கழஞ்சுப் பொன் நன்கொடை வழங்கியுள்ளான். இக் கல்வெட்டில் இவன் பெயர் கார்ப்பூண்டி நாட்டுடையான் என்று காணப்படுகிறது.

இக் கல்வெட்டில் ஆட்சியாண்டு குறிக்கப்படாமையை நோக்க இரட்ட மன்னர் படையெடுப்பால் இப் பகுதியில் அரசியல் குழப்பம் இருந்த செய்தி வெளியாகிறது.

இராசகேசரிவர்மனுடைய 3, 5ஆம் ஆண்டுகளைச் சேர்ந்த இரு கல்வெட்டுகள் சுந்தர சோழன் காலத்தனவாகலாம். அவையிரண்டும் விளக்கிற்கு வழங்கப்பட்ட நன்கொடைகளாகும்.

இக் கோயிலின் கருவறை சதுர வடிவமானது. அதன் பக்கம் 20 அடி. அடித்தளம் 6 அடி 8 அங்குல உயரமுடையது. அர்த்த மண்டபத்துக்கும் கருவறைக்கும் இடையே ஓர் அந்தராளமும், அர்த்த மண்டபத்துக்கும் முகமண்டபத்துக்கும் இடையே ஓர் அந்தராளமும் உள்ளன.

பிற்காலத்தில் முகமண்டபத்தின் முன்புறம் மகாமண்டபம் ஒன்று இணைக்கப்பட்டுள்ளது. கட்டடம் முழுவதும் கிழக்கு மேற்கில் 75 அடி நீளமுடையது.

தேவகோஷ்டங்கள் கருவறை, அர்த்தமண்டபம் இவற்றின் சுவர் களிலுள்ள பிதுக்கங்களில் அமைந்துள்ளன. இத் தேவகோஷ்டங் களில் பிட்சாடனர், தட்சிணாமூர்த்தி, இலிங்கோத்பவர், பிரமன் துர்க்கை என்ற சிலைகளைக் காணலாம்.

அர்த்தமண்டபத்தின் நடுத் தூண்கள் நான்கும் தற்போது காணப்படவில்லை. ஆனால், நடுவில் பட்டிகையையும் இருபுறமும் சுருளணிகளையும் கொண்ட அவற்றின் போதிகைகள் நன்கு இணைந்து காணப்படுகின்றன.

தற்போதுள்ள சிகரம் புதியதாகும்.

இக் கோயிலில் பிற்பட்ட சோழர்கள் காலக் கல்வெட்டுகள் பலவும் உள்ளன. முதல் இராசராசனுடைய கல்வெட்டொன்று (ஆட்சியாண்டு கட்டடத்துள் மறைந்துவிட்டது) வேசாலிப் பட்டியைச் சார்ந்த குணசேகரன் என்பான் திருவாமாத்தூர் ஆட வல்லானுக்கு விலையுயர்ந்த இரத்தினங்கள் பதிக்கப்பட்ட தோள் வளையல்கள் இரண்டும் திருமஞ்சனத்துக்கு உபயோகிக்க இரத் தினங்கள் பதிக்கப்பட்ட பாத்திரம் ஒன்றும் நன்கொடை வழங்கினான்.

இராசராசனுடைய 23ஆம் ஆண்டு முதல் 26ஆம் ஆண்டு வரை யுள்ள கல்வெட்டுகளில் மூன்றில் கோயில் அலுவல்களின் நிகழ்ச்சி பற்றி விசாரணைகள் நிகழ்த்திய செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

23ஆம் ஆண்டில் அரசியல் அதிகாரியும் இக் கோயிலின் அறங் காவலனுமான சிறுதாமநல்லூர் தமுலன் கொற்றன் அங்கி என்பான் கோயில் அலுவல்களை விசாரணை நடத்தினன்; சில கோயில் நிவேதனங் களைக் கோயில் அலுவலாளர்கள் 21 பேர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்க ஏற்பாடு செய்தான்; ஸ்ரீபலி சடங்கின்போது மணியடிப்ப தற்காக முன்பிருந்த கோயில் சிப்பந்திகளோடு இன்னும் இருவரைப் புதிதாக நியமித்தான். நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு இம் முறை சாஸ்திரத்துக்கு விரோதமானது என்று அரசனுடைய பெருந் தரத்தைச் சேர்ந்த உறுப்பினர் ஒருவரால் ஆட்சேபிக்கப்பட்டது. முதல் இராசராசனுடைய 26ஆம் ஆண்டில் கோயிலில் முரசறை வதற்கு நியமிக்கப்பட்ட அலுவலர், நாள்தோறும் ஸ்ரீபலிச் சடங்கு நிகழும் மூன்று வேளைகளிலும் சந்திரசேகரப் பெருமானை ஊர்வலம் செய்வித்து, அதற்கு ஊதியமாக நெல்லுப் பெற இதே அறங்காவலன் ஏற்பாடு செய்தான். 26ஆம் ஆண்டில் ஊர்ச் சபையாரையும் ஊர் மக்களையும் ஒன்று கூட்டிக் கோயில் விவகாரங்கள்பற்றி விரிவாகப் பேசி இராசகேசரி மரக்காலால் அளப்பதற்குப் பதிலாகக் கோயில் வருமானத் தானியங்களை வீதிவிடங்கன் மரக்காலால் அளப்பதால் கிடைக்கும் அதிகப்படி அளவு தானியங்களைக்கொண்டு சிவபெருமா னுக்கு அக்காரவடிசில் நிவேதனம் செய்து வழங்குவதற்கு ஏற்பாடு செய்தான்.

இரண்டாம் குலோத்துங்கன் ஆட்சியின் இரண்டாம் ஆண்டில் குருடர் பதின்மரும், அவர்களுக்கு வழிகாட்டிகள் இருவரும் கோயிலில் திருப்பதியம் ஓதுவதற்கு மானியமாக அரசன் 12 வேலி நிலத்தை நன்கொடை வழங்கி இராசராசப்பிச்சன் என்பவன் தலைமையில் தேவாரம் ஓதுதல் சிறப்புற நிகழ ஏற்பாடு செய்தான். பெரிய புராணம் பாடுவித்தவனும், சிவநெறியில் பெரும் பித்துடையவனு மான அனபாயன் என்னும் இரண்டாம் குலோத்துங்கன் பாற்கடலில் அமர்ந்த பரமனுடைய தில்லையிலிருந்த திருமேனியைக் கார்க்கடலில் எறிந்த செய்தியை இலக்கியம் இயம்புகிறது. இந் நாட்டுப் பகுதி முகமதியரால் கைக்கொள்ளப்பட்டுப் பாழ்படுத்தப்பட்ட செய்தி 14ஆம் நூற்றூண்டைச் சார்ந்த வென்று மண் கொண்ட சம்புவ ராயன் கல்வெட்டொன்றில் இடம் பெற்றுள்ளது.

## 21. கரடி

1. திருமடப்பாறை மகாதேவர் கோயில்
2. செல்லியம்மன் கோயில்

தென்னுர்க்காடு மாவட்டத்துக் கரடி என்ற ஊரில் இரண்டு முற் பட்ட சோழர்காலக் கோயில்கள் உள்ளன. அவற்றைப் பெண்ணை

யாற்றின் தென் கரையிலமைந்த கோட்டைக்குள்ளிருக்கும் பாறை களுக் கருகில் காணலாம்.

தற்போது பாழ்பட்டுள்ள சிவன் கோயிலில் 4 கல்வெட்டுகள் உள்ளன. அடைமொழியில்லாத, பரகேசரிவர்மனின் 23ஆம் ஆண்டுக் கல்வெட்டும் முதற் பராந்தகனுடையதே என்று கொள்ளலாம். மதுரையும் ஈழமும் கொண்ட பரகேசரிவர்மனுன முதற் பராந்தக னுடைய 41ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் இரண்டும் முதல் இராச ராசன் கல்வெட்டு ஒன்றும் உள்ளன. அவை பெண்ணையாற்றின் தென் கரையிலமைந்த வாணகோபாடியிலுள்ள இரவிகுல சூடாமணி சதுர்வேதி மங்கலத்தைச் சார்ந்த 'திருமடப்பாறை மகாதேவ ருக்கு' நிவேதனங்களுக்காகவும் திருவிளக்கிற்காகவும் விடப்பட்ட நன்கொடைகள் பற்றியன. 'இரவிகுல சூடாமணி' என்பது முதற் பராந்தகனுடைய விருதுப் பெயர் போலும். சோழ மகாதேவியாரின் புதல்வரான பிள்ளையார் கண்டராதித்த தேவரின் தேவிமார்களான வீரநாராயணியாராலும், செம்பியன் மாதேவியாராலும் அந் நன்கொடைகள் வழங்கப்பட்டன. செம்பியன் மாதேவியார் தம் நீண்ட வாழ்நாளில் வழங்கியுள்ள மகத்தான பல நன்கொடைகளில் இது முதலாவது போலும்.

இங்குள்ள செல்லியம்மன் கோயில் 'பிடாரி இடைமலை நங்கை திருக்கோயில்' என வழங்கப்படுகிறது. இக் கோயிலின் தென் பிராகாரத்திலுள்ள பாறை ஒன்றில் கன்னர தேவனுன மூன்றும் கிருஷ்ணன் இத் தேவியின் சந்நிதியில் ஒரு விளக்கு எரிப்பதற்கு விடுத்த நன்கொடைபற்றிய கல்வெட்டொன்று காணப்படுகிறது.

## 22. சித்தலிங்க மடம்

**வியாக்கிரபாதேசுவரர் கோயில் :**

தென்னுர்க்காடு மாவட்டத்தில் திருக்கோயிலூர் (கோவலூர்) வட்டத்தில் திருக்கோயிலூரிலிருந்து 5 மைல் தென் மேற்கில் சித்த லிங்க மடம் என்று ஊர் உள்ளது. இங்குள்ள வியாக்கிரபாதேசுவரர் கோயில் முதற் பராந்தகன் காலத்தில் எடுப்பிக்கப்பட்டதாகும்.

மதுரைகொண்ட பரகேசரியான முதற் பராந்தகனுடைய 7, 22, 25ஆம் ஆண்டுகளுக்குரிய 3 கல்வெட்டுகள் இக் கோயிலில் காணப் படுகின்றன. அவை விளக்கெரிப்பதற்காகவும் திரு ஆராதனம் நடக்கும் மூன்று வேளைகளிலும் இன்னியம் இயக்குவதற்காகவும் வழங்கப்பட்ட நன்கொடைகள் பற்றியவை.

கன்னர தேவனுடைய 5ஆம் ஆண்டு, 18ஆம் ஆண்டு, 24ஆம் ஆண்டு ஆகியவற்றைச் சார்ந்த மூன்று கல்வெட்டுகள் உள்ளன. இவையும் பராந்தகன் கல்வெட்டுகளும் படியெடுக்கப்பட்டு, முதற் குலோத்துங்கன் காலத்தில் இக் கோயில் புதுப்பிக்கப்பட்டபின் மீண்டும் வெட்டப்பட்டனவாதல் வேண்டும். அங்ஙனம் வெட்டும் போது கன்னர தேவனுடைய ஆட்சியாண்டு 5 என்று ஒரு கல் வெட்டில் தவருகக் குறிக்கப்பட்டிருக்கிறது. தக்கோலப் போர் கன்னர தேவனுடைய 9ஆம் ஆண்டாகிய கி பி. 949-ல் நிகழ்ந்ததால் அதற்கு முன் அவன் கல்வெட்டுகள் இப் பகுதியில் இடம் பெற்றிருக்க முடியாது என்பது உளங்கொளத் தக்கது.

வடமொழிப் பாடலாக அமைந்துள்ள இரண்டு கல்வெட்டுகள் சபா நர்த்தகன் காலிங்கராயன் என்ற மணவில் மன்னனும், இராசேந்திர னுடைய அமைச்சனுன மானவதாரனுமான வீரன் 'ஒருவன் சித்த லிங்கம் என்ற அக்கிரகாரத்தில் வியாக்கிரபாதர் வழிபட்ட இறைவ னுக்கு விமானம், பிராகாரம், மண்டபம் இவற்றையுடைய கற்றளி யொன்றை எடுப்பித்த செய்தியை இயம்புகின்றன. இவ் வீரன் இராசேந்திரனுன முதற் குலோத்துங்கனுடைய அமைச்சனும் படைத் தலைவனும் ஆன நரலோக வீரன் ஆகலாம் என்று கருதப்படுகிறது.

முதற் பராந்தகன் காலத்ததாகிய இக் கோயில் முதற் குலோத் துங்கன் காலத்தில் புதுப்பிக்கப்பட்டது என அறிகிருேம்.

## 23. திருவாண்டார் கோயில்

**பஞ்சநதீசுவரர் கோயில் :**

பழைய ஃபிரெஞ்சுக் குடியேற்ற நாடாகிய, தற்போது தமிழ் நாட்டுடன் இணைக்கப்பட்ட பாண்டிச்சேரிப் (புதுச்சேரி) பகுதியில் விழுப்புரத்திலிருந்து பாண்டிச்சேரிக்குச் (புதுவை) செல்லும் சாலையில் விழுப்புரத்திலிருந்து 11 கல் (17·6 கி.மீ.) தொலைவில் திருவாண்டார் கோயில் அமைந்துள்ளது. தற்போதுள்ள பஞ்சநதீசுவரர் கோயில், பெண்ணையாற்றின் வடகரையில் அமைந்த ‘ பிரமதேயமான திரிபுவன மகாதேவி சதுர்வேதி மங்கலம்’ என்ற ஊரிலுள்ள ‘திருவறை நக்கன்’ கோயில் எனப் பண்டு வழங்கப்பட்டது. அச் சதுர்வேதி மங்கலம் தற்போது ‘திரிபுவனி’ என்று வழங்குகிறது. முதற் குலோத்துங்கன் கல்வெட்டொன்றில் இப் பெருமான் திருவையா றுடைய மகாதேவர் என்று குறிக்கப்படுகிருர்.

இங்கு முதற் பராந்தகன் காலத்தனவாகக் கருதப்படும் 3 கல் வெட்டுகள் உள்ளன. 15, 16, 40ஆம் ஆண்டுகளைச் சேர்ந்த அவை

கோயிலுக்கு வழங்கப்பட்ட மனைக்கட்டுகளைப்பற்றியும், கோயிலில் விளக்கெரிப்பதற்கு வழங்கப்பட்ட நன்கொடைகளைப் பற்றியும் அமைந்தனவாகும்.

முதல் இராசராசன் என்று கருதப்படும் இராசகேசரிவர்மனுடைய 5ஆம் ஆண்டுக் கல்வெட்டில் மதுரைகொண்ட பரகேசரியான முதற்பராந்தகனுடைய 14ஆம் ஆண்டில் வழங்கப்பட்ட நிலக் கொடை ஒன்று இடம் பெற்றுள்ளது. அக் கல்வெட்டு, கோயிலுக்குச் சொந்தமான வெள்ளிப் பாத்திரங்கள் சிலவற்றையும் பொன்னையும் ஊர்ச் சபையார் சில ஆண்டுகளாகத் தங்கள் செலவுக்கு எடுத்துக் கொண்டபடியால் அவற்றிற்குப் பதிலாக கன்னர தேவனுடைய 28ஆம் ஆண்டில் (கி.பி. 967-68) கோயிலுக்குச் சில நிலங்களை விற்றுக் கொடுத்த செய்தியையும் குறிப்பிடுகிறது.

முதல் இராசராசனுடைய 12ஆம் ஆண்டுக் கல்வெட்டு, திரிபுவன மகாதேவி சதுர்வேதி மங்கலத்துச் சபையினர் மும்முடிச் சோழ அம்பல நாட்டு வேளான் கட்டுவித்த மண்டபத்தில் கூடித் தாங்கள் வாங்கிக் கோயிலுக்கு வழங்கிய நிலத்திற்குரிய வரிகளைக் கட்டிய செய்தியை வெளியிடுகிறது.

இவ்வூரின் பழைய பெயர் 'வடுகூர்' என்பது. 7ஆம் நூற்றாண்டினரான சம்பந்தர் இவ் வடுகூர் இறைவனைத் 'திருவடுகூர் நாதர்' என்ற பெயரால் பாடியுள்ளார். இக் கோயிலில் முதல் ஆதித்தனுடைய ஐந்தாம் ஆண்டைச் சார்ந்தது என்று கருதத்தக்க சிதைவுற்ற கல்வெட்டொன்று காணப்படுகிறது. எனினும் இக் கோயிலின் அமைப்பை நோக்க இது முதற் பராந்தகன் காலத்தில் எடுப்பிக்கப் பட்டது என்று முடிவு செய்யலாம்.

மூலத்தானம் 5 அடி உயரமுள்ள அடிப்படையின்மேல் எழுப்பப் பட்டிருக்கிறது. அடித்தளம் அதிக வேலைப்பாடின்றி அமைந்துள்ளது. அரைத் தூண்களுக்குக் கீழ் புள்ளமங்கையில் காணப்படுவது போலச் சிற்றுருவச் சிலைகளின் வரிசையைக் காணலாம்.

சதுரமான கருவறை 19½ அடி பக்க அளவுடையது. கருவறைச் சுவர்களின் வெளியே உள்ள நடுப் பிதுக்கங்களில் தேவகோஷ்டங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

கொடுங்கையின்கீழ்ப் பூதகண வரிசையையும் மேலே யாளி வரிமானத்தையும் காணலாம்.

அர்த்தமண்டபம் 8 அடி 2 அங்குலம் முன்னேக்கி நீண்டுள்ளது. அதனைத் தாங்கும் 4 தூண்களும் 16 முகங்களையும் கும்பங்களையும் கொண்டு தோற்றமளிக்கின்றன. அர்த்தமண்டபத்தின் முகப்பில் இரு புறங்களிலும் துவாரபாலகர் சிலைகளைக் காணலாம்.

வட்டமான சிகரம் பிற்காலத்தில் காரை பூசப்பட்டுள்ளது. அர்த்தமண்டபத்திலும் தேவகோஷ்டங்களைக் காணலாம். அர்த்த மண்டபத் தென் சுவரில் பிட்சாடணர் சிலையையும் வட சுவரில் துர்க்கை சிலையையும் காண்கிறேம். கருவறையின் தென் சுவரில் தட்சிணாமூர்த்திக்கும் மேலைச் சுவரில் இலிங்கோத்பவருக்கும் வட சுவரில் பிரமனுக்கும் கோஷ்டங்கள் உள்ளன. பிற்காலத்தில் சுவர் களில் புதிய தேவகோஷ்டங்கள் நிறுவப்பெற்று அவற்றிலும் சிலைகள் வைக்கப்பட்டுள்ளன. அம் முறையில் பிட்சாடணரை யடுத்துக் கணேசரும், பிரமனை யடுத்து அர்த்தநாரியும், துர்க்கையை யடுத்து இடபாரூடரும் காணப்படுகின்றனர்.

இங்ஙனம் புதிய தேவகோஷ்டங்களையும் சுவர்களில் அமைத்துச் சிலைகளை நிறுவும் வழக்கம் உத்தமசோழன் காலத்தில் ஏற்பட்டிருக்க லாம். இத்தகைய புது முறையைக் கரந்தை, திருப்புறம்பயம் என்ற ஊர்களிலுள்ள கோயில்களில் காணலாம்.

## 24. திருக்கோயிலூர்—கீழூர்

**வீரட்டானேசுவரர் கோயில் :**

தென்னார்க்காடு மாவட்டத்தில் தென் பெண்ணையாற்றின் தென் கரையில், விழுப்புரத்திலிருந்து 25 கல் (40 கி.மீ.) தொலைவில் திருக் கோயிலூர் (கோவலூர்) அமைந்துள்ளது. இவ்வூர் வைணவர் களுக்கும் சைவர்களுக்கும் புனிதத் திருப்பதியாக அமைந்துள்ளது. 2000 கிராமங்களைக் கொண்ட மலையமான் நாடு என்ற மலாட்டைச் சங்க காலம் தொட்டு ஆண்டுவந்த மலையமான் என்ற குறுநில மன்னர்களின் தலைநகராக அவ்வூர் பிரசித்தி பெற்றிருந்தது. திருக் கோவலூர் என்று பண்டு வழங்கிய அவ்வூரில் பொய்கையார், பூதத் தார், பேயார் என்ற முதலாழ்வார்கள் மூவரும் சந்தித்தனர். விஷ்ணு கோயில் அவ்வூரின் மேலைப்புறத்தில் அமைந்துள்ளது. அங்குள்ள இறைவன் திருவிக்கிரமன் என்று வழங்கப்படுகிறார். திருமங்கை யாழ்வார் இப் பெருமானைக் கோவலூரிலுள்ள 'திரு இடைக்கழி ஆர்வார்' என்று வழங்குகிறார். இது முற்பட்ட சோழர்கள் காலக் கோயிலெனினும், இதன் விமானம் பரகேசரி இரண்டாம் இராசேந்திர சோழனுடைய உள்ளூர்த் தலைவனான மிலாடு நரசிங்கவர்மனால்

செங்கல்லிலிருந்து கருங்கல்லாக மாற்றி அமைக்கப்பட்டதாக அறிகிறோம்.

**சிவன் கோயில் :**

திருக்கோவலூரின் கிழக்குப் பகுதியில் சிவன் கோயில் அமைந்துள்ளது. இங்குள்ள பெருமான் 'கீழூர் கோவல் வீரட்டானேசுவரர்' என்று வழங்கப்படுகிறார். ஏழாம் நூற்றாண்டினரான அப்பரும் சம்பந்தரும் இவ்வூர் இறைவனைப்பற்றித் தேவராம் பாடியுள்ளனர்.

சிவபெருமான் வீரச் செயல் புரிந்த ஐதிகங்களை உடைய எட்டு ஊர்கள் வீரட்டான நகர்கள் என்று வழங்கப்படுகின்றன. இக் கீழூரில் சிவபெருமான் அந்தகாசுரனை அழித்த ஐதிகம் வழங்குகிறது[1]. இக் கீழூராகிய திருக்கோவலூர் அஷ்ட வீரட்டானங்களில் ஒன்று என்பது உணரப்படுகிறது.

கீழூர்ச் சிவன் கோயில் பிற்பட்ட பல்லவ மன்னர்களான மூன்றும் நந்திவர்மன், நிருபதுங்கன் என்பவர்கள் காலத்திலேயே இருந்திருக்க வேண்டும். கோவிஜய நந்தி விக்கிரமவர்மனுடைய (கி.பி. 830—860) 17ஆம் ஆண்டுக் கல்வெட்டு மிலாடு நாட்டில் கொறுக்கைக் கூற்றத்திலுள்ள திருக்கோவலூரில் திருவீரட்டானப் பெருமான் கோயிலில் ஒரு விளக்கு எரிப்பதற்கு வாணகோவரையருடையபோகியாரொருவர் அவ்வூர் நகரத்தாரிடம் 25 கழஞ்சுப் பொன்னை மூலதனமாக அளித்த செய்தியை வெளியிடுகிறது. இத் திருக்கோவலூர் நகரத்தார்கள் நிருபதுங்கனுடைய 18, 21ஆம் ஆண்டுக் கல்வெட்டுகளிலும் குறிக்கப் பட்டுள்ளனர்.

இங்குள்ள சோழர்கள் கல்வெட்டுகளில் மிகப் பழைமையானது, கல்வெட் டெழுத்தமைப்பைக் கொண்டு விசயாலயனுடையது என்று கருதப்படும் பரகேசரிவர்மனுடைய 5ஆம் ஆண்டுக் கல்வெட்டாகும். அது பின்வருமாறு:

'ஸ்வஸ்தி ஸ்ரீ கோபரகேசரிவர்மற்கு யாண்டு 5ஆவது திருவீரட்டானத்துப் பெருமானடிகளுக்கு நந்தாவிளக்கினுக்கு வாண கோவரையர் தேவியார் ஈழத்தடிகள் மகளார் மங்கை குலமாணிக்கத்தார் வைத்த பொன் பதினைங்கழஞ்சு இப் பொன்னுக்கு கழஞ்சி வாய்த் திங்கல் அரைப்படியால் இரவும் பகலும் நந்தாவிளக் கெரிப்போமானோம் நகரத்தோம்—இது பன்மாகேசுவர ரகைஷ.'

1 திருவதிகையில் திரிபுர சம்மாரமும், திருக்கண்டியூரில் பிரமசிரக் கண்டனமும், திருப்பறியலூரில் தட்சன் சிரக் கண்டனமும், திருவிற்குடியில் சலந்தராசுர வதமும், வழுவூரில் கஜாசுர வதமும், திருக்குறுக்கையில் காம தகனமும், திருக்கடவூரில் கால சம்மாரமும், இக் கீழூரில் அந்தகாசுர வதமும் நிகழ்ந்தனவாக ஐதிகங்கள் குறிப்பிடுகின்றன.

இக் கல்வெட்டு திருவீரட்டானத்துப் பெருமானடிகளுக்கு ஈழத் தடிகள் மகளாரும் வாணகோவரையர் தேவியாருமான நங்கை குல மாணிக்கத்தார் ஒரு நந்தாவிளக்கு எரிப்பதற்கு 15 கழஞ்சுப் பொன்னை நகரத்தாரிடம் அளித்து விளக்கெரிக்கச் செய்து அத் தர்மத் தைக் காக்கும் பொறுப்பை அடியாரிடம் விடுத்த செய்தியை விளம்பு கிறது.

முதற் பராந்தகனுடைய 13ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று சித்திரைத் திருவிழாவின்போது நிகழும் கோயில் செலவினங்களுக் காக 7 கழஞ்சுப் பொன் நன்கொடை வழங்கிய செய்தியை விள்ம்பு கிறது. இரட்டைக் கல்வெட்டொன்று 28ஆம் ஆண்டினையும் 33ஆம் ஆண்டையும் சார்ந்தது. அது திருவீரட்டானத்துப் பெருமானுக்கு மிலாடு கயிறூர்ப் பெருமானார் மகளாரான ராசதேவியார் தேசதக்கி பெருமானார் விளக்கிற்காக வைத்த நன்கொடையையும், முதற் பராந் தகனுடைய புதல்வருள் ஒருவரான பிள்ளையார் அரிகுலகேசரியாரின் படையைச் சார்ந்த மலையான ஒற்றைச் சேவகர் ஒரு விளக்கிற்காக வைத்த நன்கொடையையும் பற்றியதாகும். இரட்ட மன்னனான கன்னர தேவனுடைய கல்வெட்டுகள் இங்குப் பலவாக உள்ளன.

முதல் இராசராசன் தன் தேவியாரான உலோக மகாதேவிபா ருடைய தாயாரும் தன் மாமியாருமான குந்தனன் அமித்ரவல்லி ஆழ்வாருடைய ஆன்ம சாந்திக்காகத் தன் ஆட்சியின் 9ஆம் ஆண்டில் இக் கோயிலில் விளக்கொன்று எரிப்பதற்கு நன்கொடை வழங்கி யுள்ளான்.

அநேகமாக சோழருடைய ஆட்சி முழுவதும் இக் கோயிலுக்கு நன்கொடைகள் பல வழங்கப்பட்டன.

இக் கோயிலில் விசயாலயன் காலம், பிற்பட்ட பல்லவர் காலம் ஆகியவற்றைச் சார்ந்த கல்வெட்டுகள் இருப்பினும் இதனைப் பராந் தகன் காலக் கோயிலாகக் கொள்வதே அமைவுடைத்து. அப் பராந் தகன் கால அமைப்பும் பிற்காலத்தில் பழுது பார்க்கப்பட்டு ஓரளவு மாற்றப்பட்டுள்ளது.

இக் கோயில் மேற்கு பார்த்த சந்நிதியை உடையது. கருவறை கிழக்கு மேற்கில் 48 அடியும் தெற்கு வடக்கில் 21 அடி 8 அங்குலமும் உள்ளது. அதன் அடித்தளத்தின் உயரம் 5 அடி. அடித்தளத்தில் யாளி வரிமானமும் பத்ம படையும் உள்ளன. அர்த்தமண்டபம் கிழக்கு மேற்கில் $17\frac{1}{2}$ அடியும் தெற்கு வடக்கில் $21\frac{1}{2}$ அடியும் பரவியுள்ளது. அதன் முகப்பில் பக்கத்துக்கு ஒன்றாக இரு துவாரபாலகர் சிலைகள்

உள்ளன. அரைத் தூண்களின் உயரம் 5 அடி. அரைத் தூண்களின் கீழும் யாளிவரிமானத்தின் மேலும் 48 சிற்றுருவச் சிலைகள் உள்ளன. மனிதத் தலைகளும் யாளித் தலைகளும் கொடுங்கையின் கூடுகளை அணி செய்கின்றன. கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையைக் காண லாம். கொடுங்கைகளின் ஓரங்களை வட்டங்கள் அழகு செய்கின்றன.

தேவகோஷ்ட விக்கிரகங்களுள் பிரமனின் சிலையும் இலிங்கோத் பவர் சிலையும் பழங்காலத்தைச் சேர்ந்தவை. பழைய துர்க்கைச் சிலை யொன்று வடக்குப் பிராகாரத்தில் வைக்கப்பட்டுள்ளது. கணேசன், சுப்பிரமணியன், சந்திரன், சூரியன், சப்த மாதர்கள் இவர்களுக்குச் சுற்றுக் கோயில்கள் உள்ளன.

## 25. பாகூர்

**ஸ்ரீ மூலஸ்தானம் உடையார் கோயில் :**

பாகூர் பாண்டிச்சேரியைச் (புதுச்சேரியை) சார்ந்த பழைய ஃபிரெஞ்சு இராச்சியத்தில் அமைந்தது. அது கடலூரிலிருந்து புதுச் சேரி செல்லும் சாலையில் புதுச்சேரியிலிருந்து 12 கல் (19·2 கி.மீ.) தொலைவில் உள்ளது.

எட்டாம் நூற்றாண்டில் இவ்வூர் நான்கு வேதங்கள், ஆறு வேதாங்கங்கள், மீமாம்சை, தர்க்கம், தரும சாஸ்திரம், புராணம் ஆகிய 14 வித்தைகளையும் கற்பிக்கும் வடமொழிக் கல்வித் தான மாகப் பிரசித்தி பெற்றிருந்தது. 'நிருப்துங்க பல்லவனுடைய 8ஆம் ஆண்டில், மார்த்தாண்டன் என்னும் நிலைதங்கி என்பான் பல்லவ மன்னனுடைய அமைச்சனாக இருந்தான். அவன் இவ் வித்தியா ஸ்தானத்திற்கு மூன்று கிராமங்களை நன்கொடையாக வழங்கியுள் ளான். இவ் வித்தியா ஸ்தானத்தைச் சேர்ந்தவர்கள் அவற்றின் வரும்படியைப் பெற்றுத் தம் கடமையை நன்முறையில் ஆற்றினர்' என்று பாகூர்ப் பட்டயங்கள் பகர்கின்றன.

பாகூர் என்பது வேசாலிப்பட்டி என்ற பகுதியைச் சார்ந்த வாகூர் நாட்டிலுள்ள 'வாகூர்' என்ற ஊராகும். இது முதல் இராச ராசனுடைய 25ஆம் ஆண்டு முதல் 'ஸ்ரீ அழகிய சோழ சதுர்வேதி மங்கலம்' என்ற மறு பெயரையும் பெற்று விளங்கியது. இக் கோயிலில் உள்ள இறைவன் 'ஸ்ரீ மூலஸ்தானம் உடையார்,' 'ஸ்ரீ மூலஸ்தானப் பெருமானடிகள்,' 'ஸ்ரீ மூலஸ்தானப் பரமேசுவரர்' என வழங்கப் பட்டார்.

இக் கோயிலிலுள்ள கல்வெட்டுகளில் மிகப் பழைமையானவை அதன் சுவர்களிலுள்ள கன்னர தேவனுடைய 22ஆம் ஆண்டு முதல்

27ஆம் ஆண்டுவரை உள்ள 6 கல்வெட்டுகளாம். இவனுடைய 26ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக் கோயிலின் படைக்கு நமிநக்கன் சங்கரன் என்பான் வழங்கிய 4 கற்பலகைகளாகிய நன்கொடையைக் குறிப்பிடுவதால் கற்றளியாக எடுப்பிக்கப்பட்ட இக் கோயில் கன்னர தேவனுடயை 26ஆம் ஆண்டில் முடிவுபெற்றிருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. எனவே, இக் கோயில் முதல் பராந்தகன், மூன்றும் கிருஷ்ணனுகிய கன்னர தேவன் ஆகிய இவர்களுடைய காலத்தது என்று உறுதி செய்யலாம்.

பிற்காலத்தில் இக் கோயிலின் அமைப்பில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. எனினும் கருவறைச் சுவர்கள், கணேசர், பிரமன் என்ற தேவகோஷ்டச் சிலைகள் ஆகியவை பழைய கோயிலைச் சார்ந்தனவே.

இக் கோயிலிலுள்ள அரைத் தூண்கள் சதுரமான அடிப் பகுதியும் கலசம், கும்பம், பலகை என்ற உறுப்புகளும் கொண்டுள்ளன. போதிகைப் பகுதிகள் அழகிய முறையில் சாய்வாக அமைந்துள்ளன, கொடுங்கையின்கீழ்ப் பூதகண வரிசையைக் காணலாம். கொடுங்கை நடுவில் மனிதத் தலையும் உச்சியில் சிங்கத் தலையும் கொண்ட அரை வட்ட வடிவமான கூடுகளால் அணிசெய்யப்பட்டுள்ளது. கிரிவத்தின் நான்கு மூலைகளையும் நந்திகளின் சிலைகள் அணிசெய்வதைக் காணலாம்.

இக் கோயிற் சுவர்களில் எண்ணற்ற நடனச் சிற்பங்கள் உள.

துப்ராய் என்பவர் இக் கோயில் பல்லவர் கலைப் பாணிக்கும் சோழர் கலைப் பாணிக்கும் இடைப்பட்ட காலத்தது என்பர். இதனைப் பத்தாம் நூற்றுண்டின் பிற்பகுதியைச் சார்ந்த முற்பட்ட காலச் சோழர் கோயில்களுள் ஒன்றாகக் கொள்வதே சாலப் பொருத்தமுடையது.

## 26. சோழபுரம்

1. நந்தி கம்பேசுவரர் கோயில்
2. குணமலைப் பெருமாள் கோயில்
3. கனகவல்லி விஷ்ணு கிருகம்
4. பிடாரி கோயில்

வடவார்க்காடு மாவட்டத்தில் வேலூருக்குத் தெற்கே 8 கல் (12·8 கி.மீ.) தொலைவில் அமைந்துள்ள சோழபுரம் என்ற சிற்றூர் பழங்காலத்தில் 'காட்டுத்தும்பூர்' என்று வழங்கப்பட்டது. அங்குப்

பழங்காலத்தில் இரண்டு சிவன் கோயில்களும், ஒரு பெருமாள் கோயிலும், ஒரு பிடாரி கோயிலும் காணப்பட்டன.

அழிந்துபோன சிவன் கோயிலுக்கு எதிரேயுள்ள சோலேயிலிருந்து அகழ்ந்து எடுக்கப்பட்ட மூன்று பாறைப் பலகைகளில் கம்பவர்ம னுடைய 8ஆம் ஆண்டுக் (கி.பி. 886) கல்வெட்டு ஒன்று காணப்படு கிறது. அது கம்பவர்மனுடைய சிற்றரசருள் ஒருவனுன பிருதிவி கங்கரையன் இறக்கவே, அவனே அடக்கம் செய்த இடத்தில் அவன் மகனுன இராசாதித்திய மகாராசன் ஒரு பள்ளிப்படை (அதீத கிருகம்) அமைத்துப் பக்கத்தில் ஒரு சிவன் கோயில் அமைத்தான் என்று குறிப் பிடுகிறது. விசய கம்பவர்மன் காலத்தில் அமைக்கப்பட்ட இப் பள்ளிப் படைக் கோயிலே தென்னுட்டில் பள்ளிப்படைக் கோயில்கள் இருந் தமைக்கு உரிய பழைய கல்வெட்டுச் சான்ருகும்.

இங்குக் காணப்படும் விசய கம்பவர்மனுடைய 23ஆம் ஆண்டுக் கல்வெட்டுப் பின்வருமாறு :

*'காட்டுத்தும்பூர் நாராயணபட்டாரகர் ஸ்ரீ கோயில் எடுப்பித்துக் கனகவல்லி விஷ்ணு கிருகம் என்னும் நாமதேயத்தால் அமைப்பித்து, இதனுக்குத் திரிகாலம் ஆராதிப்பதற்கு ஜீவிதமான இக் கோட்டத்து இந் நாட்டுக் கனகவல்லி இறை பூமி.'*

இக் கல்வெட்டு இங்குள்ள பாழ்பட்ட பெருமாள் கோயிலின் வட சுவரில் காணப்படுவதால் இப் பெருமாள் கோயிலே கம்பவர்மன் காலத்துக் கனகவல்லி விஷ்ணு கிருகமாகும் என்று கூறலாம்.

இவ்விடத்தில் மற்ருெரு முக்கியமான கல்வெட்டும் உள்ளது. அதன் வாசகம் பின்வருமாறு :

*'ஸ்வஸ்தி ஸ்ரீ யாண்டு இரண்டு சக வருஷம் 871 சக்கரவர்த்தி கன்னர தேவவல்லபன் இராசாதித்தரை இரிந்து (எறிந்து) தொண்டை மண்டலம் புகுந்தவாண்டு......'*

உல்ஷ் (Hultzsch) என்பார் யாண்டு இரண்டு என்பது இராசா தித்தனுடைய ஆட்சியாண்டு எனவும், அது சகயாண்டு 871-க்கும் கி.பி. 949-க்கும் இணேயானது என்றும், அதுவே தக்கோலப் போரில் இராசாதித்தன் இறக்கக் கன்னரதேவன் தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றிய காலம் எனவும் குறிப்பிட்டுள்ளார்.

இங்குள்ள பாழ்பட்ட சிவன் கோயிலில் சதயாண்டு 875-ல் (கி.பி. 953) வெட்டப்பட்ட கல்வெட்டொன்று காணப்படுகிறது.

அது கன்னர தேவனுக்கு அடங்கிய சிற்றரசனும், கன்னரதேவ பிருதிவீ கங்கரையன் என்ற விருதுப் பெயருடையவனுமான ஆத்தி மல்லன் தன் பேரரசனை மதியாமல் அவன் ஆட்சியாண்டை விடுத்துச் சக ஆண்டைக் குறிப்பிட்ட செயலை விளக்குவதோடு அவனுடைய அமைச்சனான புத்தடிகள் ஆகிய அழிவின் காலகண்ட பிருதிவீ கங்கரையன் காட்டுத்தும்பூரில் (சோழபுரம்) உள்ள நந்தி கம்பேசுவரர் கோயிலில் ஒரு விளக்கெரிப்பதற்கு 90 ஆடுகளையும், குணமலை கோயிலில் விளக்கு எரிப்பதற்கு 90 ஆடுகளையும் நன்கொடையாக விடுத்த செய்தியை வெளியிடுகிறது.

அவனே இவ்விரு கோயில்களுக்கும் நாள்தோறும் ஒருழக்குத் தும்பைப்பூக் கொண்டுவந்து கொடுப்பதற்குத் தனியே நன்கொடை வழங்கியுள்ளான். தற்போது பாழ்பட்டுக் கிடக்கும் சிவன் கோயில் முற்காலத்தில் நந்தி கம்பேசுவரம் என்று வழங்கப்பட்டதுபோலும். அது நந்தியின் பெயரால் அவன் மகனான கம்பன் எடுப்பித்த கோயில் என்று பொருள் பெறுகிறது.

தம் அமைச்சரின் வேண்டுகோட்படி பிருதிவீ கங்கரையர் 4 சிற்றூர்களை 'அமலங்கவல்லி அத்திமல்ல சதுர்வேதி மங்கலம்' என்ற ஏக கிராமமாக்கி, அதனைக் குணமலைக் கோயிலில் நாள்தோறும் மும்முறை பூசனை நிகழ்த்த மானியமாக வழங்கிய செய்தி வெளியாகிறது. இவற்றால் இவ்வூரில் நந்தி கம்பேசுவரம், குணமலை கோயில் என்ற இரண்டு சிவன் கோயில்கள் இருந்த செய்தி வெளியாகிறது.

இவ்வூரிலுள்ள சிதைவுற்ற கல்வெட்டொன்று தற்போது காளியம்மன் கோயில் என்ற பெயரால் வழங்கப்பெறும் பழைய பிடாரி கோயில் பிருதிவீ கங்கரையன் மகளும் அரிகண்டன் தேவியுமான நங்கைமணி என்பவளால் எடுப்பிக்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

இங்குள்ள முதற் பராந்தகன் கல்வெட்டின் ஆட்சியாண்டு சிதைவுற்று விட்டது.

இங்குள்ள முற்பட்ட சோழர்கள் காலத்துக் கோயில்கள் நான்கும் சிதைவுற்ற நிலையில் காணப்படும் செய்தி வருத்தம் தருவதொன்றாகும்.

## 27. திருமால்புரம் (திருமாற்பேறு)

1. மணிகண்டேசுவரர் கோயில் (சிவன்).
2. நின்றருளின பெருமானடிகள் கோயில் (விஷ்ணு)

வடவார்க்காடு மாவட்டத்தில் காஞ்சிபுரத்திலிருந்து அரக்கோணம் செல்லும் சாலையில் 7 கல் (11·2 கி.மீ.) தொலைவில்

உள்ளது. இங்குக் காணப்படும் விக்கிரம சோழனுடைய கல்வெட்டொன்றால் இங்கு ஆளுடையார் கோயில், திருமாற்பேறுடையார் கோயில், உத்தமசோளீசுவரமுடையார் கோயில், அவிமுத்தீசுவரம் உடையார் கோயில் என்ற நான்கு கோயில்கள் இருந்த செய்தி வெளியாகிறது. மும்முடிச் சோழனான முதல் இராசராசன் கல்வெட்டுப் பண்டு திருமாற்பேறு என்று வழங்கிய இவ்வூரில் அக்நீசுவரம் என்ற கோயிலைச் சுட்டுகிறது. இராசாதிராசன் கல்வெட்டொன்றில் 'நின்றருளின பெருமாள் உய்யக் கொண்டார் விண்ணகர்' இவ்வூரைச் சார்ந்த கோவிந்தப்பாடி என்று சிற்றூரில் உள்ள செய்தி வரையப் பட்டுள்ளது. ஆனால் தற்போது இக் கோயில்களையெல்லாம் காண இயலவில்லை. ஓரளவு நாம் உணரும் வகையில் காட்சி வழங்குவன மணிகண்டேசுவரமும் நின்றருளின பெருமாள் விண்ணகரமுமே.

மணிகண்டேசுவரம் :

இக் கோயிலிலுள்ள முதற் பராந்தகனுடைய 37ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒரு நில விற்பனை பற்றியது. சோழனுடைய சிற்றரசருள் ஒருவனோ அல்லது முதற் பராந்தகனுக்குப் பின் தோன்றிய சோழர் குடும்பத்து உறுப்பினருள் ஒருவனோ என்று ஐயுறப்படும் அநாயமன் என்றும் பரமண்டலாதித்தன் என்றும் வழங்கப்படுகின்ற விராட மன்னன் இக் கோயிலையும் இதன் திருச்சுற்றுத் தாழ்வாரத்தையும் எடுப்பித்தான் என்ற செய்தி பார்த்திவேந்திராதிபதி வர்மனுடைய 3ஆம் ஆண்டுக் கல்வெட்டால் வெளியாகிறது. இம் மன்னனுடைய 13ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று முதற் பராந்தகனுடைய தேவி யாரும் நந்திவர்ம காடுவெட்டிகளின் மகளாருமான விஜயமகாதேவி யார் இக் கோயிலில் இரண்டு விளக்குகள் எரிப்பதற்கு 25 கழஞ்சுப் பொன் நன்கொடை வழங்கிய செய்தியை வெளியிடுகிறது.

இங்குள்ள கல்வெட்டுகளில் முக்கியமானது கோநேரின்மை கொண்டான் என்ற விருதுப் பெயருடைய மன்னனின் 14ஆம் ஆண்டுக் கல்வெட்டாகும். இக் கல்வெட்டில் ஒப்பம் இட்டவராகக் குறிப்பிடப்படுவோர் உத்தம சோழனுடைய ஏனைய கல்வெட்டுகளி லும் இடம் பெற்றிருப்பதால் இக் கல்வெட்டு உத்தம சோழ னுடையது என்று முடிவு செய்யலாம்.

சிற்றியாற்றூர் என்ற கிராமம் செங்கப்பாடி கிழான் நிலம் நீங்க லாக ஏனைய நிலங்களுக்கு இறுத்து வரும் புறவாகிய 3000 காடியும் இறவாகிய 561 காடியும் 26½ கழஞ்சுப் பொன்னும் உட்படத் தேவ தான இறையிலியாக இக் கோயிலுக்கு விடப்படவே, பக்கத்துக் கிராமமாகிய புதுப்பாக்கம் சபையினர் இந் நிலங்களைப் பெற்றுக் கொண்டு திருமாற்பேற்றிலுள்ள மகாதேவருக்கு உரிய வருமானத்

தைக் கொடுப்பதற்கு ஒத்துக்கொண்டனர். இந் நன்கொடை தொண்டைமானாற்றூர்த் துஞ்சிய தேவரான முதல் ஆதித்தனுடைய 21ஆம் ஆண்டில் வழங்கப்படவே, அடுத்த யாண்டு அந் நிலம் யானை யால் சுற்றிவரப்பட்டு, இந் நிலக் கொடை உறுதி செய்யப்பட்டது. புதுப்பாக்கம் சபையினர் இந் நிலத்தைப் பெற்றுக்கொண்டனரே யொழிய, அதன் வருமானத்தை இக் கோயிலுக்கு வழங்கவில்லை. எனவே, முதற் பராந்தகனுடைய 4ஆம் ஆண்டில் இவ்வறக் கட்டளை யைப் பதிவு செய்து வரியிலார் வரியிலிட்டனர். இச் செய்தியை விளக்கும் கல்வெட்டுப் பகுதி பின்வருமாறு :

'திருமாற்பேறு மகாதேவருக்கு மணயில் (மணவில்) கோட்டத்து மணயில் நாட்டுச் சிற்றியாற்றூர் சங்கப்பாடி கிழான் காண நீங்கலாகப் புறவு 3000 காடியும் இறவு 501 காடியும் பொன் 26 கழஞ் சரையே மஞ்சாடியும் தேவதான இறையிலியை இப்புறவும் இறவும் பொன்னும் தேவர்க்கு இறுப்பதாக இக் கோட்டத்துப் புரிசை நாட்டுப் பிரமதேயம் புதுப்பாக்கம் சபையாருக்குத் தேவதான பிரமதேயமான தொண்டைமானாற்றூர்த் துஞ்சிய உடையார்க்கு 21ஆவது குடுத்த, 22ஆவது பிடாகை நடந்து சாசனம் செய்து குடுத்த வரியிலகைக்கிடந்த இவ்வூரை மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி பர்மற்கு யாண்டு நாலாவது தேவதான பிரமதேய மான வரியிலிட்ட.'

மீண்டும் முதற் பராந்தகனுடைய 36ஆம் ஆண்டில் முன் குறிப் பிடப்பட்ட கல்வெட்டில் நீக்கப்பட்ட சங்கப்பாடி கிழான் காணி இக் கோயிலுக்குத் தேவதான இறையிலியாக வழங்கப்பட்டது. அது ஆண்டுதோறும் 3000 காடி புறவு வழங்கிவந்தது. புதுப்பாக்கம் சபையினர் இப் புது அறக் கட்டளையையும் மேற்பார்வை செய்யும் பொறுப்பை ஏற்றனர். உத்தம சோழனுடைய அமைச்சனான சோழ மூவேந்த வேளான் காலத்தில் இக் கோயில் தேவகன்மிகளும் (குருக்கள்) ஸ்ரீ உண்ணாழிகை உடையாரும் (கோயில் பண்டகசாலைப் பொறுப்பாளிகள்) மாகேசுவரரும் (அறங்காவலர்) புதுப்பாக்கம் சபையினர் தாம் கொடுக்கவேண்டிய இறவு புறவு என்பனவற்றைக் கோயிலுக்கு வழங்காமல் கோயில் வருமானத்தைத் தவறான செலவு களில் வீண் செய்வதாக அவ் வமைச்சனிடம் முறையிடவே, இச் செய்தி உத்தம சோழன் கச்சிப்பேட்டு (காஞ்சிநகர்) அரண்மனையில் தன் ஆட்சியின் 14ஆம் ஆண்டு 261 நாள் தங்கியிருந்தபோது அவனிடம் முறையிடப்பட்டது.

அரசன் திருமாற்பேறு கோயிலைச் சார்ந்த தேவகன்மிகளையும் உண்ணாழிகை உடையாரையும், மாகேசுவரர்களையும், புதுப்பாக்கம்

ஊர்ச் சபையினரையும் வரவழைத்து இச் செய்தியைத் தீர விசாரணை நிகழ்த்திப் புதுப்பாக்கம் சபையினர் இக் கோயில் வருமானத்தை வேற்றுச் செலவினங்களில் பயன்படுத்திய தவற்றினை நன்கு உணர்ந்து அவர்களுக்குத் தண்டம் விதித்துக் கோயில் வருமானத்தைப் புதுப்பாக்கம் ஊர்ச் சபையினர் தவறாமல் செலுத்துவதற்கு ஏற்பாடு செய்தான். தற்போது கோயில் வருமானம் 6511 காடி நெல்லும் 26 கழஞ்சரையே மஞ்சாடிப் பொன்னும் அதிகரித்தமை கொண்டு கோயில் திட்டங்கள் விரிவாக்கப்பட்டன. இந் நிகழ்ச்சிகளைத் தெரிவிக்கும் ஓலையில் அரசாங்கச் செயலர், ஆளத்திவாய்க் கேள்வி, ஓலை நாயகம், புறவுவரி, முகவெட்டி ஆகியவர்கள் கையொப்பமிட்டனர்.

இக் கல்வெட்டு கிராமசபை நிர்வாகம் பற்றிய செய்திகள் சிலவற்றை வெளியிடுவதோடு ஆதித்தனுடைய 21ஆம் ஆண்டிலேயே இப் பகுதி சோழர்கள் ஆளுமைக்கு உட்பட்ட செய்தியையும் ஆதித்தன் தொண்டைமானாற்றூரில் துஞ்சிய செய்தியையும் வெளியிடுவதால் மிக முக்கியமான கல்வெட்டுகளில் இதுவும் ஒன்றாகும்.

உத்தம சோழனுடைய கல்வெட்டுகளிலும் முதல் இராசராச சோழன் ஆட்சியின் முன்பகுதியிலுள்ள கல்வெட்டுகளிலும் மதுராந்தக கண்டராதித்தன் திருவடிகள் என்ற அரசியல் அதிகாரியின் பெயர் காணப்படுகிறது. இவ் வதிகாரி உத்தம சோழனுடைய மகனாக இருக்கலாம். அவன் பல கோயில்களின் நிர்வாகங்கள்பற்றி விசாரணை நிகழ்த்திய செய்தியும் விலையுயர்ந்த நன்கொடைகள் பல வழங்கிய செய்தியும் கல்வெட்டுகளால் உணரப்படுகின்றன. முதல் இராசராசன் காலத்திலும் பெருஞ் செல்வாக்குடன் விளங்கிய இவ் வதிகாரி உத்தம சோழனுடைய 14ஆம் ஆண்டில் மாதப் பிறப்புகள்தோறும் இவ் விறைவனை 108 குடம் நன்னீரால் திருமஞ்சனமாட்டுவிக்க நன்கொடையொன்று வழங்கியுள்ளான்.

முதல் இராசராச தேவி மும்முடிச் சோழ சோழமாதேவியாரும் இம் மதுராந்தகனும் அவனுடைய 3ஆம் ஆண்டில் இக் கோயிலில் இரண்டு விளக்குகள் எரிப்பதற்கு ஒரு நிலக்கொடை வழங்கியுள்ளனர். இராசராசனுடைய 4ஆம் ஆண்டில் இவன் திருமாற்பேறு அக்நீசுவரர் ஆலயத்தில் நிர்வாகம்பற்றி விசாரணை நிகழ்த்தினான். இராசராசனுடைய 12ஆம் ஆண்டில் இக் கோயிலில் ஒரு விசாரணை நிகழ்த்தப்பட்டுத் திருவுண்ணாழிகை உடையாருக்குத் தண்டம் விதிக்கப்பட்ட செய்தி வெளியாகிறது.

இராசராசனுடைய 11ஆம் ஆண்டில் உமாபட்டாரியார் என்ற ஆதிசுந்தரதேவியாரின் உலோகத் திருமேனி இக் கோயிலில் நிறுவப்

பட்டது. திரிபுவன வீரதேவனுன மூன்றும் குலோத்துங்கனுடைய 34ஆம் ஆண்டில் உத்தம சோளீசுவர உடையார் என்ற பெருமானுடைய உலோகத் திருமேனி இக் கோயிலில் அமைக்கப்பட்டது.

இக் கல்வெட்டில் காணப்படும் சிற்றியாற்றூர், புதுப்பாக்கம் என்ற சிற்றூர்கள் தற்போது வடவார்க்காடு மாவட்டத்தில் வாலசா பாத்து வட்டத்தில் சிற்ருத்தூர், புதுப்பாக்கம் என்ற பெயருடைய ஊர்களாக வழங்குகின்றன.

2. நின்றருளின பெருமாள் (கோவிந்தப்பாடி)

கோவிந்தப்பாடி நின்றருளின பெருமாள் கோயில் சிதைவுற்றுக் கிடக்கிறது. இதில் முதல் பராந்தகனுடைய 12ஆம் ஆண்டு முதல் 41ஆம் ஆண்டு முடியப் பல கல்வெட்டுகளைக் காணலாம். பராந்தகனுடைய புதல்வன் உத்தமசீலி விளக்கிற்காக வழங்கிய நன்கொடையொன்று இங்குள்ள கல்வெட்டொன்றில் இடம் பெற்றுள்ளது. தொண்டைநாட்டுத் தாமர்க்கோட்டத்து வளநாட்டுக் கோவிந்தப் பாடியிலுள்ள நின்றருளின பெருமானடிகளுக்குப் பாண்டி நாட்டைச் சார்ந்த சோழ அரசியான அமளிமாதேவியார் திருவிளக்கிற்காக வழங்கிய நன்கொடைபற்றிய செய்தியையும் உணர்கிறோம். பஞ்சவன் மாதேவி என்ற சோழ அரசி வழங்கிய நன்கொடையும் இங்கு இடம் பெற்றுள்ளது.

வீரபாண்டியன் முடித்தலைகொண்ட பார்த்திவேந்திரவர்மனுடைய கல் வெட்டுகளில் நான்கினை இக் கோயில் சுவர்களில் காண் கிறோம். ஒரு கல்வெட்டு வைதும்பராதித்த பிரமாதிராசன் வழங்கிய பொற்கொடை பற்றியது. மற்றொன்று ஒரு மண்டபம் கட்டிய செய்தியை வெளியிடுகிறது. பிறிதொன்று அரசனுடைய மாவுத்தன் சிற்றியாற்றூரிலிருந்த கோயிலுக்குச் சொந்தமான நிலம் ஒன்றை விலைக்கு வாங்கி அதனை இக் கோயிலோடு தொடர்புடைய மடம் ஒன்றில் ஓரந்தணனுக்கு உணவிடுவதற்காக விடுத்த நன்கொடையை நவில்கிறது.

மதுரைகொண்ட இராசகேசரியான சுந்தர சோழனுடைய 17ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் இரண்டும் விளக்கிற்காக வழங்கப் பட்ட கொடைகள் பற்றியனவே.

பரகேசரிவர்மன் உத்தமசோழனுடைய 14ஆம் ஆண்டில் இக் கோயிலில் மணவாளப் பெருமாளுடைய விக்கிரகம் நிறுவப்பெற்று, அதன் பூசனைக்கு வேண்டிய நன்கொடை வழங்கப்பெற்றது.





முதல் இராசராசனுடைய 11ஆம் ஆண்டில் அனுமனுடைய விக்கிரகம் இக் கோயிலில் இடம்பெற்றது. திருவாய்மொழி முதலியன வாக நம்மாழ்வார் அருளிச் செய்த நான்கு பிரபந்தங்களையும் இக் கோயிலில் ஓதுவாருக்கு மானியம் விடப்பட்டது.

முதல் இராசாதிராசன் காலத்தில் கோவிந்தப்பாடியிலுள்ள எம் பெருமான் உய்யக்கொண்டார் என்று வழங்கப்பட்டார்.

இங்குள்ள இவ் விரு கோயில்களும் முதற் பராந்தகன் காலத்தன வாம்.

திருப்பணி செய்தல் என்ற பெயரால், பண்டைக் காலக் கலைச் சின்னங்களின் அழகையும் இயற்கை வடிவையும் கெடுத்துக் கல்வெட்டு களைச் சிதைக்கும் செயலால் இங்குள்ள சிவன் கோயிலும் விஷ்ணு கோயிலும் வரலாற்றுக்குப் பயன்படும் பல கலைநயங்களையும் இழந் துள்ள செய்தி வருந்தத்தக்கது. விஷ்ணு கோயில் அழிந்தே போய் விட்டது.

## 28. திருவொற்றியூர்

**ஆதிபுரீசுவரர் கோயில் :**

செங்கற்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த திருவொற்றியூர் சென்னைக்குச் சில கல் தொலைவில் கடற்கரையை ஒட்டி அமைந்திருக் கிறது.

இவ் வூரிலுள்ள ஆதிபுரீசுவரர் கோயில் பழைய கல்வெட்டுகளில் 'மகாதேவபட்டாரர்' கோயில் என்று வழங்கப்படுகிறது. இக் கோயிலில் அடித் தளத்தில் இணைக்கப்பட்டிருக்கும் கருங்கற்களில் பல்லவர் காலக் கல்வெட்டுகள் இரண்டு காணப்படுகின்றன. மூன்றும் நந்திவர்மனுடைய 18ஆம் ஆண்டுக் கல்வெட்டு அவ் வரசன் இக் கோயிலில் இரு விளக்கெரிப்பதற்கு வழங்கிய பொற்கொடை பற்றியது. அபராசிதனுடைய 5ஆம் ஆண்டைச் சார்ந்த மற்றொரு கல்வெட்டும் விளக்கெரிப்பதற்கு வழங்கப்பட்ட நன்கொடை பற்றி யதே. அக் காலத்தில் இக் கோயில் செங்கற் கோயிலாக இருந்தது போலும்.

இத் திருவொற்றியூரை உள்ளடக்கிய தொண்டைநாட்டுப் பகுதி முதற் பராந்தகன் ஆட்சியிலேயே சோழநாட்டுடன் இணைந்திருக்க

வேண்டும். அம் மன்னனுடைய கல்வெட்டுகள் அவனுடைய 20ஆம் ஆண்டு முதல் 35ஆம் ஆண்டுவரை இங்குக் காணப்படுவதால் இப் பகுதியே பராந்தகன் காலத்துச் சோழநாட்டின் வட எல்லையாக இருந்திருக்கவேண்டும்.

முதற் பராந்தகன் தன் 34ஆம் ஆண்டில் தன் படைத் தலைவனான மாறன் பரமேசுவரன் ஆகிய செம்பியன் சோழியவரையன் என்ற சிறுகளத்தூரானைக்கொண்டு மதனப் பள்ளியை அடுத்த சீட்புலி நாட்டைக் கைப்பற்றி நெல்லூரை அழித்து, அங்கிருந்து வெற்றி வீரனாக மீண்டுவரும்போது இவ்வூர்ப் பெருமானுக்கு ஒரு விளக்கெரிப் பதற்கு நன்கொடை வழங்கிய போதிலும்,வென்ற சீட்புலி நாட்டைச் சோழநாட்டோடு சேர்த்துக்கொள்வதற்கு வாய்ப்பு ஏற்படவில்லை.

இராசகேசரி வர்மனான முதல் இராசராசனுடைய 6ஆம் ஆண்டுக் கல்வெட்டுச் சிறிய காஞ்சீபுரத்தில் உள்ளது. அது, குறுக்காடி கிழான் பரமன் மழபாடியான மும்மடிச் சோழன் சீட்புலி நாட்டையும் பாகி நாட்டையும் வென்று கைப்பற்றிக் கவர்ந்த பல திறைப் பொருள் களில் உட்பட்ட 900 ஆடுகளையும் அரசன் திருமுகத்தால் கச்சிப் பேட்டு (காஞ்சி) அஞ்சந்தி துர்க்கா பட்டாரிக்கு இராசராசன் என்ற பெயரால் 10 நந்தா விளக்குகள் அமைப்பதற்கு விடுத்த செய்தியை வெளியிடுவதால் இப் பகுதிகள் மீண்டும் முதல் இராசராசனால் வெல்லப்பட்ட பிறகே இவை சோழப் பெருநாட்டின் பகுதிகள் ஆயின்மை வெளிப்படை.

முதற் பராந்தகனுடைய 29ஆம் ஆண்டில் விசயராகவதேவர் என்ற சேர மன்னனுடைய மகளான இராவிவில்லி என்பாள் திருவொற்றியூர் மகாதேவருக்கு ஒரு விளக்கு எரிப்பதற்குப் பொற் கொடை வழங்கிய செய்தி, அம் மன்னன் காலத்தில் சேரருக்கும் சோழருக்கும் சிறந்த நட்புறவு இருந்தமைக்கு எடுத்துக்காட்டாகிறது.

30ஆம் ஆண்டில் இம் மன்னனுடைய முதல் மகனான கோதண்ட ராமன் இரண்டு விளக்குகள் எரிப்பதற்கு 80 கழஞ்சுப் பொன் நன் கொடை வழங்கினான் என்று அறிகிறோம்.

ஆதி கிராமமாகிய திருவொற்றியூர் புராரி (சிவன்)க்குச் சோழப் பெருமானடிகளான முதற் பராந்தக தேவரின் மற்றொரு புலவரான பிள்ளையார் அரிஞ்சிகைப் பெருமானார் 30 பொன் நாணயங்களை நன் கொடை வழங்கிய செய்தியையும் இக் கோயில் கல்வெட்டு வெளியிடு கிறது.

இங்குள்ள கன்னர தேவனுடைய 3 கல்வெட்டுகள் அவன் சோழ நாட்டின் வடபகுதியை வென்ற செய்தியை வலியுறுத்துகின்றன. அவற்றுள் ஒன்று வகுளீசர் மரபைச் சார்ந்த சதுரானன பண்டிதர் ஸ்ரீபலிக்காக 300 நிக்ஷாக்கள் நாணயங்கள் பொன் வழங்கினர் என்று குறிக்கிறது. மற்றொரு கல்வெட்டு கன்னர தேவன் தாயார் விளக்கிற்காக வழங்கிய நன்கொடைபற்றியது.

சுந்தர சோழனுடைய 5ஆம் ஆண்டில் உத்தம சோழனுடைய பிரபுக்களில் ஒருவன் விளக்கிற்காக நன்கொடை வழங்கினன்.

உத்தம சோழன் தன் 15ஆம் ஆண்டில் தனக்கு வரவேண்டிய வரித் தொகைகளைக் கொண்டு பொன்னல் ஸ்ரீபலி தேவர் சிலையை அமைப்பித்து, அதனையும், எட்டு முரசங்களையும், இருபத்து நான்கு கவரிகளையும் திருவொற்றியூர் மகாதேவருக்கு வழங்கினன். அவனுடைய 18ஆம் ஆண்டில் இக் கோயில் நிர்வாகத்தைக் கவனித்த அரசியல் அதிகாரி இறைவனுக்கு நிவேதனம் வழங்க 885 கழஞ்சு எடையுள்ள பொற்பாத்திரம் வழங்கினன்.

இக் கல்வெட்டுகள் தூண்களிலும் அடித்தளக் கற்களிலும் காணப் பட்டவை. தற்போதுள்ள முத்தளக் கற்றளி கறுப்புக் கருங்கற்களால் சதுரானன பண்டிதர் மேற்பார்வையில் ஆதிபுரி என்ற திருவொற்றி யூரில் முதல் இராசேந்திரனல் எடுப்பிக்கப்பட்டதாகும்.

## 29. மதுராந்தகம்

1. கோதண்டராமப் பெருமாள் கோயில் (விஷ்ணு).

2. சுவேதாரண்யேசுவரர் கோயில் (சிவன்).

மதுராந்தகம் செங்கற்பட்டு மாவட்டத்தில் சென்னை விழுப்புரம் மார்க்கத்திலுள்ளதொரு புகைவண்டி நிலையமாகும். காட்டு மன்னர் குடியான வீரநாராயண சதுர்வேதி மங்கலம் போன்ற இத் தனியூரும், கன்னியாகுமரிக் கல்வெட்டுக் குறிப்பிட்டபடி முதற் பராந்தகனல் நிறு வப்பட்ட பல சதுர்வேதி மங்கலங்களுள் ஒன்ருகும். முதற் குலோத் துங்கன் கல்வெட்டொன்றில் குறிக்கப்பட்டுள்ள இவ் வூரின் அருகில் உள்ள 'வீரசோழப் பேரேரியும்,' வீரசோழன் என்ற விருதுப் பெய ருடைய முதற் பராந்தகனுடைய படைப்பேயாகும்.

கல்வெட்டுகளில் வீரநாராயண வீதி, வீரசோழ வாய்க்கால், வீர சோழன் பேரங்காடி என்றாற்போல இவ் வூர்த் தெருக்களும் வாய்க் கால்களும் அங்காடிகளும்கூட முதற் பராந்தகனுடைய விருதுப் பெய ரால் வழங்கப்படுகின்றன.

இவ் வூரில் மூன்று கோயில்கள் உள்ளன. தற்போது கோதண்ட ராமர் கோயில் என்று வழங்கப்படும் விஷ்ணு கோயில் கல்வெட்டு களில் 'அயோத்ய பெருமாள் விண்ணகரம்' என வழங்கப்படுகிறது. குளக்கரைக்கு அருகில் அமைந்துள்ள இக் கோயிலில் பராந்தகன் என்ற பெயருடைய ஒருவனுடைய 7ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் காணப்படுகிறது. இக் கல்வெட்டெழுத்தை நோக்க இது பிற்பட்ட காலத்தது என உணர்கிறோம். இக் கல்வெட்டில் இவ் வூர் ஜயங் கொண்ட சோழமண்டலத்துக் களத்தூர்க் கோட்டத்துத் தனியூ ராகிய மதுராந்தக சதுர்வேதிமங்கலம் என்று வழங்கப்படுகிறது. ஜயங்கொண்ட சோழன் என்பது முதல் இராசராசனுடைய விருதுப் பெயர் ஆகையால் இக் கல்வெட்டு அவன் காலத்துக்குப் பிற்பட்டதே என்பது உறுதி. முதற் குலோத்துங்கன் ஆட்சிப் பிற்பகுதியில் அவன் புதல்வருள் ஒருவனான பராந்தகன் வேங்கி நாட்டையும், சோழ நாட்டின் வட பகுதியையும் ஆண்டு வந்தான் எனவும் அவன் இளவரச னாகக் கொள்ளப்பட்டுத் தன் பெயரால் ஆட்சியாண்டு கொண்டிருந் தான் என்பதும் உணரப்படுவதால் இங்குள்ள கல்வெட்டு, சுமார் கி.பி. 1111-12-ல் தனியரசு செலுத்தத் தொடங்கிய 12ஆம் நூற் றாண்டைச் சார்ந்த பராந்தகன் என்பானுடையதாக வேண்டும் என்றும் முடிவு செய்கிறோம். இக் கல்வெட்டு அரசன் ஆணைப்படி இவ் வூர்ச் சபையார் இப் பெருமாள் கோயிலுக்கு நிலம் ஒன்றைத் திருவிடையாட்டமான் வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

தற்போது புகைவண்டி நிலையத்தருகிலுள்ள கடப்பேரியிலுள்ள சிவன் கோயில் 'சுவேதாரண்யேசுவரம்' என்று வழங்கப்படுகிறது. கல்வெட்டுகளிலுள்ள அதன் பழம் பெயர் 'திருவெண்காட்டுப் பர மேசுவரர் ஆலயம்' என்பதாகும். இக் கோயிலிலுள்ள பழைய கல் வெட்டு மதுரைகொண்ட இராசகேசரியான சுந்தர சோழனுடைய 12ஆம் ஆண்டைச் சார்ந்தது. அது அரசனுடைய திரு ஆயுஷ் யார்த்தமாகவும், விஜயார்த்தமாகவும் (வாழ்நாள் பெருகவும், வெற்றி சிறக்கவும்) இக் கோயிலுக்கு வழங்கப்பட்ட நன்கொடை பற்றியது. இங்குள்ள முதல் இராசராசன் கல்வெட்டுகள் இரண்டு. அவற்றுள் முதல் கல்வெட்டு இக் கோயிலில் நிகழ்த்தப்பட்ட திரு விழா ஒன்றுக்கு விடப்பட்ட மானியம் பற்றியது. மற்றொன்று அக் கோயிலைச் சுற்றித் 'திருவெண்காட்டுப் பெருந்தெரு' என்ற மட வளாகம் அமைத்து, அதில் சிவப்பிராமணர்கள் (குருக்கள்) உவச்சர்கள்

(மேளக்காரர்கள்), தபஸ்விகள் (சிவனடியார்), தேவரடியார்கள் (கூத்தாடும் மகளிர்) ஆகியவர்களைக் குடியேற்றுவதற்காக நிலம் ஒதுக்கிய செய்தியை விளம்புகிறது.

விக்கிரம சோழன், இரண்டாம் குலோத்துங்கன் ஆகிய இரு மன்னருடைய கல்வெட்டுகளைக் கொண்ட 'அருளாளேசுவரம்' என்றும், 'அகளங்கேசுவரம்' என்றும் வழங்கப்பட்ட பிற்காலத்ததாகிய சிவன் கோயில் ஒன்றும் இங்கு இருக்கிறது. அருளாளன் என்பது முதற் குலோத்துங்கன், விக்கிரம சோழன் என்ற இருவர் ஆட்சியிலும் படைத் தலைவனாகவும் அமைச்சனாகவும் பணியாற்றிப் பல கோயில்களையும் எடுப்பித்த நரலோக வீரனுடைய விருதுப் பெயராகும். அகளங்கன் என்பது விக்ரம சோழனுடைய பெயராகும். எனவே, இக் கோயில் விக்கிரம சோழன் ஆட்சியில் நரலோக வீரனால் எடுப்பிக்கப்பட்டது என்பது உணரப்படுகிறது.

பிற்காலத்தில் புதுக்கப்பட்டுள்ள கோதண்டராம விண்ணகரமும், சுவேதாரண்யேசுவரர் கோயிலும் முதற் பராந்தகன் காலத்தைச் சார்ந்த கோயில்களாம்.

## 30. தொண்டைமாநாடு

**கோதண்டராமேசுவரம் ஆதித்தேசுவரம்:**

காளத்தியிலிருந்து ரேணுகொண்டாவுக்குச் செல்லும் சாலையில் $2\frac{3}{4}$ கல் (4·4 கி.மீ.) சென்ற பிறகு இடப்புறக் குறுக்குச் சாலையொன்றில் 3 கல் (4·8 கி.மீ.) தொலைவில் தொண்டைமாநாடு உள்ளது. இது பழங்காலத்தில் தொண்டை நாட்டுத் திருவேங்கடக் கோட்டத்து ஆற்றூர் நாட்டுத் 'தொண்டைமான் பேராற்றூர்' என்று வழங்கப்பட்டது. இங்குக் கோதண்டராமேசுவரம் அல்லது ஆதித்தேசுவரம் என்று பெயருடைய கோயிலொன்று உள்ளது.

இது கோதண்டராமனான முதல் ஆதித்தனுடைய நினைவுக்குறியாக எடுப்பிக்கப்பட்டப் பள்ளிபடைக் கோயிலாகும். திருமால்புரத்திலுள்ள கோநேரின்மைகொண்டானுடைய 14ஆம் ஆண்டுக் கல்வெட்டு உத்தம சோழன் காலத்ததாகும். அது தொண்டைமான் ஆற்றூர்த் துஞ்சிய தேவனுடைய 21ஆம் ஆண்டு நன்கொடை ஒன்றைக் குறிப்பிடுகிறது. பழைய கல்வெட்டுப்படித் தொண்டைமாநாடு என்ற ஊர் தொண்டைமான் பேராற்றூர் அல்லது தொண்டைமான் ஆற்றூர் என்றே வழங்கியதாக அறிகிறோம்.

வீரராசேந்திரனுடைய கன்னியாகுமரிக் கல்வெட்டுகள் விசயாலயனுடைய மகன் முதல் ஆதித்தன் கோதண்டராமன் என்ற பெயரால் வழங்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுவதால், கோதண்டராமன் என்பது முதல் ஆதித்தனுடைய விருதுப்பெயர் என்பது தெளிவு.

இக் கோதண்டராமேசுவரம் கோயிலின் மூலத்தானத்தின் அடித் தளத்தின் வடபகுதியில் முதற் பராந்தகனுடைய 34ஆம் ஆண்டுக் கல்வெட்டு உள்ளது. அதன் தொடக்க வரிகள் பின்வருமாறு :

'மதுரைகொண்ட கோபரகேசரிவர்மற்கு யாண்டு 34ஆம் திருவேங்கடக்கோட்டத்து ஆற்றூர்நாட்டுத் தொண்டைமான் பேராற்றூர்ச் சபையோரும் நகரத்தோமும் பள்ளிபடை வாகீசுவர பண்டித பட்டாரர் ஸ்ரீ கோதண்டராமேசுவரமாகிய ஆதித்யேசுவரத்து ஆழ்வாருக்குப் புரட்டாசித் திங்கள் திருக்கேட்டை முதல் எதிர் ஏழு நாளும் திரு நட்சத்திரமாகிய திருச் சதையத்தன்றும் திரு உற்சவம் செய்வதற்கும் போசனத்துக்கும் பள்ளிபடை வாகீசுவர பண்டித பட்டாரர் தொண்டைமான் பேராற்றூர் ஸ்ரீ சபையோமும் நகரத்தோமும் வழிசந்திராதித்தவல் இத் தர்மம் செய்வதாக எங்கள் வழி வைத்த பொன்சுட்டு வெட்டிச் சூடுகாட்டி தீப்போக்கி ஊர் கற்செம்மை முதல் நூற்றைங்கழஞ்சும் வாகீசுவர பண்டிதனேனும் புன் தூம்பினல் நிறத்தளவு தூ நெல் நாலாயிரக் காடியும்.'

இக் கல்வெட்டில் இக் கோயிலின் பெயர் பள்ளிபடை வாகீசுவர பண்டித பட்டாரர் ஸ்ரீ கோதண்டராமேசுவரம் ஆன ஆதித்தேசுவரம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இது 105 கழஞ்சுப் பொன்னும், ஆண்டுதோறும் 4000 காடி நெல் விளை(ச்சலாயும் வழங்கப்படும்) நிலனும் நன்கொடையாக வழங்கப்பட்ட செய்தியை வெளியிடுகிறது. அவ் வருமானத்தால் திருவிழாக்கள் நிகழும் ஏழு நாட்களிலும் மகா விரதிகள், பார்ப்பனர்கள், பல சாதிகளைச் சார்ந்த அடியார்கள் ஆகிய ஆயிரவருக்கு உணவிடவும், அவ் வேழுநாள் திருவிழாக்களிலும் தேவைப்படும் எல்லாப் பொருள்களையும் உதவவும், அத் திருவிழாவைப் புரட்டாசி மாதம் கேட்டை நட்சத்திரம் முதல் சதையம் முடிய நிகழ்த்துவதற்கும் ஓர் அறச்சாலை நடத்துவதற்கும் கிராமச் சபையினரும் வணிகர் சபையாரான நகரத்தாரும்—ஆதித்யேசுவரம் மகாவிரதிகளும், காவேரிப்பாக்கத்துத் திருப்பள்ளீசுவரத்துப் பிருதிவி விடங்கரின் கணப்பெருமக்களும் பன்மாகேசுவர கண்காணியும் வேண்டிக்கொண்டபடி—ஏற்பாடு செய்த செய்தி இக் கல்வெட்டால் புலனாகிறது.

முதல் ஆதித்தன் தொண்டைமானூற்றூரில் இறந்ததால் ஆற்றூர்த் துஞ்சிய தேவன் எனப்பட்டான். அவன் இறந்த இடத்தில் அவன் எலும்புகளைப் புதைத்த இடத்தின்மேல் கட்டப்பட்ட பள்ளிப் படைக் கோயில் இக் கோதண்டராமேசுவரமாகிய ஆதித்தேசுவரம். தன் தந்தையாரிடத்துக் கொண்ட பெரு மதிப்பாலும் பக்தியாலும் முதற் பராந்தகன் தன் 34ஆம் ஆண்டிற்குமுன் இக் கோயிலை எடுப்பித்து இதன் நித்திய நைமித்தியச் செலவினங்களுக்குப் பல நன் கொடைகள் வழங்கியுள்ளான்.

வீற்றிருந்த பெருமாள் :

இங்குள்ள விஷ்ணு கோயிலாகிய வீற்றிருந்த பெருமாள் விண்ணகரத்திலிருந்து 3 கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. அக் கல்வெட்டுகளில் இவ் விண்ணகரம் திருமேற் கோயில் என வழங்கப்படுகிறது. அக் கல்வெட்டுகளால் 13ஆம் நூற்றூண்டிலும் இவ்வூர் தொண்டைமான் ஆற்றூர் என்றே வழங்கப்பட்ட செய்தி வெளியாகிறது.

எனவே, தற்போதுள்ள தொண்டைமாநாடு என்ற ஊரே பண்டு, 13ஆம் நூற்றூண்டுவரை தொண்டைமான் ஆற்றூர் என்று வழங்கப் பட்டது என்பது வெளிப்படை. இக் கோயிலைப் புதுப்பித்துக் காக்க வேண்டிய பொறுப்பை அரசாங்கம் விரைவில் ஏற்பதாகுக.

# 12. சுந்தர சோழன்— இரண்டாம் பராந்தகன்

## (மதுராந்தகன்)

'சுந்தர சோழனைப் பற்றிப் பெரிய லேடன் பட்டயங்கள் கூறுவன பின்வருமாறு :

'அரிஞ்சயனுடைய மகன் இரண்டாம் பராந்தகன். அவன் ஆற்றலில் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளுக்கு நிகரானவன். மன்னர் பலருடைய ஆணைச் சக்கரங்களைத் தகர்த்தவன். கடல் சூழ்ந்த உலகில் வாழும் மக்களைத் தன் நற்குண நற்செயல்களால் மகிழ்வித்தவன்.

சேவூர்ப் போரில் தன் வில்லிலிருந்து வெளிப்பட்ட கூரிய அம்புத் திரள்களால் மதம் மிக்க மலைகள் போன்ற யானைகளின் உடல்களி னின்றும் குருதியாறு பரந்தோடச் செய்தவன்'.

அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட கரந்தைத் தமிழ்ச் சங்கச் செப்பேடுகள் சேவூர்ப் போரில், இரண்டாம் பராந்தகனிடம் தோற்ற வீரபாண்டியன் சையத்திரி மலைத் (மேற்குமலைத் தொடர்) தொடர் களை நோக்கி ஓடி ஒளிந்து உயிர் தப்பினான் என்று குறிப்பிடுகின்றன. இச் சேவூர்ப் போரில் இரண்டாம் பராந்தகன் தான் கொண்ட வெற்றியைக் கருதி மதுரைகொண்ட இராசகேசரி எனவும், மதுராந் தகன் எனவும் விருதுப் பெயர் பூண்டான். இவன் பாண்டியரோடு பொருத போரில் இவனுக்குக் கொடும்பாளூர் பூதி விக்கிரமகேசரியும் பராந்தக சிறிய வேளாரும் மிகவும் உதவினர். இப் பாண்டிய நாட்டுப் போரில் உதவிய இத் தலைவர் இருவரும் கொடும்பாளூரினரே. ஆனால், இவர்களிடையே என்ன உறவுமுறை இருந்தது என்பதை அறியக் கருவிகள் இல்லை.

இரண்டாம் பராந்தகன் அழகில் மன்மதனை விஞ்சியவன் ஆதலின் சுந்தர சோழன் என்ற பெயரால் வழங்கப்படுவான் ஆவான்.

திருவாலங்காட்டுச் செப்பேடுகள் இக் கலிகாலத்தில் மங்கத் தொடங்கிய மனுவினுடைய நெறியை, அறநூலினை மீண்டும் செழிக்கச் செய்யவே இவன் அவதாரம் செய்தான் எனக் கூறியதற் கேற்ப இச் செங்கோல் மன்னனை மக்கள் மனுவின் அவதாரம் என்றே மதித்து ஒழுகினர்.

இவன் காஞ்சியில் உள்ள பொன் மாளிகையில் இறந்த காரணத் தால் பிற் காலத்தில் கல்வெட்டுகள் இவனைப் 'பொன் மாளிகையில் துஞ்சிய தேவன்' என்ற பெயரால் வழங்கலாயின.

இவனுடைய பெருந்தேவியான வானவன் மாதேவி கற்பே வடி வெடுத்தவள். அருந்ததிக்கு நிகரானவள். அவள் பகலை இரவு தொடர்வதுபோல, இறந்த தன் கணவனைத் தேவலோக அரம்பையர் நுகர்ந்து விடுவார்களோ என்று அஞ்சி அவனை விடாது தேவலோகத்தி லும் பின் தொடர்ந்தாள் என்று போற்றப்படுகிறாள். இப் புகழுரை யால் அவள் உடன்கட்டையேறிய செய்தி புலனாகிறது.

முதல் இராசராசன் காலத்தில் வானவன் மாதேவியின் மகளான குந்தவை தஞ்சை இராசராசேசுவரத்தில் தன் தாயாருடைய உலோகப் படிமத்தை நிறுவி அதன் வழிபாட்டிற்கு நன்கொடை விடுத்தாளென அறிகிறோம்.

## 1. கொடும்பாளூர்

**மூவர் கோயில் :**

கொடும்பாளூரில் முற்பட்ட இரண்டு சோழர்கள் காலக் கோயில்கள் காலச் சூழல்களின் கொடுமைகளிலிருந்து, புதுக் கோட்டைச் சமஸ்தானத்தை ஆண்ட நிர்வாகிகள் சிலருடைய நற் பணியால் காக்கப்பட்டு இன்றுவரை நன்முறையில் காட்சி வழங்கு கின்றன. அவற்றுள் முசுகுந்தேசுவரக் கோயிலைப்பற்றி முதற் பராந்தகன் காலக் கோயில்களில் நோக்கினோம். இங்கு மூவர் கோயிலைப்பற்றி நோக்குவோம்.

மூவர் கோயில் என்பது மூன்று மூலத்தானங்களை உடைய கோயிலாகும். அவற்றுள் வடப்பக்கத்துக் கோயிலின் அடித்தளமே தற்போது காணக்கிடைக்கிறது.

நடுக் கோயிலும் தென்புறக் கோயிலும் புதுக்கோட்டைக் கண் காட்சிச் சாலையின் பொறுப்பாளரான காலஞ்சென்ற கே. வி. ராஜு என்பவரால் முறைப்படிப் பழைய சுவடு மாறாமல் திருப்பணி செய்யப் பட்டுள்ளன.

முசுகுந்தேசுவரர் கோயிலுக்கு முன் காணப்படும் புஷ்கரணியின் (திருக்குளம்) படித்துறைக் கருங்கற்கள் மூன்றில் ஒரு கன்னடமொழிக் கல்வெட்டுக் காணப்படுகிறது. அது 'விக்கிரமகேசரி வர்மன்' என்ற பெயரைச் சுட்டுகிறது. அக் கல்வெட்டு மூவர் கோயிலைச் சார்ந்தது என்பதும், அக் கோயிலில் நடு மூலத்தானமாவது அதனைக் கட்டியவன் பெயரால் அமைந்திருக்கலாம் என்பதும் உணரத்தக்கன.

நடு மூலத்தானத்தின் தென் சுவரில் கிரந்த எழுத்திலுள்ள வடமொழிக் கல்வெட்டொன்று இக் கோயில் கட்டப்பட்ட செய்திபற்றி அமைந்துள்ளது. அது இப் பகுதியில் ஆண்ட இருக்குவேள் என்ற சிற்றரசர்களுடைய 9 தலைமுறை கொண்ட கிளைவழிப்பற்றியும் அம் மன்னர்களுடைய நற்செயல் பற்றியும் குறிப்பிடுகிறது. நமக்கும் தேவைப்பட்டன கடைசி மூன்று தலைமுறைகளே.

ஏழாமவன் —பரதுங்கமர்த்தனன்—(வாதாபியில் வென்றவன்.)

எட்டாமவன் —சமராபிராமன்—(அதிராசமங்கலத்தில்சாளுக்கியரை வென்றவன்—அநுபமா என்ற சோழ இளவரசியை மணந்தவன்).

ஒன்பதாமவன்—பூதிவிக்கிரமகேசரி.

இவன் பல்லவர்களைக் காவிரியாற்றங்கரையில் வென்றான்; வீர பாண்டியனை வென்றான்; வாஞ்சிவேளனைக் கொன்றான். இவனுக்கு மனைவியர் இருவர். மக்கள் இருவர். அவர்களுள் முதலாமவளான கற்றளிக்குப் பராந்தகன், ஆதித்தியவர்மன் என்ற மக்கள் இருவரும் தோன்றினர். இரண்டாமவள் வரகுணா என்பவள்.

பூதிவிக்கிரமகேசரி கற்றவர்களுக்குக் கற்பகம்போல வழங்கினான். பூமிதேவி, வெற்றித்திரு, செல்வத்திரு என்ற தெய்வங்களின் கணவனாகக் காட்சியளித்தான். புகழ்மாதும் நாமாதும் இவனை நாடிவந்தனர். இவன் தன் பெயராலும் தன் தேவியரான கற்றளி, வரகுணா என்பவர் பெயராலும் மூன்று கற்றளிகளை எடுப்பித்து, அவற்றில் சிவபெருமானை எழுந்தருளுவித்தான்.

ஆத்திரேய கோத்திரத்தினரும், மதுராபுரிவாசியும், வேதங்களைக் கரைகண்டவரும், வித்யாஸ்ரீயினுடைய மாணுக்கரும், காளமுக வகுப்பைச் சேர்ந்த ஞானியுமான மல்லிகார்ச்சுனருக்கு, இக் கோயிலின் பலவகைப் பூசனைச் செலவிற்கும் நாள்தோறும் ஐம்பது துறவிகளுக்கு மடத்தில் அன்னமிடவும் 11 கிராமங்களை விக்கிரம கேசரி நன்கொடை வழங்கினுன்.

பூதிவிக்கிரமகேசரியின் இருப்பிடமும் காலமும் வரலாற்றறிஞர் களால் மிகவும் சர்ச்சை செய்யப்பட்டன. பரதுங்கமர்த்தனன் வாதாபியில் வென்றதையும், விக்கிரமகேசரி பல்லவர்களைக் காவிரி யாற்றங்கரையில் வென்றதையும் உட்கொண்டு பூதிவிக்கிரமகேசரி 7ஆம் நூற்ருண்டில் வாதாபி கொண்ட நரசிம்மவர்மன், அவனுடைய பிற்ருேன்றல்கள் ஆகியவர் காலத்தில் வாழ்ந்திருக்க வேண்டும் என்று 'ஹீராஸ்' (H. Heras) பாதிரியார் முடிவு செய்தார். இது 10ஆம் நூற்ருண்டினனுன விக்கிரமகேசரியின் காலத்துக்கு மூன்று நூற்ருண்டு முற்பட்டது என்பதை நீலகண்ட சாஸ்திரியார் விளக்கி, விடை வரைந்துள்ளார்.[1]

விக்கிரமகேசரி 10ஆம் நூற்ருண்டினன் என்பதற்குக் கீழ்க்கண்ட சான்றுகள் உதவியாக உள்ளன.

1. மூவர் கோயில் கல்வெட்டிலுள்ள எழுத்துகள் 10ஆம் நூற் ருண்டையே சார்ந்தவை. அவை 7 அல்லது 8ஆம் நூற்ருண்டைச் சார்ந்தன அல்ல.

2. விக்கிரமகேசரியால் வெல்லப்பட்டவன் 'சோழன் முடித்தலை கொண்ட வீரபாண்டியன்' ஒருவன் முதற் பராந்தகன் ஆட்சியிலோ அதற்கு முன்னரோ இருந்ததாகத் தெரியவில்லை.

3. இக் கொடும்பாளூரோடு தொடர்புடைய மற்ருெரு சிறந்த சோழர் படைத்தலைவன் சேனுபதி பராந்தக இருங்கோளன் என்னும் சிறிய வேளானுவான். பராந்தகனுடைய பெண்வழிக் குடும்பத்தின் மேம்பட்ட உறுப்பினனும் இருங்கோளன் குலதீபமும் ஆன இச் சிறிய வேளான் பாண்டியர்களை வென்று வாகை சூடியபின் சுந்தர சோழ னுடைய ஒன்பதாம் ஆண்டில் ஈழநாட்டை அடைந்து, பாண்டியர் களின் நண்பனுன ஈழநாட்டு மன்னனேடு போர்செய்து உயிர்நீத்து வீரசுவர்க்கம் எய்தினுன்.

1 இச் சர்ச்சையின் விரிவை உணர விரும்புவோர் சென்னைக் கீழ்க்கலை ஆராய்ச்சி இதழின் ஏழாம் தொகுதியையும், லண்டனிலிருந்து வெளிவரும் பெரிய பிரிட்டன் அரசாங்க ஆசிரியக் குழுவினருடைய 1934ஆம் ஆண்டு ஜனவரி இதழ், 1935ஆம் ஆண்டு ஜூலை இதழ் ஆகியவற்றையும் நோக்குக.

4. முதற் பராந்தகனுக்குப் பிறகு பராந்தகன் என்றும் மதுராந்தகன் (மதுரைகொண்டவன்) என்றும் முதன்முதல் பட்டம் பெற்றவன் சுந்தர சோழனே யாவான்.

5. இரண்டாம் ஆதித்தனும் பார்த்திவேந்திரவர்மனும் வீர பாண்டியனை வென்றதாகக் கூறிக் கொள்கின்றனர். அவர் முதற் பராந்தகனுக்கும் முதல் இராசராசனுக்கும் இடைப்பட்ட காலத்தவர் என்பது குறித்துணரத் தக்கது.

6. 'லேடன் பட்டயங்கள்' இரண்டாம் பராந்தகன் ஆட்சியில் சேவூர்ப் போரில் சோழர்கள் மாபெரும் வெற்றி பெற்றனர் எனவும், இரண்டாம் பராந்தகனுடைய மகன் இரண்டாம் ஆதித்தன், வீர பாண்டியனோடு நிகழ்த்திய இப் போரில் தான் சிறுவனாக இருந்த போதும், மதங்கொண்ட பெரிய யானையைச் சிதைக்கும் சிங்கக் குருளைபோல விளங்கினான் எனவும் விளம்புகின்றன.

7. விக்கிரமகேசரி, தன் புதல்வர் இருவருக்கும் பராந்தகன் என்றும் ஆதித்தவர்மன் என்றும், தன் பேரரசராகிய இரண்டாம் பராந்தகனான சுந்தரசோழன், இரண்டாம் கரிகால ஆதித்தன் என்ற இவர்கள் பெயரை இட்டு வழங்கினான் ஆதல்வேண்டும். இவற்றை நோக்க, விக்கிரமகேசரியைச் சுந்தர சோழன், இரண்டாம் ஆதித்தன் என்பவர் காலத்தவனாகக் கொள்வதே ஏற்புடையதாம்.

குடுமியான் மலையில் காணப்படும் பரகேசரிவர்மனுடைய 6ஆம் ஆண்டுக் கல்வெட்டு, செம்பியன் இருக்குவேளாரின் தேவியாரும், முத்தரையர்குல நங்கையாரும் ஆன வரகுண நாட்டுப் பெருமானார் பற்றிக் குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டு உத்தம சோழன் காலத்தது அன்று. விசயாலயன் காலத்தது என்றே கொள்ளத்தக்கது.

தில்லை ஸ்தானத்திலுள்ள இராசகேசரியின் 13ஆம் ஆண்டுக் கல் வெட்டொன்று பராந்தக இருங்கோவேளாருடைய மனைவியார் நங்கைவரகுண பெருமானார் என்று குறிப்பிடுகிறது. அவ் வம்மையார் இராசகேசரிவர்மனுடைய 13ஆம் ஆண்டில் காணப்படும் லால்குடிக் கல்வெட்டொன்றில் அரசனுடைய சகோதரியாகக் குறிக்கப்பட்டுள்ளாள். இவ் விரண்டு கல்வெட்டுகளும் குறிப்பிடும் நங்கை ஒருத்தியே. ஒருகால் இவள் அரிஞ்சயனுடைய மகளும் சுந்தர சோழனுடைய சகோதரியுமாக இருக்கலாம். பூதி விக்கிரமகேசரிக்குப் பராந்தக இருங்கோவேளார் என்ற பட்டப் பெயரும் உண்டு என்றும் நாம் கருதலாம். ஆனால் அதனை நிலைநாட்டப் போதிய ஆதாரங்கள் கிடைக்கவில்லை. 1908ஆம் ஆண்டுக் கல்வெட்டறிக்கை கூறுவது பின்வருமாறு :

'செம்பியன் இருக்குவேளான் பூதிபராந்தகன் திருச்சி மாவட்டத்து அந்தநல்லூரில் ஒரு கற்றளி எடுப்பித்தான். அவன் கொடும்பாளூர்க் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள பூதி விக்கிரமகேசரியின் மகனான பூதி பராந்தகன் ஆகலாம்.'

அந்தநல்லூரில் காணப்படும் பரகேசரிவர்மனுடைய 10ஆம் ஆண்டு முதல் 25ஆம் ஆண்டுவரை உள்ள கல்வெட்டுகள் செம்பியன் இருக்குவேளாகிய பூதி பராந்தகனைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. அவை முதற் பராந்தகன் காலத்தன. முதற் பராந்தகன் காலத்தவனான பூதி பராந்தகனை, சுந்தரசோழன் காலத்தவனான பூதி விக்கிரமகேசரியினுடைய மகனான பராந்தகன் என்று கொள்வது வரலாற்றறிவிற்குப் புறம்பானதாகும்.

அரசியலார் கல்வெட்டறிக்கை, 'புதுக்கோட்டை சமஸ்தானத்துக் குடுமியான் மலையிலுள்ள பரகேசரிவர்மனுடைய 21ஆம் ஆண்டைச் சார்ந்த இரு கல்வெட்டுகளில் மதுராந்தகன் இருக்குவேளான ஆதித்தன் விக்கிரமகேசரியின் பெயர் காணப்படுகிறது. அவனே கொடும்பாளூர் மூவர் கோயிலைக் கட்டிய விக்கிரமகேசரி என்று கொள்ளுவதும் பொருத்தமானதே' என்று குறிப்பிடுகிறது. குடுமியான்மலைக் கல்வெட்டுகள் முதற் பராந்தகன் காலத்தவையாதலின் அவற்றில் குறிப்பிடப்பட்ட ஆதித்தன் விக்கிரமகேசரி, சுந்தர சோழன் காலத்தவனான பூதி விக்கிரமகேசரியல்லன் என்பதும் உளங்கொளத்தக்கது. எனவே, கல்வெட்டிலாகாவினர் ஆழ்ந்து நோக்காது ஆள் மாறாட்டமாகச் செய்திகளை வரைந்துள்ளமை வெளிப்படை.

இனி மூவர் கோயிலில் தற்போது காணும் நிலையிலுள்ள இரு மூலத்தானங்களின் அமைப்பையும்பற்றி நோக்குவோம்.

இரு கோயில்களின் கருவறைகளும் சதுரமானவை. அவற்றின் பக்க அளவு 21 அடி, அர்த்தமண்டபம் 18 அடி பக்க அளவுடைய சதுரமாகும். தற்போது அர்த்தமண்டபம் மேற்கூரை இழந்து திறந்தவெளியாகக் காட்சியளிக்கிறது.

அர்த்தமண்டபத்தின் முன் அமைக்கப்பட்ட முகமண்டபத்தின் அடித்தளமே காணப்படுகிறது. அது 91 அடி நீளமும், 41 அடி அகலமும் உடையது. நந்தி மண்டபத்தின் அடித்தளம், பலிபீடம், துவஜஸ்தம்பம் என்பனவற்றைக் காணலாம். இம் மூன்று மூலத்தானங்களையும் சுற்றி 15 சுற்றுக் கோயில்கள் இருந்தனவெனவும், இவற்றை எல்லாம் உள்ளடக்கிய மதிற்சுவர்கள் இருந்தன எனவும் கருதுவதற்குச்

சுவடுகள் உள்ளன. சுற்றுக் கோயில் ஒவ்வொன்றிற்கும் ஒரு கருவறையும் ஒரு முன் மண்டபமும் இருந்திருக்கவேண்டும். மதிலுக்கு இரண்டு நிலைகள் இருந்திருக்கவேண்டும். அவற்றுள் ஒன்றின் அடித்தளத்தின்மேல் ஒரு கோபுரம் எடுப்பிக்கப்பட்டிருத்தல் வேண்டும்.

மூலத்தானத்தின் வெளிப்புறத்தில் அடித்தளத்தில் பத்மப்படை, குமுதப்படை என்பனவற்றைக் காணலாம். அவற்றின்மேல், உள்ளே மனித வடிவத்தைக்கொண்டு சிறிது திறந்த வாயையுடைய மகரங்களை ஓரங்களில் கொண்ட யாளி வரிமானம் உள்ளது. கருவறையின் சுவர்களில் மூன்று தேவகோஷ்டங்கள் உள்ளன. ஒவ்வொரு தேவ கோஷ்டத்தின் முகப்பிலும் இரண்டு அரைத்தூண்கள் உள்ளன. கோஷ்டத்தை வளைத்து அமைந்துள்ள மகர தோரணத்தை வேறிரண்டு உயரமான அரைத்தூண்கள் தாங்கி நிற்கின்றன.

இங்குள்ள பூதகண வரிசையில் இன்னியம் இயக்கும் உருவங்கள் பல உள்ளன. கொடுங்கையின்கீழ் இப் பூதகண வரிசையையும் அதன் மேல் யாளி வரிமானத்தையும் காணலாம். கொடுங்கையை ஒவ்வொரு பக்கத்திலும் நல்ல சிற்ப வேலைப்பாடுடைய 6 கூடுகள் அணி செய்கின்றன.

இவ் விருதளக் கற்றளிகளின் இரண்டாம் தளத்தில் சாலைகளும் கூடங்களும் உள்ளன. இவற்றின் மேலும் ஒரு யாளி வரிமானம் உள்ளது. கிரீவத்தின் நடுவிலுள்ள கோட்டத்லை அணி செய்யும் சிங்கத் தலையை உடைய கூடு சிகரம்வரை உயர்ந்து இணைந்துள்ளது.

சிகரம் நான்கு பக்கங்களையுடையதாய், மாமல்லபுரத்துத் திரௌபதி இரதத்தின் சிகரம் போன்று நடுவில் பிதுக்கங்கொண்டு விளங்குகிறது. சிகரத்தின்மேலுள்ள பத்மபீடிகையின்மேல் சதுரமான ஸ்தூபியைக் காணலாம்.

தேவகோஷ்டச் சிற்பங்கள் பண்டைச்சோழர்கால நுணுக்கமான சிற்பத் திறனுக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாக உள்ளன. அக்காலத்தில் சிற்பக் கலை எய்தியிருந்த உயர்வை நினைக்கையில் சொல்ல மொழிதளர்ந்து சோரும். வியப்பு மேலீட்டால் மூச்சுக்குழலில் காற்று தடைப்படும். இச் சிற்பங்களில் சில தற்போது புதுக்கோட்டை, சென்னைப் பொருட்காட்சிச் சாலைகளிலும் இடம்பெற்றுள்ளன. எஞ்சிய சிலவற்றை இன்றும் கோயில் எல்லைக்குள் காணலாம்.

இவ் விரண்டு கோயில்களின் தேவகோஷ்டங்களிலும் தற்போது எஞ்சியுள்ள சிலைகளின் பட்டியல் பின்வருமாறு :

| | | நடுத்தளி | தென்தளி |
|---|---|---|---|
| கிழக்கு | கருவறை | அர்த்தநாரி | கங்காதரர் |
| | 2ஆம் தளம் | சிவன் மடியில் பார்வதி | காலாரி மூர்த்தி |
| | கிரீவம் | இந்திரன் | அந்தகாசுரவத மூர்த்தி |
| வடக்கு | கருவறை | நிற்கும் சிவன் | நிற்கும் சிவன் |
| | 2ஆம் தளம் | அமர்ந்த சிவன் | சங்கரநாராயணன் |
| | கிரீவம் | அமர்ந்த சிவன் | ——— |
| தெற்கு | கருவறை | ——— | வீணாதர தட்சிணா மூர்த்தி |
| | 2ஆம் தளம் | தட்சிணாமூர்த்தி | காலாரி மூர்த்தி |
| | கிரீவம் | வீணாதர தட்சிணா மூர்த்தி | கஜசம்மார மூர்த்தி |
| மேற்கு | கிரீவம் | ஆலிங்கன மூர்த்தி | ——— |

கொடும்பாளூர் மூவர் கோயிலின் காலம் பற்றிய ஆராய்ச்சியைப் பிற்சேர்க்கையில் காண்க.

## 2. கொடும்பாளூர்

**மூவர் கோயிலின் காலம் பற்றிய குறிப்பு :**

மூன்றாம் நந்திவர்மனுடைய 16ஆம் ஆண்டைச் சார்ந்த கீழூர்க் கல்வெட்டுப் பதிப்பிக்கப்பட்டபின், பூதிவிக்கிரமகேசரியின் காலம் பற்றியும், அவன் கொடும்பாளூரில் எடுப்பித்த மூவர் கோயிலின் காலம் பற்றியும் மீண்டும் சர்ச்சை செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது. கிருஷ்ணன் அவர்கள்—'கொடும்பாளூர்த் தலைவர்களும் சோழர்களும்' என்ற நூலில் (கட்டுரையில்)-கே. வி. எஸ். ஐயரும் கே. எஸ். வைத்தியநாதனும் குறிப்பிடும் கருத்தை ஒட்டிக் கீழூர்க் கல்வெட்டுக் குறிப்பிடும் தென்னவன் இளங்கோவேளான மறவன் பூதியும், கொடும்பாளூர் மூவர் கோயில் கல்வெட்டுக் குறிப்பிடும் பூதிவிக்கிரம கேசரியும் ஒருவரே என்று முடிவு செய்துள்ளார்.

இவ் வாசிரியர்கள் தாங்கள் செய்துள்ள முடிவுக்கு ஆதாரமாகக் குறிப்பிடும் செய்திகளை நோக்குவோம்.



73. மூவர் கோயில், கொடும்பாளூர்



74. மூவர் கோயில், கொடும்பாளூர்

1. வேலூர்ப்பாளையம் செப்பேடுகளில் மூன்றும் நந்திவர்மனுக்கு அடங்கிய குமராங்குசன் என்ற தலைவன் சோழர் குல வீரமுடிமணி எனவும் சோழ மகாராசன் எனவும் விருதுப் பெயர்கள் தரித்திருந்த செய்தியும், அவன் வேண்டுகோளுக்கு இணங்கத் திருக்காட்டுப்பள்ளி (செங்கற்பட்டு மாவட்டம்) என்ற கிராமம் உள்ளூர்க் கோயிலுக்குத் தேவதானமாக வழங்கப்பட்ட செய்தியும் குறிப்பிடப்பட்டுள்ளன.

இச் செயல் விசயாலயன் காலத்தை ஒட்டியே நிகழ்ந்ததாதல் வேண்டும். சோழர்கள் முன் காலத்தில் முத்தரையர்களுக் கடங்கிச் சிற்றரசராக வாழ்ந்த கோனாட்டு யாதவ மன்னனோடு தொடர்பு கொண்டனர். கோனாட்டையாண்ட சமராபிராமன் (கி.பி. 853—897) என்ற யாதவ மன்னனுக்கு ஒப்பற்ற அழகியான அனுபமா என்ற சோழகுல இளவரசி மணம் செய்விக்கப்பட்டாள். இவர்களுக்குப் பிறந்த மகனே பூதி அல்லது விக்கிரமகேசரி யாவான். இவன் முதல் ஆதித்தனுடைய ஆட்சியில் சிற்றரசனாக வாழ்ந்தான்.

2. கொடும்பாளூர் மூவர் கோயில் கல்வெட்டு :பூதி விக்கிரம கேசரி பல்லவரோடு கடும்போர் புரிந்த செய்தியை வெளியிடுகிறது. முதல் ஆதித்தன் பல்லவ மன்னருள் கடைசி அரசனான அபராசிதனை கி.பி. 890-க்கு முன்பே கொன்றுவிட்ட செய்தி வெளிப்படையாகும். பூதி தனியாகவோ சோழ மன்னனுடைய துணைவனாகவோ பல்லவ மன்னனுடன் போரிட்ட செயல் கி.பி. 890-க்கு முற்பட்டதாகும் என்பதில் ஐயமில்லை. அபராசிதனுக்குப் பிறகு வேறு பல்லவ மன்னர் இல்லாததாலும் அபராசிதன் கி.பி. 890-ல் கொல்லப்பட்டதாலும் பூதி பல்லவரோடு போரிட்ட காலம் கி.பி. 890-க்கு முற்பட்டது என்பதில் தடையேதுமில்லை.

3. பூதியின் காலத்தைத் திரித்துக் கூறுவதற்கு உதவுவது, மூவர் கோயில் கல்வெட்டின்படி பூதியால் வெல்லப்பட்டவனாக அறியப்படும் வீரபாண்டியனுடைய காலமேயாகும். வீரபாண்டியன் — சுந்தர சோழன், அவன் மகன் ஆதித்தகரிகாலன் என்பவனுடைய சமகாலத்தவனாவான். பூதி பல்லவர்களை வென்ற காலம் இராசகேசரிவர்மன் முதல் ஆதித்தனுடைய 27ஆம் ஆண்டு என்று குறிப்பிடப்பட்டிருப்பின், வீரபாண்டியனைப் பற்றி அறியவேண்டிய தேவையே இராது.

இவ் வாசிரியர்கள் முடிந்த முடிவாகக் கொண்டுள்ள இம் மூன்று கருத்துகளிலும் வரலாற்றுண்மை எந்த அளவில் இருக்கிறது என்பதை அலசிப் பார்ப்போம்.

1. மூன்றும் நந்திவர்மனுடைய 16ஆம் ஆண்டைச் சார்ந்த கீழூர்க் கல்வெட்டில் தென்னவன் இளங்கோ என்ற மறவன் பூதியின்

பெயர் காணப்படுகிறது. உள்சளாவில் (Ulchala) புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்ட கல்வெட்டால் இரண்டாம் நந்திவர்மன் அரியணை ஏறிய காலம் கி.பி. 731 ஆகக் கணக்கிடப்பட்டுள்ளது. அம் முறையில் நோக்கின் மூன்றும் நந்திவர்மன் பட்டம் பெற்ற காலம் கி.பி. 835-க்கு முற்பட்டிருக்க இயலாது. எனவே, கீழூர்க் கல்வெட்டு கி.பி. 851-ல் தோன்றியது. இனி, மறவன் பூதியைப்பற்றிக் குறிப்பிடும் கல்வெட்டு களையெல்லாம் நோக்குவோம்.

(அ) திருப்பராய்த்துறை: ஆட்சியாண்டு சிதைவுற்றுவிட்டது. கோ ராஜகேசரிபன்மர்...... நங்கை சுற்றளிப்பிராட்டியார்; இவ் வம்மையார் தென்னவன் இளங்கோவேளாரான மறவன் பூதியாரின் தேவியார் ஆகலாம்.

(ஆ) கொடும்பாளூர்: இங்கு முசுகுந்தேசுவரர் கோயிலின் முன் புறம் உள்ள மண்டபத்தில் இராசகேசரிவர்மனின் 21ஆம் ஆண்டுக் கல்வெட்டு உள்ளது. இம் மண்டபத்திலுள்ள தூணில் காணப்படும் இக் கல்வெட்டுக் கொடும்பாளூரில் திருப்பூதீசுவரத்து மகாதேவர் கோயில் இருந்த செய்தியை வெளியிடுகிறது. முசுகுந்தேசுவரம் என்ற கோயில் முதற் பராந்தகன் காலத்தில் மகிமாலய இருக்குவேள் என்பவனுல் எடுப்பிக்கப்பட்டது. திருப்பூதீசுவரம் முதல் ஆதித்தன் காலத்தில் பூதி என்பவனுல் எடுப்பிக்கப்பட்டதோ, அன்றி அவன் பெயரால் எடுப்பிக்கப்பட்டதோ ஆதல் வேண்டும். பிற்காலத்தில் அது சிதைவுறவே, அதன் கற்களைக்கொண்டு முசுகுந்தேசுவரர் கோயில் முன்மண்டபம் எடுப்பிக்கப்பட்டதாதல் வேண்டும்.

(இ) திருப்பராய்த்துறை: இராசகேசரிவர்மனுடைய 27ஆம் ஆண்டுக் கல்வெட்டில் தென்னவன் இளங்கோவேளாரான மறவன் பூதியாரின் பெயர் காணப்படுகிறது.

(ஈ) திருச்செந்துறை: பராந்தகனுடைய 9ஆம் ஆண்டுக் கல் வெட்டு, தென்னவன் இளங்கோவேளாகிய மறவன் பூதியின் தேவியா ரான நக்கன் விக்கிரமகேசரியின் நன்கொடைபற்றி அமைந்துள்ளது.

(உ) திருப்பராய்த்துறை: பரகேசரிவர்மனின் 8ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் கொடும்பாளூர்க் கோயில் இறைவனின் பெயரைக் கொண்ட திருப்பூதிசுவரத்துப் பெருமானடி என்ற அடியவன் பெய ரைச் சுட்டுகிறது.

(ஊ) திருச்செந்துறை: பரகேசரிவர்மனுடைய 16ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் கொடும்பாளூர்த் திருப்பூதிசுவரத்துத் தேவனூர் என் பவர் மகனுரைப் பற்றியது.

செங்கற்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த திருக்காட்டுப்பள்ளியிலிருந்த குமராங்குச சோழ மகாராசர் விசயாலயனோடு எம்முறையிலும் தொடர்புடையவர் அல்லர். இவ் விருவரிடையேயும் எவ்விதத் தொடர்பும் இருந்ததாக அறியக் கருவிகள் இல்லை. இவ்வாசிரியர்களே, 'விசயாலயன்—குமராங்குசன் தொடர்பு எதிர் காலத்தில் கிடைக்கக்கூடிய சான்றுகளாலேயே உணரப்படவேண்டியதாகும்' என்று குறிப்பிட்டுள்ளனர். சமராபிராமன் சோழகுல இளவரசியான அனுபமாவை மணந்தான் என்பதற்கும், அவன் கி.பி. 883 முதல் 897 வரை ஆண்டான் என்பதற்கும் உரிய ஆதாரங்கள் தரப்பெறவில்லை. இவை இவ் வாசிரியர்கள் ஊகத்தால் கொண்ட முடிவுகள் போலும்.

## 3. பல்லவர்கள் அடியோடு அழிக்கப்பட்டமை

பூதிவிக்கிரமகேசரி பல்லவர்களைக் காவிரியாற்றங்கரையில் தோற்கடித்த செயலுக்கு அளவுகடந்த மதிப்புக் கொடுக்கும் இவ் வாசிரியர்கள் முதல் ஆதித்தன் அபராசிதனை வென்ற பிறகு பல்லவர் ஆட்சியே தமிழகத்தில் நிலவவில்லை என்று சாதிக்கின்றனர். ஆனால் அண்மையில் கிடைத்துள்ள ஆதாரங்களால் நிருபதுங்கன் கி.பி. 855 முதல் 896 வரை 41 ஆண்டுகள் ஆண்டான் என்பதும், அபராசிதன் கி.பி. 878 முதல் 897 வரை வாழ்ந்தான் என்பதும், கம்பவர்மன் கி.பி. 878 முதல் கி.பி. 910 வரை இருந்தான் என்பதும் உறுதியாகிவிட்டன. இதற்கு மடவலம் என்ற ஊரிலிருந்து கிடைத்த கல்வெட்டு பெரிதும் உதவியுள்ளது. அண்மைக் காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட கரந்தைத் தமிழ்ச் சங்கச் செப்பேடுகள் முதற் பராந்தகன் பல்லவ மன்னன் ஒருவனை வென்று அவன் நாட்டையும், செல்வங்களையும் கைப்பற்றிய செய்தியைக் குறிப்பிடுவது கொண்டும் பல்லவர் ஆட்சி இவ் வாசிரியர் குறிப்பிடுவதுபோல கி.பி. 890-ல் தமிழகத்தைவிட்டு அகன்றுவிடவில்லை என்று உறுதியாகக் கூறலாம்.

இதனால், பூதி பல்லவர்களோடு கடும் போர் புரிந்து அவர்களை அடியோடு அழித்தான் என்று இவ் வாசிரியர்கள் செய்யும் முடிவு வரலாற்றுச் செய்தியோடு முரணுவது கண்கூடு.

வீரபாண்டியன் போர்: பூதியின் காலத்தை உள்ளவாறு கூறுதற்கண் மயக்கம் தருவது வீரபாண்டியன் காலமாகும். பூதியால் வெல்லப்பட்ட வீரபாண்டியனைச் சுந்தர சோழன், கரிகால ஆதித்தன் ஆகிய இருவருடைய பகைவனான வீரபாண்டியனே என்று கொள்வதே இத் திரிபுணர்ச்சிக்குக் காரணமாகும் என்று குறிப்பிடும் இவ் வாசிரியர்கள் மெய்க்கீர்த்தி எழுதியவர்களால் விடுக்கப்பட்ட, தங்கள்

கற்பனையின் படைப்பான ஒரு வீரபாண்டியனை இராசசிம்மனுடைய சமகாலத்தவனாகவோ, அவனையடுத்து ஆண்டவனாகவோ கொண்டு மயங்குகின்றனர்.[1]

நாம் அறிய விரும்பும் வீரபாண்டியன், கொடும்பாளூர்க் கல்வெட்டில் குறிப்பிடப்படும் விக்கிரமகேசரியாலும், சுந்தரசோழனாலும், கரிகால ஆதித்தனாலும், பார்த்திவேந்திரவர்மனாலும் வெல்லப்பட்டவனும் சோழன் தலை கொண்டவன் என்று தன்னைப் புகழ்ந்து கொள்பவனுமான மன்னன் ஒருவனாவான். அவனைப்பற்றி அறியக் கருவிகளாக இருக்கும் கல்வெட்டுக் குறிப்புகளை நோக்குவோம்.

பாண்டிய இராசசிம்மனின் 20ஆம் ஆண்டுக்கு (கி.பி. 923) முன் வீரபாண்டியன் என்ற பெயரே காணப்படவில்லை. அவ்வாண்டுக் கல்வெட்டில் வீரபாண்டியனுடைய புணிமகன் வழங்கிய நன்கொடை ஒன்று குறிப்பிடப்பட்டுள்ளது. சூரியகிரகணம் ஒன்று நிகழ்ந்த காலத்தைக் கல்வெட்டாதாரங்களுடன் ஒப்பிட்டுக் காலஞ்சென்ற இராமநாதய்யர் வீரபாண்டியன் கி.பி. 947-ல் அரியணையேறி யிருக்க வேண்டும் என்று முடிவு செய்துள்ளார். அவன் தன் ஆறும் ஆண்டில் (கி.பி. 953) 'சோழன் தலைகொண்ட' என்ற விருது பூண்டுள்ளான். கி.பி. 963-ல் சுந்தர சோழன் சேவூர்ப் போரில் இவ் வீரபாண்டியனை வென்று 'பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமாள்' என்று விருதுப் பெயர் பூண்டான். இரண்டாம் ஆதித்தன் சிறுவனாயிருந்தபோதும் வீரபாண்டியனுடன் கடும்போர் விளைந்த செய்தியை லேடன் பட்டயம் விளம்புகிறது. கரந்தைச் செப்பேடுகள் சுந்தர சோழன் வீரபாண்டியனை வென்று சஹ்யபருவதத்திற்கு (மேற்கு மலைத்தொடர்) விரட்டிய செய்தியைக் குறிப்பிடுகிறது. திருவாலங்காட்டுச் செப்பேடுகள் பாண்டியன் முடித்தலை துணிக்கப்பட்டு, அவன் தலைநகரில் வெற்றித் தூணாக உயர்த்தப்பட்டது என விளம்புகின்றன. (இரண்டாம் ஆதித்தன் கி.பி. 969-ல் கொலை செய்யப்பட்டான்). பார்த்திவேந்திரவர்மனின் 2ஆம் ஆண்டைச் சார்ந்த இரு கல்வெட்டுகளும் 'பாண்டியன் தலைகொண்ட பார்த்திவ மகாராசன்' என்று அவனைப் புகழ்கின்றன.

இவற்றை நோக்க வீரபாண்டியன் 10ஆம் நூற்றாண்டில் கி.பி. 923-க்கும் 966-க்கும் இடைப்பட்ட காலத்தவனாதல் வேண்டும் என்பதும், அவன் 947 முதல் 966 வரை ஆட்சி செய்தானாதல் வேண்டும் என்பதும் வெளியாகின்றன.

மேலும், மூன்றும் நந்திவர்மன் ஆட்சியிலும் `ஆதித்தன் ஆட்சியிலும் வீரபாண்டியன் என்ற மன்வன் ஆண்டான் என்று கூறுவதற்குச்

சான்று எதுவும் இல்லை. வீரபாண்டியனை எதிர்த்த பூதி விக்கிரம கேசரியும் வீரபாண்டியனைப் போல 10ஆம் நூற்றாண்டைச் சார்ந் தவனே. கொடும்பாளூர் மூவர் கோயில் கல்வெட்டும் இக் காலத்தைச் சார்ந்ததே. 'சாலிகிராமம்' என்ற கட்டுரை வரைந்த வேங்கடராமய்யாவும் சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் 10ஆம் நூற்றாண்டின் இடைக் காலத்தைச் சார்ந்தவன் என்றே குறிப்பிட்டுள்ளார்.

கீழையூர் (கீழூர்) கல்வெட்டில் தென்னவன் இருங்கோவேளான மறவன் பூதியின் பெயர் காணப்படுகிறது. கொடும்பாளூர் மூவர் கோயிலில் பூதி விக்கிரமகேசரியின் பெயர் காணப்படுகிறது. இரு பெயர்களிலும் பூதி என்ற ஒரு சொல் அமைந்திருப்பது கொண்டே இருவரையும் ஒருவர் என்று கொள்வது ஏலுமா? மூவர் கோயில் கல் வெட்டிற்கும் கீழூர் கல்வெட்டிற்கும் ஏறத்தாழ ஒரு நூற்றாண்டு காலம் இடைவெளியாக உள்ளது. சோழ கொடும்பாளூர்த் தலைவர் களின் கிளைவழி முறையை அரிதின் முயன்று கல்வெட்டுச் சான்றுகளைப் பிறழக்கொண்டு இவ் வாசிரியர்கள் புனைந்த கற்பனை பயனற்றதா கின்றது. புதிதாக ஆராய்ச்சி செய்யப் புகுபவருக்குக் கற்றுவல்ல இவ் வாசிரியர்கள் திரித்துத்தந்த இச் செய்தி கலக்கந்தரும். ஆதலின், உண்மையில் மறவன் பூதியும் பூதி விக்கிரமகேசரியும் வெவ்வேறான இரு தலைவர்களே என்பது இக் கட்டுரையால் உறுதி செய்யப்படு கிறது.

## 4. காமரசவல்லி

**கார்க்கோடகேசுவரர் கோயில் (திருநல்லூர் மகாதேவர்) :**

திருச்சி மாவட்டத்தில் உடையார்பாளையம் தாலுக்காவில் திருமழபாடியிலிருந்து 6 கல் (9.6 கி.மீ.) கிழக்கிலுள்ள காமரசவல்லி யில் முற்பட்ட சோழர்கள் காலத்தில் எடுக்கப்பட்ட கார்க்கோட கேசுவரர் கோயில் தற்போது சிதைவுற்ற நிலையில் காணப்படுகிறது.

மூலத்தானத்தின் தென் சுவரில் அடைமொழியில்லாத பரகேசரி வர்மனுடைய 9ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று காணப்படுகிறது. அக் கல்வெட்டில் முதல் ஆதித்தன் பெயரால் அமைந்த கோதண்ட ராமன் வாய்க்கால் இடம் பெற்றிருக்கிறது. எனவே, அது முதற் பராந்தகன் காலத்தது ஆகலாம். அது ஸ்ரீபலிச் சடங்கிற்கும் திருப் பள்ளி எழுச்சிக்கும் விடப்பட்ட மானியம் பற்றியது.

இக் கோயிலில் இராசகேசரிவர்மனான சுந்தர சோழனுடைய 5ஆம் ஆண்டில் ஆதனூரைச் சார்ந்த பாலாசிரியன் பட்டன்சிவன்

கூத்தன் என்பான் திருநல்லூர் ஸ்ரீகோயில் மகாதேவரின் சந்நிதியில் நறுமணப் புகையிடுவதற்கு நிலக் கொடையொன்று வழங்கவே, காமரசவல்லி சதுர்வேதி மங்கலமாகிய பிரமதேயத்தின் பெருங்குடிப் பெருமக்கள் அந் நிலத்தை இறை இழிச்சிக் கொடுத்தனர் (*74—1914*; S.I.I. XIII, *109*). இதே நன்கொடையாளன் திருப்பால்துறை ஆதி மூலேசுவரர் கோயிலுக்கும் இதுபோல்வதொரு நன்கொடை வழங்கி யுள்ளான். (*171—1907*; S.I.I. XIII ; No. *106*.)

இங்குள்ள திருக் கற்கோடீசுவரமுடைய நாயனுர் கோயிலைப் புதுக்குவதற்கு 18 நாடுகளிலும் 79 வள நாடுகளிலும் உள்ள மக்களிட மிருந்து சடையவர்மன் வீரபாண்டியன் ஆட்சியின் 10ஆம் ஆண்டு இதற்கென்று தனி வரி விதித்துத் திரட்டப்பட்டதாக அறிகிருேம்.

பத்தாம் நூற்ருண்டைச் சார்ந்த இக் கோயில் 13ஆம் நூற்ருண் டில் பழுதுபார்க்கப்பட்டபோதிலும் தற்போது பாழடைந்து கற் குவியலாகக் காட்சியளிக்கிறது.

## 5. திண்டிவனம்

**திருத்திண்டீசுவரர் கோயில் :**

திண்டிவனம் தென் ஆர்க்காடு மாவட்டத்தில் சென்னை, தனுஷ் கோடி புகைவண்டி மார்க்கத்தில் உள்ளதோர் ஊராகும். பழங்காலத் தில் இவ்வூர் ‘கிடங்கில்’ என்று வழங்கப்பட்டது. சங்க காலத்தில் இவ்வூரையாண்ட கிடங்கில் கோமானைப்பற்றிப் புலவர் பலரும் பாடி யுள்ளனர். தற்போதும் இவ்வூரின் தென்புறத்தில் புகைவண்டி நிலை யத்துக்கு அருகில் கிடங்கில் ஏரி என்ற பெயரால் பெரிய குளம் ஒன்று வழங்கப்படுகிறது. இங்குள்ள முற்பட்ட சோழர்கள் காலக் கோயில் கிடங்கிலின் உள்ள திருத்திண்டீசுவரர் கோயில் என்று வழங்கப் பட்டது.

இக் கோயிலிலுள்ள மிகப் பழைய கல்வெட்டு இராசகேசரிவர்ம னுடைய 5ஆம் ஆண்டைச் சார்ந்தது. இவ்விராசகேசரி சுந்தர சோழன் ஆகலாம். இக் கல்வெட்டின் ஒரு பகுதி கட்டடத்தின் உள் புதைந்துவிட்டது. இது விளக்கெரிப்பதற்குப் பலரும் வழங்கிய நன் கொடை பற்றியது.

முதல் இராசராசனுடைய 10ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று திருத்திண்டீசுவரதேவர் சந்நிதியில் வீணை வாசிப்பான் ஒருவனும்,

அவனுடன் பாடுவான் ஒருவனுமாக இசை வல்லார் இருவருக்கு நிலக் கொடை வழங்கிய செய்தியை வெளியிடுகிறது.

மூலத்தானமும் அர்த்தமண்டபமும் முதல் இராசராசனுக்கு முற்பட்ட சோழர்கள் காலத்தனவாகும். அக்காலத்தில் எடுப்பிக்கப் பட்ட ஏனைய கோயில்களில் காணப்படுவனபோல அர்த்தமண்டபச் சுவர்களிலும், கருவறைச் சுவர்களிலும் காணப்படும் தேவகோஷ்டங் களில் கணேசர், தட்சிணாமூர்த்தி சிலைகளைத் தென்புறமும் விஷ்ணு சிலையை மேற்குப்புறமும், பிரமன், துர்க்கை சிலைகளை வடபுறமும் காணலாம்.

## 6. வேளைச்சேரி (வெளிச்சேரி)

1. சப்தமாதர்கள் கோயில் (காலபிடாரி).

2. தண்டீசுவரர் கோயில் திருத்தொண்டீசுவரர்).

வேளைச்சேரி செங்கற்பட்டு மாவட்டத்தில் சைதாப்பேட்டை வட்டத்தில் உள்ளது. அது பண்டைக்காலத்தில் தொண்டைமண்ட லத்துப் புலியூர்க்கோட்டத்துக் கோட்டூர் நாட்டு வெளிச்சேரி என்று வழங்கப்பட்டது. இங்குள்ள சப்தமாதர் கோயிலில் உள்ள இரண்டு கல்வெட்டுகளில் அடைமொழியில்லாத பரகேசரி வர்மனுடைய கல்வெட்டு அரிஞ்சயன் அல்லது உத்தமசோழன் காலத்தது ஆகலாம். அது காலபிடாரி கோயிலுக்குப் பூசனைக்காக நிலக்கொடை வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. மற்றொரு கல்வெட்டு, சுந்தரசோழன் அல்லது இரண்டாம் ஆதித்தன் காலத்து அரச குடும்பத்தவருள் ஒருவ னான பார்த்திவேந்திராதிபதிவர்மனுடைய 10ஆம் ஆண்டைச் சார்ந் தது. அது, சோழநாட்டுத் திருவேட்பூர் (புதுக்கோட்டை நகரை ஒட்டியுள்ளது) வாசி ஒருவன் வெளிச்சேரி நிலங்கள் சிலவற்றை விலைக்கு வாங்கி, வெளிச்சேரி மகாசபையாரிடம் இறை திரவியங் கொடுத்து அதை இறையிலியாக்கி அவ்வூர்ச் சப்தமாதர் கோயில் நிர்வாகத்தைச் செய்துவந்த அறங்காவலர் குழுவான மாத்ரு சிவ கணத்தாரிடம் ஒப்படைக்கவே, அவர்கள் அந் நிலத்தைப்பெற்று, அவன் குறிப்பிட்ட அறச்செயல்களை முட்டாமை நடத்துவாராக உறுதி கூறிய செய்தியைக் குறிப்பிடுகிறது.

தண்டீசுவரர் (சிவன்) கோயில் (திருத்தொண்டீசுவரர்):

இங்குள்ள சிவன் கோயிலில் வீற்றிருக்கும் இறைவன் வெளிச்சேரி திருத்தொண்டீசுவரத்திலுள்ள திருக்கற்றளி மகாதேவர் என வழங்கப்

படுகிறுர். தொண்டீசுவரம் பிற்காலத்தில் தண்டீசுவரம் என்று மருவிவிட்டது.

இக் கோயிலில் காணப்படும் மதுரைகொண்ட இராசகேசரியான சுந்தரசோழனுடைய கல்வெட்டுகள் இரண்டும் விளக்கெரிப்பதற்கு வழங்கப்பட்ட நன்கொடைகள் பற்றியனவே. அவற்றுள் 7ஆம் ஆண்டுக் கல்வெட்டுச் சோழ நாட்டார் இருவர் திருத்தொண்டீசு வரத்தில் கணபதிக்கு என்று ஒரு சிற்றுலயம் நிறுவி, அப் பெருமா னுடைய பூசனைக்கும், திருத்தொண்டீசுவரமுடைய மகாதேவருக்கு விளக்கு எரிப்பதற்கும் வெளிச்சேரிச் சபையாரிடம் ஒரு நிலத்தை விலைக்கு வாங்கிக் கோயிலுக்கு மானியமாக விட்ட செய்தியைக் குறிக் கிறது. அவ்வூர் மகாசபையினர் அவ்வூர் பிரமஸ்தான மண்டபத்தே கூட்டம் குறைவறக் கூடிக் கோயில் திருஉண்ணுழிகை உடையாரான சிவப் பிராமணர்கள் இவ்வறச்செயல் சரிவர நடப்பதற்குப் பொறுப் பாளிகள் ஆகவேண்டும் எனவும், அவ்வூர்க் கணப் பெருமக்களும் அரசனும் அவ்வறங் கர்வலராக விளங்கவேண்டும் எனவும் முடிவு செய்தனர்.

சுந்தர சோழனுடைய 9ஆம் ஆண்டுக் கல்வெட்டு அவ்வூர்க் கணப் பெருமக்களுள் ஒருவர் கோயிலில் விளக்கெரிப்பதற்கு உடலாக 90 ஆடுகளை நன்கொடை வழங்கிய செய்தியைச் சுட்டுகிறது.

இவ்விரு கோயில்களும் 10ஆம் நூற்றுண்டில் தோன்றி விளங்கின என்பது வெளிப்படை.

ஆலம்பாக்கத்தைப் போலவே, இங்கும் தனிப்பட்ட முறையில் சப்தமாதர் கோயில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

## 7. மீஞ்சூர்

**வரதராசப் பெருமாள் கோயில் :**

செங்கற்பட்டு மாவட்டத்தில் பொன்னேரித் தாலுக்காவில் பொன்னேரியிலிருந்து திருவொற்றியூர் செல்லும் சாலையில் 12ஆம் கல்லில் (19·2 கி.மீ) மீஞ்சூர் உள்ளது. தற்போது காணப்படும் திருமால்கோயிலில் எழுந்தருளியிருக்கும் வரதராசப் பெருமாள் பழங் காலத்தில் சோழகுல சுந்தரவிண்ணகர ஆழ்வார் என்று வழங்கப் பட்டார். மதுராந்தகனுடைய 3ஆம் ஆண்டுக் கல்வெட்டில் இக் கோயில் அவ்வாண்டில் அழிவலக் கேசவப்பெருமானுக்குக் கேசவன் கருகைக்கோன் என்பவனுல் எடுப்பிக்கப்பட்ட செய்தி காணப்

படுகிறது. மதுராந்தகன் என்ற பெயர் சுந்தரசோழனுக்கும் உத்தம சோழனுக்கும் உரியன எனினும், இவ்வூரிலுள்ள இறைவன் பெயரில் சுந்தரன் என்ற பகுதியிருப்பதுகொண்டு இது சுந்தர சோழன் காலத்துக் கோயில் என்று கொள்வதே மிகவும் ஏற்புடையது எனக் கருதுகிறேன்.

முதல் இராசேந்திரனுடைய 4ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக் கோயிலில் திருவிழாக்கள் நடத்துவதற்கு விடப்பட்ட நிலக்கொடை பற்றியது. அக் கல்வெட்டிலிருந்து இவ் வூரில் கல்லாதேசுவரமுடையார் கோயில் என்ற சிவன் கோயிலும் அக் கர்லத்தில் விளங்கிவந்த செய்தி வெளியாகிறது.

விஷ்ணு கோயில் சுந்தர சோழன் காலத்தது ஆகலாம்.

இவ்வூரில் உள்ள விஷ்ணு கோயிலும் சிவன் கோயிலும் அடியோடு புதுப்பிக்கப்பட்டு விட்டதால் அவற்றில் பொதிந்திருந்த வரலாற்றுச் சின்னங்கள் அழிந்துவிட்டன.

# 14. இரண்டாம் ஆதித்தன்

## முகவுரை

இரண்டாம் ஆதித்தனைப்பற்றி லைடன் (பெரிய) பட்டயங்கள் கூறுவன பின்வருமாறு :

'சுந்தர சோழனுடைய புதல்வர் கரிகாலன் என்ற இரண்டாம் ஆதித்தனும், சூரியகுல முடிமணியாகிய இராசராசனுமாவர். சுந்தர சோழன் தேவலோகத்தை ஆளச் சென்றுவிட்ட பிறகு ஆதித்தன் இந் நிலவுலக ஆட்சியைச் செலுத்தத் தொடங்கினான். மனுகுல தீபமான இவ்விளைஞன் சிங்கக் குருளை மதத்தால் கதம் சிறந்து பொரும் யானையின் வலிமையைத் தொலைப்பதுபோல வீரபாண்டியனுடைய வலிமையை ஒடுக்கியவன்.

'இவ்வரசர் தலைவன் மேலுலகம் சென்றபின், கண்டராதித்தன் மகனும் வலிய படைவலி உடையவனும் இந்திரனை ஒத்த புகழ் வாய்ந் தவனுமான மதுராந்தகன் கடல் சூடிய உலகைக் காக்கத் தொடங்கினான்.'

லைடன் பட்டயத்தைப் பதிப்பித்தவர் அதன் 27ஆம் பாடலை மொழிபெயர்க்கும்போது—'சுவர்க்கலோக பரித்ராண' என்ற தொட ருக்குத் 'தெய்வங்கத' என்ற தொடர்போலப் பொருள்கொண்டு, சுந்தர சோழன் இறந்தபின் அவன் மகன் இரண்டாம் ஆதித்தன் ஆளத் தொடங்கினான் என்று மொழிபெயர்த்தெழுதியுள்ளார். இவ் வரலாற்றுக்குரிய கருவிகளை நன்கு நோக்கும்போது தன் மகன் இரண் டாம் ஆதித்தன் கொலை செய்யப்பட்டபின்னும் சுந்தர சோழன் உயிர் வாழ்ந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. அங்ஙனமிருப்பதால் 'சுவர்க்கலோக பரித்ராண' என்ற தொடருக்குத் 'தெய்வ உலக மெய்துதற்குரிய ஆன்மலாபம் பற்றிய செய்திகளில் ஈடுபட' என்று பொருள் கொண்டால் சுந்தர சோழன் ஆன்மலாபம் பற்றிய துற

வுள்ளத்தோடு வாழ நாட்டாட்சியை இரண்டாம் கரிகால ஆதித்தன் ஏற்று நடத்தினுன் என்று கூறலாம். இவனுடைய கல்வெட்டுகள் தஞ்சை, தென்னுர்க்காடு, வடவார்க்காடு மாவட்டங்களில் காணப்படு கின்றன. இவனுடைய உயர்ந்த ஆட்சியாண்டு 5 என்பதை நோக்க இவன் தன் தந்தையின் ஆட்சியிலேயே இளவரசனுக முடிசூட்டப்பட் டான் என்ற செய்தி வலியுறுகிறது.

தந்தையொடு சேர்ந்து ஆட்சி நடத்தத் தொடங்கித் தன் ஆட்சி யாண்டில் இரண்டாம் ஆதித்தன் சாசனங்களை அமைப்பித்த செயல் கண்டராதித்தன் மகனும், இவன் பெரியப்பனுமான மதுராந்தக னுக்குப் பொறுமையளிக்கவே, அவன் செய்த சதித் திட்டத்தால் இரண்டாம் ஆதித்தன் கொலை செய்யப்பட்டானேவென ஐயம் தோன்றுகிறது. இக் கொலைக் குற்றத்தில் ஈடுபடுத்தப்பட்டவர்கள் முதல் இராசராசன் முடிசூடிய பின் தண்டிக்கப்பட்ட செய்தி காட்டு மன்னுர்குடிக் கல்வெட்டால் உணரப்படுகிறது.

உள்நாட்டுக் குழப்பத்துக்கு இடம் தாராது பழுத்த உலகியலறி வோடு தன் பெரியப்பன் மதுராந்தகன் உத்தமசோழனை அரசனுக்கி அவன் இறந்தபின் அரியணையேறிய முதல் இராசராசன் காலத்தில் சோழ வம்சத்தின் புகழ் குன்றின்மேலிட்ட விளக்காக ஒளி வீசியது.

## 1. புன்செய் (புஞ்சை)

**நல்துணை ஈசுவரம் (திருநனிபள்ளி):**

தஞ்சை மாவட்டத்தில் மாயூரத்துக்கு 6 கல் (9·6 கி.மீ.) தொலை வில் உள்ள புன்செய் என்ற ஊர் பழங்காலத்தில் ஆக்கூர் நாட்டில் ஒரு பிரமதேயமாக விளங்கியது.

இங்குள்ள நல்துணை ஈசுவரம், கல்வெட்டுகளில் திருநனிபள்ளி உடையார் கோயில் என வழங்கப்பட்டது. அது பக்கத்து ஊராகிய தலைச்செங்காட்டுக்கிராமக் குழுவினர் (மூலப்பருஷை) மேற்பார்வை எல்லைக்குள் இருந்ததாக அறிகிறோம்.

இங்குள்ள கல்வெட்டுகளில் பழைமையானது பாண்டியன் முடித்தலைகொண்ட பரகேசரியான இரண்டாம் ஆதித்தனின் 4ஆம் ஆண்டைச் சார்ந்தது. இது மூலத்தானச் சுவரில் காணப்படாது சண்டேசுவரருடைய சுற்றுக் கோயிலில் காணப்படுவதால் இச் சண்டேசுவரர் கோயிலை அப்படியே வைத்துக்கொண்டு, மூலத் தானத்தைமட்டும் பிற்காலத்தில் புதுக்கினர் என்ருவது பிற்காலத்தில் கோயில் முழுவதும் புதுப்பிக்கப்படவே, மூலத்தானத்துக் கற்கள்

சண்டேசுவரர் ஆலய நிர்மாணத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டன என்றுவது கொள்ளவேண்டியவராக உள்ளோம். தற்போது மூலத் தானத்திலுள்ள கல்வெட்டுகளில் பழைமையானது முதல் இராச ராசனுடைய 22ஆம் ஆண்டைச் சேர்ந்தது. அது இராசராசன் பெயரால் அருண்மொழித்தேவன் என்ற அறச்சாலையை நடத்துவற்கு அரசன் பத்துவேலி நிலத்தை மானியமாக வழங்கினான் எனவும், அந் நிலத்திற்குரிய வரியை இக் கோயிலும் தலைச்செங்காட்டுச் சபையும் தலைக்குப் பாதியாக வழங்கவேண்டும் என்ற நிபந்தனை விதிக்கப் பட்டது எனவும் குறிப்பிடுகிறது. எங்ஙனமாயினும், இராசராசனுக்கு முற்பட்ட காலத்ததாகிய இக் கோயில் அவன் காலத்தில் புதுப்பிக்கப் பட்டதாக அறிகிறோம்.

இங்குள்ள பழைய கல்வெட்டுகளைக்கொண்டு இவ்வூரில் வேறி ரண்டு கோயில்களும் அக் காலத்தில் இருந்தனவாக அறிகிறோம். முதல் இராசேந்திரனுடைய கல்வெட்டொன்றில் இவ்வூரின் தென் பகுதியிலிருந்த பெரிய தளி மகாதேவர் கோயில் இடம் பெற்றுள்ளது. அது, இவ்வூர்ச் சபையினர் மும்முடிச்சோழ மண்டபத்தில் கூடித் தாம் கோயிலிலிருந்து பெற்ற 50 காசுகளுக்காக, கோயிலைச் சார்ந்த 2 வேலி நிலங்களுக்கு வரி செலுத்தவும், வைகாசி விழாச் செலவுகளை ஏற்றுக் கொள்ளவும் ஒத்துக்கொண்ட செய்தியை வெளியிடுகிறது.

இதே சபையினர் இக் கோயிலிலிருந்து கையெழுத்தோலையால் 100 கழஞ்சுப் பொன் கடன் வாங்கி, அதன் வட்டிக்காகக்கோயிலுக்குச் சொந்தமான இருவேலி நிலத்திற்கு வரி செலுத்துவதாக ஒத்துக் கொள்ள, இச்செய்தி கோயில் அறங்காவலர் ஆணைப்படி இக் கோயில் சுவர்களில் பொறிக்கப்பட்டது.

இங்குள்ள பரகேசரி வர்மன் இரண்டாம் இராசேந்திரனுடைய 3, 7ஆம் ஆண்டுக் கல்வெட்டுகளால், இவ்வூரில் திருவாலங்குலமுடைய மகாதேவர் கோயில் ஒன்றும் இருந்த செய்தி புலனாகிறது.

இவ்வூரைச் சேர்ந்த சிற்றூரான இராசராச நல்லூரில் பக்கத்தி லுள்ள திருக்கடவூர் காலகாலதேவரின் கோயிலுக்குச் சொந்தமாக இருந்த சில நிலங்களுக்கு இவ்வூர்ப் பொதுச் சபையினர் வரி வழங்கிய செய்தியும் கல்வெட்டொன்றால் வெளியாகிறது.

முதல் இராசேந்திரனுடைய 14ஆம் ஆண்டில் அவன் வட நாட்டுப் படையெடுப்பில் அடைந்த வெற்றிக்கு இறைவன் அருள் பாலித்ததன் நன்றியறிதலாகத் தலைச்செங்காட்டு ஊர்ச் சபையினர் இக் கோயிலிலுள்ள ரிஷபவாகனதேவர் சிலைக்குப் பூசனை, நிவேதனம்,

உற்சவம் முதலியவற்றை நிகழ்த்தும் செலவினங்களுக்காக இக் கோயில் நிலங்கள் சிலவற்றிற்குத் தாமே வரி செலுத்துவதாக ஒத்துக் கொள்ளவே, அவ் வரி செலுத்தவேண்டிய தொகை கோயில் செலவினங்களுக்குப் பயன்பட்டது.

தங்கள் உறவினர் இறந்துபோகவே, அவர்கள் சொத்துகளுக்குரிய மூல ஓலைகளை இழந்த அறுவர் 80 காசு பொன் செலுத்தி. இம் மூல ஓலைகளுக்குரிய படியோலை (certified copy)களைப் பெற்ற செய்தி வீரராசேந்திரதேவனுடைய 3ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றால் புலனாகிறது.

திருஞானசம்பந்த நல்லூரான தலைச்செங்காட்டிலுள்ள மூன்று விஷ்ணு கோயில்களுக்கு 10 வேலி நிலம் அர்ச்சனாபோகமாக வழங்கப் பட்டது. (முதல்) குலோத்துங்கனுடைய 12ஆம் ஆண்டில் அந் நிலம் திருநனிபள்ளிக் கோயிலில் நிறுவப்பட்ட உடைய பிள்ளையார் (சம்பந்தர்) கோயிலுக்கு மாற்றியமைக்கப்பட்டது.

விக்கிரமசோழனுடைய 16ஆம் ஆண்டில் அவ்வரசனுடைய மகளாரும் பெரும்பற்றப்புலியூர் (சிதம்பரம்) கோயிலதிகாரிகளும் வேண்டிக்கொண்டதன்பேரில், இறைவியின் பூசனைக்கும் பயன்பட இரண்டு தோட்டக்காரர் உதவியைக்கொண்டு கொடிக்கால் அமைப் பதற்கு ஏற்பாடு செய்யப்பட்ட செய்தி இக் கோயிலிலும் சிதம்பரக் கோயிலிலும் பொறிக்கப்பட்டது.

இரண்டாம் இராசாதிராசனுடைய இரண்டாம் ஆண்டில் சில கடைகளுக்கு வரி விதித்துத் திரட்டப்பட்ட தொகை, இக் கோயிலில் நிறுவப்பட்ட மூல புருஷ விநாயகப் பிள்ளையாரின் சிலைக்கு நிகழ்த்த வேண்டிய பூசனை நிவேதனங்களுக்காக வழங்கப்பட்டது.

இம் மன்னனுடைய 3ஆம் ஆண்டில் இக் கோயில் நிர்வாகிகள் அனுலோம ரதகார குலத்தவரான கொல்லர்கள், தட்டார்கள், தச்சர்கள், கொத்தர்கள் உள்ளிட்ட பலருக்கும் மானியங்கள் வழங்கினர்.

கோயில் நிலங்கள் சிலவற்றைத் தம்முடையன என்று நால்வர் பொய்யாக உரிமை கொண்டாடினர். அந் நிலங்கள் கோயிலுக்கு உரியனவே என்பதை மெய்ப்பிப்பதற்காக திரிசூலவேலைக்காரர் என்ற சிவனடியார் இனத்தைச் சேர்ந்த சிலர் நெருப்பில் விழுந்து தம் உயிரைத் தியாகம் செய்தனர். அதுகண்டு, திருச்செங்காட்டு ஊர்ச் சபையினர் பொய்யுரிமை பாராட்டிய நால்வரும் தம் நிலத்தைத்

திருப்பிக் கோயிலுக்கு வழங்குவதோடு உயிரைத் தியாகம் செய்த அச் சிவனடியார்களுக்கு உலோகப் படிவங்கள் அமைக்க 200 காசுகளும், அப் படிமங்களுக்குப் பூசனை நிகழ்த்த நில நன்கொடைகளும் வழங்குவதற்கு ஆணையிட்டு, அவ்வாணையை நிறைவேற்றினர். பாண்டிய மன்னர்களிடம், அரசனுக்காக உயிரைத் தியாகம் செய்யவும் ஒருப்பட்டிருந்த ஆபத்துதவிகள் என்ற ஏவலாளர்கள் இருந்தது போலவே, இக் கோயிலிலும் கோயில் சொத்துக்கு ஆபத்து வாராமல் பாதுகாத்து, ஆபத்து வரும் எனின் தம் உயிரைத் தியாகம் செய்தாவது சொத்துக்களைக் காக்க உதவிய திரிசூலவேலைக்காரர் இருந்தனர் என்பது உள்ளத்தில் கொள்ளத்தக்க அருஞ்செய்தியாகும்.

இங்குள்ள முக்கியமான கல்வெட்டுகளில் காலத்தால் மிகப் பிற்பட்டது கிருஷ்ணதேவராயருடையதாகும். அவர் கிருஷ்ணையாற்றங் கரையில் தங்கியிருந்தபோது சோழநாட்டிலமைந்த சில முக்கியமான சிவன் கோயில்களுக்கும் விஷ்ணு கோயில்களுக்கும் ஏறத்தாழ ஆயிரம் வராகன் பொன்னின் மதிப்புடைய வரிகளைத் தள்ளுபடி செய்த செயல் அக் கல்வெட்டால் புலனாகிறது.

இக் கோயில் கிழக்கு நோக்கிய சந்நிதியை உடையது. இதன் சதுரமான கருவறையின் பக்க அளவு வெளிப்புறத்தில் 24 அடி. உட்புறத்தில் 11 அடி 6 அங்குலம். அர்த்தமண்டபத்துக்கும் கருவறைக்கும் இடைப்பட்ட அந்தராளம் $2\frac{1}{2}$ அடி அகலமுடையது. அர்த்தமண்டபம் கிழக்கு மேற்கில் 19 அடியும் தெற்கு வடக்கில் $17\frac{1}{2}$ அடியும் பரவியுள்ளது. இதனை நடுவில் நான்கு தூண்களும் சுவரை ஒட்டி 4 அரைத்தூண்களும் தாங்கி நிற்கின்றன. இம் மண்டபத்தில் இரு துவாரபாலகர் சிலைகள் உள்ளன.

அர்த்தமண்டபத்தையும் முகமண்டபத்தையும் இணைக்கும் அந்தராளம் 16 அடி 10 அங்குலம் அளவுடையது. அதன் தென்புறமும் வடபுறமும் வாயில்கள் உள்ளன. அதனை உருண்டையான கும்பங்களை உடைய 4 தூண்கள் சுமந்து நிற்கின்றன.

அதனை அடுத்துக் காணப்படும் முக மண்டபம் 'மும்முடிச் சோழ மண்டபம்' எனவும், 'மும்முடிச் சோழன் பேரம்பலம்' எனவும் வழங்கப்படுகிறது. அது முதல் இராசராசனாலோ அவன் பெயராலோ எடுப்பிக்கப்பட்டதாகும். இது 35 அடி பக்க அளவுடைய சதுர வடிவினது. இதனைப் பதினாறு தூண்கள் தாங்கி நிற்கின்றன. இதன் வடபுறம் நடராசர் கோயிலையும் தென்புறம் வாயிற்படியையும் காணலாம்.

கருவறை, அர்த்தமண்டபம் என்ற இவற்றின் வெளிச் சுவர்களி லுள்ள தேவகோஷ்டங்களை ஒட்டி இரண்டு அரைத் தூண்களும், அவற்றின் மகர தோரணங்களைச் சுமந்த இரண்டு நீண்ட தூண்களும் உள்ளன.

தேவகோஷ்டங்களில் கணபதி. அகத்தியன், தட்சிணாமூர்த்தி என்ற சிலைகள் தென்புறமும், லிங்கோத்பவர் சிலை மேற்புறமும், பிரமன், துர்க்கை என்ற சிலைகள் வடபுறமும் உள்ளன.

தேவகோஷ்டங்களின் மேலுள்ள மகரதோரணங்களின் நடுவில் சிலைகள் உள்ளன. கணேசருக்குமேல் கலியாணசுந்தரரும், லிங்கோத் பவருக்குமேல் அர்த்தநாரியும், பிரமனுக்குமேல் காளியும், துர்க்கைக்கு மேல் ஊர்த்துவதாண்டவ மூர்த்தியும் மகரதோரணங்களின் நடுவில் காணப்படுகின்றனர்.

நடுவிலும் ஓரங்களிலும் கொடிக்கருக்குகள் செதுக்கப்பட்டுள்ள கூடுகளால் அணிசெய்யப்பட்டுள்ள கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையைக் காணலாம்.

இவற்றைத் தவிர 64 'சிற்றுருவச் சிலைகள்' அடித்தளத்தின் வெளிப்புறங்களில் இணைக்கப்பட்டுள்ளன. இத்தகைய சிற்ப அமைப் பைப் புள்ளமங்கை, குடந்தை, நாகேசுவரம், திருக்கண்டியூர் கோயில் களிலும் காணலாம்.

ஒரு காலத்தில் கருங்கல்லால் அமைக்கப்பட்ட கிரீவம், சிகரம், ஸ்தூபி என்பன இடைக்காலத்தில் செங்கல்லாலும் காரையாலும் புதுப்பிக்கப்பட்ட நிலையில் காணப்படுகின்றன. இப்பொழுது இக் கோயிலுக்குத் திருப்பணி செய்து வருகின்றனர். இக் கோயிலைக் காணச் சென்றபோது இதன் பழைய சிற்பங்களையும் அமைப்பையும் கெடுக்காத வகையில் திருப்பணி செய்யுமாறு இதன் அறங் காவலர் களுக்கு அறிவுறுத்தினோம்.

## 2. பெருங்குடி

**அகத்தீசுவரர் கோயில் :**

திருச்சி மாவட்டத்துப் பெருங்குடியிலுள்ள அகத்தீசுவரர் கோயில் பழைய கல்வெட்டுகளில் 'திருப்பெருமுடி பரமேசுவரர்' ஆலயம் என்று வழங்கப்பட்டது.

மூலத்தானத்தின் வடசுவரில் பாண்டியன் முடித்தலைகொண்ட பரகேசரிவர்மனான இரண்டாம் ஆதித்தனுடைய கல்வெட்டுக் காணப்

படுகிறது. அது புதுக்குடி செம்பியன் உறத்தூர் நாட்டுக் கோனுன மயிலன் திண்டனுடைய தேவியான காமம் பெருமான் என்பவளால் இக் கோயிலில் விளக்கெரிப்பதற்கு விடப்பட்ட நிலக்கொடை பற்றியது.

குடுமியாமலையிலுள்ள பரகேசரி வர்மனுடைய 32ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதற் பராந்தகன் காலத்தது ஆகலாம். அது அவந்திய கோவன் பல்லவரையனுன புதுக்குடியைச் சார்ந்த மயிலன் திண்டன் அக் கோயிலில் விளக்கெரிப்பதற்கு நன்கொடை வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. இப் பெருங்குடிக் கல்வெட்டில் காணப்படும் செம்பியன் உறத்தூர் நாட்டுக்கோன் அவந்திய கோவனுடைய மகனுகவோ நெருங்கிய உறவினனுகவோ இருக்கலாமெனத் தோன்று கிறது.

இராசகேசரிவர்மனுடைய 8ஆம் ஆண்டில் (சுந்தர சோழன்) வயலூர்வாசி ஒருவனுடைய மனைவியான மாஞ்சன் சேந்தி என்பாள் இக் கோயிலில் விளக்கெரிப்பதற்குச் சில ஆடுகளை நன்கொடை வழங்கினுள்.

சுந்தரசோழனுடைய 14ஆம் ஆண்டில் செம்பியன் உறத்தூர் நாட்டுக்கோன் ஆகிய மயிலைத்திண்டன் இக் கோயிலின் பலவகைச் செலவினங்களுக்காக மானியம் வழங்கினுன்.

இராசேந்திரதேவனுடைய 9ஆம் ஆண்டில் பெருங்குடியைச் சார்ந்த கைக்கோளன் ஆன திரியம்பகன் என்பவனிடம் இரண்டு காசுப் பொன் கொண்டு அவ்வூரைச் சார்ந்த இரண்டு சிவபிராம ணர்கள் வைகறையிலும் மாலையிலும் இக் கோயிலில் விளக்கெரிப்ப தற்கு ஒத்துக்கொண்டனர் என அறிகிறோம்.

இக் கோயில் சுந்தர சோழன், இரண்டாம் ஆதித்தன் ஆகிய இவர்கள் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட கலைச் சின்னமாகும்.



77. கணேசர்,
புஞ்சை



78. அகஸ்தியர்,
புஞ்சை



79. லிங்கோத்பவர், புஞ்சை



80. பிரமன், புஞ்சை



SCALE ¹⁄₇.

93. ஆதித்த சோழன் கல்வெட்டு



SCALE ¹⁄₅.

94. பராந்தக சோழன் கல்வெட்டு

## 15. உத்தம சோழ மதுராந்தகன்

முதற் பராந்தகன் மகனுன இராசகேசரி கண்டராதித்தன், தக்கோலப் போரில் இராசாதித்தன் இறந்த பிறகு அரியணே யேறினுன். அவன் கொள்ளிடத்தின் வடகரையில் தன் பெயரால் ஒரு பெரிய கிராமத்தை அமைத்துள்ளான் என அறிகிருேம். அவன் பாடிய திருவிசைப்பாக்கள் சைவத் திருமுறைகளில் ஒன்பதாம் திரு முறையில் இடம் பெற்றுள்ளன. அவன் சிறந்த கல்வியும் நிறைந்த பக்தியும் உடையவனுக விளங்கினுன். 'மேற்கெழுந்தருளின தேவர்' என்று அவன் குறிப்பிடுவது கொண்டு அவன் இவ்வுலகப் பற்றுகளேத் துறந்து, பட்டினி கிடந்து தவம் செய்து உயிர் நீத்தான் என்று கருத இடமுண்டு. அவனுடைய மகனே மதுராந்தகன் உத்தம சோழனுவான்.

பெரிய லேடன் பட்டயங்கள் இவனேப்பற்றி மிகச் சுருக்கமாகவே குறிப்பிடுகின்றன. பெரும் படை வலிமையும் இந்திரனே ஒத்த புகழும் உடைய அம் மதுராந்தகன் கடல் சூடிய உலகத்தைக் கலியின் தொல்லே நீக்கிக் காத்தான் என்பதே அவை குறிப்பிடும் செய்தி.

திருவாலங்காட்டுச் செப்பேடுகள் இவனேப்பற்றிச் சற்று விரிவாகக் குறிப்பிடுகின்றன.

மக்கள் யாவரும் கலியின் தொல்லேயைச் செகுத்து, இருளே நீக்கி ஆளுமாறு பன்முறை இடைவிடாது வற்புறுத்தியும் முதல் இராசராச னுன அருண்மொழித் தேவன் அரசாட்சியின் சாரத்தை உணர்ந்தவ னுதலின் நாட்டாட்சி பற்றிச் சற்றும் எண்ணங்கொள்ளாது, நாடாளும் வேட்கை கொண்ட தன் பெரியப்பன் மதுராந்தகனேயே அரசனுக்கினுன்.

மதுராந்தகன் அருண்மொழித் தேவனேத் திருமாலின் அவதாரம் என்றே கருதித் தான் ஆண்டுகொண் டிருந்த காலத்திலேயே இளவரச னுக்கினுன். தன் உள்ளத்தைச் சிவனடியில் செலுத்தித் தன் செல்

வத்தை அவன் வழிபாட்டிற்குச் செலவிட்டுத் தான் பெற்ற திறைப் பொருள்களால் அவனுக்கு ஆலயங்கள் எடுப்பித்து, மக்களுக்கு அவன் திருவிழாக்களை நன்முறையில் நிகழ்த்த வழிகாட்டித் தன் வெகுளியைப் பகைவர் பக்கலே திருப்பிக் கற்று வல்ல ஒழுக்கஞ்சான்ற அந்தணர் பலரையும் குறைவற வாழச் செய்தவாறே மதுராந்தகன் இவ்வுலக பாரத்தைத் தன் தோள்களில் தாங்கினான்.

மழவராயர் குலத்தவளும் கண்டராதித்தன் தேவியும், மதுராந்தகன் தாயுமான பராந்தகன் மாதேவடிகள் என்ற செம்பியன் மாதேவி இளமையிலேயே கைம்பெண் ஆனதால் தாபத நிலையில் ஏறத்தாழ 30 ஆண்டுகள் வாழ்ந்து, சிவனடி மறவாச் சிந்தையளாய்த் தன் ஆற்றலையும் செல்வத்தையும் புதுக் கோயில்கள் எழுப்புவதிலும் பழைய கோயில்களைப் புதுக்குவதிலும்,கோயில்களுக்குரிய நன்கொடைகளையும் மானியங்களையும் மிகுப்பதிலும் தன் வாழ்நாட்களைச் செலவிட்டாள். அவள் தன் பெயரால் (செம்பியன் மகாதேவி) கிராமம் ஒன்றை உண்டாக்கினாள். அவளுடைய கொடைகளில் காலத்தால் முற்பட்டது. காட்டுமன்னார்குடியிலுள்ள மதுராந்தகனுடைய 2ஆம் ஆண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பட்டிருக்கிறது. அவள் திருவக்கரைக் கோயில் கட்டிய செய்தி முதல் இராசராசனுடைய 16ஆம் ஆண்டுக் கல்வெட்டில் இடம் பெற்றுள்ளது. அவளுடைய ஈடுபாடும் பக்தியும் அரச குடும்பம் முழுவதும் பரவிவிடவே அவள் புதல்வன் மதுராந்தகனும், அவனுடைய தேவிமார் பலரும், அரசியல் அதிகாரிகள் பலரும் இறை திருப்பணிகளில் ஈடுபடுவாராயினர். முற்பட்ட சோழர்கள் காலத்து அரச குடும்பத்தைச் சார்ந்த பெண்களாகிய மலர்க்குவியல்களிடையே செம்பியன் மாதேவி தாமரையாகக் காட்சி வழங்குகிறாள்.

## 1. கோனேரிராசபுரம்

**உமாமகேசுவரர் கோயில் :**

கோனேரிராசபுரம் தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்திலிருந்து காரைக்கால் செல்லும் வழியில் 11 கல் (17·6 கி.மீ.) தொலைவில் உள்ள புத்தூரிலிருந்து கிழக்குப் புறமாகச் செல்லும் குறுக்குப் பாதையில் 4 கல் (6·4 கி.மீ.) தொலைவில் அமைந்திருக்கிறது. இங்குள்ள பழைய சிவன் கோயிலிலுள்ள பெருமான் அப்பர் தேவாரத்தில் திருநல்லம் என்ற ஊரிலுள்ள உமைக்கு நல்லவன் என்று குறிப்பிடப்படுகிறார். தற்போது இங்குக் காணப்படும் கோயில் மதுராந்தகனான உத்தம சோழன் ஆட்சியில் செம்பியன் மாதேவி தன் கணவனுடைய பெயரால் எடுப்பித்ததாகும்.

தலபுராணத்தில், திருமாலுடைய ஆணைப்படி இக் கோயில் பூமி தேவியால் கட்டப்பட்டதால் இதற்குப் பூமீசுவரம் என்று பெயர் வழங்கப்பட்ட செய்தி இடம் பெற்றுள்ளது. புரூரவஸ் என்ற மன்னன் இங்குள்ள பெருமானை வழிபட்டுத் தனக்கு வந்த குட்டநோய் தீர்ந்து, தன் நன்றியறிதலுக்கு அறிகுறியாக இப் பெருமானுடைய விமானத் தைப் பொன் வேய்ந்ததோடு, இக் கோயிலில் வைகாசி விசாகந் தோறும் திருவிழா நிகழ்த்த ஏற்பாடு செய்தான் என்ற வரலாறும் தலபுராணத்தில் இடம் பெற்றுள்ளது.

மூலத்தானத்தின் தென் சுவரில் லிங்கத்தை வழிபட்டுக்கொண் டிருக்கும் கண்டராதித்தன், அவன் பின் நிற்கும் செம்பியன் மாதேவி என்பார் சிலைகளின் கீழ்க் கல்வெட்டொன்று காணப்படுகிறது. அது பின்வருமாறு :

'ஸ்வஸ்தி ஸ்ரீ கண்டராதித்த தேவர் தேவியார் மாதேவடிகளார் ஸ்ரீ செம்பியன் மாதேவியார் தம்முடைய திருமகனுர் ஸ்ரீ மதுராந்தக தேவரான ஸ்ரீ உத்தம சோழன் திருராச்சியம் செய்தருளா நிற்கத் தம்முடையார் ஸ்ரீ கண்டராதித்த தேவர் திருநாமத்தால் திருநல்லம் உடையார்க்குத் திருக்கற்றளி எழுந்தருளுவித்து இத் திருக்கற்றளியி லேயே திருநல்லம் உடையாரைத் திருவடி தொழுகின்றுராக எழுந் தருளுவித்த ஸ்ரீ கண்டராதித்த தேவர் இவர்.'

இக் கோயிலில் உள்ள கல்வெட்டொன்று உத்தம சோழனுடைய 3ஆம் ஆண்டில் ஒரு பூந்தோட்டத்துக்கு நிலத்தை மானியமாக விட்ட செய்தியைக் குறிப்பிடுவதால், இக் கோயில் அவனுடைய 3ஆம் ஆண்டுக்கு முன்பே செம்பியன் மாதேவியாரால் கற்றளியாக்கப்பட் டிருக்கவேண்டும் என அறிகிறோம். 6ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக் கோயிலிலுள்ள 'ஆதித்தேசுவரம்' உடையாருக்கு ஒரு நந்தாவிளக்கு எரிப்பதற்கு நிலக்கொடை வழங்கிய செய்தியை வெளியிடுகிறது.

உத்தம சோழனின் 8ஆம் ஆண்டுக் கல்வெட்டு, செம்பியன் மாதேவி திருநல்லத்தில் இக் கற்றளி எடுப்பித்தாள் எனவும், அவள் உத்தம சோழனுடைய 3ஆம் ஆண்டில் திருநல்லம் சபையாரிடம் விலைக்கு வாங்கிய, ஆண்டிற்கு 224 கலம் நெல் வருமானம் தரும் 2 வேலி நிலத்தைக் கண்டராதித்தன் என்ற பூந்தோட்டத்தையும் ஏனைய நந்தனவனங்களையும் காப்பதற்கு நந்தவனப்புறமாக விடுத் தாள் எனவும் குறிப்பிடுகிறது.

உத்தம சோழன் தன் ஆட்சியின் 7ஆம் ஆண்டு 240ஆம் நாள் கடம்பூரின் வட பகுதியிலுள்ள பிச்சன் கோயில் அரண்மனையில்

முகாம் இட்டிருந்தபோது அரசியல் அதிகாரியான பரகேசரி மூவேந்த வேளான் அரசனுடைய தாயாரான செம்பியன் மாதேவியார் கோனேரிராசபுரத்துக் கோயில் திட்டங்களை விரிவாக்கவேண்டும் எனவும், அவ்வூரில் தன் கணவனுடைய ஆன்மலாபத்திற்காக 25 அந்தணர்களுக்கு நாடோறும் உணவிடுவதற்கு ஓர் அறச்சாலை நிறுவ வேண்டும் எனவும் கொண்டிருந்த எண்ணத்தை விண்ணப்பித்தாள்.

கோனேரிராசபுரத்துக் கோயிலுக்கு மானியமாக பூங்குடியில் 12 வேலி நிலமும் முசிட்டக்குடியில் 4 வேலி நிலமும் இருந்தன. அவற்றிலிருந்து முறையே 600 கலமும் 200 கலமும் ஆக 800 கல நெல் அரசனுக்குப் பஞ்சவாரமாக வரி கட்டப்பட்டு வந்தது. உத்தம சோழன் தன் தாயாரின் விருப்பத்தை நிவறவேற்ற அந்த 600 கல நெல்லையும் கோயிலார் தன் ஆட்சி 6ஆம் ஆண்டு முதல் தனக்கு வழங்கவேண்டா என உத்தரவிட்டான். சில நாட்களுக்குப் பின் இந்த உபரி வருமானமும் செலவுக்குப் போதவில்லை என்று அறிவிக்கப்படவே, வெண்ணுட்டு ஈழநலம் கிராமத்தில் 1590 கலம் ஆண்டு வருமானம் கொடுக்கும் 12 வேலி நிலத்தை இக் கோயிலுக்குத் தேவதானமாகவும் அறச்சாலைக்கு வழங்கப்படும் சாலாபோகமாகவும் வழங்கினான்.

தன் 8ஆம் ஆண்டு 143ஆம் நாள் உத்தம சோழன் காரைக்காட்டுப் பனையூரில் முகாமிட்டிருந்தபோது, திருநல்லத்திலிருந்து தனக்குப் பஞ்சவாரமாக வரவேண்டிய 39 கல நெல்லையும் 3 கழஞ்சுக்கு மேற்பட்ட பொன்னையும் தனக்கு வழங்கவேண்டா என்று உவந்து வழங்கிய ஆணைபற்றிக் கல்வெட்டொன்று குறிப்பிடுகிறது.

இறுதியாக உத்தமசோழன் திருநல்லத்திலுள்ள 70 வேலி நிலத்தில் 3½ வேலி நிலத்தை இறையிலியாக்கி அதனைத் திருநல்லம் இறைவனுக்குத் திருநாமத்துக் காணியாக வழங்கினான்.

பிறகு, அரசியல் அதிகாரி ஊர்ச் சபையாருடன் கலந்து, கோயில் நிலங்களின் வருமானத்தைக் கோயிலின் பலதிறப்பட்ட செலவுகளுக்கும் தனித்தனியே திட்டம் வகுத்தான்.

இறைவனுக்குரிய பலவகைப்பட்ட நிவேதனங்கள், சந்தனக் காப்பு, தூபம், தீபங்கள், செம்பியன் மாதேவியின் ஜன்ம நட்சத்திரமான கேட்டையன்று நிகழ்த்தப்படும் ஸ்ரீபலிச் சடங்குக்கு வேண்டிய செலவினங்கள், மார்கழித் திருவாதிரை, வைகாசி விசாகம் ஆகிய திருவிழாக்களின்போது அந்தணர்களுக்கும் ஏனைய அடியார்களுக்கும் உணவிடல், சந்தனம் அரைப்பாருக்கு ஊதியம், உலோகத் திருமேனிகள் வலம் வரும்போது விதானங்கள் தூக்குவாருக்கு ஊதியம்,

பூப்பறித்து வருவார், மாலை தொடுப்பார், கோயிற் பகுதியைப் பெருக்கி மெழுகி வைப்பார், இன்னிசை பாடுவார், முரசு அறைவார், காளமும் சங்கும் ஊதுவார், மெய்க்காவற்காரர்கள், திருப்பதியம் ஓது வார், கோயில் ஸ்ரீ காரியம் பார்க்கும் அந்தணர்கள், கோயிற் கணக் கர், கோயில்களுக்குச் சக்கரமிடுவார், திருப்பரிவட்டத்துக்குச் சாயம் தோய்ப்பார், இறைவனுடைய திருமஞ்சனத்துக்குக் காவிரியிலிருந்து நீர்கொணரும் அந்தணன், கோயில் கணக்குகளைத் தணிக்கை செய் பவர் (இவர் அரசனுடைய ஆணைபெற்ற அதிகாரி), கோயிலில் நல் ஓலை வாசிக்கும் பஞ்சாங்கக்காரர், தோட்டங்களைக் கவனிப்பவர், கோயிற் கொத்தர், தச்சர், கொல்லர் ஆகியவர்களின் ஊதியங்கள், கோயிலைப் பழுதுபார்க்கும் செலவு, மாதப் பிறப்பு, கிரகண தினம் ஆகியவற்றின் போது நிகழும் சிறப்புப் பூசனை, திருநந்தனவனத்தைச் சீர்செய்தல்' விதானங்கள், விருதுகள் முதலியவற்றைப் பழுதுபார்த்தல், ஜலபவித் திரம் என்ற புண்ணியவாசனம், ஆண்டுதோறும் திருப்பரிவட்டங் களைப் புதுப்பித்தல், திரிபுராந்தகர், ரிஷபதேவர், கணபதி ஆகிய உலோகத் திருமேனிகளுக்குப் பால், தயிர், வெண்ணெய், சர்க்கரை, தேன் என்பவற்றால் முழுக்காட்டும் செலவு; கோயில் வேலையாட்கள், திருப்பதியம் பாடுவார், குருக்கள், பாடகர், ஸ்ரீகாரியம் பார்ப்பார் முதலியவர்களுக்குரிய வீட்டு வசதி ஆகிய செலவினங்களுக்கு வழி வகுத்த திறத்தை இக் கல்வெட்டு விரிவாக விளக்குகிறது. இக் கல் வெட்டை நோக்க, அக் காலத்துக் கோயில் நாட்டின் பல இனத்து மக்களுக்கும் அன்றாட வாழ்க்கைக்கு உதவி, அவர்களுடைய இம்மை, மறுமை நலன்களை வளர்த்த மேதக்க திருப்பணி புலனாகிறதன்றோ?

செப்புப் பட்டயத்தில் காணப்படும் செய்திபோல இக் கல்வெட் டிலும் அரசனுடைய கருமம் அறைகின்ற அதிகாரி, ஆணத்தி, புறவுவரி, திருவாய்க்கேள்வி, வரிப்புத்தகம், முகவெட்டி முதலிய அரசியல் அதிகாரிகளின் மேலொப்பங்களைக் காணலாம்.

11ஆம் ஆண்டுக் கல்வெட்டு விளக்கிற்கு வழங்கப்பட்ட நன் கொடை பற்றியது. 14ஆம் ஆண்டில் திருநல்லம் கணபதி கோயில் பூசனைக்கு மானியம் விடப்பட்டது.

மூலத்தானத்தின் தென்புறத்தில், உடைய பிராட்டியார் செம் பியன் மாதேவியாரின் ஆணைப்படி இக் கோயிலைக் கற்றளியாக எடுப் பித்த சாத்தன் குணபட்டன் ஆகிய ஆலத்தூர் ஹரசந்திரசேகர னுடைய கற்சிலையைக் காணலாம். அவன் செய்த திருப்பணிகளைப் பாராட்டி, அவனுக்கு 'இராசகேசரி மூவேந்த வேளான்' என்ற விருதுப் பெயர் வழங்கப்பட்டது.

மூலத்தானத்தைச் சுற்றி மேற்புறம் மூடப்பட்டு அமைந்திருக்கும் தாழ்வாரமான திருநடை மாளிகையின் தூண் ஒன்றின் காணப்படும் கல்வெட்டால், இத் 'திருநடை மாளிகை' (முதல் இராசராசன் காலத்தவனுகக் கருதப்படும்) ஆதனூர் அருள்மொழித் தேவனுன வயனுட்டரையனுல் எடுப்பிக்கப்பட்ட செய்தி புலனுகிறது.

இக் கோயிலின் கோபுரம் வேங்கிபுரம் முதலிப் பிள்ளையின் நன் கொடையால் அமைக்கப்பட்டது.

இராசராசனுடைய 12ஆம் ஆண்டில் இராசராச தெரிஞ்ச கைக் கோளர் இனத்தைச் சார்ந்தவளும் அந்தப்புரத்துப் பணிப்பெண்ணு மான நக்கன் நல்லத்தடிகள் உமாமகேசுவரருடைய செப்புத் திரு மேனியும் சண்டேசுவரனுடைய செப்புத் திருமேனியும் இக் கோயி லுக்கு வழங்கினுள்.

15ஆம் ஆண்டில் இக் கோயிலிலுள்ள ஆதித்யேசுவரமுடைய மகாதேவர் (சூரியபகவான் ஸ்ரீ) சந்நிதியில் ஒரு விளக்கு எரிப்பதற்கு 7 காசு நன்கொடையாக வழங்கப்பட்டது.

முதல் இராசேந்திரனுடைய 5ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று அவனுடைய மூன்றும் ஆண்டில் குடந்தைக்கு அருகிலுள்ள பழை யாறையிலிருந்த அரண்மனையில் தங்கியிருந்த அவன் அத்தையான ஆழ்வார் பராந்தகன் குந்தவைப்பிராட்டியார் வழங்கிய நன்கொடை ஒன்றைக் குறிப்பிடுகிறது. இவள் செம்பியன் மாதேவிக்கு அடுத்த படியாகக் கோயிலமைத்தல், திருப்பணி செய்தல், கோயில்களுக்கு நன்கொடை வழங்குதல் முதலிய நற்செயல்களில் ஈடுபட்ட உத்தமி யாவாள்.

இராசேந்திரனுடைய 6ஆம் ஆண்டில் இக் கோயிலில் திருப் பதியம் விண்ணப்பம் செய்ய ஒரு நன்கொடை வழங்கப்பட்டது. ஏழாம் ஆண்டில் திருப்பள்ளி எழுச்சியின்போது முரசு அறையவும் காளம் ஒலிக்கவும் சங்கு ஊதவும் வாய்ப்பு அளிக்கப்பட்டது. 17ஆம் ஆண்டில் அரிந்தவன் மகாதேவி என்ற அரசி இக் கோயிலில் க்ஷேத்திர பாலரின் உலோகத் திருமேனியை நிறுவினுள்.

முதல் இராசாதிராசனுடைய 33, 35ஆம் ஆண்டுக் கல்வெட்டு களால் உத்தம சோழன் பெயரால் இவ்வூரில் உத்தம சோழ விண்ணகர் என்ற விஷ்ணு கோயில் இருந்த செய்தி உணரப்படுகிறது.

இராசாதிராசனுடைய 36ஆம் ஆண்டில் ஊர்ச்சபையினர் கால் வாய்க் கரையிலிருந்த இராசேந்திரன் என்ற மரத்தடியில் கூடினர்

என அறிகிறோம். பழைய சங்க காலத்திலும் ஊர்ப் பொதுவிடமான மன்றத்தில் ஒரு மரத்தினடியில் ஊர்ச் சபையினர் கூடிய செய்தி உணரப்படுகிறது. துக்க தினங்களில் ஊர்ச் சபையினர் ஊரிலுள்ள புளியமரத்தடியில் கூடினர்.

இரண்டாம் இராசேந்திரனுடைய 7ஆம் ஆண்டில் இக் கோயில் இரண்டாம் இராசேந்திரனுடைய மகளாகிய மதுராந்தகியின் பெயரால் மதுராந்தகி ஈசுவரமுடையார் கோயில் என்று வழங்கப்பட்டது. அவனுடைய 11ஆம் ஆண்டில் இக் கோயிலில் இறைவன், தேவாரத்தில் வழங்கப்பட்டதுபோலவே, உமைக்கு நல்லார் என்று வழங்கப் பட்டுள்ளார்.

முதற் குலோத்துங்கனுடைய 47ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் இவ்விறைவன் 'திருநல்லத்துக் கைலாசமுடைய மகாதேவர்' என்று குறிப்பிடப்படுகிறார்.

மூன்றாம் குலோத்துங்கனுடைய 16ஆம் ஆண்டில் திருநல்ல முடையார் கோயிலின் புகழாபரண மண்டபத்தின் தென்புறத்தில் அமைக்கப்பட்ட விநாயகப் பிள்ளையார் கோயிலுக்கு நிலம் ஒன்றும் 17ஆம் ஆண்டில் இக் கோயில் இறைவிக்கு அணிகலன்கள் பலவும் நன்கொடையாக வழங்கப்பட்டன.

மூன்றாம் இராசராசனுடைய 23ஆம் ஆண்டில் திருப்பள்ளித் தாமம் வழங்குவதற்கு நிலம் ஒன்று நன்கொடையாக வழங்கப் பட்டது.

இவற்றை நோக்க இக் கோனேரிராசபுரம் சுமார் 2½ நூற்றாண்டு அரசபரம்பரையினர், பொதுமக்கள் ஆகியவர்களுடைய தாராள மான நன்கொடைகளைப் பெற்றுப் பொலிவுற்ற செய்தி புலனாகிறது.

இக் கோயில் மேற்குப் பார்த்த சந்நிதியை உடையது. சதுரமான கருவறையின் பக்க அளவு 20 அடி. கருவறைக்கும் அர்த்தமண்ட பத்துக்கும் இடையில் அந்தராளம் உள்ளது. அர்த்தமண்டபம் 20 அடி முன்னேக்கி அமைந்துள்ளது.

அடித்தளத்தில் அதிக வேலைப்பாடில்லை. கிழக்குச் சுவரின் நடுவி லுள்ள தேவகோஷ்டத்தில் இரண்டு சிறிய அரைத்தூண்களும் இரண்டு நீண்ட அரைத்தூண்களும் உள்ளன. இதன் மேலமைந்த மகர தோரணத்தின் நடுவில் கஜலக்ஷ்மியின் சிலையைக் காணலாம்.

கருவறையின் வெளிச் சுவர்களில் உள்ள தேவகோஷ்டங்களில் தென்புறம் தட்சிணாமூர்த்தி, கிழக்குப்புறம் லிங்கோத்பவர், வடபுறம் பிரமன் ஆகிய சிலைகளைக் காணலாம். அர்த்தமண்டபத்தில் தென் புறத்தில் அகத்தியர், கணேசர், நடராசர் என்ற விக்கிரகங்களையும், வடபுறத்தில், பிட்சாடணமூர்த்தி, துர்க்கை, அர்த்தநாரி என்ற விக்கிரகங்களையும் காணலாம்.

பிற்காலத்ததாகிய சிகரம் எண்பட்டை வடிவுடையதாய் நடுவில் பிதுங்கங் கொண்டுள்ளது.

முகமண்டபம் 38 அடி 8 அங்குலம் நீளமும், 33 அடி 8 அங்குல அகலமும் உடையது. மூன்றும் குலோத்துங்கனுடைய கல்வெட்டுகளில் காணப்படும் புகழாபரண மண்டபம் இதுவே போலும்.

கருவறை, அந்தராளம், அர்த்தமண்டபம் இவற்றைச் சுற்றி யமைந்துள்ள மேற்புறம் மூடப்பட்ட தாழ்வாரம் இதில் இராசராசன் காலத்தில் கட்டப்பட்டுக் கல்வெட்டில் திருநடை மாளிகை என்று வழங்கப்படுகிறது.

இது முற்பட்ட சோழர்கள் காலக் கோயில்களில் நன்கு வளர்ச்சி யுற்ற கோயில்களில் ஒன்று. இது இன்றுவரை நன்முறையில் பாது காக்கப்பட்டு, இக் கோயிலில் கண்டராதித்தன், செம்பியன் மாதேவி, இக் கோயிலைக் கட்டிய சாத்தன் குணபட்டன் ஆகியவர்களுடைய சிலைகள் காணப்படும் செய்தி இதன் தனிச் சிறப்பாகும்.

## 2. ஆடுதுறை

**ஆபத்சகாயேசுவரர் கோயில் :**

ஆடுதுறை தஞ்சை மாவட்டத்தில் கல்லணை கும்பகோணம் சாலையில் கல்லணையிலிருந்து 27 கல் (43 கி.மீ.) தொலைவில் உள்ளது. காவிரிக்கரையி லமைந்த தென்குரங்காடு துறையைப்பற்றி அப்பர் சுவாமிகள் ஒரு பதிகம் பாடியுள்ளார். இங்குள்ள பெருமான் வாலி யாலும் சுக்கிரீவனாலும் வணங்கப்பட்டவர் என்று தல புராணம் கூறுகிறது.

கல்வெட்டுகளில் இவ்வூர் இறைவர் காவிரி (கொள்ளிடம்)யின் தென்கரையி லமைந்த திரைமூர்நாட்டுத் 'திருக்குரங்காடுதுறை மகா தேவர்' என்று குறிப்பிடப்படுகிறார்.

பரகேசரி உத்தமசோழனுடைய 16ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று இக் கோயில் செம்பியன் மாதேவியாரால் கற்றளியாக எடுப்பிக்கப்பட்ட செய்தியை வெளியிடுகிறது. அக் கல்வெட்டுச் செய்தி பின்வருவாறு :

'உடையபிராட்டியார் மகாதேவிகளாராகிய, மதுராந்தக உத்தம சோழனை மணிவயிறு வாய்த்தவரான, மேதக்க செம்பியன் மாதேவியார் திரைமூர்நாட்டுத் திருக்குரங்காடுதுறையில் கட்டுவித்த புனிதக் கற்றளியில் முற்பட்ட காலத்தில் வழங்கப்பட்ட நன்கொடைகள் பற்றிய கல்வெட்டுகள் யாவும் மீண்டும் செதுக்கப்பட்டன.'

இவ்வாறு மீண்டும் செதுக்கப்பட்ட கல்வெட்டுகளில் பாண்டிய மன்னருள் ஒருவனான மாறஞ்சடையனுடைய 8ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று காணப்படுகிறது. முற்பட்ட காலத்து மக்கள் வழங்கிய நன்கொடைபற்றிய செய்திகளைப் பாதுகாத்து மீண்டும் புதுக்கோயில் சுவர்களில் வெட்டுவிக்குமாறு ஆணையிட்ட செம்பியன் மாதேவியாரின் பெருந்தன்மையும் வரலாற்றுணர்ச்சியும் மிகவும் போற்றத்தக்கன. இவ்வம்மையாருக்குத் தென்னாட்டு வரலாற்றாராய்ச்சியில் ஈடுபாடுடையவர்கள் எழுமையும் கடப்பாடுடையர்.

இக் கோயில் ஏகதளக் கற்றளி. கிரீவமும் சிகரமும் உருண்டையானவை. சதுரமான கருவறையின் பக்க அளவு 16 அடி 6 அங்குலமாகும். 2 அடி அகலமுடைய அந்தராளம் 16 அடி நீண்டுள்ள அர்த்த மண்டபத்தைக் கருவறையோடு இணைக்கிறது. அர்த்தமண்டபத்தைக் கும்பங்களை உடைய இரண்டு தூண்கள் நடுவில் தாங்குகின்றன. அர்த்தமண்டபத்தின் முகப்பைத் துவாரபாலகர் இருவர் அணி செய்கின்றனர். அடித்தளத்தில் குமுதப் படையையும் அதன்கீழ்ப் பத்மப் படையையும் காணலாம். தேவகோஷ்டங்களில் கணேசர், நடராசர், அகத்தியர், தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், பிரமன், பிட்சாடணர், ஆலிங்கனமூர்த்தி, துர்க்கை ஆகிய சிலைகளைக் காண்கிறோம்.

இக் கோயில் செம்பியன் மாதேவியாரால் கற்றளியாக நிறுவப்பட்டதாகும்.

## 3. திருக்கோடிக்காவல்

தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த திருக்கோடிக்காவல் கும்பகோணம்-மாயவரம் சாலையில் 9 கல் (14·4 கி.மீ.) தூரத்திலுள்ள ஆடுதுறையில் இருந்து 3 கல் (4·8 கி.மீ.) தொலைவில் உள்ளது.

திருக்கோடிக்காவிலுள்ள சிவன் கோயில் மூன்றும் நந்திவர்மன் காலத்திலேயே சிறப்புற்றிருந்தது. இது உத்தம சோழனுடைய 11ஆம் ஆண்டில் செம்பியன் மாதேவியாரால் கற்றளியாகப் புதுப் பிக்கப்பட்டதாகும்.

கோயிலைப் புதுப்பிப்பதன்முன் அதில் உள்ள பழங் கல்வெட்டு களைப் படியெடுத்துக்கொண்டு, கோயில் புதுப்பிக்கப்பட்டபின் மீண்டும் அவற்றை உரிய இடங்கலில் பழைய கல்வெட்டின் 'படி' என்ற பெயரோடு (குறிப்போடு) வெட்டுவிக்கச் செம்பியன் மாதேவி ஏற்பாடு செய்தாள்.

இங்ஙனம் படியெடுக்கப்பட்ட கல்வெட்டுகளில் மிகவும் பழைமை யான கல்வெட்டு மூன்றும் நந்திப் போத்தரையனுடைய 19ஆம் ஆண்டைச் சார்ந்தது. அது சிறுமங்கை ஈசுவரமாகிய இக் கோயி லுக்கு விளக்கெரிப்பதற்கு நெல் நன்கொடையாக வழங்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

நிருபதுங்கவர்மனுடைய 22ஆம் ஆண்டில் அவன் தேவியாரான வீர மகாதேவியார் இரணியகர்ப்பமும் துலாபாரமும் செய்து அப் பொன்னைத் திருக்கோடிக்கா மகாதேவரின் பூசனைக்கும் விளக்கு எரிப் பதற்கும் வழங்கினாள்.

மாறஞ்சடையனான வரகுணமகாராசனுடைய கல்வெட்டுகள் 4 உள்ளன. 11ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று அம் மன்னனே இக் கோயிலிலுள்ள சரஸ்வதி ஆலயத்துக்கும் கணபதி ஆலயத்துக்கும் விளக்கு எரிப்பதற்குப் பொற்கொடை வழங்கிய செய்தியை வெளி யிடுகிறது. இக் கல்வெட்டுகள், பல்லவர் ஆட்சி, அவர்களுடைய நாட்டின் தென் பகுதியில் சீர்குலையத் தொடங்கவே, அவ் விடங்களை வலிமைமிக்க பாண்டியர்கள் கைப்பற்றத் தொடங்கிய காலத்தைச் சார்ந்தவை.

இப் பகுதி சில ஆண்டுகள் (பல்லவர் ஆட்சி சீர்குலையத் தொடங் கியபின்) முத்தரையர் வசம் இருந்த செய்தியை இக் கோயிலில் உள்ள இளங்கோ முத்தரையனுடைய 17ஆம் ஆண்டுக் கல்வெட்டு வலி யுறுத்துகிறது. இம் முத்தரையனுடைய கல்வெட்டுகள் நியமம், கோயிலடி முதலிய இடங்களிலும் காணப்படுகின்றன. இவனிட மிருந்துதான் விசயாலயன் தஞ்சையையும் வல்லத்தையும் கைப்பற்றி னான் போலும். இங்குள்ள அடைமொழியில்லாத 3 கல்வெட்டுகள் விசயாலயனுடையன வாகலாம். அவற்றுள் ஒன்று காலக்குடியிலுள்ள நிலம் ஒன்றை மகேந்திரவர்மச் சதுர்வேதிமங்கலச் சபையார் திருக் கோடிக்காக் கோயிலுக்கு விற்ற செய்திபற்றியதாகும்.

இராசகேசரிவர்மன் என்ற பெயரால் அடைமொழியில்லாத கல்வெட்டுகள் 6 உள்ளன. அவற்றை ஆதித்தன் காலத்தனவாகவோ, சுந்தர சோழன் காலத்தனவாகவோ கொள்ளவேண்டியவராயுள் ளோம். அவற்றுள் 13ஆம் ஆண்டில் திருக்கோடிக்கா என்னும் கண்ண மங்கலத்து ஊர்ச்சபையாரிடம் நிலம் வாங்கிக் கோயிலுக்கு மானிய மாக வழங்கப்பட்ட செய்தியைக் கூறும் கல்வெட்டு முதல் ஆதித்தன் காலத்தது ஆகலாம்.

இரண்டாம் நந்திவர்மனுடைய உதயேந்திரம் செப்பேடுகள் பல்லவர் அரசுக்குப் பொய்யாக உரிமை பாராட்டிய சித்திரமாயனைச் சார்ந்த மன்னர்கள், அந் நந்திவர்மனை நந்திபுரத்தில் முற்றுகையிடவே, அம் மன்னன் தன் படைத் தலைவனான உதயசந்திரனால் காப்பாற்றப் பட்டான் என்று குறிப்பிடுகின்றன. இந் நந்திபுரமே பிற்காலத்தில் சோழர்களுடைய இரண்டாம் தலைநகரான பழையாறை யாகும் என்ற செய்தி, இக் கோயிலிலுள்ள இராசகேசரி வர்மனின் 15ஆம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டொன்று 'குடந்தைக்கு அருகில் உள்ள பழையாறை நத்திபுரத்தை'ச் சார்ந்த வணிகன் ஒருவன் பூசனைக்காக வும் விளக்கெரிப்பதற்காகவும் நன்கொடை வழங்கினான் என்று கூறுவ தன் மூலம் புலனாகிறது.

முதற் பராந்தகனுடைய கல்வெட்டுகள் அவன் 3ஆம் ஆண்டு முதல் 38ஆம் ஆண்டுவரை உள்ளன. மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டு மாறன் சடையன் என்ற பாண்டிய மன்னன் வழங்கிய நிலக்கொடை பற்றியது. பராந்தகனுடைய சமகாலப் பாண்டிய மன்னன் இரண் டாம் இராச சிம்மனே யாவான். அவனே முற்பட்ட பாண்டிய மன்னரில் கடைசி அரசனாவான். இரண்டாம் இராசசிம்மன் என்பது மாறன் சடையனுடைய விருதுப்பெயர் போலும். பராந்தகனுடைய ஏனைய கல்வெட்டுகள் பூசனைக்கும் விளக்கெரிப்பதற்கும் வழங்கப்பட்ட நிலக்கொடை, பொற்கொடை, ஆட்டுக்கொடை பற்றியன.

இக் கோயிலிலுள்ள மூலக் கல்வெட்டுகளில் முதல் இராசராச னுடைய 11ஆம் ஆண்டுக் கல்வெட்டு முக்கியமானது. அது உடை யார் ஆதித்தபிடாரனால் இக் கோயிலில் சூரியதேவன் பிரதிட்டை செய்யப்பட்ட செய்தியை வெளியிடுகிறது.

இக் கோயில் உத்தமசோழன் ஆட்சியில் செம்பியன் மாதேவியால் புதுப்பிக்கப்பட்டதாகும்.

இவ்வொருதளக் கற்றளியின் சதுரமான கருவறையின் பக்க அளவு 17 அடி. அந்தராளம் 2 அடி அகலமுடையது. அது கருவறை

யோடு இணைக்கும் அர்த்தமண்டபத்தின் நீளம் 18¾ அடி. அர்த்த மண்டபத்தைக் கும்பங்களுடைய 4 உருண்டையுடைத் தூண்கள் தாங்கி நிற்கின்றன. சிகரம் உருண்டையானது.

தேவகோஷ்டங்களில் நடராசர், கணபதி, அகத்தியர், தட்சிணு மூர்த்தி, லிங்கோத்பவர், பிரமன், பிட்சாடணர், துர்க்கை, அர்த்தநாரீ சுவரர் என்ற சிலைகளைக் காணலாம்.

## 4. குத்தாலம்

**சோளீசுவரக் கோயில் :**

இது தஞ்சை மாவட்டத்தில் தஞ்சை - மயூரம் புகைவண்டி மார்க்கத்தில் மாயூரத்திலிருந்து 6 கல் (9·6 கி.மீ.) தொலைவில் குத்தாலம் புகைவண்டி நிலையமாக உள்ளது. இவ்வூரில் மூன்று கோயில்கள் உள்ளன. அவற்றுள் மிக முக்கியமானது 'உத்தர வேதீசுவரர்' கோயிலாகிய 'சொன்னவாறறிவார்' கோயிலாகும். தற்போது இது சோளீசுவரம் என்றே வழங்கப்படுகிறது.

'பார்வதி வைதிகமுறைப்படிச் சிவபெருமானை மணம் செய்து கொள்ள விரும்பித் தன் விருப்பத்தைப் பெருமானிடம் வெளியிட்டாள். அதற்குச் சிவபெருமான் இணங்கவே, பார்வதி காவிரிக் கரையில் வாழ்ந்த பரத முனிவருடைய புதல்வியாகப் பிறந்தாள். துருத்தியூரிலிலுள்ள லிங்கத்திலிருந்து சிவபெருமான் வெளிப்பட்டுப் பார்வதியோடு இன்மொழி பேசி உரையாடத் தொடங்கினுன். பரதமுனி சிவபெருமானை யடைந்து தம் மகளை அவருக்கு மணம் செய்து தருவதாகச் கூறிச் சிவபெருமான் அதற்கு இணங்கவே அத் தெய்வத் திருமணம் நிகழ்வுற்றது. சிவபெருமான் தாம் கூறியபடி நிகழ்த்தியதால் 'சொன்னவாறு அறிவார்' என்று வழங்கப்பட்டார் என்பது தலபுராணச் செய்தி. துருத்தி என்பது ஆற்றின் நடுவில் உள்ள திட்டு. குற்ருலம் அக் காலத்தில் காவிரியின் நடுவில் ஒரு சிறிய திட்டாக இருந்தது போலும். எனவே, இவ்வூர் 'திருத்துருத்தி' என்று வழங்கப்பட்டது. சிவபெருமான் பார்வதிக்குக் காட்சி வழங்கிய 'உத்தலம்' என்ற பெயர் பிற்காலத்தில் 'குற்ருலம்' என மருவிற்று. அப்பரும் சுந்தரரும் இத் திருத்துருத்திப் பெருமானைப் பற்றிப் பாடி யுள்ளனர். இவ்வூர்த் திருக்குளத்தில் மூழ்கிச் சுந்தரர் தமக்கு இடையே ஏற்பட்ட தொழுநோய் நீங்கப்பெற்ருர்.

முதல் இராசராசனுடைய 7ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக் கோயில் உத்தம சோழனுடைய தாயாரான செம்பியன் மாதேவியா ரால் கட்டப்பட்ட செய்தியை வெளியிடுகிறது. அவரே இக் கோயில்

பூசனை முதலிய செலவிற்கும் கோயிலில் சாமம், தைத்திரியம், சந்தோக சாமவேதம் என்பனவற்றை ஓதுவாருக்குரிய ஊதியத்திற்கும் மானியங்கள் வழங்கியுள்ளார்.

பிற்பட்ட கல்வெட்டுகளில் இக் கோயில் திருவாலந்தூர் நாட்டு வீங்கு நீர்த்துருத்தியிலுள்ள சொன்னவாராயும் மகாதேவர் கோயில் என்று வழங்கப்படுகிறது.

இங்குள்ள ஏனைய இரண்டு கோயில்களும் விக்கிரம சோழன், மூன்றும் குலோத்துங்கன் ஆகியவர் காலத்தன.

இக் கோயில் உத்தமசோழன் காலத்ததாகும்.

இக் கோயில் மேற்கு நோக்கிய சந்நிதியை உடையது. இருதளக் கற்றளியாகிய இக் கோயிலின் பழம்பகுதி செம்பியன் மகாதேவி காலத்தது. அது 21 அடி 8 அங்குலம் பக்க அளவுடைய சதுரமான கருவறையையும், 2 அடி 5 அங்குலம் அகலமுடைய அந்தராளத்தையும், 19 அடி 2 அங்குலம் நீண்டுள்ள அர்த்தமண்டபத்தையும், அர்த்த மண்டபத்தின் வாயிலின் இருபுறங்களிலும் இரு துவாரபாலகர் சிலைகளையும் உடையது.

கருவறையின் வெளிச் சுவர்களில் உள்ள மூன்று முக்கியமான தேவகோஷ்டங்களும் முன்னேக்கிப் பிதுங்கியுள்ளன. அவற்றில் பிரமன், லிங்கோத்பவர், தட்சிணாமூர்த்தி என்ற சிலைகளைக் காண லாம். அர்த்தமண்டபம் சுவர்களில் பல தேவகோஷ்டங்கள் உள்ளன. வடபுறச் சுவரிலுள்ள கோஷ்டங்களில் அர்த்தநாரீசுவரர், துர்க்கை பிட்சாடணர் என்ற சிலைகள் உள்ளன. தென்புறக் கோஷ்டங்களில் நடராசர், கணபதி, அகத்தியர் என்ற சிலைகளைக் காணலாம். ஒவ்வொரு தேவகோஷ்டத்தின் மேலும் மகர தோரணம் காணப்படுகிறது. இங்குள்ள சிற்பங்களில் ஒன்று கண்டராதித்ததேவர் லிங்கத்தை வழிபடும் நிலையில் அமைந்துள்ளது.

அரைத்தூண்கள் கும்பங்களும் பலகைகளும் உடையன. போதிகைகள் நடுவில் பட்டிகையும் இருபுறமும் சுருளணிகளும் பெற்றுள்ளன.

கொடுங்கையின் கீழ்ப் பூதகணவரிசையைக் காணலாம். இரண்டாம் தளத்தில் சாலைகளும் கூடங்களும் உள்ளன.

கிரீவமும் சிகரமும் உருண்டையானவை. இக் கோயில் சுவர்களில் சிற்றுருவச் சிலைகள் பல உள்ளன.

இக் கோயில் கோனேரிராசபுரத்துக் கோயிலை ஒத்த அமைப்புடையது.

## 5. திருநறையூர்

1. நாதன் கோயில் (விஷ்ணு)

2. சித்தநாதசுவாமி கோயில் (சிவன்)

தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணம்-திருவாரூர்ச் சாலையில் திருநறையூர் கும்பகோணத்திலிருந்து 6 கல் (9.6 கி.மீ.) தொலைவில் உள்ளது. இங்கு எண்ணற்ற மலர்கள் நறுமணம் வீசுமாறு நந்தன வனங்கள் மிக்கிருந்தமையால் இது திருநறையூர் என்று பெயர் பெற்றது போலும்.

### 1. நாதன் கோயில்

குடந்தையிலிருந்து 3 கல் (4.8 கி.மீ.) தொலைவில் நாதன் கோயில் என்ற விஷ்ணு கோயில் அமைந்துள்ளது. திருமங்கையாழ்வார் இக் கோயிலை நந்தி பணி செய்த நகர் நாதன் கோயில் என்று குறிப்பிடுகிறார். இத் தொடரைக் கொண்டு சிவகணத் தலைவரான திருநந்தி தேவரால் இக்கோயிலிலுள்ள திருமால் வழிபடப்பட்டவர் எனவும், இங்குள்ள திருமாலை வழிபட்டு நந்திதேவர் முத்திப் பெற்றார் எனவும் தலபுராணம் விளக்கம் தருவதாயிற்று. இக் கோயில் திருமங்கை யாழ்வாரின் சமகாலத்தவனான இரண்டாம் நந்திவர்மனால் வழிபடப் பட்டது எனவும், திருப்பணி செய்யப்பட்டது எனவும் அத் தொடருக்குப் பொருள் செய்வதே ஏற்றதாகும்.

### 2- சித்தநாதசுவாமி கோயில் :

இக் கோயில் கல்வெட்டுகளில் திருநறையூரிலுள்ள சித்தேசுவரம் உடையார் கோயில் என வழங்கப்படுகிறது. இச் சித்தேசுவரத்துப் பெருமானைக் குறித்து 7ஆம் நூற்றாண்டினரான ஞானசம்பந்தர் ஒரு பதிகம் பாடியுள்ளர். ஒன்பதாம் நூற்றாண்டினரான சுந்தரரும் இப் பெருமானுக்குப் பாமாலை சூட்டியுள்ளார். இவ்வூர்த் தலபுராணம் இக் கோயில் குபேரன், தேவர்கள், கந்தர்வர்கள், வேதங்கள், சூரியன், கோரசித்தர், நரநாராயணர், பிரமன் முதலியோரால் வழிபடப்பட்ட தாகும் என்று குறிப்பிடுகிறது.

இக் கோயிலிலுள்ள பழைய கல்வெட்டு உத்தமசோழன் காலத்தது. அதன் ஒரு பகுதி தற்போது கட்டடத்தினுள் மறைந்துள்ளது அது செம்பியன் மாதேவி சித்தேசுவரமுடைய மகா

தேவருக்கு 6 வேலி நிலத்தை நன்கொடையாக வழங்கி, அதன் வரவுக்குரிய செலவினங்களை விரிவாகக் குறிப்பிட்ட செய்தியைத் தெரிவிக்கிறது இதன் வரும்படியைக் கொண்டு பூசனைக்குரிய நிவேதனங்கள், காய்கறிகள், நெய், கொட்டைப்பாக்கு, வாழைப்பழம், சர்க்கரை, விளக்கெரிப்பதற்கு நெய், பால், தயிர், 12 மாதப் பிறப்புகளிலும் நிகழ்த்தவேண்டிய ஜலபவித்ர புண்ணியாகவாசனச் சடங்குகளுக்கு உரியவை, கோயில் குருக்களுக்கு ஊதியம், திருவிழாக் காலங்களில் உணவிடுவதற்குரிய செலவினங்கள் ஆகியவற்றிற்கு வழிவகுக்கப் பட்டுள்ளது.

இராசகேசரிவர்மன் முதல் இராசராசனுடைய 2ஆம் ஆண்டில் செம்பியன் மாதேவி இக் கோயிலுக்குச் சில வெள்ளிப் பாத்திரங்களும் தங்கப் பிடியுடைய சாமரையும் வழங்கினாள்.

இராசராசனுடைய 26ஆம் ஆண்டில் இக் கோயிலில் நிறுவப் பட்ட உலோகத் திருமேனியான கங்காள தேவருக்குப் பூசனை நிவேதனங்களுக்காக நன்கொடை வழங்கப்பட்டது.

முதல் இராசேந்திரனுடைய 3ஆம் ஆண்டில் கங்காள தேவருக்கு ஒரு விளக்கு வழங்கப்பட்டது.

இக் கோயில் முற்பட்ட சோழர்கள் காலத்ததாய் உத்தம சோழன் ஆட்சியில் புதுப்பிக்கப்பட்டது.

இவ்வொருதளக் கற்றளி எண்கோணமான சிகரம் உடையது. இது மேற்குப் பார்த்த சந்நிதியை உடையது.

அடிப்படைக் கோயில் 16 அடி 2 அங்குலம் பக்க அளவு உடைய சதுரமான கருவறையும், 2 அடி 7 அங்குலம் அகலமுடைய அந்தராளமும், அந்தராளத்தால் கருவறையோடு இணைக்கப்பட்ட 15 அடி முன்னேக்கி அமைந்துள்ள அர்த்தமண்டபமும், அர்த்த மண்டபத்தின் முகப்பில் இரண்டு துவார பாலகர் சிலையும் கொண்டு விளங்குகிறது. அர்த்தமண்டபத்தை ஒட்டிப் பிற்காலத்தில் முகமண்டபம் எடுப் பிக்கப்பட்டது.

அடித்தளத்தில் பத்மப்படை, குமுதப்படை, யாளிவரிமானம் இவற்றைக் காணலாம்.

அரைத் தூண்கள் 6 அடி உயரமுடையவை. அவை கும்பங்களை உடையன. போதிகைகள் சுருளணிகள் பெற்றுத் திகழ்கின்றன. கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையைக் காணலாம்.

அர்த்தமண்டபத்தில் வடசுவரில் துர்க்கை, அர்த்தநாரீசுவரர், பிட்சாடனர் என்ற சிலைகளும், கருவறைச் சுவர்களில் பிரமன், லிங் கோத்பவர், தட்சிணாமூர்த்தி சிலைகளும், அர்த்தமண்டபத்தின் தென் சுவரில் அகத்தியர், நடராசர், கணபதிச் சிலைகளும் தேவகோஷ் டங்களை அணி செய்கின்றன.

**நாச்சியார் கோயில் :**

சித்தேசுவரம் சிவன் கோயிலுக்கு 6 பர்லாங் (1 கி.மீ.) தொலைவில் நாச்சியார் கோயில் என்ற விண்ணகரம் உள்ளது. அக் கோயிலுள்ள பகுதி திருநறையூர், சித்தக்ஷேத்திரம், சுகந்தவனக்ஷேத்திரம், சுகந்த வனகிரி, ஸ்ரீநிவாசக்ஷேத்திரம் எனப் பலவாறு வழங்கப்படுகிறது. இவ்வூர் வைணவர்களுக்குரிய 12 முக்கியத் திருப்பதிகளில் ஒன்றாகும்.

தலபுராணம் 'சோழமன்னன் கோச்செங்கணான் இங்குள்ள பெருமானை வழிபட்டு அவன் அருளால் தெய்வீக வாள் ஒன்றினைப் பெற்றுச் சேர பாண்டியரோடு போரிடக் கிளம்பினான்' என்று குறிப் பிடுகிறது.

மேதேவ முனிவர் என்ற அடியாருடைய வேண்டுகோளுக்கு இணங்கித் திருமாலுடைய தேவியான திருமகள் ஒரு வன்னி மரத் தடியில் குழந்தை வடிவில் அவரையடைந்து 'வஞ்சுளவல்லி' என்ற பெயரோடு வளர்க்கப்பட்டு வருகையில், உரிய காலத்தில் பெருமாள் வைகுந்தத்திலிருந்து இறங்கி வந்து வஞ்சுளவல்லியை மணம் செய்து கொண்ட திருக்கோலத்தில் நறையூர் நின்ற நம்பியாகிய பெருமாள் இக் கோயிலில் வழிபடப்படுகிறார்.

விஷ்ணு இக் கோயிலில் பஞ்ச வியூக வடிவங்களில் காணப்படு கிறார். கருவறையின் கிழப்புறம் சங்கர்ஷணரையும், தென்புறம் பிரத்யும் நரையும், மேற்புறம் அநிருத்தரையும், வடபுறம் சாம்பர் என்னும் புருஷோத்தமரையும் நடுவில் வாசுதேவரையும் காணலாம். இக் கோயிலில் தேவிக்கென்று தனி ஆலயம் இல்லை ; ஸ்ரீநிவாச விமானம் என்று வழங்கப்படும் கருவறையிலேயே திருமகளும் காட்சி வழங்கு கிறாள். திருமாலும் அவருடைய தேவியான வஞ்சுளவல்லியும் இங்கு அவதாரம் செய்வதன் முன்னமேயே இவ்விடத்தில் ஸ்ரீபூவராக மூர்த்தியின் கோயில் இருந்தது என்று பக்தர்கள் நம்புகின்றனர்.

இங்கு வைகானச ஆகம முறை பின்பற்றப்பட்டு வந்தது. ஸ்ரீஇராமா நுசர் காலத்தின்பின் பாஞ்சராத்திர ஆகம முறை இங்குக் குடிபுகுந்து விட்டது.



82. நடராஜர்,
கோனேரிராஜபுரம்



83. அகஸ்தியர்,
கோனேரிராஜபுரம்



84. அர்த்தநாரி,
செம்பியன் மகாதேவி



85. துர்க்கை,
செம்பியன் மகாதேவி

திருமங்கை மன்னன் இக் கோயிலில் மிகவும் ஈடுபாடுடையவர். இத் திருநறையூர் மணிமாடத்தைப் பற்றிப் பத்துப் பதிகங்களும், பெரிய திருமடல், சிறிய திருமடல் என்ற இரு பிரபந்தங்களும் பாடியுள்ளார். அவர் 'எண்தோள் ஈசற்கு எழில் மாடம் எழுபது செய்து உலகமாண்ட திருக்குலத்து வளச் சோழனான கோச்செங் கண்ணன்' இக் கோயிலை வழிபட்ட செய்தியைத் தம் பெரிய திருமொழியில் சுட்டியுள்ளார்.

இங்குள்ள கல்வெட்டுகளில் பழைமையானது 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இக் கோயிலின் தற்பொழுதைய அமைப்பைக் கொண்டு இதன் பழைய வடிவத்தை உணர இயலவில்லை.

## 6. செம்பியன் மாதேவி

**கைலாசநாத சுவாமி கோயில்:**

தஞ்சை மாவட்டத்திலுள்ள செம்பியன் மாதேவி என்ற இவ் வூர் செம்பியன் மாதேவியால் அமைக்கப்பட்டதோர் ஊராகும். தன் பெயரால் அமைத்த இவ் வூரில் செம்பியன் மாதேவி புதிதாகக் கோயில் ஒன்றை எடுப்பித்து, அந்தணர் பலரைக் குடியேற்றினாள். இங்கு உத்தம சோழனுடைய 12ஆம் ஆண்டு முதல் 15ஆம் ஆண்டு முடிய உள்ள கல்வெட்டுகளைக் காணலாம். இச் செம்பியன் மாதேவி ஒப்புரவு மிக்க தன் புனித வாழ்க்கையால் அரண்மனையிலிருந்தார் அனைவராலும் பெருமதிப்புடன் பாராட்டப்பட்டாள்.

நான்கு வேதங்களிலும் வல்ல சதுர்வேதிபட்டர்கள் குடியேறிய இவ் வூரிலுள்ள அறநிலையங்களின் நிர்வாகமும் கோயிலின் அறக் கட்டளைகளும் ஏனைய நன்கொடைகளும் சாசனபட்ட சதுர்வேதி பட்டதானப் பெருமக்களின் நிர்வாகத்தில் இருந்துவந்தன. இங், ஙனமே ஸ்ரீநிவாசநல்லூரிலும் இருந்துவந்தது என அறிகிறோம்.

செம்பியன் மாதேவியும் அவள் மருமக்களும் இக் கோயிலில் விளக்கு எரிப்பதற்கும், பூசனை நிவேதனங்களுக்கும் மாதப் பிறப்புகள் தோறும் நிகழ்த்தும் திருமஞ்சனத்திற்கும் நன்கொடைகள் வழங்கியதோடு, இறைவனுக்குப் பொன்னாலாகிய நெற்றிப்பட்டம், தங்கப் பிடியுடைய சாமரை முதலியவைகளும் வழங்கினர். செம்பியன் மாதேவியின் ஜன்ம நட்சத்திரமான சித்திரை மாதக் கேட்டை நாளைக் கொண்டாட ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

முதல் இராசராசனுடைய 3ஆம் ஆண்டுக் கல்வெட்டு, செம்பியன் மாதேவி இக் கோயிலுக்கு வழங்கிய 190 கழஞ்சு எடையுடைய

பொற்குடம், 90 கழஞ்சு எடையுடைய இரண்டு நெற்றிப்பட்டங்கள், 96 கழஞ்சு எடையுடைய 26 பொற்பூக்கள் ஆகியவற்றைக் குறிப்பிடு கிறது.

முதல் இராசேந்திரனுடைய 8ஆம் ஆண்டில் இங்குள்ள செப்புத் திருமேனியாகிய ரிஷபவாகன தேவருக்கும், செம்பியன் மாதேவியின் படிவத்திற்கும் ஏனைய தெய்வத் திருமேனிகளுக்கும் ஒன்றுகூட விடாமல் பூசனை, நிவேதனம் செய்வதற்குரிய வழி வகுக்கப்பட்டது.

முதல் இராசேந்திரனுடைய மற்றொரு கல்வெட்டு இக் கோயிலிலுள்ள செம்பியன் மாதேவி பெரிய மண்டபத்தைச் சுட்டுவதோடு, இவ் வூரின் மேற்புறச் சிற்றூரான மோகனூரில் 'அகத்தீசுவரம் உடைய மகாதேவர் கோயில்' என்ற ஒரு கோயில் இருந்த செய்தியையும் சுட்டுகிறது.

மூன்றாம் இராசராசன் காலத்துக் (கி.பி. 1233) கல்வெட்டு ஒன்று, இவ் வூர்ச் சபையார் கிராமக் காரியக் கடமையில், காரியம் (நிலவரி சம்பந்தமானவை) பற்றிய தங்கள் கூட்டங்களை இரவில் நடத்துவதால் கோயில் மண்டபத்தில் வழக்கமாக விளக்கெரிப்பதற்குத் தேவைப்படும் அளவைவிட அதிக அளவில் எண்ணெயைச் செலவிடவேண்டியிருந்ததால், தங்கள் கூட்டங்களைப் பகலிலேயே நடத்திக்கொள்வதாகவும், ஒருமுறை கிராமக் குழு உறுப்பினராகப் பணியாற்றியவரை அவர்கள் மக்களிடையே தங்கள் செல்வாக்கைப் பெருக்கிக் கொள்ளவும், தவறான செயல்களில் ஈடுபடவும் வாய்ப்பு அளிக்காத வகையில் மீண்டும் ஐந்தாண்டுகள் கழியும்வரை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கக்கூடாது என்று முடிவு செய்வதாகவும் ஏற்பாடுசெய்த செயல்களைக் குறிப்பிடுகிறது.

இவ் வூர் செம்பியன் மாதேவியின் பெருமைக்குரிய சின்னமாகும்.

இவ் வூரிலுள்ள இருதளக் கற்றளி உருண்டையான கிரீவமும் சிகரமும் உடையது. தற்போதுள்ள ஸ்தூபி பிற்காலத்தில் நிறுவப்பட்டதாகும்.

சதுரமான கருவறை 19 அடி 4 அங்குலம் பக்க அளவு உடையது. 1½ அடி அகலமுடைய அந்தராளம் இக் கருவறையை 16 அடி முன்னோக்கி நீண்டுள்ள அர்த்தமண்டபத்தோடு இணைக்கிறது. அர்த்த மண்டபத்தைக் கும்பங்களும் சுருளணிகள் கொண்ட போதிகைகளும் உடைய நான்கு உருண்டைத் தூண்கள் தாங்கி நிற்கின்றன. அர்த்த மண்டபத்தின் முகப்பில் இரண்டு துவாரபாலகர் சிலைகள் உள்ளன.

அரைத் தூண்களில் தாமரை வடிவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அவை பலகைகளும், சுருளணிகள் கொண்ட போதிகைகளும் கொண்டவை கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையையும் மேலே யாளி வரிமானத்தையும் காணலாம்.

அர்த்தமண்டபத்தின் தென் சுவரில் அகத்தியர், நடராசர், கணபதி ஆகிய சிலைகளும், வட சுவரில் அர்த்தநாரீசுவரர், துர்க்கை, பிட்சாடனர் சிலைகளும், கருவறையின் சுவர்களில் தட்சிணாமூர்த்தி, விஷ்ணு, பிரமன் ஆகிய சிலைகளும் தேவகோஷ்டங்களின் நடுவே காணப்படுகின்றன.

இக் கோயிலில் பிராமி, வைஷ்ணவி, குமாரி என்ற சிலைகள் காணப்படுவதுகொண்டு அக் காலத்தில் இக் கோயிலின் மூலத்தானத்தைச் சுற்றிச் சுற்றுக் கோயில்களும் இருந்திருக்கலாம் என்று கருதவும் இடம் உண்டு.

## 7. கருத்தட்டாங்குடி (கரந்தை)

**வசிட்டேசுவரர் கோயில் :**

தஞ்சை மாவட்டத்தில் கரந்தை தஞ்சையிலிருந்து 2 கல் (3·2 கி.மீ.) தொலைவில் தஞ்சையை அடுத்து அமைந்துள்ளது. கல்வெட்டுகளில் இவ் வூர்ப் பெயர் ‘கருந்திட்டைக் குடி’ அல்லது ‘கருவிட்டைக் குடி’ என்றே காணப்படுகிறது. தஞ்சாவூர்க் கூற்றத்தில் உள்ள இக் கருவிட்டைக் குடி சம்பந்தர் தேவாரத்தில் இடம் பெற்றுள்ளதால் இக் கோயில் 7ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்பது தேற்றம்.

இங்குள்ள பரகேசரி வர்மனுடைய 3 கல்வெட்டுகளும் உத்தம சோழன் காலத்தனவாகலாம். அவற்றுள் 10ஆம் ஆண்டுக் கல்வெட்டு மதுராந்தகன் கண்டராதித்தன் என்பான் வழங்கிய தீபதானம் பற்றியது. இவனே மதுராந்தகன் மகனாய், அவன் ஆட்சியிலும் பின் முதல் இராசராசன் ஆட்சியிலும் கோயில் செய்திகள் பற்றி விசாரணை நிகழ்த்திய அரசியல் அதிகாரியாவான்.

மற்றொரு கல்வெட்டுப் பட்டி நாட்டுப் பழம்பட்டினத்தைச் சார்ந்த வெள்ளாத்தி அருநீலிமாலைப் பிராட்டி அர்த்தமண்டபத்தின் இருமருங்கும் துவாரபாலகர் சிலைகளை நிறுவிய செய்தியைக் குறிப்பிடுவதுகொண்டு இக் கோயில் உத்தம சோழன் காலத்தில் முடிவுற்றது என்று முடிவு செய்யலாம்.

சதுரமான கருவறை 18 அடி பக்க அளவுடையது. கருவறையின் வெளிச் சுவர்களின் நடுவில் அமைக்கப்பட்ட தேவகோஷ்டங்கள் முன்னேக்கிப் பிதுங்கி இரு குட்டையான அரைத்தூண்களையும் இரு உயரமான அரைத்தூண்களையும் கொண்டு விளங்குகின்றன.

கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையையும் மேலே யாளி வரிமானத்தையும் காண்கிறோம்.

இவ்வொருதளக் கற்றளியின் உருண்டையான கிரீவமும் சிகரமும் பிற்காலத்தனவாகத் தோற்றமளிக்கின்றன. 1½ அடி அகலமுள்ள அந்தராளம் கருவறையையும் 16 அடி நீளமுடைய அர்த்தமண்டபத்தையும் இணைக்கிறது. இம் மண்டபத்தை உருண்டையான கும்பங்களை உடைய நான்கு தூண்கள் தாங்கி நிற்கின்றன. இம் மண்டபத்தின் முகப்பில் இரண்டு துவாரபாலகர் சிலைகளைக் காணலாம்.

தேவகோஷ்டச் சிலைகளில் சில பிற்காலத்தில் வெளிச் சுவர்களைக் குடைந்து அவ்வவ் விடங்களில் பொருத்தப்பட்டவை. திருப்புறம்பியம் கோயிலைப்போல இக் கோயிலும் முற்பட்ட காலத்ததாயினும் சுவர்களைக் குடைந்து தேவகோஷ்டச் சிலைகள் வைக்கப்பட்டுள்ளன. செம்பியன் மாதேவி காலத்து இக் கலைப் பாணியை முற்பட்ட காலக் கோயிலுக்கு ஏற்றியதால் இச் சுவர்களிலுள்ள அருமையான கல்வெட்டுகள் பல சிதைக்கப்பட்டு விட்டன.

முற்பட்ட காலத்தில் அர்த்தமண்டபச் சுவர்களில் பக்கத்துக்கு ஒன்ருக இரு தேவகோஷ்டங்களும் கருவறைச் சுவர்கள் மூன்றிலும் மூன்று தேவகோஷ்டங்களும் ஆகிய ஐந்து தேவகோஷ்டங்களையே காணலாம். செம்பியன் மாதேவி காலத்திலேயே தேவகோஷ்ட எண்ணிக்கை மிகுக்கப்பட்டது.

இக் கோயிலில் தென் சுவரின் கிழக்கு மூலையிலிருந்து மூன்று சுவர்களிலும் காணப்படும் தேவகோஷ்டச் சிலைகள் பின் வருமாறு:

சம்பந்தர், நடராசர், அப்பர், ரிஷிபத்தினிகள் புடைசூழ்ந்து காணப்படும் பிட்சாடனர், கணேசர், தட்சிணமூர்த்தி, அகத்தியர், அர்த்தநாரீசுவரர், பிரமன் விஷ்ணுவோடு கூடிய லிங்கோத்பவர், கங்காவிசர்சன மூர்த்தி, கலியாணசுந்தரர், பிரமன், வீணதர தட்சிணமூர்த்தி, யமன், லிங்கம், மார்க்கண்டேயன் இவர்களைக் கொண்ட காலாரிமூர்த்தி, பிக்ஷாடன மூர்த்தி, துர்க்கை, சுப்பிரமணியர் ஆகிய சிலைகளை இன்றும் இக் கோயிலில் காண்கிறோம்.

## 8. ஆனுங்கூர்

அகஸ்தீசுவரர் கோயில் :

ஆனுங்கூர் தஞ்சைமாவட்டத்து மயூரம் வட்டத்தைச் சார்ந்த சிற்றூராகும். இங்கு திரு அகஸ்தீசுவரம் என்ற பழங்கோயிலுள்ளது.

அரசனுடைய பெயரோ ஆட்சியாண்டோ காணப்பெறாத கல்வெட்டொன்று இக் கோயில் உத்தம சோழனுடைய தாயாரான செம்பியன் மாதேவியாரால் கற்றளியாக எடுப்பிக்கப்பட்டது என்று குறிப்பிடுவதோடு, இக் கோயிலுக்கு வழங்கப்பட்ட தேவதான நிலங்கள் பற்றிய பட்டியலையும் வெளியிடுகிறது.

கோநேரின்மைகொண்டான் என்ற விருதுப் பெயர் மட்டும் காணப்படும் ஒரு மன்னனுடைய கல்வெட்டில் இக் கோயில் திருக்கற்றளி மகாதேவர் கோயில் என்று வழங்கப்படுகிறது.

அடைமொழி எதுவும் இல்லாத பரகேசரி வர்மனுடைய கல்வெட்டொன்று இக் கோயிலுக்கு வழங்கப்பட்ட தீபதானம் பற்றியது இக் கல்வெட்டு உத்தம சோழனுடையதாகலாம்.

இக் கோயிலுக்கு நன்கொடைகள் பல முதல் இராசராசன் காலத்திலும் விக்கிரம சோழன் காலத்திலும் வழங்கப்பட்டன.

இக் கோயில் உத்தம சோழனுடைய 10ஆம் ஆண்டிற்கு முன் செம்பியன் மாதேவியால் எடுப்பிக்கப்பட்ட கற்றளியாகலாம்.

## 9. கண்டராதித்தம்

சொக்கநாதர் கோயில் :

திருச்சி மாவட்டத்தில் திருமழபாடிக்கு மூன்று கல் தொலைவில் (4·8 கி.மீ.) கொள்ளிடத்தின் வடகரையில் கண்டராதித்தம் அமைந்துள்ளது.

இது கண்டராதித்தன் பெயரால் அமைக்கப்பட்ட பேரூராகத் திகழ்ந்தது. இதன் அருகில் ' கண்டராதித்தம் பேரேரி' உள்ளது.

இங்குள்ள பிற்பட்ட காலத்ததாகிய சொக்கநாதர் கோயில் சுவர்களில் உத்தம சோழன் காலத்தன என்று கருதத்தக்க 13, 14ஆம் ஆண்டுகளைச் சார்ந்த இரு கல்வெட்டுகள் உள்ளன.

14ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஏனம் பேர்க் கூற்றத்துத் தென்கரை கொள்ளிக்கூறும்பூரைச் சார்ந்த செம்பருளன் உத்தமநீதி என்னும் உத்தம சோழ மூவேந்தர் வேளான் கொள்ளிடத்தின் வடகரை பிரமதேயமான கண்டராதித்த சதுர்வேதிமங்கலத்தில் சிவலோகநாத மகாதேவருக்கு ஒரு கற்றளி எடுப்பித்து, அதற்கு மானியங்கள் வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. அக் கோயிலே தற்போது சொக்கநாதர் கோயில் எனப்படுவதாகும்.

திரிபுவன வீரதேவனுன மூன்றும் குலோத்துங்கனுடைய 37ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று இங்குள்ள விஷ்ணு கோயிலில் காணப் படுகிறது. அது வாதாபி நாயகர், வாதாபி விநாயகப் பிள்ளையார் என்ற விக்கிரகங்களுக்குப் பூசனை நிவேதனங்களுக்கும், விளக்கு எரிப்பதற்கும் வழி வகுத்த செய்தியை வெளியிடுகிறது. அக் கல் வெட்டை நோக்கத் தற்போது காணப்படும் விஷ்ணு கோயிலும் ஒரு காலத்தில் சிவன் கோயிலாக இருந்து, பிற்காலத்தில் விஷ்ணு கோயி லாக மாற்றப்பட்டுவிட்டது போலும் என்று கருத இடம் இருக் கிறது.

## 10. விருத்தாசலம்

**விருத்தகிரீசுவரர் :**

தமிழ் நாட்டின் நடுவிலுள்ள நாடாகிய நடுநாட்டிலுள்ள 22 சிவத் தலங்களுள் விருத்தாசலமும் ஒன்ருகும். சோழ நாட்டின் வட எல்லையான வடவெள்ளாற்றின் உபநதியான மணிமுத்தாற்றின் கரையில் இவ் வூர் அமைந்துள்ளது. சிவபெருமான் இவ் வூரில் மலை வடிவாகவே வீற்றிருக்கிருர் என்பது ஐதிகம். விபிசித் என்ற மாமுனிவர் இவ் வூரில் சிவபெருமானுக்குக் கோயிலெடுப்பித்துப் பூசனை செய்து வீடுபெற்ருர் என்று தலபுராணம் கூறும். அவருடைய சிலை இக் கோயிலின் தல விருட்சமான வன்னி மரத்தடியில் நிறுவப்பட் டுள்ளது. ஏழாம் நூற்ருண்டினரான சம்பந்தர் இப் பெருமானைப் பற்றிப் பாடியுள்ளார். சுந்தரர் இவ் வூர்ப் பெருமானை வாழ்த்தி அவர் அருளால் பெற்ற பொன்னை இம் மணிமுத்தாற்றிலிட்டுத் திருவாரூர் திருக்குளமான கமலாலயத்திலிருந்து மீண்டும் எடுத்துக்கொண்ட அற் புதச் செய்தி சேக்கிழாருடைய பெரியபுராணத்தில் விரிவர்கக் கூறப் பட்டுள்ளது. கல்வெட்டுகளில் விருத்தர்சலம் நெற்குப்பை எனவும் இங்குள்ள இறைவனுடைய பெயர் திருமுதுகுன்றமுடையார் எனவும் வழங்கப்படுகின்றன.

இங்குள்ள பழைய சிவன் கோர்யில் உத்தம சோழனுடைய 12ஆம் ஆண்டையொட்டிச் செம்பியன் மாதேவியாரால் கற்றளியாக எடுப்

பிக்கப்பட்டது. அவன் ஸ்ரீ கோயிலும் திருச்சுற்றுலேயும் சுற்றுக் கோயில்களும் எடுப்பித்து, $199\frac{3}{4}$ கழஞ்சு எடையுடைய 5 செப்புப் பாண்டங்களும், $1\frac{1}{2}$ கழஞ்சு எடையுடைய இரண்டு பொற்பூக்களும், கூத்தப் பெருமானுக்கு 1 கழஞ்சு எடையுடைய நெற்றிப்பட்டமும் உமாபட்டாரிகைக்கு $\frac{1}{2}$ கழஞ்சு எடையுடைய தாலியும், இரண்டு தளிம்பமும், கலப்பற்ற தங்கத்தாலாகிய ஒரு புடவையும், ஒரு பொற் பலகையும், 'பஞ்சசரி' என்ற மோதிரமும், ஒரு பொற்பூவும் வழங்கிய செய்தி இங்குள்ள கல்வெட்டொன்றிலிருந்து புலனுகிறது.

முதல் இராசராசனுடைய 3ஆம் ஆண்டில் நெற்குப்பை வாசிகள் உத்தம சோழன் காலத்தில் தாம் தேவதானமாகப்பெற்ற நிலத்தை ஒருவனிடம் ஒப்படைத்து, அவனைக்கொண்டு உத்தராயணம், தட்சிணு யனம், ஏனைய மாதப் பிறப்புகள் ஆகிய புனித தினங்களில் இறைவ னுடைய திருமஞ்சனத்திற்குரிய சந்தனச் சாந்து, வாசனைத் திரவி யங்கள் முதலியவற்றிற்கு வழி வகுத்தனர்.

முதல் இராசராசனுடைய 15ஆம் ஆண்டில் செம்பியன் மாதேவி 9 கழஞ்சுக்குமேல் எடையுடைய ஒரு விலையுயர்ந்த முடியினை இப் பெரு மானுக்கு வழங்கினுள். அதன் அடிப்புற உறையின் வெள்ளி எடை $206\frac{1}{2}$ கழஞ்சு. அதில் 3 மாணிக்கங்களும், 36 வயிரங்களும், 1998 உருண்டை முத்துகளும் பதிக்கப்பட்டிருந்தன என அறிகிறோம்.

பிற்காலத்தில் இக் கோயிலில் மூன்று பெரிய பிராகாரங்கள் மதிற் சுவர்களோடு அமைக்கப்பட்டன. இரண்டாம் பிராகாரத்தின் வாயிலில் எடுப்பிக்கப்பட்டுள்ள எழுநிலைக் கோபுரமே இக் கோயிலி லுள்ள கோபுரங்களில் பழைமையானது. வெளி மதிலின் நாற்புறங் களிலும் நடுவில் நான்கு கோபுரங்களைக் காண்கிறோம்.

இக் கோயிலின் மூலத்தானம், அர்த்தமண்டபம், ஸ்நபன மண்ட பம் என்பன செம்பியன் மாதேவியின் காலத்தனவாம்.

இதன் சதுரமான கருவறை 19 அடி பக்க அளவுடையது. இக் கருவறையையும் 10 அடி முன்னேக்கி நீண்டுள்ள அர்த்தமண்டபத் தையும் $2\frac{1}{2}$ அடி அகலமுடைய அந்தராளம் இணைக்கிறது. அடுத்துக் காணப்படும் முகமண்டபத்தின் இருபுறங்களிலும் வாயிற் படிகள் உள்ளன. இதுவே செம்பியன் மாதேவி காலத்து ஸ்நபன மண்டபம் போலும்; முகமண்டபத்தோடு இணைந்த மகாமண்டபம் பிற்காலத்த தாகும்.

அதிஷ்டானம் 5 அடி உயரமுடையது. அதில் பத்மம், குமுதம், கண்டம் என்ற வரிசையான அமைப்புகள் உள்ளன. கருவறையின்

முப்புறச் சுவர்களிலும் மகர தோரணங்களை உடையனவாய் முன்னேக்கிப் பிதுக்கங்கொண்டு காணப்படும் தேவகோஷ்டங்களில் தென்புறம் தட்சிணுமூர்த்தி, மேற்புறம் லிங்கோத்பவர், வடபுறம் பிரமன் ஆகிய சிலைகளைக் காணலாம்.

அரைத்தூண்கள் 16 பட்டைகள் உடையனவாய் உருண்டையான கும்பங்களும் சுருளணிகள் கொண்ட போதிகைகளும் பெற்று விளங்குகின்றன.

அர்த்தமண்டபத்தின் வெளிச் சுவரில் தென்புறம் கணபதியும், வடபுறம் கங்காதரரும், அர்த்தநாரியும் காட்சியளிக்கின்றனர்.

திருக்கண்டியூர், புள்ளமங்கை, புன்செய் என்ற ஊர்க் கோயில்களைப் போலவே, இக் கோயிலிலும் சிற்றுருவச் சிலைகளின் அழகிய வரிசையைக் காணலாம்.

கொடுங்கை நடுவில் கந்தர்வர்களையும் ஓரங்களில் வட்டங்களையும் கொண்ட கூடுகளால் அணிசெய்யப்பட்டுள்ளது. கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையைக் காண்கிறேம்.

அர்த்தமண்டபம் கும்பங்களை உடைய நான்கு தூண்களைக் கொண்டுள்ளது. அம் மண்டபத்தின் முகப்பில் துவாரபாலகர் சிலைகளைக் காண்கிறேம்.

இரண்டாம் தளத்தின்மேல் கிரீவமும் உருண்டையான சிகரமும் பிற்காலத்ததாகிய ஸ்தூபியும் காணப்படுகின்றன.

## 11. திருவெண்ணெய் நல்லூர்

**கிருபாபுரீசுவரர் கோயில் :**

தென்னுர்க்காடு மாவட்டத்திலுள்ள திருவெண்ணெய் நல்லூர் கிராமம் என்ற ஊரிலிருந்து 3 கல் (4·8 கி.மீ.) தொலைவிலும் திருநாம நல்லூரிலிருந்து 6 கல் (9·6 கி.மீ.) தொலைவிலும் உள்ளது. இங்குள்ள சிவபெருமான் முதியவர் வேடத்தில் வந்து, திருநாவலூர் சுந்தரர் சடங்கவி சிவாச்சாரியாருடைய மகளை மணம் செய்துகொள்ளாதபடி செய்து, தடுத்தாட்கொண்ட செய்த சேக்கிழாருடைய பெரிய புராணத்தில் விரிவாக இடம் பெற்றுள்ளது.

இங்குள்ள கல்வெட்டுகளில் பழைமையானது பரகேசரிவர்மனை உத்தம சோழனுடைய 10ஆம் ஆண்டைச் சார்ந்ததாகும். அது

பெருமூர் பராயிதன் உத்தம சோழ மாராயன் திருவெண்ணெய் நல்லூர் ஊர்ச்சபையாரிடம் ஒரு நிலத்தை விலைக்கு வாங்கி அதனை இவ் வூர்ப் பெருமானுக்கு நன்கொடையாக வழங்கிய செய்தியை வெளியிடுகிறது.

இக் கோயிலில் வெளிச் சுவர்களிலுள்ள தேவகோஷ்டங்களில் தென்புறம் பிட்சாடணர், தட்சிணாமூர்த்தி சிலைகளும், மேற்புறம் லிங்கோத்பவர் சிலையும், வடபுறம் பிரமன், துர்க்கை சிலைகளும் காணப்படுகின்றன.

இக் கோயில் உத்தம சோழன் காலத்தில் கற்றளியாகக் கட்டப் பட்டது ஆகலாம்.

## 12. திருவிடந்தை

வராகர் கோயில் :

செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள திருவிடந்தையில் வராகர் கோயில் என்ற பழைய விஷ்ணு கோயில் உள்ளது. கல்வெட்டுகளில் இவ் வூர் ஆமூர்க் கோட்டத்துப் படுவூர் நாட்டுத் திருவிடவெந்தை என்று வழங்கப்படுகிறது. இக் கோயில் நிர்வாகம் இவ் வூர்ச் சபையார், ஊரார் என்று வழங்கப்பட்ட இருவகைக் குழுவினரிடம் இருந்தது.

உத்தம சோழனுடையதாகக் கருதப்படும் பரகேசரி வர்ம னுடைய 6ஆம் ஆண்டில் இவ் வூரிலுள்ள இறைவனாகிய மணவாளப் பெருமாளுக்கு விளக்கு எரிப்பதற்காக 30 கழஞ்சுப் பொன் நன்கொடை வழங்கிய செய்தியை இக் கோயில் கல்வெட்டொன்று விளம்புகிறது.

இங்கு வீரபாண்டியன் முடித்தலை கொண்ட பரகேசரி வர்மனாகிய பார்த்திவேந்திர வர்மனுடைய 3 கல்வெட்டுகள் உள்ளன, 8ஆம் ஆண்டுக் கல்வெட்டு, திருவிடந்தையிலுள்ள வராகசுவாமி கோயிலில் சகோதரர் இருவர் மணவாளப் பெருமாளுடைய விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்வித்து, அவ் வூர்ச் சபையாரிடமும் ஊராரிடமும் 15 கழஞ்சுப் பொன்னை ஒப்படைக்க, அதற்குக் கிடைக்கும் ஆண்டு வட்டி யாகிய 50 காடி நெல்லைக்கொண்டு அப் பெருமானுடைய பூசனைக்கு அவர்கள் வழி வகுத்த செய்தியை வெளியிடுகிறது.

பார்த்திவேந்திர வர்மனுடைய கல்வெட்டுகள் அவனுடைய 13ஆம் ஆண்டு வரை செங்கற்பட்டு, வடவார்க்காடு, தென்னார்க்காடு மாவட்டங்களில் காணப்படுவது கொண்டு அவன் தொண்டை

மண்டலத்தில் இராசப் பிரதிநிதியாக ஆண்ட அரசகுல இளவரசன் என்று எச். கிருஷ்ண சாஸ்திரியார் கூறுவது உளங்கொளத் தக்கது. அவனுக்குப் பின் ஆதித்த கரிகாலன் தொண்டைமண்டல இராசப் பிரதிநிதியாக வந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. இம் மன்னனைப் பற்றி வேறொன்றும் புலனாகவில்லை.

சுந்தர சோழன் காலத்தில் முதன்முதல் தொண்டைமண்டலத் தில் அரசப் பிரதிநிதியாக அலுவல்புரிந்த இவ் விளவரசன், வீர பாண்டியனோடு நிகழ்த்தப்பட்ட போரில் பெரும் பங்கு கொண்டு தன் வீரத்தை வெளிப்படுத்திய ஆதித்த கரிகாலனைப்போல இளவரசனாக ஆக்கப்பட்டு ஏறத்தாழ 5 ஆண்டுகள் அப் பதவியில் இருந்து உத்தம சோழன் காலத்தில் நிகழ்த்தப்பட்ட சதியில் தானும் தன் இளம்பிராயத்தில் உயிரிழந்தவனாதல் கூடும்.

# 16. முதல் இராசராசன்

## மேல்பாடி (மேற்பாடி)

1. சோமநாதர் கோயில்
2. அரிஞ்சிகை ஈசுவரம்

சித்தூர் மாவட்டத்திலுள்ள மேல்பாடி சித்தூருக்குத் தென் மேற்கில் 16 கல் (25·6 கி.மீ.) தொலைவிலும், திருவல்லத்திற்கு 6 கல் (9·6 கி.மீ.) வடக்கிலும், நிவா நதியின் மேற்குக் கரையில் அமைந்துள்ளது. அது சோழ நாட்டின் வடபகுதியில் எல்லைப்புறத்தில் முக்கியமான தானத்தில் அமைந்திருக்கிறது. அதனைச் சுற்றியுள்ள பகுதிகளை வாணர்களும், கங்கர்களும், வைதும்பர்களும் ஆண்டனர். அவர்கள் நன்றியறிதலோடு படைபலங் கொண்டு உதவியதனால்தான் சோழ நாட்டின் வடவெல்லை எதிரிகளின் தாக்குதல்களி லிருந்து தப்பி இருக்கும் வாய்ப்பு ஏற்பட்டது.

இவ்வூர் சோழ நாட்டிலிருந்து இரட்டர் நாட்டிற்குச் செல்லும் பெருவழியில் அமைந்திருந்தது. மேலைக் கங்கமன்னனான இரண்டாம் நரசிம்ம வர்மனுடைய நன்கொடை பற்றியமைந்த செப்பேட்டில், மேல்பாடியிலிருந்து மைசூர் செல்லும் பெருவழி ஒரு கிராமத்திற்கு எல்லையாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

மூன்றும் கிஷ்ணனுடைய கர்ஹாடு செப்பேடுகள் பின்வரும் செய்தியைக் குறிப்பிடுகின்றன:

'என்னுடைய மேதக்க வெற்றிதருந்தானை மேல்பாடியில் படை வீடமைத்துத் தங்கியபோது, சோழ நாட்டின் வடபகுதியை என்னைச் சார்ந்தவர் நுகருமாறு அங்கிருக்கும் பிரபுக்களைத் தொலைத்து அப் பகுதியைக் கைக்கொள்ளத் தொடங்கினேம். காலப்பிரியர், கங்கமார்த் தாண்டர், கிஷ்ணேசுவரர் முதலியவர்களுக்குக் கோயில் எடுப்பித்

தோம்...சக ஆண்டு 889-ல் (கி.பி. 958) கான்ஹம் என்ற கிராமத்தை சைவ சித்தாந்தங்களில் வல்ல கங்கணசிவா என்ற துறவிக்கு நன் கொடையாக வழங்கினேன்.'

## 1 சோமநாதேசுவரர் கோயில்

இங்குள்ள பழைய சிவன் கோயில் தற்போது சோமநாதேசுவரர் கோயில் என்று வழங்கப்பட்டு வருகிறது. அது கல்வெட்டுகளில் சோளேந்திர சிங்க ஈசுவரமுடைய மகாதேவர்' கோயில் என்று குறிப் பிடப்பட்டுள்ளது. முதல் இராசராசனுடைய 14ஆம் ஆண்டில் அரசியல் அதிகாரி ஒருவன் ஒரு நந்தா விளக்கெரிப்பதற்காக இக் கோயிலுக்கு 15 கழஞ்சுப் பொன் நன்கொடை வழங்கினான். ஆனால் அதே ஆண்டிலுள்ள மற்றொரு கல்வெட்டில் அரசனுடைய பெயர் கோநேரின்மை கொண்டான் என்று வழங்குவதோடு மேல்பாடியாகிய வீரநாராயணபுரம், இராசசிரயபுரம் என்று பெயர் மாற்றப்பட்டது என்றும், அவ் வூரில் அவன் எடுப்பித்த கோனேந்திரசிம்மேசுவரர் கோயில் மகாதேவருக்கு நிவந்தங்கள் வழங்கப்பட்டன என்றும் அறிகிறோம். கோநேரின்மை கொண்டான் இராசாசிரயன் என்பன முதல் இராசராசனுடைய விருதுப் பெயர்களே. இவற்றை நோக்க முதற் பராந்தகன் காலத்தில் மேல்பாடி சோழர்கள் கைவசம் வந்து விட்டது என்பதும், அதற்கு முதற் பராந்தகன் விருதுப் பெயரால் வீரநாராயணபுரம் என்ற பெயர் வழங்கப்பட்டது என்பதும், அவ் வூரில் இராசராசன் ஒரு கற்றளி எடுப்பித்தான் என்பதும் உறுதியாகின்றன.

### அரிஞ்சிகை ஈசுவரம்:

இராசராசன் தன் 29ஆம் ஆண்டிற்குச் சில காலத்திற்கு முன் அரிஞ்சிகை ஈசுவரம் என்ற கோயிலை எடுப்பித்தான். சோளேந்திர சிம்மேசுவரம் அரிஞ்சிகையீசுவரத்தின் வடவெல்லையாகக் கூறப்பட் டுள்ளது. இவ் வரிஞ்சிகையீசுவரம் அர்ஞ்சிகை என்ற பெயருடைய முதல் இராசராசனுடைய பாட்டனுடைய எலும்புகள் புதைக்கப் பட்ட இடத்தில் எடுப்பிக்கப்பட்ட பள்ளிப் படைக் கோயிலாகும். இச் செய்தியைத் தெரிவிக்கும் கல்வெட்டுப் பகுதி பின் வருமாறு :

'ஸ்ரீ கோராஜராஜகேசரி வர்மரான ஸ்ரீராஜராஜதேவர்க்கு யாண்டு 29ஆவது ஜயங்கொண்ட சோழமண்டலத்துப் பெரும் பாணப்பாடி நீவா நாட்டு மேற்பாடியான இராசாச்ரயபுரத்து ஆனை மேல்துஞ்சின தேவர்க்குப் பள்ளிப்படையாக உடையார் ஸ்ரீராஜராஜ தேவர் எடுப்பித்தருளின திருவரிஞ்சீசுவரத்து மகாதேவர்க்கு.'

முதல் இராசராசன் பாட்டனுன அரிஞ்சிகை என்ற அரிஞ்சயன் கூர்த்தமதியுடையவன், திருமகள் கேள்வன், பகைவர்க்குக் கூற்றுவன், செல்வப் பெருமைக்கேற்பக் குணநலனும் செயல் தூய்மையும் உடையன் என்று புகழப்படுகிறுன். இவன் ஆற்றூர் ஆன மேல்பாடிக் கருகில் போர் ஒன்றில் உயிர்கொடுத்துப் புகழ்கொண்டான்போலும். தன் மூதாதையின் நினைவுக்குறியாக இவ் வூரில் முதல் இராசராசன் இப் பள்ளிப் படைக் கோயிலெடுத்தது பாராட்டுதற்குரிய நற்செயலாகும்.[1]

1. சோனேந்திர சிங்காசுவரம்:

இஃது இருதளக் கற்றளி. சதுரமான இதன் கருவறையின் பக்க அளவு 19 அடி 4 அங்குலம்; அர்த்தமண்டபம் 13 அடி முன்னேக்கி நீண்டுள்ளது. கருவறையின் வெளிச் சுவரிலுள்ள மூன்று தேவகோஷ்டங்கள் ஒவ்வொன்றும் இவ் விரு அரைத்தூண்களால் தாங்கப்படுகின்றன. அடித்தளத்தில் அதிக வேலைப்பாடில்லை. பூதகண வரிசையைக்கூட இங்குக் காண இயலவில்லை.

இரண்டாம் தளத்தில் செவ்வக வடிவமான வண்டிக்கூடுபோன்ற மேற்பரப்பை உடைய சாலைகள் நடுவிலும், சதுரமாக உள் பிதுங்கிய சிகரங்களை உடைய கூடங்கள் இரண்டு ஓரங்களிலும் உள்ளன. கிரீவமும், சிகரமும், ஸ்துபியும் உருண்டையானவை. கிரீவத்திலுள்ள தேவகோஷ்டங்களின்மேல் சிங்கத் தலைகளைக் காணலாம்; கிரீவத்திலுள்ள கோஷ்டங்களில் தெற்கில் தட்சிணமூர்த்தி சிலையும், மேற்கில் விஷ்ணு சிலையும், வடக்கில் பிரமன் சிலையும் உள்ளன.

## 2. அரிஞ்சிகையீசுவரம் (சோளீசுவரம்)

சதுரமான கருவறை 13 அடி 8 அங்குலம் பக்க அளவுடையது. அர்த்தமண்டபம் 6 அடி 2 அங்குலம் முன்னேக்கி உள்ளது. அடித்தளத்தில் அதிக வேலைப்பாடுகள் இல்லை. அரைத்தூண்களின் கீழ்ச் சிற்றுருவச் சிலைகளைக் காணலாம்.

கருவறையின் வெளிச் சுவர்களில் மூன்று தேவகோஷ்டங்களும், அர்த்த மண்டபத்தின் வெளிச் சுவர்களில் இரண்டு தேவகோஷ்டங்களும் உள்ளன. அர்த்தமண்டபத்தின் தென்புற கோஷ்டத்தில் இருக்கவேண்டிய கணபதி சிலையைக் காணேம். கருவறையின் தென்புறம் தட்சிணமூர்த்தி சிலையும், மேற்குப்புறம் விஷ்ணு சிலையும், வடபுறம் பிரமன் சிலையும், அர்த்தமண்டபத்தின் வடசுவரில் துர்க்கையின்

[1] See K. A. N. Sastri - 'The Cholas-2nd Edition' p. 153 (Arrur, a place that connot be definitely identified).

சிலையும் காணப்படுகின்றன. ஒவ்வொரு கோஷ்டத்துக்கும் இரண்டு மகர தோரணங்கள் உள்ளன. அவற்றின் நடுவில் அழகிய சிலைகளின் வரிசையைக் காணலாம். தெற்குத் தோரணத்திலுள்ள இலிங்கத்தை அடியவர் வழிபடும் சிலையும், பிட்சாடணர் சிலையும் கண்கவர் வனப்பினவாம்.

கருங்கற்களாலாகிய கிரீவம், சிகரம், ஸ்தூபி ஆகிய யாவும் உருண்டை வடிவானவை. கிரீவத்திலுள்ள கோஷ்டங்களில் கிழக்கில் இந்திரன் சிலையும், தெற்கில் வீணாதர தட்சிணாமூர்த்தி சிலையும், வடக்கில் பிரமன் சிலையும் உள்ளன. மேற்குக் கோஷ்டத்தில் சிலை காணப்படவில்லை.

இங்குள்ள இரண்டு கோயில்களின் சிகரங்களும், விரலூர்க் கோயில், காஞ்சி சொக்கேசுவரர் கோயில், நார்த்தாமலையின் மேலை மலையிலுள்ள கடம்பூர்க் கோயில் ஆகியவற்றின் சிகரங்களை ஒத்துள்ளன. கடம்பூர்க் கோயில் முதல் இராசராசன் காலத்ததே.

மேற்பாடி நிவா நதிக்கரையில் அமைந்துள்ளது. 'ஆற்றூர்' என்பதும் இவ் வூரையே குறிப்பதாகவேண்டும். இவ் வாற்றூரிலேயே முதல் இராசராசனுடைய பாட்டனான அரிஞ்சிகை இறந்தானாக வேண்டும். முதல் பராந்தகனால் இறந்த தன் தந்தை முதல் ஆதித்தன் பெயரால் பள்ளிப்படை எடுப்பிக்கப்பட்ட 'தொண்டைமானாற்றூர்' இதனின்றும் வேறுபட்டதோரூர் என்பது குறித்துணரத் தக்கது.

இவ் வரிஞ்சிகையீசுவரமாகிய சோளீசுவரத்தில் முதல் இராசராசனுடைய 29ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் மூன்று உள்ளன. அவற்றுள் ஒன்று இவ்வூர் நகரத்தார், இவ்வூரில் வழக்கிலிருந்த 18 சாண் கோலால் அளந்து அறுதியிட்ட 5,136¾ குழி நிலத்தைக் கோயிலுக்கும், திருச்சுற்றாலைக்கும் திருமுற்றத்துக்கும், திருநந்தவனத்துக்கும், திரு மடவிளாகத்துக்குமாகத் தேவதான இறையிலியாக வழங்கிய செய்தியை வெளியிடுகிறது.

மேற்பாடி நகரத்தார் மீண்டும் அவ் வூருக்குப் பொதுவாக இருந்த புலிக்குன்றம் என்ற பிடாகையையும் கோயிலின் பல்வேறுவகைப் பட்ட செலவினங்களுக்காக வழங்கிய செய்தியும் உணரப்படுகிறது.

முதல் இராசேந்திரன் ஆட்சியில் சைவ சமயத்தின் பாசுபத இனத்து மடத்தலைவரான வகுளீசுவர பண்டிதர் மேற்பார்வையில் இக் கோயில் நிர்வாகம் நடைபெற்றது என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

சோளேந்திர சிங்கேசுவரம் முதற் பராந்தகன் காலத்தையொட்டிய பழைய கோயிலாகும். அது முதல் இராசராசனுல் புதுப்பிக்கப் பட்டது. அரிஞ்சிகையீசுவரம் தன் பாட்டனுன, ஆற்றூர்த் துஞ்சிய தேவர் என்னும் அரிஞ்சிகை பெயரால் முதல் இராசராசன் தன் ஆட்சியில் 29ஆம் ஆண்டிற்குமுன் எடுப்பித்த பள்ளிப்படைக் கோயிலாகும் என்பது உணரத்தக்கது.

# 17. வரலாற்று வெள்ளோட்டம் (கால வரையறை)

## ஆதித்தன், செம்பியன் கலைப்பாணி

**விசயாலயன் காலம் :**

முற்பட்ட சோழர்கள் காலக் கோயில்களில் பல தொடக்கத்திலேயே கற்றளிகளாக நிறுவப்பெற்றவை. சில செங்கற் கோயில்களும் கற்றளிகளாகப் புதுப்பிக்கப்பட்டன. ஏனாதி என்ற ஊரில் ஒரு சிறிய ஏகதளக் கற்றளி உள்ளது. இரு பெரிய கற்றூண்கள் தாங்கும் மண்டபம் ஒன்று பிற்காலத்தில் இணைக்கப்பட்டுள்ளது. இக் கோயில், மாமல்லபுரத்தில் கங்காவதரணம் (அல்லது அர்ச்சுனன் தவம்) என்ற பெயரால் சிற்பங்கள் வெட்டப்பட்ட பாறையில் குடையப்பட்டுள்ள கோயிலை முன்மாதிரியாகக் கொண்டு அமைக்கப்பட்டதாகும்.

விசயாலயன் காலத்து ஏகதளக் கோயில்களில் நன்முறையில் பாதுகாக்கப்பட்டு வருபவை காளியாபட்டி, விரலூர், பனங்குடி என்ற ஊர்களிலுள்ள கோயில்களேயாம். கருவறையும், அர்த்த மண்டபமும் சில சுற்றுக் கோயில்களுமே இவற்றின் உறுப்புகளாம்.

இத் தொகுப்பிலுள்ள கோயில்களில் மிக மேம்பட்டதும், முற்பட்ட சோழர்கள் காலக் கோயில்களில் கம்பீரமானதும் நார்த்தாமலையிலுள்ள விசயாலய சோளீசுவரமேயாம். ஓங்கார வடிவாக அமைந்த அதன் கருவறையின் உட்பகுதி சதுரமாக உள்ளது. அதிலுள்ள லிங்கம் உருளை வடிவினது. கருவறையைச் சுற்றியுள்ள உள் பிராகாரம் மேலே மூடப்பட்டுள்ளது. இதன் விமானம் நான்கு தளங்களை உடையது. கிரீவமும், சிகரமும் உருண்டையானவை. இதன் அர்த்தமண்டபம் வாயிலின் இருமருங்கிலும் நல்ல வேலைப்பாடுடைய இரு துவாரபாலகர் சிலைகளைக் காணலாம். இவை பல்லவர்



88. வீணாதரர்,
மேல்பாடி



89. சுப்பிரமணியர்,
மேல்பாடி



86. சோமநாதேசுவரர்,
மேல்பாடி



87. அரிஞ்சிகை
ஈசுவரம்,
மேல்பாடி



90. பஞ்சகூட பஸ்தி,
கம்படஹல்லி
(மைசூர் - மூன்றுவித
சிகரங்கள் உடைய
சமண மூவர் கோயில்)



91. பஞ்சகூட பஸ்தி,
கம்படஹல்லி
(மைசூர் - மூன்றுவித
சிகரங்கள் உடைய
சமண மூவர் கோயில்)

காலக் கலைப்பாணியைப் பெரிதும் கொண்டுள்ளன. இக் கோயிலைச் சுற்றிப் பண்டு அமைந்திருந்த எட்டுச் சுற்றுக் கோயில்களில் ஆறு இன்னும் உள்ளன. ஒவ்வொன்றும் சதுரமான கருவறை, உருண்டையான சிகரம், திறந்தவெளி மண்டபம் என்ற உறுப்புகளைக் கொண்டுள்ளது. திருச்சுற்று மதிலும் வாயிலும் இருந்த சுவடுகளே காணப் படுகின்றன.

விசயாலயன் காலத்துக் கோயில்களில் மிகச் சிலவே நம்மால் அறியப்படும் அளவில் உள்ளன. அவை தஞ்சை மாவட்டம், புதுக் கோட்டைப் பகுதியை உள்ளடக்கிய திருச்சி மாவட்டம் என்ற இரு மாவட்டங்களுக்குள்ளேயே காணப்படுகின்றன.

**ஆதித்தன் காலம் :**

நம்மால் அறியப்படும் முற்பட்ட சோழர்கள் காலக் கோயில்களில் மிகுதியான எண்ணிக்கை உடைய கோயில்கள் (115 கோயில்களில் 47 கோயில்கள்) முதல் ஆதித்தன் காலத்தனவாகவே உள்ளன. இவ்வாதித்தன் காலக் கோயில்களில் இன்னும் எவ்வளவோ தற்காலத்தில் சுவடற்றுப் போயினவாதல் வேண்டும். சில கோயில்கள் ஆதித்தன் காலத்தனவாகலாம். ஆயினும் அவற்றின் காலத்தை நிறுவுவதற்குரிய கல்வெட்டுச் சான்றுகளும் ஏனைய வரலாற்றுச் சான்றுகளும் கிடைக்கப்பெறுமையால் அவற்றை ஆதித்தன் காலக் கோயில்களாகக் கணக்கிடவில்லை. ஆனல், தேவாரம் பாடிய ஞானசம்பந்தர், நாவுக்கரசர் காலங்களில் காவிரியின் இரு கரைகளிலும் உள்ள 190 கோயில்கள் அவர்களால் பாடப்பட்ட தெய்வத் திருப்பாடல்களைக் கொண்டு விளங்கின. அவை யாவும் இம் முற்பட்ட சோழர்கள் காலத்திலும் நிலவியிருக்கும் என்பதில் தடையில்லை.

**கண்ணனூர் பாலசுப்பிரமணியர் கோயில் :**

முதல் ஆதித்தன்காலக் கோயில்களில் கண்ணனூர் பாலசுப்பிரமணியர் கோயில் தனிச் சிறப்புடையது. வடநாட்டில் கந்தன் எனவும் கார்த்திகேயன் எனவும் வழங்கப்படும் பெருமான் தென்னுட்டில் சுப்பிரமணியன், குமரன், முருகன், ஆறுமுகன், பழனியாண்டி, வேலன் என்ற பல பெயர்களால் வழங்கப்படுகிருன்.

ஆகமங்களில் முருகப் பெருமானுக்குச் சுற்றுக் கோயில் அமைப்பது, தனிக்கோயில் அமைப்பது என்ற இரு முறைகளும் பேசப்படுகின்றன. சுப்பிரமணியனையே முக்கியக் கடவுளாகக் கொண்டு அமைக்கும் கோயிலைச் சுவயம் பிரதானக் கோயில் என வழங்குவர். அக் கோயிலை ஒரு தளம் முதல் ஏழுதளங்கள் வரையில் கருவறையின்

மேல் விமானம் உடையதாக எடுப்பிக்கலாம். விமானத்தின் நான்கு மூலைகளிலும் மயிலின் உருவங்களோ யானை உருவங்களோ அமைக்கப் படவேண்டும். எட்டுக் காவல் தெய்வங்களான சரீரபாலக தெய்வங் களும், சுற்றுக்கோயில்களுக்குரிய 8 முதல் 32 வரை எண்ணிக்கை யுடையதெய்வங்களும் நிறுவப் படவேண்டும். அக் கோயில்கள் குமரக் கோட்டங்கள் எனப் பெயர் பெறும். தமிழ் நாட்டில் முருகனுக் கென்றே அமைக்கப்பட்ட 'சுவயம் பிரதானக் கோயில்கள்' மிகக் குறைவு; பண்டைக்காலத்தில் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருஆவினன்குன்றம், திரு ஏரகம், பழமுதிர்சோலை என்ற இடங்களில் முருகனுக்குத் தனிக்கோயில்கள் இருந்தன என்று திருமுருகாற்றுப் படை மொழிகிறது.

முருகன் வழிபாடு நாட்டில் சிறந்திருந்த முற்பட்ட சோழர் காலத்தில் முருகனுக்கென்று அமைக்கப்பட்ட தனிக் கற்றளிகளில் தலையாயது இது. இங்கு முருகப் பெருமானுடைய ஊர்தியாக யானையே அமைந்துள்ளது. இங்ஙனமே தஞ்சை மாவட்டத்திலுள்ள சுவாமி மலையிலும் யானையே முருகனுடைய ஊர்தியாக அமைந்திருப் பதைக் காணலாம். சங்க காலத்தில் யானையும் முருகனுடைய வாகன மாக வழங்கப்பட்ட செய்தி, 'பிணிமுக ஊர்தி ஒண்செய்யோனும்' (புறம் 56), 'கடுஞ்சினவிறல் வேள் களிறு ஊர்ந்தாங்கு' (பதிற்றுப் பத்து 11), முதலிய பாடலடிகளால் உணரப்படும்.

இவ்வொருதளக் கற்றளி உருண்டையான கிரீவத்தையும், மணி வடிவமான சிகரத்தையும் உடையது.

முதல் ஆதித்தன் காலத்து மிகப் பழைய கோயில்கள் திருவெண் காடு, திருப்பழனம், திருமயானம், செந்தலை என்பனவாம்; அவை அவனுடைய 2ஆம் ஆண்டின.

பண்டைக் காலத்தில் திருவெண்காடு கல்வெட்டுகளில் 'நாங்கூர்' எனவும், அங்குள்ள கோயில் 'திருவெண்காட்டுத் தேவர் கோயில்' எனவும் வழங்கப்பட்டன. தற்போது நாங்கூர் திருவெண் காட்டின் அருகில் சிறந்த வைணவத் தலமாக விளங்குகிறது. முன் காலத்தில் இறைவனுக்கு வழங்கப்பட்ட திருவெண்காட்டுத் தேவர் என்ற பெயரை ஒட்டிப் பிற்காலத்தில் இவ்வூருக்கும் திருவெண்காடு என்ற பெயர் வழங்குவதாயிற்று. இக் கோயில் நாயன்மார்களால் பாடப்பட்ட பழம்பெருமை உடையது. முதல் ஆதித்தன் காலத்த தாகிய இக் கோயில் முதல் இராசராசன் காலத்தில் புதுப்பிக்கப் பட்டது. தற்போது மீண்டும் திருப்பணிகள் நடந்துவருகின்றன. இக் கோயிலிலுள்ள பழைய கல்வெட்டு 'பெருநற்கிள்ளிச் சோழன்'

என்ற முதல் ஆதித்தனுடையதாகும். இக் கல்வெட்டு மூலத்தானத்தில் வடசுவரில் இணைந்துள்ளதொரு தூணில் உள்ளது. இதனை நோக்க, இக் கோயில் ஆதித்தன் காலத்துக்குப்பின் உருமாறித் திருப்பணி செய்யப்பட்டமை தேற்றம். ஆதலின் முற்பட்ட சோழர் காலக் கட்டடக் கலை பற்றி ஆராயலுறுவாருக்கு இக் கோயில் பயன் தாராது.

திருப்பழனத்தில் உள்ள கோயிலுக்கு முதல் ஆதித்தனும் அவன் தேவியும் நன்கொடை வழங்கி உள்ளனர். இக் கோயிலிலும் ஆதித்தன் பெயர் 'சோழப் பெருமானடிகள் பெருநற்கிள்ளித் தேவர்' என்றே வழங்கப்பட்டுள்ளது. இக் கோயிலும் பிற்காலத்தில் செய்யப்பட்ட முறையற்ற திருப்பணிகளால் தன் பண்டைக் கலையழகை இழந்துவிட்டது. எனினும், அரசன் அரசியரின் நேர்முகமான நன்கொடைபெற்ற இதன் பெருமை இன்றும் கல்வெட்டுகள் மூலம் வெளியாகிறது

நாலூர் மயானம் :

கும்பகோணத்துக்கு 9 கல் (14·4 கி.மீ.) தென் கிழக்கில் நாலூர் உள்ளது. நாலூரில் முதற் பராந்தகன் காலத்ததாகிய மாடக் கோயில் உள்ளது. அது தற்போது முழுவதும் புதுப்பிக்கப்பட்டுப் பழைய சுவடே அற்றுவிட்டது. நாலூருக்குப் பக்கத்திலுள்ள திரு மயானக் கோயில் பழமையும் பெருமையும் வாய்ந்தது. இங்கு முதல் ஆதித்தனுடைய இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டு உள்ளது. பழைய கோயில் உருச் சிதையாமல் உள்ளது. அதனை முறையறியாதாருடைய திருப்பணிக்கு இரையாக்காமல் கலையறிவோடு புதுக்குவது பொது மக்கள் கடமையாம் இவ்வொருதளக் கற்றளியின் சிகரம் உருண்டையானது. இதன் பழம் பகுதிகள் கருவறையும் அர்த்த மண்டபமுமாகும். கருவறையின் மூன்று சுவர்களிலும் உள்ள மூன்று தேவ கோஷ்டங்களின் இருமருங்கிலும் பஞ்சரங்கள் உள்ளன.

செந்தலை :

செந்தலை ஆதித்தன் காலத்துக்கு முன்பே செங்கற் கோயிலாகத் திகழ்ந்த பழம் பெருமை உடையது. இங்கு முதல் ஆதித்தனுடைய 2ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் காணப்படுவதால் அவ்வாண்டோ அதற்கு முன்போ இது கற்றளியாக்கப் பட்டிருத்தல் வேண்டும். கல்வெட்டுகளில் இங்குள்ள இறைவன் 'சந்திரலேகை சதுர்வேதி மங்கலத்துத் திருப்பெருந்துறை மகாதேவர்' என்றே வழங்கப்படுகிறார்.

இவ்விருதளக் கற்றளியின் உருண்டையான சிகரம் பிற்காலத்தில் வண்ணம் தீட்டப்பட்டது. பழங்கோயிலில் கருவறையும் அர்த்த மண்டபமுமே இருந்தன. மூலத்தானத்தை ஒட்டியுள்ள திருச்சுற்றின் கூரையற்ற தாழ்வாரத்தில் மனிதனுடைய முழு அளவுக்கு அமைந்துள்ள பிரமன் சிலையொன்று காணப்படுகிறது. விசயாலய சோளீசுவரத்தைப் போலவே, கருவறைச் சுவர்களில் தேவகோஷ்டங்கள் இல்லை. 9ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பிரமன், விஷ்ணு, சிவன், பார்வதி ஆகிய சிலைகள் கோயிலின் வடக்குப் பிராகாரத்தில் தனித் தனியே வைக்கப்பட்டிருந்தன. அவற்றுள் சில தஞ்சைக் கலைக் கூடத்திற்குக் கொண்டு செல்லப்பட்டுவிட்டன.

**திருக்கட்டளை :**

திருக்கட்டளையிலுள்ள சுந்தரேசுவரர் கோயில் ஆதித்தனுடைய 3ஆம் ஆண்டுக்கு முற்பட்டது. இங்குள்ள இறைவன் 'காரைக் குறிச்சித் திருக்கற்றளிப் பெருமான்' எனக் கல்வெட்டுகளில் குறிக்கப் பட்டுள்ளார். பழைய கோயிலில் கருவறையும் அர்த்தமண்டபமுமே இருந்தன. இதன் அடித்தளத்தில் சிற்ப வேலைப்பாடுகள் இல்லை. இவ் விருதளக் கற்றளியின் சிகரம் சதுரவடிவினதாய் நடுவில் பிதுக்கங் கொண்டுள்ளது. சிகரங்களின் ஓரங்களில் கொடிக் கருக்குகள் செதுக்கப்பட்டுள்ளன. சிகரத்துக்கு ஏற்பச் சதுரமான கருங்கல் ஸ்தூபி உள்ளது. இக் கோயில் தன் பண்டைய வனப்போடு நன்கு பாதுகாக்கப்பட்டுள்ளது.

**திருவெறும்பூர் :**

திருவெறும்பூர்க் கோயில் ஆதித்தனுடைய 4ஆம் ஆண்டிற்கு முற்பட்டது தத்தன் சேந்தி என்பாள் அவ்வூர்த் திருமலைமேல் ஆதித்தபட்டாரருக்குத் தான் எடுப்பித்த திருக்கோயில் தேவர்க்கு ஆதித்தனுடைய 19ஆம் ஆண்டில் விளக்கிற்கும் பூசனைக்கும் நன் கொடை வழங்கினாள்.

வேலன் வீரநாராயணனான செம்பியன் வடிவேலன் என்பான் திருவெறும்பூர் தேவர் விமானத்தை எடுப்பித்த உரிமை பாராட்டு கிறான். திருவெறும்பூர் மலை உச்சியில் கட்டப்பட்ட இப் பிப்பி லீசுவரர் கோயில் அழகிய இயற்கைச் சூழ்நிலைகளுக்கு இடையே அமைந்துள்ளது. இதன் கருவறையையும் அர்த்த மண்டபத்தையும் தத்தன் சேந்தியும், மேல் விமானத்தைச் செம்பியன் வடிவேலனும் எடுப்பித்தாராதல் வேண்டும். இது முதல் ஆதித்தன் காலச் சிறந்த கோயில்களில் ஒன்றாய்ப் பழைய கலைப் பாணியோடு விளங்கு கிறது.

**கோவிலடி :**

கோவிலடி பழங் காலத்தில் திருப்பேர் என்று வழங்கப்பட்டது. தற்போது திவ்யஜனேசுவரர் கோயில் என்று வழங்கப்படும் சிவன் கோயில் ஆதித்தன் காலத்தது. இக் கோயில் சுவர் ஒன்றில் காணப் படும் இராசகேசரியின் 4ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதல் ஆதித்தன் காலத்ததாகத் தோன்றியது. மேற்குத் தேவகோஷ்டத்தில் அர்த்த நாரியும், தென்புறத்தில் கணேசரும் தட்சிணுமூர்த்தியும், வடபுறத்தில் பிரமனும் துர்க்கையும் ஆதித்தன் காலச் சிலேகளே. சுற்ருலயங்கள் இருந்த சுவடு காணப்படுவதோடு அழகிய சுப்பிரமணியர் சிலே யொன்றும் பழங் காலச் சிற்ப நயத்தோடு கிடைத்துள்ளது. இவற்ருல் முதல் ஆதித்தன் காலத்ததாகக் கொள்ளப்படும் இக் கோயிலின் விமானம் பிற்காலத்தில் செம்பியன் வடிவேலனுல் புதுக்கப்பட்டதாக அறிகிரேம்.

**திருவையாறு :**

திருவையாற்றிலுள்ள பஞ்சநதீசுவரர் சோயிலேச் சுற்றிப் பக்கத் துக் கிராமங்களான திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதி குடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம் என்ற ஆறையும் சேர்த்து சப்தஸ்தானங்கள் என்று கூறுவர். ரிஷப தேவரின் கலியாண ஊர்வலமாகத் திருவையாற்று மகாதேவர் இவ்வாறு ஊர் களேயும் சுற்றி மீண்டும் திருவையாறுவரும் திருவிழாவே இவ்வூர் களின் பெரிய திருவிழாவாகும். (P. R.) ஸ்ரீநிவாசன் திருவாலம் பொழில் கோயிலே இவற்ரேடு சேர்த்தமை பொருந்தாது. சப்த ஸ்தானக் கோயில்கள் யாவும் முதல் ஆதித்தன் காலத்தனவே.

திருவையாறு பஞ்சநதீசுவரர் ஆலயம் இருதளக் கற்றளி. இதன் உருண்டையான கிரீவமும் சிகரமும் சமீபகாலத்தில் காரைபூசித் திருப்பணி செய்யப்பட்டுள்ளன. இதன் சதுரமான கருவறையையும் அர்த்தமண்டபத்தையும் அந்தராளம் இணேத்துள்ளது. கருவறைச் சுவரிலுள்ள இராசகேசரிவர்மனின் 5ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதல் ஆதித்தன் காலத்தது.

கருவறையின் அடித்தளத்தில் (அதிஷ்டானத்தில்) பத்ம படையை யும் யாளி வரிமானத்தையும் காணலாம். கருவறையின் தேவகோஷ் டங்களில் தட்சிணுமூர்த்தி, அர்த்தநாரி, பிரமன் என்ற சிலேகள் உள் ளன. அர்த்தமண்டபத்தின் முகப்பில் துவாரபாலகர் சிலேகள் உள்ளன. இவற்றிற்கு வெளியிலுள்ள முகமண்டபம் முற்காலத்தில் அர்த்த மண்டபத்தோடு சேராது தனியே அமைந்து, பின் கருங்கற் பலகை களால் இணேக்கப்பட்டிருக்கவேண்டும். முக மண்டபத்தின் தெற்கி லும் வடக்கிலும் வாயில்கள் உள்ளன. இங்கு இராசகேசரி வர்மனை

ஆதித்தனுடைய 12 முதல் 26ஆம் ஆண்டு முடியப் பல கல்வெட்டுகள் காணப்படுவதால் இம் முக மண்டபமும் ஆதித்தன் காலத்தது ஆகும்.

**தில்லைஸ்தானம் :**

இது சப்தஸ்தான வரிசையில் ஒரூராகும். இங்கு உள்ள கோயிலில் பல்லவ மூன்றும் நந்திவர்மன் (கி.பி. 845), பாண்டியன் மாறஞ் சடையனுன இரண்டாம் வரகுண மகாராசன் (கி.பி.866) ஆகியவருடைய கல்வெட்டுகள் கோயில் முகப்பிலுள்ள தூண்களில் காணப்படுகின்றன. இதனை நோக்க இக் கோயில் சோழர்கள் காலத்துக்கு முன் மண்டளியாக இருந்து, பல்லவர், பாண்டியர் தலைதூக்கி ஆண்ட காலத்தில் அவர்களுடைய ஆதரவைப் பெற்றிருந்த செய்தி புலனுகிறது. தற்போதுள்ள கற்றளி ஆதித்தன் காலத்தது. இக் கோயிலில் ஆதித்தனுடைய 8ஆம் ஆண்டுக் கல்வெட்டு, அவன் மகன் கன்னர தேவன் வழங்கிய பொற்கொடை பற்றியதாகும்.

தென் சுவரிலுள்ள மற்றொரு முக்கியமான கல்வெட்டு முதல் ஆதித்தனும் அவன் நண்பன் சேரமான் தாணுரவியும் தொண்டை மண்டலத்தை வென்ற செய்தியை வெளியிடுகிறது. இப் பெருமன்னர் இருவரும் இத் தொண்டைமண்டல வெற்றியில் தமக்குப் பேருதவி புரிந்த விக்கியண்ணன் என்பானுக்குச் சில விருதுகளும் சிறப்புகளும் வழங்கினர்.

இங்குள்ள கல்வெட்டொன்று கோயிலின் பலவகை உறுப்புகளான அர்த்தமண்டபம், ஸ்நானமண்டபம், உத்திரம், போதிகை, கண்டம், ஜகதி, பட்டிகை, குமுதம் முதலிய பல இடங்களிலும் வெட்டப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இக் கல்வெட்டால் கோயில் உறுப்புகள் பலவற்றின் பெயர்கள் வெளியாகின்றன. ஆதித்தனுடைய 14ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக் கோயிலில் ஸ்நான (ஸ்நபன) மண்டபம் எடுப்பிக்கப்பட்ட செய்தியை எடுத்தியம்புகிறது.

இக் கோயில் இருதளக் கற்றளி; இதன் கிரீவமும் சிகரமும் சதுரமானவை. தற்போதுள்ள தாமிர ஸ்தூபி பிற்பட்ட காலத்தது ஆகும். பழைய சோழர் கோயில் சதுரமான கருவறை, அர்த்த மண்டபம், ஸ்நான மண்டபம் என்ற இவற்றையே உறுப்புகளாகக் கொண்டிருந்தது. தேவகோஷ்டங்களின் அருகிலுள்ள அரைத் தூண்கள் உருண்டையாகவும் ஓரங்களில் உள்ள தூண்கள் எண்பட்டை வடிவினவாகவும் உள்ளன. கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையையும் மேலே யாளி வரிமானத்தையும் காணலாம். கொடுங்கைகளின் ஓரங்களில் கொடிக்கருக்குகள் செதுக்கப்பட்டுள்

ளன. கொடுங்கைகளை அணி செய்யும் கூடுகளின் நடுவில் மனிதத் தலைகள் உள்ளன. இரண்டாம் தளத்தில் கோஷ்டங்களான சாலைகளும் கூடங்களும் உள்ளன தேவகோஷ்டங்களில் தெற்கில் தட்சிணுமூர்த்தி, மேற்கில் விஷ்ணு, வடக்கில் நின்ற திருக்கோலத்தில் இருக்கும் ஒருதலைப் பிரமன் என்ற சிலைகளைக் காணலாம்.

திருப்பூந்துருத்தி :

இதுவும் சப்தஸ்தான க்ஷேத்திரங்களில் ஒன்று. இங்குள்ள முதல் ஆதித்தனின் 11ஆம் ஆண்டுக் கல்வெட்டுச் சோழப் பெருமானடிகளின் போகியாருள் ஒருத்தியான நங்கை சோழப் பெருமானுர் என்பவள் ஒரு நந்தா விளக்கிற்கு 30 கழஞ்சுப் பொன் வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. இங்கு இராசகேசரிக் கல்வெட்டுகள் இரண்டின் ஆட்சியாண்டுகள் சிதைந்துள்ளன. இராசகேசரியின் 26ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று முதல் ஆதித்தனுடையதாகலாம்.

இது சதுரமான கருவறையையும், அர்த்தமண்டபத்தையும் உடைய ஒரு ஏகதளக் கற்றளி; இதன் கிரீவமும் சிகரமும் உருண்டையானவை. அர்த்தமண்டபத்தின் முகப்பில் இரு துவாரபாலகர் சிலைகளைக் காணலாம். தெற்குத் தேவகோஷ்டத்தில் வீணுதர தட்சிணுமூர்த்தி, மேற்கில் அர்த்தநாரி, வடக்கில் வழக்கமான பிரமன் சிலைக்குப் பதிலாகப் பிட்சாடணர் சிலை என்பனவற்றைக் காண்கிறோம்.

திருச்சோற்றுத்துறை :

இதுவும் சப்தஸ்தான ஊர்களில் ஒன்ருகும். இங்குள்ள பழைய கல்வெட்டு ஆதித்தனுடைய 13ஆம் ஆண்டைச் சார்ந்தது. இவ் விருதளக் கற்றளியின் கிரீவமும், சிகரமும், ஸ்தூபியும் சதுரமானவை. பழைய கோயிலின் உறுப்புகள் சதுரமான கருவறையும், அர்த்த மண்டபமுமேயாகும். மூன்று தேவகோஷ்டங்களிலும் நின்ற நிலையிலுள்ள சிவன், விஷ்ணு, பிரமன் சிலைகளைக் காணலாம்.

திருவேதிக்குடி :

இதுவும் சப்தஸ்தானக் கோயில்களில் ஒன்ருகும். இங்கு உள்ள பழைய கல்வெட்டு ஆதித்தனுடைய 19ஆம் ஆண்டைச் சார்ந்தது.

இவ் விருதளக் கற்றளி உருண்டையான கிரீவமும் சிகரமும் உடையது. பழைய தேவகோஷ்டச் சிலைகளில் துர்க்கை, பிரமன், அர்த்தநாரி என்பனவே தற்போதுள்ளன.

திருக்கண்டியூர்:

இதுவும் சப்தஸ்தானக் கோயில்களில் ஒன்றாகும். இவ்வூரில் சிவன் விஷ்ணு, பிரமன் என்ற மூன்று தெய்வங்களுக்கும் தனித்தனியே கோயில்கள் உள்ளன. இது சிவபெருமானுடைய வீரச் செயல்களின் ஐதிகங்களை உடைய அட்ட வீரட்டத் தலங்களுள் ஒன்றாகும். இங்குச் சிவபெருமான் பிரமனுடைய ஐந்தாம் தலையை வெட்டியதாக ஐதிகம் வழங்குகிறது.

இங்கு நிருபதங்கவர்மன் என்ற பல்லவனுடைய 21ஆம் ஆண்டுக் கல்வெட்டு (ஆதித்தனுடைய 5ஆம் ஆண்டுக்குச் சமம்) காணப்படுகிறது. இது பல்லவர் காலக் கோயிலா அல்லது சோழர்காலக் கோயிலா என்று உறுதியாகக் கூற இயலவில்லை. இது கும்பகோணத்திலுள்ள நாகேசுவரர் கோயிலை ஒத்திருப்பதால் இதனை முதல் ஆதித்தன் காலத்துக் கோயில் என்று கூறுவதே ஏற்புடையது.

இவ் விருதளக் கற்றளியில் சதுரமான கருவறையும், அர்த்த மண்டபமும், உருண்டையான கிரீவமும் சிகரமும் உள்ளன. இது மேற்குப் பார்த்த சந்நிதியை உடையது. கருவறையின் வட கோஷ்டத்திலுள்ள பிரமன் சிலையும் அர்த்த மண்டபத்தின் தென் கோஷ்டத்திலுள்ள பிட்சாடனர் சிலையும் ஆகிய இரண்டுமே ஆதித்தன் காலத்தன. கிழக்குப் பிராகாரத்தின் மேல் மூடப்பட்ட தாழ்வாரத்தில் காணப்படும் உட்கார்ந்த நிலையிலுள்ள அர்த்தநாரி சிலை கிழக்குத் தேவகோஷ்டத்தில் பழங்காலத்தில் வைக்கப்பட்டிருந்து, பின் லிங்கோத்பவர் சிலைக்கு இடம் கொடுத்துத் தான் தற்போதுள்ள தாழ்வாரத்துக்கு நகர்ந்துவிட்டது போலும்.

இரண்டாம் தளத்தில் வழக்கம்போலச் சாலைகளும் கூடங்களும் உள்ளன.

பிராகாரத்தில் வைக்கப்பட்டுள்ள பிரமனுடைய பெரிய சிலையும், சுவர்களில் காணப்படும் சிற்றுருவச் சிலை வரிசையும் இக் கோயிலுக்குத் தனிச் சிறப்பு அளிக்கின்றன.

கருவறையைச் சுற்றி இக் கோயிலிலும், நாகேசுவரம், புள்ளமங்கை என்ற ஊர்களிலும் காணப்படும் பள்ளத்தைக் கட்டடக் கலையமைப்பின் ஒரு கூறாக (P·R.) ஸ்ரீநிவாசன் என்பார் கூறியதை உட்கொண்டு (J.C.) ஹார்லி என்பார் கருவறையும் அர்த்தமண்டபமும் ஒரு பள்ளத்திலிருந்து எழும்பியுள்ளன என்று கூறியுள்ளார். நாளடைவில் பிராகாரப் பகுதி உயரவே, கருவறைக்கும் பிராகாரத்

துக்கு இடைப்பட்ட குறுகிய இடம் பள்ளமாகக் காணப்படுவது இயற்கை. இதைக் கட்டடக் கலையின் ஓர் அமிசம் என்று கூறுவது ஏற்றுக் கொள்ளத்தக்கதாயில்லை. [p. 4. Pullamangai - (Heritage of Indian Art,) by J. C. Harle, Bhulabhai Memorial Institute, Bombay; and also Oriental Art New Series, Vol. IV, No. 1, pp. 96-108]

திருக்காட்டுப்பள்ளி :

திருக்காட்டுப்பள்ளி அக்னீசுவரர் ஆலயம் தேவார காலத்தில் செங்கற் கோயிலாக இருந்து ஆதித்தன் காலத்தில் கற்றளி ஆக்கப் பட்டிருத்தல் வேண்டும். வெளிக் கோபுரத்தில் வாயிற்படியை அணுகும் வழியில் ஆட்சியாண்டு சிதைவுற்ற இராசகேசுரி வர்மன் கல் வெட்டு காணப்படுகிறது. எழுத்தமைப்பை நோக்க அது முதல் ஆதித்தன் காலத்ததாகும்.

கருவறையும் அர்த்த மண்டபமும் முதல் ஆதித்தன் காலத்தவை; அர்த்த மண்டபத்தின் வாயிலில் இருமருங்கிலும் இரு துவாரபாலகர் களைக் காணலாம்; இதன் உருண்டையான கிரீவமும் சிகரமும் பிற் காலத்தில் காரை பூசப்பட்டுள்ளன. அடித்தளத்தில் குமுதப்படை, யாளி வரிமானம், அரைத் தூண்களிலுள்ள கலசம், குமுதம், பலகை, சாய்வான போதிகை. கொடுங்கையின் கீழ்க் கானைகள், சிங்கம், புலி என்ற உருவங்களை இடையிடையே கொண்ட பூதகண வரிசை, கருவறையின் வெளிச் சுவரிலுள்ள மூன்று தேவகோஷ்டங்கள், தென் கோஷ்டத்திலுள்ள யோக தட்சிணாமூர்த்தியின் சிலை (அர்த்தநாரி சிலையும் பிரமன் சிலையும் பிற்காலத்தவை.)

நேமம் :

திருக்காட்டுப்பள்ளிக்கு 2 கல் மேற்கிலுள்ள நேமத்திலுள்ள ஒரு தளக் கற்றளியில் ஆதித்தனுடைய 24ஆம் ஆண்டைச் சார்ந்த கல் வெட்டினைக் காணலாம்.

திருவிசலூர் :

திருவிசலூர் சிவலோகநாத சுவாமி ஆலயமும் முதல் ஆதித்தன் காலத்ததே. பிற்காலத்தில் முதல் இராசராசன் இக் கோயிலில் துலா பார தானமும், அவன் தேவி ஹிரணியகர்ப்ப தானமும் செய்து இக் கோயில் வளத்தைப் பெருக்கினர்.

தற்போது ஓரளவு பெருங் கோயிலாகக் காட்சி வழங்கும் இக் கோயிலின் தென் பிராகாரத்தில் தற்போது பண்டகசாலையாக வழங்கும் கற்றளி தேவகோஷ்டங்களோடு விளங்குகிறது. அதன்

கிழக்குக் கோஷ்டத்தில் அழகிய வீணுதர தட்சிணுமூர்த்தியின் சிலே உள்ளது. அதுவே ஆதித்தன் காலப் பழைய கற்றளி போலும்.

**கீழையூர் :**

கீழையூர் எனப்படும் மன்னு பெரும்பழுவூர் திருச்சி-அரியலூர்ப் பெருஞ்சாலேயிலுள்ள மேலேப் பழுவூரில் இருந்து ஒரு கல் தொலேவில் உள்ளது. இங்குள்ள முதல் ஆதித்தன் காலத்ததாகிய அவனி கந்தர்ப்ப ஈசுவர கிருகத்தில் பக்கம் பக்கமாக இரண்டு மூலத்தானங்கள் உள்ளன.

இக் கோயில் மேற்கு நோக்கிய சந்நிதி உடையது. இதன் வாயிலில் இரண்டு துவாரபாலகர் காத்து நிற்கும் மூன்று நிலே களுடைய கோபுரம் கோயிலேப் போலவே ஆதித்தன் காலத்தைச் சார்ந்தது. கோபுரத்தோடு இணைந்த மதிற் சுவரினுள் மூலத்தானங் களோடு கணபதி, சுப்பிரமணியர், சண்டேசுவரர், சப்தமாதர்கள் ஆகிய பரிவார தேவதைகளின் சுற்றுக் கோயில்களேயும் காண லாம்.

தற்போது அகத்தீசுவரம் என்று வழங்கும் 'தென்வாயில் ஸ்ரீ கோயில்' கருவறை, அர்த்தமண்டபம், அந்தராளம், சிங்கத்தூண்களே உடைய முகமண்டபம், நந்தி இவற்றை உடைய இருதளக் கற்றளி யாகும்.

அவனி கந்தர்ப்ப ஈசுவரத்தின் வடபுறத்து மூலத்தானமாகிய சோளீசுவரம் என்று வழங்கப்படும் 'வடவாயில் ஸ்ரீ கோயில்' கருவறை, துவாரபாலகரை முகப்பில் கொண்ட அர்த்தமண்டபம் என்பன வற்றை உடைய இருதளக் கற்றளியாம். வடக்கில் பிரமனும் கிழக்கில் சுப்பிரமணியரும் தெற்கில் தட்சிணுமூர்த்தியும் இங்குள்ள கோஷ்டத் தெய்வங்களாம். இரண்டாம் தளத்தில் ஏனைய கோயில்களேப்போலச் சிற்றுருவச் சிலேகளேக் காண்கிறேம் அகத்தீசுவரத்தின் சிகரமும் கும்பமும் சதுரமானவை. ஆனுல், இக் கோயிலிலுள்ள அவை உருண்டையானவை.

இரு வகைச் சிகரங்களே உடைய இரு மூலத்தானங்கள் பக்கம் பக்கமாக அமைந்திருத்தல், சுப்பிரமணியர் தேவகோஷ்டச் சிலே யாக அமைந்திருத்தல், பரிவார தேவதைகளிற் சுற்றுக் கோயில்கள் இருத்தல், மதிற் சுவரின் வாயிலில் கோபுரமும் அமைந்திருத்தல் ஆகி யவை முதல் ஆதித்தன் காலத்ததாகிய இக் கோயிலின் தனித்தகுதி களாம்.

**கோயில் தேவராயம்பட்டி :**

இது தஞ்சை மாவட்டத்துப் பண்டாரவாடைப் புகைவண்டி நிலையத்தை அடுத்துள்ளது. இங்குள்ள சிதைவுற்ற கோயிலில் காணப் படும் முதற் பராந்தகனுடைய 38ஆம் ஆண்டுக் கல்வெட்டில் ஆதித்த னுடைய 17ஆம் ஆண்டில் இங்குள்ள திருச்சேலூர் பரமேசுவரருக்கு வழங்கப்பட்ட நன்கொடையொன்று சுட்டப்படுவதால் இக் கோயில் முதல் ஆதித்தனின் 17ஆம் ஆண்டுக்கு முற்பட்டதாதல் வேண்டும். சுந்தர சோழனுடையதாகக் கருதப்படும் இராசகேசரியின் 14ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஜைமினியின் சாமவேதத்தைப் பிழையற ஓது வாருக்கு வகுக்கப்பட்ட பரிசு பற்றியதாகும்.

**திருவக்கரை :**

விழுப்புரத்துக்கு 12 கல் (19·2 கி.மீ.) தொலைவிலுள்ள வராக நதிக்கரையில் இவ்வூர் அமைந்துள்ளது. ஆதித்தன் காலக் கல்வெட்டு களை உடைய இக் கோயில் செம்பியன் மகாதேவியால் புதுப்பிக்கப் பட்டது. சமீப காலத்தில் நிகழ்த்தப்பட்ட ஒரு திருப்பணியால் இதன் பழைய சிற்ப நலன்கள் சிதைவுற்று விட்டன. வெள்ளிக்கோபுர வாயிலில் உள்ள வக்கிரகாளி என்ற சப்தமாதர் கோயில் பிற்பட்ட பல்லவர் காலத்ததாகவோ, முற்பட்ட சோழர் காலத்ததாகவோ இருக்கலாம்.

**பிரமதேசம் :**

செய்யாற்றின் அருகில் உள்ள பிரமதேசம் மேலைக் கங்கர்களுக்கு உறுதியான கோட்டையாக இருந்தது. பழங்காலத்தில் இவ்வூர் திருவேகம்பபுரத்து இராசமல்ல சதுர்வேதி மங்கலம் என்று வழங்கப் பட்டது. இங்குள்ள சந்திரமௌளீசுவரர் கோயிலில் ஆதித்தனுடைய 20, 27ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் உள்ளன. இக் காலத்தில் ஆதித்தன் கம்பவர்மனுன பல்லவ மன்னனுடைய ஆளுகையை ஒடுக்கி யிருக்கவேண்டும். இப் பகுதி முதற் பராந்தகன் காலத்திலேயே முடிவாகக் கைப்பற்றப்பட்டதாதல் வேண்டும்.

இவ்வழகிய கற்றளி கங்கர்களால் நிறுவப்பட்டதாகலாம். இவ் விருதளக் கற்றளியில் முற்பட்ட சோழர்கள் காலத்துச் சாலைகளையும் கூடங்களையும் இரண்டாம் தளத்தில் காணலாம். பூதகணவரிசை, யாளி வரிமானம், அழகிய கோஷ்டச் சிலைகள் ஆகியவை இக் கோயில் முற்பட்ட சோழர் காலத்தது என்பதை உறுதி செய்யும் ; இவ் வழகிய கோயில் சிதைவுருமல் இதனைத் தக்க முறையில் பாதுகாக்க வேண்டியது நம் கடமையாகும்.

உக்கல் (உற்கல்) :

செங்கற்பட்டு மாவட்டத்து உக்கலில் உள்ள புவனமாணிக்க விஷ்ணு கிருகம் கம்பவர்மன் காலத்தில் எடுப்பிக்கப்பட்டு, முற்பட்ட சோழர்களால் பல நன்கொடைகள் வழங்கப்பட்டதாகும்.

இங்குள்ள பழைய சோழர் கல்வெட்டு உல்ஷ் (Hultzsch) குறிப்பிடுவதுபோல விசயாலயன் காலத்தது அன்று. முதல் ஆதித்தனுடைய 23ஆம் ஆண்டுக் கல்வெட்டே இங்குள்ள பழைய சோழர் கல்வெட்டாகும். இக் கோயிலில் கம்பவர்மனுடைய 10, 15ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் இருப்பதால், இது கி.பி. 888-க்கு முன்பே எடுப்பிக்கப்பட்டதாதல் வேண்டும்.

இக் கோயில் மேல்தளம் சிதைவுற்றுப் பாழடைந்து கிடக்கிறது. அடித்தளத்திலுள்ள கல்வெட்டுகள் சிதையாமல் உள்ளன. இங்குக் கிடைக்கும் பழைய கருங்கற்களை வைத்துக்கொண்டே, இதன் பழைய தன்மைகளைக் குலைக்காமல் திருப்பணி செய்துவிடலாம்.

தக்கோலம் :

தக்கோலத்திலுள்ள பழைய கோயில் கங்கர் சோழர் என்ற இருவருடைய தொடர்பையும் உடையது. இங்கு முதல் ஆதித்தனுடைய 21, 24ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் உள்ளன. 24ஆம் ஆண்டுக் கல்வெட்டு. கங்ககுலத் தலைவனும் சோழ சிற்றரசனுமான இரண்டாம் பிருதிவீபதி தக்கோலத்திலுள்ள திருவூறல் மகாதேவருக்கு வழங்கிய கொடைபற்றியது.

இத் தக்கோலத்தில் நிகழ்ந்த போரிலேயே கி.பி. 949-ல் முதற் பராந்தகனுடைய முதல் மகன் இராசாதித்தன், இரண்டாம் பூதுகனுடைய உதவியைப்பெற்ற இரட்ட மன்னனான மூன்றாம் கிருஷ்ணனால் கொல்லப்பட்டான்.

பழைய கோயில் கருவறையும், முகப்பில் இரு துவாரபாலகரைக் கொண்ட அர்த்தமண்டமும் உடையதாக அமைந்திருந்தது. அடித்தளத்தில் யாளி வரிமானம் உண்டு. கருவறைச் சுவர்களிலுள்ள தேவ கோஷ்டங்களில் தட்சிணாமூர்த்தி, விஷ்ணு, பிரமன் சிலைகளையும், அர்த்தமண்டபச் சுவர்களில் கணேசர், துர்க்கை, அர்த்தநாரி என்ற சிலைகளையும் காணலாம். நடுவில் மனிதத் தலைகளையும் ஓரங்களில் வட்டங்களையும் உடைய கூடுகளால் அணி செய்யப்பட்ட கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசை உள்ளது.

திருவல்லம் :

திருவல்லம் மேல்பாடி (மேற்பாடி)யிலிருந்து 6 கல் (9.6 கி.மீ.) தொலேவில் நீவா நதிக்கரையில் அமைந்துள்ளது. வாணர் என்ற குறுநில மன்னர்களுக்குத் தலேநகராக விளங்கிய அவ்வூர் பழங் காலத்தில், தீக்காலி, தீக்காலிவல்லம், வாணபுரம் (பாணபுரம்) என்ற பல பெயர்களால் வழங்கப் பட்டது.

இங்குள்ள இறைவன் பழைய வாணர் கல்வெட்டுகளில் 'தென் தளி தீக்காலிப் பெருமானடிகள்' என்று வழங்கப்பட்டார்; இங்குள்ள வாணர் கல்வெட்டுகளில் கோயில் தளத்தில் பதிக்கப்பட்ட பலகைக் கல்லில் காணப்படும் கல்வெட்டே மூலக் கல்வெட்டு; ஏனையவை படி யெடுக்கப்பட்டனவே.

முதற் பராந்தகனுடைய 4ஆம் ஆண்டிற்கு முன் இக் கோயிலில் வட பிராகாரத்தில் நகுளீசுவர் ஆலயம் எடுப்பிக்கப்பட்டது.

வாணர் காலத்து அடிப்படையில் முற்பட்ட சோழர்கள் காலத்த தாகிய இக் கோயில் முதல் இராசராசன் காலத்துக்குச் சற்று முன் பாகப் புதுப்பிக்கப்பட்டதாதல் வேண்டும்.

இதன் பழைய பகுதிகள் கருவறை, அந்தராளம், அர்த்தமண்ட பம் என்பனவே. கருவறை, அர்த்தமண்டபம் இவற்றில் வெளிச் சுவரில் உள்ள தேவகோஷ்டங்களில் வழக்கம்போல விக்கிரகங்கள் உள்ளன. தேவகோஷ்டங்களே மகரதோரணங்கள் அணி செய்கின் றன. பிரமன் கோஷ்டத்துத் தோரணத்தில் பிட்சாடனரையும் துர்க்கை கோஷ்டத்துத்தோரணத்தில் இராவணனுக்கிரக மூர்த்தியை யும் காணலாம்; இக் கோயில் வெளிச்சுவரில் ஏனைய கோயில்கள் போலச் சிற்றுருவச் சிலேகளின் வரிசையும் இடம்பெற்றுள்ளது.

விமானத்தில் கிரீவத்தில் கிழக்கில் இந்திரனும், தெற்கில் வீணுதர தட்சிணுமூர்த்தியும், மேற்கில் விஷ்ணுவும், வடக்கில் பிரம னும் கோஷ்டச் சிலேகளாகும். இடையிடையே அழகிய பூதகணம் உள்ளன. சிகரம் எண்பட்டை வடிவுடையது. ஸ்தூபி பிற்காலத்தது. முற்பட்ட சோழர்கள் காலத்து பிரமன், விஷ்ணு சிலேகள் மூலத் தானத்தின் திருச்சுற்றுலேயில் உள்ளன.

வாணர்காலத்து இக் கோயில் முற்பட்ட சோழர்கள் காலத்தில் புதுப்பிக்கப்பட்டதாதல் வேண்டும்.

திருச்செந்துறை :

பிரமதேயமான ஈசானமங்கலத்திலுள்ள திருச்செந்துறைக் கற்றளிப் பெருமானடிகள் கோயில் சோழப் பெருமானடிகளாரான முதற் பராந்தகனின் மகனுரான அரிகுலகேசரியாரின் தேவியாரும், தென்னவன் இளங்கோவேளாரின் மகளாருமான பூதி ஆதிச்சபிடாரியாரால், முதல் ஆதித்தனுடைய 23ஆம் ஆண்டை ஒட்டிய காலத்தில் கட்டப்பட்டதாக அறிகிறோம்.

இக் கோயிலின் பாகங்கள் கருவறையும் அர்த்தமண்டபமுமே; அடித்தளத்தில் பத்மப்படை, குமுதப்படை, யாளி வரிமானம் என்பன உள்ளன. கொடுங்கையின்கிழ்ப் பூதகண வரிசையையும் மேலே யாளி வரிமானத்தையும் காணலாம்.

இவ் விருதளக் கற்றளியின் இரண்டாம் தளத்தில் வழக்கம் போலச் சாலையும் கூடங்களும் உள்ளன. இக் கோயிலின் கிரீவம் சதுரமானது. சிகரம் சதுரமாய் நடுவில் பிதுங்கி உள்ளது. தென் கோஷ்டத்தில் தட்சிணுமூர்த்தி சிலை யிருக்கவேண்டிய இடத்தில் ரிஷப வாகன தேவரின் சிலை உள்ளது. ஏனைய கோஷ்டங்களில் வழக்கம் போல விஷ்ணு, பிரமன் சிலைகள் உள்ளன. தென்கோஷ்டத்தில் சமீப காலத்தில் தட்சிணுமூர்த்தியின் சிலை நிறுவப்பட்டுள்ளது.

ஸ்ரீநிவாசநல்லூர் :

ஸ்ரீநிவாசநல்லூர் காவிரியின் வடகரையில் முசிரியில் இருந்து 6 கல் (9·6 கி.மீ.) தொலைவிலும் திருச்சியிலிருந்து 30 கல் (48 கி.மீ.) தொலைவிலும் உள்ளது.

இவ்வூரில் 9, 10ஆம் நூற்றுண்டுகளைச் சார்ந்த இரண்டு சிவன் கோயில்களும், இரண்டு விஷ்ணு கோயில்களும், ஒரு மாரியம்மன் கோயிலும் உள்ளன. இவற்றுள் மிக முக்கியமானது குரங்கநாதர் கோயிலாகும். இக் கோயில்பற்றி வழங்கும் கட்டுக்கதை ஆதாரமற்றது; இது எடுப்பிக்கப்பட்ட காலத்திலிருந்து சுமார் 200 ஆண்டுகள்—அதாவது முதல் ஆதித்தன் காலம் முதல் முதலாம் குலோத்துங்கன் காலம் முடிய—மிகச் சிறப்புடன் இருந்திருக்கிறது.

கல்வெட்டுகளில் இங்குள்ள பெருமான் பிரமதேய கிராமமாகிய மகேந்திரமங்கலத்துத் 'திருக்குரக்குத்துறைப் பெருமானடிகள்' என்று வழங்கப்படுகிறுர். பல்லவ மகேந்திரவர்மனுடைய ஆட்சி இப் பகுதியில் சிறப்புற்றிருந்த காலத்தில் ஸ்ரீநிவாசநல்லூர் அவன் பெயரால் மகேந்திரமங்கலம் என வழங்கப்பட்டது. இப்பொழுதும்

ஸ்ரீநிவாச நல்லூரின் எல்லையில் மகேந்திரமங்கலம் என்ற சிற்றூரைக் (பிடாகையைக்) காணலாம்.

இக் கோயில் முதல் பராந்தகன் காலத்துச் சிறந்த கோயில்களில் ஒன்ருக வரலாற்றறிஞர்கள் பகுத்திருப்பது வியப்பிற்குரியது.

இக் கோயிலில் காணப்படும் இராசகேசரி வர்மனுடைய கல் வெட்டுகள் நான்கினுள் 24ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று அர்த்த மண்டபத்தின் தென் சுவரின் அடித்தளத்தில் உள்ளது. அதற்கு மேல் முதற் பராந்தகன் கல்வெட்டொன்றும், அதனை அடுத்து முதற் பராந் தகன் கல்வெட்டு மற்றொன்றும் காணப்படுகின்றன. இக் கோயிலின் கருவறையும், அந்தராளமும், அர்த்தமண்டபமும் ஒரே அடிப் படையில் தொடங்கி, ஒரே காலத்தில் கட்டப்பட்டவை; ஆதலின் 24 என்ற உயர்ந்த ஆட்சியாண்டையுடைய இராசகேசரியின் கல்வெட் டினையுடைய இக் கோயில் முதல் ஆதித்தன் காலத்ததேயன்றிப் பராந் தகன் காலத்ததன்று. தென்னிந்தியக் கல்வெட்டுகளில் சோழர் கல் வெட்டின் 13ஆம் தொகுப்பை வெளியிட்ட பதிப்பாசிரியரும் இக் கல் வெட்டு முதல் ஆதித்தன் காலத்தது என்று கொண்டமை உளங் கொள்ளத்தக்கது.

ஆலம்பாக்கம் :

ஆலம்பாக்கம் 'தந்திவர்ம மங்கலம்' எனவும், அதனை அடுத்துள்ள ஏரி அவன் விருதுப் பெயரால் 'மாற்பிடுகு ஏரி' எனவும் வழங்கப் பட்டன. இவ்வூர் பல்லவர் ஆட்சியில் மிக மேம்பட்டு விளங்கியது.

தற்போது கைலாசநாதர் கோயில் என்று வழங்கும் அமரேசுவரப் பெருமாள் கோயில் பல்லவர் காலத்தில் எடுப்பிக்கப்பட்டு, முற்பட்ட சோழர்கள் காலத்தில் புதுப்பிக்கப்பட்டதாகும். இங்கு முதல் பராந் தகனுடைய இரண்டு கல்வெட்டுகள் உள்ளன.

சிவன் கோயிலையடுத்துச் செல்லியம்மன் கோயில் என்ற காலப் பிடாரி கோயிலுள்ளது. இது இறையர் அலங்காரப்பிரியன் என்ற திருவொற்றியூரானல் எடுப்பிக்கப்பட்டது. பழங்காலத்துத் தனிப் பட்ட சப்தமாதர் கோயில்களில் இன்றும் பூசனை வழிபாட்டோடு இது சிறந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இங்குள்ள இராசகேசரி வர்ம னுடைய 25ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதல் ஆதித்தன் காலத்தது. ஆகவே இக் கோயில் அதற்கு முன்பே தோன்றியதாதல் வேண்டும்.

இங்குள்ள வரதராசப் பெருமாள் கோயில் பழங்காலத்தில் 'திரு மேற்றளிப் பெருமாள் கோயில்' என வழங்கப்பட்டது. இங்கு முதற்

பராந்தகனுடைடய கல்வெட்டுகள் உள்ளன. இதனுடைய தேவ கோஷ்டங்களில் அழகான விஷ்ணு சிலையும் சூரியன் சிலையும் உள்ளன. இது அடியோடு புதுப்பிக்கப்பட்டு விட்டதால் இதன் பழைய வடிவத்தையும், இது எடுப்பிக்கப்பட்ட காலத்தையும் உறுதியாக அறுதியிட்டுக் கூற முடியவில்லை.

லால்குடி :

லால்குடி திருச்சி—அரியலூர்ச் சாலையில் 13 கல் (20·8 கி.மீ.) தொலைவில் உள்ளது. இப் பெருமானை சப்தரிஷிகள் வழிபட்டுப் பயன் பெற்றுரென்று தலபுராணம் குறிப்பிடுகிறது. இவ் வூரின் பழம்பெயர் ‘ திருத்தவத்துறை’ என்பது. இங்குள்ள கோயில் தற்போது சப்தரிஷீசுவரர் கோயில் என்று வழங்கப்படுகிறது. இக் கோயிலில் மூன்றும் நந்திவர்மன் கல்வெட்டும் (கி.பி. 857) மாறன் சடையனுன வரகுண மகாராசன் கல்வெட்டும் (கி.பி. 875) சோழர் காலத்துக்கு முற்பட்டவை. இக் கோயில் முற்பட்ட சோழர் ஆட்சியில் புதுப்பிக்கப்பட்ட பின் இக் கல்வெட்டுகள் மீண்டும் செதுக்கப்பட்டனவாதல் வேண்டும்.

இக் கோயிலில் முதல் ஆதித்தனுடைய 27ஆம் ஆண்டுக் கல்வெட்டும் முதற் பராந்தகனுடைய 5ஆம் ஆண்டுக் கல்வெட்டும் உள்ளன.

இக் கோயில் மேற்கு நோக்கிய சந்நிதியை உடையது. இவ்வொரு தளக் கற்றளியின் உருண்டையான சிகரம் சமீபகாலத்தில் காரை பூசப்பட்டு வர்ணம் தீட்டப்பட்டுள்ளது. அடித் தளத்தில் (அதிஷ்டானத்தில்) யாளி வரிமானமும் பாகர்களைக்கொண்ட யானை வடிவங்களும் செதுக்கப்பட்டுள்ளன. கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசைகள் உள்ளன. கொடுங்கைகளை நடுவில் சிலை எதுவும் இல்லாத கூடுகள் அணி செய்கின்றன. தேவகோஷ்டங்களில் வடபுறம் பிட்சாடனர் சிலையும், கிழக்குப்புறம் அர்த்தநாரி சிலையும், தென்புறம் வீணதர தட்சிணமூர்த்தி சிலையும் உள்ளன.

கிரீவத்திலுள்ள கோஷ்டங்களில் வடக்கில் பிரமனும், கிழக்கில் ஆலிங்கன மூர்த்தியும், தெற்கில் தட்சிணமூர்த்தியும் காணப்படுகின்றனர்.

அர்த்தமண்டபத்தைக் குமுதம், பலகை முதலிய உறுப்புகளையுடைய நான்கு தூண்கள் தாங்கி நிற்கின்றன. கொடுங்கைகள் சுருளணிகளை யுடையன. அர்த்தமண்டபத்தின் முகப்பில் இரண்டு துவாரபாலகர் சிலைகள் உள்ளன.

பிற்காலத்தில் முகமண்டபம் ஒன்று எடுப்பிக்கப்பட்டுள்ளது.

திருக்கழுக்குன்றம்:

திருக்கழுக்குன்றத்தில் மிகப் பழைய, புனிதமான சிவன் கோயில் உள்ளது. தென்னாட்டிலுள்ள மிகச் சிறந்த சிவத்தலங்களுள் இதுவும் ஒன்றாகும்.

தற்போது மலையடிவாரத்தில் காணப்படும் பக்தவத்சலர் கோயிலின் இரண்டாம் பிராகாரத்தின் வடபுறத்தில் காணப்படும் 'திருவாபரணக் கொட்டடி' எனப்படும் கருவூலமே, திருக்கழுக் குன்றத்துத் 'திருமூலத்தானத்துப் பெருமானடிகள் கோயில்' என்ற பெயரால் இப் பக்கத்தில் மிகப் பழைய கோயிலாக விளங்கியதாம்; தற்போது மேற்புறக் கட்டடங்களை இழந்துள்ள இக் கோயிலின் மூலத் தானத்தில் பல கல்வெட்டுகள் உள்ளன.

இங்குள்ள கல்வெட்டுகளில் மிகவும் பழைமையானது முதல் ஆதித்தனுடைய 27ஆம் ஆண்டுக் கல்வெட்டாகும். அது மூலத் தானத்துப் பெருமானடிகளுக்குப் பல்லவ மன்னன் ஸ்கந்த சிஷ்யனால் கொடுக்கப்பட்டு, முதல் நரசிம்ம வர்மனால் புதுப்பிக்கப்பட்ட நன் கொடையைத் தொண்டை மண்டல வெற்றிக்குப் பிறகு முதல் ஆதித்தன் மீண்டும் புதுப்பித்த செய்தியை வெளியிடுகிறது. இக் கோயில் சுவர்களில் முதற் பராந்தகன், கன்னரதேவன், முதல் இராசேந்திரன், முதல் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன், வீரராசேந்திரன், முதற் குலோத்துங்கன், விக்கிரம சோழன், இரண் டாம் இராசாதிராசன் ஆகியவர்கள் கல்வெட்டுகளை (9ஆம் நூற் றாண்டின் இறுதி முதல் 12ஆம் நூற்றாண்டின் இடைக் காலம்வரை) காணலாம். இரண்டாம் இராசாதிராசனுடைய 15ஆம் ஆண்டுக்கு மேல் இங்குக் கல்வெட்டுகள் காணப்படாமையால் இக் கோயில் 12ஆம் நூற்றாண்டில் செல்வாக்கிழந்துவிட்டது எனலாம். அதன் காரணம் தெரியவில்லை.

# 18. வரலாற்று மேலோட்டம்

## முதற் பராந்தகன் காலம்

திருவாடுதுறை :

முதற் பராந்தகனுடைய 2ஆம் ஆண்டை ஒட்டி எடுப்பிக்கப் பட்ட பழங் கோயில் திருவாடுதுறை கோமுகீசுவரர் கோயிலாகும். தற்போது திருவாடுதுறையிலுள்ள சைவமடம் பல கோயில்களைத் தன் நிர்வாகத்தின்கீழ்க் கொண்டு சிறந்து விளங்குகிறது.

முதற்பராந்தகனுடைய 2ஆம் ஆண்டில் முதல் ஆதித்தன் பெயரா லமைந்த படைவகுப்பான 'ஆதித்தபன்மதெரிஞ்ச கைக்கோளர்' உறுப்பினன் ஒருவன் சில நிலங்களை ஊர்ச் சபையாரிடம் விலைக்கு வாங்கி, இக் கோயிலின் பெயரால் நந்தவனமும் தென்னந்தோப்பும் பராமரிப்பதற்கு மானியமாக வழங்கினான். 'திருக்கற்றளிப் பிச்சன்' என்பான் இக் கோயிலைக் கட்டுவித்த செயல் பராந்தகனுடைய 25ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் இடம் பெற்றுள்ளது. இம் மன்னனின் 2ஆம் ஆண்டில் இக் கொடையாளி திருப்பதியம் ஓதுவார், மேளக்காரர், திருமஞ்சனம் கொணர்வார் ஆகியோருக்கு மானியம் வழங்கினான். இக் கோயிலில் குடப்படையிலிருந்து மேலுள்ள பகுதிகளை எடுப்பிக்கப் பராந்தகனே 500 கழஞ்சுப் பொன் நன் கொடை வழங்கினான். கற்றளிப்பிச்சன் தொடங்கிய இத் திருப் பணியை இம் மன்னனே முடித்தான்போலும். பிற்காலத்தில் முதல் இராசராசன் எடுப்பித்த தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் பொன், வெள்ளிப் பாத்திரங்கள், உலோகத் திருமேனிகள் முதலிய வற்றின் அளவுகளோடு கூடிய பட்டியல்கள் காணப்படுவதுபோலவே, இக் கோயிலிலும் பட்டியல் வெட்டப்பட்டுள்ளது. இக் கோயிலில் நன்கொடையாளர்கள், அடியார்கள், கொத்தர்கள், இதனைக் கட்டு வித்த திருக்கற்றளிப்பிச்சன் ஆகியவர் உருவங்களைக் கல்வெட்டுப் பெயர்களோடு காணலாம். சோழர்கள் காலத்தில் இங்ஙனம் சிலை யமைக்கப் பட்டமைக்கு இதுவே மிகப் பழைய சான்றாகும். இத்

தகைய சிலைகளைக் கோனேரிராசபுரம், திருவிசலூர் முதலிய கோயில் களிலும் காணலாம்.

இப் பழைய கோயில் கருவறை, அந்தராளம், அர்த்தமண்டபம் என்ற உறுப்புகளை உடையது. தேவகோஷ்டங்களின் மேல் தோரணங்கள் உள்ளன. கணபதி, அகத்தியர், தட்சிணுமூர்த்தி லிங்கோத்பவர், பிரமன், துர்க்கை என்பன தேவகோஷ்டச் சிலைகளாம்

திருவாமாத்தூர் :

இக் கோயில் முதற் பராந்தகனுடைய 3ஆம் ஆண்டுக்கு முற் பட்டு எடுப்பிக்கப்பட்டதாதல் வேண்டும்.

முதற் பராந்தகனுடைய மகன் கண்டராதித்தனுடைய அரசியல் அதிகாரிகளுள் ஒருவனுன பிரபூமிகன் மல்லன் என்னும் கண்டராதித்த பல்லவரையன் தற்போது அபிராமேசுவரர் என்று வழங்கப்படும் திருவாமாத்தூர்ப் பெருமானடிகளுக்கு ஒரு நந்தாவிளக்கு எரிப்பதற் குப் பத்துப் பொன் நன்கொடை வழங்கினுன். இப் பகுதி கி.பி. 949-ல் இரட்டர்களால் வெல்லப்பட்டபின் இவன் சோழர்களுக்கோ இரட்டர்களுக்கோ அடங்காமல் தன்னரசு செலுத்தத் தொடங்கிய செய்தி இவன் இக் கோயிலுக்குச் சகயாண்டைக் குறிப்பிட்டு சகம் 879-ல் (கி.பி. 957) 20 கழஞ்சுப் பொன் வழங்கிய செயலால் வெளி யாகிறது.

முதற் பராந்தகனுடைய 11ஆம் ஆண்டில் 'ஸ்ரீபலி' சுமந்து செல்லும் கோயில் யானை மாவுத்தனுடைய வருமானம் நிறுத்தப் படவே, ஸ்ரீபலிச் சடங்கும் நிறுத்தப்பட, அடியார்கள் இச் செய்தியை அரசனிடம் விண்ணப்பித்து, மீண்டும் அரசன் ஆணையால் ஸ்ரீபலிச் சடங்கு முறையாக நடப்பதற்கு மாவுத்தனுக்குரிய வருமானத்தை முட்டாமல் வழங்குவதற்கு ஏற்பாடு செய்தனர்.

இக் கோயிலின் சதுரமான கருவறை உயரமான அடித்தளத்தில் அமைந்துள்ளது. கருவறையையும் அர்த்தமண்டபத்தையும் ஓர் அந்த ராளமும், அர்த்தமண்டபத்தையும் முகமண்டபத்தையும் மற்றோர் அந்தராளமும் இணைக்கின்றன. இங்குள்ள மகாமண்டபம் பிற் காலத்தது.

தேவகோஷ்டங்களில் உள்ள சிலைகளில் அர்த்தமண்டபத்துத் தென் கோஷ்டத்திலுள்ள பிட்சாடணர் சிலை குறிப்பிடத்தக்க வனப் புடையது. ஏனைய கோஷ்டங்களில் தட்சிணுமூர்த்தி, லிங்கோத்பவர், பிரமன், துர்க்கை என்ற சிலைகளைக் காணலாம்.

அர்த்தமண்டபத்தின் நான்கு தூண்களும் தற்போது இல்லை. ஆனால், அவற்றை உத்தரங்களோடு இணைத்த இணைப்புப் பல்கைகள் உறுதியாக உத்தரங்களோடு இணைந்திருப்பதால் இம் மண்டபம் தூண்களின்றியே உறுதியாக உள்ளது. தற்போதுள்ள சிகரம் புதுமை யானது.

அள்ளூர் :

திருச்சியிலிருந்து கருவூர் செல்லும் சாலையில் 6 கல் (9·6 கி.மீ.) தொலைவில் உள்ளது. இங்குப் பராந்தகன் காலக் கோயில்கள் இரண்டு உள்ளன. தற்போது பஞ்சநதீசுவரர் கோயில் என்று வழங்கப்படும் கோயில் முற்காலத்தில் 'திருவடகுடி பரமேசுவரர் ஆலயம்' என்று வழங்கப்பட்டது. இங்குள்ள பழைய கல்வெட்டுப் பராந்தகனுடைய 6ஆம் ஆண்டைச் சார்ந்தது. பராந்தகன் காலத்ததாகிய இக் கோயில் முதல் இராசராசன் காலத்தில் புதுப்பிக்கப்பட்டதாகத் தோன்று கிறது.

பசுபதீசுவரர் கோயில் பெருவழிக்கு 2 கல் (3·2 கி.மீ.) தொலை வில் ஒரு தென்னந்தோப்பில் உள்ளது. கல்வெட்டுகளில் இங்குள்ள இறைவன் 'அள்ளூர் நக்கன் கோயில் பரமேசுவரர்' என்று வழங்கப் படுகிறார். இங்குள்ள இராசகேசரி வர்மனின் 12ஆம் ஆண்டுக் கல் வெட்டு முதல் ஆதித்தனுடையது என்று உறுதியாகக் கூறுவதற்கில்லை. இங்குப் பராந்தகனுடைய 17ஆம் ஆண்டு முதல் 40ஆம் ஆண்டுவரைப் பல கல்வெட்டுகள் உள்ளன. 38ஆம் ஆண்டில், காவிரி வெள்ளத்தால் எக்காரிடப்பட்டுப் பயிரிலி புன் செய்யாக்கிடந்த நிலங்களை அள்ளூர்த் தலைமைச் சான்றவர்களாகிய பேரறிஞர் குழுவின் உறுப்பினர், அற உள்ளம் படைத்த ஒருவனுக்கு விலைக்கு விற்க, அவன் அந் நிலங்களைச் சீர்திருத்திக் கோயிலுக்கு நன்கொடை வழங்க ஏற்பாடு செய்தான்.

இவ் வொருதளக் கற்றளியில் சதுரமான கருவறையும் அர்த்த மண்டபமும் உள்ளன. அர்த்தமண்டபத்தின் முகப்பில் உள்ள துவார பாலகர் சிலைகள் இக் கோயில் எடுப்பிக்கப்பட்ட காலத்தனவே ; இதன் உருண்டையான கருங்கற் சிகரம் அழுத்தமாகக் காரை பூசப் பட்டுள்ளது. தேவகோஷ்டங்களில் சிலைகள் இல்லை. தேவகோஷ் டத்தைச் சார்ந்த தட்சிணாமூர்த்தி சிலை பக்கத்திலுள்ள மாமரத்தின் நிழலில் கிடக்கிறது. பழங்காலத்தனவாகிய பிட்சாடணர், சந்திர சேகரர், கார்த்திகேயர், சூரியன் ஆகிய சிலைகளை முகமண்டபத்தில் காணலாம் ; இறுதியில் குறிப்பிடப்பட்ட மூன்று சிலைகளும் சுற்றுக் கோயில்களில் விளங்கிய பரிவார தேவதைகளின் சிலைகளாகும்.

**சோழூர் :**

திருச்சி மாவட்டத்துக் கருவூர்த் தாலுக்காவிலுள்ள சோழூர் முற் காலத்தில் கொங்கு நாட்டில் அமைந்திருந்தது. முதல் ஆதித்தன் இப் பகுதியை வென்று சோழ நாட்டோடு சேர்த்துக்கொண்டான். இக் கோயிலிலுள்ள பரகேசரிவர்மனுடைய 6ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதற் பராந்தகனுடையதாகலாம்.

**புள்ளமங்கை—பசுபதி கோயிலுக்கு அருகில் :**

புள்ளமங்கையில் தற்போது பிரமபுரீசுவரர் கோயில் என்று வழங் கப்படும் திருவாலந்துறை மகாதேவர் கோயில் பராந்தகன் காலக் கோயில்களில் மிகச் சிறந்த கலை நுணுக்கமுடையது. அது நன்கு பாதுகாக்கப்பட்டு வருகிறது.

தேவார காலத்தில் செங்கற் கோயிலாகக் காட்சியளித்த இவ் வாலயம் பராந்தகனுடைய ஆட்சியின் முற்பகுதியில் கற்றளியாக்கப் பட்டது. பரகேசரிவர்மனின் 3ஆம் ஆண்டுக் கல்வெட்டு இவ்வூர்ச் சபையார் திருவாலந்துறை மகாதேவர் கோயில் முன்னுள்ள மண்ட பத்தில் கூடி நடுவிற் சேரியில் உள்ள காலப்பிடாரி கோயிலுக்கு நன் கொடை வழங்கிய செய்தியை வெளியிடுகிறது.

முதற் பராந்தகனுடைய சிற்றரசனும் அவனால் வாணதிராசன், செம்பியன் மாவலி வாணராயன் என்று விருதுப்பெயர் வழங்கப் பெற்றவனுமான கங்கர்குலத் தலைவனான இரண்டாம் பிருதிவீபதி பராந்தகனுடைய 6ஆம் ஆண்டில் இப் பெருமானின் காலைப் பூசனை நிவேதனங்களுக்காக நன்கொடை வழங்கினான்.

இக் கோயில் கிழக்கு நோக்கியுள்ளது. இது முத்தளக் கற்றளி; கருவறையும் அர்த்தமண்டபமும் இக் கோயிலின் பழையபகுதிகளாம். அடித்தளத்தில் (அதிஷ்டானத்தில், குமுதம், கண்டம், கபோதம், யாளிவரிமானம் முதலிய பல குழைவுகளைக் காணலாம். ஐந்து தேவ கோஷ்டங்களிலும் கணேசர், தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், பிரமன், துர்க்கை என்ற சிலைகளைக் காணலாம். தேவகோஷ்டங்கள் தோரணங்களால் அணி செய்யப்பட்டுள்ளன. கொடுங்கைகளின் ஓரங்களில் கோஷ்டங்களும், நடுவிலும் முடிவுகளிலும் கொடிக்கருக்கு அணிகளும் உள்ளன. அரைத்தூண்களின் கீழ்ப் பஞ்சரங்களின் அடித் தளத்தில் சிற்றுருவச் சிலைகளின் பலகைகளைக் காணலாம். இரண்டு தளங்களிலும் தேவகோஷ்டங்களுக் கிடையே பஞ்சரங்கள் உள்ளன. கருவறையின் மேலுள்ள இரு தளங்களிலும் சாலைகளையும் கூடங்களை யும் காண்கிறோம்.

மூன்றும் தளத்துக்கு மேலுள்ள கிரீவத்திலும் சிங்கத் தலையை உடைய கூடுகளை உச்சியிற்கொண்ட சிறு கோஷ்டங்கள் உள்ளன. சிகரமும் ஸ்தூபியும் சதுரமாகவும் நடுவில் பிதுக்கங்கொண்டும் காணப்படுகின்றன. தற்போது இவை காரை பூசப்பட்டுள்ளன.

அர்த்தமண்டபத்தை நடுவில் உள்ள நான்கு தூண்களும் ஓரத்தில் சுவரை ஒட்டியுள்ள நான்கு அரைத்தூண்களும் தாங்கி நிற்கின்றன. அர்த்தமண்டபத்தின் முகப்பில் துவாரபாலகர் சிலைகள் இரண்டு உள்ளன. விமானத்தின் இரண்டாம் தளத்தில் காணப்படுவன போலவே, அர்த்தமண்டபத்துக் கொடுங்கையின் மேலும் சிறு கோஷ்டங்கள் உள்ளன.

விநாயகப் பெருமான் இரு தாமரை மலராகிய ஆசனத்தில் அமர்ந்துள்ளார்; அவர் இருப்பிடத்தின்மேல் விதானம் அமைந்துள்ளது. அவர் தலைக்குமேல் குடை ஒன்று பிடிக்கப்பட்டுள்ளது.

வீரம் சான்ற துர்க்கை பெரும் கொம்புகளை உடைய எருமைத் தலை அரக்கனுடைய தலையைப் பீடமாகக் கொண்டு நிற்கிறாள். ஒரு பக்கம் அவள் வாகனமாகிய சிங்கம், மறுபக்கம் மற்றொரு வாகனமான கலைமான், இருவர் தலைப்பலி யளிக்கும் செய்கை செதுக்கப் பட்டுள்ளது.

லிங்கோத்பவர் நெருப்புருவமான லிங்கத்திலிருந்து வெளிப் படுதல், வராகமூர்த்தி கீழே உள்ள பூமியைக் குடைந்துகொண் டிருத்தல், பிரமன் அன்னமாக உயரப் பறத்தல், இரு பக்கங்களிலும் திருமாலும் பிரமனும் இருத்தல் ஆகியவை கொண்ட சிற்பம் ஒன் றுண்டு. மெல்லிய உருவமுடைய பிரமன் கண்ணியம், அமைதி, ஓய்வு கொள்ளும் நிலை, நயமான அணிகலன்களால் ஏற்பட்ட கவர்ச்சி, ஆடைகள் அணிந்திருக்கும் வனப்பு, அரைப்பட்டிகையின் அழகு இவற்றோடு காட்சி வழங்குகிறான்.

இவற்றை நோக்க, முற்பட்ட சோழர்கள் காலத்துச் சிற்பத்திறன் எத்தகைய உயர்நிலையில் இருந்தது என்பதைக் கலையுணர்வுடையவர் எளிதில் சுவைத்து அறிவர்.

சிற்றுருவச் சிலைகளின் வரிசையில் 65 சிற்பங்களை—இப் பழங் கோயிலின் அடித்தளத்தில் காணலாம். அவற்றுள் கஜசம்ஹார மூர்த்தி, காலாரி மூர்த்தி, அந்தகாசுர மூர்த்தி, தாண்டவ மூர்த்தி, வராக விஷ்ணு என்பன மேதக்க சிற்ப நயமுடையவை. இவ்வூரும், கண்டியூர், குடந்தை, நாகேசுவரம், கீழூர் என்பனவும் பெற்றுள்ள

கற்றளிகள் 10ஆம் நூற்றுண்டில் சிற்றுருவச் சிலைகளிடை ஏற்பட்ட கலை நுணுக்கங்களுக்கு எடுத்துக்காட்டாக உள்ளன. இவ் வரிய சிற்பங்கள் இன்றளவும் காலத்திற்கும் மனிதனுடைய கயமைக்கும் தப்பிக் காட்சி வழங்கும் திறன் உன்னி மகிழத்தக்கது. நாம் இத் தகைய கலையழகை நமக்கு நுகர்விக்கும் சிற்பிகளுக்கும், அவர்களை ஆதரித்த வள்ளல்களுக்கும் எழுமையும் கடப்பாடுடையேம். உள்ளூர்ப் பொதுமக்களும் இக் கலைக்களஞ்சியத்தின் அழகில் ஈடுபட்டு, இக் கோயில் தம்மிடையே அமைந்திருப்பது பற்றிப் பெருமிதமுற்று, இது தன் பழைய கலைப்பாணி சிதையாது வருங்காலத் தலைமுறையினருக்கும் கண்ணுக்கும் உள்ளத்துக்கும் விருந்துசெய்யும் வண்ணம் காப்பாராக.

**சித்தலிங்க மடம் :**

திருக்கோயிலூருக்கு 5 கல் (8 கி.மீ.) மேற்கிலுள்ள சித்தலிங்க மடத்திலுள்ள வியாக்ரபாதேசுவரர் கோயில் முதற் பராந்தகனுடைய 7ஆம் ஆண்டுக்கு முற்பட்டது ஆனுல் அது முதற் குலோத்துங்கன் ஆட்சியில் அவன் அமைச்சனும் படைத்தலைவனுமான நரலோக வீரனுல் புதுப்பிக்கப்பட்டு விட்டது.

**உய்யக்கொண்டான் திருமலை :**

திருச்சிக்கு 8 கல் (12·8 கி.மீ.) மேற்கிலுள்ள உய்யக்கொண்டான் திருமலையிலுள்ள உஜ்ஜிவநாதர் கோயிலில் உள்ள இறைவன் முற் காலத்தில் நந்திபுரமங்கலத்துத் 'திருக்கற்றளிப் பரமேசுவரர்' என்று வழங்கப்பட்டார். இக் கோயில் முதற் பராந்தகனுடைய 9ஆம் ஆண்டுக்கு முற்பட்டது. பராந்தகனுடைய 34ஆம் ஆண்டில், கண்டரா தித்த தேவருடைய தேவியாரான பராந்தகன் மாதேவடிகள் இக் கோயிலுக்கு ஒரு விளக்கெரிக்க நன்கொடை வழங்கியுள்ளார். இவ் வம்மையார் புனிதமான அறச்செயல்கள் புரிவதில் சோழகுல நங்கைய ரிடை இணையற்று விளங்கியவராவர்.

**திருமால்புரம் (திருமாற்பேறு) கோவிந்தப்பாடி :**

காஞ்சீபுரத்திலிருந்து அரக்கோணம் செல்லும் வழியில் பண்டு திருமாற்பேறு என்று வழங்கப்பட்ட திருமால்புரம் உள்ளது. இங் குள்ள மணிகண்டேசுவரம் என்ற சிவன் கோயிலில் பராந்தகனுடைய 17ஆம் ஆண்டுக் கல்வெட்டும் உத்தம சோழனுடைய 14ஆம் ஆண்டுக் கல்வெட்டும் காணப்படுகின்றன. இக் கோயிலில் அண்மை யில் நிகழ்ந்த திருப்பணியால் இதன் கலைப்பாணியும் அரிய கல் வெட்டுகளும் சிதைக்கப்பட்டு விட்டன.

பக்கத்திலுள்ள கோவிந்தப்பாடியில் காணப்படும் 'நின்றருளிய பெருமான்' விண்ணகரத்தில் பராந்தகனுடைய 12 முதல் 41 முடிய

உள்ள ஆண்டுக் கல்வெட்டுகள் காணப்பட்டன. பராந்தகனுடைய மகன் உத்தம சிலியும் அவன் தேவியருள் இருவரும் இக் கோயிலுக்கு நன்கொடை வழங்கியுள்ளனர். உத்தம சோழன் காலத்தில் இக் கோயிலில் மணவாளப் பெருமானுடைய விக்கிரகம் நிறுவப்பட்டது. இக் கோயிலிருந்த இடத்தில் சில உடைந்த கருங்கற்களும் கற்சிலை களுமே தற்போது காட்சி வழங்குகின்றன.

**திருக்கோவிலூர் :**

திருக்கோவிலூர் விழுப்புரத்திற்கு 25 கல் (40 கி.மீ.) தொலைவில் தென்பெண்ணையாற்றங் கரையில் உள்ளது. இது முற் காலத்தில் 'திருக்கோவலூர்' என்று வழங்கப்பட்டுச் சங்க காலம் முதல் மலைய மான் என்ற சிற்றரசர் ஆண்ட மலாட்டுக்குத் தலைநகராக இருந்தது இங்குள்ள பெருமாள் கோயில் (விண்ணகரம்) பொய்கையார் பூதத்தார், பேயார், திருமங்கை மன்னன் என்பவர்களுடைய தொடர் புடையது. இக் கோயில் 11ஆம் நூற்றுண்டில் இப் பக்கத்துத் தலைவன் ஒருவனுல் புதுப்பிக்கப்பட்டது.

சிவன் கோயில் திருக்கோவிலூரையடுத்த கிராமமான கீழூரில் காணப்படுகிறது. இக் கோயில் சிவபெருமான் அந்தகாசுரனை அழித்த சிறப்புடையதாய் அட்டவீரட்டானங்களில் ஒன்ருக விளங்குகிறது. இக் கோயிலில் மூன்ரும் நந்திவர்மன், நிருபதுங்கன் ஆகியவர் கல்வெட்டுகளும் காணப்படுகின்றன. இங்குள்ள பரகேசரிவர்மனுடைய 5ஆம் ஆண்டுக் கல்வெட்டு விசயாலயன் காலத்தைச் சேர்ந்தது. தற்போதுள்ள கோயில் பராந்தகன் காலத்ததாகத் தோன்றுகிறது. இங்குள்ள பராந்தகனுடைய 13ஆம் ஆண்டுக் கல்வெட்டுச் சித்திரைத் திருவிழா நிகழ்த்துவதற்கு வழங்கப்பட்ட நன்கொடை பற்றியது.

இக் கோயில் மேற்கு நோக்கிய சந்நிதியை உடையது. இதன் அடித்தளம் 5 அடி உயரமுடையது. அதில் பத்மபடையும் யாளி வரிமானமும் உள்ளன. கருவறை கிழக்கு மேற்கில் 48 அடியும் தெற்கு வடக்கில் 21 அடி 8 அங்குலமும் அளவுடையது. அர்த்தமண்டபம் கருவறையோடு ஒட்டி 21½ அடி முன்னேக்கி நீண்டுள்ளது. அதன் முகப்பில் இரு துவாரபாலகர் சிலைகளைக் காணலாம். யாளி வரி மானத்துக்கு மேலும் அரைத்தூண்களின் கீழும் உள்ள வரிசையில் 48 'சிற்றுருவச் சிலை'களைக் காணலாம். கொடுங்கையை அணிசெய்யும் கூடுகளின் உச்சியில் மனிதத் தலையும் யாளித் தலையும் செதுக்கப் பட்டுள்ளன. கொடுங்கையின் ஓரங்களை அணிசெய்வன அவற்றில் செதுக்கப்பட்ட வட்டவடிவங்களே. தேவகோஷ்டச் சிலைகளில் பிரமனும் லிங்கோத்பவரும் பழைய சிலைகளாம். கணேசர், சுப்பிர

மணியர், சந்திரன், சூரியன், சப்த மாதர்கள் ஆகியவர்களுக்குச் சுற்றுக் கோயில்கள் உள்ளன.

நல்ல வேலைப்பாடமைந்த துர்க்கையின் சிலையொன்று தனியே பிராகாரத்தில் வைக்கப்பட்டுள்ளது. இதுவும் கோயில் பண்டு அமைக்கப்பட்ட காலத்தை சேர்ந்தது ஆகலாம்.

**திருச்சென்னம்பூண்டி :**

கொள்ளிடத்தின் தென் கரையில் திருப்பேர் நகரான கோயிலடியைச் சார்ந்த சிற்றூராக விளங்கிய திருச்சென்னம்பூண்டியில் பல்லவர் காலத்திலிருந்த செங்கற் கோயிலின் இறைவன் 'திருச்சடைமுடி உடைய மகாதேவர்' என்று வழங்கப்பட்டார். நிருபதுங்கனுடைய 22ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக் கோயிலின் முகப்பிலுள்ள தூண்களில் காணப்படுகின்றன.

இக் கோயிற் சுவர்களில் பராந்தகனுடைய 14 முதல் 37ஆம் ஆண்டு முடிய உள்ள கல்வெட்டுகளைக் காணலாம். எனவே, பல்லவர் கால மண்டளி, பராந்தகன் காலத்தில் கற்றளியாக்கப்படிருத்தல் வேண்டும். தற்போது இது பிடாரி கோயிலாக மாற்றப்பட்டு விளங்குகிறது.

**அந்தநல்லூர் :**

அந்தநல்லூர் திருச்சி—கருவூர்ச் சாலையில் திருச்சியிலிருந்து 7 கல் (11·2 கி.மீ) தொலைவில் உள்ளது. கல்வெட்டுகளில் இங்குள்ள சிவபெருமான் 'அந்தவநல்லூர்த் திருவாலந்துறை மகாதேவர்' என்று வழங்கப்படுகிறார்.

இக் கோயில் செம்பியன் இருக்குவேள் ஆன பூதி பராந்தகனால் எடுப்பிக்கப்பட்டது. அவனும் அவனுடைய தேவிமாரும் இக் கோயிலுக்கு வழங்கிய நன்கொடைகள் பல. இத் தலைவனுடைய பெயர் பரகேசரிவர்மனுடைய 10ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதல் 18 ஆம் ஆண்டு முடியக் காணப்படுகிறது. இவன் இக் கோயிலுக்கு வழங்கிய நிலக்கொடைபற்றிய செய்தி பரகேசரியின் 25ஆம் ஆண்டிலேயே முடிவடைகிறது. பரகேசரிவர்மனுடைய 15ஆம் ஆண்டில் முதற் பராந்தகனுடைய சகோதரனான கன்னரதேவன் வழங்கிய கொடையொன்று குறிப்பிடப்படுவதால் இங்குள்ள பரகேசரி கல்வெட்டுகள் முதற் பராந்தகனுடையன என்று உறுதி செய்யலாம். இது இருதளக் கற்றளி. அடித்தளத்திலுள்ள குழைவுகள் சாதாரணமானவை. சிகரம் உருண்டை வடிவானது.

**திருவாண்டார் கோயில் :**

இது விழுப்புரத்திலிருந்து பாண்டிச்சேரி (புதுவை) செல்லும் சாலையில் 11 கல் (17·6 கி.மீ.) தொலைவில் உள்ளது. பழங்காலத்தில் இவ்வூர் 'வடுகூர்' என வழங்கப்பட்டது. சம்பந்தர் இங்குள்ள இறைவனை வடுகூர் அடிகள் என்ற பெயரால் பாடியுள்ளார்.

இங்குள்ள சிதையுற்ற இராசகேசரிக் கல்வெட்டு முதல் ஆதித்தன் காலத்தது. ஆனால், மூலத்தானத்தின் அமைப்பை நோக்க அது பராந்தகன் காலத்ததாகத் தோன்றுகிறது. இங்குப் பராந்தக னுடைய 15ஆம் ஆண்டு தொடங்கி மூன்று கல்வெட்டுகள் உள்ளன.

கருவறையும் அர்த்தமண்டபமும் இக் கோயிலின் பழைய பகுதிக ளாகும். தற்போதுள்ள வெளி மண்டபம் பின்னர் இணைக்கப்பட்ட தாகும்.

அதிஷ்டானம் 5 அடி உயரமுடையது. அது சாதாரணமான குழைவுகளை உடையது. சதுரமான கருவறையின் பக்க அளவு 19½ அடி. அதன் முன்புறச் சுவர்களிலும் நடுவில் காணப்படும் பிதுக்கங் களில் தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், பிரமன் என்ற சிலைகளைக் காணலாம். கொடுங்கையின் கீழ்ப் பூதகணவரிசையும் மேலே யாளி வரிசையும் உள்ளன. அர்த்தமண்டபம் 8 அடி 2 அங்குலம் முன்னோக்கி நீண்டுள்ளது. அதன் முகப்பில் இரு துவாரபாலகர் சிலைகள் உள்ளன. அர்த்தமண்டபத்துச் சுவர்களில் பக்கத்துக்கு மூன்றாக ஆறு கோஷ்டங்கள் உள்ளன. இக் கோஷ்டச் சிலைகளில் பிட்சாடணரும் துர்க்கையுமே பழைய கோயிலைச் சார்ந்தவை. இங்குள்ள அர்த்த நாரியும், ரிஷபவாகனதேவரும் பிற்காலச் சிலைகளாம். கணபதி சிலை பரிவார தேவதை ஆலயத்தைச் சார்ந்தது. இவை உத்தம சோழன் காலத்தில் புதியனவாக நிறுவப்பட்ட கோஷ்டங்கள்போலும்.

**திருவொற்றியூர் :**

திருவொற்றியூரில் தற்போது ஆதிபுரீசுவரர் கோயில் என்று வழங்கப்படும் மகாதேவ பட்டாரர் திருக்கோயில் பல்லவர் காலத்தில் எடுப்பிக்கப்பட்டதாகத் தோன்றுகிறது. இங்கு மூன்றும் நந்திவர்மன், அபராசிதன் என்பவருடைய கல்வெட்டுகளைக் காணலாம்.

திருவொற்றியூர் பராந்தகன் காலத்திலேயே சோழ நாட்டுடன் சேர்ந்து சோழ மண்டலத்தின் வடவெல்லையாயிற்று. மதனப்பள்ளி பகுதிகளான சிட்புலிநாடும் நெல்லூரும் பராந்தகனால் வெல்லப்பட்ட போதிலும் அவை விரைவில் தன்னரசு பெற்றுவிட்டன. இக் கோயிலி லுள்ள பராந்தகன் கல்வெட்டுகள் அடித்தளத்தில் நடைபாதையில்

பதிக்கப்பட்ட கருங்கற் பலகைகளிலேயே காணப்படுவதாலும் இக் கோயில் முதல் இராசேந்திரன்தான் முத்தளக் கற்றளியாகக் கட்டின தாகக் கல்வெட்டுக் காணப்படுவதாலும் இது முதல் இராசேந்திரன் காலத்தில் கறுப்புக் கருங்கற்களால் புதுப்பிக்கப்பட்ட கோயிலாகும்.

எறும்பூர் :

சிதம்பரத்திலிருந்து விருத்தாசலம் செல்லும் சாலையில் எறும்பூர் 14 கல் (22·4 கி.மீ.) தொலைவில் உள்ளது. இச் சிறு கோயில் பராந்தக னுடைய 28ஆம் ஆண்டில் சுற்றுக் கோயில்களோடு இருங்கோள குணவன் அபராசிதன் பெருமானடிகள் ஸ்ரீபராந்தகதேவர் காலத்தில் கற்றளியாக எடுப்பிக்கப்பட்ட செய்தியை இக் கோயிற் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. இங்குள்ள பராந்தகனுடைய முற்பட்ட ஆட்சி யாண்டுகளை உடைய கல்வெட்டுகள், கருங்கற் பலகைகளில் செதுக்கப் பட்டிருந்து, இக்கோயில் கற்றளியான பின் மீண்டும் இதன் சுவர்களில் இடம் பெற்றனவாகும்.

இவ் வொருதளக் கற்றளியின் அடிப்படைக் கோயிலில் கருவறை, அர்த்தமண்டபம், பரிவார தேவதைகளுக்குரிய 8 திருச்சுற்றாலயங்கள், மதில் (ஒருகால் கோபுரம்கூட) ஆகியவை இடம் பெற்றிருக்க வேண்டும். பரிவாரக் கோயில்கள் தற்போது சுவடற்றுவிட்டன. முக மண்டபத்தில் காணப்படும் பைரவர் சிலை பரிவாரக் கோயிலைச் சார்ந்தது ஆகலாம். நல்ல சிற்பநயம் சான்ற தேவகோஷ்டங்களில் தட்சிணாமூர்த்தி, அருணாசலேசுவரர், பிரமன் என்ற சிலைகளைக் காண கிறோம்.

உடையார்குடி :

உடையார்குடி சிதம்பரத்திலிருந்து 16 கல் (25·6 கி.மீ.) தொலை வில் உள்ள காட்டுமன்னார்குடியைச் சார்ந்த சிற்றூராகும். காட்டு மன்னார்குடி முதற் பராந்தகன் காலத்தில் அமைக்கப்பட்டுக் கற்று வல்ல அந்தணர் பலருக்கும் குடியேற்ற ஊராக அமைந்த வீரநாரா யணபுரம் என்ற வீரநாராயண சதுர்வேதி மங்கலமாகும்.

இங்குச் சிவன் கோயில், விஷ்ணு கோயில் என்ற இரண்டும் உள்ளன. பராந்தகனுடைய விருதுப் பெயரால் அமைக்கப்பட்ட வீர நாராயண விண்ணகரம், சுந்தர பாண்டியன் காலத்தில் புதுப்பிக்கப் பட்டதில் தன் பண்டைக் கல்வெட்டுகளையும் கலை நலன்களையும் இழந்துவிட்டது

உடையார்குடியிலுள்ள அனந்தீசுவரம் என்ற சிவன் கோயில் பராந்தகன் காலத்துக் கலைப்பாணியைச் சிதையாமல் காத்துக்கொண்

டுள்ளது. இங்குப் பராந்தகனுடைய 33ஆம் ஆண்டு தொடங்கிப் பல கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

அரிஞ்சயனுடைய மகன் இரண்டாம் பராந்தகனுன சுந்தர சோழனுடைய தாயார் ஆகிய வீமன் குந்தவையார் மாதப் பிறப்புகள் தோறும் திருவனந்தீசுவரத்துப் பெருமானடிகளுக்கு 1000 குடம் புனித நீரால் திருமஞ்சனம் ஆட்ட அம் மன்னனுடைய 12ஆம் ஆண்டில் மானியம் விட்டுள்ளார். அரிஞ்சயனுடைய தேவியாருள் ஒருவரான ஆதித்தன் கோதைப் பிராட்டியார் இப் பெருமானுக்கு 108 குடம் தண்ணீரால் திருமஞ்சனம் செய்விக்க நன்கொடை வழங்கியுள்ளார். உத்தம சோழனுடைய 2ஆம் ஆண்டில் செம்பியன் மாதேவி இப் பெருமானுக்கு விளக்கு ஒன்று வழங்கியமையும் 12ஆம் ஆண்டில் சூரியதேவருடைய விக்கிரகம் ஒன்று இங்கு நிறுவப்பட்டமையும் அறியப்படுகின்றன.

இக் கோயிலின் சதுரமான கருவறை 20 அடி பக்க அளவுடையது. அந்தராளம் கருவறையையும் அர்த்தமண்டபத்தையும் இணைக்கிறது. 26½ அடி முன்னேக்கி நீண்டுள்ள அர்த்தமண்டபத்தை உருண்டையான கும்பங்களை உடைய நான்கு வட்டத் தூண்கள் தாங்கி நிற்கின்றன. அரைத் தூண்களின் இணைப்புகள் அருகில் 'அம்ஸவரி' காணப்படுகிறது. கொடுங்கையும் பூதகண வரிசையும் நன்முறையில் அமைந்துள்ளன. உருண்டையான சிகரம் பிற்காலத்ததாகும்.

திருநாமநல்லூர் :

சென்னையிலிருந்து கடலூர் செல்லும் பெருவழியில் 113ஆம் கல்லில் (180·8 கி.மீ.) இருந்து அரை மைல் கிழக்கில் கெடிலம் என்ற ஆற்றின் வடகரையில் திருநாமநல்லூர் (பழம்பெயர் திருநாவலூர்) அமைந்துள்ளது. இது சுந்தரமூர்த்தி சுவாமிகளின் அவதாரத் தலமாகும்.

இங்குள்ள சிவன் கோயிலில் உள்ள பராந்தகனின் 32ஆம் ஆண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள திருமேற்றளி மகாவிஷ்ணு விண்ணகரம் தற்போது சுவடற்றுப் போய்விட்டது

பக்த ஜனேசுவரர் என்ற இங்குள்ள இறைவன் பராந்தகனுடைய 17ஆம் ஆண்டில் திருமுனைப்பாடி நாட்டு மேலூர் நாட்டுத் திருநாவலூரின் திருத்தொண்டீசுவரத்துத் தேவர் என்று வழங்கப்படுகிறுர். 28ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக் கோயில் இராசாதித்தனல் கற்றளியாக்கப்பட்டுப் பராந்தகனுடைய 29ஆம் ஆண்டிலிருந்து 'இராசாதித்த ஈசுவரம்' என்று வழங்கப்பட்டதாக அறிகிறோம். இக் கோயி

லுக்கு மவுலி கிராமத்தில் ப்டைவீட்மைத்துத் தங்கியிருந்த இராசா தித்தன் படையைச் சார்ந்தவரான மலேயாளிகள் பலரும் நன்கொடை வழங்கியுள்ளனர். இங்குப் பராந்தகன் ஆட்சியின் பிற்பகுதியில் சோழர் ஆட்சி நீங்கிய செய்தி முனையதரையன் குலமாணிக்கராமன் தேவன் என்பான் சகயாண்டு 875-ல் (கி.பி. 953) வழங்கிய அரச னுடைய ஆட்சியாண்டு குறிப்பிடப்படாத கல்வெட்டால் உணரப் ப்டும்.

இக் கோயிலில் உள்ள ' ஆடி அருளுகின்ற கூத்தன் ' என்ற பெயரில் ஆடவல்லானின் உலோகச் சிலை முதல் இராசராசன் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. இப் பெருமானுக்கு ஒரு பொற்பட்டமும், 1750 பலம் எடையுடைய ஒரு பாதபீடமும் அமைக்கப்பட்டன. இங் குள்ள வேலைப்பாடமைந்த ஏனைய உலோகச் சிலைகள் சுந்தரமூர்த்தி, பரவையார், சங்கிலியார், சுந்தரமூர்த்தியை வளர்த்த நரசிங்க முனையரையர் என்ற அடியார் ஆகியவருடையனவாகும்.

இதன் கருவறை 15 அடி 6 அங்குலம் பக்க அளவுடைய சதுரமாகும். அர்த்தமண்டபம் $9\frac{1}{2}$ அடி முன்னோக்கி நீண்டுள்ளது. அடித்தளத்தில் (அதிஷ்டானத்தில்) பத்மபடை, குமுதப்படை, யாளிவரிமானம் என்பனவற்றைக் காணலாம். தென்கோஷ்டத்தில் தட்சிணாமூர்த் தியின் சிலை உள்ளது. ஏனைய கோஷ்டங்களில் சிலைகள் இல்லை.

இக் கோயிலின் கிரீவமும் சிகரமும் பிற்காலத்தனவாம்.

**தொண்டைமாநாடு :**

தொண்டைமாநாடு காளஹஸ்தியிலிருந்து 6 கல் (9·6 கி.மீ.) வடமேற்கில் உள்ளது. இது கல்வெட்டில் திருவேங்கடக் கோட்டத்து ஆற்றூர் நாட்டுத் ' தொண்டைமான் பேராற்றூர் ' என்று காணப் படுகிறது. திருமால்புரக் கல்வெட்டு முதல் ஆதித்தனைத் ' தொண்டை மான் ஆற்றூர்த் துஞ்சிய தேவர் ' என்று குறிப்பிடுவதால் அவன் இவ் வூரில் உயிர் நீத்தமை பெறப்படுகிறது. முதற் பராந்தகன் தன் 34ஆம் ஆண்டளவில் இவ்வூரில் தன் தந்தையார் பெயரால் ஒரு பள்ளிப் படைக் கோயிலை எடுப்பித்தான். ஆதித்தனுக்குக் கோதண்டராமன் என்ற விருதுப் பெயரும் உண்டு. ஆதலின் இக் கோயில் கோதண்ட ராமேசுவரம் ஆகிய ஆதித்தேசுவரம் எனவும் வழங்கப்பட்டது. ' தொண்டைமான் ஆற்றூர் ' இக் காலத்தில் ' தொண்டைமாநாடு ' என்று மருவிவிட்டது. இக் கோயிலில் புரட்டாசி மாதம் கேட்டை நட்சத்திரம் முதல் சதைய நட்சத்திரம் வரைப் பெருவிழா நடத்து வதற்கு வேண்டிய நன்கொடைகள் வழங்கப்பட்டன.

சோழ மன்னன் ஒருவன் தன்னை ஒத்த திறமை சான்ற தன் தந்தையின் பெயரால் எடுப்பித்த இக் கோயில் சிதைவுறும் நிலையில் உள்ளது. கோயிலின் முக்கியமான சுவர்கள், அவற்றின் அழகிய அடித்தளம், அவற்றின் குழைவுகளில் உள்ள கல்வெட்டுகள், யாளி வரிமானம், சுவர்களில் உள்ள தேவகோஷ்டங்கள், கருவறையிலுள்ள லிங்கம் ஆகியனவே ஒரளவு பாதுகாக்கப்பட்டுள்ளன. இக் கோயிலைக் கல்வெட்டுத் துறையினரும், ஆந்திர நாட்டு அற நிலையப் பாதுகாப்புத் துறையினரும் நன்முறையில் பாதுகாப்பதற்கு ஆவன செய்வாராக.

**கிராமம் :**

கிராமம் சென்னை திருச்சிப் பெருவழியில் திருக்கோயிலூருக்குச் செல்லும் வழியில் உள்ளது. சோழ நாட்டின் வட பகுதியை இரட்ட மன்னருடைய தாக்குதல்களிலிருந்து பாதுகாக்க முதல் பராந்தகனுடைய முதல் மகனை இராசாதித்தன் இங்கு ஒரு படையை வைத்து, இவ் வூரைத் தலைநகராகக் கொண்டு, சோழ நாட்டில் இளவரசனாக முடி சூட்டப்பட்டுத் தங்கியிருந்தான். இவன் கி.பி. 947-ல் இங்கு முடி சூட்டப்பட்டான்போலும்; இவன் இவ் வூரில் முடி சூட்டப் பட்டதால் இவ் வூரின் பெயர் முடியூர் அல்லது மவுலி கிராமம் என்று வழங்கப்பட்டுப் பிற்காலத்தில் கிராமம் என்று குறுகியதுபோலும்.

இங்குள்ள சிவலோகநாதசுவாமி முற்காலத்தில் ‘திருமுடியூர் அருட்டனி மகாதேவர்’ அல்லது அருட்டனிப் பெருமானடிகள் என்று வழங்கப்பெற்றார்.

இக் கோயில் கி.பி. 943 ல் மலைநாட்டு வாசியும், சோழனுடைய பெரும்படை நாயகமும், மூலப் பிருத்தியனுமான வேளான் குமரன் என்பவனால் எடுப்பிக்கப்பட்டதாக அறிகிறோம்.

இக் கோயிலில் பராந்தகனுடைய 23ஆம் ஆண்டு முதல் 41ஆம் ஆண்டுவரை பல கல்வெட்டுகள் உள்ளன. பராந்தகனுடைய ஆட்சியின் முற்பகுதிக் கல்வெட்டுகள் இக் கோயில் கற்றளியாக்கப்பட்டபின் மீண்டும் பொறிக்கப்பட்டனபோலும்.

இக் கோயிலின் கருவறை சதுரமானது. அதன் பக்க அளவு 13½ அடி. அர்த்தமண்டபம் 9 அடி முன்னோக்கி நீண்டுள்ளது. இங்கு வழக்கம்போல அமைந்துள்ள ஐந்து தேவகோஷ்டங்களிலும் கணேசர், தட்சிணாமூர்த்தி, விஷ்ணு, பிரமன், துர்க்கை என்ற சிலைகளை முறையே காணலாம்.

**சித்தூர் :**

திருச்சி மாவட்டத்துப் புதுக்கோட்டைப் பகுதியில் பலராலும் அறியப்படாததொரு சிற்றூராகத் தற்போது சித்தூர் காட்சியளிக் கிறது.

கல்வெட்டுகளில் இவ்வூர்ப் பெயர் கடலூர் நாட்டுப் பிரமதேய மான சிற்றையூர் எனவும், இங்குள்ள இறைவன் பெயர் திரு 'அக்நீசு வரத்துப் பரமேசுவரர்' எனவும் காணப்படுகின்றன.

இக் கோயிலிலுள்ள பழைய கல்வெட்டுக் கண்டராதித்தனுடைய 4ஆம் ஆண்டைச் சார்ந்தது. அது கொடும்பாளூரைச் சார்ந்த மகிமாலய இருக்குவேள் ஆகிய பராந்தக வீரசோழன் என்பான் பூசனை நிவேதனங்களுக்கும் ஸ்ரீபலிச் சடங்கின்போது முரசறைவார் ஊதியத்துக்குமாக மூன்று வேலி நிலத்தை நன்கொடையாக வழங்கிய செய்தியை வெளியிடுகிறது. இவ் விருக்குவேள் திருப்பராய்த் துறையில் முகாமிட்டிருந்தபோது குடுமியாமலை, நீர்ப்பழனி, பாலூர், அள்ளூர் என்ற கோயில்களுக்கும் நன்கொடை வழங்கியுள்ளான்.

எனவே, இச் சித்தூர்க் கோயில் முதற் பராந்தகன் இறுதிக் காலத்திலோ கண்டராதித்தனுடைய ஆட்சியின் 4ஆம் ஆண்டுக்கு முன்னரோ எடுப்பிக்கப்பட்ட கற்றளி என்பது உளங்கொளத் தக்கது.

**முற்பட்ட சோழர்களின் கலைப்பாணி :**

முற்பட்ட சோழர்கள் காலக் கோயில்களை மேம்போக்காக நோக்கினால். முதல் ஆதித்தன் காலத்தில் எடுப்பிக்கப்பட்டன வற்றைவிட முதல் பராந்தகன் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட கற்றளி களின் எண்ணிக்கை குறைவே என்பது நன்கு புலனாகும். பராந்தகன் காலத்தனவாக நாம் குறிப்பிட்டுள்ள கோயில்களில் ஒரு சிலவற்றில் காலம் ஒரு கால் வழுவினாலும், நிச்சயமாக அந்தநல்லூர், புள்ள மங்கை, எறும்பூர், உடையார்குடி, திருவாமாத்தூர், திருவாடுதுறை, கிராமம். திருநாமநல்லூர், தொண்டைமாநாடு என்ற ஊர்களில் உள்ள கோயில்கள் பராந்தகன் காலத்தனவே என்பது கல்வெட்டுச் சான்றுகளால் அசைக்க முடியாத வகையில் உறுதி செய்யப்பட் டுள்ளது. எறும்பூரில் உள்ள பழைய கோயிலின் மூன்று தேவ கோஷ்டச் சிலைகளும் நன்கு பாதுகாக்கப்பட்டுள்ளன. இக் கோயிலி லுள்ள முதற் பராந்தகனுடைய 28ஆம் ஆண்டுக் கல்வெட்டினால் பரிவார தேவதைகளுக்கு எட்டுச் சுற்றுக் கோயில்கள் அமைக்கும் வழக்கம் முற்பட்ட சோழர்கள் காலத்தது என்பது உறுதியாகிறது. கட்டட அமைப்பு, சிற்ப நுணுக்கம், கல்வெட்டமைப்பு முதலிய பல

துறைகளிலும் நோக்கப் புள்ளமங்கையில் உள்ள பிரமபுரீசுவரர் கோயிலே முதற் பராந்தகன் காலத்துக் கோயில்களில் தலைமணியாக ஒளிவீசுவது இத் துறையில் பயின்ருர் அனைவருக்கும் ஒப்பமுடிந்த செய்தியாகும்.

**ஆதித்தன் கலைப்பாணி:**

விசயாலயன், முதல் ஆதித்தன், முதற் பராந்தகன் ஆகிய மூவரும் எடுப்பித்த அருங்கலைச் சின்னங்கள் பலவற்றையும் தனித்தனியே கூர்ந்து நோக்கியபின், இம் மூன்று மன்னர்கள் காலத்துக் கலைப் பாணியையும் ஆதித்தன் கலைப்பாணி என்ற பெயரால் வழங்கி, இக் கலைப்பாணியின் முக்கியமான அம்சங்கள் பலவற்றையும் கூர்ந்து நோக்குவோம்.

நான்கு தளங்களையுடைய கற்றளியான விசயாலய சோளீசுவர மும், உருவத்தில் சிறியன எனினும், மதிப்பில் சிறிதும் குறையாதன வாகிய காளியாப்பட்டி, பனங்குடிக் கோயில்களும் விசயாலயன் காலத் துக் கட்டடக் கலை, சிற்பக் கலை என்பனவற்றை விளக்கி நிற்கின்றன.

அவனையடுத்து அரியணையேறிய முதல் ஆதித்தன் காலக் கற்றளிகள் எண்ணிக்கையிலும் தகுதியிலும் மிக முன்னேறிவிட்டன.

ஆதித்தன் காலக் கற்றளிகள் ஒருதளம் முதல் நான்குதளம் வரை அமைந்த விமானம், கிரீவம், சிகரம், ஸ்தூபி என்பனவற்றைக் கொண்டுள்ளன. சிகரம் சதுரமாகவும், உருண்டையாகவும், எண் கோண வடிவினதாகவும் காணப்படுகிறது. அடித்தளம் பெரும் பாலும் சாதாரணமான குழைவுகளையே உடையது. சில இடங்களில் பத்மபடைகளும் யாளி வரிமானமும் வீரரைச் சுமந்த யானை வரிசை களும் அடித்தளத்தின் வெளிப்புறத்தை அணிசெய்கின்றன.

பெரும்பாலும் சதுரவடிவமாக அமைந்துள்ள கருவறை அர்த்த மண்டபத்தோடு இணைக்கப்பட்டுள்ளது. சில கோயில்களில் கருவறை யையும் அர்த்தமண்டபத்தையும் அந்தராளம் இணைக்கிறது. சில கோயில்களில் அர்த்தமண்டபமும் முக மண்டபமும் அந்தராளம் ஒன்ருல் இணைக்கப்பட்டுள்ளன. முக மண்டபங்கள் மூலத்தானத் தோடு இணைக்கப்படாமல் தனியே அமைக்கப்பட்டுப் பிற்பட்ட காலத்தில் கருங்கற் பலகைகளால் மூலத்தானத்தோடு இணைக்கப்பட் டுள்ள அமைப்பைக் கிழையூர், திருவையாறு என்ற கோயில்களில் காணலாம்.

தேவகோஷ்டங்கள் மூன்றாகவோ, ஐந்தாகவோ அமைக்கப்பட்டுள்ளன. தேவகோஷ்டச் சிலைகள் அமைப்பதில் சில வேறுபாடுகள் தொடக்கத்திலிருந்தே ஏற்பட்டுவிட்டன என அறிகிறோம்.

விசயாலய சோளீசுவரத்தில் தேவகோஷ்டங்களே இல்லை. விசலூர்க் கோயிலில் வடபுறத்துத் தேவகோஷ்டத்தில் பிரமன் சிலைக்குப் பதில் பிட்சாடனர் சிலையே உள்ளது.

திருக்கட்டளைக் கோயிலில் தென்புறத் தேவகோஷ்டத்தில் தட்சிணாமூர்த்தியின் சிலைக்குப் பதில் திரிபுராந்தக மூர்த்தியின் சிலை காணப்படுகிறது.

கீழையூர் அவனி கந்தர்ப்ப ஈசுவரக் கிருகம் இரண்டிலும் கிழக்குக் கோஷ்டங்களில் திருமாலுக்குப் பதில் நின்ற திருக்கோலத்திலோ அமர்ந்த திருக்கோலத்திலோ உள்ள முருகப் பெருமான் காட்சி வழங்குகிறார். திருக்கண்டியூர் திருவீரட்டானத்தில் கிழக்குக் கோஷ்டத்தில் திருமால் இருக்கவேண்டிய இடத்தில் அமர்ந்த நிலையில் உள்ள அர்த்தநாரீசுவரரைக் காண்கிறோம். திருவெறும்பூர்க்கோயிலில் ஹரிஹரரும், கும்பகோணம் நாகேசுவரர் கோயிலில் நின்ற திருக்கோலத்திலுள்ள அர்த்தநாரியும், திருக்கட்டளையில் லிங்கோத்பவரும், திருமால் வீற்றிருக்கவேண்டிய மேற்குத் தேவகோஷ்டங்களில் காணப்படுகின்றனர். கருவறையில் இறைவனுக்குப் பின்புறமாக வெளியில் உள்ள தேவகோஷ்டத்தில் முற்காலத்தில் திருமாலின் சிலையே இருந்தது. கருவறை கிழக்கு நோக்கியிருந்தால் கருவறையின் பின்னுள்ள தேவகோஷ்டம் மேற்குக் கோஷ்டமாகும். கருவறை மேற்கு நோக்கியிருந்தால் அதன் பின்புறக் கோஷ்டம் கிழக்குக் கோஷ்டமாகும் என்பது மனங்கொள்ளத்தக்கது.

திருச்செந்துறைக் கோயிலின் தென்புறக் கோஷ்டத்தில் தட்சிணாமூர்த்தியின் தானத்தில் ரிஷபவாகன தேவர் காட்சி வழங்குகிறார். லால்குடியில் வடக்குக் கோஷ்டத்தில் பிரமனுக்குப் பதில் பிட்சாடனரைக் காணலாம்.

பெரும்பாலும் கருவறைக்குப்பின் உள்ள கோஷ்டத்தில் விஷ்ணு சிலையும் தெற்குக் கோஷ்டத்தில் தட்சிணாமூர்த்தியின் சிலையும் வடக்குக் கோஷ்டத்தில் பிரமன் சிலையுமே காணப்படுவது பழைய மரபாகும்.

முதல் ஆதித்தன் காலத்தில் விஷ்ணுவின் தானத்தில் பெரும்பாலும் அர்த்தநாரீசுவரர் இடம் பெற்றார். முதல் பராந்தகன் காலத்தில் லிங்கோத்பவருக்கு அவ்விடம் வழங்கப்பட்டது. எனினும்,

கருவறையின் பின் உள்ள கோஷ்டத்தில் திருமாலே அணி செய்து கொண்டிருப்பதை நங்கவரம் கிராமம் என்ற ஊர்க்கோயில்களில் காண்கிறோம்.

கோஷ்டங்களை அணி செய்யும் வகையில் வெட்டப்பட்டுள்ள மகர தோரணங்களின் உச்சியில் அழகிய வேலைப்பாடுடைய தெய்வங் களின் சிற்பங்கள் செதுக்கப்பட்டன.

கொடுங்கைக் கீழ்ப் பெரும்பாலும் பூதகண வரிசையே உள்ளன. ஆனால், கீழையூரில் ஹம்ஸ வரிசையைக் காண்கிறோம். கொடுங்கை யின்மேல் பெரும்பாலும் யாளி வரிமானமே காணப்படுகிறது.

கொடுங்கையை அணி செய்யும் கூடுகளுக்குள் மனிதத் தலை, அன்னம் முதலியனவும், அவற்றின் உச்சியில் சிங்கத் தலைகளும் செதுக்கப்பட்டுள்ளன கொடுங்கைகளின் ஓரங்களில் வட்டங்களும், மூலைகளில் கொடிக்கருக்குகளும் அணி செய்கின்றன.

கருவறையின் மேலுள்ள தளங்களில் சாலைகளும் கூடங்களும் கோஷ்டச் சிலைகளுடன் காட்சி வழங்குகின்றன.

சுற்றுக் கோயில்கள் எட்டு அமைக்கப்பட்டன. அவற்றின் சுவடு களை விசயாலய சோளீசுவரம், திருக்கட்டளை, கீழையூரிலுள்ள இரு கற்றளிகள், கொடும்பாளூர் முசுகுந்தீசுவரம்ஆகியவற்றில் காணலாம்.

அரைத்தூண்கள், தேவகோஷ்டங்கள் ஆகியவற்றின் அடித்தளத் தின் கீழ்க் கருவறைச் சுவர்களிலும் அர்த்த மண்டபச் சுவர்களிலும் சிற்றுருவச் சிலைகளின் பலகைகள் (panels of miniature - sculptures) அணி செய்வதைக் கும்பகோணம் (நாகேசுவரம்), கீழூர், திருக்கண்டியூர், தக்கோலம் ஆகிய ஊர்க் கோயில்களில் காண்கிறோம்.

முதற் பராந்தகன் காலந்தொட்டுச் சிவன் கோயில்களில் உமா பட்டாரியாரின் உலோகத் திருமேனிகள் நிறுவப்பட்டன. போகேசுவரி என்ற பெயரில் வழங்கப்பட்ட அவ் வுலோகச் சிலைகள் கருவறையி லாவது, அந்தராளத்திலாவது, அர்த்தமண்டபத்திலாவது நிறுவப் பட்டன. பெரும்பாலும் அவைகளே அம்பிகையின் பழங்கால உலோகச் சிலைகளாம்.

முற்பட்ட சோழர்கள் காலத்தில் அம்பிகைக்கு என்று தனிக் கோயில் கட்டப்படவில்லை. மதுரை மீனாட்சி கோயிலும் காஞ்சி காமகோட்டமுமே (காமாட்சி அம்மன் கோயில்) தென்னாட்டில் மிகப் பழைமையான தனிப்பட்ட அம்மன் கோயில்களாகும்.

இப் பழங் கோயில்களில் மூலத்தானத்தையும் சுற்றுக் கோயில் களையும் உள்ளடக்கிய மதிற்சுவரும், பலிபீடமும், துவஜஸ்தம்பம் என்பனவும் இடம்பெற்றிருந்தன. அர்த்தமண்டபத்தின் முகப்பில் காணப்படும் துவாரபாலகர்களைத் தவிர மதிலின் முகப்பில் காணப் படும் வெளிக் கோபுரத்தின் இருமருங்கிலும் துவாரபாலகர் சிலைகளை அமைக்கும் வழக்கமும் பண்டு அருகிக் காணப்பட்டது என்பதற்குக் கீழையூர் அவனி கந்தர்ப்ப ஈசுவரகிருகம் ஓர் எடுத்துக்காட்டாக உள்ளது.

முற்பட்ட சோழர்கள் காலக் கோயில்களின் திருச்சுற்றுக்குள் தலவிருட்சங்களும், கோயில்களின் எதிராகவோ, கோயில்களை ஒட்டியோ திருக்குளங்களும் இருந்த செய்தியையும் கல்வெட்டுகளால் உணர்கிறோம்.

## சுந்தர சோழன் காலம்

சுந்தர சோழன் காலத்தனவாக ஐந்து கோயில்கள் குறிப்பிடப் பட்டுள்ளன.

திண்டிவனத்திலுள்ள திருத்திண்டீசுவரர் கோயிலின் மூலத் தானமும் அர்த்தமண்டமும் சுந்தர சோழன் காலத்தன. வேளைச் சேரியிலுள்ள காலப்பிடாரி கோயில் ஆலம்பாக்கம் காலப்பிடாரி கோயிலைப்போலப் பழைய சோழர் காலத்துத் தனிப்பட்ட சப்தமாதர் கோயிலாகும்.

மீஞ்சூர் வரதராசப் பெருமாள் கோயில் சோழகுல சுந்தர விண் ணகர ஆழ்வார் கோயில் என்று பழங்காலத்தில் வழங்கப்பட்டது. சுந்தர சோழனுடைய 3ஆம் ஆண்டைச் சேர்ந்த இக் கோயில் அண்மைக் காலத்தில் திருப்பணி செய்யப்பட்டுத் தன் பழஞ்சிறப்பை இழந்துவிட்டது.

சுந்தர சோழன் காலத்து மிகச் சிறந்த கோயில் கொடும்பாளூரில் உள்ள மூவர் கோயிலாகும். கொடும்பாளூர் திருச்சியிலிருந்து 23 கல் தொலைவும், புதுக்கோட்டை நகரிலிருந்து 25 கல் தொலைவும் உள்ளது. இது கோயில் நகரமாகும். இங்கு ஒரு காலத்தில் 108 கோயில்கள் இருந்தன. அக் கோயில்களில் தற்போது முசுகுந்தேசுவரமும் மூவர் கோயிலுமே ஓரளவு நன்னிலையில் உள்ளன. முதல் ஆதித்தன் காலத்தில் இங்கு எடுப்பிக்கப்பட்டிருந்த திருப்பூதீசுவரம் என்ற கோயில் அழிந்துவிடவே, அங்கிருந்த கல்வெட்டுகளைக் கொண்ட தூண் ஒன்று தற்போது முசுகுந்தேசுவரக் கோயில் முன்மண்டபத்தில்

இடம் பெற்றுள்ளது. முசுகுந்தேசுவரமாகிய முதுகுன்றமுடையார் கோயில் முதல் பராந்தகனுடைய 14ஆம் ஆண்டில் மகிமாலய இருக்கு வேள் என்பவனால் எடுப்பிக்கப்பட்டது. இவனே, சித்தூர்க் கோயிலையும் எடுப்பித்தவனாவான்.

முசுகுந்தேசுவரம் :

இது இருதளக் கற்றளி. கிரீவத்திலுள்ள நான்கு தேவகோஷ்டங்களின் உச்சியிலும் சிங்கத் தலைகள் உள்ளன. சிகரம் சதுரமாகவும் நடுவில் பிதுங்கியும் அமைந்துள்ளது. ஸ்தூபியும் சதுரமானது. இவற்றை நோக்க இது ஆதித்தன் காலத்ததாகிய திருக்கட்டளைக் கோயிலை ஒத்திருக்கிறது. சுற்றுக் கோயில்கள் எட்டில் நான்கு கோயில்களே இக் காலத்தில் உள்ளன. வடகிழக்கு மூலையில் அமைந்துள்ள பைரவர் கோயில், எறும்பூர்க் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள எட்டுச் சுற்றுக் கோயில்களில் பைரவர் கோயில் ஒன்று என்பதற்கு எடுத்துக் காட்டாக உள்ளது. நீலகண்ட சாஸ்திரியார் முதலியோர் குறிப்பிடுவதுபோல நந்தி தேவர் சுற்றுக் கோயில் தேவதைகளைச் சார்ந்தவரல்லர். முற்சோழர் காலத்தில் அவருக்குப் பதிலாகப் பைரவரே சுற்றுக் கோயில் தேவதைகளைச் சார்ந்தவர் என்பது உணரப்படுகிறது.

மூவர் கோயில் :

மூவர் கோயில் என்பது மூன்று மூலத்தானங்களை உடைய கோயில் என்பதாகும். அவ் வாலயங்களில் தற்போது இரண்டு மூலத்தானங்களே உள்ளன.

இவ் விரண்டு மூலத்தானங்களும் 21 அடி பக்க அளவுடைய சதுரமான கருவறைகளையும் 18 அடி பக்க அளவுடைய சதுரமான அர்த்த மண்டபங்களையும் உடையன. அர்த்த மண்டபத்தின் மேற்கூரை தற்போது காணப்படவில்லை. 91 அடி நீளம் 41 அடி அகலமுடைய முக மண்டபமும், நந்தி மண்டபமும், பலிபீடமும், துவஜஸ்தம்பமும், 15 சுற்றுக் கோயில்களும் இவற்றை உள்ளடக்கிய வெளி மதிலும் இருந்த சுவடுகள் காணப்படுகின்றன.

மிக உயர்ந்த திராவிடக் கட்டடக் கலைக்கு இக் கோயில் எடுத்துக் காட்டாக உள்ளது.

ஐந்தளி :

மூவர் கோயிலின் தென்கிழக்கில், பஞ்சாயதனக் கோயில் என்ற தொகுப்பின் இந்தியாவின் பல பாகங்களிலும் காணப்படும் ஒரு வகைக் கோயில் இருந்த சுவடு காணப்படுகிறது. ஐந்தளி என்ற

பெயரில் அமைந்த இக் கோயிலின்கண் பொதுவானதொரு மேடையின்மேல் மூலத்தானம், நான்கு மூலைகளிலும் நான்கு கோயில்கள் ஆகியவற்றின் அடித்தளச் சுவடுகளையே காணலாம்.

## இரண்டாம் ஆதித்தன் காலம்

**புன்செய்—நல்துணை ஈசுவரம் :**

நல்துணை ஈசுவரம் திருநனிபள்ளி உடையார் கோயில் என்று பழங் கல்வெட்டுகளில் காணப்படுகிறது. இங்குள்ள கல்வெட்டுகளில் பழைமையானது ‘பாண்டியன் தலைகொண்ட பரகேசரி வர்மனை’ இரண்டாம் ஆதித்தன் காலத்தில் வெட்டப்பட்டதாகும். இக் கல்வெட்டு மூலத்தானத்தில் இடம்பெருமல் சண்டேசுவரர் கோயிலில் காணப்படுவதையும், மூலத்தானத்திலுள்ள பழைய கல்வெட்டு முதல் இராசராசனுடைய 22ஆம் ஆண்டைச் சார்ந்தது ஆவதையும் கொண்டு, இக் கோயில் முதல் இராசராசன் காலத்தில் புதுப்பிக்கப் பட்டதெனத் தோன்றுகிறது.

இக் கோயில் கிழக்குப் பார்த்த சந்நிதியுடையது. கருவறை சதுரமானது. கருவறையையும் அர்த்தமண்டபத்தையும் அந்தராளம் இணைக்கிறது. அர்த்தமண்டபத்தை நான்கு தூண்களும் நான்கு அரைத் தூண்களும் தாங்கி நிற்கின்றன. அதன் முகப்பில் இரு துவாரபாலகர் சிலைகள் உள்ளன. இரு பக்கங்களிலும் வாயிற்படிகளைக் கொண்ட மற்ருெரு அந்தராளம் அர்த்த மண்டபத்தையும் முதல் இராசராசன் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட முகமண்டபத்தையும் இணைக்கிறது. தேவகோஷ்டங்கள் நடுவில் சிற்பங்கள் கொண்ட மகரதோரணங்களை உடையன.

தேவகோஷ்டங்களில் தென்புறம் கணேசர், அகத்தியர் , தட்சிணுமூர்த்தி சிலைகளையும், மேற்புறம் லிங்கோத்பவர் சிலையையும், வடபுறம் பிரமன், துர்க்கை ஆகிய சிலைகளையும் காணலாம்.

கொடுங்கையின் கீழ்ப் பூதகண வரிசையும், கொடுங்கையின்மேல் யாளி வரிமானமும் உள்ளன. கொடுங்கையை அணி செய்யும் கூடுகள் சிற்ப வேலைப்பாடுடையன.

திருக்கண்டியூர், குடந்தை (நாகேசுவரம்), புள்ளமங்கைக் கோயில்களைப்போலவே, இக்கோயிலிலும் 64 வரிசைகளை உடைய ‘சிற்றுருவச் சிலைகளை’க் காணலாம்.

இக் கோயிலின் உருண்டையான சிகரம் பிற்காலத்தில் செங் கல்லாலும் சுண்ணும்பாலும் எடுப்பிக்கப்பட்டதாகும்.

இரண்டாம் ஆதித்தன் தந்தை சுந்தர சோழன் காலத்திலேயே முடிசூடி ஆட்சியாண்டுகொள்ளத் தொடங்கியதாலும், அவன் மிக இளமையிலேயே கொலை செய்யப்பட்டதாலும், அவன் ஆட்சியாண்டு ஐந்துக்குமேல் காணப்படாமையாலும், அவன் காலத்தையும் அவன் தந்தை சுந்தர சோழன் காலத்தோடு இணைத்துவிடலாம்.

## உத்தம சோழன் காலம்

செம்பியன் மாதேவி காலத்தில் அவள் நேர்முகமான மேற் பார்வையில் புதுக்கோயில்கள் சில எடுப்பிக்கப்பட்டன. பழங் கோயில்கள் பல புதுப்பிக்கப்பட்டன. அவை பெரும்பான்மையும் செம்பியன் மாதேவியின் புதல்வனான உத்தம சோழன் ஆட்சியில் நிகழ்ந்தனவாம். அவ் வம்மையாரால் திருப்பணி செய்யப்பெற்ற கோயில்களில் பன்னிரண்டு கல்வெட்டாதாரங்களால் நமக்குப் புலனாகி யுள்ளன. அவற்றுள் மேம்பட்டது திருநல்லமாகிய கோனேரிராசபுரத் தில் அவ் வம்மையார் தம் கணவர் நினைவுக் குறியாக எடுப்பித்த உமா மகேசுவரர் கோயிலாகும்.

**கோனேரிராசபுரம்:**

பழங்காலத்தில் கோனேரிராசபுரம் திருநல்லம் என வழங்கப் பட்டது. அங்குள்ள உமாமகேசுவரர் ‘உமைக்கு நல்லான்’ என வழங்கப் பட்டார். இங்கு 7ஆம் நூற்றாண்டிலிருந்த பழங்கோயிலை அப்பர் பாடியுள்ளார். இக் கோயில் உத்தம சோழனுடைய 3ஆம் ஆண்டிற்கு முன்னரே செம்பியன் மாதேவியால் கற்றளியாக எடுப் பிக்கப்பட்டதாகும். இக் கோயிலில் கண்டராதித்தர் சிவலிங்கத்தை வழிபாடு செய்வதாக ஒரு படிமம் அமைக்கப்பட்டு, அதன் அடியில் விளக்கமாகக் கல்வெட்டும் வெட்டப்பட்டுள்ளது. இக் கோயிலுக்குச் செம்பியன் மாதேவியும் உத்தம சோழனும் தாராளமாக நன் கொடைகள் வழங்கியுள்ளனர்.

இது மேற்கு நோக்கிய சந்நிதியை உடையது. கருவறை 20 அடி பக்கமுடை சதுரமாகும். கருவறையையும் 20 அடி நீளமுடைய அர்த்தமண்டபத்தையும் அந்தராளம் இணைக்கிறது. அடித்தளத்தில் அதிக வேலைப்பாடுகள் இல்லை. தேவகோஷ்டங்களில் அகத்தியர், நடராசர், கணேசர், தட்சிணாமூர்த்தி என்பார் தென் புறமும், லிங்கோத்பவர் கீழ்ப்புறமும், பிரமன், பிட்சாடனர், துர்க்கை, அர்த்தநாரி என்பார் வட புறமும் காணப்படுகின்றனர்.

மூலத்தானத்தைச் சுற்றிக் கற்றூண்கள் தாங்கி நிற்கும். மேற்றளம் மூடப்பட்ட தாழ்வாரமாகிய 'திருநடைமாளிகை' முதல் இராசராசன் காலத்தில் எடுப்பிக்கப்பட்டதாகும்.

பிற்காலத்தில் கட்டப்பட்ட முகமண்டபம் மூன்றும் குலோத் துங்கன் கல்வெட்டில் புகழாபரண மண்டபம் என்று குறிக்கப்பட்ட மண்டபம்போலும்.

பிற்பட்ட காலத்ததாகிய சிகரம் எண் பட்டை வடிவாய் நடுவில் பிதுக்கங் கொண்டுள்ளது.

இது புதுக் கலைப்பாணியில் அமைக்கப்பட்ட முதற் கோயிலாகும். இதனைச் செம்பியன் மாதேவி கலைப்பாணி எனலாம். இக் கோயிலில் திரிபுராந்தக மூர்த்தி, ரிஷப வாகனர், கணபதியார் என்ற உலோகத் திருமேனிகள் உத்தம சோழனுடைய காலத்தில் நிறுவப்பட்டுப் பூசனை நிவேதனங்கள் உடையனவாயின. இச் சிலைகள் உத்தம சோழன் காலத்தவை. ஒரு மனிதனைக் காட்டிலும் அதிக உயர முடைய உன்னதமான நடராசருடைய செப்புத் திருமேனி, கல்யாண சுந்தரர் முதலிய உலோக விக்கிரகங்கள் இடைக்காலச் சோழர்கள் காலத்தன (கி.பி. 985—1070) ஆகலாம்.

செம்பியன் கலைப்பாணியில் அமைந்த ஏனைய கோயில்கள் திரு விடந்தை, திருவெண்ணெய்நல்லூர், கருத்தட்டாங்குடி செம்பியன் மாதேவி, விருத்தாசலம், கண்டராதித்தம், ஆடுதுறை, குத்தாலம், மயூரம் என்பன.

**செம்பியன் மாதேவி கலைப்பாணி:**

முற்பட்ட சோழர் காலத்துத் திராவிடக் கட்டடக் கலையில் ஆதித்தன் காலக் கலைப்பாணியை முன்னர் நோக்கினோம். கலைப் பாணியில் அடுத்த நிலை உத்தம சோழன் காலத்தது. இக் காலத்தில் கருவறை, அர்த்தமண்டபம் இவற்றின் வெளிப்புறச் சுவர்களில் அமைக்கப்பட்ட தேவகோஷ்டங்களின் எண்ணிக்கை அதிகரித்தது. பிற்பட்ட பல்லவர் காலத்தில் கருவறைச் சுவர்களில் மூன்று அல்லது ஐந்து தேவகோஷ்டங்களே இருந்தன. முற்பட்ட சோழர் காலத்தில் உத்தம சோழன் காலம்வரை கருவறை, அர்த்தமண்டபம் இவற்றின் வெளிச் சுவர்களில் ஐந்து தேவகோஷ்டங்கள் அமைக்கப்பட்டன.

விக்கிரமகேசரியால் சுந்தர சோழன் காலத்தில் கொடும்பாளூரில் எடுப்பிக்கப்பட்ட மூவர் கோயில் தனக்கென்றமைந்த தனிப் பாணியில் எடுப்பிக்கப்பட்டுள்ளது. இம் மூவர் கோயிலில் மூன்று

மூலத்தானங்களும் 15 சுற்றுக் கோயில்களும் அமைந்துள்ளமை இதன் தனிச் சிறப்பாகும். செம்பியன் மாதேவி காலத்தில் தேவகோஷ்டச் சிலைகள் ஐந்து என்ற எண்ணிக்கையைத் தாண்டி, 9 முதல் 16 வரை அமைக்கப்பட்ட செய்தியை மயூரம், திருப்புறம்பியம், கருத்தட்டாங் குடி என்ற ஊர்களில் உள்ள கோயில்களில் காணலாம். இக் கோயில் களின் வெளிச் சுவர்கள் தேவகோஷ்டச் சிலைகளின் எண்ணிக்கையை அதிகரித்தல் என்ற புதுக்கலை முறை ஒன்றற்காகவே பலபல இடங் களில் பழைய கோயிற் சுவர்களில் புதுக் கோஷ்டங்கள் குடையப் பெற்று அருமையான கல்வெட்டுச் செய்திகள் சிதைக்கப்பட்டுக் காணப்படுகின்றன.

ஐந்துக்கு மேற்பட்ட எண்ணிக்கையுடைய தேவகோஷ்டக் கோயில்கள் செம்பியன் மாதேவி கலைப்பாணியுடையன எனலாம்.

பல்லவ மன்னர்கள் ஆதரவில் வளரத் தொடங்கிய திராவிடக் கலையும் கட்டட அமைப்பும் முற்பட்ட சோழர்கள் ஆட்சியில் உச்ச நிலையை அடைந்து மிளிர்ந்தன. கலைகளை வளர்த்த திறத்தில் முற்பட்ட சோழர் காலம் மற்ற எந்த வமிசத்தவர் ஆட்சிக் காலத் திற்கும் குறைந்ததன்று என்பதை இக் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட கோயில்கள் நிறுவுகின்றன. இக் கோயில்களின் வரலாறு வெகுகாலம் வரை அறிவுக்கு விருந்தாகாமல் புதையுண்ட செல்வங்களாகவே இருந்துள்ளது. முதல் இராசராசன், முதல் இராசேந்திரன் ஆகியவர் காலத்துக் கம்பீரான பெருங்கோயில்களை நோக்க முற்பட்ட சோழர்கள் காலக் கோயில்கள் சிற்றுருவக் கற்றளிகளாதலின் மங்கியே காணப்படலாம். ஆனால், நுணுக்கமான சிற்பக் கட்டடக் கலையமைப்பில் இம் முற்பட்ட சோழர் காலம், இந்தியாவில் கலை களுக்குப் பொற்காலம் வழங்கிய வேறு எந்த வமிசத்தவர் ஆட்சிக் காலத்துக்கும் இளைத்ததன்று என்பதை நிறுவுவதற்கு முன்னோடியாக அமைந்துள்ள இந் நூல் திராவிடக் கட்டடக் கலையில் ஆர்வம் கொள்ளும் அறிஞர் பலருக்கும் இத் துறையில் பெருக்கம் வழங்கும் என நம்புகிறோம்.

# பிற்சேர்க்கை - I

## காலவரையறையைப்பற்றிய S. பாரட்டு அவர்களின் கருத்துகள் :

லண்டன் மாநகரிலுள்ள பிரிடிஷ் கண்காட்சிச் சாலையைச் சார்ந்த அறிஞர் பாரட்டு என்பவர் 'முற்பட்ட சோழர் காலச் செப்புத் திரு மேனிகள்' என்ற நூலினை வெளியிட்டுள்ளார். நமது நூலோடு தொடர்புடையனவாக அவர் கூறும் கருத்துகள் சிலவற்றை இங்கு ஆராய்வோம்:

இவ்வாசிரியர் கருத்துப்படி முற்பட்ட சோழர் காலம் கி. பி. 850-க்கும் கி.பி. 1014-க்கும் உட்பட்ட காலமாகும். இதனையே மீண்டும் முற்பகுதி (கி. பி. 850—940), இடைப்பகுதி (கி. பி. 940—970), பிற்பகுதி (கி. பி. 970—1014) என மூவகையாக இவர் பிரித்துள்ளார்.

இவர் செம்பியன் மாதேவியாரின் காலமே சிற்பக் கலையின் உச்ச நிலை என்றும், அக் காலத்தில்தான் ஒப்புயர்வற்ற செப்புத் திரு மேனிகள் வார்க்கப்பட்டன என்றும், இக் கலையின் வீச்சு முதலாம் இராசராசன் காலத்தோடு முற்றுப்பெற்று விட்டது என்றும் குறிப் பிடுகிறார். இவர் குறிப்பிட்டபடிச் செம்பியன் மாதேவியின் காலத்தில் கலை உச்ச நிலையை அடைந்தது என்பதை உறுதி செய்தாலும், அச் சிரிய நிலை சோழர் காலம் முழுவதும் தொடர்ந்து இருந்த செய்தி உளங் கொளத்தக்கது.

கோனேரிராசபுரத்து உமாமகேசுவரர் கோயிலிலுள்ள ரிஷப வாகன தேவர், திரிபுராந்தகர், கணபதி ஆகிய சிலைகளும் (கி.பி. 969—977) திருவெண்காட்டிலிருந்து புதைபொருளாகக் கிடைத்துள்ள ரிஷபவாகன தேவர், அவர் தேவிமார் (கி. பி.

1011—12) ஆகிய சிலைகளும் தஞ்சை அழகர் சிலையும் (கி. பி 1014) செம்பியன் மாதேவியாரின் கலைப்பாணியைச் சேர்ந்தவை.

இதே கலைத்திறத்தின் சீரிய நிலையை இராசராசன் மகனான முதல் இராசேந்திரன், அவன் மகன் முதல் இராசாதிராசன் என்பவர் காலத்திலும் காணலாம். முதல் இராசேந்திரன் காலத்ததாகிய கங்கை கொண்ட சோளீசுவரத்துக் கார்த்திகேயர் சிலையும் (கி. பி. 1030) முதல் இராசாதிராசன் காலத்தனவாகிய திருவெண்காட்டுப் பிச்ச தேவர் (கி. பி. 1045—48), அர்த்தநாரீசுவரர் இவர்தம் சிலைகளும் (கி. பி. 1047) இதற்கு எடுத்துக்காட்டுகளாகும்.

முதல் பராந்தகன் காலத்ததாகிய கோமுக்தீசுவரர் கோயிலில் உள்ள, போலி அந்தராளம்' (false antarala), எண்ணிக்கை மிகுதிப் படுத்தப்பட்ட தேவ கோஷ்டங்களுள் ஒன்றில் அகத்தியர் சிலை இடம் பெற்றிருத்தல் ஆகியவற்றைக் கொண்டு இக் கோயிலை முற்பட்ட சோழர்கள் காலக் கலைப்பாணியின் இடைக்காலத்தது என்று அறிஞர் பாரட்டு குறிப்பிடுகிறார். பராந்தகனுடைய மூன்றாம் ஆண்டில் கற்றளிப் பிச்சனால் தொடங்கப்பட்ட இக் கோயிலைப் (139—1925) பராந்தகன் 500 கழஞ்சுப் பொன் வழங்கிக் குடப்படையையும் அதற்கு மேற்பட்ட கூறுகளையும் கட்டி முடித்தான் (143—1925). ஆசிரியர் குடப்படையைக் குமுதப்படை என்று மாற்றிக் குறித்திருப் பது ஏற்றுக் கொள்ளத்தக்கது அன்று.

விசயாலயன் காலந்தொட்டு மன்னர் ஒவ்வொருவர் காலத்திலும் கட்டிடக் கலையில் சிற்சில அரிய மாறுதல்கள் காணக்கிடக்கின்றன.

விசயாலய சோளீசுவரம் தனி அமைப்புடையது: ஆதித்தன் காலத்துச் சீநிவாசநல்லூர் குரங்கநாதர் கோயில், இருதளங்கள் கொண்ட கருவறை அமைப்போடு, விமானத்தில் சில தேவதைகளின் சிலைகளைப் பெற்றுள்ளது. திருக்கோவலூரையடுத்த கீழூர், திருவிச லூர், திருவக்கறை என்ற ஊர்க்கோயில்கள் திருவாவடுதுறைக் கோயிலைப் போலப் பெரிய திட்டத்தில் அமைக்கப்பட்ட கருவறையை உடையன. திருவாவடுதுறைக் கோயிலில் காணப்படும் ஒரு சில புதுமைகளைக் கொண்டு அதன் காலமாகிய கி. பி. 940 முதல் கலைப் பாணியின் இடைப் பகுதி தொடங்குகிறது என்று கொள்ள வேண்டு வது இன்று. செம்பியன் மாதேவி எடுப்பித்த கற்றளிகளில் ஐந்துக்கு மேற்பட்ட தேவகோஷ்டங்களையும், அந்தராளத்தையும் காணலாம். சில கோயில்களில் பழைய கட்டடத்திலேயே புதிய கோஷ்டங்கள் செதுக்கப்பட்டுச் சிலைகளும் அமைக்கப்பட்டதைக் காண்கிறோம்.

எறும்பூர், கிராமம் திருநாமநல்லூர் என்ற ஊர்க்கோயில்களின் கலைப்பாணி வேறுபட்டுள்ளது என்று இவ்வாசிரியர் கூறுவது ஏற்கத் தக்கதாக இல்லை. கலைப்பாணியைக் கூர்ந்து நோக்குமிடத்து முற்பட்ட சோழர்கள் காலக் கோயில்களின் கலைப்பாணியை ஆதித்தன் கலைப்பாணி, செம்பியன் மாதேவி கலைப்பாணி என்று வகுத்து முன்னர் யான் குறிப்பிட்டிருப்பதே வலியுடைத்தாதல் உணரப்படும்.

## விசயாலய சோளீசுவரம்

இக் கோயிலின் பெயர் 13ஆம் நூற்றுண்டினதாகிய பாண்டியர் கல்வெட்டொன்றுல் அறியப்படுவது கொண்டு, இக் கட்டிடக் கலையில் பாண்டியர் பாணி காணப்படுவதாகவும், இது 13ஆம் நூற்றுண்டில் மல்லன் விடுமனுல் புதுப்பிக்கப் பெற்றதாகவும் அவர் குறிப்பிடுகிருர். சோழநாட்டின் தென்னெல்லையில் அமைந்துள்ள இக் கோயிலில் பல்லவ கலைப்பாணியின் காலப் போக்கிலேற்பட்ட வளர்ச்சியே காணப்படுகிறது. 9ஆம் நூற்றுண்டிலேயே புதுப்பிக்கப்பெற்ற இக் கோயிலில் பாண்டியர் கலைப்பாணி கலந்துள்ளது என்று குறிப்பிடும் செய்தி பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. பொதுவாகப் பல்லவர் காலம் முதற்கொண்டு திராவிட கட்டடக்கலை தெற்குநோக்கிப் பரவத் தொடங்கியது. அத்தகைய பரவுதலின் போது நர்ட்டின் பகுதிகள் தோறும் சிற்சில மாறுதல்கள் இருக்கலாம். பல்லவர், சோழர், பாண்டியர் என்பவர்களுக்கே உரிய தனிக் கலைச் சிறப்புகள் எவை என்ற செய்தி அறுதியிட்டு உறுதிசெய்யப்படும் வரை சோழர் காலக் கோயிலில் பாண்டியர் கலை கலந்துள்ளது என்று உறுதியாகக் கூறுதல் இயலாது.

## கீழைப்பழுவூர்

இவ்வூர்த் திருவாலந்துறை மகாதேவர் கோயில் கருவறை அர்த்தமண்டபம் ஆகிய இவற்றின் வெளிப்புறச் சுவர்களில் முதல் பராந்தகனுடைய பல கல்வெட்டுகள் உள. தேவகோஷ்டச் சிலைகளும் அக் காலத்தனவே. இங்ஙனமாகவும், பாரட்டு இச் சிலைகள் உத்தம சோழன் காலத்தன என்று கூறுவது அமைவுடைத்தாதலின்று.

மேலும் முதல் ஆதித்தன் காலம் முதல் இராசராசன் காலம் முடிய வாழ்ந்த பழுவேட்டரையர் என்ற பல சிற்றரசர்களின் காலத்தை ஆராய்வதும் சிக்கலான செயலாகும். மேலும் மறவன் கண்டன், கண்டன் மறவன் என்ற இரு தலைவர்கள்தான் இக்காலத்தில் வாழ்ந்தனர் என்று கொள்வதும் வியக்கத்தக்கதே.

## கொடும்பாளூர்

கலைப்பாணியின் காலத்தை மூன்றாகப் பிரித்துக் காணும் அவருக்குக் கொடும்பாளூரில் பூதிவிக்கிரம கேசரி எடுத்த மூவர் கோயில் ஒரு கணக்கிலும் அடங்காது போகவே, அவர் இக் கோயிலில் தென்னாட்டுப் பாணி ஊடுருவி இருக்கலாம் எனவும் காலப் போக்கிற்கு ஏற்பக் கலைப்பாணி மாறாமல் முதற் பகுதிப் பாணி தடைப்பட்டும் இருக்கலாம் என்றும் கூறிய செய்தி உளங்கொளத்தக்கது அன்று.

கோயில் கட்டடச் சிலைகளின் காலத்தை அறிய விரும்புவோர் முதன் முதல் கோயில் எடுக்கப்பட்ட காலத்தை நிர்ணயம் செய்ய வேண்டும். மேலும் கோயில்களில் பிற்காலத்தில் செதுக்கப்பட்ட சிலைகளை விடுத்துப் பழைய சிலைகளையே ஆராய்தல் வேண்டும். ஒரே காலத்துச் சிலைகள் எல்லா அம்சங்களிலும் ஒத்திருக்க வேண்டும் என்பதில்லை. சிற்பியின் கைத்திறம், மனநிலை, காலநிலை, வள்ளல்களின் ஆதரவு, நாட்டுச் சூழ்நிலை என்ற பல காரணங்களால் கலைப் பாணியில் சிற்சில சிறிய வேறுபாடுகள் ஏற்படுவது தவிர்க்க முடியாத நியதியாகும்.

இந் நூலில் காணப்படும் பல அரிய செய்திகள் நம் கவனத்துக் குரியன. பொதுவாக வேற்று நாட்டவராகிய இவ்வாசிரியரின் கலை ஆர்வமும், ஊக்கமும், புத்தகத்திலுள்ள விளக்கப்படங்களும் நம் போற்றுதலுக்கு உரியன (Early Chola Bronzes-Douglas Barrett).

# பிற்சேர்க்கை - II

## IV. TEMPLES OF SUNDAR CHOLA'S TIME

1. The Larger Leiden grant (Ep. Ind.)

2. The Karandai Tamil Sangam Copper Plate grant. (A.R.I.E. 1949-50, nos. 57 & 58 A.)

3. The Tiruvalangadu Copper Plate grant

4. The Ambil Plates

5. Transactions of the Archaeological Society of South India 1958-59 by T. N. Subrahmanyan. (refers to *Sunder Solap-perum-palli*).

### TEMPLES

1. *Kodumbalur* - Tiruchy district, *Muvarkoyil* :

   1. Madras Epi. Report - 129-141 of 1907
   2. Inscriptions (Text) of the Pudukkottai State
   3. A Manual of the Pudukkottai State Vol. II, Part II (pp. 1033 to 1035 and 1039), by K. R. Venkatarama Ayyar.
   4. Journal of Indian Museums, Vol. XIV-XVI, 1958-60 Kodumbalur - Muvarkoyil by the Author
   5. Journal of Oriental Research, Madras, Vol. VII, pp. 1-20.
   6. Journal of the Royal Asiatic Society of Great Britain, London, nos. January, 1934 and July, 1935
   7. Epigraphia Indica, Vol. XXXII, no. 10. Kilur Inscription of Nandivarman, yr. 16.

2. *Kamarasavalli* - Tiruchy district, *Karkotesvara Temple* :

   Madras Epi. Report, nos. 61-95 of 1914.

3. *Tindivanam* - South Arcot district, *Tintrinisvarar Temple :*

   Madras Epi, Report, 141-146 of 1900
   " 204-218 of 1902
   " 30-35 of 1905.

4. *Velachcheri* - Chingleput district:
   1. Saptamatrika (Selliyaman) Temple
   2. Dandisvarar Temple
      Madras Epi. Report nos. 302-317 of 1911

5. *Minjur* - Chingleput district, *Varadaraja Perumal Temple.*

   Madras Epi. Report 133-134 of 1916.

## V. TEMPLES OF ADITYA II's TIME

1. *Punjai* : Tanjavur district, *Naltunai isvaram Udaiyar* - Temple, (*Tiru-nani-Palli-Udaiyar*)

   Madras Epi. Report nos. 180-197 of 1927.

2. *Perungudy* - Tiruchy district. *Agastisvarar Temple* (*Tirupperumudi Paramesvarar*)

   Madras Epi. Report nos. 392-397 of 1939-40.

## VI. TEMPLES OF UTTAMA CHOLA'S TIME

1. The Large Leiden Copper Plate Grant
2. The Tiruvalangadu Copper Plate grant
3. Uyyakondam Tirumalai (Sembiyan Mahadevi)

   Madras Epi. Report no. 95 and 96 of 1892.

4. *Vriddhachalam*

   Madras Epi. Report nos. 47 and 48 of 1918.

## TEMPLES OF UTTAMA CHOLA'S TIME

1. *Koneri Rajapuram* - Tanjavur district :
   Umamakesvara Temple (Tirunallam)
   Madras Epi. Report no. 450 of 1908
   Madras Epi. Report nos. 622-662 of 1909
   S. I. I. III, 3, 151 (635 of 1909)
   S. I. I. III, 3, no. 147 (626 of 1909)
   S. I. I. III, 3, no. 130 (638 of 1909).

2. *Aduturai* - Tanjavur district, *Apatsahayesvarar Temple*
   Madras Epi. Report, nos. 356, 370 of 1907.

3. *Tirukkodikkaval* - Tanjavur district, *Tirukkotisvarar Temple*
   Madras Epi. Report, 9-58 of 1930-31.

4. *Kuttalam* - Tanjavur district, *Cholisvarar (Ukta vedisvarar or Sonaavarivar) Temple.*

   Madras Epi. Report nos. 477-495 of 1907
   Madras Epi. Report nos. 99-107 of 1926.

5. *Tirunaraiyur* - Tanjavur district, *Sidhesvarasvamin Temple*:
   Madras Epi. Report nos. 156-190 of 1908
   Madras Epi. Report nos. 125-131 of 1932
   S. I. I. V nos. 512-555.
   S. I. I., III, 3, no-149-(159 of 1908).

6. *Sembiyan Mahadevi* - Tanjavur district, *Kailasanathasvamin Temple*:
   Madras Epi. Report 479-501 of 1925

7. *Karuntattangudi (Karandai) or Karutittaikkudi* - Tanjavur district, *Vasishtesvarar Temple*:
   Madras Epi. Report nos. 42-51 of 1897
   S. I. I. V, nos. 1405, 1409.

8. *Anangnr* - Tanjavur district, *Agastisvarar Tample*:
   Madras Epi. Report nos. 73-78 of 1926.

9. *Gandaradittam* - Tiruchy district, (*Kandaradittam*) *Sokkanathar Temple*:

   Madras Epi. Report nos. 195-208 of 1928-29

10. *Vriddhachalam* - South Arcot district, *Vriddhagirisvarar Tample:*

    Madras Epi. Report nos. 132-140 of 1900

    S. I. I. VII, nos. 145-153

    Madras Epi. Report nos. 39-92 of 1918

    Madras Epi. Report nos. 94-102 of 1935

11. *Tiruvennainallur* - South Arcot district, *Kripapurisvarar Temple* (*Tiru-arut-turai-udaiya-mahadevar*)

    Madras Epi. Report nos. 309-324 of 1902

    Madras Epi. Report nos. 420-512 of 1921

12. *Tiruvadandai* - Chnigleput district, *Varaha Ferumal Temple* (*Visnu*)

    Madras Epi. Report nos. 258-283 of 1910 12 of 1935

    S. I. I. III nos. 125, 180, 185 and 186.

RAJARAJA I

*Melpadi* - Chittoor district,

1. Somanatha (Cholendra Simha Nayanar Isvaram) Temple (Parantaka I's time)

2. Cholisvaram (Arinjigai Isvaram) (Rajaraja I's Time)

   Madras Epi. Report nos. 83-88 of 1889

   S. I. I. III nos. 15, 16, 17, 18 and 19

   S. I. I. IV nos. 312-321.

## கலைச் சொற்கள் (விளக்கம்)

| | |
|---|---|
| அஞ்சலி | வணக்கத்தைக் குறிக்குமாறு கைகளைக் கூப்புதல் |
| அம்ச (ஹம்ஸ) மாலை<br>,, ,, ,, | அன்னப் பறவைகளாலான வரிசை |
| அதிஷ்டானம் | உபபீடத்திற்கு மேற்பட்ட பகுதி ; பல படைகள் கொண்டது |
| அதிபங்கம் | (சிலைகளில்) அதிகமான வளைவுகளுடன் கூடிய தன்மை |
| அந்தராளம் | இடைப்பகுதி என்பது பொதுவான பொருள். கருவறைக்கும் அர்த்த மண்டபத்திற்குமோ, அல்லது அர்த்தமண்டபத்திற்கும் முகமண்டபத்திற்குமோ இடையிலுள்ள பாகம் |
| அபய முத்திரை | அஞ்சல் (பயப்படேல்) என்ற குறி. ('வரத முத்திரை'யையும் பார்க்கவும்) |
| அர்த்த பர்யங்காஸனம் | பீடத்தின்மீது அமர்ந்து, கால்களில் ஒன்றைக் கீழே தொங்கவிட்டும், மற்றதை மடக்கியும் உள்ள நிலை |
| அர்த்தமண்டபம் | கருவறையின் முன்னுள்ள மண்டபம் |
| அல்பநாஸிகை | தூங்கானை மாடத்தின் முன்னுள்ள கூடுபோன்ற சிறு பகுதி |
| அனுக்கிரக மூர்த்தி | அருள் வழங்கும் மூர்த்தி |

ஆகூய வரதம் — கொடை வழங்குவதற்காக அழைக்கும் குறி

ஆபங்கம் — சிறு வளைவு. ('பங்கம்' என்ற தலைப்பைப்) பார்க்கவும்

ஆயுத புருஷன் — மானிட உருவில் உள்ள ஆயுதம்

ஆலீட நிலை — வீரனின் போர்க்கோல நிலை. (வலக்கால் வளைந்து முன்னேக்கியும், இடக்கால் பின் தாங்கியும் உள்ள நிலை)

உதரபந்தம் — வயிற்றைச் சுற்றிக் கட்டியுள்ள வார் (கச்சை போன்றது)

உத்திரம் — நிலைக்கு மேலுள்ள குறுக்கு விட்டம்

உபபீடம்[1] — அடிப்படை, அஸ்திவாரப்படை, [அதிஷ்டானம்போல, இப் பகுதியும் பல படைகள் (mouldings) கொண்டிருக்கலாம்]

குறிப்பு. பத்மம் அல்லது பத்ம—பாதுகை (தாமரை இதழ்) உபபீடத்தோடு சேர்ந்த பகுதி. இவ்வுறுப்புகள் இல்லாமல், அதிஷ்டானம் மட்டுமே இருக்கக்கூடும்

உபானம் — அதிஷ்டானத்தின் அடிப்படை ('படை' என்ற தலைப்பைக் காண்க)

[1] H. D. Smith, in his edition of "Pancharatra Prasada-prasadhanam" (Chapters 1 to 10 of "Padmasamhita"), remarks that Chapter 7 thereof "does not even use the terms *upapitha* and *adhishthana* carefully......and there are far too many variant readings to afford any certain reading of the text by technicians".

On the other hand, Narayana's "Tantrasamuchchaya" clearly states: "The six main parts of the temple are *adhishthana* (basement), *pada* (foot or pillar), *prastara* (entablature), *gala* (ceiling), *sikhara* (roofing) and *stupika* (finial)." "*Upapitha* and *padma* (or *padma-paduka*) are two other parts of the structure to be constructed beneath the *adhishthana*, but they are *optional*." These parts give stability and beauty to the building. The *upapitha* has got its own *angas* (parts) just like the *adhishthana*.

Jouveau-Dubreuil uses the term *upapitha* to denote the part which Narayana calls *adhishthana*.

| | |
|---|---|
| ஊருதாமம் | தொடையின் மீது தொங்கும் குஞ்சம் |
| கட்டு | தூணின் எண்பட்டையுடைய பாகம் |
| கடி சூத்திரம் | இடுப்பு வார் (கச்சை) |
| கண்டி (மகரகண்டி) | கழுத்தணி |
| கபாலம் | மண்டை ஓடு |
| கபோதம் | கொடுங்கையின் முன்னால் புறாக் கூடு போன்ற அணி (இதையே கொடுங்கை என்று கொள்வாரும் உளர்) |
| கர்ப்பகிருஹம் | கருவறை, மூலஸ்தானம், கோயிலின் பிரதானமான தெய்வத்தின் இருப்பிடம் |
| கரி அஸ்தம் | யானையின் துதிக்கைபோல நேராக உடலின் குறுக்கே நீட்டிய கை (காண்க : ' தண்ட அஸ்தம்") |
| கலம் (=கிரீவம்) | கழுத்துப் பாகம் |
| கலசம் | தூணின் தலைப் பாகத்தில் கலச வடிவுடைய பகுதி |
| கனத்துவாரம் | கோஷ்டம்; கருவறையின் வெளிச் சுவர்களில் உள்ள போலி வாயில் |
| கனம் | கெட்டி வார்ப்பு (உலோகத் திருமேனிகள்) |
| கால் | தூணின் நடுப்பகுதி |
| கிரீவம் (=கலம்) | கட்டிடத்தின் கழுத்துப்பாகம் |
| கிரைவேயகம் | கழுத்தணி; அட்டிகை |
| குசபந்தம் | குசத்தை மூடும் கச்சையணி |
| குமுதம் | அதிஷ்டானத்தின் ஓர் படை (வட்ட அல்லது முப்பட்டை வடிவுடையது) |
| கும்பம் | தூணின் தலைப் பகுதியில் உருண்டை வடிவுடைய அங்கம் |

| | |
|---|---|
| குஞ்சிதபாதம் | (நடராஜரின்) வளைந்த கால் |
| குட்யஸ்தம்பம் | அரைத்தூண் (pilaster) |
| குண்டலம் | காதணி (ஓலைத்தோடு, மகரகுண்டலம், பிரேத குண்டலம், கேசரி குண்டலம், வியாள (பாம்பு) குண்டலம் என்ற வகைகள் உள) |
| கூடம் | தளத்தின் ஒவ்வொரு பக்கத்திலும் இரு கோடிகளிலுமுள்ள சமசதுரக் கட்டிடம் ('சாலை'க்கு இரு புறமும் உள்ளன) |
| கூடு | கொடுங்கையின் முகப்பில் உள்ள அணிவகை (பட்சியின் கூடு போன்ற அமைப்புடையது) |
| கேயூரம் | தோள் வளை |
| கொடிக்கருக்கு | இலையும் பூவும் கொண்ட கொடி போலமைந்த ஒரு அணி |
| கொடிமரம் | துவஜஸ்தம்பம் |
| கொடுங்கை | தளத்தின் முன் பிதுக்கமாக உள்ள வளைவு பாகம் (சிலர் இதனைக் 'கபோதம்' என்ற உறுப்பாகக் கொள்வர்) |
| கோபுரம் | கோயிலின் நுழைவாயிலும் அதன் மேல் பல நிலைகளும் சேர்ந்த கட்டடம் |

| வகைகள் : | | | |
|---|---|---|---|
| | சோபைத் துவாரம் | : | 1— 2 நிலைகளுடையது |
| | சாலைத் ,, | : | 2— 4 ,, |
| | பிராஸாதத் ,, | : | 3— 5 ,, |
| | ஹர்மியத் ,, | : | 5— 7 ,, |
| | துவார கோபுரம் | : | 7—16 ,, |

| | |
|---|---|
| சக்தி | (i) சிவசக்தி, (ii) வேல் (முருகனின் ஆயுதம்) |
| சதுரம் | (i) தூணின் 'கால்' பகுதியின் சதுர பாகம், (ii) ஆடலில் ஒரு வகை (கால்களைச் சதுரமாக அமைத்து ஆடுதல்) |
| சன்னவீரம் | வீரனின் மார்பணி (குறுக்கு வார்) |

| | |
|---|---|
| சாலை | தளத்தின்மேல் இரு கூடங்களுக்கு இடையே உள்ள நீண்ட சதுரக் கட்டடம் |
| சிகரம் | விமானத்தின் கூரைப்பகுதி [சதுரம், வட்டம் (விருத்தம்), எண் பட்டை, வண்டிக்கூடு போன்ற பல வடிவுகளில் அமையும்] |
| சிரச் சக்கரம் | சக்கர வடிவில் தலையின் பின்னணி |
| சிரீவத்ஸம் | விஷ்ணுவின் மார்பிலுள்ள மறு |
| தண்ட அஸ்தம் (= கரி அஸ்தம்) | |
| திக்பாலர் | திசை (மெய்)க் காவலர் |
| திரிகூடாசலம் | ஒன்ருய் இணைக்கப்பெற்ற மூன்று தளிகள் |
| திரிசூலம் | மூவிலைகொண்ட ஆயுதம் |
| திரிச்சுற்ருலை | கோயில் மதில் |
| திருச்சுற்றுமாளிகை | மண்டபத்தோடு இணைந்த மதில் |
| திருநடைமாளிகை | மூலத்தானத்தைச் சுற்றியுள்ள மண்டபம் (கோனேரிராஜபுரம் என்ற திருநல்லம் கோயிலில் உள்ளது) |
| திரிபங்கம் | மூன்று வளைவுகள் (வார்ப்பு விக்கிரகத்தில்) |
| துவாரம் | திருவாயில் |
| துவிபங்கம் | இரு வளைவுகள் (வார்ப்பு விக்கிரகத்தில்) |

தூண் (ஸ்தம்பம்) வகைகள் :

| | |
|---|---|
| சதுரச்சிரம் | (சமசதுரம்) |
| தீர்க்கம் | (நீள்சதுரம்) |
| வர்த்துலம் | (வட்டம்) |
| பஞ்சகோணம் | (ஐங்கோணம்) |
| ஷட்கோணம் | (அறுகோணம்) |
| அஷ்டகோணம் | (எண்கோணம்) |
| துவாதசகோணம் | (பன்னிருகோணம்) |

ஷோடசகோணம் (பதினாறுகோணம்)

சித்திரம் (அணிசெய்யப்பட்டது)

"தந்திர சமுச்சயம்" என்ற ஆகமநூல் தூணின் கூறுகளை, ஓமா (அடிப்பவட), கடம், மண்டி, வீரகாண்டம், போதிகை என்னும் ஐந்து வகைகளாகப் பிரித்துக் கூறுகிறது.

தேவகோஷ்டம் — விமான தேவதைகள் நிறுவப் பெற்ற (அல்லது நிறுவுவதற்காக ஏற்பட்ட) புரை

தோரணம் — தேவகோஷ்டத்தின்மேல் அமைந்த வளைவான அணிவகை [மகரம், ஹம்ஸம் (அன்னபட்சி), பத்ரம் (இலை), பூ, இரத்தினம் முதலிய பல வகைகளில் அமையும்]

நிருத்தமூர்த்தி — ஆடும் நிலையைச் சித்திரிக்கும் சிலை

பஞ்சரம் — அணியாகப் பயன்படும் தளி (விமானம் போன்றது); இருவகைகள் உள: கும்ப பஞ்சரம் (நடுவில் குடம் உள்ளது), கோஷ்ட பஞ்சரம் (நடுவில் கோஷ்டம் உள்ளது)

பத்திரலதை — இலையோடு கூடிய கொடி

பலகை — போதிகையைத் தாங்கும் (பலகை போன்ற) பகுதி (abacus)

படை (moulding) — உபானம், ஜகதி, குமுதம், கண்டம், கபோதம், பட்டிகை என்ற உறுப்புகள்

பத்மாஸனம் — யோக நிலையில் உள்ளங்கால்கள் மேனோக்குமாறு பீடத்தின் மீது அமர்ந்திருத்தல்

பர்யங்காஸனம் — கால்களைக் கோத்து அமர்ந்திருத்தல்

பலிபீடம் — இறைவனுக்குப் பலி இடும் மேடை

பாதசரம் — காலணி

பிரதக்ஷிணம் — (இறைவனை) வலம் வருதல்

பினாகம் — சிவனுடைய வில்

பிரபை — திருவாச்சி, பிரபா மண்டலம்

| | |
|---|---|
| பிரபாவளி | ஜுவாலை வரிசையையுடைய பிரபை |
| பிரஸ்தரம் | தூணுக்கும் மேல் தளத்துக்கும் இடையிலுள்ள பாகம் |
| பிராஸாதம் | கோயில், தளி, ஆலயம், ஆயதனம் |

(இரு வகைகள் : அல்பப் பிராஸாதம், மகாப்பிராஸாதம்)

| | |
|---|---|
| பூரிமம் | இலை அல்லது பூப்போன்ற அலங்காரம் (கையிலோ, கிரீடத்திலோ உள்ளது) |
| போதிகை | தூணின் உச்சியில் உத்தரத்தைத் தாங்கும் உறுப்பு |

(சித்திர போதிகை : பூ, கொடி இவற்றால் அலங்கரிக்கப்பட்ட போதிகை)

| | |
|---|---|
| மகுடம் | தலை அணி |
| வகைகள் : கிரீட மகுடம் | |
| ரத்ன மகுடம் | |
| கரண்டமகுடம் | அடுக்கின குடங்கள் போன்ற வரந்தையை யுடையது |
| ஜடா மகுடம் | (சடைமுடி) |
| ஜடா பாரம் | (சடைத் தொகுதி) |
| கேச பந்தம் | (தலை மயிர் முடிப்பு) |
| தம்மிலம் | (அலங்காரக் கொண்டை) |

மண்டப வகைகள் :

| | |
|---|---|
| அர்த்தமண்டபம் | (கருவறைக்குமுன் உள்ளது) |
| முக-(அல்லது மகா-மண்டபம் | அர்த்த மண்டபத்துக்கு முன்னுள்ளது |
| ஸ்நபன மண்டபம் | நீராடும் (அபிஷேக) மண்டபம் |
| நிருத்த மண்டபம் | நடன மண்டபம் |
| கல்யாண மண்டபம் | விழாக்கள் நடைபெறுமிடம் |
| நீராழி மண்டபம் | திருக்குளத்தின் நடுவிலுள்ளது ; தெப்ப விழா நடைபெறுமிடம் |
| க்ஷேத்ர மண்டபம் | 4—28 தூண்கள் கொண்ட மண்டபம் |

| | |
|---|---|
| சாதாரண மண்டபம் | 28—100 தூண்கள் கொண்டது |
| திவ்விய மண்டபம் | 108—1008 தூண்கள் கொண்டது |

மதில்களுக்குகந்த வாயில்களின் பெயர்கள்:

| | | | |
|---|---|---|---|
| முதல் | பிராகார மதில் | வாயிலியின் பெயர் | துவாரசோபை |
| இரண்டாம் | ,, | ,, | துவாரசாலை |
| மூன்றும் | ,, | ,, | துவார பிராஸாதம் |
| நான்காம் | ,, | ,, | துவாரஹர்மியம் |
| ஐந்தாம் | ,, | ,, | மகாகோபுரம் |

(சிற்ப, ஆகம நூல்கள் ஒன்று முதல் ஐந்து பிராகாரங்களை மட்டுமே கூறுகின்றன. திருவரங்கம் கோயிலில் ஏழு பிராகாரங்கள் உள்ளன.)

| | |
|---|---|
| மதூசிஷ்டவிதானம் | உருகும் மெழுகைக்கொண்டு விக்கிரகம் வார்க்கும் முறை |
| மகாராஜ லீலை | அரசரைப்போலக் கம்பீரமாக வீற்றிருத்தல் |
| வரதமுத்திரை | கொடையளிக்கும் (கைக்)குறி |
| விமானம் | மூலத்தானத்தின், அதிஷ்டான முதல் ஸ்தூபிவரையிலான, கட்டிடம் (ஒன்று முதல் பல தளங்களுடையது) |
| வீராஸனம் | வீரனைப்போல் (காலின்மேல் கால் இட்டு )அமரும் நிலை |
| வைஜயந்தி | விஷ்ணுவின் மாலை |
| லோல அஸ்தம் | இயல்பாகத் தொங்கும் கை |
| ஜாலகா | ஜன்னல் |
| ஸ்தூபி | விமானத்தின் உச்சிப் பகுதி |

# பெயர் அட்டவணை

ஆ

## இ

ஈ

உ



எ



ஏ



ஐ



ஒ

சா



சி

த



தா



தி

### தீ



### து



### தெ



### தே

பா

மா

மௌ



வ



வா



வி

### வீ

வெ



வே



வை

# தமிழ் வெளியீட்டுக் கழகம்

## சென்னை–9.

## இதுவரை வெளியிட்டுள்ள நூல்கள்

**பொருளாதாரம்**

| | | | | |
|---|---|---|---|---|
| * 1. | பொருளாதாரம் - II | சி. வேலாயுதம் | 9 | 00 |
| 2. | புதுமைப் பொருளாதாரக் கூறுகள் | டாக்டர் திருமதி ஆர். தாமரஜாட்சி | 12 | 00 |
| 3. | பொருளாதாரம் ஓர் அறிமுகம் - I | தி. சி. மோகன் | 12 | 00 |
| 4. | பொருளாதாரம் ஓர் அறிமுகம் - II | எம். ஏ. அபூர்வசாமி, பி. வி. ஸ்ரீநிவாசன் | 10 | 75 |
| 5. | பொருளாதாரக் கோட்பாடு வளர்ந்த வரலாறு | க. முத்தையன் | 7 | 00 |
| * 6. | பணவியலும் பாங்கியலும் - II | சி. வேலாயுதம் | 11 | 50 |
| 7. | நவீன பாங்கு இயல் | க. வெற்றிவேல் | 7 | 50 |
| * 8. | இந்தியச் செலாவணியும் பாங்கு முறையும் | பி. வி. ஸ்ரீநிவாசன் | 5 | 50 |
| * 9. | அரசாங்க நிதி இயல் | அர. சேஷாசலம் | 4 | 75 |
| 10. | இந்தியப் பொருளியல் - I | எம். பாலசுப்பிரமணியன் | 10 | 00 |
| 11. | இந்தியப் பொருளியல் - II | எம். லூர்துநாதன் | 4 | 25 |
| 12. | நமது பொருளாதாரப் பிரச்சினை - I | சி. சுந்தரராஜன் | 10 | 75 |
| 13. | நமது பொருளாதாரப் பிரச்சினை - II | எஸ். குழந்தைநாதன் | 10 | 50 |
| 14. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு - I | கே. சி. இராமசாமி | 6 | 00 |
| 15. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு - II | கே. சி. இராமசாமி | 6 | 00 |
| 16. | அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி | தி. சி. மோகன் | 5 | 00 |

